குடியேறினார்கள்; மாபெரும் அரசுகளை நிறுவினார்கள்; நல்வாழ்வு நடத்தினார்கள்; தனி நாகரிகம் ஒன்றை வளர்த்துக் கொண்டார்கள்; தம் மொழிவளத்தைப் பெருக்கிக்கொண்டார்கள். அவ்வாறாயின் அவர்கள் தாந்தாம் வாழ்ந்திருந்த இடங்களைத் துறந்து தெற்கு நோக்கிக் குடிபெயரக் காரணம் என்ன? கங்கை வெளியில் அவர்கட்கு நேர்ந்த இடையூறுகள் யாவை? அந்நியர் படையெடுப்பும் நிகழவில்லை. நாடு கடந்து வேற்று நாட்டுக்குச் செல்லுமளவுக்கு மக்கள் தொகையில் பெருக்கமோ, அதனால் வாழ்க்கை நெருக்கடியோ ஏற்பட வழியில்லை. ஆரியவர்த்தத்தின் தெற்கெல்லை விந்தியமலையென மனுதருமம் கூறுகின்றது. எனவே, நாடு கவரும் எண்ணமும் ஆரியர்களுக்கு இருந்திருக்க முடியாது. ஆய்ந்து பார்க்குமளவில், தம் நாகரிகத்தையும், பண்பாடுகளையும், கொள்கைகளையும் அயலாரிடத்தும் பரவச் செய்யவேண்டும் என்னும் நோக்கம் ஒன்றே அவர்களை உந்தியிருக்கவேண்டும் என்று கருத இடமுள்ளது. சென்றவிடமெல்லாம் ஆரியருக்கு உண்டியும், உடையும், உறையுளும் ஆட்சிப் பொறுப்பும் வழங்குவதற்குத் தமிழகத்து மன்னர்களும் உடன்பாடாக நின்றனர். அவர்களுடைய நோக்கம் நிறைவேறுவதற்குப் பல வாய்ப்புகள் அவர்களை எதிர்நோக்கி நின்றன.

பௌத்தத் துறவிகளும், சமண முனிவர்களும் தமிழகத்துக்குள் நுழையும்பொழுதே ஆரியரின் குடியேற்றம் பெருமளவில் பரவிவிட்டிருக்கவேண்டும். இத் துறவிகளும், முனிவர்களும் தனித்தனியாகவும், குழுக்களாகவும் தமிழகம் சேர்ந்து தொடக்கத்தில் தவத்தில் ஈடுபட்டிருந்து, பிறகு தத்தம் சமயக் கோட்பாடுகளை மக்களுக்கு ஓதும் தொழிலில் எழுச்சி பெற்றிருப்பார்கள். தமிழகத்தின் தென்கோடியில் அமைந்துள்ள சில மலைக் குகைகளில் கி.மு. 3ஆம், 2ஆம் நூற்றாண்டுப் பிராமிக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. பஞ்சபாண்டவ மலையென்றும், பஞ்சபாண்டவப் படுக்கையென்றும் இக் குகைக்குப் பெயர் வழங்குகின்றது. புத்தருக்குப் 'பாண்டவப் பாதாளன்' என்றொரு பெயருமுண்டு. எனவே, இக் குகைகள் பௌத்த விகாரைகளாக இருந்தன என்பது தெளிவாகின்றது. பௌத்த சமயமானது கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே குண்டூர் மாவட்டத்தில் நுழைந்து நிலைத்துவிட்டதெனப் பட்டிபுரோலு கல்வெட்டுகள் கூறும் செய்திகள் மூலம் அறிகின்றோம். அசோகர் காலத்திலேயே காஞ்சிமாநகரில் பௌத்தம் நிலைபெற்றுச் சிறப்புடன் விளங்கிற்று.

மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் கி. மு. மூன்றாம், இரண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. அக் காலத்திலேயே சமண சமயம் தமிழகத்தில் பரவிவிட்டதற்கு இவை சான்று பகர்கின்றன. வடநாட்டில் சந்திரகுப்தர் காலத்தில் மிகக் கொடியதொரு பஞ்சம் ஏற்பட்டதாகவும், அதனால் பத்திரபாகு என்ற சமண முனிவர் ஒருவர், சமணர் பலர் தம்மைப் பின்தொடர, தெற்கு நோக்கி வந்து மைசூரில் குடியேறினார் என்றும் செவிவழிச் சமண வரலாறுகள் கூறு கின்றன. பிறகு விசாகாசாரியார் என்ற திகம்பர முனிவர் ஒருவரும் அவருடைய மாணவரும் சோழ பாண்டி நாடுகளில் பல இடங்கட்கும் வந்து சமண சமயத்தைப் பரப்பலானார்கள். முதன்முதல் தமிழகத்தை நாடி வந்தவர்களான சமணர்கள் தனித்திருந்து தவம் புரிவதையே தம் நோக்கமாகக் கொண்டிருந் தனர். ஆனால், அவர்களைத் தொடர்ந்து பிறகு தமிழகத்திற்கு வந்தவர்கள் சமண சமயத்தின் விரிவையே தம் குறிக்கோளாகக் கொண்டனர். அவர்களுள் தலைசிறந்து விளங்கியவர் குந்தா-குந்தாசாரியார் என்ற புகழ் பெற்ற சமண முனிவராவர். தமி ழகத்தில் ஆண், பெண் ஆகிய இருபால் துறவிகட்கும் சமணப் பள்ளிகள் அமைக்கப்பட்டிருந்த செய்திகளைச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கூறுகின்றன. சமண முனிவர்கள் கருநாடகம் முழுவதும் பரவினார்கள். அப்பகுதியில் கி. பி. 3ஆம் நூற்றாண்டில் கங்கர்களின் ஆட்சி தோன்றுமுன்பே சமண சமயம் வேரூன்றிவிட்டது. இஃதன்றிச் சேர நாட்டிலும், கடற் கரையோரம் சமணர், பௌத்தர் ஆகிய இரு சமயத் துறவிகளும் தம் சமயப் பணிகளைத் தொடங்கிவிட்டனர். இவர்கள் தங்கி யிருந்த குகைகள் பல திருவிதாங்கூர்ப் பகுதியில் காணப்படு கின்றன.

சமணமும் பௌத்தமும் மூண்டெழும் காட்டுத் தீயைப் போலத் தமிழகத்தில் பரவியதைக் கண்ட பார்ப்பனரும் தம் வைதிக நெறியைத் தமிழகத்தில் தழைத்தோங்கச் செய்ய வேண்டுமென்று முனைப்புற்றெழுந்தனர். தமிழகத்தை நாடி வந்த ஆரியர்களுள் சிலர் தம்மைப் 'பிருகத்சரணர்' அதாவது, பெரும் பயணர் என்று கூறிக்கொண்டனர். இன்றும் தமிழகத்துப் பிராமணருள் பிருகத்சரணர்கள் பெரும்பகுதியினராகக் காணப் படுகின்றனர்.

தமிழகம் நுழைந்து குடியேறிய ஆரிய மக்கள் காலம், இடம் ஆகிய சூழ்நிலைகளில் சிக்குண்டு தமிழருடன் திருமணத் தொடர்புகள் கொண்டு தாமும் தமிழராகவே மாறிவிட்டனர்.

தமிழகத்துப் பழக்கவழக்கங்களையும், வாழ்க்கை முறைகளையும் தாமும் மேற்கொண்டனர். தமிழகத்தில் தமிழர் யார், ஆரியர் யார் என்று பிரித்தறியலாகாவண்ணம் ஒரு சமுதாயம் உரு வாயிற்று. காலப்போக்கில் தமிழகத்து ஆரியர் தாம் பேசி வந்த சமஸ்கிருதத்தையே மறந்துவிட்டனர்; தமிழையே தம் தாய் மொழியாக ஏற்றுக்கொண்டனர். பிராமணருக்கு நாளடைவில் ஏற்பட்ட ஏற்றத்தையும் செல்வாக்கையும் நோக்கித் தமிழருள் சிலரும் தம்மையும் ஆரியர் என்றே கூறிப் பெருமை ஈட்டிக்கொண் டனர். ஆரியன் என்னும் சொல் 'பெரியோன்'[10] 'ஆசாரியன்',[11] 'அறிவுடையோன்' [12]என்னும் பொருளை ஏற்றது. ஆனால், திவாகரத்துக்குப் பிற்பட்டு எழுந்த பிங்கலந்தை நிகண்டு [13] மட்டும் ஆரியரை மிலேச்சர் என்று கூறுகின்றது. அதற்குத் தக்க காரணம் இருக்கவேண்டும். அஃது ஆய்வுக்குரியதாகும்.

தமிழரின் அயல் தொடர்பை ஆயும்போது கிறித்தவ ஆண்டு தொடங்குவதற்கு முன்பு மூன்று நான்கு நூற்றாண்டுகளில் இப்பாரத நாடு முழுவதிலும் அரசியல் நிலைமை எவ்வாறு அமைந் திருந்தது என்று ஒரு சிறிது அறிந்துகொள்ளுதல் நலமாகும். வடக்கே கி. மு. 4 ஆம் நூற்றாண்டில் மகதப் பேரரசராக விளங்கிய நந்தர்கள் தமிழகத்தின்மேல் படையெடுத்தாகச் சில வரலாறுகள் கூறுகின்றன.

நந்தரை யடுத்து மௌரியக்குடி மன்னர்கள் மகதப் பேரரசைக் கைப்பற்றி ஆட்சிபுரியத் தொடங்கினர். அக்காலத்தில் கோசர்கள் தமிழ் மன்னர்மேல் பகைமை பூண்டிருந்தனர். அவர்களுக்கு உடந்தையாக மோரியர் தமிழகத்தின்மேல் படையெடுத்து வந்தனர். ஆனால், மோகூர் மன்னன் பழையன் என்பவன் அவர்களை வெற்றியுடன் எதிர்த்து நின்று புறமுதுகிட்டோடச் செய்தான். அகநானூற்றுள் மாமூலனார் என்ற பழந்தமிழ்ப் புலவர் இச் செய்தியைத் தெரிவிக்கின்றார். [14] இவ் வகப்பாட்டுச் சான்றுகளினின்றும், அசோகரின் கல்வெட்டுச் செய்திகளி னின்றும் மோரிய அரசு இக் காலத்திய சென்னைப்பட்டினம் வரையில் பரவியிருந்தது என அறியலாம்.

மோரியரின் தென்னாட்டுப் படையெடுப்பு வெற்றி பயக்க வில்லை. அவர்கள் கலிங்கத்தை தாக்காமல் விட்டதற்குத் தென்னாட்டில் தோன்றிய கடும் எதிப்புதான் காரணம் என்பதில் ஐயமின்று. தமிழகத்தில் மன்னர்களின் கூட்டுறவு ஒன்று கி.மு.

10. இரேவண சித்தர் அகராதி நிகண்டு. 11. திருவாசகம் 1-64. 12. திவாகரம்- 13. பிங்கலந்தை நிகண்டு—797. 14. அகம். 251, 281.

3 ஆம் நூற்றாண்டில் நடைபெற்றுவந்ததாக ஹாதீகும்பாக் கல்வெட்டு ஒன்று (கி.மு. 2 ஆம் நூற்றாண்டு) தெரிவிக்கின்றது. மோரிய பரம்பரையினர் ஆட்சியின் தொடக்கத்திலேயே இக் கூட்டுறவு அமைக்கப்பட்டிருந்தது போலும். மோரியரின் படையெடுப்பை இக்கூட்டுறவு கடுமையாய் எதிர்த்து நின்றது. ஆனால், கோசருக்குத் துணையாக மோரியர் தமிழகத்தின்மேல் படையெடுத்து வந்து மோகூர்ப் பழையனால் முறியடிக்கப்பட்டபோது இக் கூட்டுறவு செயற்பட்டு வந்ததா என அறிய முடியவில்லை.

அசோகர் வடக்கே ஆண்ட காலத்திலேயே பௌத்தமும் ஆரியப் பண்பாடுகளும் தமிழகத்தில் ஆங்காங்கு புகுந்து பரவத் தொடங்கினவாகையால் ஆரிய தமிழ் மொழிகளுக்குள் ஏற்பட்ட கலப்பினால் பிராகிருதம் என்ற புதுமொழி ஒன்று உருவாயிற்று. இப்போது திராவிட மொழிகள் வழங்கும் இடங்கள் யாவற்றிலும் பிராகிருத மொழி பரவி வந்தது.

பண்டைய தமிழகத்தில் சங்க காலம் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது தமிழகத்தின் வடக்கிலும், வடமேற்கிலும் சதவாகனர் செழிப்புடன் விளங்கினர். இவர்கள் அரசியல் அமைப்பிலும் நிருவாகத்திலும் சிறந்து விளங்கியவர்கள். இவர்களுடன் வாணிகம் செய்யவந்த சாகர்களும் கிரேக்கர்களும் இவர்களுடனே தங்கித் தாமும் இவர்களுடைய பழக்கவழக்கங்களை மேற்கொண்டனர்.

# 6. தமிழ் வளர்த்த சங்கம்

வரலாற்றின் உயிர்நாடி காலக்கணிப்பாகும். இன்ன ஆண்டில், இன்ன திங்களில், இன்ன நாளில் இன்னது நிகழ்ந்தது என்று கூறுதல் வரலாற்றின் இலக்கணமாகும். பண்டைய தமிழக வரலாற்றில் பல நிகழ்ச்சிகளுக்குக் காலங்கணித்தல் எளிதாகத் தோன்றவில்லை. மன்னர்களைத் தம் பாடல்களில் குறிப்பிடும் பழந்தமிழ்ப்புலவர்கள் அம் மன்னர்கள் வாழ்ந்திருந்த காலத்தைத் தெரிவிப்பதில்லை. அவர்களுடைய செய்யுள்களில் விளக்கப்படும் சில நிகழ்ச்சிகளைக் காலங்கணிக்கப்பட்ட வேறு நிகழ்ச்சிகளுடன் தொடர்புறுத்தி அவற்றின் காலத்தை ஒருவாறு அறுதியிட வேண்டியுள்ளது.

பண்டைய தமிழகத்தின் வரலாற்றை அறிவதற்குத் துணை புரியும் புறச்சான்றுகள் வெகு சிலவே. எனவே, அகச்சான்று களை நாடும் தேவை நேரிடுகின்றது. இவ் வகச்சான்றுகள் அத்தனையும் சங்க இலக்கியங்களுக்குள் கிடைக்கின்றன. எட்டுத் தொகை, பத்துப்பாட்டு என்னும் தொகைகளில் சேர்க்கப் பட்டுள்ள இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் எனப் பெயர் பெற்றுள்ளன. தொல்காப்பியம், பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் சில, மணிமேகலை சிலப்பதிகாரம் ஆகியவற்றையும் சஙக இலக்கியங்களாகவே சேர்த்து எண்ணுவதுண்டு.

பண்டைய தமிழகத்தில் தமிழ்ப் புலவர்கள் கூடித் தலை, இடை, கடை என மூன்று சங்கங்கள் கூட்டி அவற்றில் அமர்ந்து தமிழ் வளர்த்தார்கள் என்று கூறுவது மரபாக இருந்து வருகின்றது. கடைச்சங்க காலத்தில் எழுந்தவையே எட்டுத் தொகை, பத்துப்பாட்டு நூல்கள் எனக் கொள்ளுவதும் தமிழகத் தில் வழக்கமாய் இருந்து வருகின்றது. பொதுவாகச் சங்கம் என்னும் சொல்லானது கடைச் சங்கத்தையே குறித்து நிற்கும்.

சங்கம் என்னும் சொல் தமிழ் அன்று என்றும் வடமொழிச் சொல்லின் மரூஉ என்றும் கூறுவர் சிலர். எனவே, தமிழ்நாட்டில் வடமொழி இடங்கொண்ட பிறகே சங்கம் தோன்றியது என்றும் அவர்கள் கருதுகின்றனர். இக் கருத்துப் பிழைப்பட்டதாகும்;

இதற்குப் போதிய சான்றுகள் இல. பண்டைய் காலந்தொட்டுத் தமிழகத்தில் நேர்ந்துள்ள மொழிப் புரட்சிகள் பண்பாட்டுப் புரட்சிகள் பலவற்றினால் பல தமிழ்ப் பெயர்கள் சிதைந்தும் மறைந்தும் போய்விட்டன. அவற்றுக்கேற்ப வடமொழிச் சொற்கள் அமையலாயின. ஆரிய நாகரிகம் தமிழகத்தில் வேரூன்றிப் பரவி வரும்போது ஏற்பட்ட விளைவு இது. ஆகவே, சங்கம் என்னும் சொல் பிற்காலத்தையதொன்றாக இருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை. இதற்கு நேரான தமிழ்ச் சொற்கள் உண்டு. கூடல், அவை, மன்றம் ஆகியவை சங்கத்தைக் குறிக்கும் தமிழ்ச் சொற்களாம். தமிழ்ச் சங்கம் அல்லது கூடல் வளர்ந்த இடமாகிய மதுரையானது கூடல் என்னும் பெயராலும் வழங்கி வருகின்றது. இஃது இடவாகு பெயர். தமிழ் வளர்ந்த கூடலைத் 'தமிழ் கெழுகூடல்' என்று புறப்பாட்டு ஒன்று குறிப்பிடுகின்றது.[1] சங்கம் என்னும் பெயர் ஏற்படுவதற்கு முன்பு கூடல் என்னும் சொல்லே வழங்கியிருக்க வேண்டும். சமணரும் பௌத்தரும் தத்தம் சமயங்களை வளர்ப்பதற்காகச் சங்கங்கள் நிறுவினார்கள். மதுரையில் நடைபெற்று வந்த கூடலை முதன்முதல் அவர்களே சங்கம் என்று பெயரிட்டழைத்திருக்கக்கூடும். வைதிக ஆரியரும், சமணரும், பௌத்தரும் தமிழகத்தில் நுழைந்த பிறகு ஏற்பட்ட ஆயிரக்கணக்கான பெயர் மாற்றங்களுள் இஃதும் ஒன்றாக இருக்கவேண்டும்.

சங்க இலக்கியம் ஒன்றிலேனும் 'சங்கம்' என்னும் சொல் காணப்படவில்லை என்பது உண்மையே. இதற்குத் தக்கதொரு காரணமும் உண்டு. இக் காலத்தில் நூல் இயற்றும் ஆசிரியர் ஒருவர் 'நான் இந்நூலை, இன்ன இடத்தில், இன்ன பல்கலைக் கழகம் நிகழும்பொழுது ஆக்கினேன்' என்று கூறித் தம்மை அறிமுகப்படுத்திக்கொள்ளும் மரபு இல்லை. இச்செய்திகளை நாம் அறிய வேண்டுமாயின் நூல் அச்சிடப்பட்ட ஊர், காலம் இவற்றைக் காட்டும் ஏட்டைத் திருப்பிப் பார்க்கவேண்டும். பண்டைய புலவர்களும் இம் முறையைப் பின்பற்றி வந்தனர். தனிப்பாடலாசிரியரோ, நூலாசிரியரோ, தொகுப்பாசிரியரோ இன்ன ஊரில், இன்ன காலத்தில்தாம் தம் பாட்டையோ, நூலையோ, தொகுப்பையோ படைத்ததாகக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொண்டிலர். இக் காரணத்தினாலேயே சங்கம், கூடல், மன்றம் என்னும் சொற்கள் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. அன்றி, இப்பெயர்கள் அடங்கியிருந்த

1. புறம். 58.

பாடல்களோ, நூல்களோ அழிந்து போயிருக்கக்கூடும்; அல்லது அழிக்கப்பட்டிருக்கவுங்கூடும்.

தமிழ்ச் சங்கத்தைப் பற்றிய குறிப்புகள் இறையனுர் களவியல் உரையிற்றான் முதன்முதல் காணப்படுகின்றன. தலை, இடை, கடைச் சங்கங்களின் வரவாற்றை அவ்வுரை சுருக்கிக் கூறுகின்றது. அவ் வரலாற்றைப் பிற்கால உரையாசிரியர்களான பேராசிரியரும் அடியார்க்கு நல்லாரும் ஒப்புக்கொண்டுள்ளனர். மூன்று சங்கங்கள் பல்வேறு காலங்களில் மதுரையில் தமிழ் வளர்த்த வரலாற்றைப் பல புராண ஆசிரியரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். திருவிளையாடற் புராணத்தின் ஆசிரியர் பரஞ்சோதியடிகள் தம் நூலில் தமிழ்ச் சங்கத்தைப்பற்றிப் பாடியுள்ளார். வில்லிப்புத்தூரார் 15 ஆம் நூற்றாண்டினர். அவர் தாம் பாடிய பாரதத்தில், 'நன்றறிவார் வீற்றிருக்கும் நன்மாடக் கூடல்,' என்று மதுரையைப் புகழ்கின்றார். தமிழ் வளர்க்கும் சீரிய நோக்கத்துடன் பண்டைய காலத்துப் பாண்டிய மன்னர்கள் தமிழ் புலவர் பலரையும் ஒன்று கூட்டித் தமிழ்ச் சங்கங்களை நிறுவித் தமிழுக்கு ஏற்றம் புரிவித்தார்கள் என்பதும், இவ்வாறே சங்கம் தோற்றுவிக்கப்பட்டது என்பதும், இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் கூறும் செய்தியாகும். அஃதுடன் அவர் மேலும் சில விளக்கங்களையும் அளிக்கின்றார், அவையாவன ; கடல்கொண்ட தென்மதுரையில் முதற் சங்கம் நடைபெற்று வந்தது. சிவபெருமான், அகத்தியனார், முருகக் கடவுள், முரஞ்சியூர் முடிநாகனார், குபேரன் முதலாய ஐந்நூற்று நாற்பத்தொன்பதின்மர் அதன்கண் அமர்ந்து தமிழ் வளர்த்தனர். அச் சங்கத்துடன் தொடர்புகொண்டிருந்த புலவர்களின் தொகை மொத்தம் 4449 ஆகும். அவர்கள் பரிபாடல்கள் பலவற்றையும், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை என்ற நூல்களையும் இயற்றினார்கள். இத் தலைச்சங்கம் தொடர்ந்து 4440 ஆண்டுகள் நடைபெற்று வந்ததாகக் கூறப்பட்டுள்ளது. காய்சினவழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாகப்பாண்டிய மன்னர் எண்பத்தொன்பதின்மர் இச் சங்கத்தைப் புரந்து வந்தார்கள். அவர்களுள் எழுவர் தாமே பெரும் புலவர்களாகவும் திகழ்ந்தவர்கள். அக்காலத்தில் வழங்கிய இலக்கண நூல் அகத்தியம் ஒன்றேயாம்.

இடைச் சங்கம் தோன்றி வளர்ந்தது கபாடபுரத்தில். தென் மதுரை கடல்கோளுக்குள்ளாயிற்று; கபாடபுரம் பாண்டி நாட்டுக்குத் தலைநகரமாயிற்று. இடைச்சங்கம் அங்கு நிறுவப்பட்டது. வெண்டேர்ச்செழியன் முதலாக, முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் பாண்டிய மன்னர்கள் இச்

சங்கத்தின் புரவலர்களாய் பணியாற்றினார்கள். அவர்களுள் ஐவர் தாமே புலவர்களாகவும் அச்சங்கத்தில் அமர்ந்திருந் தனர். அகத்தியனார், தொல்காப்பியனார், இருந்தையூர்க் கருங்கோழியார், மோசியார், வெள்ளூர்க் காப்பியனார், சிறுபாண்டரங்கனார், திரையன் மாறனார், துவரைக்கோன், கீரந்தையார் முதலாய ஐம்பத்தொன்பதின்மர் இச்சங்கத்தில் அமர்ந்து தமிழாராய்ந்தார்கள். இந்தக் கூடலில் வீற்றிருந்த புலவர்கள் மூவாயிரத்து எழுநூற்றுவர். கலி, குருகு, வெண் டாளி, வியாழமாலை அகவல் முதலிய நூல்களை அவர்கள் பாடினார்கள். அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், இசை நுணுக்கம், பூதபுராணம் ஆகிய இலக்கண நூல்களை அவர்கள் பயன்படுத்தி வந்தார்கள். இச் சங்கம் மூவாயிரம் ஆண்டுகள் நடைபெற்றதெனவும் கூறப்பட்டுள்ளது. பிறகு கபாடபுரத்தையும் கடல் கொண்டுபோய்விட்டது. இக் காரணத் தினால் கடைச் சங்கம் உத்தர மதுரையில் கூடிற்று. இப்போது பாண்டி நாட்டிலுள்ள மதுரை இதுதான். இச் சங்கத்தில் அமர்ந்து தமிழ் வளர்த்த புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர். இவர்களுள் மூவர் பாண்டிய மன்னர். சேந்தம்பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர் கிழார், இளந்திருமாறன், மதுரையாசிரியர் நல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக் காயனார் மகனார் நக்கீரனார் ஆகியவர்கள் ஏனைய புலவர் களில் சிலர். இந் நாற்பத்தொன்பதின்மர் பாடிய பாடல்கள் நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, புறநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, கலி நூற்றைம்பது, பரிபாடல் எழுபது, கூத்து, வரி, சிற்றிசை, பேரிசை முதலியன. கடைச்சங்க காலத்தில் வழங்கிய இலக்கண நூல்கள் அகத்தியமும் தொல்காப்பியமுமாம். இச்சங்கம் 1850 ஆண்டுக் காலம் நீடித்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இக் கடைச் சங்கத்தை மதுரையில் நிறுவியவன் பாண்டியன் முடத்திருமாறன் என்பான். இதன் இறுதி யாண்டுகளில் அரசாண்டவன் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி.

கடைச் சங்கத்தின் தோற்றத்தைப்பற்றிய செய்தியை இறையனார் களவியல் உரையாசிரியரே அன்றித் திருவிளை யாடற் புராணம் எழுதிய பரஞ்சோதி யடிகளும் தம் நூலில் விரித்துரைக்கின்றார். அவர் கூறுவதாவது; முன்னொரு காலத்தில் வங்கிய சேகர மன்னன் என்பவன் பாண்டி நாட்டை ஆண்டு வந்தான். அப்போது வாரணாசியில் பிரமதேவன் பத்து அசுவமேத யாகங்களை முடித்துக்கொண்டு கங்கையாற்றில் தன்

மனைவியர் சரசுவதி, காயத்திரி, சாவித்திரி ஆகிய மூவருடன் நீராடச் சென்றான். கந்தருவப் பெண் ஒருத்தியின் இன்னிசை யில் தன் உளத்தைப் பறிகொடுத்த சரசுவதிதேவி சற்றுப் பின் தங்கினாள். அவளை மானிடப் பிறவி எடுக்குமாறு பிரமன் சபித்தான். கலைமகள் தன் பிழையை மன்னித்துத் தனக்குச் சாப விடுதலையளிக்கும்படி தன் கணவனிடம் மன்றாடினாள். நான்முகக் கடவுளும் உளமிரங்கி அருள்சுரந்து தன் சாபத்துக்குக் கழுவாய் ஒன்று கூறினான். அஃதென்னவெனின், கலைமகளின் உடல் ஐம்பத்தொரு எழுத்தால் ஆனது. அவற்றுள் 'ஆ' முதல் 'ஹக' வரையிலான நாற்பத்தெட்டு எழுத்துகள் உலகில் புலமை மிக்க சான்றோர்களாய்ப் பிறப்பார்கள். அவ்வெழுத்துகள் யாவற்றினுள்ளும் ஊர்ந்து நின்று அவற்றைச் செலுத்தி வருகின்ற 'அகரம்' போன்றவனான சிவபெருமான் நாற்பத்தொன்பதாம் புலவராக வீற்றிருந்து அப் புலவர்கட்குப் புலமையை வளர்த்து முத்தமிழையும் நிலைநிறுத்துவான். இவ்வாறு கூறிப் பிரமன் கலைமகளைத் தேற்றினான்.[2]

'இறையனார் களவியல்' என்னும் அகப்பொருள் இலக்கணம் இயற்றப்பட்ட வரலாறு பின்வருமாறு: பாண்டி நாட்டில் பன்னிரண்டு ஆண்டுகள் மாபெரும் பஞ்சம் ஒன்று தோன்றி மக்கள் அவலப்பட்டனர்; உணவின்றிப் பசியினால் வாடினர். அவர்களுடைய துன்பத்தைக் கண்டு உள்ளமுடைந்த பாண்டியன் கேட்டுக்கொண்டபடியே அவனுடைய அவைப் புலவர்கள் அனை வரும் பாண்டி நாட்டைத் துறந்து சென்று தத்தமக்கு விருப்ப மான ஊர்களில் தங்கிக் காலங்கழித்து வந்தனர். பன்னிரண் டாண்டுகள் கழித்துப் பாண்டி நாட்டில் நன்மழை பெய்தது; பயிர்கள் செழிப்புற்றன. மக்களும் நல்வாழ்வு எய்தினர். மன்னனும் உளமகிழ்ந்து புலவர்கள் அனைவரையும் தேடித் தன் அவைக்கு மீண்டும் அழைத்து வருமாறு பல இடங்க ளுக்கும் ஆள் போக்கினான். ஆள்கள் பல்வேறு இடங்களிலும் தேடித் திரிந்து புலவர்களைத் திரட்டிக் கொண்டுவந்து சேர்ந் தனர். ஆனால், திரும்பி வந்த புலவர்கள் அனைவரும் எழுத்து, சொல் இலக்கணங்களில் மட்டும் வல்லுநராகக் காணப்பட்டனரே யன்றிப் பொருள் இலக்கணத்தில் தேர்வுடையவர் அவர்களுள் ஒருவரேனும் இலராயினர். மன்னன் பெரிதும் கவன்றான். பொருளை யாய்ந்து வாழ்க்கையிற் பயன் பெறுவதற்காகவே எழுத்தும் சொல்லும் உள்ளன. எனவே, பொருளை உணர்த்தும் இலக்கணத்தை மீண்டும் மக்கள் யாரிடம் கற்றுப் பயன் பெறுவர்

2. திருவிளையாடல் (பரஞ்சோதி)-படலம் 51. பாடல் 10-11.

என்று மன்னன் ஏங்கி நின்றான். அவனுடைய கவற்சிக்கு இரங்கியவனாய் ஆலவாய்க் கடவுள் அகப்பொருளை விளக்கும் அறுபது சூத்திரங்களை மூன்று செப்பேடுகளின்மேல் பொறித்துக் கோயிற் கருவறையில் தன் பீடத்தின்கீழ் இட்டு வைத்தான். கோயில் அருச்சகன் அவ் வேடுகளைக் கண்டெடுத்து மன்னன் கைகளில் சேர்த்தான். அவற்றைப் பெற்று அளவற்ற மகிழ்ச்சியில் ஆழ்ந்த பாண்டியன் அச் சூத்திரங்கட்கு உரைகாண முயன்றான். நக்கீரனார் அவற்றுக்குச் சிறப்பானதொரு உரையை இயற்றிக் கொடுத்தார். முருகப் பெருமானின் கூறான உருத்திரசன்மன் என்பான் இவ்வுரையை அரங்கேற்றக் கேட்டு மகிழ்ந்தான். இறையனார் அகப்பொருள் நூன்முகம் தெரிவிக்கும் வரலாறு இது. இவ் வரலாறு கல்லாடத்தின் மூன்றாம் பாடலிலும் குறிப்பிடப்படுகின்றது.

தமிழ்ச் சங்கங்கள் மூன்றும் தோன்றி வளர்ந்த வரலாறும், இறையனார் அகப்பொருளும் அதன் உரையும் எழுந்த வரலாறும், தெய்வீக நிகழ்ச்சிகள், அளவைக்கு ஒவ்வாத கால வரைகள் ஆகியவை கலந்துள்ளன என்பது உண்மை; எனினும், அவற்றை முற்றிலும் கற்பனை என்று புறக்கணித்தலாகாது. 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு'[3] என்பது நியதி. எனவே, இப்புராண வரலாறுகளை நன்கு ஆய்ந்து அவற்றுள் உண்மை காணலே பொருத்தமாகும்.

பரஞ்சோதி யடிகளின் காலம் இன்னதெனத் திட்டமாக அறிய முடியவில்லை. இவரன்றிப் பெரும்பற்றப் புலியூர் நம்பி என்பவரும் ஒரு திருவிளையாடற் புராணம் பாடியுள்ளார். இவர் 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். பரஞ்சோதியடிகள் காலத்தால் இவருக்குப் பிற்பட்டவர். தமிழ்ச் சங்கத்தைப்பற்றிக் கூறும் புராணங்கள் இவை இரண்டுதாம். மன்னர்களின் பரம்பரை வரிசையிலும், அறுபத்து நான்கு திருவிளையாடல் களின் வைப்பு முறையிலும் இவ் விரண்டு புராணங்களும் ஒன்றோ டொன்று முரண்படுகின்றன. இறையனார் களவியல் உரை இவை இரண்டுக்கும் முற்பட்டதாகும். இப் புராணங்களின் கூற்றுக்கும், களவியல் உரையாசிரியர் தரும் செய்திகளுக்கு மிடையே பல வேறுபாடுகள் உண்டு. எனவே, புராண ஆசிரியர் இருவரும், களவியல் உரையாசிரியரும் அவ்வக் காலங்களில் தத்தமக்குக் கிடைத்த குறிப்புகளைக் கொண்டு தமிழ்ச் சங்கங்

3. குறள். 355.

களைப்பற்றிய செய்திகளைத் தத்தம் நூல்களில் சேர்த்திருக்க வேண்டும். பல வேறு காலங்களில் தமிழ்ச் சங்கங்களைப்பற்றிய செய்திகள் மறைந்து போகாமல் செவிவழித் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன என்று ஊகிக்க இடமேற்படுகின்றது. கற்பனைக் கதைகளும், செய்தித்தாள்களும் செய்திகளைத் திரட்டித்தராத ஒரு காலத்தில் தொடர்ந்து வந்துகொண்டிருக் கும் ஒரு வரலாற்றை முற்றிலும் கற்பனை என்று புறக்கணித்து விடல் பேதைமையாம். எனவே, தமிழ்ச் சங்கங்களைப்பற்றிய செய்திகட்கு ஓர் அடிப்படை இருந்திருக்கவேண்டும் என்று உறுதி யாகக் கூறலாம்.

தமிழ்ச் சங்கங்களைப் பற்றிய வரலாறுகளில் வரும் மன்னர் கள், புலவர்கள் ஆகியவர்களுள் பலர் இயற்றிய பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. அதனால் அப் புலவர்கள் உயிருடன் வாழ்ந்திருந்தவர்கள்; புனைபாத்திரங்கள் அல்லர் என்பதை மறுக்க முடியாது. பாண்டிய மன்னர் அவையின் பல புலவர்கள் வீற்றிருந்த வரலாற்றை வேள்விக்குடிச் செப்பேடுகளும்[4] குறிப்பிடுகின்றன. கற்பனை வளம் செறிந்த வர்கள் உண்மை வரலாற்றுடன் பல பொய்க் கதைகளையும் சேர்த்துத் திரித்து வெளியிட்ட செய்திகள் பண்டைய நூல்கள் பலவற்றுள் இடம் பெற்றுவிட்டன. எனவே, தமிழ்ச் சங்கம் என்று பிற்காலத்தில் பெயரெய்திய கூடல் அல்லது மன்றம் ஒன்று பாண்டிய மன்னர் தலைமையில் இயங்கி வந்த வரலாற்றை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதில் ஐயமில்லை.

அடுத்துத் தமிழ் வளர்த்த சங்கம் எத்தனை, ஒன்றா, மூன்றா என்பதை ஆய்வோம். கபாடபுரம் பாண்டியனுடைய தலை நகராய் இருந்து பிறகு தென்மதுரை தலைநகராக மாறியதற்கு இராமாயணம், மகாபாரதம், கௌல்டியரின் அர்த்த சாத்திரம் ஆகிய நூல்களில் சான்றுகள் கிடைக்கின்றன. கன்னியாகுமரிக்குத் தெற்கில் துறைமுகம் ஒன்று இருந்ததாகப் பிளினி கூறுகின்றார். 'மலிதிரை ஊர்ந்துதன் மண்கடல் வௌவலின், மெலிவு இன்றி மேற்சென்று மேவார்நாடு இடம்படப் புலியொடு வில்நீக்கிப் புகழ் பொறித்த தென்னவன்'[5] என்று முல்லைக் கலியிலும், 'பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு தென்றிசை யாண்ட தென்னவன்'[6] என்று சிலப்பதி

4. எபி. இந்தி xvii-பக். 16
5. முல்லைக்கலி- 4: 1-4. 6. சிலப். 11-19, 22.

காரத்திலும் இதைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. இவற்றின் அடிப்படையில் நோக்கின் வடமதுரையானது பாண்டி நாட்டின் தலைநகராவதற்கு முன்பு பாண்டியர்கள் அதற்குத் தென்பால் கபாடபுரத்தில் அமர்ந்தும், அதற்கும் முன்பு, மேலும் தெற்கில் அமைந்திருந்த தென்மதுரையிலிருந்தும் ஆட்சி புரிந்து வந்தனர் என்ற வரலாறு உண்மை என்பது உறுதியாகின்றது.

தென்மதுரை ஒன்று செயற்பட்டு வந்ததற்குப் புறச்சான்று வேறொன்றும் உண்டு. இலங்கையின் வரலாற்றைக் கூறும் 'மகாவமிசம்' என்னும் நூலில் அந் நகரம் குறிப்பிடப்படுகின்றது. விஜயன் என்னும் மன்னனும் அவன் தோழர்களும் அங்கிருந்துதான் தமக்கு மணப்பெண்கள் தேடிப் பெற்றனராம். சிங்கள மொழியில் கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட 'சத் தர்மாலங்காரம்' என்னும் நூலிலும் 'தட்சிண மதுரான்' என்ற ஒரு குறிப்புக் காணப்படுகின்றது.

பாண்டி நாட்டின் தலைநகரம் இருமுறை மாற்றப்பட்டிருப்பினும், மாறியமைந்த நகரங்களில் மீண்டும் மீண்டும் தமிழ்ச் சங்கம் ஒன்றைப் புதிதாக நிறுவியதன் காரணம் காண இயலாது. எனினும் செவிவழிச் செய்திகளும், தமிழ் இலக்கியங்களில் காணக் கிடைக்கும் அகச்சான்றுகளும் மூன்று சங்கங்கள் இயங்கிவந்த செய்தியை உறுதிப்படுத்துகின்றன. தொல்காப்பியர் இரண்டாம் சங்க காலத்தில் வாழ்ந்தவர். தொல்காப்பியத்தில் பல நூற்பாக்களில் 'என்ப', 'மொழிப', 'என்மனார் புலவர்', 'பாங்குற உணர்ந்தோர் பன்னுங் காலை' என்று கூறித் தமக்கு முற்பட்டிருந்த இலக்கண ஆசிரியர்களின் முடிபுகளின்மேல் தொல்காப்பியனார் தம் முடிபுகளைச் சார்புறுத்துகின்றார். எனவே, தொல்காப்பியத்துக்கு முன்பு இலக்கண நூல்கள் வழங்கி வந்திருக்கவேண்டுமென்றும் அவ்விலக்கணங்கள் தோன்றுவதற்குக் காரணமாக உயர்வகை இலக்கியம் தமிழ்மொழியில் பெருகியிருக்க வேண்டுமென்றும் கொள்ளுவதுதான் பொருத்தமாகும். இவ் விலக்கியப் படைப்புகள் யாவும் முதற் சங்க காலத்திலோ, அன்றி அதற்கு முன்போ, பின்போ தோன்றியிருக்கவேண்டும். எனவே, கடைச் சங்கத்துக்கு முன்பு இரு சங்கங்கள் ஒன்றன்பின் ஒன்றாக இயங்கி வந்தன என்பதைத் திட்டமாக மறுக்கவே முடியாது. ஆனால், இச் சங்கங்கள் ஒவ்வொன்றும் பல்லாயிரம் ஆண்டுகள் நீடித்து நடைபெற்றுவந்தன என்பதையும் ஒவ்வொன்றுக்கும் இடையில் இத்தனையாண்டுகள் ஓடின என்பதையும் தக்க சான்றுகள் இன்றி ஒப்புக்கொள்ளுதல் ஆராய்ச்சி முறைக்கே முரண்பாடாகும்.

மூன்றாம் சங்கம் எப்போது கூடிற்று, எத்தனை யாண்டுகள் செயற்பட்டு வந்தது, என்னும் கேள்விகளுக்கு உடன்பாடான விடை இன்னும் ஆய்வாளரிடமிருந்து வரவில்லை. மூன்றாம் சங்கத்தின் காலம் கி.மு. 500 முதல் கி.பி. 500 வரை நடந்திருக்க லாம் என்று ஆராய்ச்சியாளர் பலவாறு கருதி வந்துள்ளனர். சிலர் இற்றைக்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே கடைச் சங்கம் நடைபெற்றது என்றும் கூறுவர். பரிபாடலிலும் சிலப்பதி காரத்திலும் காணப்படும் சில நிகழ்ச்சிகளைக் கொண்டு வான வியல் கணிப்பின்படி கணக்கிட்டுக் கடைச் சங்கம் நடைபெற்ற காலம் கி. பி. 7 அல்லது 8 ஆம் நூற்றாண்டாகத்தான் இருக்க வேண்டுமென்று எல். டி. சுவாமிக்கண்ணு பிள்ளையவர்கள் கூறுவார். அந் நூல்களில் கொடுக்கப்பட்டுள்ள காலக் குறிப்பு களைத் திருத்தமாகக் கணித்தறிவதற்குத் தேவையான குறிப்பு கள் அவற்றுள் கிடைக்க வில்லையாகலான் அவருடைய முடிவை ஏற்றுக்கொள்ள வியலாது.

சமுத்திரகுப்தர் காலத்திய தூண் ஒன்று அலகாபாத்தில் நிறுத்தப்பட்டுள்ளது. அதன்மேல் காணப்படும் கல்வெட்டில் 'மந்தராஜா' என்னும் சொல் சேர்ந்துள்ளது. சில ஆய்வாளர் இந்த மந்தராஜாவே சங்க கால மன்னன் 'மாந்தரஞ்சேரல்' ஆவன் என்று கூறுகின்றனர். வெறும் பெயர்மட்டுங் கொண்டே எதையும் துணியலாகாது. சமுத்திரகுப்தர் கி.பி. 4ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவருடைய உடன்காலத்தவர் மாந்தரஞ்சேரல் என்று கொள்ளுவதற்குச் சான்றுகள் இல. சேர நாட்டின்மேல் சமுத்திரகுப்தர் படையெடுத்ததாகத் திட்டமாகத் தெரியவில்லை. மணிமேகலையில் 'குச்சரக்குடிகை', குச்சரக்குடிகைக் குமரியை மரீஇ' என்னும் சொற்கள் வருகின் றன. அவை கூர்ச்சரம் என்னும் நாட்டைக் குறிக்கின்றன என்றும், கூர்ச்சரர் கி. பி. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும், சங்க இலக்கியம் அவர்கள் காலத்திற்றான் எழுந்தது என்றும் மு. இராகவையங்கார் உரைப்பார். இச்சான்றும் சொல் ஒற்றுமையின் அடிப்படையிற்றான் நிறுவப்பட்டுள்ள தாகையால் இஃதும் ஏற்புடையதாக இல்லை. இந்திய அரசாங்கத்தின் புதைபொருளாய்வு இயக்குநரான டாக்டர் என். பி. சக்கரவர்த்தியவர்களும், இராகவையங்கார் முடிவை ஒப்புக்கொள்ளுகின்றார். தமிழகத்தில் காணப்படும் பிராமிக் கல்வெட்டுகள் யாவும் கி. மு. மூன்று, இரண்டாம் நூற்றாண் டைச் சேர்ந்தவை. இப் பிராமி எழுத்துகள் வளர்ச்சியுற்றிராத நிலையில் காணப்படுகின்றன. ஆகையால், நன்கு வளர்ந்து இலக்கிய இலக்கண வளம் செறிந்து விளங்கும் சங்க நூல்கள்

கி. பி. ஆறாம் நூற்றாண்டுக்கு முன்பு தோன்றியிருக்க முடியாது என்பது டாக்டர் என். பி. சக்கரவர்த்தியவர்களின் கருத்தாகும். கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகளும் சொற்களும் இலக்கண அமைதியில்லாதவை என்பதும், கல்வியறிவில்லாத வர்கள் செதுக்கியவை என்பதும் அனைவரும் ஒப்புக்கொள்ள வேண்டும். இவற்றை நோக்கி இவை பொறிக்கப்பட்ட காலத்திய தமிழின் தரத்தை ஆய்ந்தறிவது தவறாகும். இந்தப் பிராமிக் கல் வெட்டுகள் யாவும் சமணத் துறவிகளுக்கும், பௌத்த பிக்கு களுக்கும் குகைப்பள்ளிகள் அளந்தளிக்கப்பட்ட செய்திகளையே குறிப்பிடுகின்றன. இலக்கியத் தமிழுக்கும் இக் கல்வெட்டு மொழிக்கும் தொடர்பேதுமில்லை. ஒரு காலத்தில் செதுக்கப் பட்ட கல்வெட்டு மொழியைக் கொண்டு அக் காலத்தில் வழங்கி வந்த மொழியின் வளத்தை அளந்தறிதல் ஆய்வு முறைக்கு ஏலாது. ஒரு மொழியின் பழைய வடிவத்தைக் கொண்டும் மக்கள் பேச்சு வழக்கைக் கொண்டும் அம்மொழியின் வளர்ச்சியை அளந்தறிய முடியாது.

எஃது எப்படியாயினும் இளங்குளம் குஞ்ஞுன்பிள்ளை போன்ற கேரள ஆசிரியர்கள் சங்க இலக்கியத்தைக் கி. பி. ஆறாம் நூற்றாண்டுக்கு ஒதுக்குவது சாலப் பொருத்தமற்றது என்று அறிதல் அரிதன்று. திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரச ரும் முதலாம் நரசிம்மவர்ம பல்லவன் (கி.பி. 630-660) காலத் தில் விளங்கியவர்கள். அவர்கள் பாடிய தேவாரப் பாடல்களில் யாக்கப்பட்டுள்ள சொற்கள் எளியவை; இக்காலத்துச் சொற் களுக்குற்ற இலக்கண விதியும், சொல்லமைப்பும், பொருளமைப் பும் ஏற்றுள்ளவை. சங்கத் தமிழ்ச் சொற்களுக்கும் அவற்றுக்கு மிடையே ஆழ்ந்த வேறுபாடு உண்டு. சங்கத் தமிழ்ச் சொற்களில் பல வழக்கொழிந்தன; பல பொருள் மாறுபட்டுள்ளன; பல முற்றிலுமே உருமாற்றம் எய்தியுள்ளன. பல சொற்கள் பழைய இலக்கண விதிகட்குட்பட்டுள்ளன. எனவே, சங்கத் தமிழ் தொடர்ந்து ஆறாம் நூற்றாண்டுவரையில் வழங்கி வந்திருக்கு மாயின், அது தன் வழக்கு மாறி, அடுத்த நூற்றாண்டிலேயே திடீரென்று தேவாரத் தமிழாக வளர்ந்து மாற்றமெய்தியிருக்க முடியாது. இலக்கண அமைதியிலோ, சொல்லமைப்பிலோ, பொருள் கூட்டிலோ தேவாரத் தமிழுக்கு ஒப்பானதொருமொழி வடிவத்தை எட்டுத்தொகை, பத்துப்பாட்டுப் பாடல்கள் ஒன்றிலேனும் காணவியலாது. மேலும், தேவாரப் பாடல்களில் தமிழ்ச் சங்கத்தைப்பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. திருஞான சம்பந்தர் தம் திருவாலவாய்த் திருப்பதிகத்தில்

'கூடல் ஆலவாய்' என்று குறிப்பிடுகின்றார்.[7] 'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறிநற்கனகக் கிழி தருமிக்கு அருளினோன்...' என்று திருநாவுக்கரசரும் பாடியுள்ளார்.[8] ஆகவே, இவ்விரு சமய குரவரும் சங்க காலத்துக்குப் பிற்பட்டவர்கள் என்பது திண்ணம். மாணிக்கவாசகர் கி.பி. 792 முதல் 835 வரை அரசாண்ட வரகுண பாண்டியனின் உடன்காலத்தவர். அவர் தம்முடைய திருக்கோவையாரில் 'வான் உயர் மதில்கூடலின் ஆய்ந்த ஒண் தீந்தமிழ்...' என்று சங்கம் வளர்த்த தமிழைப் பாராட்டு கின்றார்.[9] கூடல் என்ற பெயர் வாய்ந்த ஒரு நகரத்தில் அமர்ந்து தமிழாய்ந்த புலவர்கள் மதுரமான பாடல்களைப் பாடினராத லின் அந்நகரத்துக்கு மதுரை என்றொரு பெயர் வந்தது. இவ் வினிய பெயரே பிற்பாடு வழக்கில் நின்றுவிட்டதால் சொல் வழக்கில் கூடல் என்னும் பெயர் மறைந்து இலக்கியத்தில் மட்டும் காணப்படுகின்றது. முதல் எட்டுச் சைவத் திருமுறை ஆசிரி யர்கள் கூடலைப்பற்றித் தம் பாடல்களில் குறிப்பிட்டிருக்கின் றனராகையால் கூடல் அல்லது சங்கம் அவர்களுடைய காலத் துக்குச் சில நூறு ஆண்டுகளுக்கு முன்பே நடைபெற்று மறைந் திருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை.

சங்க இலக்கியங்கள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவையல்ல என்பதற்கு அவ் விலக்கியங்களிலேயே அகச் சான்றுகள் கிடைக்கின்றன. சிங்களத்து மன்னனான கயவாகுவும் சேரன் செங்குட்டுவனும் உடன்காலத்தவர் என்பதற்குச் சிலப் பதிகாரம் சான்று பகர்கின்றது. இதைக்கொண்டு சேரன் செங்குட்டுவன் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் விளங்கியவன் என அறிகின்றோம். காலத்தால் இம் மன்னனுக்கு முற்பட்ட சேர மன்னரைப்பற்றியும் பல பாடல்கள் சங்க இலக்கியத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. ஆகையால், சங்கப் பாடல்கள் பல கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பே இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. கிரீஸ், ரோம் ஆகிய ஐரோப்பிய நாடுகளுடன் பண்டைய தமிழகம் கொண்டிருந்த வாணிகத்தைப் பற்றி அகநானூறு, புறநானூறு, பட்டினப் பாலை ஆகியவையும், சற்றே பிற்காலத்து எழுந்த இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரமும் மணிமேகலையும் பல செய்தி களைக் கொண்டு மிளிர்கின்றன. '...யவனர் தந்த வினைமாண் நன்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும்...' [10] என்றும், 'யவனர் நன்கலந் தந்த தண்கமழ் தேறல் பொன்செய் புனை

7. தேவாரம்-3:52; 1. 8. தேவாரம்-6.76-3
9. திருச்சிற்-23. 10. அகம்.49.

கலத்து ஏந்தி, நாளும் ஒண்தொடி மகளிர் மடுப்ப...'[11] என்றும், நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்...'[13] என்றும், 'கலந்தரு திருவின் புலம் பெயர் மாக்கள் கலந்திருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும்...'[12] என்றும், 'யவனத் தச்சரும் தண்தமிழ் வினைஞர் தம்மொடுங் கூடி...'[14] என்றும், இன்னும் பலவா றாகவும் தமிழர் யவனர் தொடர்பு பாராட்டப்பட்டுள்ளது. ஆதியில் யவனர் என்னும் சொல் கிரேக்கரையே சுட்டி நின்றது; பிறகு ரோமரையும், அடுத்து அயல்நாட்டினர் அனைவரையுமே அது குறிப்பிடலாயிற்று. தமிழர்-யவனர் வாணிகத் தொடர்பை இலக்கிய அகச்சான்றுகளும், கி. பி. 1, 2ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர்களான கிரேக்க, ரோம நூலாசிரியர் சிலரின் நூல் களும் மெய்ப்பிக்கின்றன. ஆர்மஸ் துறைமுகத்திலிருந்து இந்தி யாவுக்குச் சுமார் நூற்றிருபது மரக்கலங்கள் பாய்விரித்தோடிய தையும், அகஸ்டஸ் பேரரசின் அரசவைக்குப் பாண்டி நாட்டுத் தூதுவர் இருவர் சென்றிருந்ததையும் ஸ்டிராபோ தெரிவிக் கின்றார். 'எரித்திரியக் கடலின் பெரிப்ளூஸ்' என்னும் நூலின் ஆசிரியரும், பிளினியும் கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த வர்கள். அடுத்த நூற்றாண்டில் விளங்கியவர் தாலமி என்பார். தமிழகத்துத் துறைமுகப் பட்டினங்களைப்பற்றியும், மேலைநாடு களுடன் தமிழகம் மேற்கொண்டிருந்த கடல் வாணிகத்தைப் பற்றியும் இவ்வயல்நாட்டு ஆசிரியர்கள் தத்தம் நூல்களில் விரிவாய் எடுத்துரைக்கின்றார்கள். இவர்கள் அளிக்கும் வரலாற்றுக் குறிப்புகளும், சங்க இலக்கியத்தில் காணப்படும் யவனரைப்பற்றிய செய்திகளும் இயைந்து காண்கின்றன வாதலால் பல சங்கப் பாடல்கள் கடல் வாணிகம் செழித் தோங்கியிருந்த காலத்தில் பாடப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகின்றது. தமிழகத்தில் ஆங்காங்கு அகழ்வாராய்ச்சியின் மூலம் கிடைத்துவரும் ரோமாபுரி நாணயங்களைக் கொண்டு ரோமரின் வாணிகத் தொடர்பானது உன்னத நிலையை எட்டி யிருந்த காலத்தைக் கணித்தறியலாம். தமிழகத்தில் மிகவும் அதிகமாகக் கிடைப்பவை, அகஸ்டஸ், டைபீரியஸ் ஆகிய ரோமாபுரிப் பேரரசின் நாணயங்களேயாம்.

அரிக்கமேட்டுப் புதைபொருள்களானவை தமிழகத்துக்கும் ரோமாபுரிக்கும் இடையிட்ட கடல் வாணிகத்தின் விரிவையும் வளத்தையும் நமக்குப் பெரிதும் விளக்கிக் காட்டுகின்றன. புதுச்சேரிக்கு அண்மையில் அமைந்துள்ள ஒரு மண் மேட்டுக்கு

11. புறம்-56. 12. பட்டினப்-185.
13. சிலப்-5: 11-12. 14. மணிமே. 19: 108-9.

அரிக்கமேடு என்று பெயர். அது அரியாங்குப்பத்தாற்றை யணைந்தவாறு அமைந்துள்ளது. இம் மேட்டை யகழ்ந்தெடுத்து வியக்கத்தக்க செய்திகளைப் புதைபொருள் ஆய்வாளர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். இவ்விடத்தில் சோழ நாட்டின் மிகவும் சிறப்பானதொரு துறைமுகம் அமைக்கப்பட்டிருந்தது. புதுச்சேரியை யவனர்கள் அக்காலத்தில் பொதுகை என்று பெயரிட்டழைத்தனர். கிறித்து ஆண்டின் தொடக்க காலத்தில் பொதுகை யவனர் ஈண்டி வாழ்ந்த மாபெரும் சேரியாகக் காட்சி யளித்தது. சுட்ட செங்கல்லால் கட்டப்பெற்ற பந்தர்கள் என்னும் கடல் வாணிகப் பண்டசாலைகள், சாயத் தொட்டிகள், கண்ணாடி, பளிங்கு, பவழம், பொன் ஆகியவற்றால் ஆக்கப் பெற்ற மணிவகைகள், பல உருவங்களில் கல்லிழைத்த பதக்கங்கள் ஆகியவை அரிக்கமேட்டில் கிடைத்துள்ளன. தமிழகத்து நுண்கலிங்கங்கள் அயல்நாட்டுக்கு ஏற்றுமதியாகுமுன் இங்குத்தான் வண்ணமூட்டப் பெற்றன. ரோமாபுரியிலிருந்து பலவகையான மண்பாண்டங்கள் இறக்குமதியாயின. அத்தகைய பாண்டங்கள் இங்கும் வனையப்பட்டன. அரிக்கமேட்டில் காணப்படும் மண்கல ஓடுகள் யாவும் இத்தாலியில் அரிஸ்ஸோ என்ற நகரத்துக் குயவர்கள் வனைந்து தம் வாணிக முத்திரைகளைப் பதித்து அனுப்புவித்த அரிட்டைன் என்ற பானை சட்டி வகைகளின் ஓடுகளாம். யவனர் இரட்டைப் பிடிகொண்ட ஒரு வகை மதுச்சாடிகளில் (Amphorae) உயர்வகைத் 'தண்கமழ் தேறல்'களைக் கொண்டுவந்து தமிழகத்தில் இறக்கினர்; அவற்றுக்கீடாகத் தமிழகத்து மிளகு, இலவங்கம், கலிங்கம் முதலியவற்றை ஏற்றிக்கொண்டு சென்றனர். அத்தகைய இரட்டைப்பிடி மதுச்சாடிகளின் சிதைவுகளும், கண்ணாடியாலான மதுக்கிண்ணங்களும் அரிக்கமேட்டில் கிடைக்கின்றன. தமிழகத்தில் அறுக்கப்பட்ட சங்கு வளையல்களும், பலவகையான அணிகலன்களும் இங்குக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. தமிழர் நாகரிகத்தின் தொன்மையை விளக்கும் இப் பொருள்கள் யாவும் தமிழர் தேடிக்கொண்டிருக்கும் சான்றுகளில் மிகவும் சிறந்தவையும், பயனுள்ளவையுமாகும். 'அரிட்டைன்' சட்டி வகைகளும், இரட்டைப்பிடி மதுச்சாடிகளும் ரோமாபுரியிலிருந்து கி.பி. 20-50 ஆண்டுகளில் தமிழகத்தில் இறக்குமதியாகி யிருக்கக்கூடும் என்று டாக்டர் மார்ட்டிமர் வீலர் என்னும் புதைபொருள் ஆய்வாளர் கருதுகின்றார்.[15] இந்த யவனச் சேரி கி. மு. முதல் நூற்றாண்டில் தோன்றியிருக்கவேண்டும்; கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் கைவிடப்பட்டிருக்கவேண்டும். எப்படியாயினும் இச் சேரி

15- Dt. Mortimer Wheeler - Ancient India—II pp 24-5.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டு இறுதிக்குள் பாழடைந்து போயிற்று. கிறித்துவ அப்தத்தின் முதல் இரு நூற்றாண்டுகளில் அரிக்கமேட்டுக் கடல் வாணிகம் மிகவும் உயர்ந்த நிலையில் செழிப்புற்று விளங்கியது. சங்கச் செய்யுள்கள் தரும் செய்திக ளுக்கும், அகழ்வாராய்ச்சியில் வெளியாகியுள்ள புறச்சான்றுக ளுக்கும், அயல்நாட்டு நூலாசிரியரின் கூற்றுகளுக்கும் உடன்பாடு காணப்படுவதால் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தமிழகத்தில் சங்ககாலமானது மிகச் சிறந்த முறையில் நிகழ்ந்து வந்தது என்பதில் ஐயமேதுமில்லை. எனவே, இப்போதுள்ள ஆய்வு நிலையில், கடைச்சங்கம் கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகள் நிகழ்ந்து வந்தது என்று கொள்ளுவது சாலப் பொருத்தமாகும். கி. மு. இரண்டாம் நூற்றாண்டுக்கும் கி. பி. முதல் நூற்றாண் டுக்கும் இடையில் இடைச்சங்கம் இயங்கி வந்ததென்றும், அதற்கும் முன்பு கி.மு. நான்காம் நூற்றாண்டுக்கும், இரண்டாம் நூற்றாண்டுக்கும் இடையில் தலைச்சங்கம் நடைபெற்று வந்தது என்றும் கொள்ளலாம். இம்மூன்று சங்கங்களும் நீண்ட காலம் செயற்பட்டு வந்தன என்பதில் ஐயமில்லை. தலைச்சங்கம் தோன்றுவதற்கு முன்பும் தமிழ் வளர்ந்துகொண்டிருந்தது. பாணர்கள் ஊரூராகச் சுற்றிவந்து இசைப்பாடல்கள் பாடி வயிறு பிழைத்து வந்தனர்;

# 7. சங்க இலக்கியம்

சங்க இலக்கியத் தொகுப்பில் எட்டுத்தொகையும் பத்துப் பாட்டும் சேர்ந்தவை என்று முன்னரே கண்டோம். எட்டுத் தொகையில் தனித்தனி எட்டு நூல்கள் அடங்கியுள்ளன. அவ் வெட்டு நூல்களும் தொகை நூல்களேயாம். அவையாவன: அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல் ஆகியன. பத்துப்பாட்டுத் தொகுப்பில் முறையே திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற் றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் தொகுக்கப்பெற்ற கால வரிசையை இன்னும் அறுதியிட முடியவில்லை. அகநானூற் றைத் தொகுத்தவர் உப்பூரிகிழார் மகனார் உருத்திரசன்மர்; தொகுப்பித்தவன் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி. குறுந் தொகையைத் தொகுத்தவர் பூரிக்கோ என்பவர்; தொகுப் பித்தவர் இன்னாரெனத் தெரியவில்லை. நற்றிணையைத் தொகுத்தவர் இன்னாரெனத் தெரியவில்லை; தொகுப்பித்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியாவான். புறநானூற் றைத் தொகுத்தோர் பெயரும், தொகுப்பித்தார் பெயரும் மறைந்துவிட்டன. ஐங்குறுநூறு புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்ற புலவரால் தொகுக்கப்பட்டது; தொகுப்பித்தவன் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்ற பெயர் படைத்த சேர மன்னனாவான்.

பதிற்றுப்பத்தைத் தொகுத்தவரும் தொகுப்பித்தவரும் இன்னாரெனத் தெரியவில்லை. ஆனால், ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் ஒரு பதிகம் சேர்க்கப்பட்டுள்ளது; அப் பத்தைப் பாடியவர் பெயர், பாடப்பெற்ற மன்னன் பெயர், பாடியவர்க்கு அளிக்கப்பெற்ற பரிசுத்தொகை, பாடப்பெற்றவர் ஆட்சி புரிந்த கால அளவு ஆகிய செய்திகளை அப்பதிகம் கூறுகின்றது. இப் பதிகங்கள் யாவும் பிற்காலத்தில் இடைச்செருகல்கள் எனக் கருதப்படுகின்றன. பதிற்றுப்பத்துப் பாடல்கள் எழுதப்பட்ட

காலம் வேறு; தொகுக்கப்பட்ட காலம் வேறு. எனவே, இந்நூல் எழுந்த காலத்தைக் கணித்தறிதல் முற்றுப் பெறாததொரு முயற்சியாகவே இருந்துவருகின்றது.

கலித்தொகை சங்க இலக்கியம் யாவற்றுக்கும் காலத்தால் பிற்பட்டதெனக் கருதப்படுகின்றது; அல்லாமல் சங்ககாலத்தின் இறுதியில் இயற்றப்பட்டதெனக் கொள்ளுவதுமுண்டு. அகப் பொருளைப்பற்றிய சங்க இலக்கியங்கள் அனைத்தும் களவிய லுக்கு உடம்பாடான ஒத்த காமத்தை அடிப்படையாகக் கொண் டவை. கைக்கிளை, பெருந்திணை என்னும் ஒவ்வாக் காமத் தைப் பற்றிய பாடல்களை அவற்றுள் காணமுடியாது. ஆனால், குறிஞ்சிக் கலியில் பெரும்பாலான பாடல்கள் கைக்கிளையையும் பெருந்திணையையும் பற்றியனவாகவே காணப்படுகின்றன. 'மையின் மதியின் விளங்கு முகத்தாரை வவ்விக்கொளலும் அறன் எனக் கண்டன்று' என்று குறிஞ்சிக் கலிப்பாடல் (கலித். 62) ஒன்று கூறுகின்றது. மகளிரைக் கவர்ந்து சென்று மணத்தலை வடமொழியாளர் இராக்கத மணம் என்பர். தொல்காப்பியர் பெருந்திணையாவது ஒவ்வாத காமம் என்று கூறினாரே யன்றி மகளிரை வௌவிச் செல்லும் இராக்கத மணமுறைக்கு விதி ஏதும் வகுத்திலர், 'இராக்கத மணம் அறன்' என்று தொல் காப்பியரோ, சங்ககாலப் புலவர்களோ எங்கும் எடுத்துக் கூறினா ரிலர். ஆரியர்பால் வழங்கிய எண்வகை மணங்களுள் இராக்கத மணமும் ஒன்று. தமிழரிடம் இவ்வகை மணமுறை வழங்கிய தில்லை. தம் காலத்து வழங்காத ஒரு பழக்கத்தைப் பாராட்டிப் பழந்தமிழ்ப் புலவர்கள் செய்யுள் இயற்றிலர். எனவே, 'இராக்கத மணம் அறன்' என்னும் இச்செய்யுளும் இதைப் போன்ற ஏனைய கலிப்பாக்களும் கடைச்சங்க காலத்துக்கு பிற் பட்டவை எனக் கொளல் வேண்டும். மற்றும் 'தெருவின்கண் காரணமின்றிக் கலங்குவார்க் கண்டுநீ வாரணவாசிப் பதம் பெயர்த்தல் ஏதில' என்னும் கூற்று ஒன்று குறிஞ்சிக் கலியில் (கலித். 60) காணப்படுகின்றது. வாரணவாசி என்னும் சொல் சங்க நூல்கள் ஒன்றிலேனும் வழங்கப்படாத தொன்றாகும்.

அடுத்து, பிறிதொரு கலியில் ஆரியக் கடவுளரான 'காம னாரும்', அவர் தம்பி 'சாமனாரும்' வருகின்றனர். இப் பெயர் களையும் சங்க நூல்களில் காணமுடியாது. காமனைப்பற்றிய செய்திகள் பிற்காலத்திய சமண, பௌத்த காவியங்களிலும், ஆண்டாள் பாசுரங்களிலும், பெருங்கதையிலும் காணப்படு கின்றன. கலித்தொகை முழுவதிலும் மூவேந்தருள் பாண்டிய மன்னன் ஒருவனைப்பற்றியே பாடல்களே உள்ளன ; ஏனைய

இருவரைப்பற்றியும் ஒரு குறிப்பேனும் இந்நூலில் இல்லை. வையை யாறு, கூடல் நகரம் ஆகியவற்றைத் தவிர்த்து வேறு ஓர் ஆற்றின் பெயரோ, நகரத்தின் பெயரோ கலித்தொகையில் காணவில்லை. மற்றும் பிற சங்க இலக்கியங்களில் தொகுக்கப் பட்டுள்ள அகத்துறைப் பாடல்களில் குறிப்பிடப்பெறும் புலவர்கள், மன்னர்கள், வள்ளல்கள் ஆகியவர்களின் பெயர்கள் கலித்தொகையில் ஒரு பாட்டிலேனும் பயின்று வருவதில்லை.

மேலே காட்டிய சான்றுகளும் கலித்தொகையானது, சங்க காலத்துக்குப் பிற்பட்டு எழுந்த இலக்கியமாகும் என்னும் கருத்தை உறுதிப்படுத்துகின்றன. தமிழகம் கி.பி. மூன்றாம்நூற் றாண்டு முதல் கி. பி. ஆறாம் நூற்றாண்டுவரையில் களப்பிரர் விளைத்த குழப்பங்களாலும், பல்லவர் படையெடுப்புகளாலும் அல்லற்பட்டு நின்றது. சோழரும் பாண்டியரும் தம் வலியிழந்து, ஆட்சி குன்றி மறைந்து கிடந்தனர். களப்பிரரும் பல்லவரும் வடமொழியையும், ஆரியக் கொள்கைகளையும், சமண சமயத் தையும் பெரிதும் பரப்பி வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து நாயன்மார்களும், ஆழ்வார்களும் தத்தம் சமய தத்துவங்களை விளக்கிப் பாடல்களைப் பாடிப் புராணக் கதைகளையும், மதக் கோட்பாடுகளையும், எடுத்துப் போதித்து வந்தனர். இந் நூற் றாண்டுகளில் தமிழகத்தில் நுழைந்துவிட்ட கருத்துகள், சொற்கள், மக்கள் வாழ்க்கை முறையில் ஏற்பட்ட மாற்றங்கள் ஆகியவற்றைக் கலித்தொகையில் பார்க்கலாம். சைவ சமய வளர்ச்சியும், சமண பௌத்த சமய வளர்ச்சியும் ஒன்றோ டொன்று போட்டியிட்டு மக்களின் கருத்தைச் சமயத் துறையில் ஈர்த்துக்கொண்டிருந்த ஒரு காலத்தில் கலித்தொகை போன்ற முற்றிலும் தொகை நூலான இலக்கியம் ஒன்று வெளிவந்திருக்க முடியாது. எனவே, களப்பிரர் ஆட்சி தொடங்குவதற்கு முன், கி. பி. 2ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 4ஆம் நூற்றாண்டிற் கிடையிட்டதொரு காலத்தில் இந்நூல் இயற்றப்பட்டிருக்கலாம் என்ற முடிவுக்கு வரலாற்று ஆய்வாளர்கள் உடம்பட்டு வருகின்றனர்.

கலித்தொகை ஆக்கப்பட்ட காலத்தைப் போலவே அதனை ஆக்கியவர் அன்றி ஆக்கியவர்கள் யார் என்பதைப்பற்றியும் ஆய்வாளரிடையே கருத்து வேறுபாடு நிகழ்ந்து வருகின்றது. இந் நூல் முழுவதையும் ஒரு புலவரே பாடினார் என்பர் சிலர்; சிலர் ஒரு கலியை ஒரு புலவராகப் புலவர்கள் ஐவர் கலித் தொகையைப் பாடினர் என்பர். எனினும், இந் நூலின் ஆசிரியர்

நல்லந்துவனார் ஒருவரே என்னும் கொள்கையே பலர் கருத்தையும் கவர்ந்து வருவதாக தெரிகின்றது.

பரிபாடலைத் தொகுத்தவர்கள் பெயரும் தொகுப்பித்தவர்கள் பெயரும் இன்று மறைந்துவிட்டன; அவற்றை அறிய முடியவில்லை. சங்க நூல்கள் ஏனையவற்றைவிடப் பரிபாடலில் வடமொழிச் சொற்கள் மிகுதியாகக் கலந்திருப்பதாலும், ஆரிய புராணக் கதைகள் சேர்ந்திருப்பதாலும் அது கடைச் சங்க காலத்தின் இறுதி யாண்டுகளில் தோன்றியிருக்கவேண்டுமென்பர் ஒருசாரார். ஒரு நூல் எடுத்துக்கூறும் செய்திக்கு ஏற்ப அந்நூலின் சொற்கட்டும் சொல்லாட்சியும் அமையும்; சமய, தத்துவ நூல்களில் வடமொழிக் கலப்பு மிகுந்திருக்கும். பரிபாடல் பெரிதும் சமயத் தொடர்புடையது. அது புராணக்கதைகள் பலவற்றை எடுத்தாள்கின்றது. ஆகவே, அதில் வடமொழிச் சொற்களும் புராணக் கதைகளும் சற்றே கூடுதலாகக் கலந்திருப்பதில் வியப்பேதுமில்லை. எனவே, பரிபாடலைக் காலத்தால் பிற்பட்டது எனக் கூறமுடியாது. மேலும், மேலும், பரிபாடலில் ஆசிரியர் நல்லந்துவனாரின் பாடல்கள் நான்கு இடம் பெற்றுள்ளன. இவையேயன்றி இவருடைய பாடல்களுள் 33 கலித்தொகையிலும், ஒன்று அகநானூற்றிலும் (43), ஒன்று நற்றிணையிலும் (88) சேர்க்கப்பட்டுள்ளன. தொகை நூல்கள் எட்டினுள் இப் புலவர் ஒருவருடைய பாடல்கள்தாம் நான்கில் இடம் பெற்றுள்ளன. அஃது இவர்க்குற்ற தனிச் சிறப்பாகும். எனவே, இக் காரணத்தைக் கொண்டும் பரிபாடலானது பிற சங்க இலக்கியங்கட்குக் காலத்தால் பிற்பட்டதென்னும் கொள்கையை எளிதில் மறுக்கலாகும்.

பத்துப்பாட்டில் தொகுக்கப்பட்டுள்ள நூல்களும், எட்டுத்தொகை நூல்களின் பாடல்கள் இயற்றப்பட்ட காலத்திலேயே எழுந்தவையே என்று வழிவழியாகவும், அகச் சான்றுகளைக் கொண்டும் அறிஞர்கள் கருதுகின்றார்கள். பத்துப்பாட்டில் வரும் மன்னர்களையும் புலவர்களையும் எட்டுத்தொகையிலும் காண்கின்றோம். ஆனால்: இத் தொகையில் சேர்ந்துள்ள பத்துப் பாடல்களும் ஒரே காலத்தில் இயற்றப்பட்டனவல்ல. ஒன்றுக்கும் மற்றொன்றுக்குமிடையே கால வேறுபாடு உண்டு. இவற்றுள் ஆற்றுப்படைத் துறையில் பாடப்பெற்றவை ஐந்து. பாணர், கூத்தர், பொருநர், விறலியர் ஆகியவர்கள் மன்னன் அல்லது வள்ளல் ஒருவனிடம் தாம் பெற்ற பரிசிலைத் தம்மை எதிர்நோக்கி வந்த இரவலர்க்கு எடுத்துக்கூறி, அவர்களும் அம் மன்னன் அல்லது வள்ளல்பால் சென்று பரிசில் பெற்றுய்யுமாறு

அவர்களை வழிப்படுத்துதலே ஆற்றுப்படை என்னும் செய்யுள் வகையாகும். பத்துப்பாட்டில் மட்டுமின்றிப் பதிற்றுப்பத்து, புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை[1] ஆகியவற்றிலும் ஆற்றுப்படைகள் காணப்படுகின்றன.

பத்துப் பாட்டுப் புலவர்கள் சிலரும், அவர்களால் பாடப் பட்டோர் சிலரும் எட்டுத்தொகை பாடிய புலவர்கள் சிலருடனும், அவர்களால் பாடப்பட்டோர் சிலருடனும் உடன் காலத்தவராக விளங்குகின்றனர். இவ்வுண்மையை வைத்துக்கொண்டு பத்துப் பாட்டுப் பாடல்கள் இயற்றப்பட்ட காலங்களை ஒருவாறு கணித் தறியக்கூடும். நெடுநல்வாடையின் ஆசிரியரான நக்கீரர் அகநானூற்றுப் பாடல் ஒன்றில்[2] கரிகால் வளவனைக் குறிப்பிடு கின்றார். இச் சோழ மன்னனே பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவனாகக் காட்சியளிக்கின்றான். நக்கீரர் கரிகாலன் காலத்தவர் என்பதற்குத் தக்க சான்றுகள் கிடைத்தில வாகையால் அவரை அம் மன்னனுக்குச் சற்றுப் பிற்பட்டு வாழ்ந்தவர் என்று கொள்ளத்தகும். நெடுநல் வாடையின் பாட்டுடைத் தலைவன் பாண்டியன் நெடுஞ் செழியன். இவனும் நக்கீரரும் உடன் காலத்தவர்கள். இருவருமே கரிகாற் சோழனுக்குக் காலத்தாற் பிற்பட்டவர்கள் ஆவார்கள். எனவே, திருமுருகாற்றுப்படையும், நெடுநல் வாடையும், பெரும்பாணாற்றுப்படையும் ஏறக்குறைய ஒரே காலத்தில் இயற்றப்பட்டவை எனக்கொள்ளுவர்.

நெடுநல்வாடையின் பாட்டுடைத் தலைவனான தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனே மதுரைக் காஞ்சிக்கும் பாட்டுடைத் தலைவனாகக் காட்சியளிக்கின்றான். மலைபடுகாடத்தின் தலைவனான நன்னன் மகன் நன்னன் பெயர் மதுரைக் காஞ்சியில் குறிப்பிடப்படுகின்றது.[3] எனவே, இம் மூன்று பாடல்களும் ஏறக்குறைய ஒரே கால அளவில் இயற்றப்பட்டன என்று கொள்ளுதல் பொருத்தமாகும். அக நானூற்றுப் பாட்டு ஒன்றில்[4] அதன் ஆசிரியரான நக்கீரர் கபில ரைப்பற்றிய செய்தி ஒன்றைத் தருகின்றார். அதைக்கொண்டு நெடுநல்வாடைக்கும் மதுரைக் காஞ்சிக்கும் முற்பட்டது குறிஞ்சிப் பாட்டு என்று ஊகித்தறியலாம்.

1. பு. பொ. வெ. மாலை—216-219.
2. அகம் - 141.
3. மதுரைக் - 618.
4. அகம் - 78.

சிறுபாணாற்றுப்படையின் காலத்தைக் கணித்தறிவதற்கு அந்நூலிலேயே அகச்சான்று ஒன்று கிடைக்கின்றது.[5] அந் நூலின் ஆசிரியர் அதில் கடையேழு வள்ளல்களைப்பற்றிக் குறிப் பிடுகிறார். இவ் வள்ளல்கள் பரணர், கபிலர், முடமோசியார் ஆகிய புலவர்களாலும் வேறு சிலராலும் பாடப்பட்டவர்கள். ஆகவே, சங்கப் பாடல்கள் பலவற்றுக்கும் காலத்தால் பிற்பட்டது சிறுபாணாற்றுப்படை எனத் தெரிகின்றது.

முல்லைப்பாட்டின் காலத்தை யறுதியிட வியலவில்லை. இதற்கும் நெடுநல்வாடைக்குமிடையே பொது இயல்புகள் சில காணப்படுகின்றன. ஆகையால், முல்லைப் பாட்டின் ஆசிரிய ரான காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனாரும் நக்கீரரும் ஏறக்குறைய ஒரே காலத்தவர் என்று கொள்ளுவதற்கு எதிர்ச் சான்றுகள் இல.

திருமுருகாற்றுப்படைக்குத் தனிச் சிறப்பு ஒன்று உண்டு; அச் சிறப்பை ஏனைய ஆற்றுப்படைகளின்பால் காண முடியாது. அஃதென்னவெனின், ஏனைய ஆற்றுப்படைகளின் தலைவர் முடியுடை வேந்தரும், குறுநில மன்னருமாவர். அவர்கள் வழங்கிய பரிசிலும் கொடையும் உலகியற் செல்வங்கள். அதனால் புலவர்கள் யாரை ஆற்றுப்படுத்துகிறார்களோ அவர்க ளுடைய பெயர்களையே அவ் வாற்றுப்படைகள் தலைப்புக ளாகத் தாங்கி வருகின்றன. எடுத்துக்காட்டாகப் பொருநரை ஆற்றுப்படுத்துவது பொருநராற்றுப் படை; பாணரை யாற்றுப் படுத்துவது பாணாற்றுப் படை; கூத்தரை யாற்றுப்படுத்துவது கூத்தராற்றுப் படையாகும். ஆனால், திருமுருகாற்றுப் படை யின் ஆற்றுத்துறை யமைப்பு முற்றிலும் மாறுபடுகின்றது. உலகியல் அல்லாது வீடுபேற்றை யருளவல்ல வள்ளல் முருகப் பெருமான் ஒருவனேயாவன். அவனுடைய திருவருளைப் பெற்று உயர்ந்தவர் நக்கீரர். வீடுபேற்றைக் கருதித் தம்மையணையும் சான்றோரை விளித்து வீடுபேறு அளிக்கவல்லான் முருகன் ஒரு வனே என்று எடுத்துக் கூறித் தாம் பெற்ற இன்பமான முருகனின் திருவருட் செல்வத்தை அவர்களும் பெற்றுப் பேரின்ப வாழ்வை யடையுமாறு நக்கீரர் அவரை யாற்றுப்படுத்துகின்றவாறு அமைந்துள்ளது திருமுருகாற்றுப்படை. ஆற்றுப்படைக்குப் புகலிடமாக நிற்பவன் முருகன் என்ற முறையில் இவ்வாற்றுப் படைக்குத் திருமுருகாற்றுப்படை எனப் பெயர் அமைய லாயிற்று.

5. சிறுபாண், 84-111.

பத்துப்பாட்டுத் தொகுப்பில் இறுதியாகச் சேர்க்கப்பட்டது திருமுருகாற்றுப்படையெனச் சில ஆய்வாளர் கருதுவர். ஏனெனில், இந் நூலில் வடமொழிச் சொல்லாட்சியும், புராணக் கதைகளும் மிகுதியாகக் காணப்படுகின்றன; ஏனைய ஆற்றுப் படைகளில் அவற்றை அவ்வளவு காணமுடியாது. ஆனால், இப் பாடல் முருகன் வழிபாட்டைச் சிறப்பித்துக் கூறுவதென்பதை இங்கு நினைவில் கொள்ளவேண்டும். சமயக் கருத்துகளை உள்ளிட்டு இந் நூல் யாக்கப்பட்டதாகும். சமய வழக்கில் ஏற்கெனவே வடமொழிச் சொற்களும் கருத்துகளும் புராண வரலாறுகளும் கலந்துவிட்டன வாகையால் இந்த ஆற்றுப்படை யில் அவை மலிந்து காணப்படுவதில் வியப்பேதுமில்லை. தாம் தேடிப்பெற்ற பத்துப்பாட்டு ஏட்டுச் சுவடிகள் பலவற்றுள் திரு முருகாற்றுப்படை சேர்ந்திருக்கவில்லை என்று மகாமகோபாத் தியாய சாமிநாத ஐயர் தெரிவிக்கின்றார். அதைக்கொண்டு இந் நூல் இத் தொகுப்பில் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டதோ என்று ஐயுறவிடமுண்டு. ஆனால், வைப்பு முறையில் இவ்வாற்றுப் படையானது பத்துப்பாட்டுத் தொகுப்பில் முதலாவதாகத் திகழ் கின்றது. பிற்சேர்க்கைகள் இறுதியிற்றான் சேரும்; தலைப்பில் சேரா. பதிற்றுப்பத்தில் முதற்பத்தும் இறுதிப் பத்தும் மறைந்து போயின. இன்னும் அவை கிடைக்கவில்லை. அதைப்போலவே, பத்துப்பாட்டினும், முதற்பாட்டான திருமுருகாற்றுப்படை சில காலம் மறைந்திருக்கக்கூடும்.

சங்க இலக்கியத்தில் காணப்படாத பல புதிய வடமொழிச் சொற்கள் திருமுருகாற்றுப்படையில் ஆளப் பெற்றுள்ளன. 'அங்குசம்'[6] 'முகம்'[7] என்பன அவற்றுள் சில. கி. பி. 2, 3 நூற்றாண்டுகளிலேயே தமிழில் வடமொழிக் கலப்புப் பெரு மளவில் ஏற்பட்டுவிட்டது. எனவே, திருமுருகாற்றுப்படையில் வடசொற்கள் ஆளப்பட்டிருப்பதில் வியப்பேதுமில்லை. மேலும், சங்கப் புலவரான நக்கீரரும், திருமுருகாற்றுப்படையின் ஆசிரிய ரான நக்கீரரும் ஒருவரல்லர்; இரு வேறு காலத்தவர் ஆவர். திருமுருகாற்றுப்படை ஏனைய பாட்டுகளைவிடக் காலத்தால் பிற்பட்டதாகலாம்; ஆனால், பத்துப்பாட்டுத் தொகுப்பில் பிற்சேர்க்கை அன்று என்று கொள்ளல் வேண்டும்.

நெடுநல்வாடை ஆசிரியரான நக்கீரர் வானவியல் குறிப்பு ஒன்றைத்[8] தம் நூலில் கொடுத்துள்ளார். அதில் மேட இராசி

6. திருமுருகா - 110.
7. திருமுருகா - 92-100.
8. நெடுநல் - 160-2.

யைப் பற்றிக் கூறுகின்றார். இராசிகளைப்பற்றிய செய்திகளைப் புறப்பாட்டு ஒன்றிலும்[9] அறிகின்றோம். அதைப் பாடியவர் கூடலூர் கிழார் ஆவர். தமிழ் இலக்கியத்திலோ வடமொழி இலக்கியத்திலோ கி. பி. 300-க்கு முன்பு இராசிகள், கோள் நிலைகள் திரிதல். ஒரு குழந்தை பிறக்குங்காலையில் உள்ள கோள்நிலை ஆகிய இம்மூன்றையும்பற்றி ஒரு குறிப்பேனும் காணப்படுவதில்லை என்பார் எல். டி. சுவாமிகண்ணு பிள்ளை யவர்கள். எனவே, நெடுநல்வாடையும், கூடலூர்கிழாரின் புறப்பாட்டும் கி. பி. 300-க்கு முன்பு தோன்றியிருக்க முடியாது என்பது இவருடைய கொள்கையாகும். எஸ். வையாபுரி பிள்ளையவர்கள் வேறு காரணங்காட்டி நெடுநல்வாடையின் பழைமையை மறுப்பார். முல்லைப்பாட்டில் 'கன்னல்' என்றொரு சொல் ஆளப்பட்டுள்ளது.[10] அச் சொல் நாழிகை வட்டில் என்று பொருள்படும். அகப்பாட்டு ஒன்றன் ஆசிரியர் நல்லந்துவனாரும் நாழிகை வட்டிலைக் கன்னல் என்னும் சொல் லால் குறிப்பிடுகின்றார்.[11] கன்னல் என்னும் சொல் 'குரோ னிஸ்' (Khrones) என்ற கிரேக்கச் சொல்லின் மரூஉ என்றும், 3ஆம் நூற்றாண்டில் ரோமர்கள் கன்னல் என்ற நாழிகை வட்டி லைத் தமிழகத்துக்கு அறிமுகப்படுத்தினார்கள் என்றும், ஆகவே நெடுநல்வாடையானது கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் எழுந்த ஒரு நூலாகும் என்றும் வையாபுரி பிள்ளையவர்கள் கருதுவார். குரோனிஸுக்கும் கன்னலுக்கும் தொடர்பு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. தமிழ்நாட்டில் கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளிலேயே ரோமரின் வாணிகச் செல்வாக்கு உச்ச நிலையை எட்டியிருந்தது. அக் காலத்திலேயே குரோனிஸ் என்ற நாழிகை வட்டிலை அவர்கள் தமிழ்நாட்டில் வழக்குக்குக் கொண்டுவந்திருக்கக்கூடும். எனவே, வையாபுரி பிள்ளையவர் களின் கால அறுதியீடு பிழையற்றது என்று கொள்வதற்கில்லை. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனே நெடுநல் வாடையின் தலைவனாக நச்சினார்க்கினியர் கொள்ளுகின்றார். இப் பாண்டியன் வாழ்ந்த காலம் சுமார் கி. பி. 90-128. ஆகை யால், கி. பி. முதல் நூற்றாண்டின் இறுதியிலோ, இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ நெடுநல்வாடை பாடப் பெற்றிருக்க வேண்டும்.

அடுத்துத் தொல்காப்பியம் இயற்றப்பட்ட காலத்தைச் சிறிது ஆய்வோம். இப்போது வழங்கிவரும் தமிழ் இலக்கண

9. புறம் - 229.
10. முல்லைப் - 57-8.
11. அகம் - 48.

நூல்கள் யாவற்றினும் பழைமையானது தொல்காப்பியமாகும். இந்நூல் இடைச்சங்க காலத்தில் எழுந்ததாக இறையனார் களவியல் உரையாசிரியர் கூறுவார். அப்படியாயின் அது கி. மு. நான்காம் நூற்றாண்டில் தோன்றியதெனக் கொள்ளலாம். தொல்காப்பியம் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்கள் அனைத்தினுக்கும் முற்பட்டதாகும். இதற்கு முரணாகச் சில ஆராய்ச்சியாளர் தொல்காப்பியம் கடைச் சங்க நூல்கள் யாவற்றுக்கும் காலத்தால் பிற்பட்டதெனக் கால அறுதியிடுவர்; மனு தரும சாத்திரம், பரதமுனியின் நாட்டிய நூல், வாத்சயாயனரின் காமசூத்திரம் ஆகியவற்றை ஆய்ந்து தொல்காப்பியர் தம் இலக்கண நூலைப் படைத்தார் என்று அவர்கள் கருதுகின்றார்கள். இவர்கள் கருத்துக்குத் திட்டமான சான்றுகள் கிடையா. தமிழகத்திலிருந்து பல கருத்துகளும் சொற்களும் வடமொழியில் நுழைந்து இடம் பெற்றுள்ளன. இவ்விரு மொழிகளுக்கும், வேறு மொழிகள் சிலவற்றுக்குமிடையே பொதுவான கூறுபாடுகள் பல உள. எனவே, தொல்காப்பியர் வடமொழி நூல்கள் காட்டிய வழியிலேயே தம் இலக்கணத்தை இயற்றினார் என்பது உண்மைக்கும் நேர்மைக்கும் புறம்பாகும். 'சமஸ்கிருத நாடகமும், அதன் தோற்றமும் மறைவும்' என்னும் நூலின் ஆசிரியரான இந்துசேகர் என்பார் தமிழ்நாட்டில் பரதர் என்ற ஒரு குலம் இருந்ததென்றும், நாட்டியம் ஆடுவதும் நடிப்பதும் அவர்களுடைய தொழிலாகும் என்றும், ஆரிய வேதியருக்கு இக்கலையில் உடம்பாடு கிடையாது. ஆகையால், இவற்றைப் பயின்று வந்தத் தமிழ்ப் பரதரை அவர்கள் தாழ்வாகக் கருதி வந்தனர் என்றும் கூறுகின்றார்.

வச்சிரநந்தி என்ற சமணர் தொடங்கிய 'திராமிள' சங்கமே தமிழ்ச் சங்கம் என்னும் பெயரில் வழங்கி வந்தது என்றும், அச் சங்கம் கி. பி. 470-ல் செயல்படத் தொடங்கிற்று என்றும், அதனின்றும் வெளியான முதல் தமிழ்நூல் தொல்காப்பியமே என்றும் வையாபுரி பிள்ளையவர்கள் தம் ஆழ்ந்த தமிழாய்வின் பயனாய் வெளியிட்டது மற்றொரு வியப்பூட்டும் ஊகமாகும். இதை வரலாற்று உண்மையாக ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்ளார்கள். தமிழ்நாட்டில் சமணத்தைப் பரப்புவதற்காகவே ஏற்பட்டது வச்சிரநந்தியின் திராமிள சங்கம் என்பது. தமிழ் மொழியில் இலக்கிய இலக்கணம் தோற்றுவித்து மொழிக்கு வள்மூட்டுவதில் அதற்கு ஈடுபாடே கிடையாது. எனவே, அச் சங்க காலத்துக்குச் சாலவும் முற்பட்டது தொல்காப்பியம் என்பது தேற்றம்.

தொல்காப்பியரின் காலத்தைப் போலவே அவருடைய சமயக் கொள்கைகளும் இன்னவென அறிந்துகொள்ள முடிய வில்லை. தொல்காப்பியர் சமணர் என்று ஆய்வாளர் சிலர் கூறுகின்றனர். தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்ட காலத்தில் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றிப் பல் புகழ் நிறுத்த படிமையோனே' என்று தம் புகழை நிலைநாட்டிக் கொண்டவர் எனப் பனம்பாரனார் தொல்காப்பியரைப் பாராட்டிச் சிறப்புப்பாயிரம் எழுதியுள்ளார். இதில் குறிப்பிடப்பட்டுள்ள ஐந்திரம் என்னும் நூலைப்பற்றியும், படிமை என்னும் சொல்லைப்பற்றியும் ஆராய்ச்சியாளரிடையே முரண்பாடான கொள்கைகள் காணப் படுகின்றன. ஐந்திரம் என்பது ஐந்திர வியாகரணம் என்னும் பெயரின் குறுக்கமாகும். வடமொழியின் வளர்ச்சியைமுன்னிட்டு அது இந்திரனால் இயற்றப்பட்டதாகக் கருதுகின்றனர். இந்திர னால் செய்யப்பட்ட நூல் ஐந்திரம் என்னும் பெயர் ஏற்றது வடமொழி வழக்கு. 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்ற பனம்பாரனார் கூற்றுக்குச் சிவஞான முனிவர், 'வட மொழியினும் வல்லனாயினுன் என்பார் ஐந்திரம் நிறைந்த 'தொல்காப்பியன்' என்று பொருள் உரைத்தார். தொல் காப்பியர் காலத்தில் ஐந்திரமானது வடமொழியில் சிறந்த இலக்கண நூலாக விளங்கிற்று. இதையும் தொல்காப்பியர் நன்கு பயின்றிருந்தாராகலின் அவரை ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியன் என்று பனம்பாரானார் கூறினார். மற்றொரு புகழ் பெற்ற இலக்கண நூலான பாணினீயம் அக்காலத்து வழக்கில் இல்லை. அப்படி அது வழங்கியிருக்குமாயின் பனம்பாரனார் தொல்காப்பியரைப் 'பாணினீயம் நிறைந்த தொல்காப்பியன்' என்று பாராட்டியிருப்பார்.

இந்திரனால் செய்யப்பட்ட நூலினை, 'விண்ணவர் கோமான் விழுநூல்' என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.[12] இங்குச் சுட்டப்படுவது ஐந்திர வியாகரணம் என்று உரை யாசிரியர் அடியார்க்கு நல்லார் கருதுகின்றார். மாங்காட்டு மறையோன், 'புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின் விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவிர்' என்று கூறினான்; அவன் வைதிக மறையோன், அவனுக்கு மறுமொழியாகக் கவுந்தியடிகள். 'கப்பத் திந்திரன் காட்டிய நூலின் மெய்பாட் டியற்கையின் விளங்கக் காணாய்' என இயம்பினாள்.[13]

12. சிலப்-11 : 98-99
13. சிலப்-11 : 154 155.

அதாவது, ''தேவர்களும் ஆயுள் கற்பத்தினை மிகவுடைய இந்திரன் தோற்றுவித்த வியாகரணத்தினை எம்முடைய அருக குமரன் அருளிச்செய்த பரமாகமங்களில் காண்கின்றிலையோ?'' என்பது இதன் விளக்கம். மறையோன் கூறிய ஐந்திரமும், கவுந்தி யடிகள் குறித்த பரமாகமமும் வேறு வேறென்றும், கவுந்தி யடிகள் சமணப் பற்றுடையவராகலின், வைதிக நூலான ஐந்திரத்தைத் தாழ்த்திச் சமண நூலாகிய பரமாகமத்தை உயர்த்திக் காட்டினார் என்றும் அறிகின்றோம். சமண முனிவ ராகிய இளங்கோவடிகளே கவுந்தியடிகளின் வாயிலாக ஐந்திரம் ஒரு வைதிக நூலாகும் என்று புலப்படுத்தியுள்ளார். எனவே, தொல்காப்பியனார் காலத்தில் வழக்கிலிருந்த ஐந்திர வியாகர ணம் இளங்கோவடிகள் காலத்தில் வழக்கொழிந்து, மாங்காட்டு மறையோன் கூறியபடி, புண்ணிய சரவணம் படிந்து தெய்வத் தினிடம் கேட்டுத் தெளிந்து கொள்ள வேண்டிய அளவுக்கு நுணுகிவந்து இறுதியில் மறைந்தே போயிற்று. மறைந்துபோன ஐந்திரத்தைச் சிவபெருமான் பாணினிக்கு உரைசெய்தார் என்பது வடமொழி மரபு. திருநாவுக்கரசரும் 'இந்திரத்தை இனிதாக ஈந்தார் போலும்' என்று சிவபெருமானைப் பரவுகின்றார்.[14]

பனம்பாரனார் தம் சிறப்புப் பாயிரத்தில், 'பல்புகழ் நிறுத்த படிமையோன்' என்று புகழ்ந்திருப்பதைச் சற்று ஆய்வோம். படிமையோன் என்னும் சொல் சமண சமயத்து வழங்கும் சொல் லென்றும், அதனால் தொல்காப்பியனாரைச் சமண சமயத்தினர் என்றும் சிலர் கூறுவர். உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இச் சொற்றொடருக்குப் 'பல புகழ்களையும் இவ்வுலகின்கண்ணே மாயாமல் நிறுத்திய தவவேடத்தை யுடையோன்' என்னும் பொருள் பகர்வார். படிமை என்னும் சொல் சமண சமயத் துக்கே உரித்தானதொரு சொல்லன்று. அப்படி அஃது இருந்திருக் குமாயின் பிறசமயத்தினர் அக் காலத்தில் அதை எடுத்து ஆண்டிருக்கமாட்டார்கள். பதிற்றுப்பத்து 74ஆம் பாடலில் 'கேள்வி கேட்டுப் படிவம் ஒடியாது வேள்வி வேட்டனை உயர்ந் தோர் உவப்ப... கூறினை பெருமநின் படிமையானே' என்னும் அடிகளில் வைதிக ஒழுக்கம் பாராட்டப்படுகின்றது. இங்குப் படிமையான் என்னும் சொல் தவவொழுக்கம் உடையவன் எனப் பொருள்படுகின்றது. படிமை என்ற சொல்லின் பகுதி 'படி' என்பதாம். படி என்னும் சொல் நிலத்தின் தன்மையைக் குறித்து நிற்கும்.[15] நிலத்தின் நீர்மையான 'தன்மை' என்னும்

14. தேவாரம்-6-28-8.
15. தொல். பொருள் அகத்-82.

பொருளில் தமிழ் இலக்கியத்தில் பல இடங்களில் இது பயின்று வரக் காணலாம். 'இப் படியன் இந் நிறத்தன்' என்று திருநாவுக்கரசர் பாடுகின்றார். 'ஏசும்படியோர் இளங்கொடியாய்' என்னும் சொற்றொடரில் 'படி' என்பதற்கு அடியார்க்குநல்லார் 'வடிவு' என்று பொருள் கூறுகின்றார்.[16] 'பாரோர் காணாப் பலர் தொழு படிமையன்'[17] எனச் சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும்[18] முறையே சாரணனது வடிவமும், விஞ்சையனின் வடிவமும் சிறப்பிக்கப்பட்டுள்ளன. படிமை என்னும் சொல் படிவம் எனவும் வழங்குவதுண்டு. 'தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப் படிவ உண்டிப் பார்ப்பன மகனே' என்று குறுந்தொகைச்செய்யுள் ஒன்றில்[19] சொல்லாட்சியுண்டு. எனவே, படிமை என்னுஞ் சொல் தமிழ்ச் சொல்லேயாகும்; அது பிராகிருதச் சொல்லன்று. இஃதே 'படிமா' என்று திரிந்து பிராகிருதத்தில் நுழைந்திருக்கக் கூடும். ஆகவே, படிமை என்னும் சொல்லைக் கொண்டு தொல்காப்பியனாரைச் சமணர் என்று கூறுவது எவ்விதத்திலும் ஒவ்வாததாகும்.

தொல்காப்பியர் வகுத்த இலக்கண விதிகள் சிலவற்றைப் பரணர், கபிலர் போன்ற ஒருசில கடைச்சங்கப் புலவர்கள் கையாளவில்லை என்று சிலர் கூறுகின்றனர். ஆகவே, கடைச் சங்கத்துக்கும் பிற்பட்ட காலத்தினர் தொல்காப்பியர் என்பது இவர்களுடைய வாதமாகும். கடைச் சங்கப் புலவர்களான புகழ் பெற்ற பரணரும் கபிலரும் ஒரு சொல்லாட்சியை வழக்கில் கொண்டு வந்திருந்தால் அவர்களுக்குப் பிற்பாடு வரும் ஓர் இலக்கண ஆசிரியர் அவ்விருவரின் சொல்லமைப்புக்கு இலக்கண விதிகள் வகுத்திருப்பர். வழங்கிவரும் இலக்கியத்துக்கு இலக்கண விதிவகுத்தலே இயல்பும் மரபுமாம். அப்படியாக, சங்கப் புலவர்கட்கு முரண்பாடாகத் தொல்காப்பியனார் இலக்கணம் கண்டிருக்கமாட்டார். எனவே, இவ்வெடுத்துக்காட்டைக் கொண்டே ஓர் உண்மையை அறியவேண்டியுள்ளது. தம் காலத்து வழங்கிய தமிழுக்குத்தான் தொல்காப்பியர் இலக்கணம் வகுத்தார்; அவருடைய காலத்துக்குப் பிறகு தமிழரின் வாழ்க்கை விரிவுற்றது. வெளி உலகத் தொடர்பும் தமிழகத்துக்குக் கிடைத்தது. அவ்விரிவுக்குத் தக்கவாறு சொற்கள் பெருகின. சில சொற்கள் தொல்காப்பிய விதிகளுக்கு முரணாகவும் அமையலாயின.

16. சிலப். 9: 16.
17. சிலப். 15: 158.
18. மணிமே. 3: 37.
19. குறுந். 156

இம் முரண்பாடுகளுக்கு அமைதி காணும் பொருட்டுப் பவணந்தி முனிவர் போன்ற பிற்கால இலக்கண ஆசிரியர்கள் 'பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல, கால வகையினானே' என்ற ஒரு தத்துவத்தின் அடிப்படையில் பல புதிய இலக்கண விதிகளை நிறுவிக் கொடுத்தனர்.

கடைச் சங்க காலத்தில் களவுவழித் திருமணம் நடைபெற்று வந்ததென்றும், தொல்காப்பியர் காலத்தில் அம் முறை மாறிப் பெற்றோரே முன்னின்று திருமணம் முடித்து வைக்கும் இக் கால மணமுறை வழக்குக்கு வந்துவிட்டதென்றும், அக் காரணத்தை முன்னிட்டே தொல்காப்பியனார் 'பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப'[20] என்னும் நூற்பா இயற்ற வேண்டியிருந்ததென்றும் சிலர் கூறுவர். இது முற்றிலும் பொருந்தாததொரு வாதமாகும். களவு, கற்புத் துறைகளின் படியே வாழ்க்கைக்கு நிறுவப்பட்ட இலக்கண விதிகளில் நூற்றுக்கு நூறு சமுதாயத்தில் வாழ்க்கை நடைபெற்று வந்த தென்று திட்டமாகக் கூறுவதற்கில்லை. அவ்விதிகளுக்குப் புறம்பான நடைமுறைகளும் தோன்றிப் பழக்கவழக்கங்களாக அமைந்து விட்டிருக்கக்கூடும். இதைக்கொண்டே தொல் காப்பியர் கடைச் சங்க காலத்துக்குப் பின்னிட்டு வாழ்ந்தவர் என்று கொள்ளுதல் கூடாது. மற்றும் 'பொய்யும் வழுவும்' என்னும் நூற்பாவே இடைச்செருகல் என்று கருதுபவர்களும் உளர்.

'ஐயர்' என்னும் சொல் கி. பி. 15 ஆம் நூற்றாண்டின் இடைக்காலம் வரையில் பிராமணரைக் குறித்து நின்றதில்லை. பிராமணரும் தம் பெயருக்குப் பிறகு, 'ஐயன்' என்றே குலப்பட்ட மாக எழுதிக்கொள்ளுவது வழக்கமாக இருந்ததே யொழிய, தம்மை 'ஐயர்' என்று கூறிக்கொண்டதற்குச் சான்றுகள் இல்லை. 'ஐயர்' என்னும் சொல் முதன்முதல் இறைவனையே குறித்து நின்றது. கல்வெட்டுகளிலும் பிராமணருக்கு 'ஐயர்' என்னும் குலப் பெயர் வழங்கவில்லை; சடங்கவி, பட்டர் போன்ற பட்டப் பெயர்களே காணப்படுகின்றன. ஐயர் என்னும் சொல் தலைமைச் சிறப்புடைய பெரியோரைக் குறித்து வழங்கும் தனிச் சொல்லாகப் பிற்காலத்தில் பொருள் மாற்றம் ஏற்றது. ஆண்ட வனின் அடியவரையும் ஐயர் என்று அழைத்தல் மரபாக இருந்தது. அவர்களை நாயனார் என்றும் தேவர் என்றும் அழைப்பதுமுண்டு. இவர்களும் ஐயர் என்று குறிப்பிடப்படுகின்ற னர். சேக்கிழார் கண்ணப்பநாயனாரைச் 'சார்வலைத் தொடக்கு

20. தொல். பொருள். கற்பு. 4.

அறுக்க ஏகும் ஐயர்'[21] என்றும், திருநாளைப் போவார் புராணத்தில் திருநாளைப்போவாரை 'ஐயரே,! அம்பலவர் அருளால் இப்பொழு தணைந்தோம்'[22] என்றும் திருஞான சம்பந்த நாயனார் புராணத்தில் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரை, 'ஐயர் நீர்'[23] என்றும் குறிப்பிடுதல் சிறப்பாக நோக்கத் தக்கதாம். மக்களிலும் தேவர் உயர்ந்தவராகக் கருதப்படுவர். ஐயன் என்னும் சொல் கடவுளரையும் குறித்து நிற்பதுண்டு. சாத்தன் என்ற கடவுளை ஐயனார் என்று சிறப்பு விகுதியிட்டு அழைக்கின்றோம். ஐயன் என்பதன் பெண்பால் ஐயை. பெண்களுள் சிறந்தவரை முற்காலத்தில் 'ஐயை' என்று அழைப்பார், 'ஐ' வியப்பாகும் என்பது இலக்கண மரபு.[24] ஐயன் வியக்கத்தக்க பெயருடையவன் என்பது பொருள். பெண் பாலரிற் சிறந்தவர்கள் 'ஐயள்' [25] என்று அழைக்கப்பட்டனர். ஆரிய வேதியர் தென்னாட்டுக்கு வந்த பிறகு பார்ப்பார் என்றும், அவர்களுள் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகியவர்கள் அந்தணர் என்றும் அழைக்கப்பட்டனர். எனவே, 'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப' என்னும் நூற்பாவில் ஆளப்பெற்றிருக்கும் ஐயர் என்னும் சொல் மக்களிற் சிறந்த சான்றோரைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டுமே யல்லாது பிராமணரைக் குறிப்பதாகக் கொள்ளு வதற்குச் சான்று ஏதும் இல்லை.

சேர சோழ பாண்டிய மன்னர் மூவரையும் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. அதனால் இந்நூல் சாலவும் பிற்பட்டதாக இருக்க வேண்டும் எனக் கூறுவர் கே. என். சிவராஜ பிள்ளை அவர்கள். இவர் கொண்டுள்ள முடிபானது வரலாற்று நிகழ்ச்சி களுக்கு முற்றிலும் முரண்பாடானதாகும். காத்தியாயனர் கி. மு. நான்காம் நூற்றாண்டிலேயே சோழரைப்பற்றியும் பாண்டியரைப்பற்றியும் எழுதியுள்ளார். இம் மன்னரைப்பற்றிய குறிப்புகள் ஹதீகும்பாக் கல்வெட்டுகளிலும் (கி.மு. 2ஆம் நூற்றாண்டின் முற்பகுதி) வருகின்றன. எனவே, தொல் காப்பியர் தம் நூலில் அம் மூன்று மன்னரையும் குறிப்பிடுவதில் வியப்பேதுமில்லை.

21. பெரிய பு. கண்.நாய.70.

22. பெரிய பு. திருநா. நாய 30

23. பெரிய பு. திருஞான. 133.

24. தொல். சொல், உயிரியல், 87.

25. ஐங்குறு. 255

தொல்காப்பியத்தைக் காலத்தால் மிகவும் பிற்பட்டதொரு நூலாகக் கொண்டவர்களுள் தலையாயவர் வையாபுரிப் பிள்ளையவர்கள். அவரும் அவரைப் பின்பற்றி கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி முதலியோரும் தம் கருத்துக்கு உறுதி தேடிப் பல சான்றுகளை நாடினார்கள். அவற்றுள் ஒன்று தொல்காப்பியர் 'ஓரை' என்னும் சொல்லுக்குத் தம் இலக்கணத்தில் இடமளித்திருப்பதாகும்; 'மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும் துறந்த ஒழுக்கம் கிழவோற்கில்லை' [26] என்பது தொல்காப்பியத்தின் நூற்பாக்களுள் ஒன்று. இதில் வரும் 'ஓரை' என்னும் சொல் 'ஹோரா' என்னும் கிரேக்கச் சொல்லின் மரூஉ என்றும், ஹோரா என்னும் சொல் முதலில் கிரேக்க மொழியிலிருந்து சமஸ்கிருத சோதிட நூல்களில் கி. பி. மூன்று நான்காம் நூற்றாண்டுகளில் நுழைந்து, பிறகு வட மொழிச் சோதிட நூல்களின் மூலம் தமிழில் புகுந்து வழக்கேற்றது என்றும் அவர் ஊகித்தார். இதைக்கொண்டு தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தைக் கி.பி. 500 என்று அவர் அறுதியிட்டு மகிழ்ந்தார். கிரேக்கருடன் தமிழர் நேர்முகத் தொடர்பு கொண்டிருந்தவர்கள்; யவனரின் நாழிகை வட்டில் தமிழகத்தில் பயன்பட்டு வந்தது. ஆகையால், ஹோரா என்னும் சொல் கிரேக்கர்கள் தமிழருக்கு நேரில் வழங்கிய சொற்களில் ஒன்றாகும். இந்தச் சொல் நேரடியாகத் தமிழில் நுழைந்து ஆட்சி பெற்றிருக்கவும், இவ்வறிஞர்கள் வடமொழியின் இடையீட்டை நாடினமை என்ன காரணமோ அறியோம். 'ஓரை' என்னும் சொல்லுக்கு நச்சினார்க்கினியர் தவறாகப் பொருள் கொண்டதன் விளைவாக ஏற்பட்ட குழப்பமே காரணமாகவும் இருக்கலாம்.

ஓரை எனுஞ் சொல் இந் நூற்பாவில் 'விளையாட்டு' என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது என்றும் ஆய்வாளர் சிலர் கருதுகின்றனர்.[27] ஓரை என்னும் சொல் விளையாட்டு என்னும் பொருளில் வழங்கும் தனித் தமிழ்ச் சொல்லாகும். 'கோதை ஆயமொடு ஓரை தழீஇ'[28] எனவும், 'ஓரை ஆயம்'[29] எனவும், 'ஓரை மகளிர்'[30] எனவும், ஓரை யாயத்து ஒண்டொடி மகளிர்'[31] எனவும், 'விளையாடு ஆயமொடு ஓரை யாடாது'[32] எனவும் இச்

26. தொல். பொருள், களவு, 44
27. வெள்ளைவாரணர், தமிழ் வரலாறு (தொல்காப்பியம்) பக். 125
28. அகம். 48,16
29. அகம். 219
30. குறுந். 401
31. புறம். 176
32. நற்றி. 68:1

சொல் தமிழ் இலக்கியத்தில் 'விளையாட்டு' என்னும் பொருளில் வழங்கிவந்துள்ளது. எனவே, இதற்கு இராசி என்று பொருள் கொள்ளல் பொருத்தமாகாது.

சங்க இலக்கியத்துக்கு முற்பட்டது தொல்காப்பியம் என்பதற்கு மேலும் சில சான்றுகளைக் காட்டலாம். சங்கப் பாட்டுகளில் இடம் பெற்றுள்ள சமயக் குறிப்புகள் பல தொல்காப்பியத்தில் காணப்படவில்லை. 'மாயோன், சேயோன், வருணன், வேந்தன் என்னும் நானிலத் தெய்வங்களுடன் கொற்றவை என்ற பெண் தெய்வத்தையும் தமிழர் வழிபட்டனரெனத் தொல்காப்பியர் கூறுகின்றார்'.[33] ஆனால், கடைச் சங்ககாலத்தில் 'காரியுண்டிக்கடவுள்' என்றும், 'மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன்' என்றும், 'முக்கண்ணான்' என்றும் கடவுளை உருவத் திருமேனியில் வழிபட்டு வந்ததைக் காண்கிறோம். திருமால் வழிபாட்டில் 'செங்கட்காரி' (வாசுதேவன்), 'கருங்கண் வெள்ளை, (சங்கருடணன்), 'பொன்கண் பச்சை' (பிரத்தியும்நன்), 'பைங்கண் மால்' (அநிருத்தன்) என்னும் பெயர்கள் பரிபாடலில் வழங்குகின்றன. கடைச்சங்க காலத்தில் சிவன் வழிபாடும் பலதேவன் வழிபாடும் மேற்கொள்ளப்பட்டிருந்தன. அவர்களுடன் திருமாலையும் முருகனையும் தமிழர் அப்போது வழிபடலாயினர். காமன் வழிபாடும் சிறப்புற்று விளங்கிற்று. ஆனால், தொல்காப்பியத்தில் காமனைப்பற்றிய குறிப்பே காணப்படவில்லை.

மற்றும், அகத்திணையைப்பற்றிய செய்யுள்கள் யாவும் பரிபாடல், கலிப்பா ஆகிய பாவினங்களில் அமைய வேண்டுமெனத் தொல்காப்பியர் விதித்துள்ளார். ஆனால், கடைச்சங்க காலத்தில் அகப்பொருளை அகவற்பாவில் பாடியுள்ளனர். கருத்துப் பெருக்கம், மக்களின் வாழ்க்கைவகை ஏற்றம், அவர்களுடைய பண்பாடு, நாகரிகம் முதலியவற்றின் வளர்ச்சி ஆகியவற்றுக்கு ஏற்றவாறு மொழி வளர்ச்சியும் ஓங்கிவரும். அந் நிலையில் இலக்கணப் படைப்புகள் இலக்கண விதிகளையும் கடந்து செல்ல வேண்டியிருக்கும். இக் காரணத்தால் வளர்ந்து வந்த தமிழிலக்கியமானது தொல்காப்பியம் வேய்ந்த இலக்கண நெறியினின்றும் ஆங்காங்கு வழுவலாயிற்று. இவ் வழுவல்களுக்கும் இலக்கண அமைதி கண்டு புது விதிகளை நிறுவிக் கொடுத்தனர் பிற்கால இலக்கண ஆசிரியர்கள்.

தொல்காப்பியர் இடைச்சங்க காலத்தில் வாழ்ந்தவராயின் இடைச்சங்க காலம் எஃது என்னும் கேள்வி எழுகின்றது. தொல்

33. தொல். பொருள், புறத்திணை. 4

காப்பியர் கி. மு. 4ஆம் நூற்றாண்டிலோ அன்றி அதற்கும் முன்னிட்டோ வாழ்ந்திருந்தவர் என்னும் கருத்து ஆய்வாளரிடையே நிகழ்ந்து வருகின்றது. தொல்காப்பியத்தின் பழமையைக் கணக்கிடுவதற்குத் தொன்றுதொட்டு வழங்கிவரும் கடல்கோள் செய்திகள், சிங்களநாட்டு வரலாறுகள் ஆகியவை பொருந்துமாறு பயன்படுவதில்லை. இறையனார் அகப்பொருள், முல்லைக்கலி,[34] சிலப்பதிகாரம் ஆகியவற்றில் இரு கடல்கோள்களைப்பற்றி அறிந்து கொள்கின்றோம். முதல் கடல்கோள் தென்மதுரையை விழுங்கிற்று. இரண்டாம் கடல்கோளில் கபாடபுரம் முழுகிப் போயிற்று. ஆனால் 'தீபவமிசம்', 'மகாவமிசம்', 'இராசாவளி' என்னும் சிங்களத்து வரலாறுகள் மூன்று கடல்கோள்களைக் குறிப்பிடுகின்றன, முதல் கடல்கோள் கி. மு. 378-ல் நிகழ்ந்ததாம், அதைத் தொடர்ந்து இலங்கைத் தீவு தென்னிந்தியாவினின்றும் பிரிந்துவிட்டதாம். இரண்டாம் கடல்கோள் கி.மு.504-ல் நிகழ்ந்து இலங்கைத் தீவின் பெரும்பகுதியையும் தண்ணீரில் மூழ்கடித்து விட்டதாம். பிறகு கி. மு. 305-ல் ஏற்பட்ட மூன்றாம் கடல் கோளினால் இலங்கைக்கு ஊறு ஒன்றும் நிகழவில்லையாம். இந்த மூன்றாம் கடல்கோளே கபாடபுரத்தையும், இரண்டாம் சங்கத்தையும் அழித்ததென்றும் தொல்காப்பியம் கி.மு. 306-க்கு முன்பு தோன்றியிருக்க வேண்டுமென்றும் டாக்டர் மா. இராசமாணிக்கனார் கூறுவார். [35]சிங்கள வரலாறுகள் நம்பத்தக்கனவா என்பது ஒருபுறம் கிடக்க, அவை குறிப்பிடும் மூன்றாம் கடல்கோள்தானா இரண்டாம் சங்கத்தை முடிவுக்குக் கொண்டு வந்தது என்று ஐயுற வேண்டியுள்ளது. அதன் பின்னரும் கடல்கோள் ஒன்று நேர்ந்திருக்கலாகாதா? கடல்கோள்களைப் பற்றிய பழங்கதைகள் பல தமிழ்நாட்டில் வழங்கி வருகின்றன. அவற்றுள் ஒன்றையே இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் எடுத்துக் கூறியிருக்கக் கூடும். பழங்கதைகளுக்கும் செவிவழி வரலாறுகட்டும் காலங் கணிப்பது எளிதன்று.

பாணினி தம் நூலில் தென்னிந்தியாவைப்பற்றிக் கூறும்போது கலிங்கத்துக்குத் தெற்கில் இருந்த நாடுகளைப்பற்றி எந்தச் செய்தியையும் அளிக்கவில்லை என்றும், ஆனால், கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான காத்தியாயனர் சோழரைப் பற்றியும் பாண்டியரைப் பற்றியும் தம் நூலில் குறிப்புகள் தருகின்றார் என்றும் ஏற்கெனவே கண்டோம். தமிழ்நாட்டில் ஆரி

34. முல்லைக்கலி 4.

35. தமிழ் இலக்கிய இலக்கணக் கால ஆராய்ச்சி, (1957) பக். 9. டாக்டர் இராசமாணிக்கனார்.

யரின் குடியேற்றம் கி.மு. 6-4 நூற்றாண்டுகளில் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது திண்ணம். எனவே, அடுத்த மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகளில் தொல்காப்பியம் எழுதப்பட்டிருக்கலாம். பார்ப்பனரின் கடமைகளைப்பற்றி அந்நூலில் விதி வகுக்கப்பட்டுள்ளது. பார்ப்பனரின் குடியேற்றம் விரிவாக நடைபெற்ற சில காலத்துக்குப் பிறகே அவர்களுக்கென விதிகள் வகுக்க வேண்டிய தேவை ஏற்படும். ஆகையால், தொல்காப்பியரைக் கி.மு. 6-4 நூற்றாண்டுகளைச் சார்ந்தவர் என்று கொள்ளுவதற்கில்லை.

வடமொழிச் சொற்களைத் தமிழில் ஏற்றுக்கொள்ளுவது எவ்வாறு என்பதற்குத் தொல்காப்பியர் விதி ஒன்று வகுத்துள்ளார்.[36] ஒரு நாட்டில் நுழைந்து இடம்பெறும் புதிய ஒருமொழியானதுஅந் நாட்டில் ஏற்கெனவே வழக்கத்திலிருக்கும் ஒரு மொழியுடன்ஒருங்கிணைந்து கலந்து வழங்கத் தொடங்குவதற்குக் குறைந்ததுமூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகளாவது செல்லவேண்டும். அத்தகைய நிலையிற்றான் அயல்மொழிச் சொற்களை ஏற்றுக் கொள்ளும் ஒரு நாட்டு மொழிக்குச் சில நடைமுறை விதிகள் வகுக்க வேண்டியிருக்கும். ஆகவே, தொல்காப்பியம் கி.மு. 2 அல்லது 1ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருக்கலாம் என்று கொள்ளுவது பொருத்தமாகும்.

தொல்காப்பியத்தின் காலத்தைக் கி. மு. 1000 முதல் கி. பி. 10 ஆம் நூற்றாண்டுவரையில் ஆய்வாளர்கள் அறுதியிடுகின்றனர். அது கடைச்சங்கத்துக்கு முற்பட்டதெனச் சிலரும், பிற்பட்டதெனச் சிலரும் கூறுவர். எவ்வாறாயினும், தொல்காப்பியம் கடைச்சங்கத்துக்குச் சற்று முற்பட்டது என்று கொள்ளுவதற்குத் திட்டமான சான்றுகள் உள்ளன.

அடுத்துப் பதினெண்கீழ்க்கணக்கு என்னும் தொகுப்பை ஆய்வோம். இதில் அடங்கியுள்ள நூல்களாவன: நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறு பஞ்ச மூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந்நிலை ஆகியவை. முன்பு ஒரு காலத்தில் பண்டைத் தமிழ் நூல்கள் மேற்கணக்கு எனவும், கீழ்க்கணக்கு எனவும் இருவகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன என்று பன்னிருபாட்டியல் மூலம் அறிகின்

36. தொல். சொல், எச்சவியல் 5

றோம். மேற்கணக்கின் இயல்பு 'ஐம்பது முதலா, ஐந்நூறு ஈறா, ஐவகைப் பாவும் பொருள்நெறி மரபின் தொகுக்கப்படுவது மேற்கணக்காகும்' என்றும், கீழ்க்கணக்கின் இயல்பு 'அடிநிமிர்பு இல்லாச் செய்யுள் தொகுதி அறம், பொருள், இன்பம் அடுக்கி, அவ்வகைத் திறம்பட உரைப்பது கீழ்க்கணக்காகும்' என்றும் கூறும் சில மேற்கோள்களைப் பன்னிருபாட்டியல் எடுத்துக் காட்டுகின்றது. எனவே, இந்நூல் தோன்றுவதற்கு முன்பே இத்தகைய பாகுபாடானது தமிழகத்தில் காணப்பட்டது என்பது தெளிவாகின்றது. ஆகையால், இப்பாகுபாடு செய்யுள் களின் அடி எண்களைக்குறித்ததே தவிர நூலின் பெருமை குறித்ததன்று. கீழ்க்கணக்குநூல்கள் ஒவ்வொன்றிலும் ஆறடிக்கு மேல் ஏறாத செய்யுள்களே காணப்படும்; அச்செய்யுள்கள் வெண்பாக்களாக இருக்கும்;ஒழுக்கத்தைப் பற்றியே பேசும். மேற்கணக்கு நூல்களோ அகவல் அல்லது கலிப்பா அல்லது பரிபாடல் என்னும் செய்யுள் இலக்கணத்தில் அமைந்திருக்கும்.

கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டும் 'சங்கம் மருவிய நூல் களாம்' என்று அறிஞர்கள் வழிவழிக் கூறிவருகின்றனர். கீழ்க் கணக்கு நூல்கள் இயற்றியவர்களைப் 'பிற்சான்றோர்' என்று பேராசிரியர் குறிப்பிடுகின்றார். இதை நோக்கின் கீழ்க்கணக்கு நூல்கள் சங்கத் தொகை நூல்களுக்கெல்லாம் காலத்தால் பிற்பட்டவையாம் எனத் தெளிவாகின்றது. சங்க காலத்துடன் தொடர்பு கொண்டவை இந் நூல்கள் என்று ஊகிக்கலாம் சங்கம் மறைந்துவரும் காலத்திலோ, அது முற்றிலும் இறுதியாக மறைந்துவிட்டதன் பிறகோ இந்நூல்கள் தோன்றியிருக்க வேண்டும்.

கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்துக்கும் காலவரை யிடுதலில் பல இடையூறுகள் உள்ளன. சில ஆய்வாளர்கள் இவற்றைக் கி.பி. 7 முதல் 9ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்துக்குள் ஒடுக்குவர். நாலடியாரில் முத்தரைய மன்னர் இருவரைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.[37] அதில் இவர்கள் 'பெரு முத்தரையர்' என்று பாராட்டப் பெறுகின்றனர். இச்சான்று ஒன்றை மட்டுங் கொண்டு நாலடியார் கி. பி. ஏழாம் நூற்றாண் டுக்கு முன்பு தோன்றியிருக்க முடியாது என்று சிலர் கருதுவர். 'முத்தரையரைப்பற்றிய செய்திகள் கி. பி. எட்டாம் நூற்றாண் டில்தான் முதலில் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. ஆகவே,

37. நாலடி. 200. 296.
38. தமிழ் இலக்கிய வரலாறு, (கி.பி. 250-600) சதாசிவபண்டாரத்தார்

அன்னோரைப் புகழ்ந்துரைக்கும் நாலடியாரும் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற நூலாதல் வேண்டும் என்பது ஒருதலை' என்று சதாசிவபண்டாரத்தார் கருதுகின்றார்.[38] இவ்விரு முத்தரையரும் தனித்தனி மன்னர்களல்லர்-ஒருவனே எனவும், அவனும் பெரும்பிடுகு முத்தரையன் என்ற பெயரில் வரலாற்றில் வரும் மன்னனே யாவன் எனவும் ஒரு கருத்து ஆய்வாளரிடையே நிலவுகின்றது. இப்பெரும்பிடுகு முத்தரை யனின் பெயர் செந்தலைக் கல்வெட்டில் காணப்படுகின்றது.[39] இவன் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவனான முதலாம் பரமேசுவர பல்லவனின் உடன் காலத்தவனாவன். இக்கல் வெட்டுக் கூறுவதெல்லாம் ஒரு மன்னனைப் பற்றிய செய்தி தானே யொழிய அவனுடைய பரம்பரையைப் பற்றியதன்று. இதை மட்டுங்கொண்டு கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பு தமிழ் நாட்டில் முத்தரையர் என்ற ஒரு பரம்பரையே வாழ்ந்து வரவில்லை என்னும் ஒரு முடிவுக்கு வரமுடியாது. தமிழ் நாட்டின் வரலாற்றில் கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலத்தை ஆராய்வதற்குத் துணைபுரியக்கூடிய கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் கிடைக்கவில்லை என்பது இங்குக் கருதத்தக்கது. எனவே, கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முன்பும் முத்தரையர் வாழ்ந்து வந்திருக்கலாமாகையால் அவர்களுள் யாரையேனும் நாலடியார்ச் செய்யுள்கள் பாராட்டியிருக்கக்கூடும்.

சங்ககால மன்னரின் ஆட்சியையடுத்துக் களப்பிரர் என்னும் ஓரினத்தவர் தமிழகத்தின்மேல் படையெடுத்துவந்து, நாடெங் கும் கொலையும், கொள்ளையும், குழப்பமும் விளைவித்தனர். தமிழர் வாழ்வு சீரழிந்து போயிற்று. சேர, சோழ, பாண்டி யரின் கோல் ஓய்ந்தது. களப்பிரர் என்னும் கொள்ளைக்கூட் டத்தைச் சேர்ந்த சிலர் வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு பெரும்பொருள் ஈட்டி முத்தரையர் என்னும் பெயரில் நாடாளத் தொடங்கினர் போலும். எனவே, முத்தரையர்கள் தமிழ்நாட்டில் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் தோன்றியவர்கள் என்று கொள்ளமுடியாது. களப்பிரர் படையெடுப்பு 4,5ஆம் நூற்றாண்டுகளில் நேரிட்டது. ஆகவே, நாலடியாரில் குறிப் பிடப்படும் பெருமுத்தரையர்கள் இவ்விரு நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள் என்பதில் ஐயமில்லை. இச் சான்றைக்கொண்டு நாலடியார் கி.பி. 4 முதல் 7ஆம் நூற்றாண்டுக் கால அளவில் இயற்றப்பட்டதொரு நூலாகக் கொள்ளத்தகும். அண்மையில் பேராசிரியர் பி.ஜி.எல். ஸ்வாமி, களப்பிரர் கங்கரேயென்றும்,

39. எபி- இந்தி, xiii பக். 134-149.

அவர் வெகு சிறு காலமே தமிழகத்தில் ஆண்டனரெனவும் கருதுகிறார். இவற்றை ஒப்புக்கொள்வதற்கில்லை.

கீழ்க்கணக்கு நூல்களின் இலக்கிய நடைக்கும், சங்க நூல்களின் இலக்கிய நடைக்குமிடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. இந் நூல்களின் நடை தெளிவாகவும், தேவாரப் பாடல்களின் இனிய நடை போலவும் அமைந்துள்ளது. சங்க இலக்கிய நடையோ சுருக்கமானது; இக் க்காலத்தில் எளிதில் பொருள் விளக்கங் காணமுடியாதது. கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்தும் ஒழுக்க நடைமுறைகளை வகுத்துக்காட்டுகின்றன. சமண சமயம் ஒழுக்கத்தையே உயிரினும் மேலாக ஓம்பி வந்தது. சமண ஒழுக்கம் ஆரிய ஒழுக்கத்தோடு முரண்பட்டதாகும். சமண சமயம் மிக உச்சநிலையில் விளங்கிய காலம் கி.பி. 3 முதல் 7ஆம் நூற்றாண்டு தொடக்கம் வரையில் என்று கொள்ளலாம். எனவே, இக் கால வரம்புக்குள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், ஒரு சில தவிர்த்து, ஏனைய தோன்றியிருக்க வேண்டும். அடுத்து 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதற்கொண்டு சைவ நாயன்மார்களும் வைணவ ஆழ்வார்களும் தோன்றிக் கடவுளிடத்தில் அன்பு நெறியைப் போற்றி வளர்த்து வரலானார்கள். சமணமும் வேத நெறியும் பௌத்தத்துக்குக் கடும் எதிர்ப்பை மேற்கொள்ளலாயின. அவ்வெதிர்ப்பை ஆற்றாது பௌத்தம் தமிழகத்தினின்றும் மறைந்தே போயிற்று. இறுதியில் சமணமும் வைதிக நெறியை எதிர்த்துப் போரிடமாட்டாமல், ஆற்றல் குன்றி அடங்கிவந்தது. வாய்ப்பும் ஆக்கமுங் குன்றும் காலையில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களைப் போன்ற உயர்ந்த நீதி நூல்களும் இலக்கியப் படைப்புகளும் தோன்றுவது எளிதன்று. ஆகவே, இந் நூல்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதிக்குள் இயற்றப்பட்டிருக்க வேண்டும். என்று கொள்ளுவது மிகையாகாது.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் பதினொன்று வாழ்க்கை நெறியை விளக்குகின்றன; ஐந்து திணையொழுக்கத்தை ஓதுகின்றன; ஒன்று காலத்தைப்பற்றியது; எஞ்சிய ஒன்று இடத்தைப்பற்றியது. வாழ்க்கை நெறியை வகுத்துக் காட்டும் திருக்குறள் கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்திலும் சிறந்ததாகப் பாராட்டப்பட்டு வந்துள்ளது. களவழி நாற்பதும் முதுமொழிக் காஞ்சியும் கடைச்சங்கப் படைப்புகளாகக் கருத இடமுண்டு. களவழி நாற்பது என்பது ஒரு புறத்திணை நூல்; போரைப் பாடுவது. சேரன் கணைக்கால் இரும்பொறையைச் சோழன் செங்கணான் போரில் வென்று சிறை செய்தான். புலவர்

பொய்கையார் அச் சேரன் அவையை அணி செய்து அமர்ந்திருந் தவர். அவர் இந் நூலைப் பாடிச் சோழனை மகிழ்வித்துச் சேரனுக்கு விடுதலை பெற்றுக்கொடுத்தார். இச் செய்தியைச் சுவைபடக் கூறுவதுதான் களவழி நாற்பது என்பது. இதன் இறுதியில் இணைக்கப்பட்டுள்ள பதிகம் ஒன்று இதைப் பொய்கை யார் இயற்றினார் எனக் கூறுகின்றது. பொய்கையார் பாடிய இரண்டு பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன.[40] இப் பாடல்கள் சேரமான் கோக்கோதை மார்பன்மீது பாடப்பெற் றவை. களவழி பாடிய பொய்கையாரும், இப் புறப்பாட்டுகள் பாடிய பொய்கையாரும் ஒருவரே என்றும், அவர் கடைச்சங்க காலத்தவர் என்றும் அறிஞர் சிலர் கருதுகின்றனர். பொய்கை யாரின் பாடலுக்குப் பரிசிலாகச் சேர மன்னன் விடுதலை செய்யப் பட்டான் என்ற செய்தியைப் பதிகம் தெரிவிக்கின்றது. ஆனால்) இப் போரைப்பற்றிக் கூறும் புறப்பாடல் ஒன்று இச் செய்திக்கு முரணாக மற்றொரு குறிப்பைத் தருகின்றது. இப் பாடலை இயற்றியவன் சேரமான் கணைக்கால் இரும்பொறையேதான். போர்க்களத்தில் தோல்வியுற்றுக் குடவாயிற் கோட்டத்தில் சிறை செய்யப்பட்டிருந்த அம் மன்னன் நாவறண்டு தண்ணீர் கேட்டான். தண்ணீர் காலந்தாழ்த்துக் கொடுக்கப்பட்டது. மானம் மேலீட்டால் அத் தண்ணீரைக் குடிக்க மறுத்து உயிர் நீத்தான். உயிர்விடு முன்பு அவன் மறச்சுவை ததும்பும் இப் புறப்பாட்டைப் பாடினான். தஞ்சை விசயாலய சோழன் மேல் பெற்ற வெற்றியைப் பாடுவது களவழி நாற்பது என்று குலோத்துங்கச் சோழன் உலாவின் பழைய உரையாசிரியர் ஒருவர் கூறுகின்றார். இவர் கருத்து உண்மையாயின் களவழி நாற்பது கி. பி. 850ஆம் ஆண்டளவில் இயற்றப்பட் டிருக்க வேண்டும். எனவே, இவர் கூற்று நம்பத் தகுந்ததன்று. களவழிப் பதிகமும் புறநானூற்றுப் பாடலும் அளிக்கும் செய்தி களே உண்மையெனத் தோன்றுகின்றன.

களவழி கூறும் வரலாற்றினைக் கலிங்கத்துப் பரணியும்[41] மூவருலாவும்[42] உறுதி செய்கின்றன. சேரமானின் இறுதி என்ன வாயிற்று என்று திட்டமாக அறிந்துகொள்ள முடியவில்லை. களவழிப் பதிகம் எழுதியவரும், புறநானூற்றுப் பாடல்களின் அடிக் குறிப்பு எழுதியவரும் வெவ்வேறு காலத்தவர்கள் ஆவர். ஆகவே, அவர்கள் ஒருவரோடொருவர் முரண்பட்டுப் பொய்ச்

40. புறம். 48, 49,
41. கலிங். 195.
42. மூவருலா. விக்கி-14.

செய்திகளைப் புனைந்து எழுதி வைக்கத் தேவையே இல்லை. களவழிப் பதிகம் தரும் செய்தி பொய்யாக இருந்திருக்குமாயின் பிற்பட்டு எழுந்த நூல்களான கலிங்கத்துப் பரணியிலும், மூவருலாவிலும் அது சேர்ந்திருக்காது.

கடைச்சங்கப் புலவர் பொய்கையார் என்பார் ஒருவர் இருந்தார் என்பது மறுக்க முடியாதது. அவர் புறப்பாடல் இரண்டும்[43] நற்றிணைச் செய்யுள்[44] ஒன்றும் யாத்துள்ளார். கடைச்சங்க காலத்தில் செங்கணான் என்ற சோழ மன்னன் ஒருவன் வாழ்ந்திருந்ததும் உண்மையே. அன்பில் செப்பேடுகளில்[45] குறிப்பிடப்படும் நல்லடி என்பவன் அவன் மகன் ஆவான். அவனைப்பற்றிய செய்தி ஒன்று அகநானூற்றுப் பாடல் ஒன்றில்[46] கிடைக்கின்றது. சேர மன்னன் கணைக்கால் இரும் பொறை என்பவனே புறநானூற்றுக் கோக்கோதை மார்பனாக இருக்கலாம் என்பதில் ஐயமின்று. எனவே, இச் சான்றுகளைக் கொண்டு களவழி நாற்பது கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதெனக் கொள்ளலாம்.

முதுமொழிக் காஞ்சியை இயற்றியவர் கூடலூர் கிழார் ஆவார். இவருடைய பாட்டு ஒன்று[47] புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. கோச் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை இறந்ததற்கு இவர் உளம் வருந்திப் பாடிய பாடல் அது. இவருடைய பாடல்கள் மூன்று குறுந்தொகையிலும் இடம் பெற்றுள்ளன.[48] அச் சேரமன்னன் இப் புலவரின் நெருங்கிய நண்பனாக இருந்தவன். அவனுடைய விருப்பத்தின் மேல் இவர் ஐங்குறுநூறு என்னும் நூலைத் தொகுத்துக் கொடுத்தார். இவர் கடைச்சங்க காலத்தவர் என்று இவருடைய புறப் பாடலானும், ஐங்குறுநூற்றுத் தொகுப்பைக் கொண்டும் அறியலாம்.

களவு ஒழுக்கத்தைப் பாடும் ஆறு நூல்களான ஐந்திணை யைம்பது, கார் நாற்பது, திணைமொழி யைம்பது, ஐந்திணை எழுபது, கைந்நிலை, திணைமாலை நூற்றைம்பது ஆகியவை கி. பி. 4, 5ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியவை. அறவொழுக்

43. புறம். 48. 44.
44. நற்றி. 18.
45. எபி. இந்தி. xv. 5;
46. அகம். 356.
47. புறம். 229.
48. குறுந். 166, 167, 214.

கத்தைக் கூறும் ஏனைய நூல்கள் கி.பி 5, 7ஆம் நூற்றாண்டுகளில் இயற்றப்பட்டிருக்க வேண்டும். மக்கள் தம் வாழ்க்கையில் சிறப்பாகக் கடைப்பிடிக்க வேண்டியது ஒழுக்கமேயாம் என்று இந் நூல்கள் வலியுறுத்துவதாலும், இவற்றின் ஆசிரியர்கள் பெரும்பாலார் சமணர்களாக இருப்பதாலும், சமண சமயம் உச்ச நிலையை எய்தியிருந்தபோது, அதாவது சைவ வைணவ பக்தி இயக்கம் தோன்றும் முன்னர், இவை இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்பது ஒருதலை. இவை கூறும் அறம் எச் சமயத்து மக்களுக்கும் பொதுவானதாகும். பொதுமறை வகுப்பது அக் காலத்து இலக்கியச் சிறப்புகளுள் ஒன்றாகும். இவ்வொழுக்க நூல்கள் யாவும் இனிய, எளிய நடையில், சுருக்கமான சொற்கட்டுடன் வெண்பாச் செய்யுள்களால் ஆக்கப்பட்டுள்ளன.

பதினெண் கீழ்க்கணக்குத் தொகுப்பில் திருக்குறள் தலைப்பிடம் பெறுகின்றது. பழமையான இலக்கியத்தில் இது 'முப்பால்' என்றே குறிப்பிடப்படுகின்றது. திருக்குறள் தோன்றிய காலத்தைப் பற்றி மிக ஆழ்ந்த கருத்து வேறுபாடுகள் உண்டு. அதனுடைய ஆசிரியரான திருவள்ளுவருக்குப் பிற்கால இலக்கியங்களில் பல பெயர்கள் வழங்குகின்றன. ஆனால், அவருடைய வாழ்க்கை வரலாற்றைப்பற்றிய உண்மை ஏதும் புலப்படவில்லை. திருவள்ளுவர் கடைச்சங்க காலத்தவர் என்றும், கி. பி. 1-3 நூற்றாண்டுகளுக்கிடையில் வாழ்ந்தவர் என்றும் சிலர் கூறுவர். திருக்குறளில் மயிற் பீலிகளைப்பற்றிய குறிப்பு ஒன்று வருகிறது.[49] திருவள்ளுவர் காலத்தில் மயிற்பீலிகளை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு போயினர் என்று தெரிகிறது. சங்ககால மக்கள் பருத்தியையும் பட்டையும் உடுத்தினர். அதற்காக அவர்கள் பருத்தியை வேண்டுமாயின் வண்டிகளில் ஏற்றிச் சென்றிருக்கக் கூடும். ஆனால், வண்டிகளில் ஏற்றிப் போமளவுக்கு மயிற்பீலிக்குத் தேவை என்ன இருக்கின்றது? பண்டைய கிரேக்க, ரோம நாடுகளுடனும், மேலே ஆசிய நாடுகளுடனும், தமிழகம் விரிவானதொரு கடல் வாணிகம் செய்து வந்த காலத்தில் மயில் தோகை இங்கிருந்து பெருமளவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. எனவே, ஏற்றுமதிக்கெனவே மயில் தோகைகளைக் கட்டுகளாகக் கட்டி வண்டிகளில் ஏற்றிக்கொண்டு வணிகர்கள் துறைமுகப் பட்டினங்கட்குச் சென்றிருப்பர். அதை நேரில் கண்டவராகிய திருவள்ளுவர் மயில்தோகை வண்டியைத் தம் குறளில் உவமை காட்டியிருப்பார். ஆதலால் அவர் சங்ககாலத்துக்கும் முந்தியதொரு காலத்தில் வாழ்ந்தவராவார் என்று சில ஆய்வாளர்

49. குறள் 475.

மொழிவர். கடைச் சங்கத்தாரின் பார்வைக்கு வந்த இறுதியான நூல் திருக்குறள் என்றும், அவர்கள் முதலில் ஏற்றுக்கொள்ள மறுத்தனர் என்றும். பிறகு அதை ஏற்றுக் கொண்டனர் என்றும், கடைச் சங்கம் கலைவதற்கு இந் நிகழ்ச்சியும் ஒரு காரணம் ஆகு மென்றும் கூறும் ஒரு புராண வரலாறும் உண்டு. இதைக் கொண்டு திருவள்ளுவர் காலத்தைக் கி. பி. மூன்றாம் நூற் றாண்டு என்று சிலர் அறுதியிடுகின்றனர்.

வடமொழி நூல்களான கௌடிலியம், காமந்தகம், வாத்ச யாயனம் ஆகியவை கி. மு. ஆறாம் நூற்றாண்டில் எழுந்தவை. இவற்றினின்றும் பல கருத்துக்களைத் திருவள்ளுவர் ஏற்றுக் கொண்டு அவற்றைத் தம் நூலில் சேர்த்திருக்கின்றார் என்றும், அதனால் திருவள்ளுவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும் கருதுபவர் உளர். கௌடிலியரின் அர்த்தசாத் திரத்துக்கும் திருக்குறளுக்குமிடையே கருத்து ஒற்றுமைகள் பல காணப்படுவது உண்மையே. ஆனால், மனு, காமந்தகர், வாத்ச யாயனர் ஆகியவர்கட்கும் திருவள்ளுவருக்குமிடையே ஆழ்ந்த கருத்து வேறுபாடுகளும் உண்டு.

திருக்குறளானது இல்லறத்தையும், மகளிரின் கற்புத்திறத் தையும் சிறப்பித்துப் பேசுகின்றது. இப் பண்புகள் மனுதர்மத் துக்குப் புறம்பாகும். வாத்சயாயனரின் காமசூத்திரத்துக்கும் திருவள்ளுவரின் காமத்துப்பாலுக்கும் எவ்விதமான தொடர்பும் இல்லை. பண்டைய தமிழகத்தின் திணை ஒழுக்க மரபு அடிப் படையில் காதலன்-காதலி, கணவன்-மனைவி ஆகியவரின் வாழ்க்கை நெறியைத் திருவள்ளுவர் வகுத்திருக்கின்றார். ஒத்த தலைவனும் தலைவியும் ஒருவரை யொருவர் நேராகக் காணலும், அவர்களை ஊழானது கூட்டுவிக்க, இருவரும் ஒருவர்மேல் ஒருவர் காதல் கொள்ளுவதும், பிறகு அவர்கள் திருமணம் செய்துகொள்ளுவதும், இடையில் ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு அவர்களுக்குள் சிறிது காலம் பிரிவு ஏற்படுவதும், மனைவி கணவன்பால் ஊடுவதும், கணவன் ஊடலைத் தீர்த்து வைப்பதும், பிறகு அவர்கள் கூடுவதும் தமிழரின் வாழ்க்கை முறையெனச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அத்தகைய வாழ்க்கையை விளக்கியே திருவள்ளுவர் காமத்துப்பால் இயற்றி யுள்ளார். ஆனால் வாத்சயாயனரோ ஆடவரும் பெண்டிரும் ஒருவரோடொருவர் கலந்து சிற்றின்பம்துய்க்கும் வகைகளையும், அச் சிற்றின்பத்தைத் தூண்டிவிடக்கூடிய இலக்கண முறைகளை யும் வகுக்கின்றார். சங்க நூல்கள் பல அகப்பொருளைக் கூறுவன. சங்கப் புலவர்களுக்குச் சிற்றின்ப நுகர்ச்சியைக் கூறுவது ஒரு

கலையாக இருந்து வந்தது. அவர்கள் அனைவருமே வாத்சயாயன ரிடம் காம நூல் பயின்றவர்கள் என்று கூறுவது எள்ளற்கிடமாகும். எனவே, பண்டைய தமிழ் முறையிலேயே திருவள்ளுவரும் காமத்துப்பாலைப் பாடினார் என்பதில் ஐயமில்லை. புலன் நுகர்ச்சியும் காதல் வாழ்வும் உலகமக்கள் அனைவருக்குமே பொதுவாகலின் வாத்சயாயனரிடம் அவற்றை அறிந்து கொள்ளவேண்டிய தேவை திருவள்ளுவருக்கு ஏற்பட்டிராது.

போருக்குச் செல்லுவதும், பகைவர் கோட்டைகளை முற்றுகை யிட்டழிப்பதும், பகைக்கு அஞ்சி அரண்கள் கட்டிக் கொண்டு வாழ்வதும், பகைவரின் முற்றுகைகளை எதிர்த்து முறியடிப்பதும் உலக நாடுகள் ஒவ்வொன்றும் இயல்பாகவே மேற்கொண்டிருந்த தற்காப்பு முறைகளாகும். இவற்றை ஒரு நாடு பிறிதொரு நாட்டினரிடமிருந்து கற்றுக்கொண்டிருக்கவேண்டும் என்று கருத முடியாது. எனவே, திருவள்ளுவருக்கும் கௌடிலியருக்கு மிடையே புறத்திணை ஒழுக்கத்தைக் கூறும் வகையில் ஏதேனும் ஒற்றுமைக் கூறுபாடுகள் காணப்படுமாயின் அவை நேர்வாட்டாக ஏற்பட்டனவே அன்றித் திருவள்ளுவர் கௌடிலியரிட மிருந்து இக் கருத்துகளை ஏற்றுக்கொண்டார் என்று திட்டமாய்க் கூற இயலாது.

திருக்குறளில் வடசொற் கலப்பு உளதென்றும், அதனால் அந் நூல் காலத்தால் சாலவும் பிற்பட்ட தெனவும் சிலர் கருதுவர். ஆரியரின் குடியேற்றம் விரிவடைந்து வந்ததனாலேயே தமிழில் வடசொற் கலப்புப் பெருகியிருக்கவேண்டும் என்ற நெருக்கடியில்லை. அறிஞர்கள் எதைப்பற்றி எழுதுகின்றார்கள் என்பதையும் நோக்க வேண்டும். அவர்கள் எழுதும் பொருளுக்கு ஏற்றவாறு அயல் மொழிச் சொற்களின் கலப்புக் கூடியும் குன்றியும் காணப்படுவது இயல்பே. ஆகவே, வடசொற் கலப்பைக் கொண்டு திருக்குறளின் காலம் சாலவும் பிற்பட்டதெனக் கூறுவதில் எவ்வகையினும் பொருத்தமேயில்லை. தமிழகத்தில் கி. பி. 1-2ஆம் நூற்றாண்டுகளிலேயே ஆரியச் சொற்கள் பல தமிழில் இடம் பெற்றுவிட்டன. சங்கப் புலவர்களுள் சிலர் பார்ப்பனக் குலத்தைச் சார்ந்தவர்கள் என்பது இங்கு நோக்கத் தக்கது.

சங்க நூல்களில் காணப்படும் கருத்துகளுக்கும் திருவள்ளுவரின் கருத்துகளுக்கும் சிற்சில இடங்களில் நெருங்கிய உடன்பாடு காணப்படுகின்றது. அவற்றுள் சில பின்வருமாறு:

1. 'நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.' —குறள் 791

'..............பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே.'—நற்றிணை32

2. 'பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.' — குறள் 580

'...முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்.' —நற்றிணை 355

3. 'பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.' —குறள் 805

'பேதைமையால் பெருந்தகை கெழுமி
நோதகச் செய்ததொன்று உடையேன் கொல்லோ.'
குறுந்தொகை 230

4. 'மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.' —குறள் 60

'கடவுள் கற்பொடு குடிக்குவிளக் காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
...நன்ன ராட்டி.' —அகம் 18

5. 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.' —குறள் 110

'நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி யில்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ.' புறம் 34

6. 'வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.' —குறள் 85

'விருந்துண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோடு உண்டலும் புரைவது என்றாங்கு.'
—குறிஞ்சிப் பாட்டு 206-207

மேலே கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகளிலிருந்து திருக்குறளுக்கும் சங்க இலக்கியங்களுக்குமிடையே பொதுவாகக்

காணப் பெறும் கருத்து ஒற்றுமைகளை அறிந்து கொள்ளலாம். இங்குச் சங்க இலக்கியக் கருத்துகள் முந்தியனவா, அன்றிக்குறள் கருத்துகள் முந்தியனவா என்னும் கேள்வி எழுகின்றது. சங்கப் பாட்டுகளில் பல அரிய அறிவுரைகளும் அறவுரைகளும் பொதிந்து கிடக்கின்றன என்பதும், அறநெறிகளை விளக்கிக் காட்டவே அப் பாட்டுகளில் பல இயற்றப்பட்டன என்பதும் அனைவரும் அறிந்த உண்மை. எனவே, அக் கருத்துகளைத் திருவள்ளுவர் தம் நூலிலும் எடுத்துக் கூறினார் என்பதில் இழுக்கு ஏதும் இல்லை. ஆனால், மிகச் சிறந்த உலக அறிஞர்களுள் ஒருவரெனப் பாராட்டப் பெறும் திருவள்ளுவருக்கே பல உயர்ந்த கருத்துகள் தோன்ற, அவற்றை அவர் குறட்பாக்களில் பொதிந்து வைத்தார் என்பதிலும் பேருண்மை உண்டு. கடைச் சங்ககாலத்திலேயே திருக்குறளிலிருந்து பல அரிய கருத்துகளைப் புலவர்கள் எடுத்தாளத் தொடங்கிவிட்டனர். மேலே எடுத்துக் காட்டியுள்ள 34ஆம் புறப்பாட்டில் அதன் ஆசிரியர், 'என அறம்பாடிற்றே' என்று கூறுகின்றார். அறம் என்னும் சொல் திருக்குறளையே குறிக்கும்.

திருவள்ளுவருக்குப் 'பொய்யில் புலவன்' என்றொரு சிறப்புப் பெயர் வழங்கி வருகின்றது. திருக்குறளிலிருந்து மேற்கோள்கள் எடுத்து ஆள்வதோ, குறள் கருத்துகளை அப்படியே தம் நூலில் விரவிப் பாடுவதோ சங்கப் புலவர்கள் மேற்கொண்டிருந்த வழக்கமாகக் காணப்படுகின்றது. எனவே, கடைச்சங்க காலத்தின் தொடக்கத்திலேயே திருவள்ளுவர் அழியாப் புகழ் பெற்றுவிட்ட தம்நூலை இயற்றிருக்க வேண்டுமென்பது அறியக் கிடக்கின்றது. அப்பெரியார் கி. பி. முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகின்றது.

மணிமேகலையும் சிலப்பதிகாரமும் தோன்றிய காலத்தை அடுத்து நோக்குவோம். சங்கம் மருவிய இவ்விரு காப்பியங்களும் தமிழ்மொழியில் மிகச் சிறந்த இலக்கியங்களாக விளங்கி வருகின்றன. சிலப்பதிகாரத்துக்கு உரை கண்ட அடியார்க்கு நல்லார் அந் நூல் உரைப்பாயிரத்தின் உரையில், 'அவர் (சாத்தனார்) மணிமேகலைப் பெயரால் அவள் துறவே துறவாக அறனும் வீடும் பயப்ப ஒரு காப்பியம் செய்து அமைத்தனம் எனக் கேட்டு, இளங்கோவடிகள் விரும்பி இவ்விரண்டனையும் ஒரு காப்பியமாக்கி...' என்று எழுதுகின்றார். சிலப்பதிகாரத்துக்கு முன்பே மணிமேகலை இயற்றப்பட்டுவிட்டதென இதனால் அறிகின்றோம். ஆனால், இவ்விரு காப்பியங்கட்கும் இடையிட்ட காலம் மிகவும் குறுகியதாகவே இருக்கவேண்டும். எனினும், இவ்

விரு நூல்களும் ஒரே வரலாற்றின் இரு பகுதிகளாக அமைந்துள்ளன.

மணிமேகலையின் பதிகத்தில் ஆசிரியரின் பெயர் 'கூல வாணிகன் சாத்தன்' என அறிவிக்கப்படுகின்றது. சிலப்பதிகாரத்தின் உரைப் பாயிரத்தில் இவர் 'தண்டமிழ்ச் சாத்தன்' என்றும், 'மதுரைக் கூலவாணிகன் சாத்தன்' என்றும் குறிப்பிடப் படுகின்றார். இளங்கோவடிகளைக் கூலவாணிகன் சாத்தனார் சிலப்பதிகாரத்தை இயற்றும்படி வேண்டினார் என்று இக் காப்பியத்தின் உரைப்பாயிரம் கூறுகின்றது.

கண்ணகியின் வஞ்சினத்தால் பாண்டி நாடு பல இன்னல்களுக்கு உட்படலாயிற்று என்றும், பாண்டியன் சாந்தி செய்ய மழைத் தொழில் என்றும் மாறாதாயிற்றென்றும், அது கேட்டுக் கடல்சூழ் இலங்கைக் கயவாகு என்பான் கண்ணகிக்குத் தானும் பாடி விழாக்கோள் பன்முறை எடுத்தான் என்றும் இளங்கோவடிகளின் உரைபெறு கட்டுரை அறிவிக்கிறது. இலங்கையின் வரலாற்றுக்கோவையான மகாவமிசத்தின்படி கயவாகு என்றொரு மன்னன் கி. பி. 171—196 ஆண்டுகளில் இலங்கையை ஆண்டு வந்தான் என்னும் செய்தியை அறிகின்றோம். செங்குட்டுவனும் கயவாகுவும் உடன்காலத்தவர் என்பதையும், கண்ணகியின் வாணாளுக்குப் பின்னர் நடைபெற்ற விழாக்களில் கயவாகுவும் கலந்துகொண்டான் என்பதையும் மறுப்போரும் உளர்.

பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்துக்குப் பாட்டுடைத் தலைவன் சேரன் செங்குட்டுவன், சிங்களத்து மன்னன் கயவாகுவைப் பற்றியோ, கண்ணகிக்குச் செங்குட்டுவன் எடுப்பித்த தெய்வப் படிமத்தைப் பற்றியோ, அவன் அதைப் படைக்க வடநாட்டி னின்றும் கல் கொண்டு வந்ததைப் பற்றியோ அந் நூலில் குறிப்பு ஒன்றும் காணப்படவில்லை.[50] செங்குட்டுவன் கற்கொணர்ந்து கண்ணகிக்குப் படிவம் அமைத்ததைக் கூறும் மணிமேகலை கயவாகுவைப்பற்றி ஒன்றும் தெரிவிக்கவில்லை.[51] இவ்வைந்தாம் பத்தைப் பாடிய பரணரும் இந் நூலிலேயோ, தாம் பாடிய ஏனைய பாடல்களிலேயோ கண்ணகிக்குச் சிலை எடுத்ததைப் பற்றியோ, கயவாகுவைப் பற்றியோ ஒரு குறிப்பும் கொடுக்கவில்லை. இதற்குத் தக்க காரணம் இன்னதெனப் புலப்படவில்லை; சிலர் காட்டுங் காரணங்களும் பொருத்தமானவையாகத் தோன்ற

50. சிலப்பதிகாரத்துக் காண்க.
51. மணிமே. 26. 85

வில்லை. இவ் வைந்தாம் பத்தைப் பரணர் பாடவில்லை யெனவும் இதன் பாட்டுடைத் தலைவனான கடல்பிறக்கோட்டிய செங் குட்டுவனும் கண்ணகிக்குச் சிலை எடுப்பித்த சேரன் செங்குட்டுவ னும் ஒருவரல்லர்; இரு வேறு வேந்தர்கள் என்றும் சிலர் கூறுவர்.[52] இதற்குப் போதிய சான்றுகள் அளிக்கப்படவில்லை.

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் என்பதையும் அவர் சேரன் செங்குட்டுவனின் இளவல் என்பதையும் அந் நூற் பதிகமே தெரிவிக்கின்றது. இக்காப்பியத்தின் வரந்தரு காதையில் இளங்கோவடிகள் 'வேள்விச் சாலையில் வேந்தன் போந்தபின் யானுஞ் சென்றேன்'[53] என்று கூறுகின்றார். எனவே, இம் மாபெருங் காப்பியத்தின் ஆசிரியர் இன்னார் எனத் தேடி இடர்ப் படவேண்டியதில்லை. ஆகவே, சிலப்பதிகாரக் கதை வரலாற்றுச் சான்றுடையது என்பதில் ஐயமேதுமின்று. சேர நாட்டில் பகவதி என்னும் பெயரில் கண்ணகி வழிபாடு நடைபெற்று வருகின்றது. 'ஒற்றை முலைச்சி' யம்மனுக்காக்கிய கோயிலும் அங்கு ஒன்று உண்டு. கயவாகு என்ற சிங்கள மன்னன் இலங்கையில் பத்தினி வழிபாட்டைத் தொடங்கிவைத்தான். இலங்கை மக்களும் ஆடி மாதந்தோறும் பத்தினி விழா எடுத்து வந்தனர். இன்றும் இவ் விழா நடைபெற்று வருகின்றது. அவ்விழாவில் பத்தினிக் கல் ஒன்றைத் திருவீதிஉலா எடுப்பித்தல் வழக்கமாகவும் உள்ளது. அவ்விழாவுக்கு அந் நாட்டில் 'பெரிஹரா' என்று பெயர் வழங்கு கின்றது. பெரிஹரா என்றால் 'பிராகாரம்' (சுற்றி வருதல்)என்று பொருள்.[54] இலங்கையின் வடக்கிலும், கிழக்கிலும் பல இடங் களில் கண்ணகி கோயில்கள் எழுப்பட்டிருந்தன. இன்றும் சில இடங்களில் கண்ணகி வழிபாடு தொடர்ந்து நடைபெற்று வரு கின்றது. சென்ற நூற்றாண்டில் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் சமணப் பெண் தெய்வமான கண்ணகியைத் தமிழர் வணங்கலாகாதெனத் தடுத்துப் பல கண்ணகி கோயில்களை இராசராசேசுவரி கோயில்களாக மாற்றி அமைப்பித்தார் எனக் கூறுவர்.

சிலப்பதிகாரத்தில் உலக இயல்புக்குப் புறம்பான தெய்விக நிகழ்ச்சிகள் பல சேர்ந்துள்ளன. கடவுளர் வானத்தில் பறப்பது, மக்கள் உருமாறுவது, கற்புடைய பெண்ணைத் தீயும் தீண்ட

52. பதிற்றுப் பத்துச் சொற்பொழிவுகள் (கழகம்) ஐந்தாம் பத்து. அ. ச. ஞானசம்பந்தன்.

53, சிலப். 30. 170. 171.

54. கே. கே. பிள்ளை—தென்னிந்தியாவும் இலங்கையும் பக். 176

அஞ்சுதல், கடவுளர் உலகுக்கு வந்து மக்களுடன் நேருக்கு நேர் உரையாடுவது, கவுந்தியடிகளின் கோபத்தினால் இரு தூர்த்தர் கள் நரிகளாகியது, கண்ணகியின் சினத்தினால் மதுரை மாநகர் தீக்கிரையானது, கண்ணகியும் கோவலனும் வானுலகேறியது முதலிய பல செய்திகள் நம்பத்தகாத நிகழ்ச்சிகளாக உள்ளன. எனினும், அவற்றைக் கொண்டு கண்ணகியின் வரலாற்றையே முற்றிலும் ஒரு புனைகதை என்று தள்ளிவிடக்கூடாது.

இளங்கோவடிகள் இயற்றிய கண்ணகியின் கதை இலக்கியத் துக்குப் புதியதொன்றன்று எனவும், ஏற்கெனவே தமிழ் இலக்கி யத்தில் உள்ள செய்திகள் சிலவற்றைக் கொண்டு இளங்கோ வடிகள் சிலப்பதிகாரத்தைப் பாடினார் என்றும் சிலர் கூறுவர். நற்றிணைப் பாட்டு[55] ஒன்றில், 'ஏதிலாளன் கவலை கவற்ற ஒருமுலையறுத்த திருமா வுண்ணி' என்னும் குறிப்பு ஒன்று உள்ளது. இத் 'திருமா வுண்ணி' என்னும் பெயர் கண்ணகியைச் சுட்டுகின்றது என்று கருதுவர். கூர்ந்து நோக்கின் இத் திரு மாவுண்ணியைப் பற்றிய செய்திக்கும், கண்ணகி வரலாற்றுக்கும் இடையே உற்ற முரண்பாடு நன்கு விளங்கும். திருமாவுண் ணியைப் பற்றிக் 'கேட்டோ ரனையா ராயினும், வேட்டோ ரல்லது பிறரின் னாரே' (அஃதாவது, கேட்டார்களாயினும் அவளிடத்து அன்பு வைத்தவர் மட்டும் வருந்துவரேயன்றிப் பிறர் வருந்தார்) என்று அந்நற்றிணைப் பாடல் கூறுகின்றது. ஏதிலாளன் செயலாலே கவலையுற்ற திருமாவுண்ணி என்பாள் ஒரு பரத்தையாதல் வேண்டும். தான் காதலித்த தலைவன் தன்னைக் கைவிட்ட காரணத்தினால் வெகுண்டு அவள் தன் இரு முலைகளில் ஒன்றை அறுத்துக் கொண்டனள். அச் செயல் கேட்ட அனைவருங் அவளிடத்து இரக்கங் கொண்டனர்; ஆனால், அவள் செய்கைக்கு அவர்கள் வருந்தவில்லை. அவளி டத்தில் அன்புடையவர்கள் மட்டுமே வருத்தமுற்றனர். இப் பாடல் பரத்தை ஒருத்தி பாணற்காயினும், விறலிக்காயினும் தன் இன்னலைச் சொல்லுவது போன்று அமைத்த அகத்துறைப் பாடலாகும். எனவே, இத் திருமாவுண்ணியின் கதையே சிலப் பதிகாரம் என்னும் மாபெருங் காப்பியமாக மலர்ந்தது என்று கருதுவது பொருத்தமற்றதாகும். தன்னைக் கைவிட்ட கணவன் மேல் வெகுண்ட பெண்கள் தன் முலையொன்றை அறுத்துக் கொள்ளும் வழக்கம் தமிழகத்தில் அந்நாளில் உண்டுபோலும். கண்ணகியைப்பற்றிய வரையில் அவளிடத்து அன்பு வைத்தவர் கள் என்றும், அன்பு வையாதவர்கள் என்றும் வேறுபாடுகள்

55. நற்றி. 216

வருக்கும் மரபு இலக்கியத்தில் காணப்படவில்லை யாகையால் கண்ணகி வேறு, திருமாவுண்ணி வேறு என்று கொள்ளவேண்டும். ஒருமுலையைத் திருகி எறிந்த பெண்களின் கதைகள் பௌத்த சாசனங்களிலும் இடம் பெற்றுள்ளன.

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு காப்பியங்களும் கி.பி. 8ஆம் நூற்றாண்டிலோ, அதற்குப் பிந்தியோ கற்பனை செய்யப்பட்ட இலக்கியப்புரட்டுகள் என்றும், இக் காப்பியங்கள் கூறும் வரலாறுகள் நிகழ்ந்த காலத்திலேயே தாமும் வாழ்ந்திருந்த தாகக் கூறும் பெயரில்லாப் பொய்யர் எவரோ இவற்றைப் புனைந்து விட்டனர் என்றும் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி கருது கின்றார்.[56] தமிழ்நாட்டில்,கோவலன் கதை பாமர மக்களிடையே வேறு விதமாகவும் வழங்கி வருகின்றதாகையால் சிலப்பதிகாரக் கதையை நம்பத்தகாத வெறும் புரட்டு என்பார் எஸ். வையா புரிப் பிள்ளை அவர்களும். இவர்களுடைய கருத்துகளை ஆழ்ந்து ஆய்பவர்கட்கு அவற்றின் பயனின்மை நன்கு புலப்படும். கண்ணகி வரலாற்றுடன் தொடர்புகொண்ட பெரிஹராவிழா இலங்கையில் பல காலமாக நடைபெற்றுவருவதும், கண்ணகி வழிபாட்டைக் கயவாகுவுடன் இராசாவளி தொடர்புறுத்து வதும் கண்ணகியினுடைய படிவம் என்று நம்பக்கூடிய வெண்கலச் சிலை ஒன்று இலங்கையில் கண்டெடுக்கப்பட்டதும் சிலப்பதிகாரத்தின் அடிப்படை வரலாற்றுக் கூறுகளை மெய்ப்பிக் கின்றன.

வடநாட்டில் வாழ்ந்திருந்த புகழ்பெற்ற பௌத்த நூலாசிரியரான புத்தகோசரும், பாலி மொழியில் பல நூல்களை இயற்றியுள்ள புத்த தத்தரும் உடன்காலத் தவர்கள் ஆவார்கள். இருவரும் கி. பி. ஐந்தாம் நூற் றாண்டில் வாழ்ந்தவர்கள். 'அபிதம்மாவதாரம்' என்னும் பெயருள்ள தம் நூலில் புத்த தத்தர் தம் காலத்தில் வளமலிந்து ஓங்கி நின்ற காவிரிப்பூம்பட்டினத்தைப் பற்றிய செய்திகள் சிலவும் தந்துள்ளார். களப குலத்து மன்னனான அச்சுதவிக்கந்தன் என்பவன் ஆட்சியில்தான் 'விநய விநிச்சயம்' என்னும் தம் நூலை எழுதி முடித்ததாக அவர் அந் நூலின் முடிவுரையில் குறித்துள்ளார். தமிழ்நாட்டின் வரலாற்றில் கி. பி. 5ஆம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் களப்பிரரும், அச்சுத விக்கந்தனும் தலைகாட்டுகின்றனர். காவிரிப்பூம்பட்டினமானது

56. ஹீராஸ் மெமோரியல் லெக்சர்ஸ்-கே. ஏ. நீ. சாஸ்திரி, பக். 55, 56.

அவர்கள் காலமாகிய கி. பி. 5ஆம் நூற்றாண்டில் மிகவும் செழிப்புற்று விளங்கியிருக்கவேண்டுமென்பதில் ஐயமில்லை.

மேலும் மணிமேகலை, சிலப்பதிகாரம் ஆகிய இவ்விரு காப்பியங்களும் சில அரசியல் அமைப்புகளைப்பற்றிக் கூறுகின்றன. அவற்றைக்கொண்டு எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றுக்குப் பிற்பட்ட ஒரு காலத்தில் இக் காப்பியங்கள் ஆக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கொள்ளவேண்டும். எண்பேராயம், ஐம்பெருங்குழு என்ற அரசவைகளைப்பற்றிய செய்திகளை முதன்முதல் இக் காப்பியங்களிற்றான் நாம் கேள்வியுறுகின்றோம். இவை மன்னருக்கு மந்தணம் கூறும் அவைகளா, அன்றி அவர்களுடைய திருவுலாக்களை அணி செய்யும் குழுக்களா, எஃது என்று திட்டமாகத் தெரியவில்லை. சங்க இலக்கியங்கள் இவ்வாயத்தைப்பற்றியும், குழுவையும் பேசுவதில்லை. சங்க காலத்துக்குப் பிறகு மன்னரின் கோன்மை உயர்ந்து கொண்டு போகவே மக்கள் நலனின் பாதுகாப்புக்காக இவ்வவைகள் நிறுவப்பட்டன என்று எண்ண வேண்டியுள்ளது.

மற்றும் இக் காப்பியங்களின் காலத்தில் நல்ல நெடுஞ்சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து கொடும்பாளூர் சென்ற சாலையும், பின்னைய ஊரிலிருந்து மதுரைக்குச் சென்ற சாலையும் நன்றாகச் செப்பனிடப்பட்டிருந்தன. ஏரி, காடு, மலைச்சாரல், நெல்வயல், கருப்பந்தோட்டம், வெள்ளைப் பூண்டும் மஞ்சளும் விளைந்த தோட்டக்கால்கள், தெங்கு, மா, பலா முதலிய மரங்கள் செறிந்த குளிர்ந்த தோப்புகள் ஆகியவற்றினூடே அந் நெடுஞ்சாலைகள் அமைந்திருந்தன. சங்க காலத்தில் இத்தகைய திட்டமிட்டுச் செப்பனிடப்பட்ட நெடுஞ்சாலைகள் அமைந்திருந்தனவெனத் தெரியவில்லை.

சங்க இலக்கியங்கள் காதல், கற்பு, போர் ஆகிய அகத்திணை, புறத்திணைப் பொருள்கள்பற்றியே பேசுகின்றன. ஆனால், இவ்விரு காப்பியங்களிலோ வளர்ந்து வந்த வாழ்க்கைக் கூறுபாடுகள் பலவற்றைக் காண்கின்றோம். நகர வாழ்க்கை, கலைப்பயிற்சி, சமயத்தத்துவச் சொற்போர்கள், ஊழ் வந்து உறுத்தல், பொய் புரட்டுகள் ஆகியவற்றைப்போன்ற புதுமைகள் பல இக் காவியங்களில் இடம் பெற்றுள்ளன. உண்டு, உடுத்து, குடித்து, காதல் புரிந்து, இல்லறம் ஓம்பி, புலவர்களைப் புரந்து, பாணர், விறலியர் கூத்தைக் கண்டும் இசையைக் கேட்டும் மகிழ்ந்து, மன்னனுக்காகப் போர் புரிந்து எளிய

வாழ்க்கையை நடத்தி வந்த சங்ககாலத் தமிழ்ச் சமூகம் நெடுந் தொலைவு கடந்து வந்து இக் காப்பிய காலங்களில் பலவகை யான வளர்ச்சிகட்கும், வேறுபாடுகட்கும், சிக்கல்கட்கும் உட் பட்டுக் காணப்படுகின்றது. பல பண்டைய தமிழ்ப் பழக்க வழக்கங்களும் வாழ்க்கை முறைகளும் மாறிப்போய்விட்டன. 'யாயும் ஞாயும் யாரா கியரோ, எந்தையும் நுந்தையும் எம் முறைக்கேளிர், யானும் நீயும் எவ்வழி அறிதும், செம்புலப் பெயல்நீர் போல, அன்புடைய நெஞ்சம் தாம்கலந் தனவே'[57] என்று காதலன் தன் காதலியைப் பாராட்டி மணம் புரிந்து கொண்ட காலம் நழுவி, கோவலன் கண்ணகி இவ்விருவரின் பெற்றோரும் மணவணி காண மகிழ்ந்து, மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீவலம் செய்து அவ்விருவருக்கும் மணம் புரிவித்த ஒரு காலம் வளர்ந்து வந்துவிட்டது. ஆரியப் பழக்க வழக்கங்கள், பண்பாடுகள் பல தமிழரின் வாழ்க்கையில் குடி புகுந்துவிட்டன. சேயோன், மாயோன், வேந்தன், வருணன், கொற்றவை என்ற சங்க காலத்தெய்வங்களுடன் இக் காப்பியங் களின் காலத்தில் வேற்படை, வச்சிரப்படை, ஐராவதம், பல தேவன், சாதவாகனன், அருகன், சந்திரன், சூரியன் ஆகிய கடவுளரின் வழிபாடும் சிறப்பாக நடை பெற்று வந்தது.[58] ஐந்தெழுத்தும் எட்டெழுத்தும் ஓதப்படவாயின;[59] 'தொண் ணூற் றாறுவகைச் சமய சாத்திரத் தருக்கக் கோவை'யில் வல்லவரான பாசண்டர்களைச் சிலப்பதிகாரத்தில் காண்கின் றோம். இவர்கள் சங்க காலத்தில் காணப்பட்டிலர். 'சுடலை நோன்பிகள்' என்றும், 'உலையா உள்ளமொடு உயிர்க்கட னிறுத்தோர்' என்றும் காபாலிகர் மணிமேகலையிற் பாராட்டப் பெறுகின்றனர். இவர்களைப்பற்றியும் சங்க இலக்கியம் குறிப் பிடவில்லை.

சமணமும் பௌத்தமும் ஒன்றோடொன்று ஒத்து வளர்ந்து எங்கும் பரவி இருந்த ஒரு காலத்தில் இவ்விரு காப்பியங்களும் இயற்றப்பட்டிருக்கவேண்டும். ஆகையால், அவற்றுள் சமண பௌத்த சமயத் தத்துவங்கள் விளக்கப்பெறுகின்றன. இவ்விரு சமயங்கள் கி. மு. 3 ஆம் நூற்றாண்டிலேயே தமிழகத்தில் நுழைந்து விட்டனவாயினும் சங்க இலக்கியங்களில் அவற்றைப் பற்றிய குறிப்புகள் மிகவும் குறைவு. சிலப்பதிகாரத்தின் ஆசிரிய ரான இளங்கோவடிகளை ஒரு சமணத் துறவி என்பர். மணிமேகலையானது பௌத்தக் கொள்கைகளைத் தமிழகத்தில்

57. குறுந். 40 58. சிலப். 9:9-15.

59. சிலப். 11: 128.

பரப்பும் சமய நோக்குடனே இயற்றப்பட்டதெனத் தோன்று கின்றது. சமணரின் செல்வாக்கு ஓங்கி நின்ற காலம் கி. பி. 5 ஆம் நூற்றாண்டாகும். வச்சிரநந்தி என்ற சமணர் கி. பி. 470-ல் திராமிள சங்கம் என்று ஒரு தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தார். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் சில இச்சங்கத்தை மருவிய நூல்களாம் எனவும் சிலர் எண்ணுகின்றனர். காஞ்சிபுரத்தில் கி.பி. 4, 5, 6 ஆம் நூற்றாண்டுகளில் பௌத்தரின் செல்வாக்குப் பெரிதும் பரவியிருந்தது. சமணம், பௌத்தம் ஆகிய இவ்விரு சமயங்களேயன்றிச் சைவமும் அதன் உட்பிரிவுகளும், வைணவமும், உலோகாயதமும், பூதவாதமும் செழிப்புடன் காணப்பட்டன. சிலப்பதிகாரத்தில் இந்திரவிழவூர் எடுத்த காதையிலும்,வேட்டுவவரியிலும் ஆய்ச்சியர் குரவையிலும் சமயவளர்ச்சியையும்,மக்களுக்குச் சமயங்களில் ஏற்பட்டிருந்த ஆழ்ந்த ஈடுபாட்டையும் அறிகின்றோம். எல்லாச் சமயத்தினரும் பூசல்கள் இன்றி ஒருமித்து வாழ்ந்து வந்துள்ளனர். ஒரே குடும்பத்தில் ஒருவர் வேத நெறியையும் மற்றொருவர் சமணத்தையும், பிறிதொருவர் பௌத்தத்தையும் சார்ந்து வாழ்ந்து வந்துள்ளனர்.

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழையும் கையாண்டுள்ளார். அவர் தமக்கு வேண்டிய இசை, கூத்து நுணுக்கங்களைப் பரத நாட்டிய சாத்திரம் என்னும் வடமொழிநூலினின்றும் கற்றார் என்றும், அதனால் சிலப்பதிகாரம் காலத்தால் மிகவும் பிற்பட்ட நூல் எனவும் கொள்ளுவர் வையாபுரி பிள்ளையவர்கள். இளங்கோவடிகள் பரத நாட்டிய சாத்திரத்தைப் பயின்றிருக்கக்கூடும். ஏனெனில், அவ் வடமொழி நூலினுள் கூறப்படும் சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி என்னும் நான்கு வகையான ‘விருத்தி’ என்னும் நாடக உறுப்பினைப்பற்றி அவர் விளக்குகின்றார்.[60] பரத நாட்டிய சாத்திரம் தோன்றிய காலமே இன்னும் வரையறுக்கப்படவில்லை. சிலர் அது கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதென்றும், சிலர் அது கி.பி. 4 ஆம் நூற்றாண்டின் படைப்பு என்றும் கருத்து வேறுபடுவர். தமிழகத்தில் சங்க காலத்திலேயே பாட்டும், கூத்தும் மக்கள் பயின்று வந்த சிறந்த கலைகளாக விளங்கின. பாணரும் விறலியரும் இக்கலைகளை நாடெங்கும் பரவுமாறு செய்து வந்தனர். மன்னர்கள் அவர்களுடைய கலையறிவைப் பாராட்டிப் பரிசில்களை வாரி வழங்கினர். சிலப்பதிகாரம் எழுந்த காலத்தில் மக்கள் சமூகம் பல துறைகளில் வளர்ச்சி பெற்றிருந்தது. ஆடல்பாடல் துறையும்

60. சிலப். 3:13இல் அடியார்க்கு நல்லார் விளக்கவுரை காண்க.

அவற்றுள் ஒன்றாகும். தமிழகத்தில் முழு வளர்ச்சி பெற்றிராத ஒரு கலையைப்பற்றிக் கூறும்போது இளங்கோவடிகள் அதைப் பற்றிய வடமொழி நூல் விளக்கங்களை எடுத்துக் காட்ட வேண்டிய நிலைமை ஏற்பட்டிராது. ஏற்கெனவே முழு வளர்ச்சி பெற்றிருந்த கூத்து இசையாகிய கலைகளைப்பற்றிய விரிவுகளை அவர் எடுத்துக் கூறியிருப்பதில் வியப்பேதுமில்லை. சிலப்பதி காரத்தில் சிறந்து வளர்ந்த இரு பெரும் மொழிகளிடையே கருத் துப் பரிமாற்றங்கள் நடைபெறவில்லை என்று கூறமுடியாது. தமிழர்கள் வளர்த்திருந்த நாட்டியக் கலையினின்றும் பல புதுமைகள் வடமொழியில் ஏற்புண்டு புதிய வடிவத்தில் புதிய பெயர்களைப் புனைந்து வெளிவந்திருக்கக்கூடும். பரத நாட்டியம் என்னும் பழந்தமிழரின் கூத்துமுறைகள் பல நூற்றாண்டுகளாகத் தம் தூய்மையையும், இனிமையையும் பெருமையையும் விரிவை யும் இழக்காமல் இன்றும் தமிழகத்தில் பயின்று வருகின்றன. வடஇந்தியாவில் பரதநாட்டியம் அறவே மறைந்து ஒழிந்து போயிற்று. அங்கு மூலைக்கு மூலை பலப் பலவான நாட்டியவகை கள் தோன்றி வளர்ந்து வந்துள்ளன. அவற்றுள் ஒன்றிலேனும் பரத நாட்டிய முறையின் சிறப்புகளைக் காணவியலாது. சிலப் பதிகாரத்தில் அரங்கேற்றுக் காதையில் இளங்கோவடிகள் எடுத்து விளக்கும் பண்முறைகள் தேவாரப் பண்களைவிட, குடுமியா மலைக் கல்வெட்டுப் பண்களைவிட மிகவும் பழமையானவை.

கோவலனும் கண்ணகியும் முதன்முதல் பூம்புகாரைவிட்டு மதுரைக்குப் புறப்பட்ட நாளன்றும், இறுதியில் கண்ணகி மதுரைக்கு எரியூட்டிய நாளன்றும் காணப்பட்ட கோள்நிலை முதலியவற்றின் அடிப்படையில், வானவியல் கணிப்பின்படி காலத்தை அறுதியிட்டுச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கி. பி. 8 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருக்கவேண்டும் என்று எல். டி. சுவாமிக்கண்ணுபிள்ளை அவர்கள் எண்ணுகின்றார். ஆனால், வானவியலின்படி காலங்கணிப்பதற்குப் போதுமான கோள்நிலைக் குறிப்புகளைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோ வடிகள் தரவில்லை. வானவியலின் அடிப்படையிலேயே வேறொரு ஆய்வாளரும் (எம். இராமராவ்) இக் காப்பியங்கள் கி. பி. 146-க்கும் கி. பி. 587-க்கும் இடையில் ஆக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் கூறுகின்றார். இளங்கோவடிகளோ உரை யாசிரியரோ கோள்நிலையை அறுதியிட்டுத் தெரிவிக்கவில்லை. சிலப்பதிகாரத்தில் கிடைக்கும் சில குறிப்புகளைமட்டும் கொண்டு காலங்கணித்தல் திருத்தமாக இராது. எனவே, இவ்விரு அறிஞரின் காலக் கணிப்புகள் பொருந்தாதவை எனப் புறக் கணிக்கப்பட வேண்டியவையாம்.

சோதிட நூலின்படி அமைந்துள்ள காலக் கூறுபாடுகளான திங்கள், பக்கம், நாள் ஆகியவற்றைத் தமிழர் பழங்காலத்திலேயே அறிந்திருந்தனர். அதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. சில நூற்றாண்டுகட்கு முன்புதான் பயின்றனர் என்று சில ஆய்வாளர் மேற்கொள்ளும் கருத்துக்கு ஆழமின்று. இடபம் முதலான பன்னிரண்டு இராசிகளையும் கோள்கள் திரிந்துவரும் வானமண்டிலத்துக்குள் அமைந்திருக்கும் நாண்மீன்களையும் கோள்நிலை திரிவதாலும், புகைமீன் வீழ்வதாலும், நாண்மீன் ஒவ்வொன்றுடனும் நிலாக்கூடி வருவதாலும் ஏற்படக்கூடிய விளைவுகளையும் தமிழர் அறியாதவர்களல்லர். ஞாயிறானது மேட இராசி தொடங்கி, இராசிதோறும் பெயர்ந்து செல்லுவதை நெடுநல்வாடை ஆசிரியர் நக்கீரர் அறிந்திருந்தார்.[61] கூடலூர் கிழார் இராசியின் பெயர், அதில் ஞாயிறு நின்ற நிலை, வெள்ளி எனும் கோள் நின்ற நிலை, நாண்மீன்கள் எழுவதும், அமர்வதும், எரிமீன் விழுவதும் ஆகியவற்றைத் தம் பாடல் ஒன்றில் விளக்குகின்றார்.[62] இராசிகளுக்கும் நாண்மீன்கட்கும் அவர் தமிழ்ப் பெயர்களையே அளித்துள்ளார். உறையூர் முது கண்ணன் சாத்தனார் என்ற புலவரின் செய்யுள்ஒன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது.[63] வானத்தில் ஞாயிறு இராசிதோறும் பெயர்ந்து செல்லுவதையும், அங்கு ஒரு குறிப்பிட்ட வட்டமான வழியிலேயே அது சுற்றி வருவதையும், காற்று இயங்குவதையும், ஆகாயம் நிலைத்து நிற்பதையும், சில கணிகள் தாம் நேரில் சென்று அளந்தறிந்தனர் போல இருக்குமிடமிருந்தே கோள்களைக் கணித்து அறியக்கூடிய ஆற்றல் பெற்றிருந்ததையும் பழந்தமிழர் அறிந்திருந்தனர். வானத்தில் மின்னுவன 'மீன்கள்,' ஞாயிற்றின் ஒளியைக் கொண்டு மின்னுவது 'கோள்'. கோள்களின் இயக்கங்களைக் கணித்துப் பின்வருவனவற்றை முன்னரே கூறும் ஆற்றல் வாய்ந்தவருக்குக் 'கணி' அல்லது 'கணியன்' என்று பெயர். கணிகளின் தலைவன் 'பெருங்கணி' எனப்பட்டான். சங்க இலக்கியத்தில் கணியைப் பற்றிய குறிப்புகள் பலவற்றைக் காணலாம். கணியன் பூங்குன்றனார் என்பவரும் ஒரு கணியேயாவார். இவர் 'யாதும் ஊரே, யாவருங் கேளிர்'[64] என்று பாடி மக்கள்பால் இருக்க வேண்டிய மிகச் சிறந்ததொரு பண்பாட்டை உலகிற்கு எடுத்துக்காட்டியவர். இவர் சோதிடக் கலையில் வல்லுநராக இருந்தார்.

61. நெடுநல். 160, 161, 62, புறம். 229

63. புறம், 20.

64. புறம், 192

தமிழருக்கும் பாபிலோனியா, சுமேரியா, எகிப்து ஆகிய நாடுகளுக்கு மிடையே முற்காலத்திலேயே விரிவான கடல் வாணிகம் நடைபெற்று வந்த செய்தியை முன்னரே அறிந்தோம். அந் நாடுகள் அனைத்தும் விண்மீன்கள், கோள்கள் ஆகிய வற்றைப்பற்றி நன்கு அறிந்திருந்தன. அவர்களுடன் வாணிகத் தொடர்பு கொண்டவர்களும், பண்டைய நாளிலேயே விண்மீன் களின் துணைகொண்டு திசையறிந்து ஆழ்கடலோடியவர்களு மான தமிழ் மக்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்றான் வான வியல் அறிவை வளர்த்துக்கொண்டார்கள் என்னும் கூற்று அடிப் படையிலேயே பிழைபட்டதெனக் கொள்ளவேண்டும். கட லோடும் மக்கள் யாருமே வடமீன், கோள்களுள் ஒளிமிக்கவை யான வெள்ளி, வியாழன், செவ்வாய் ஆகியவற்றின் வான நிலையைக் கண்டு காலத்தையும் திசையையும் கணிக்காமல் மரக்கலம் ஓட்ட முடியாது. கடல் பயணம் செய்தவனைக் 'குலக்கேடன்' என்று ஒதுக்கிவைத்தும், அவனுடைய நாக்கையும் மூக்கையும் சுடரால் சுட்டு அவனுக்குக் கழுவாய் செய்தும், கடல் பயணத்துக்கு இழுக்குக் கற்பித்த ஆரியரிடம் பல்லாயிரம் ஆண்டு கட்கு முன்பே திரைகடலோடிய தமிழர்கள் வானவியல் பயின்றார்கள் என்னும் கூற்று சாலவும் பழுதுபட்டதாகும்.

திருக்குறளில் ஏழுநாள் கால அளவாகிய வாரத்தைப்பற்றிய குறிப்பு ஒன்று உண்டு.[65] இந் நூல் சிலப்பதிகாரத்துக்கும் மணி மேகலைக்கும் முற்பட்டது என்பதை யறிவோம். திருஞான சம்பந்தர் (7ஆம் நூற்றாண்டு) ஏழு கிழமைகளின் பெயர்களையும் ஒரு பதிகத்தில் வைத்துப் பாடியுள்ளார்.[66] செவ்வண்ணக் கோளைச் 'செவ்வாய்' என்றும், பொன்வண்ணமாகக் காட்சி யளிக்கும் வியாழனைப் 'பொன்' என்றும், வெண்ணிறக் கோளை 'வெள்ளி' என்றும், நீலவண்ணக் கோளான சனியை 'நீலன்' என்றும், 'காரி' என்றும் பழந்தமிழர் சுட்டிக் காட்டினர். இலக்கிய அகச் சான்றுகளைக் கொண்டே பண்டைய தமிழரின் வானவியல் நுண்ணறிவைக் கண்டு வியப்புறலாகும்.

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் பிற்காலத்தியவை என்று கருதும் ஆய்வாளர்கள் காட்டும் சான்று மற்றொன்றும் உண்டு. மணிமேகலையின் 'தவத்திறம் பூண்டு தருமங்கேட்ட காதை'யில் மணிமேகலை கேட்டறிந்த பௌத்த அறம் திந்நாகர் என்ற பௌத்த அடிகளின் அறிவுரைகளேயாம் என்றும், ஆதலால் இக்

65. குறள் 1278.
66. தேவாரம். 2.85:1

காப்பியங்கள் கி. பி. 5ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட காலத்தில் எழுந்தவை என்றும் அவ்வாய்வாளர் கூறுவர். மணிமேகலை அறங்கேட்டது அறவண அடிகளிடம். திந்நாகர் காஞ்சிமாநகரில் பிறந்து வாழ்ந்தவர். அவரே அறவண அடிகளாரிடம் அறங் கேட்டுத் தெளிவு பெற்றிருக்கக்கூடும். மணிமேகலை வரலாறு நிகழ்வதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர் அறவண அடிகள் என்று இக் காப்பியம் கூறுகின்றது. திந்நாகர் அறவண அடிகளுக்குப் பிற்பட்டிருந்த பௌத்த அறிஞர்களிடம் அறங் கேட்டுத் தெளிந்திருப்பார் என்று ஊகிக்க இடமுண்டு.

மொழியியல் கூறுபாடுகள் சிலவற்றைக் கொண்டும் இவ்விரு காப்பியங்களையும் காலத்தால் பிற்பட்டவை எனவுங் கூறுவர். பழஞ் சங்க இலக்கியங்களில் காணப்படும் கருத்து அமைப்புகள், சொல்லாட்சி முதலிய கூறுப்பாடுகளுக்கும் இக் காப்பியங்களின் இலக்கிய நடை, சொல்லாட்சி முதலியவற்றுக்குமிடையே ஆழ்ந்த வேறுபாடு உண்டு. இந் நூல்களில் செய்யுள் இலக்கணத்தின் வளர்ச்சியைக் காண்கின்றோம். இவற்றில் ஆளப்பெறும்; நான்', 'உன்', 'இந்த' என்னும் சொற்கள் சங்க இலக்கியங்களில் ஆளப் பெறுவதில்லை. மேலும், நரபலி, சாபம், விதானம், கலி, சித்திரம் பரகதி, விரதம், சாந்தி, தோரணம், நாதன் ஆகிய வடமொழிச் சொற்கள் இக் காப்பியங்களில் விரவி வருகின்றன. இக்காரணம் போதிய சான்றாகாது. ஆரிய மொழியுடன் தொடர்புகொண்ட சமணமும் பௌத்தமும் இக் காப்பியங்களுள் தொடக்க முதல் இறுதிவரையில் ஆங்காங்கு விளக்கம்பெறுகின்றன. வேறு சில சமயங்களின் கருத்துரைகளும் இவற்றில் இடம் பெற்றுள்ளன. எனவே, இவற்றில் வடமொழிக் கலப்புச் சற்று மிகுதியாகவே காணப்படுவதில் வியப்பேதுமில்லை. இம் மொழிக்கலப்பைக் கொண்டு இக் காப்பியங்கள் சங்க இலக்கியங்கட்குச் சற்றே பிற் காலத்தியவை என்று ஊகிக்கலாமே அல்லாது பல நூற்றாண்டுகள் பிற்பட்டவை என்று கொள்ளுவதற்கு இடமில்லை.

'பங்களர்' என்று ஒரு சொல் சிலப்பதிகாரத்தில் ஆளப்பெறு கின்றது.[67] இது வங்க நாட்டைக் குறிக்கும் என்றும், கி. பி. 11ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிற்றான் இச் சொல் இடம் பெற்றுள்ளதென்றும், ஆகையால் சிலப்பதிகாரம் 11ஆம் நூற் றாண்டிலோ, அதற்கு இருநூறு ஆண்டுகள் முந்தியோ இயற்றப் பட்டிருக்கவேண்டும் என்றும் ஒரு கருத்து நிலவுகின்றது. பங்களர் என்னும் பெயர்ச் சொல் வங்க நாட்டைத்தான் குறிக்கின்றது

67. சிலப். 25 : 157.

என்று திட்டமாகக் கூறமுடியாது. எந்தச் சொல்லும் முதன் முதல் மக்களின் பேச்சு வழக்கில் பயின்றுவரவேண்டும். அதன் பின்னர்த் தான் அது கல்வெட்டில் இடம் பெறும். அன்றியும் இக் கல்வெட்டுக்குக் காலத்தால் முந்திய கல்வெட்டு ஒன்றில் இச் சொல் ஆளப் பெறவில்லை என்பதற்கு என்ன சான்று உளது? நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் வெளியானவை ஒரு சிலவே; வெளியாகாமல் கிடப்பவை பல்லாயிரம் உண்டு. அவற்றில் ஏதேனும் ஒன்றில் பங்களம் என்னும் பெயர்ச்சொல் ஆளப் பெற்றிருக்கக் கூடும். இஃதேயன்றித் தென்னார்க்காடு மாவட்டத்தில் பங்களர் எனப் பெயர்பெற்றிருந்த மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதையும் ஈண்டுக் கருத்தில் வைக்க வேண்டும்.

சிலப்பதிகாரத்தில் காவிரியாறு 'காவேரி' என்று அழைக்கப் படுகின்றது. அதனாலும் இக் காப்பியம் பிற்பட்டதென்பர். சிலப்பதிகாரத்தில் இசைப் பாட்டுகள் நிரம்பிய கானல் வரியில் மட்டுந்தான் 'காவேரி' என்னும் சொல் ஆளப்படுகின்றது. மற் றெல்லா இடங்களிலும் 'காவிரி' என்னும்பெயரே வழங்குகின்றது. காவேரி என்னும் சொல் இசைக்குத் தக்கதான ஒலி நெகிழ்ச்சி கொண்டுள்ளது. கோவலன் யாழை வாங்கிக் 'காவேரி' என்று அழைத்துப் பாடத் தொடங்குகின்றான் என்பதைக் கூறுமிடத் திலும் இளங்கோவடிகள், 'காவிரியை நோக்கினவும், கடற்கானல் வரிப் பாணியும் மாதவி தன் மனம் மகிழ வாசித்தல் தொடங்கு மன்' என்று 'காவிரி' என்னும் பெயரையே ஆண்டுள்ளதை நோக்கவேண்டும்.[68]

சிலப்பதிகாரம் வழக்குரை காதையின் இறுதியில் சேர்க்கப் பட்டுள்ள மூன்று வெண்பாக்களில் முதல் வெண்பா[69] அறத்தைப் பற்றிப் பேசுகின்றது. பதினெண்கீழ்க்கணக்கில் ஒன்றாகிய நான் மணிக்கடிகையில் வரும் ஒரு செய்யுளும் இக் கருத்தையே வலியுறுத்துகின்றது. எனவே, சிலப்பதிகாரம் காலத்தால் நான் மணிக்கடிகையினும் பிற்பட்டதாகும் என்றுங் கூறுவர். இங்குக் குறிக்கப்பெறும் 'அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றமாம்' என்னும் மொழி 'பல அவையாரால்' நாட்டப்பட்ட ஓர் அற மொழியாம் என்று அந்த வெண்பாவே தெரிவிக்கின்றது. எனவே, அம்மொழி புதிதன்று; ஒருவரால் மட்டும் நிறுத்தப்பட்டதன்று. மற்றும் பழமொழி நானூற்றைக் கற்று இளங்கோவடிகள் 'முற்பகல்செய்தான் பிறன்கேடு தன்கேடு பிற்பகல் காண்குறூஉம்

68. சிலப். 7:19,20. 69. சிலப், 20; வெண்பா-1,

பெற்றியகாண்[70]' என்று பாடினார் என்றும் கூறுவர் இவ் வாய்வாளர். ஆனால், இதே கருத்தை நிறுத்தித் திருவள்ளுவர் 'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்' என்றுஒரு குறட்பாவைத் தந்துள்ளார். எனவே, திருக்குறளைக் கற்றும் இளங்கோ இவ்வற மொழியைத் தம் நூலில் சேர்த்திருக்கக்கூடும் என்பதை மறுக்க முடியாது.

மேலே கூறியவற்றால் மணிமேகலையும் சிலப்பதிகாரமும் சேரன் செங்குட்டுவன் வாழ்ந்த காலத்திலேயே இயற்றப்பட்டிருக்க முடியாது என்று கொள்ள வேண்டியுள்ளதாயினும், கி.பி. 8, 9ஆம் நூற்றாண்டில் அவை எழுந்தன என்று கூறி அவற்றின் பழைமையை மறுப்பது ஆய்வுக்குச் சற்றேனும் ஏலாததாகும். அண்மையில் ஓர் ஆசிரியர் அதைக் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததெனக் கூறியிருப்பது பெரும் விந்தையே. தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் சைவ வைணவ மறுமலர்ச்சி மேலீட்டினால் சமயப் பூசல்கள் மலிந்திருந்தன. பௌத்தமும் சமணமும் வீறடங்கித் தாழ்ந்து வந்து கொண்டிருந்தன. ஆனால், அவ்விரு சமயங்களும் சைவ வைணவ சமயங்கள் ஒத்திருந்து எவ்வித வேறுபாடுகளுமின்றி மக்கள் வாழ்க்கையில் இடம் பெற்றிருந்த காலத்தில் இவ்விரு காப்பியங்கள் இயற்றப்பட்டுள்ளன வாகையால் அவற்றைக் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டனவாகக் கொள்ளுதலே பொருத்தமாகும். அஃதுடன் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்றான் கணபதி வழிபாடு தமிழகத்தில் தொடங்கிற்று. சிலப்பதிகாரத்தில் அதைப்பற்றிய குறிப்புகளே காணப்படவில்லை. எனவே, சிலப்பதிகாரம் 7ஆம் நூற்றாண்டுக்கு முந்திய காலத்தின் படைப்பு என்பதில் ஐயமேதுமில்லை. இளங்கோவடிகள் சேரன் செங்குட்டுவன் உடன்காலத்தவர் அல்லர்; பிற்காலத்தவர். தம் காப்பியத்துக்கு ஏற்றதொரு பின்னணியைப் படைத்தளிக்க இவர் எண்ணினார். அக் காரணத்தால் சேரன் செங்குட்டுவன் காலத்தில் (கி.பி. 2ஆம் நூற்றாண்டில்) காப்பியக் கதை நிகழ்ந்ததாகக் கற்பனை செய்தார். அதனால் காஞ்சியைப் பற்றிப் பலமுறை தம் காப்பியத்தில் குறிப்பிடுகின்றாரராயினும் அதில் பல்லவ மன்னரைப் பற்றியோ களப்பிரரைப்பற்றிய குறிப்போ கொடுக்கவில்லை. எனினும், இவ்விரு காப்பிய ஆசிரியர்கள் சேரன் செங்குட்டுவன் காலத்தையடுத்து இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்குள் வாழ்ந்தவர்கள் ஆதலால், கதையின் கற்பனையானது வரலாற்று உண்மையுடன் ஒத்து நடக்கின்றது. பல நூற்றாண்டுகளுக்குப் பின்பு

70. சிலப். 2: 3. 4.

அவர்கள் வாழ்ந்தவர்களாக இருந்திருப்பின் இவ் வொப்புமை யைக் காண முடியாது.

புத்த தத்தர், மணிமேகலைச் சான்றுகளைக் கொண்டும், அக் காலத்திய அரசியல், சமுதாய, சமய நிலவரங்களைக் கொண்டும் இவ்விரு காப்பியங்களும் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் இறுதியில் இயற்றப்பட்டவை என்றும், இரண்டாம் நூற்றாண்டில் எழுந்தன வல்ல என்றும், கி. பி. 8, 9ஆம் நூற்றாண்டுகட்கு மிகவும் முற்பட்டவை என்றும் ஒரு முடிவுக்கு வருவது இயைபுடைத் தாகும்.[71]

71, சேர நாட்டில் குணவாயில் கோட்டம் கி. பி, 9ஆவது நூற்றாண்டு தோன்றியதெனவும் அக் காரணத்தால் சிலப்பதிகாரம் கி. பி. 9 ஆவது நூற்றாண்டைச் சார்ந்ததென்றும் பேராசிரியர் நாராயணன் கூறியிருப்பது நம்பத்தக்கதன்று. திருச்சிராப்பள்ளிக்கடுத்த கரூரின் அண்மையில் ஒரு குண வாயூர் இருந்தது. இளங்கோவடிகள் அங்குச் சிலப்பதிகாரத்தை இயற்றியிருக் கலாம்.

# 8. பண்டைத் தமிழரின் வாழ்க்கை

தமிழகத்து வரலாற்றுக்குட்பட்ட காலம் சங்க காலம். இக் காலத்தில் தமிழரின் நாகரிகம் முழு மலர்ச்சியுற்றிருந்தது. பாண்டியன், சோழன், சேரன் என்ற முப்பெரும் மன்னர் அரசாண்டு வந்தனர். பாண்டியரின் தலைநகரம் மதுரை; சோழரின் தலைநகரம் காவிரிப்பூம்பட்டினம். புகார் அல்லது பூம்புகார் என்றும் இந் நகரத்துக்குப் பெயர்கள் உண்டு. சேரனின் தலைநகரம் வஞ்சி என்பது. தமிழ்மொழி வழங்கி வந்த தால் நாட்டுக்குத் தமிழகம் என்றும், மக்களுக்குத் தமிழர் என்றும் பெயர்கள் எய்தின. ஆகவே, நாட்டுக்கும். மக்களுக்கும் அவர்கள் பேசிய மொழிக்குமிடையே நெருங்கிய ஒரு தொடர் பைக் காண்கின்றோம். தமிழ்மக்கள் தாம் பேசிய மொழியுடன் இணைந்து வாழ்ந்தனர். தமிழர் வேறு, தமிழ் வேறு என்று பிரிக்க முடியாத அளவு அம் மொழியானது தமிழர் வாழ்வில் இடங்கொண்டது. தமிழரின் வாழ்வு, தமிழர் பேசிய மொழி, தமிழர் வாழ்ந்த நிலம் ஆகிய இம் மூன்றுக்கும் இயல்பான, நெருங்கிய தொடர்பு ஒன்று உண்டு என்ற உண்மை தமிழரின் நாகரிகத்தின் அடிப்படைத் தத்துவமாக அமைந் துள்ளது. இத் தத்துவத்தை விளக்குவனவே சங்க இலக் கியங்கள். இவ் விலக்கியங்களின் துணையின்றித் தமிழரின் பண்டைய வரலாற்றையும் பண்பாட்டையும் அறிந்துகொள்ள முடியாது. தமிழ் நிலத்தின் உயிர்நாடி தமிழ் மக்கள்; தமிழ் மக்களின் உயிர்நாடி தமிழ் மொழியாகும். தமிழைப் போற்றி வளர்ப்பதும், தமிழ்ப் புலவரைப் பாராட்டிப் புரந்து வருவதுமே தமிழ்மன்னரின் முதற்கடமையாக இருந்து வந்தது. கோடி கொடுத்தும் புலவர் ஒருவரின் பாட்டைப் பெறுவதற்கு மன்னர்கள் ஆவலாக இருந்தனர். தமிழ் மன்னன் ஒருவன் தனக்கு இறவாமை அளிக்கக்கூடிய கனி ஒன்றைத் தான் உண்டு பயனடை யாமல் அதைத் தமிழ்ப் புலவர் ஒருவருக்கு அளித்துத் தனக்கும், அவருக்கும், தமிழ்மொழிக்கும் இறவாத புகழைப் பெற்றுக் கொடுத்தான். சங்ககால மன்னர்கள் எழுப்பிய எழிலோங்கு அரண்மனைகள், மாளிகைகள், அங்காடிகள், கோயில்கள், துறை முகங்கள், பந்தர்கள், அவர்கள் ஓட்டிய நாவாய்கள் அனைத்தும்

இப்போது மறைந்துவிட்டன. ஆனால், அவர்கள் காலத்துப் புலவர்கள் பாடிய பாடல்கள் பல இப்போதும் எஞ்சி நிற்கின்றன. எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும், பதினெண்கீழ்க்கணக்கும், சிலப்பதிகாரமும், மணிமேகலையும் பழந்தமிழரின் சால்பை விளக்கிக் காட்டுகின்றன.

தாம் வாழும் நிலத்தின் இயல்புக்கு ஏற்றவாறு மக்களின் வாழ்க்கை முறையும், பண்பாடும் அமையும் என்பது பண்டைய தமிழரின் சிறந்ததொரு கொள்கையாகும். அஃதுடன் 'காலம்' என்ற தத்துவமும் மக்கள் வாழ்க்கையில் பேரிடங்கொண்டது. ஆகவே, மக்கள் வாழ்ந்த இடமும், காலமும், அவர்களுக்குத் தேவையான **முதற்பொருள்** எனக் கொள்ளப்பட்டன.[1] ஓரறிவுடைய் புல் முதல் ஆறறிவுடைய மக்கள் ஈறாகிய உயிர்ப்பொருள்களும் ஏனைய உயிரில்லாத பொருள்களும் முதற்பொருள்களின் சார்பாக நின்று கருக்கொண்டு உலகின்மேல் தோற்றுகின்றன ஆகையால் அவற்றுக்குக் **கருப்பொருள்**[2] என்று பெயர் வழங்கிற்று. மக்கள் வாழ்க்கையின் செய்திகளைப் புலப்படுத்துவது **உரிப்பொருள்**[3] எனப் பெயர் பெற்றது.

முதற்பொருள் இரண்டனுள் நிலமானது நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டது: காடும் காட்டைச் சார்ந்த இடமும் முல்லை என்றும், மலையும் மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி என்றும், வயலும் வயலைச் சார்ந்த இடமும் மருதம் என்றும், கடலும் கடலைச் சார்ந்த இடமும் நெய்தல் என்றும் பெயர் பெற்றன. முல்லைக்குக் கடவுள் மாயோன் (திருமால்), குறிஞ்சிக்குக் கடவுள் சேயோன் (முருகன்), மருதத்தின் கடவுள் வேந்தன் (இந்திரன்), நெய்தலுக்குக் கடவுள் வருணன். இந் நான்கு பிரிவுகளல்லாமல் வேறொரு நிலப்பிரிவும் உண்டு. அதற்குப் 'பாலை' என்று பெயர். 'முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து, நல் இயல்பு இழந்து, நடுங்குதுயர் உறுத்துப் பாலை என்பதோர் படிவங் கொள்ளும்' என்று பாலை நிலம் விளக்கப்படுகின்றது.[4] அதாவது கோடை வெய்யிலில் மரஞ்செடிகள் உலர்ந்து, நீர் நிலைகள் வறண்டு காணப்படும் இடங்கட்குப் பாலை என்று பெயர். இந் நிலத்துக்குத் தெய்வம் கொற்றவை. இவ்வைந்து நிலத்தின் பாகுபாடுகளுக்குத் 'திணைகள்' என்று பெயர்.

1. தொல். பொருள். அகத். 4
2. தொல். பொருள். அகத். 18
3. தொல். பொருள். அகத். 14.
4. சிலப். 11 : 64-66

'திணை' என்னும் சொல்லுக்குக் 'குடி'[5] என்றும் ஒரு பொருள் உண்டு. குடிகள் வாழும் நிலமும் 'திணை' எனப்பட்டது. சொல்லிலக்கணத்தில் விளக்கப்படும் திணைகள் வேறு. அவை உயர்திணை, அஃறிணை என்பன. பொருள் இலக்கணத்தில் விளக்கப்படும் இவ்வைந்து திணைகளும் மக்கள் வாழ்க்கையைப் பற்றியவை. திணை என்னும் சொல் நிலத்தை மட்டுமன்றி நிலத்தின் அமைப்பு, அங்கு வாழும் மக்கள் இயல்பு, அங்கு உயிர் வாழும் விலங்குகள், பறவைகள், செடி கொடிகள் மரங்கள், உழவுப் பயிர் வகைகள், மக்கள் வழிபட்டு வந்த தெய்வங்கள் ஆகிய யாவற்றையும் குறித்து நிற்கும்.

மொழிக்கு மட்டுமன்றி மக்களுடைய வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்துக்கொண்ட பெருமை பழந்தமிழரைச் சாரும். வாழ்க்கைக்கு ஒழுங்குமுறைகள் வகுத்துக் கொடுத்த இலக்கணத்துக்குப் பொருள் இலக்கணம் என்று பெயர். தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே திணைகள் வழக்கில் இருந்துவந்தன. அவை தொல்காப்பியரால் நிறுவப்பெற்றவை அல்ல. எனவே, பொருளிலக்கணமும் தொல்காப்பியத்துக்கு முன்பு இயற்றப் பட்டிருக்கவேண்டும். 'முதலெனப் படுவது நிலம்பொழுது இரண்டின் இயல்பு என மொழிப இயல்பு உணர்ந்தோரே' என்று தொல்காப்பியர் தமக்கு முன்பு இலக்கணம் வகுத்திருந்த ஆசிரியர்களைச் சுட்டிக் காட்டுகின்றார். ஒரு மொழியில் இலக்கணம் வகுக்கப்படு முன் இலக்கியம் வளர்ந்திருக்க வேண்டும். மொழியானது பல காலம் வளர்ந்து வந்த பிறகுதான் பொருள்களையும் அவற்றைக் குறிக்கும் சொற்களையும் திட்டமாக வரையறுத்து உணரவேண்டிய நெருக்கடி ஒன்று நேரும். அப்படி வரையறுக்கத் தவறினால் எண்ணங்களிலும் பேச்சிலும் தடுமாற்றமும் குழப்பமும் ஏற்படும். இந்த இழிநிலையை ஒரு மொழியானது எய்தாதவாறு அதற்கு இலக்கண வரம்பீடு செய்தல் இன்றியமையாததாகும். அதைப் போலவே, மக்கள் வாழ்க்கைக்கு இலக்கண விதிமுறைகள் வகுப்பதற்கு முன்னர் அவ் வாழ்க்கை நன்கு வளர்ச்சியும் வளமும் பெற்றிருக்க வேண்டும். வளர்ச்சி பெற்று நிலைத்து வாழும் சமூகத்துக்குத் தான் ஒழுங்கு விதிகள் தேவைப்படும். ஒழுக்கமுறைகளை வகுத்து அவற்றின்படியே மக்கள் வாழ வேண்டுமென்று விதிப்பது இயற்கைக்கு முரணாகும். எனவே, தமிழில் பொருள் இலக்கணம் ஒன்று தோன்றுவதற்கு முன்பே மக்கள் அதில் வகுத்த வாழ்க்கையை வாழ்ந்து வந்தனர் என்பதில் ஐயமின்று. அவ் வாழ்க்

5. புறம். 27

கையை விளக்கிக் காட்டுமளவுக்குத் தமிழரிடையே இலக்கிய வளம் நிரம்பி இருக்க வேண்டும்.

நிலத்தைப் பாகுபாடு செய்ததைப் போலவே காலத்தையும் பாகுபாடு செய்திருந்தனர். காலம், பெரும்பொழுது என்றும் சிறுபொழுது என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டது.




ஓராண்டின் தட்ப வெப்ப மாறுபாடுகளைக் காட்டிய கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் ஆகிய காலங்கள் பெரும்பொழுதுகள். காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை ஆகியவை சிறுபொழுதுகள். பெரும் பொழுதை ஆண்டு, திங்கள், கிழமை, நாள், நாழிகை, நொடி எனவும் பகுத்திருந்தனர்.

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணைகளில் வாழ்ந்த மக்கள் உழைத்துப் பொருளீட்டுவர்; காதலிப்பர்; மணப்பர்; இல்லறத்தில் நின்று இன்பம் துய்ப்பர். இவ்வொழுக்கங்கள் யாவும் மக்களுக்கே உரியன. எனவே, அவற்றுக்கு உரிப் பொருள் என்று பெயர். ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் கண்டு காதலித்து மணந்து இல்லறம் நடத்தி வருவதை 'அகம்' என்றும், மக்கள் அரசியல் வாழ்விலும் போரிலும் ஈடுபடுவதைப் 'புறம்' என்றும் பொருள் இலக்கணம் குறிப்பிடும்.

உலக அமைப்பை முதல், கரு, உரி என மூன்றாக வகுத்து, உலகில் வாழும் மக்களின் வாழ்க்கையை அகம் என்றும் புறம் என்றும் பாகுபடுத்தி, அதை இயற்கையுடன் இயைபுறுத்தியது பண்டைய தமிழரின் சிறந்தொரு பண்பாடாகும்.

பழந்தமிழகத்தில் மக்கள் இல்லற வாழ்க்கையையே பெரிதும் பாராட்டி வந்தனர். ஒருவனும் ஒருத்தியும் இணைந்து வாழ்வாங்கு வாழ்வாராயின் அவர்களுக்கு வீடுபேறு தானாக வந்தெய்தும் என்பது தமிழரின் கொள்கையாக இருந்தது. இக்காரணத்தினாலேயே திருவள்ளுவரும் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலை மட்டும் பாடினார்; வீட்டைப்பற்றிப் பாடினாரில்லை. அவருடைய காலத்திலேயே ஆரியரின் பழக்க வழக்கங்களும், புராணங்களும், தத்துவங்களும் தமிழகத்தில் குடி புகுந்துவிட்டன. தருமம், அருத்தம், காமம், மோட்சம் என்னும் ஆரியரின் புருடார்த்தங்களைத் திருவள்ளுவர் அறிந்திருப்பார். இருப்பினும் அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பாலையே தமிழரின் பண்பாட்டுக்கு உடன்பாடாகக் கொண்டு, மரபு வழுவாது அவர் திருக்குறள் என்னும் அறநூலை இயற்றினார். 'இல்லற மல்லது நல்லற மன்று' என்பது பிற்காலத்து எழுந்த கொன்றைவேந்தன் மொழியாகும். ஒருவனுடைய உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத துணை அவன் மனைவியே ஆவாள். அவளுக்கு 'வாழ்க்கைத் துணை' என்னும் சிறப்பைக் கொடுக்கின்றார் திருவள்ளுவர்.

சங்க இலக்கியங்களுள் பெரும்பாலானவை அகப்பொருளையே பேசுகின்றன. எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகியவை அகப்பொருள் சார்புடையவை. பல வகையிலும் ஒத்த நலன்களையுடைய ஒருவனும் ஒருத்தியும் கூடுங்காலத்துப் பிறப்பது இன்பம். அதனை இன்னதென்று சொல்லால் விளக்க முடியாது;

அவர்கள் அகத்தால், அதாவது உள்ளத்தால்தான் உணர முடியும். அத்தகைய இன்பம் அகம் எனப்பட்டது. ஏனைய இன்பங்கள் யாவும் புறமாகும். அகத்தில் காதல் மலர்கின்றது; புறத்தில் வீரம் சிறக்கின்றது. ஆண் பெண் விருப்பத்தினால் அகத் திணை உண்டாகின்றது. மண்ணாசையாலும், பொன்னாசை யாலும், பசியாலும் புறத்திணை உண்டாகின்றது.

மணப் பருவம் எய்திய காதலர்கள் தாமாகவே கூடியோ அன்றிப் பிறரால் கூட்டப்பெற்றோ கணவன் மனைவியாவர்; காதலர்கள் தாமாகக் கூடும் கூட்டத்துக்குக் 'களவு' என்று பெயர். பிறர்க்கு உரித்தான ஒரு பொருளை அவரறியாவாறு அவரிடமிருந்து கவர்ந்து கொள்ளுவது 'களவு' எனப்படும். பழந்தமிழர் ஊழின் பெருவலியில் நம்பிக்கை கொண்டவர்கள். ஆகவே, காதலர்கள் ஒன்றுகூடுவதற்கே அவர்களை ஊழ் கூட்டு விக்க வேண்டும் என்று அவர்கள் கருதினர். காதலர் இருவர் ஒருவரையொருவர் ஒருமுறை கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து விடுவராயின், மீண்டும் அவர்கள் வேறு யாரையும் காதலிப்ப தில்லை. அவர்களுடைய திருமணம் எவ்விதமான இடையூறு மின்றி நடைபெறுவதற்குக் காதலனின் தோழனும், காதலியின் தோழியும் துணை நிற்பர். அகப்பொருள் இலக்கணத்தில் காதலனைத் தலைவன் என்றும், காதலியைத் தலைவி என்றும் அழைப்பது மரபாகும்.

தம் காதல் முற்றுப்பெறுவதற்கு இடையூறுகள் நேருமாயின் தலைவனும் தலைவியும் சேர்ந்து ஊரைவிட்டே வெளியேறி விடுவதுமுண்டு.[6] அவர்களுடைய காதலின் உறுதியையும் நேர் மையையும் பாராட்டி அவர்கள் பெற்றோர்கள் அவர்கட்குத் திருமணம் முடித்து வைப்பர். களவு ஒழுக்கமானது இரண்டு மாத காலத்துக்குமேல் நீடிக்கக்கூடாது என்பது மரபு. 'இந்த உல கத்தையே நான் உனக்கு ஈடாகப் பெற்றாலும் நான் உன்னைக் கைவிடேன்'[7] என்று தலைவன் தலைவிக்கு உறுதி கூறுவான். அவள் வேப்பங்காயைக் கொடுத்தாலும் அதை வெல்லக்கட்டி யென மகிழ்ந்துண்பான் அவன்.[8] தலைவன், 'உன் கூந்தலைப் போல நறுமணமுள்ள மலர் ஒன்றை உலகிலேயே நான் கண்டதில்லை' என்று தன் காதலியின் கூந்தலைப் பாராட்டி இன்புறுவான்.[9]

6. பாலைக்கலி, 8,
7. குறுந். 300
8. குறுந். 196.
9. குறுந். 2

அத்திணையுள் திருமண வாழ்க்கை 'கற்பு' என அழைக்கப்படுகின்றது. தலைவன் தலைவியர் இருவரின் பெற்றோரும் அவர்களுடைய திருமணத்துக்கு உடன்படுவர்.[10] திருமணம் ஒரு நல்ல நாளில் நடைபெறும்.[11] தீய கோள்கள் இடம் விட்டு விலகவும், நிலா உரோகிணியுடன் கூடவும் வேண்டும். விடியற் காலையிற்றான் திருமணம் நடைபெறும். திருமணப் பந்தலில் புதுமணல் பரப்பப்படும்; மாலைகள் தொங்கவிடப்படும்; அழகிய விளக்குகளை ஏற்றி வைப்பார்கள். வயது முதிர்ந்த மங்கல மகளிர் தண்ணீரைக் குடங்களில் முகந்து தம் தலையின் மேல் தூக்கிக் கொண்டு வந்து 'சிறு மண்டை' என்னும் அகன்ற வாயுடைய கலத்தில் பெய்து கொடுப்பர். குழந்தைகளைப் பெற்றெடுத்த மங்கல மகளிர் நால்வர் கூடி அத் தண்ணீரை வாங்கி, அதில் பூவிதழ்களையும், நெல் மணிகளையும் சொரிந்து அத் தண்ணீரினால் மணமகளை நீராட்டுவார்கள். இச் சடங்குக்கு 'வதுவை நன்மணம்' என்று பெயர். அப்போது அப் பெண்டிர், 'இவள் கற்பு நெறியினின்றும் வழுவாமல், தன்னைக் கொண்ட கணவனை விரும்பிப்பேணும் விருப்பமுள்ள துணைவி யாவாளாக' என அம் மணமகளுக்கு வாழ்த்துக் கூறுவர். மண மகளின் பெற்றோர் 'பெரிய ஓர் இல்லத்துக் கிழத்தியாக ஆவாய்' என்று வாழ்த்தி அவளை மணமகனுக்குக் கொடுப்பர். உளுத்தம் பருப்புடன் கலந்த அரிசிப் பொங்கல் மண விழாவுக்கு வந்தவர்கட்கு இடையறாது வழங்கப்பெறும்.[12] இறைச்சியும் நெய்யும் கூட்டி ஆக்கிய வெண்சோற்றையும் வழங்குவதுண்டு.

திருமண வினைகள் தொடங்குமுன்பு கடவுள் வழிபாடு நடைபெறும். மணமுழவு முழங்கும். வெண்மையான நூலில் வாகையிலைகளையும், அறுகம்புற் கிழங்குகளையும் கோத்த மாலையை மணமகள் அணிந்து கொள்ளுவாள். மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டியதாகச் சங்கத் தமிழில் சான்று ஏதும் கிட்டவில்லை. 'ஈகையரிய இழையணி மகளிரொடு'—அதாவது பிறர்க்குக் கொடுத்தற்கரிய இழை—என்று புறப்பாடல் ஒன்றில் குறிப்புக் காணப்படுகின்றது. ஆனால், அது திருமணத்தின்போது அணிவிக்கப்பட்டதென்பதற்குச் சான்றில்லை. ஐம்படைத் தாலியையும் புலிப்பல் தாலியையும் குழந்தைகட்குக் காப்பணியாக அணிவிக்கும் வழக்கம் அக் காலத்து உண்டு. ஆனால், திருமணத்தின் போது மங்கலநாண் பூட்டும் வழக்கம் பழந்தமிழரிடையே இல்லை போலும். அவ் வழக்கம் இருந்திருப்

10. தொல். பொருள். கற்பு. 1
11. அகம். 86, 136
12. அகம். 86

பின் எல்லாத் திருமணச் சடங்குகளையும் குறிப்பிடும்போது தாலி கட்டுவதென்னும் தலையாய சடங்கைக் குறிப்பிடாமல் இரார். ஆரியர் பண்பாடும் பழக்க வழக்கங்களும் பெருகிவந்த காலத்து எழுந்த நூலான சிலப்பதிகாரத்திலும் தாலி கட்டும் சடங்கைக் குறிப்பிடவில்லை. ஆனால், தமக்குத் திருமணம் ஆகிவிட்டதைத் தெரிவிப்பதற்காக அக்காலத்துப் பெண்கள் மங்கல அணி ஒன்றை அணிந்திருக்க வேண்டுமென்றும், திருமண நாளன்று அம் மங்கல அணியை ஊர்வலமாகக் கொண்டுவரும் வழக்கம் இருந்தது என்றும் அறிகின்றோம்.[13] இம் மங்கல அணியையே மேலே எடுத்துக் காட்டிய புறப்பாட்டுக் குறிப்பிடுகிறது போலும்.[14] 'மங்கல அணி' என்று வரும் வேறு இடங்களில் அடியார்க்கு நல்லார் அதற்கு 'இயற்கையழகு' என்றே உரை கண்டுள்ளார்.[15] எனவே, பழந்தமிழர் மாங்கலிய நாண் பூட்டித் திருமணம் முடித்தனர் என்று திட்டமாகக் கூறுவதற்கில்லை. ஆண்டாள் நாச்சியார் கண்ணன் தம்மை மணந்ததாகக் கண்ட கனவைத் தம் தோழியினிடம் கூறும்போது திருமணச் சடங்குகள் அத்தனையும் கூறியவிடத்துத் தமக்குக் கண்ணன் தாலி கட்டியதாகக் கூறவில்லை. 'மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்தென் கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ நான்' என்று மட்டுந்தான் தெரிவிக்கின்றார். கந்தபுராணம், பெரிய புராணம் ஆகிய நூல்களில் குறிப்பிடப்படும் திருமணங்களிலும் மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டியதாகத் தெரியவில்லை. சீவகசிந்தாமணியில் அரசியர் அணிந்திருந்த 'நாணுள்ளிட்டுச் சுடர்வீச நன்மாணிக்க நகுதாலி'யும் திருமணத்தின்போது கட்டப்பட்டதென்று கொள்ளுவதற்குச் சான்றில்லை.[16] எனவே, திருமணத்தின்போது மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டும் வழக்கம் பத்தாம் நூற்றாண்டுக்கு முன்பு ஏற்படவில்லை என்று ஊகிக்க வேண்டியுள்ளது. இவ் வழக்கத்தைத் தெரிவிக்கும் முதல் கல்வெட்டு கி.பி. 958 ஆம் ஆண்டுக்குரியதாகும்.[17]

திருமண நாளன்று இரவே மணமக்கள் மணவறையில் கூட்டப்பெறுவர்.[18] அங்கு மணமகள் கசங்காத புத்தாடையால் தன் உடல் முழுவதும் போர்த்துக் கொண்டிருப்பாள். சங்க காலத்துத் திருமண விழாவைப்பற்றிக் கூறும் அகப்பாட்டுகள் இரண்டிலும் புரோகிதன் ஒருவன் இடையிலிருந்து மணவினைகள் புரிந்ததாகச் செய்திகள் இல. ஆனால், கோவலன் கண்ணகியை மணந்தபோது மாமுது பார்ப்பான் மறைவழி காட்டியதாகவும்

13. சிலப். 1:47
14. புறம். 127.
15. சிலப். 4:50.
16. சீவக. 2697.
17. S.I.I. XIII No. 144
18. அகம். 136

மணமக்கள் தீ வலம் செய்ததாகவும் இளங்கோவடிகள் கூறு கின்றார். சங்க காலம் முடிவுற்றுக் கி.பி. 5 ஆம் நூற்றாண்டுக்குள் திருமணங்களில் பார்ப்பான் புரோகிதம் செய்யும் வழக்கம் மக்க ளிடையே பரவிவிட்டதென இதனால் அறிகின்றோம்.

பெண்ணின் கற்பைப் போற்றி வந்தனர் பழந்தமிழர். கற்புடைய மனைவியைத் தவிர்த்து ஒருவன் பெறும்பேறு வேறு ஒன்றும் இல்லை என்று அவர்கள் கருதினர். 'பெண்ணின் பெருந் தக்க யாவுள—கற்பென்னும் திண்மையுண் டாகப் பெறின்?'[19] என்றும், 'புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை இகழ்வார்முன் ஏறுபோல் பீடு நடை'[20] என்றும் 'தெய்வம் தொழாஅள் கொழு நன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை'[21] என்றும் பெண்ணின் கற்புத் திறத்தைப் பாராட்டுகின்றார். கற்பு என்னும் ஒழுக்கம் ஆண்களுக்கும் உரிய பண்பாகவே அந் நாளில் கருதப் பட்டது. நான் 'இப் போரில் வெற்றி பெறேனாயின் என் மனைவியை விட்டுப் பிரிந்த பழியைப் பெறுவேனாவேன்'[22] என்று சங்ககாலத்துத் தமிழன் ஒருவன் சூளுரைக்கின்றான். எனினும் பழந்தமிழரின் சமுதாயத்தில் ஆண்களின் கற்புநிலையை மன்னனோ, அறமோ, புலவர்களோ வற்புறுத்தியதாகத் தெரிய வில்லை. திருமணம் செய்துகொண்ட ஆடவன் தன் மனைவியை விட்டுப் பிரிந்து பரத்தையரைத் தழுவிக் காலங்கழிப்பதும், அவ னுடைய மனைவியானவள் அவனுடைய பிரிவை நினைந்து வருந்தி நைதலும் வழக்கமாகிவிட்டிருந்தது.

பேகன் என்ற மன்னன் தன் மனைவி கண்ணகியைப் பல நாள் துறந்திருந்தான்.[23] மன்னரைப் போலவே பொதுமக்களும் பரத்தையர் நட்பில் திளைத்து வருவதுண்டு. அருவருக்கத்தக்க இத் தீய ஒழுக்கம் மருதத்திணை மக்களின்பால் மட்டுந்தான் காணப்பட்டது. மதுரையில் எண்ணற்ற பரத்தையர் வாழ்ந் திருந்தனர் என்னும் செய்தியை மருதக் கலி[24] ஒன்று தெரிவிக் கின்றது. அங்கு வாழ்ந்த பரத்தையரை ஊரூர் முழுவதிலுமே குடி யேற்றலாம் என்று அக் கலிப்பாட்டுக் கூறுகின்றது. பரத்தைய ரைத் தொல்காப்பியனார் 'காமக்கிழத்தியர்' என்று குறிப்பிடு கின்றார்.[25] இச் சொல்லுக்கு நச்சினார்க்கினியர் 'காமக்கிழத்திய ராவர் கடனறியும் வாழ்க்கையுடையராகிக் காமக்கிழமை பூண்டு இல்லறம் நிகழ்த்தும் பரத்தையர்' என்று விளக்கந் தருகின்றார்.

19. குறள். 54.
20. குறள். 59.
21. குறள். 55.
22. புறம். 71 : 6.
23. புறம். 143, 147.
24. மருதக்கலி. 2.
25. தொல். பொருள் : கற்பியல், 10.

களவு ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டு காமத்துப் பால் வகுத்த திருவள்ளுவர் கணவன் பரத்தையரை விரும்பித் தன் மனைவியை விட்டுப்பிரிவதும், மனைவியானவள் தன் கணவனுடைய 'அடங்கா ஒழுக்கத்தை'க் கண்டு மனம் புழுங்குவதும் ஆகிய அகத்துறைகட்கு இலக்கணம் கண்டிலர். திருக்குறளில் பரத்தையர் என்னும் சொல்லை அவர் ஆளுவதில்லை. பொருட்பாலில் மட்டும் ஆடவரிடம் காணப்பட்ட சில குற்றங்குறைகளை விலக்குமாறு விதிகள் வகுக்கும்போது 'வரைவின் மகளிர்' அதாவது, 'பொருட்பெண்டிர்' உறவு இழுக்குத் தரும் என்றும், 'பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில் ஏதில் பிணந் தழீஇ யற்று'[26] என்றும், 'பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள் ஆயும் அறிவின வர்'[27] என்றும் கூறுகின்றார். ஆகவே, பரத்தையர் ஒழுக்கம் சங்க காலத்தில் வாழ்ந்த ஆடவரிடம் ஒரு கறையாகவே காணப்படுகின்றது. பரத்தையரிடம் உறவு பூண்டு ஒழுகின தம் கணவனைப் பெண்கள் பொறுமையுடன் வாழ்க்கையில் ஏற்றுக்கொண்டு அவனுடன் புலந்தும், பிறகு அவன் செய்த பிழையை மறந்தும் வாழ்ந்து வந்தனர் என்று அறிகின்றோம்.

கணவன் தன்னைப் பிரிந்து சென்றால் மனைவிக்கு ஊடல் ஏற்படுவதுண்டு. ஒருவர் இவர்கள் வழக்கில் தலையிட்டாலொழிய அவ்வூடல் எளிதில் தீருவதில்லை. தோழி, தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், பாடினி, இளையர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் ஆகியவர்கள் அனைவருக்குமே இவ்வூடலைத் தீர்த்து வைக்கும் உரிமையுண்டு. கணவன் மனைவியரிடையே அடிக்கடி ஊடல் ஏற்பட்டால்தான் வாழ்க்கையில் இன்பம் ஊறும் என்றும், ஆனால் அந்த ஊடலை நீடிக்க விடக்கூடாதென்றும் திருவள்ளுவர் அறிவுறுத்துகின்றார்.[28]

திருமணமான பிறகு கணவன் மேலும் கல்வி கற்பதற்கோ, பொருள் தேடுவதற்கோ தன் மனைவியைவிட்டுப் பிரிய நேருவதுண்டு.[29] கல்விக்காக ஏற்படும் பிரிவு மூன்றாண்டுகட்கு மேல் நீடிக்கக்கூடாது என்பது மரபு. மன்னனுடைய போர்ப் பணியை மேற்கொண்டோ, மன்னனுடைய கடமைகள் வேறு எவற்றையேனும் ஏற்றோ, அன்றிப் பொருள் தேடவோ கணவன் தன் மனைவியைவிட்டுப் பிரிய நேர்ந்தால், அப் பிரிவு ஓராண்

26. குறள், 913.
27. குறள், 914.
28. குறள், 1302.
29. தொல். பொருள். அகத்திணை. 25.

டுக்கு மேல் நீடித்தலாகாது.[30] பரத்தையர் உறவை மேற் கொண்டு தன் மனைவியைப் பிரிந்து சென்றவனும் தன் மனைவிக்குப் பூப்புத் தோன்றி மூன்று நாள் கழித்துப் பன்னி ரண்டு நாள் வரையில் மீண்டும் வந்து தன் மனைவியைக் கூட வேண்டும். ஆனால், கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிந்து நீண்ட நாள் மாதவியுடனே வாழ்ந்திருந்தான். சங்க காலத்திய கட்டுப்பாடு சிலப்பதிகாரக் கதை நிகழ்ந்த காலத்தில் தளர்ந்து விட்டது போலும். மருதத்திணை ஒழுக்கமாக இருந்து வந்த இவ்விழுக்கானது பிற்காலத்திலும் தமிழர் வாழ்வுக்குச் சீர் கேட்டை விளைத்து வந்துள்ளது.

கல்வி கற்கவும், பொருளீட்டவும், மன்னனுக்காகத் தூது செல்லவும் கணவன் பிரியும்போது மனைவி அவனுடன் செல்லும் வழக்கம் இல்லை. பெண்கள் போர்ப் பாசறைகளில் தம் கணவ னுடன் தங்கக்கூடாதென்றும் ஒரு மரபு இருந்து வந்தது.[31]

தான் காதலித்த ஒரு பெண்ணை மணக்க வாய்க்காத ஆண் மகன் சில சமயம் மடலேறுவதுண்டு. பனங்கருக்கினால் குதிரை ஒன்று செய்து அதன்மேல் அவன் ஏறி அமர்ந்து தன் காதலியின் வடிவந்தீட்டிய கொடி ஒன்றைத் தன் கையில் ஏந்திக்கொள்ளு வான். இந்த ஊர்தியைத் தெருத் தெருவாக இழுத்துச் செல்லு வார்கள். பனங்கருக்கினால் அறுப்புண்ட அவன் உடலில் குருதி வடியும். ஊராரும், பெண்ணின் பெற்றோரும் அவன் துயரைக் கண்டு இரக்கங்கொண்டு அப் பெண்ணை அவனுக்கே மணமுடிப் பார்கள். பெண்கள் மடலேறுதலில்லை.[32] ஆனால், பிற்காலத் தவரான திருமங்கையாழ்வார் தலைவி ஒருத்தி பிரிவாற்றாமை மேலீட்டால் 'காதல் கைமிக்கு மடலூரத் துணிந்தாள்' என்று பாடுகின்றார்.[32அ]

பண்டைய தமிழ் மக்கள் அளவற்ற இன்பத்துடன் இல்வாழ்வில் ஈடுபட்டனர். அதற்குச் சான்றுகள் பல சங்க இலக்கியத்தில் கிடைக்கின்றன. தொழில் புரிவதை ஆடவர் தம் உயிராக மதித்தனர். மகளிர் தம் கணவரைத் தம் உயிருக்கு நேராகக் கருதினர். சங்க காலப் புலவர்கள் இல்வாழ்க்கையைப் பற்றித் தீட்டியுள்ள பல அழகிய சொல்லோவியங்கள் சங்க

30. தொல். பொருள். கற்பியல், 49.
31. தொல். பொருள். கற்பியல், 34.
32. தொல். பொருள். அகத்திணை. 35; குறள், 1137.
32அ. திவ்யப், சிறிய திருமடல், பெரிய திருமடல்,

இலக்கியத்தில் மிளிர்கின்றன. கூடலூர் கிழார் தீட்டியளித்துள்ள ஓவியக் காட்சியிது: புதிதாக மணஞ்செய்துகொண்டு தன் கணவன் வீடு சென்ற ஒரு பெண், தன் தளிர் விரல்கள் சிவக்குமாறு, புளித்த கட்டித்தயிரைப் பிசைந்து, கண்ணில் புகை கரிப்பதையும் பாராட்டாமல், அதற்குத் தாளிதம் செய்து, துழாவித் துழாவி அதனை இனிய குழம்பாக்கித் தன் கணவனுக்குப் படைக்கின்றாள். தாய் வீட்டில் அடுதொழில் பயிலாத சிறு பெண்ணாதலால் தயிர் தோய்ந்த விரல்களைக் கழுவத் தோன்றாதவளாய்த் தன் புடவையிலேயே துடைத்துக் கொள்ளுகின்றாள். உணவு மிகவும் சுவையாக உள்ளதே என்று கணவன் அவளைப் பாராட்டிப் புகழ்கின்றான்.[33] அவள் முகமும் மலர்ந்தது. மற்றொரு காட்சி: இளம்பெண் ஒருத்தி தன் காதலனுடன் அவனுடைய ஊருக்குச் சென்று தங்கிவிட்டுமீண்டும் தன் தாய் வீட்டுக்கு வந்தாள். புகுந்த ஊரில் குடிநீர் இனிமையாக இராது. ஆகையால் அதை அப்பெண் எப்படி விரும்பிக் குடித்தாள் என்று அவள் தோழி வினவுகின்றாள். அதற்கு அப் பெண், 'தோழி! நீ கூறிய படி என் தலைவரது ஊர்த் தண்ணீர் பிறர் குடிக்கத் தகாதது தான். அங்கு ஒரு சிறு குட்டையில் தழைகள் உதிர்ந்து ஊறிக் கிடக்கின்றன. விலங்குகள் அத் தண்ணீரைக் குடிக்கப்போய் அதைக் கலக்கிவிட்டன. எனினும், அஃது என்னவோ எனக்கு இனிமையாகவே சுவைக்கின்றது. ஏன், இங்கு நம் தோட்டத்தின் மரங்களில் பிழியும் தேனையும் பாலையும் கலந்து உண்ணும் போது காணும் சுவையைவிட அக் குட்டைத் தண்ணீரே எனக்கு மிகவும் இனிமையாகக் சுவைக்கின்றது' என்று புக்கவீட்டில் தான் காணும் சிறப்பை அவள் எடுத்துப் பெருமை பாராட்டிக் கொள்ளுகின்றாள்.[34] மற்றுமொரு காட்சி: ஒரு பெண்ணும் அவளுடைய காதலனும் திருமணம் முடிந்து அவன் ஊரில் வாழ்கின்றார்கள். பெண்ணின் பெற்றோர்கள் நிறைந்த செல்வம் வாய்ந்தவர்கள். அவளுடைய கணவன் வீடோ வறண்ட குடி. அவ் வீட்டில் தன் மகள் அவள் கணவனுடன் இன்ப வாழ்க்கை வாழ்கின்றாள் எனக் கேட்ட தாய் 'பாலையும் தேனையும் கலந்த சோற்றைப் பொற்கலம் ஒன்றில் பெய்து செவிலித்தாய் அதை ஒரு கையில் ஏந்திக் கொண்டு மற்றொரு கையில் பூச்சுற்றிய மெல்லிய கோலைக் காட்டி மருட்டி இச் சோற்றை உண்ணுவாய் என்று வேண்டவும், யான் உண்ணேன் என்று பந்தலின்கீழ் ஓடி ஒளிந்து விளையாட்டுக் காட்டுவாளே என் மகள். அத்தகைய குறும்புக்காரப் பெண்

33. குறுந். 167.
34. ஐங்குறு. 203,

அறிவும் ஒழுக்கமும் யாண்டு உணர்ந்தனள்? கொண்ட கொழுநன் குடி வறுமையுற்றதாகவும், தன்னைப் பெற்ற தன் தந்தை வீட்டு உணவை நினையாது இப்போது ஒரு பொழுதுவிட்டு ஒரு பொழுது உண்கிறாள். என்னே அவள் பண்பாடு! என்று வியக்கின்றாள்.[35]

ஒரு பெண்ணிடம் அன்று காணப்பட்டதாகப் புலவர்கள் கற்பிக்கும் நற்குணம் அக் காலத்து மகளிரின் சிறந்த பண் பாடுகளை எடுத்துக்காட்டுகின்றது.

பெண்கள் பூப்புற்றிருக்கும் நாள்களில் வீட்டுப்பாண்டங் களைத் தொடாமல் ஒதுங்கியே இருப்பார்கள். இவர்கள் 'கலந் தொடா மகளிர்' எனப்படுவர்.

இல்லறத்தில் நின்று இல்வாழ்க்கையின் கடமைகளையாற்றும் உரிமை கணவனுடன் சேர்ந்து வாழும் பெண்களுக்குத்தாம் உண்டு. தன் கணவன் பொருளீட்டுவதற்காகவோ, அரசனுடைய கடமைகளை மேற்கொண்டோ தன்னைப் பிரிந்திருக்கும்போதும், அவன் பரத்தையுடன் கூடி வாழும்போதும் கற்புடைய பெண் ஒருத்தி, 'அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும், துற வோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்து எதிர் கோடலும்' ஆகிய இல்லற உரிமைகளை இழந்து நிற்பாள்.[36] அப் போதெல்லாம் அவள் தன்னை ஒப்பனை செய்துகொள்ளும் வழக்கமும் இல்லை.

இல்லற வாழ்க்கைக்கு மிகவும் சிறப்பாக அமைவது நன் மக்கட் பேறு என்பது பண்டைய தமிழரின் கொள்கையாகும். மக்கட் செல்வத்தைப் பாராட்டும் நூல்கள் பல உண்டு. திருக் குறளில், 'பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த மக்கட்பே றல்ல பிற'[37] என்று மக்கட்பேறு சிறப்பிக்கப்படுகின்றது. பலரோடு உண்ணும் பெருஞ்செல்வராக இருப்பினும் குறுகுறு வென நடந்து, உணவைச் சிறு கையால் பிசைந்து மேலும் கீழும் சிதறிப் பெற்றோர் அறிவை இன்பத்தால் மயக்கும் மக்களைப் பெறாதார்க்கு உலகில் பயன்படும் பொருள்ஒன்றும்இல்லை என்று புறப்பாட்டு ஒன்று[38] மக்கட்பேற்று இன்பத்தைப் பரவுகின்றது. குழந்தையைப் பெறுவது தன் கடன் என்றும், அக் குழந்தைக்குக் கல்வி பயிற்றியும், அறிஞர்களின் அவையில் முன்னணியில் அவன்

35. நற்றி. 110.
36. சிலப். 16: 71-73.
37. குறள், 61
38. புறம். 188

நிறுத்தப் பெறும் தகுதியைக் கொடுத்தும், அவனுக்குச் சான்றோன் என்ற பாராட்டுக் கிடைக்கச் செய்வதும் தந்தையின் கடன் என்றும் பெண்கள் எண்ணினர்.[39]

கணவனை இழந்த பெண் அக் காலத்தில் உடன்கட்டை ஏறும் பழக்கம் காணப்பட்டது.[40] கைம்மை நோன்பு நோற்கும் வழக்கமும் பெண்கள் மேற்கொண்டிருந்தனர். கைம்பெண்கள் நெய்யுண்பதில்லை; தண்ணீர்ச் சோற்றைப் பிழிந்து எடுத்துக் கொண்டு, அதனுடன், அரைத்த எள்ளையும் புளியையுங்கூட்டி வெந்த வேளைக்கீரையுடன் அவர்கள் உண்ணுவர். கைம்பெண்கள் பாய்மேல் படுப்பதில்லை; வெறுந்தரையின்மேல்தான் படுத்துத் தூங்கினர். இவர்கள் தலையை மழித்துக்கொள்ளும் வழக்கமும் உண்டு. தமிழ்நாட்டில் குடியேறிய ஆரியரும் இக் கைம்மை நோன்பை மேற்கொண்டனர். இப்போது பெரும்பாலும் கைம்மைநோன்பு நோற்கும் வழக்கம் பிராமணக் கைம்பெண்களிடமே காணப்படுகின்றது. வேறு குலத்தைச் சார்ந்தவர்களும் அண்மைக் காலம் வரையில் தென்னார்க்காடு, தஞ்சாவூர் போன்ற சில மாவட்டங்களில் தலைமழித்து முக்காடிட்டுக் கைம்மைக் கோலங் கொண்டதுண்டு. இப்போது பிராமணக் குலத்துக் கைம்பெண்களும் தலைமழித்துக் கொள்ளுவதையும், வெள்ளாடை யணிவதையும், முக்காடிட்டுக் கொள்ளுவதையும் தவிர்த்து வருகின்றனர். மங்கல நாணும், நெற்றிப் பொட்டும், மஞ்சள் பூச்சும், மலர் சூட்டுந் தவிர, ஏனைய ஒப்பனைகள் அனைத்தையும் அவர்கள் கைவிடாமல் ஏற்றுக்கொண்டிருப்பதை இந் நாளில் காணலாம்.

பழந்தமிழகத்தில் இல்லத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் இன்னின்னவென வகுக்கப்பட்டிருந்தன.[41] 'தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல்' ஆகியவர்களுக்கும் ஒருவன் தன் வருமானத்தைப் பகிர்ந்து கொடுக்கவேண்டும். ஒரு பகுதியைக் தனக்கும் தன் குடும்பத்துக்கும் நிறுத்திக்கொணடு, மற்றொரு பகுதியை அரசாங்கக் கடமைகளுக்குச் செலுத்திவிடவேண்டும். தம் வீட்டில் தங்கி, அதாவது பிறரை நாடிப் பிழைக்காமல், தம் வருமானத்தைப் பிரித்தளித்து வாழ்வதே இன்ப வாழ்க்கையாகும் என்பது தமிழரின் மரபாகும்.[42] ஆடவரின் சிறந்த கடமை, தொழில் புரிந்து பொருள் ஈட்டுவதாம். தன் மனைவியை விட்டுப் பிரிந்து சென்றிருந்தும் பொருள் ஈட்டுவதைச் சீரிய கடமை

39. புறம், 312.
40. புறம். 246.
41. குறள், 43.
42. குறள். 1107.

யாகக் கொண்டிருந்தனர். பொருளைக் கொண்டுதான் ஏனைய அறங்களைச் செய்ய முடியும் என்று அவர்கள் உறுதியாக எண்ணினர்.[43] இரு யானைகள் ஒன்றோடொன்று மோதிக் கொண்டு போரிடுவதை ஒரு குன்றின் மேலேறி அச்சமின்றிக் காணலாம் அன்றோ? அதைப்போலக் கையில் பொருளை வைத்துக் கொண்டு ஒரு தொழிலைப் புரிபவன் எந்த இடையூற்றையும் பொருட்படுத்த வேண்டியதில்லை.

இல்லற வாழ்வில் அமர்ந்து வருவிருந்து ஓம்புதல் பண்டைத் தமிழரின் தனிப்பட்ட பண்பாடாகும்.[44] அவர்கள் அமிழ்தம் கிடைத்தாலும் அதைப் பகிர்ந்து உண்பர்; மதுவையும் விருந்தினருடன் கூடி உவந்து அருந்துவர்.[45]

## உணவு

அரிசிச் சோற்றையே பண்டைய தமிழர் தம் சிறப்பு உணவாகக் கொண்டனர். அவர்கள் புழுங்கலரிசியையே உண்பது வழக்கம்.[46] அரிசியை உரலிலிட்டு அதை வெளுக்கத் தீட்டியே உலையிலிடுவார்கள்.[47] அவர்கள் வரகையும் சாமையையும் சமைத்து உண்பதுண்டு.[48] தமிழகத்தில் பல்வகையான நெல் விளைந்தது. சோற்றோடு காய்கறி வகைகளையும் அட்டு உண்பர். காய்கறிக்குக் கடுகு தாளிப்பார்கள்.[49] மிளகும் புளியும் உப்பும் உணவில் சேரும்.[50] மாங்கனியைப் பிழிந்து சாறு எடுத்து, அதைப் புளிக்கவைத்து அதைப் புளியாகப் பயன்படுத்துவது முண்டு. இவையன்றிக் களாப்பழப் புளி, துடரிப்புளி, நாவற்பழப்புளி ஆகியவும் பயன்படுவதுண்டு.[51] கொம்மட்டி மாதுளங்காயை அரிந்து,அதனுடன் மிளகின் பொடியைக் கலந்து, கறிவேப்பிலை கூட்டிப் பசு வெண்ணெயில் அதைப் பொரிப்பார்கள்.[52] வடுமாங்காய் ஊறுகாய் அக் காலத்திலேயே உண்டு.[53] பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, சேம்பிலைக்கறி, வள்ளிக்கிழங்கு, சுட்ட பனங்கிழங்கு ஆகியவற்றையும் பண்டைத் தமிழர் உண்டனர்.

சோற்றுக்கான அரிசி முல்லைப்பூப்போல வெண்மையாகவும் மென்மையாகவும் இருக்கும். ஓர் அரிசியிலேனும் இடைவரிகளோ

43. அகம். 33.
44. புறம். 182.
45. புறம். 234, 235
46. சிறுபாண். 193-4
47. அகம். 394; புறம். 399
48. புறம். 143.
49. புறம். 127, 250
50. குறுந். 167
51. புறம். 239; அகம். 37
52. பெரும்பாண். 305-310.
53. பெரும்பாண். 108, 110.

முரிவோ காணப்படாது. சோறு ஒன்றோடொன்று இழையாமல் பதமாக வெந்திருக்கும். பழஞ்சோற்றையும் மக்கள் உண்ப துண்டு.[54] அரிசி, கொள்ளுப்பருப்பு, பயற்றம் பருப்பு ஆகிய வற்றைப் பாலில் கூட்டிக் கஞ்சி காய்ச்சிக் குடிப்பார்கள்.[55] புளிக்க வைத்த மாவைக் கரைத்துப் புளிங்கூழ் ஆக்குவார்கள்.[56] பல விதமான பணியாரங்கள் செய்யப்பட்டன. வேடர்கள் விரும்பி யுண்ட உணவு புளிச்சோறு.[57]

பழந்தமிழர் புளியங்காய், நெல்லிக்காய் ஆகியவற்றை ஊறவைத்த காடியைப் பெரிதும் விரும்பினர்.[58] பாலைத் தோய்த்து வெண்ணெய் திரட்டும் வழக்கம் அந் நாளிலேயே இருந்து வந்தது. வெண்ணெயைப் பதமாகக் காய்ச்சி நெய் எடுத்துச் சோற்றில் வார்த்து உண்பார்கள்.

பண்டைத் தமிழகத்தில் ஊன் உண்ணும் வழக்கம் பரவி யிருந்தது.[59] பார்ப்பனரும் ஊன் உண்டதற்குச் சான்றுகள் உண்டு.[60] வெள்ளாடு, செம்மறியாடு, மான், முயல், ஆமா, மீன் வகைகள், நண்டு, ஈயல், கோழி, காட்டுக்கோழி, காடை, உடும்பு முதலியவற்றின் இறைச்சியைத் தனியாகவோ, பாலும் அரிசியுங் கூட்டியோ சமைப்பார்கள். ஊன் சோறு என்பது இப்போது புலவு என்று வழங்குகிறது. அது பழங்காலத் தமிழரின் உணவாக இருந்து பிறகு இடையில் சில காலம் வழக்கற்றுப் போயிற்று. முஸ்லிம்கள் நாட்டில் குடியமர்ந்த பிறகு அது மீண்டும் வழக்கத் துக்கு வந்துள்ளது. ஊனை நெய்யில் பொரிப்பதுண்டு.[61] புளித்த மோரில் ஈயலை ஊறப்போட்டுப் புளிங்கறி சமைப்பதுண்டு.[62] நெல்லை இடித்து ஆண்பன்றிக்குத் தீனியாகக் கொடுத்து அதைக் கொழுக்கவைப்பார்கள். அதைப் பெண்பன்றியுடன் சேரவிடாமல் தனியாகக் குழிகளில் விட்டு வளர்த்துப் பிறகு அதைக் கொன்று அதன் ஊனைச் சமைத்துத் தின்பர்.[63] இக் காலத்து மக்களைப் போலவே பழந்தமிழரும் ஊனை உப்புக்கண்டம் போடுவ துண்டு.[64] அவர்கள் ஊன் துண்டங்களை இரும்புக் கம்பிகளில் கோத்து நெருப்பில் வாட்டி யுண்பார்கள்.[65]

கள்ளுண்ணும் வழக்கம் பழந்தமிழகத்தில் மிகவும் விரிவாகக் காணப்பட்டது. மன்னர், பாணர், புலவர், கூத்தர், பொருநர்,

54. புறம். 399.
55. அகம். 37.
56. புறம். 399.
57. பொருநர். 107-8.
58. பெரும்பாண். 56-7.
59. புறம். 14.
60. புறம். 111.
61. குறுந். 39.
62. புறம். 119.
63. பெரும்பாண். 34-35.
64. பெரும்பாண். 100.
65. பொருநர். 105.

விறலியர் அனைவருமே மதுவுண்டு களித்தனர். இயற்கையாகக் கிடைத்த பனங்கள், தென்னங்கள், ஈச்சங்கள் ஆகியவற்றையும், அரிசி, புளித்த சோற்றுக்காடி முதலியவற்றைக் காய்ச்சி இறக்கிய மதுவையும், யவனர்கள் கப்பலில் கொண்டுவந்த தேறலையும் அவர்கள் விருப்பத்துடன் குடித்தனர்.[66] தேறலின் சுவையையும், அது கொடுக்கும் வெறியையும் தூண்டுவதற்காக மது வகைகளைக் கண்ணாடிக் குப்பிகளிலும், மூங்கிற் குழாய்களிலும் நிரப்பி, நெடுநாள் மண்ணில் புதைத்து வைப்பர்.[67] அத்தகைய மது வகைகளின் வெறி மிகவும் கடுமையாக இருக்கும். அக் கடுமையைப் பாம்பின் கடிக்கும், தேள் கொட்டுக்கும்[68], புலவர்கள் ஒப்பிட்டுள்ளனர். கள்ளுக்கு இன்சுவையும் நறுமணமும் ஊட்டுவதுண்டு.[69] கள்ளுண்டவர்கள் புளிச் சுவையை விரும்பிக் களாப் பழம், துடரிப்பழம் (ஒருவகை இலந்தைக் கனி—(Zizy Phus Rugosa), நாவற்பழம் முதலிய பழங்களைப் பறித்துத் தின்பர்.[70] கள்ளைப் பனைமரத்துப் பன்னாடையால் வடிகட்டுவர்.[71] யவனர் இரட்டைப்பிடிச் சாடிகளில் மரக்கலவழிக் கொணர்ந்த மதுவைத் தமிழர் உண்டுவந்ததற்கான சான்றுகள் அரிக்கமேட்டுப் புதை குழிகளில் கிடைத்துள்ளன. சங்ககாலத்தின் இறுதியில் தமிழ் மக்களிடையே குடிப்பழக்கம் அளவுக்கு மீறிக் காணப்பட்டது. காவிரிப்பூம்பட்டினம், மதுரை போன்ற பெரிய நகரங்களில் வாழ்ந்திருந்த குடிமக்கள் இத் தீய பழக்கத்தில் மூழ்கிக் கிடந்தனர். வரையற்ற சிற்றின்பமும், கட்குடியும் ஒரு நாட்டின் மக்களை இழிந்த நிலைக்கு ஈர்த்துவிடும் என்பது வரலாறு காட்டும் உண்மையாகும். தமிழரிடையே தம் காலத்திலேயே இத் தீய பழக்கம் வேரூன்றி வளர்ந்துவிட்டதைக் கண்டு திருவள்ளுவர் பெரிதும் கவன்றார் போலும். குடிப்பழக்கத்தை வன்மையாகக் கடிந்து இயற்றிய குறட்பாக்களைத் திருக்குறளில் காணலாம். அவர் கள்ளை நஞ்சு என்றே கூறுகின்றார். ஒழுக்கத்துக்கு முரணான சிற்றின்ப விழைவும், கட்குடியும் எத்துணைத் தீய பழக்கங்கள் என்பதைக் காட்டவும், இவ் விரண்டும் தம் காலத்துத் தமிழ் மக்களைப் பெரிதும் ஈர்த்துவிட்டதைக் கடியவுமே வள்ளுவர் 'வரைவின் மகளிர்', 'கள்ளுண்ணாமை' என்னும் ஈரதிகாரங்களைத் திருக்குறளில் அடுத்தடுத்து வைத்திருக்கின்றார்.

**உடை**

பண்டைத் தமிழகத்தில் குறிஞ்சி, முல்லை நிலங்களில் வாழ்ந்த மக்கள் பூவையும், தழையையும் கோத்து ஆடையாக

66. புறம். 56 : 18; மலைபடு. 522.
67. புறம். 392 : 16.; அகம். 348.
68. சிறுபாண், 237.
69. பொருநர். 157.
70. புறம். 170.
71. அகம். 216.

அணிவது வழக்கம்.[72] அவர்கள் கம்பளி ஆடைகளையும் அணிவதுண்டு. நகர மக்கள் பஞ்சாலும், பட்டாலும், ஒருவகை மலை யெலி மயிராலும், வேறு சிறு விலங்குகளின் மயிராலும் ஆடைகள் நெய்தார்கள்.[73] அடியார்க்கு நல்லார் தம் சிலப்பதிகார உரையில் முப்பத்தாறு ஆடை வகைகளைக் குறிப்பிடுகின்றார்.[74] துணிகள் மிகமிக நுண்ணிய நூல்களினால் நெய்யப்பட்டன. அவற்றுள் தனித்தனி இழைகள் கண்ணுக்குப் புலப்படா.[75] புகையைப் போலவும், பாலாவியைப்போலவும், பாம்பின் தோலைப் போலவும், மூங்கிலின் உரியைப் போலவும் துணிகள் நெய்யப் பெற்றன.[76] ஆடைகட்குப் பூவேலைகள் செய்வதுண்டு.[77] பட்டுப் புடவைகளின் முன்தானைகளில் குஞ்சம் கட்டப்பட்டது.[78] சில பூந்துகில் வகைகள் மிகவும் வழுவழுப்பாக இருந்த காரணத்தால் வழுக்கி வழுக்கிச் சரியுமாம்.[79] துணிகளுக்கு நறுமணம் ஊட்டுவதுண்டு.[80]

உயர்குடிப் பிறந்த ஆண்மக்கள் இடையில் ஒரு வேட்டியும், மேலாடையும் அணிவர்.[81] சிலர் சட்டை யணிவதுமுண்டு.[82] அரசரும், அவர்களுடைய பணியாளரும் மட்டுமே சட்டை அணிவர்; இச் சட்டைக்குக் 'கஞ்சுகம்' என்றுபெயர்.[83] வாழ்க்கையில் உயர்நிலையில் நின்றவர்கள் மிகக் குறைந்த உடையையே உடுத்தனர். பணியாளர்கள்தாம் வேட்டியும் சட்டையும் அணிந்தனர்.[84] சிலர் அரையில் மட்டும் ஆடை யணிவதுண்டு. ஊர் ஊராகச் சென்று பண்டங்களை விற்றுவந்த வணிகர்கள் காலில் செருப்பு அணிந்திருந்தனர்.

பெண்கள் இடையில் புடவையை அணிந்திருந்தனர். அவர்கள் தம் மார்பகத்தை ஆடையால் மறைக்கும் வழக்கம் அக் காலத்தில் இல்லை; சந்தனத்தால் தொய்யில் எழுதியும் மலர்களை அணிந்துமே மார்பை மறைப்பர்.[85] பெண்மக்கள் இடையில் மேகலை யணிந்து அதன்மேல் பூந்துகில் சுற்றிக்

72. நற்றி. 320. 359; புறம்.61, 116. 248, 340, 341; முல்லைக்கலி, 2 : 5-7.
73. சிலப். 14 : 205-7; சீவக. 1898, 2686.
74. சிலப். 14 : 106-12.
75. பெரும்பாண். 236.
76. புறம். 337, 338: 9-11. பொருநர். 82-83; சிறுபாண். 235-236.
77. புறம். 274.
78. பொருநர். 155.
79. மருதக்கலி, 20.
80. சிலப், 14: 205-7.
81. புறம். 189; மதுரைக். 435.
82. சிலப். 16: 106-8; முல்லைப். 66.
83. சிலப். 5:(157 உரை) சிலப். 26: 166, சிலப். 28:80.
84. பெரும்பாண். 75.
85. முல்லைக்கலி, 11: 17

கொள்ளுவார்கள்;[86] பாடினிகள் தம் உடம்பின் பெரும் பகுதியை யும் வெளியில் காட்டிக்கொண்டனர். சில சமயம் பெண்டிர் துணியால் தம்மைப் போர்த்துக் கொள்ளுவதுமுண்டு.[87] புதுமணப் பெண்கள் புத்தாடையால் தம் உடலையும் முகத்தை யும் மறைத்துக் கொள்ளுவர்.[88] பூத்தொழில் இயற்றப்பட்ட செம்பட்டாடைகள் கடைகளில் விற்பனையாயின. பூப்போட்ட வெண்ணிறப் புடவைகளையும் பெண்கள் அணிந்தனர்.[89] வெண்ணிறப் புடவைகளை அணிந்து பெண்கள் பந்தாடுவது வழக்கம். செக்கர்வானைப்போன்ற செவ்வண்ண மூட்டிய, பூ வேலை செய்யப்பட்ட, மிகமிக நுண்ணிய புடவைகள் மதுரை யிலே அங்காடிகளில் விற்பனையாயின.[90] உறையூரில் மிகமிக மென்மையான மஸ்லீன் துணிகள் நெய்யப்பட்டு வந்ததாகப் பெரிப்புளுஸ் கூறுகின்றது.

**அணிகலன்கள்**

பண்டைத் தமிழகத்துப் பெண்கள் ஆடைகளினால் முழு வதும் மறைக்கப் பெறாத தம் உடலை அணிகலன் பூண்டு மறைத்தனர். மகளிர் பல்வேறு அணிகலன்களினால் தம்மை ஒப்பனை செய்துகொண்டனர். யவனர் ஏற்றிவந்து இறக்கிய பொன்னும், மன்னர் பகைவரிடமிருந்து கவர்ந்து கொணர்ந்த பொன்னும், நாட்டிலேயே மண்ணைத் தோண்டியும் அரித்தும் எடுத்த பொன்னும் தமிழகத்தில் எங்கும் மலிந்து கிடந்தன. முத்தும், பவழமும், இதர மணிவகைகளும் இழைத்துப் பலவகை யான அணிகள் செய்யப்பட்டன. கைதேர்ந்த கம்மியர்கள் இவ்வணிகளைச் செய்தனர்.[91]

மகளிர் அணிந்த அணிகலன்கள் சிலவற்றைச் சிலப்பதிகாரம் தெரிவிக்கின்றது. கால்விரல் மோதிரம், பரியகம், நூபுரம், அரியகம், பாடகம், சதங்கை, குறங்குசெறி, அரையில் அணியும் முத்துவடம், முப்பத்திரண்டு வடத்தாலான முத்துமேகலை, மாணிக்கமும் முத்தும் இழைத்த தோள்வளையல்கள், மாணிக்க மும் வயிரமும் அழுத்திய சூடகம், செம்பொன்வளை, நவமணி வளை, சங்கவளை, பவழவளை, வாளைமீனைப் போன்று இயற்றப்பட்ட மாணிக்க மோதிரம் ஆகியவை அவை. இவை யன்றி, மோசை என்னும் மரகதக் கடைசெறி,[92] கழுத்திலணி

86. சிலப். 6:88
87. சிலப். 13: 172.
88. அகம். 86.
89. பரிபா. 11: 79-84.
90. மதுரைக். 431-3, 513.
91. சிலப். 16: 105-6.
92. நற்றி. 188: 4

யும் வீரச் சங்கிலி, நேர்ச் சங்கிலி, பொன் ஞாண்,[93] அரிநெல் லிக்காய் மணிமாலை, முகப்பில் கட்டின இந்திரநீலத்திடையே வயிரம் இழைத்த குதம்பை என்னும் காதணி, சீதேவியார், வலம்புரிச் சங்கு, பூரப்பாளை, தென்பல்லி, வடபல்லி ஆகிய அணிகளையும் பெண்கள் அணிவதுண்டு. [94] பெண்கள் இடையில் அணிந்த பட்டிகையான மேகலை, காஞ்சி, கலாபம், பருமம், விரிசிகை என ஐவகைப்பட்டிருந்தது. பெண்மக்கள் தம் காது களைத் தொங்கத் தொங்க வளர்க்கும்போது அணிந்து கொள்ளும் காதணிக்குக் குதம்பை என்றும், வளர்ந்த காதில் அணியும் காதணிக்குக் கடிப்பிணை என்றும் பெயர்.

கைவளைகளில் பலவகையான பூத்தொழில் குயிற்றப் பட்டன. [95] அவற்றுள் சிலவகை முத்தாலிழைக்கப்பட்டன. பெண்கள் கால்விரல்களில் மோதிரம் அணியும் பழக்கம் பண்டைய காலத்தும் உண்டு.[96]

குழந்தை அணிகலன்களின் வகைக்குக் கணக்கே இல்லை எனலாம். குழந்தைகளின் நெற்றியில் சுட்டியும் பிறையும், மூவடம் கோத்த பொன் சங்கிலியும் பூட்டுவார்கள்.[97] கழுத்தில் ஐம்படைத் தாலியும், புலிப்பல் தாலியும்[98] அணி செய்தன. குழந்தைகளின் விரல்களில் சுறாமீனைப் போன்றும் இடபத்தைப் போன்றும் இலச்சினைகள் பொருத்தப்பட்ட மோதிரங்கள் பூட்டி னார்கள்.[99] மணிகள் உள்ளிட்ட சதங்கைகள், பொன் இரட்டைச் சரிகள் கால்களிலும், மணியும் பவழமும் கோத்த அரைஞாண் இடையிலும் அணிவிக்கப்பட்டன.[100] சதங்கைகளின் பூட்டு வாய்கள் தேரையின் வாய்போல் அமைக்கப்பட்டன.[101] பெண் கள் அணிந்த சிலம்புகளுள் முத்தையும் மாணிக்கத்தையும் பரல் களாக இடுவது வழக்கம்.[102] நெல்லைத் தின்னவந்த கோழி களின்மேல் பெண்கள் தம் குழைகளைக் கழற்றி எறிவார்களாம். அக்காலத்தில் குழைகள் அவ்வளவு மலிந்திருந்தன போலும்.[103] ஆண்மக்கள் மதாணி,[104] முத்துமாலை,[105] வெள்ளிக்கம்பியில்[106] கோத்த பொற்றாமரை மலர்கள், கைவளைகள்[107] ஆகிய அணி கலன்களை அணிந்திருந்தனர்.

93. அகம். 363.
94. சிலப். 6: 83-108.
95. குறிஞ்சிக்கலி, 23.
96. பரிபா. 12: 23-24.
97. மணி. 7: 56; புறம். 77, 374; அகம். 54; கலித். 80.
98. குறுந். 161.
99. கலித். 84.
100. கலித். 85.
101. கலித். 86.
102. சிலப். 20: 67-69.
103. பட்டினப். 20-25.
104. ஐங்குறு. 353.
105. கலித். 79.
106. புறம். 11.
107. கலித். 84.

தமிழகத்துச் செய்யப்பட்ட அணிகலன்கள் அயல்நாடுகளுக்கும் ஏற்றுமதியாயின. கொடுமணம் என்ற ஊரில் செய்யப்பட்ட பொன்னணிகள் மக்களால் பெரிதும் பாராட்டப் பெற்றன.[108]

தலைக்கோலம் செய்துகொள்ளுவதில் பழந்தமிழ்ப் பெண்கள் அளவுகடந்த விருப்பத்தைக் காட்டி வந்தனர். அக் காலத்தில் ஒப்பனைக் கலை வியப்பூட்டும் அளவுக்கு ஓங்கி வளர்ந்திருந்தது. கறுத்து, நீண்டு, நெளிந்த கூந்தலையே மிகவும் விரும்பி வளர்த்தனர்;[109] கொண்டை, குழல், பனிச்சை, சுருள், முடி என ஐந்து வகையாகத் தலைக்கோலம் செய்துகொண்டனர்; கூந்தலில் பல வகையான மலர்களைச் சூட்டிக்கொள்ளுவர். பெண்கள் ஒப்பனைக்கு நூறுவகைப் பூக்கள் பயன்பட்டன.[110] மகரவாய்,[111] வகிர்[112] என்ற தலையணிகளையும் அவர்கள் அணிவதுண்டு. மாணிக்கமாலையுடன் வெண்ணூலில் கோத்த மலர்களையும் பெண்மக்கள் அணிவர். மலர் சூடாது வெறுங்கூந்தல் முடிப்பதைப் பெண்கள் இழிவாகக் கருதினர்.[113]

மகளிர் தம் கூந்தலுக்கு அகிற்புகை யூட்டுவர்.[114] கூந்தலைக் கைவிரல்களால் கோதி உலர்த்துவார்கள்.[115] அதை இரு தொகுதியாக வகிர்ந்து பின்னிவிடுவார்கள்.[116] கண்ணாடியைத் துடைத்துப் பெண்கள் அதில் தம் ஒப்பனையைக் கண்ணுற்று மகிழ்வார்கள்.[117] இக் காலத்தைப் போன்றே பழங்காலத்திலும் தமிழ்ப் பெண்கள் தம் கூந்தலுக்குக் களிமண் தேய்த்து முழுகும் வழக்கம் இருந்து வந்தது.[118]

பெண்கள் கண்ணுக்கு மைதீட்டிக் கொள்ளுவர். மைதீட்டும் குச்சிக்குக் 'கோல்' என்று பெயர். எப்போதும் மைதீட்டப் பெற்றிருந்தனவாதலின் பெண்கள் கண்ணை 'உண்கண்' என்றே கூறுவதுண்டு.[119] மகளிர் நறுமணப் பாக்கும் வெற்றிலையும் போட்டுக்கொள்ளுவர்.[120]

ஆடவரும் தலைமயிர் வளர்த்திருந்தனர். அதைச் சுருட்டிப் பின்புறம் முடித்திருந்தனர். நெற்றிக்குமேல் குடுமி சிறிது களையப்

108. பதிற். 67: 1, 74: 5-6.
109. புறம், 147.
110. குறிஞ்சிப். 61-67.
111. கலித். 54.
112. கலித். 55.
113. ஐங்குறு. 290; கலித். 28; புறம்.54; 302.
114. புறம். 146.
115. குறிஞ்சிப். 109.
116. குறுந். 52.
117. பரிபா. 12, 20.
118. குறுந். 113.
119. குறுந். 38, 167.
120. பரிபா. 12. 22.

பட்டிருக்கும்.[121] பார்ப்பனச் சிறுவரும் குடுமி வைத்துக் கொள்ளுவர்.[122] ஆண்மக்கள் தலையில் பூச்சூடிக் கொள்ளுவது வழக்கம். தலையில் சூடும் பூமாலைக்குக் கண்ணி என்று பெயர்.[123] ஆண்கள் தலையில் முக்காடிட்டுக் கொள்ளுவதும் உண்டு.[124]

## உறையுள்

குறிஞ்சி நிலங்களிலும், முல்லை நிலங்களிலும் வாழ்ந்த மக்கள் சிறுசிறு குடிசைகளில் குடியிருந்தார்கள். இக் குடிசைகளுக்குக் குரம்பை என்று பெயர்.[125] நெய்தல் நிலத்துப் பரதவர்களின் வீடுகள் புல்லாலும் வைக்கோலாலும் வேயப்பட்டன.[126] அவற்றின் நுழைவாயில்கள் மிகவும் குறுகலானவை. வரகு வைக்கோல், செந்நெல் கதிர், கரும்பு, கூவையிலை ஆகியவற்றாலும் குடிசைகள் வேயப்பட்டன.[127] மலையடிவாரத்தில் வாழ்ந்த மக்கள் சிலருடைய வீடுகள் மிக அழகாகத் தீட்டிய வண்ண ஓவியம் போலக் காட்சியளித்தன.[128]

நகரங்களை மிகப் பெரிய மாடி வீடுகள் அணி செய்தன. இவ் வீடுகட்கு வேயா மாடங்கள் என்றும் பெயர் உண்டு.[129] இவை சுட்ட செங்கல்லால் எழுப்பப்பட்டவை. இவ் வீடுகளில் மண்டபம், கூடம், தாயக்கட்டு, அடுக்களை என்று தனித்தனிப் பகுதிகள் அமைக்கப்பட்டிருந்தன.[130] வீடுகளில் சாளரங்கள் தெற்கு நோக்கி அமைக்கப்பட்டிருக்கும். அரண்மனைகளின் கூரைகட்குப் பொற்றகடு வேய்ந்திருந்தார்கள்.[131] இவ் வரண் மனையின் வாயில்கள் மிகவும் உயரமானவை; குறுகியதொரு மலைக்கணவாய்போலக் காட்சியளித்தன. வெற்றிக்கொடிகளை உயர்த்திக் கொண்டு வீரர்கள் யானைகளின்மேல் அமர்ந்து அவ் வாயில்களின் மூலம் எளிதில் நுழைந்து செல்லுவர். அரண்மனை களில் விடிவிளக்குகள் எரிந்துகொண்டே இருந்தன.[132] இவை யாவும் பாவை விளக்குகள்; யவனரால் வார்க்கப்பெற்றவை. கைவல் கம்மியர் சிற்பநூல் முறைப்படியே மனைகளையும் நகரங் களையும் வகுத்துக் கொடுத்தார்கள்.[133]

121. புறம். 77:4; பு. பொ. வெ. மாலை, 209.
122. ஐங்குறு. 202.
123. புறம். 24, 39.
124. அகம். 195.
125. நற்றி. 207.
126. குறுந். 235.
127. புறம். 22; பெரும்பாண். 190-1.
128. புறம். 251; நற்றி. 268. பதிற். 61:3, 88:28; அகம். 98:11.
129. சிலப். 5:7
130. மணி. 29:61 முதலியவற்றாலறியப்படும்
131. சிலப் 14:164-7. ப-உரை
132. அகம். 87: 12-3; நெடுநல். 101-5
133. நெடுநல். 76-9.

அரண்மனையைச் சுற்றி ஒரு வெற்று வெளி இருக்கும். அதற்குச் செண்டுவெளி என்று பெயர்.[134] புறமதில்கள் வெள்ளிய சுதையால் பூசப்பெற்றிருந்தன.[135] அரண்மனையின் உட்சுவர்கள் செம்பினால் எழுப்பப்பட்டவை போலக் காட்சி யளித்தன. சுவர்களின்மேல் மலரோவியங்கள் தீட்டப்பட் டிருந்தன.[136] மாடிமேல் நிலாமுற்றம் அமைந்திருந்தது. அம் முற்றத்தின்மேல் பொழிந்த மழைநீர் திரண்டு உருண்டு வந்து கீழே விழுவதற்கு மீன் வாயைப்போன்ற அம்பணங்கள் (தூம்புகள்) அமைக்கப்பட்டிருந்தன.[137]

அரண்மனையைப் போலவே வீடுகளுக்கும் சாளரங்கள் பொருத்தியிருந்தனர். அவை மானின்கண்களைப்போலத் தோற்ற மளித்தன.[138] கதவுகளை மூடிக் குறுக்கே கணையமரம் ஒன்றைப் பூட்டுவார்கள்.[139] இதற்கு நுகம் என்று பெயர். வீடுகளுக்கு இரட்டைக் கதவுகள் அமைப்பதுமுண்டு.[140] வெளியில் வீட்டு வாசலில் மேடைகள் போடப்பட்டிருந்தன.[141] அவற்றுக்கு வேதிகைகள் என்று பெயர். சுவர்களில் செம்மண் கோலம் தீட்டப்பெற்றிருந்தன. தரையைப் பசுவின் சாணத்தால் மெழுகு வதுண்டு.[142] வீடுகளுக்கு அங்கணங்கள் என்ற சாலகங்கள் கட்டப்பட்டன.[143] வீட்டின் உட்புறத்தில் சுவர்கள்மேல் சுதை ஓவியங்கள் எழுதப்படும் வழக்கமும் இருந்து வந்தது.[144] அவ் வோவியங்களில் தெய்வங்களின் வடிவங்களும், பலவகையான உயிர்வகைகளின் உருவங்களும் காட்சியளித்தன. செல்வர்கள் தம் மாளிகைகளைச் சுற்றிப் பூங்கா வளர்த்தனர்; வீட்டின் புறத்தே செய்குன்றுகளையும், வீட்டினுள் பளிக்கறைகளையும் அமைத்துக் கொண்டனர்.[145] வீடுகளுக்குப் பின்புறம் எந்திரக் கிணறுகள் இருந்தன. சிலர் வீடுகளைச் சந்தனக் குழம்பால் மெழுகுவதும் உண்டு.[146]

வேடர்கள் குடிசைகளில் காவல் நாய்கள் சங்கிலியால் கட்டப் பட்டிருந்தன.[147] ஆயர்கள் தம் வீடுகளில் வெள்ளாடுகளும் செம்மறியாடுகளும் வளர்த்தார்கள்.[148] பார்ப்பனரின் வீடுகளில் கோழியையும் நாயையும் நுழையவிடுவதில்லை.[149]

134. புறம். 174:7 (உரை)
135. புறம். 378:6.
136. நெடுநல். 112. 13
137. நெடுநல். 96.
138. சிலப். 5: 8.
139. பெரும்பாண். 127
140. கலித். 83:2.
141. சிலப். 5: 148.
142. சிலப். 16: 5; பெரும்பாண். 298
143. குறள். 720.
144. மணி. 3: 128-130.
145. மணி. 19: 102-05.
146. மணி. 19:115.
147. பெரும்பாண். 125.
148. பெரும்பாண். 153-4.
149. இன்னாநாற்பது, 3

பூம்புகார் நகரம் சங்ககாலத்தில் மிகவும் பெரியதொரு நகரமாகக் காட்சியளித்தது. இந் நகரின் உட்புறத்துக்குப் பட்டினப்பாக்கம் என்றும், புறநகருக்கு மருவூர்ப்பாக்கம் என்றும் பெயர்.[150] இவ்விரு பாக்கங்கட்கும் நடுவில் இடைவெளியொன்று உண்டு. அங்குத்தான் நாளங்காடிகள் (பகற்காலக் கடைகள்) நடைபெற்று வந்தன. இரவில் அல்லங்காடிகள் (இரவுக் கடைகள்) நடைபெற்றன. மதுரை மாநகரும் செழித்தோங்கி விளங்கிற்று.[151] அங்கும் இவ்வங்காடிகள் நடைபெற்று வந்தன.

### வாணிகம்

பழந்தமிழர் காலத்தில் நடைபெற்ற வாணிக வளத்தைப் பற்றிய சான்றுகள் அயல்நாட்டு வரலாற்றுக் குறிப்புகளினின்றும் நமக்குக் கிடைத்துள்ளன. சங்க இலக்கியத்திலும் அகச் சான்றுகள் எண்ணற்றவை உண்டு. வாழ்க்கை நலன்களுக்கான பல பண்டங்களும், ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களும் தமிழகத்தில் உற்பத்தியாயின. பண்டைய தமிழர் ஈடுபட்டிருந்த இரு பெரும் உற்பத்தித் தொழில்கள் உழவும் வாணிகமும். உழவுத் தொழிலைச் சிறப்பித்து மக்களுக்கு அதன் பெருமையையும் இன்றியமையாமையும் வலியுறுத்திக் கூறும் அளவுக்கு அத் தொழிலைவிட வாணிகம் வளர்ந்திருந்தது. மக்களுள் பெரும்பாலார் வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். சிலர் தலைமுறை தலைமுறையாகத் தாம் செய்துவந்த தொழிலை மாற்றிக் கொண்டு வேறு தொழில்களையும் செய்து வந்தனர். புலவர்கள் வாணிகம் செய்தனர். மணிமேகலையின் ஆசிரியர் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், உறையூர் இளம்பொன் வாணிகனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், ஓதலாந்தையார், கச்சுப்பேட்டு இளந்தச்சனார், கணக்காயன் தத்தனார், கணியன் பூங்குன்றனார், செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன், தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார், புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர் கிழான், மதுரைக் கொல்லன் புல்லன், மதுரைத் தமிழ்க்கூத்தனார் ஆகியவர்கள் சங்ககாலப் புலவர்களுள் சிலர். அவர்கள் மேற்கொண்டிருந்த தொழில்களை அவர்களுடைய பெயர்களே எடுத்துக்காட்டும்.

இன்ப வாழ்க்கைக்கான பண்டங்கள் பலவற்றை உற்பத்தி செய்வதில் தமிழ்நாட்டுக் கைவினைஞருடன் அயல்நாட்டுத்

150. சிலப். 5:39, 5:58.

151. மதுரைக். 430, 544; சிலப். 5: 63 (உரை)

தொழிலாளரும் கலந்துகொண்டனர். மகத நாட்டு இரத்தின வேலைக்காரர்கள், மராட்டியக் கம்மியர், அவந்தி நாட்டுக் கொல்லர்கள், யவனத் தச்சர்கள் ஆகியவர்கள் தமிழ்நாட்டுக் கம்மியருடன் கூடிக் கண்கவரும் பொருள்களைப் படைத்தார்கள் என்று மணிமேகலை கூறுகின்றது.[152] கோசல நாட்டு ஓவியர் களும், வத்தவ நாட்டு வண்ணக் கம்மர்களும் தமிழகத்தில் பிழைப்பை நடத்தி வந்தனர். கம்மியர் செப்புப் பானையைக் கடையும்போது அது பளபளவென்று மின்னுமாம்.[153]

ஓவியத்துக்கான வண்ணக் குழம்பு, பூசு சுண்ணம், குளிர்ந்த நறுமணக் கூட்டுகள், விடுபூ, மலர் மாலைகள், பூச்சரங்கள், சந்தனம், பச்சைக் கருப்பூரம் போன்ற நறுமணப் பண்டங்கள் ஆகியவற்றை விற்பவர்களும், பட்டு நூலாலும், எலி மயிராலும், பருத்தி நூலாலும் ஊசியைக் கொண்டு தறியின் அச்சினைக் கட்டும் காருகர் (சாலியர்) களும், பட்டும், பவளமும், சந்தனமும், அகிலும், முத்தும், மணியும், பொன்னும் நோட்டம் பார்க்கின்றவர்களும், நெல், புல்லரிசி, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, மூங்கிலரிசி வணிகர்களும், பிட்டு வணிகரும், கள் விற்கும் பெண்களும், மீன் விற்கும் பரதவரும், உப்பு விற்கும் உமணரும், வெற்றிலை வணிகரும், தக்கோலம், தீம்பு, இலவங்கம், கருப்பூரம், சாதிக்காய் ஆகியவற்றை விற்பவர்களும், எண்ணெய் வாணியரும், ஆட்டு வாணிகரும், வெங்கலக் கன்னார்களும், செப்புக் கலங்கள் தட்டுபவர்களும், தச்சர், ஓவியர், சிற்பிகள், சுதைப்பாவை புனைவோர், பொற்கொல்லர், இரத்தினத் தட்டார், தோலுறை தைப்போர் முதலியோரும், செயற்கைப் பூங்கொத்துகள், வாடாமாலைகள், பொய்க்கொண்டைகள் ஆகியவற்றைச் செய்வோர்களும், சிறுசிறு கைத்தொழில்களைப் பிறர்க்குப் பயிற்றுபவர்களும் பூம்புகார் மருவூர்ப்பாக்கத்தில் திரண்டிருந்தார்கள்.[154]

பல தொழிலைச் செய்யும் மக்கள் ஒருங்கு சேர்ந்து வாழ்ந் தனர்; தொழில்முறையில் உயர்வு தாழ்வு என்ற வேறுபாடு, அக்காலத் தமிழரிடையே காணப்படவில்லை. நாட்டு வளர்ச் சிக்கும், பொருத்தமான மக்களின் வாழ்வுக்கும் தொழிலாளர் அனைவருடைய உழைப்புமே இன்றியமையாததென்ற மேலான உணர்ச்சியே அவர்களிடம் வளர்ந்திருந்தது. 'துடியன், பாணன்

152. மணி. 19: 107-9; பெருங்கதை, 1: 58, 40-44.
153. நற்றி. 153.
154. சிலப். 5: 9-39.

பறையன், கடம்பன்' ஆகிய குடிகளைவிடச் சிறந்த குடிகள் வேறு இல என்று அவர்களுடைய தொழிலின் சிறப்பைப் பாராட்டி மாங்குடி கிழார் பாடியுள்ளார்.[155]

பழந் தமிழகத்தில் நடைபெற்றுவந்த வாணிகங்களுள் சிறப்பானவை உடை வாணிகம், ஓலை வாணிகம், கூல வாணிகம், பொன் வாணிகம் ஆகியவையாம். பெரும்பாலும் பண்டமாற்று முறையிலேயே வாணிகம் நடைபெற்று வந்தது. தேன், நெய், கிழங்கு ஆகிய பண்டங்கள் மீனுக்கும் நறவுக்கும் மாற்றப்பட்டன. கரும்பும் அவலும், மான் ஊனுக்கும் கள்ளுக்கும் மாறின.[156] நெய்யை விற்று எருமை வாங்கினர்.[157] உப்புக்கு நெல் மாற்றப் பட்டது.[158] பச்சைப் பயற்றுக்கு ஈடாகக் கெடிறு என்னும் மீன் மாற்றிக்கொள்ளப்பட்டது.[159] பண்டமாற்று முறையில் 'குறி யெதிர்ப்பை' என்று ஒரு முறையும் வழங்கி வந்தது. குறிப்பிட்ட ஓரளவு பண்டத்தைக் கடனாகக்கொண்டு ஒரு காலத்துக்குப் பிறகு அதைத் திருப்பிக் கொடுப்பதுதான் இம்முறையாகும்.[160]

சில பண்டங்கள் உற்பத்தியான இடத்திலேயே விற்பனை யாயின. சிலவற்றை ஊர்ஊராக எடுத்துச் சென்று விற்று வருவார்கள். உப்பு அப்படி விற்கப்பட்ட பண்டந்தான். மிளகையும் ஊர் ஊராகச் சென்று விற்பதுண்டு. பண்டங்களை வண்டிகளின் மேலும், கழுதைகளின் மேலும் ஏற்றிச் செல் லுவர்.[161] சரக்குப் பொதிகளின்மேல் அவற்றின் அளவோ எடையோ பொறிக்கப்பட்டிருக்கும்.[162] அவற்றை ஏற்றிச் சென்ற வண்டிகளின்மேலும் அளவு பொறிக்கப்படுவதுண்டு.[163] தாம் விற்கும் பண்டங்களைப் பற்றிய விளக்கம் எழுதிய கொடிகளை வணிகர்கள் தம் கடைகளின்மேல் பறக்கவிடுவார்கள்.[164]

வணிகர்கள் கூட்டங் கூட்டமாகக் கூடித் தம் பண்டங்களைப் பல ஊர்களுக்கும் விற்பனைக்கு எடுத்துச் செல்லுவார்கள். இக் குழுக்களுக்கு வாணிகச் சாத்துகள் என்று பெயர். ஆறலைக்கும் கள்வருக்கு அஞ்சி அவர்கள் சாத்துகளாகக் கூடிச் செல்லுவது வழக்கம்.[165] அளவுக்கு மிஞ்சிக் கொள்ளாமலும், அளவைக் குறைத்துக் கொடுக்காமலும், வணிகர்கள் தம் தொழிலை நேர்மையாக நடத்தி வந்தனர்.[166] வாணிகச் சாத்துகள் கழுதை

155. புறம். 355.
156. பெரும்பாண். 161-5
157. பெரும்பாண். 164-165.
158. குறுந்: 269: 5; அகம். 140
159. ஐங்குறு. 47.
160. புறம். 163; குறள், 221 (பரிமே-உரை)
161. பெரும்பாண். 80-81.
162. சிலப். 5:111-2
163. சிலப். 26: 136.
164. மதுரைக். 365-73.
165. குறுந். 390.
166. பட்டினப். 209-10.

யின்மேல் மிளகு பொதிகளை ஏற்றிச் செல்லும்போது அவற்றுக்குச் சுங்கம் செலுத்துவதுண்டு.[167]

கீழைக் கடற்கரையிலிருந்த தொண்டியிலிருந்து மதுரைக்குக் கப்பலில் அகில் முதலியவை கொண்டுவரப்பெற்றன.[168] குதிரைகளை மரக்கலங்களில் ஏற்றிக் கொண்டுவந்த யவனர்கள் அதே மரக்கலங்களில் பொன் அணிகலன்களையும், தீம்புளி, உப்பு, உணக்கிய மீன் ஆகியவற்றையும் தத்தம் நாடுகட்கு ஏற்றிச் செல்லுவர்; புளியையும் கருப்பங்கட்டியையும் சேர்த்துப் பிசைந்து அதைப் பொரிப்பார்கள். இப் பண்டத்துக்குத்தான் தீம்புளி என்று பெயர்.[169]

அயல்நாட்டு வாணிகத்தில் தங்க நாணயங்கள் வழங்கி வந்தன. அவற்றுள் ஒன்றேனும் இப்போது கிடைக்கவில்லை. காணம் என்றொரு பொற்காசு சங்க காலத்தில் வழங்கி வந்தது. தகடூர்ப் போரில் வெற்றிபெற்ற பெருஞ்சேரல் இரும்பொறை தன் வெற்றியைப் பாடிய அரிசில்கிழார் என்ற புலவருக்கு ஒன்பது நூறாயிரம் காணம் பொன் பரிசில் தந்தான்.[170] ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் காக்கைபாடினியார் என்ற பெண் பாற் புலவருக்கு நூறாயிரம் காணம் பொன் வழங்கினான்.[171] பட்டினப்பாலை ஆசிரியர் உருத்திரங்கண்ணனாருக்குப் பதினாறு நூறாயிரம் பொற்காசு பரிசிலாக வழங்கப்பட்டன, பொற்காசு ஒவ்வொன்றும் வேப்பம் பழம் அளவு இருந்தது. அவற்றை மாலையாகக் கோத்துப் பெண்கள் கழுத்தில் அணிந்துகொண்டனர். அக் காலத்தில் வெள்ளியாலான அணிகலன்களையும் மக்கள் பூணுவதுண்டு. வெள்ளியினால் பெரும்பாலும் பாத்திரங்களே செய்யப்பட்டன.[172] இரும்புக்கும் பொன்னென்றே பெயர் வழங்கிற்று.[173]

வாணிகத்தில் பலவகையான அளவைகள் வழங்கி வந்தன. எடுத்தல் அளவை சிலவற்றுக்குக் கழங்கு, கழற்சிக்காய் என்று பெயர்.[144] 'எண்' என்னும் சொல் எண்ணுகின்ற எண்ணையும் கணிதத்தையும் குறிப்பிட்டது. இலட்சம் என்ற பேரெண்ணையும் நூறாயிரம் என்றே குறிப்பிட்டனர்.[175] திருவள்ளுவர் காலத்தில் கோடி என்னும் எண்ணும் தமிழில் சேர்ந்து விட்டது.[176] கோடிக்கு மேற்பட்ட எண்களைக் குறிக்கவும்

167. பெரும்பாண். 80-81
168. சிலப். 14: 106-110.
169. மதுரைக். 318.
170. பதிற்றுப். 8-பதிகம்.
171. பதிற்றுப். 6-பதிகம்
172. பெரும்பாண். 477-80 (நச்-உரை)
173. புறம். 14:3.
174. பதிற்றுப். 32: 7-9.
175. தொல். எழுத். 471.
176. குறள், 377, 639

தமிழில் சொற்கள் உண்டு. வெள்ளம், ஆம்பல், தாமரை என்பன அவ்வெண்ணுப் பெயர்களுள் சில.[177] நிறுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை ஆகியவற்றுக்கும் சங்க இலக்கியத்தில் சொற்கள் உண்டு.

தமிழகத்தின் மிகச் சிறந்த தொழிலாக விளங்கியது உழவு தான். சங்க இலக்கியத்தில் இதற்கு அளவற்ற சிறப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. ஒரு பெண் யானை படுக்கும் அளவுள்ள இடத்தில் ஏழு ஆண் யானைகட்கு அளிக்கப்படும் தீனியளவு உணவுப் பண்டம் உற்பத்தியாகக்கூடிய செழிப்பான நாட்டை உடையவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்று ஆவூர் மூலங்கிழார் பாராட்டிப் பரவுகின்றார்.[178] உழவு நிலம் மிகவும் செழிப்பாய் இருந்ததால் உணவுப் பண்டங்களின் விளைச்சல் வரம்பின்றிக் காணப்பட்டது. நெல்லும் கழைக் கரும்பும், தென்னையும் வாழையும், மஞ்சளும் இஞ்சியும், பருத்தியும் தமிழகமெங்கணும் பயிராயின. நிலத்தை உழுவதும், எருவிடுவதும், நாற்று நடுவதும், தண்ணீர் கட்டுவதும், களை எடுப்பதும், பயிரைக் காவல் காப்பதும் உழவுப் பணிகளுள் சிலவாகும்.[179]

விருந்தோம்பல் பழந்தமிழரின் மிகச் சிறந்ததொரு பண்பாடாகும். உறவினரும் நண்பருமின்றிப் புதிதாக வருபவர்கட்கு விருந்து என்று பெயர்.[180] உண்பதற்குக் கலமும்,[181] வாழையிலையும்,[182] தேக்கிலையும்[183] பயன்பட்டன.

## விளையாட்டுகள்

குழந்தைகள் தெருவில் மணல்வீடு கட்டி விளையாடுவர்; முச்சக்கரத் தேர் உருட்டுவர்; பவழப் பலகைமேல் இரு யானைப் பொம்மைகள் ஒன்று மற்றொன்றைக் குத்துவதைப்போலச் செதுக்கிப் பொருத்தி வைத்து அவர்கள் விளையாடுவார்கள்.[184] குழந்தைகள் கிலுகிலுப்பை யாட்டி மகிழ்வார்கள்.[185] குழந்தைகட்கு அம்புலி காட்டுவதும் முத்தங்கொடுப்பதுமுண்டு.[186]

சிறுவர் மடுவில் 'துடும்' எனக் குதித்து மூழ்கி மண்ணை எடுத்து வந்து கரைமேல் நின்ற சிறுமியர்க்கு வியப்பூட்டு

177. தொல். எழுத். 393.
178. புறம். 40:0-11.
179. குறள், 038
180. பட்டினப். 262.
181. புறம். 160, 235, 384.
182. புறம். 168.
183. பெரும்பாண். 104; அகம். 107 : 10
184. பெரும்பாண். 249; குறுந். 61: 1-3; ஐங்குறு. 66; 2-3; கலித். 80,86.
185. சிறுபாண், 164
186. புறம். 160

வார்கள்.[187] இளைஞர்கள் ஏறு தழுவுவார்கள்.[188] பெண்கள் மணற்பாவை வனைந்து விளையாடுவார்கள். தண்ணீரில் பாய்ந்து அவர்கள் நீராடுவதுமுண்டு. அவர்கள் பந்துகளைக் கொண்டு கழங்கு அல்லது அம்மனையாடுவார்கள்; ஊசலாடு வார்கள். விளையாடும்போது அவர்கள் வரிப்பாட்டுப் பாடுவார் கள். சிறுமியர் மிகவும் உகந்து அயர்ந்தது ஓரையென்னும் விளையாட்டுதான்.[189]

## கலைகள்

கலைகளில் ஓவியம், இசை, கூத்து, நாடகம் ஆகியவை மிக உயர்ந்த நிலையை எட்டியிருந்தன. பண்டைய காலத்தில் ஓவிய நூல் ஒன்று வழங்கி வந்ததாகத் தெரிகின்றது.[190] நிலைத்து நின்ற பொருளையும், இயங்கி வந்த பொருளையும் எவ்வாறு வண்ணத்தால் தீட்டுவது என்பதை இந் நூல் விளக்கிக் காட்டிற் றாம். சுவர்கள் மேலெல்லாம் வண்ண ஓவியங்கள் தீட்டியிருந் ததைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. நாடக அரங்கி லும் அழகழகான வண்ணங்களில் ஓவியம் தீட்டப்பெற்ற திரைச் சீலைகள், அதாவது ஓவிய எழினிகள் தொங்கவிடப்பட்டன. சுவரின்மேல் சுதை ஓவியங்களும் தீட்டப்பட்டன. சிற்பத்தையும் மக்கள் சிறப்பாகப் பயின்று வந்தனர். சங்ககாலத்து ஓவியங் களும் சிற்பங்களும் முற்றிலும் அழிந்து மறைந்து போய்விட்டன. எளிதில் அழிந்து போகக்கூடிய வண்ணங்களையும் பொருள்களை யும் ஓவியர்களும் சிற்பிகளும் கையாண்டுவந்தனர் போலும். அன்றித் தமிழகத்தின் வரலாற்றில் ஏற்பட்ட நாகரிக மாறுபாடு களினாலும் பலவகையான மாறுபட்ட பண்பாட்டினராலும் அவை அழிவுண்டு போயிருக்கக்கூடும்.

இசை, நாடகம், நாட்டியம், கூத்து ஆகிய கலைகளில் பழந்தமிழ் மக்கள் மிகமிக உயர்நிலையை எட்டியிருந்தனர். சிலப் பதிகார அரங்கேற்று காதையில் இக் கலைகளின் வளர்ச்சியைப் பற்றிய விளக்கங்களை விரிவாகக் காணலாம். ஆண்கள், பெண் கள் ஆகிய இருபாலாரும் கூத்திலும் இசையிலும் மேம்பட்டிருந் தனர். பாணரும் விறலியரும் பாடியும் ஆடியும் மக்களை மகிழ் வித்தனர். மன்னன் முன்பு தம் கலையாற்றலைக் காட்டிப் பெரும் பரிசில்களைப் பெற்றனர். கரிகாற்சோழனின் மகள் ஆதிமந்தியின் கணவன் ஆட்டனத்தி என்பான் நடனத்தில்

187. புறம். 243
188. சிலப். 17, கொளு 1:7,
189 புறம். 176; நற்றி. 68; குறுந். 48, 316
190. சிலப். 8:23-26 (அடி-உரை)

ஈடிணையற்று விளங்கினான். மதுரைத் தமிழக்கூத்தனார் தமிழரின் கூத்துகளை ஆடிக்காட்டுவதில் புகழ் பெற்றிருந் தார்.

நாட்டியங்களிலும் கூத்துகளிலும் அரங்கங்களையமைக்கும் இலக்கணத்தைப்பற்றியும், கூத்தாடுவோரின் மெய்ப்பாடுகளைப் பற்றியும் அடியார்க்கு நல்லார் விரிவாகக் கூறுகின்றார். இக் கலைகளைப்பற்றிய நூல்கள் தமிழில் பல இருந்தன. அவை யனைத்தும் இப்போது அழிந்துபோய்விட்டன.

அரங்கின் முன்பு மூன்று வகைத்தான எழினிகள் தொங்க விடப்பட்டன. ஒன்று, மேலிருந்து கீழே விழுவது; இரண்டு, ஒரு பக்கமிருந்து மற்றொரு பக்கத்துக்கு இழுக்கப்பட்ட ஒற்றைத் திரை; மூன்று, அரங்கத்தின் இரு புறங்களினின்றும் இழுக்கப் பெறும் இரட்டைத் திரைகள். இவை அரங்கத்தின் நடுவில் ஒன்றுசேரும்.

கூத்துகளில் பலவகையுண்டு. மன்னருக்கும் மக்களுக்கு மானது ஒன்று. புகழ்ந்தும் இகழ்ந்தும் ஆடுவது மற்றொன்று. மூன்றாவது, தமிழக் கூத்தும் ஆரியக் கூத்தும்; நான்காவது, தேசிக் கூத்துகள். பொதுவாகக் கூத்துகளில் பதினொரு வகை யுண்டு. அவை முறையே கடையம், மரக்கால், குடை, துடி, அல்லியம், மல், குடம், பேடு, பாவை, கொடுகொட்டி, பாண்ட ரங்கம் என்பன.

தமிழரின் கூத்துகள் நாட்டியம் என்னும் பெயரில் சிறிதளவு அயல் கலப்பேற்று இப்போது நடைபெற்று வருகின்றன. தமிழக் கூத்தைப்போன்றே தமிழிசையும் தன் நிலை திரிந்து கருநாடக இசை என்னும் பெயரில் இப்போது வழங்கி வருகின்றது. ஏழிசை யின் தமிழ்ப் பெயர்களான குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பவை இப்போது வழக்கொழிந்து போயின. அவற்றின் வடமொழிப் பெயர்களான ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பவை இப்போது வழக்கில் இருந்து வருகின்றன. அக் காலத்தில் யாழும் குழலும் இன்னிசைக் கருவிகளாகப் பயன் பட்டன. யாழ்வகையில் 21 நரம்புகள் கட்டிய பேரியாழும், 19 நரம்புகள் கட்டிய மகர யாழும், 14 நரம்புகள் கட்டிய சகோட யாழும், 7 நரம்புகள் கட்டிய செங்கோட்டு யாழும் 1000 நரம்புகள் கட்டிய ஆதியாழும் இவற்றுள் சிறப்

பானவையாம். குழலிலும் பலவகை யுண்டு. அவற்றுள் ஆம்பல் குழல் என்பதும் ஒன்று.[191] வெண்கலத்தால் ஆம்பற் பூப்போல அணைசு பண்ணி நுனியில் பொருத்தப்பட்ட கருவி இது.

கல்வி

சங்ககாலத் தமிழர் கல்வியின் சிறப்பை நன்கு உணர்ந்திருந்தனர். கல்வியைப்பற்றிப் பேசும் அதிகாரங்கள் நான்கு திருக்குறளில் சேர்க்கப்பட்டுள்ளன.[192] குற்றமறக் கற்க வேண்டுமென்றும், கற்ற பின்பு தாம் கற்ற வழியே நடக்கவேண்டும் என்றும், கல்வி கற்கக் கற்க அறிவு சுரந்துகொண்டே போகும் என்றும், கல்வி கற்ற ஒருவனுக்கு உலகம் முழுவதும் தன் சொந்த ஊராகவே தோன்றும் என்றும், கல்விச் செல்வம் ஒன்றே அழியாச் செல்வமாம் என்றும், கல்லாதவன் மேனியழகு ஒரு பொம்மையின் அழகுக்கு நிகராம் என்றும், கல்வியைவிடக் கேள்வியே மேம்பட்டதென்றும், யார் யார் என்ன சொன்னாலும், அதை ஆராய்ந்து அதனுள் காணக்கூடிய உண்மையை ஓர்வதே நல்லறிவு என்றும் திருவள்ளுவர் வலியுறுத்துகின்றார்.

கல்வி பயிலும் உரிமை சங்க காலத்தில் தனிப்பட்ட ஒரு சிலரின் உரிமையாக இருந்ததில்லை. எக் குலத்தைச் சார்ந்தவர்களும், செல்வர்களும், வறியோரும், மன்னரும் எளிய குடிமக்களும் ஆகிய ஆண்களும் பெண்களும் கல்வியைத் தேடிப் பெற்றனர். இளைஞர்கள் மணமான பிறகும் தங்கள் மனைவியைப் பிரிந்து சென்றேனும் கல்வி கற்பதுண்டு. இளமையிலேயே கல்விப் பயிற்சி தொடங்கிற்று என்பதனை 'இளமையிற் கல்' என மூதுரை எடுத்துக்காட்டுகின்றது. அறிஞர் அமர்ந்திருந்த ஓரவையின் முன்னணியில் அமர்த்தப்பெறும் வாய்ப்பைத் தம் மகனுக்கு ஒவ்வொரு தந்தையும் தேடிக் கொடுக்க வேண்டு மென்பது தமிழர் கண்ட அறம்.[193] 'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே, சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே' என்று பெண்கள் கருதினர்.[194] 'வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும், கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும், அவன்கண் படுமே.'[195] ஆதலினால் குல வேறுபாடு நோக்காமல் மக்கள் அனைவருமே கல்விப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தனர். உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும், ஆசிரியரிடம் அடக்கமாகவும் அன்பாகவும் அமர்ந்து கல்வி கற்க வேண்டுமெனப் பாண்டிய மன்னன் ஒருவன் கூறுகின்றான்.[196] கல்விப் பயிற்சிக்கு வறுமை நேர்ப்பகையாகும்.[197]

191. நற்றி. 113
192. குறள், 40-43அதிகாரங்கள்.
193. குறள், 67.
194. புறம். 312.
195. புறம். 183.
196. புறம். 183.
197. புறம். 266: 13; பெரும்பாண். 22 (நச்சி); குறள், 1043; மணி. 11:76-80

ஒவ்வோர் ஊரிலும் பள்ளிகள் நடைபெற்று வந்தனவா என்பதும், பள்ளிகளில் எத்தனை மாணவர்கள் பயின்றனர் என்பதும் தெரிந்துகொள்ளுவதற்கான சான்றுகள் கிடைக்கவில்லை. ஒவ்வோர் ஊரிலும் கல்வி பயிற்றும் கணக்காயர் இருந்தனர். 'கணக்காயர் இல்லாத ஊரும்...நன்மை பயத்தல் இல' என்று நூல்கள் கூறுகின்றன.[198] கிடங்கில் குலபதி நக்கண்ணனார் என்றொரு சங்கப் புலவர் இருந்தார். ஆயிரவருக்கு மேற்பட்ட மாணவர்களை ஒன்று கூட்டி அவர்கட்கு அவர் கல்வி பயிற்றி வந்தார் என அறிகின்றோம்.[199] பதினாயிரம் மாணவர்கட்குக் கற்பித்தவர்கட்குத்தான் 'குலபதி' என்னும் பட்டம் உரிமையாகும். கல்வி பயிற்றப்பட்ட இடம் 'பள்ளி' எனப்பட்டது. பெரும்பாலும் திண்ணைகளிலேயே பள்ளிகள் நடைபெற்று வந்தன. மாணவர்கள் ஓலையின்மேல் எழுத்தாணி கொண்டு எழுதினர். கல்வியின் பயன் கடவுளையறிதலே என்ற கொள்கை வலியுறுத்தப்பட்டது.[200] மாணவர்கள் கல்வி பயிலும்போது இரந்துண்ணும் பழக்கம் அக் காலத்தில் இருந்து வந்ததென அறிகின்றோம்.[201] இரந்து உண்டு கல்வி பயிலுவது உயர்ந்த பண்பாடாகக் கருதப்பட்டது. கல்விப் பயிற்சியுடன் அறிவு வளர்ச்சியும் இணைந்து சென்றது. பல குலத்தைச் சார்ந்த புலவர்கள் தமிழகமெங்கணும் உலவி வந்ததையும், மன்னருதவியுடன் மதுரையில் அவர்கள் சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்து வந்ததையும் நோக்குங்கால் அப் புலவர்கள் பாடிய பாடல்களைக் கேட்டும், கற்றும், அவற்றின் பொருளையுணர்ந்தும், அவற்றால் பயன்பட்டும் வாழ்ந்து வந்த பொதுமக்கள் நாடெங்கும் நிரம்பியிருந்தனர் என்று ஊகிக்கலாம். தமிழ் மன்னருடன் தமிழ்ப் புலவர்களும் மக்களின் பாராட்டையும் மதிப்பையும் பகிர்ந்து கொண்டனர்.

ஆசிரியர்களுக்குப் பொருள் கொடுத்தும் தொண்டுகள் புரிந்தும் மக்கள் கல்வி பயின்றனர். எனினும் கபிலர், பரணர், திருவள்ளுவர், நக்கீரர் போன்ற பெரும் புலவர் பலர் சங்ககாலத்தில் வாழ்ந்துவந்தனர். ஒருவருடைய புலமையை அறிஞர்கள் எளிதில் ஒப்புக்கொள்ளுவதில்லை. அவருடைய பாடல்களோ நூல்களோ தமிழ்ச் சங்கத்தார் முன்பு அரங்கேற்றம் பெற வேண்டும். சங்கப் புலவர்கள் அப் புலவரைப் புலமை நிரம்பிய சான்றோன் என ஒருங்கே ஒப்புக்கொள்ளவேண்டும். கூத்தும் இசையும் மன்னரின் முன்பு அரங்கேற்றிவைக்கப்பெற்றன. பல துறைகளில் புலமை சான்ற பேரறிஞர்கள் போலி ஆசிரியரை

198. திரிகடுகம், 10.
199. குறுந். 252.
200. குறள், 2
201. குறுந். 33.

அறைகூவி அழைத்து அவர்களுடன் சொற்போர் புரிந்து அவர்களைத் தோல்வியுறச் செய்து நல்லறிவு புகட்டுவது அக்கால வழக்கமாகும்.[202]

மாணவர்கள் தொல்காப்பியம், காக்கைபாடினியம் ஆகிய இலக்கண நூல்களையும் பயின்றனர்.[203] ஏரம்பம் என்றொரு கணித நூல் பழந்தமிழகத்தில் வழங்கி வந்தது.[204] அது இப்போது மறைந்து போயிற்று. கணிதத்தில் மிக நுண்ணிய அளவையையும், மிகப் பெரிய அளவையையும் கையாண்டு வந்தனர். மிக நுண்ணிய நீட்டலளவைக்குத் தேர்த்துகள் என்று பெயர். இருண்ட அறையொன்றன் கூரையினின்றும் பாயும் ஞாயிற்றின் கதிரொளியில் மிதந்தோடும் துகள் எட்டுக் கொண்டது ஒரு தேர்த்துகளாகும். மிகப் பெரிய எண் வெள்ளம் என்பது. மக்களுக்கு வானவியல் புலமையும் இருந்தது. வானவியல் புலவர்கட்குக் கணிகள் என்று பெயர்.[205] கோள்கள், அவற்றின் செலவுகள், நாண்மீன்கள், திங்களின் இயக்கம் ஆகியவற்றை அவர்கள் அறிவர். நாண்மீன்களுக்கும் கோள்களுக்கும் திங்கள்கட்கும் தூய தமிழ்ப் பெயர் வழங்கிவருவதனின்றும் பழந்தமிழரின் வானவியல் அறிவின் விரிவை நன்கு உணரலாம்.[206] ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது ஆகியவற்றைக் கோள்கள் எனக் கூறுகின்றோம்.[207] இக் காலத்து வானவியலார் ஞாயிற்றையும், திங்களையும், இராகு கேதுக்களையும் கோள்களின் பட்டியலினின்றும் நீக்கிவிடுவர். எஞ்சிய செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி இவ் வைந்தையும் பழந்தமிழர் கோள்களின் கணக்கில் சேர்த்துக்கொண்டனர். நாம் வசிக்கும் இவ்வுலகமும் ஒரு கோள்தான் என்னும் உண்மையை அவர்கள் அறிந்தனர் அல்லர். ஓராண்டின் பன்னிரண்டு திங்களின் பெயரமைப்பைக் கண்டு வியவாமல் இருக்க முடியாது. தமிழரின் ஆண்டானது கதிரவனின் செலவைக் கணக்கிட்டு அறுதியிடப்பட்டது. எனவே ஓராண்டில் பன்னிரண்டு திங்கள்கட்குமேலே இரா. ஆனால், சந்திரனின் ஓட்டத்தைக் கொண்டு அமைந்த ஆண்டில் பன்னிரண்டு திங்கள்கட்கு மேலும் வருவதுமுண்டு; மற்றும் ஒரே மாதம் ஓராண்டில் இரட்டித்து வருவதுமுண்டு. இக் குழப்பங்கள் தமிழரின் ஆண்டுக் கணக்கில் வருவதில்லை. சூரியன் எந்த இராசியில் எத்தனை நாள் நிற்கின்றதோ அத்தனை நாள் அந்த இராசி

202. பட்டினப். 169-71.
203. தொல். பொருள். 650 (நச்சி).
204. குறள், 392 (பரி. உரை).
205. புறம். 229.
206. புறம். 20,30; பதிற்றுப். 14:-4
207. தேவாரம், 2:85:9

காட்டாகச் சித்திரை நாண்மீனில் நிலவு முழுமையடையும் திங்களுக்குச் சித்திரை என்று பெயர். விசாகத்தில் சந்திரன் முழுமதியாகும் மாதத்துக்கு வைகாசி என்று பெயர்.

தமிழர் சோதிடக்கலையிலும் வல்லுநராகக் காணப்பட்டனர். கோள்கள், மீன்கள் ஆகியவற்றின் நிலைகளைக் கொண்டு வருங்கால நிகழ்ச்சிகளைக் 'கணிகர்' கணித்துக்கூறுவர்.

**குலங்கள்**

தமிழகத்தில் சங்க காலத்திலேயே பல குலங்கள், மக்கள் செய்துவந்த தொழிலுக்கு ஏற்பத் தோன்றியிருந்தன. அளவர், இடையர், இயவர், உமணர், உழவர், எயினர், கடம்பர், கம்மியர், களமர், கிளைஞர், குயவர், குறவர், குறும்பர், கூத்தர் கொல்லர், கோசர், தச்சர், துடியர், தேர்ப்பாகர், துணையர், பரதவர், பறையர், பாணர், புலையர், பொருநர், மழவர், வடவடுகர், வண்ணார், வணிகர், வேடர் எனப் பல குலங்கள் தோன்றியிருந்தன. ஆனால், இக் குலங்களுக்குள் உணவுக் கலப்போ, திருமணக் கலப்போ தடை செய்யப்படவில்லை. ஒவ்வொரு குலத்தினரும் தத்தம் தொழிலைச் செய்து வயிறு பிழைத்தனர். ஒவ்வொரு குலமும் தமிழ்ச் சமுதாயத்தில் விலக்க முடியாத ஒருறுப்பாகவே செயற்பட்டு வந்தது.

பார்ப்பனர்கள் யாகம் செய்தார்கள். தம் மனைவியர் துணை புரிய அவர்கள் அறவாழ்க்கை வாழ்ந்து வந்தனர்.[208] 'அந்தணர் என்போர் அறவோர், மற்று எவ்வுயிர்க்கும் செந் தண்மை பூண்டொழுக லான்' என்று திருவள்ளுவர் அந்தணருக்கு அறம் வகுத்தார்.[209] களவு வாழ்க்கையில் தலைவனுக்கும் தலைவிக்கும் திருமணம் முற்றுப்பெறுவதற்குப் பார்ப்பார் துணை நிற்பர். அவர்கள் அருள் நிறைந்த அறவாழ்க்கை வாழ்ந்து வந்ததால் அரசனுக்கும் குடிமக்களுக்கும் அவர்கள்பால் நல்ல ஈடுபாடு இருந்து வந்தது. மன்னர்கள் அயல்நாட்டின் மேல் போர் தொடுக்கும்போது முதலில் பார்ப்பனரை ஊரை விட்டுப் போய்விடும்படி முன்னறிவிப்புச் செய்தல் போர் அறமாக இருந்தது.[210] கண்ணகியும் மதுரையின்மேல் தீயை ஏவும்போது பார்ப்பனர்மீது செல்லவேண்டா என்று அத் தீயினுக்குக் கட்டளையிட்டாள்.[211] பண்டைய தமிழகத்துப் பார்ப்பனர் தம்மைத் தமிழராகவே நினைந்து, தமிழ் பயின்று,

208. புறம். 166.
209. குறள். 30.
210. புறம். 9.
211. சிலப். 21 : 53.

தமிழ்ச் சமுதாயத்தில் தாமும் இன்றியமையாத ஓர் உறுப்பாய் அமையுமாறு நடந்துகொண்டனர்; சமயக் கல்வி, தத்துவம் ஆகியவற்றில் வல்லுநராக இருந்தனர். கபிலரைப் போன்ற பார்ப்பனப் புலவர்கள் சங்கப் புலவர்களாய் விளங்கினர். பார்ப்பனருள் சிலர் மக்கள் வெறுப்புக்கு இலக்கான வாழ்க்கையும் வாழ்ந்து வந்தனர் என அறிகின்றோம்.[212]

பண்டைத் தமிழர் மக்கட்பேற்றைப் பெரிதும் பாராட்டினர். 'அமிழ்தினும் ஆற்ற இனிதே தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ்'[213] என்றும், 'குழலினிது யாழினிது என்பதம் மக்கள் மழலைச்சொற் கேளா தவர்'[214] என்றும் மக்கட்செல்வத்தைப் புகழ்ந்து பேசுகின்றார் திருவள்ளுவர். குழந்தைகளின் குறுகுறு நடையையும், மயக்குறு தன்மையையும், குழலினும் யாழினும் இனிய மழலைச் சொற்களையும்[215] பாராட்டிய தமிழர் அவர்களை இளமையில் கல்வி பயிற்றாமல் நடுத்தெருவில் விட்டிருக்க மாட்டார்கள் என்பது திண்ணம். தம்மினும் தம் மக்கள் மேலானவர்கள், அறிவுடையவர்கள் என்று கேட்டு இன்புற விரும்பியவர்கள் தமிழர்கள்.[216]

## மொழி

தமிழ்மொழி சொல்வளம் நிரம்பியது; அவ் வளத்தை மேன் மேலும் பெருக்கிக் கொள்ள வாய்ப்பையும் அளிப்பது; பேசுவதற்கு மென்மையானது, இனிமையானது. 'இடம்பமும்' ஆரவாரமும், பிரயாசமும், பெருமறைப்பும், போதுபோக்கும் இல்லாதது. பயிலுதற்கும் அறிதற்கும் இலேசானது; பாடுதற்கும் துதித்தற்கும் மிகவும் இனிமையுடையது.'[217] தமிழ் எழுத்துகளின் தோற்றத்தைப் பற்றியும் வளர்ச்சியைப் பற்றியும் ஆய்வாளரிடையே கருத்து வேறுபாடு உண்டு. சங்ககாலத்தில் தமிழ் எழுத்துகளின் வடிவமும் ஒலியும் எவ்வாறு இருந்தன? இந்நாள்வரை அவை மாறாமல் வழங்கி வருகின்றனவா? அன்றி மாறுதல்கள் ஏற்றுக் கொண்டுள்ளனவா? தமிழராலேயே வளர்க்கப்பெற்ற ஆதி எழுத்துகளிலிருந்து இன்றைய எழுத்துகள் ஒலி, வரி வடிவங்களில் மாறிவந்தனவா? அன்றி அயல்மொழிகளின் எழுத்துகளை ஏற்றுக்கொண்டு வளர்ந்தனவா? வெளி நாடுகளிலிருந்தோ, அன்றி வடஇந்தியாவினின்றோ பிராமி எழுத்துத் தோன்றியதென்றும் அதனின்றும் தமிழ் வட்

212. கலித். 65.
213. குறள், 64.
214. குறள், 66.
215. புறம். 188.
216. குறள், 68.
217. திருவருட்பா ஆறாந்திருமுறை, சத்தியப் பெருவிண்ணப்பம், 2.

டெழுத்துகள் தோன்றினவென்றும், அதனின்றும் இக்காலத் தமிழ் எழுத்துகள் பிறந்தன என்றும் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்கள் கருதி வருகின்றனர். இக் காலத் தமிழ் எழுத்தும் வட்டெழுத்தும் தமிழ்நாட்டிலேயே வளர்ந்தவை என்றும், அவற்றுக்குப் பிராமி எழுத்துடனோ, கிரந்த எழுத்துடனோ எவ்விதமான தொடர்பும் இல்லை என்றும் அறிஞர் சிலர் கருதுகின்றனர். இவ்விரு சாராருக்குமிடையே இன்னும் ஒருமைப்பாடு தோன்ற வில்லை. ஆனால், கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் பிராமி எழுத்துக் கல்வெட்டுகள் தென்னிந்தியாவில் கிடைத்துள்ளன. எனவே, வட்டெழுத்துகள் பிராமியினின்றும் தோன்றியனவோ என ஐயுற வேண்டியுள்ளது. இப்போது உள்ள நிலையில் உறுதி யான முடிவு மேற்கொள்ளுவதற்கில்லை. பழங் கல்வெட்டுகள் அனைத்தும் அழிந்துபோய்விட்டன. போரில் உயிர் துறந்த வீரர் களுக்காக நட்ட கற்கள் அக் காலத்தில் பல இருந்தன.[218] அவற்றில் ஒன்றேனும் இப்போது காணப்படவில்லை. அவற்றைப் போலவே வரலாற்றுச் சிறப்புடைய ஏனைய கல்வெட்டுகளும் அழிந்து மறைந்து போயிருக்கக்கூடும். ஒரு குறிப்பிட்ட காலத் தில் காணப்படும் தமிழ் இலக்கிய நடைக்கும், கல்வெட்டு உரை களின் தமிழ் நடைக்கும் ஆழ்ந்த வேறுபாடு காணப்படுகின்றது. கல்வெட்டுக்கெனவே ஒரு தமிழ் எழுத்து வடிவைப் பயன்படுத்தி வந்திருக்கின்றார்கள். ஆகவே, கல்வெட்டு நடையையும் எழுத்து வடிவத்தையும் வைத்துக்கொண்டு பண்டைய தமிழ் எழுத்தின் வரலாற்றை அறுதியிடுவது நற்பயன் ஏதும் அளிப்ப தாகத் தெரியவில்லை.

தமிழ்மொழிக்குச் சொல்வளம் உண்டு. ஒரு பொருளைக் குறிக்க அதன் தன்மைக்கேற்பப் பல சொற்கள் படைக்கப் பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக 'இலை' என்னும் ஒரு பொரு ளைக் குறிப்பிட 'தாள்' (நெற்பயிர் இலைகள்), 'தோகை' (கருப்பஞ்செடி இலைகள்), 'ஓலை' (தென்னை, பனைமர இலை கள்), 'மடல்' (தாழை இலை) என்று வெவ்வேறு சொற்கள் உண்டு. பொதுவாகச் சில இலைகளைக் குறிப்பிடும்போது 'தழை' என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றோம்; நிலத்துக்குத் 'தழை' எருப் போட்டதாகக் கூறுகின்றோம். மரத்திலோ செடியிலோ தோன்றும்போது பூவை 'அரும்பு' என்றும், மலர்ந்து வருங்கால் அதைப் 'போது' என்றும், விரிந்த நிலையில் 'மலர்' என்றும் அழைக்கின்றோம். மலராத பூவை 'அரும்பு, மொட்டு, முகை, மொக்கு' எனக் கூறுகின்றோம்.

218. மலைபடு. 394-396; அகம். 131

பூவினின்றும் காய்ப்புத் தொடங்கும்போது 'பிஞ்சு' என்றும், முதிர்ந்த பிஞ்சைக் 'காய்' என்றும், பழுக்கும் பருவத்துக் காயைச் செங்காய் என்றும், முற்றிலும் பழுத்த காயைப் 'பழம்' அல்லது 'கனி' என்றும் குறிப்பிடுகின்றோம். பிஞ்சு வகைகளில் 'குரும்பை', 'வடு', 'மூசு', 'கச்சல்' என்று செடிகளுக்கு ஏற்பப் பெயர்களும் வேறுபடுகின்றன. 'சொல்லுதல்' என்னும் வினையைக் குறிக்க ஏறக்குறைய நாற்பது சொற்கள் தமிழில் வழங்கி வருவதைக் காணலாம். ஒருவன் மற்றொருவனிடம் ஒரு பொருளைக் கேட்கும்போது, தாழ்ந்தவன் 'ஈ' என்றும், ஒத்த நிலையில் இருப்பவன் 'தா' என்றும், உயர்ந்தவன் 'கொடு' என்றும் சொல்லவேண்டும் என்பது தமிழ் மரபாகும். இன்ன சொல்லை இன்னவாறு பொருள்கொண்டு பயன்படுத்த வேண்டும் என்ற மரபுகளுக்குத் தொல்காப்பியத்தில் தனி இயல் சேர்க்கப்பட்டுள்ளது.

தமிழ் நெடுங்கணக்கில் சிறப்பாகக் காணப்படுபவை 'ஃ' என்னும் ஆய்த எழுத்தும், 'ழ்' என்னும் மெய்யெழுத்துமாம். ஆய்த எழுத்தைக்கொண்டு வல்லெழுத்துகளின் ஒலியை மெலிவிக்கலாம். ஆகையால், தமிழ்நெடுங்கணக்கில் இதைச் சார்பெழுத்துகளில் ஒன்றாகத் தொல்காப்பியர் ஒதுக்கிவைத்துள்ளார்.

### அரசியல்

பண்டைய தமிழகத்தில் நாட்டின் தலைவனாகவும், அரசியலின் தலைவனாகவும் மன்னன் ஒரு தனியிடத்தைப் பெற்றிருந்தான். தமிழகத்தில் முப்பகுதிகளான சேர சோழ பாண்டிய நாடு மூன்றும் மூன்று மன்னரின் ஆட்சியின்கீழ் இருந்துவந்தன. அம் மன்னரின்கீழ்ப் பல்வேறு குறுநில மன்னர்கள் ஆங்காங்கு அரசாண்டு வந்தனர். இம் மூன்று நாடுகளுக்குள் பாண்டி நாட்டைப்பற்றிய செய்திகள் வடமொழி இராமாயணத்திலும், மகாபாரதத்திலும், மெகஸ்தனிஸ் என்ற கிரேக்க ஆசிரியரின் குறிப்புகளிலும் காணப்படுகின்றன. அரசாங்கமானது மன்னனின் பரம்பரை உடைமையாய் இருந்துவந்தது. மன்னன் ஒருவன் இறந்தால் அவன் மூத்த மகனே பட்டத்துக்கு வருவான். மகளிர் அரசு புரிந்ததாகச் சங்க இலக்கியத்தில் சான்று ஏதும் இல்லை.

வேந்தனின் ஆட்சி ஆண்டுகளின் நிகழ்ச்சிகளைப் பெருங்கணி எழுதிவைப்பார். அரசவை காலையில் கூடுவது வழக்கம். அதனால் அதற்கு 'நாளவை' என்றும், 'நாளிருக்கை' என்றும் பெயர்கள் வழங்கி வந்தன.[219] அரசனுடன் அவனுடைய மனைவி

219. புறம். 29: 5, 54: 3.

யும் அரசவையில் அமர்வது மரபாக இருந்துவந்தது. அரசவையில் இசை முழங்கிக்கொண்டிருக்கும்.[220] சிலப்பதிகாரம் குறிப்பிடும் எண்பேராயமும் ஐம்பெருங்குழுவும் அரசனுடைய ஆணைக்கு வரம்பு விதித்தனவா, அன்றி அறவுரைகள் மட்டும் எடுத்துக்கூறி அரசனுக்கு அறிவுறுத்தும் உரிமையைச் செலுத்தி வந்தனவா என்பது விளங்கவில்லை. மன்னனின் அரசியலுக்கு விதிகள் வகுத்துள்ள திருக்குறளிலும் இவ்விரு நிறுவனங்களைப் பற்றிய குறிப்புகள் எதுவும் இல்லை.

அரசர்கள் அவையில் அமைச்சர்களும் பங்கு கொண்டிருந்தனர். தேவையானபோது அவர்கள் மன்னனுக்கு அறவுரைகளை இடித்து எடுத்துக்கூறும் உரிமைகளைப் பெற்றிருந்தனர். ஆனால், தம் நோக்கத்தின்படியே செயல்புரியும் உரிமையை அவர்கள் பெற்றிருக்கவில்லை; அரசனுடைய 'தேர்ச்சித் துணை'யாகவே இயங்கி வந்தனர்.[221] ஊராண்மையும் நாட்டாண்மையும் குழுக்கள்பால் ஒப்படைக்கப்பட்டிருந்தன.

## சங்க கால ஆட்சி முறை

சங்க காலத்தில் மன்னனாட்சியே நிலவியது. அக்கால அரசர்களில் தலைசிறந்தவராகிய சேர சோழ பாண்டியர்கள் மூவேந்தர்களெனவும் மற்ற அரசர்கள் மன்னர்களெனவும் சங்க நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர். அத்தகைய சிற்றரசர்களாகிய மன்னர் பலர் ஆட்சி புரிந்ததாகவும் அறிகிறோம். அதியமான் நெடுமான் அஞ்சி, பாரி, ஓரி, காரி, பேகன், ஆய், நள்ளி முதலியோர் இச் சிற்றரசருள் சிலராவர்.

தமிழகத்தில் முதன்முதலாக எப்பொழுது அரசர்களுடைய ஆட்சி தோன்றியதெனத் திட்டவட்டமாகக் கூற இயலாது. திருக்குறள் உரையாசிரியர் பரிமேலழகர், உலகம் தோன்றிய காலம் தொட்டே சேர சோழ பாண்டியராகிய மூவேந்தரும் ஆட்சிபுரிந்து வந்தனரெனக் கூறியிருப்பது மிகைப்பட்டதென்பதற்கு ஐயமில்லை. அவர் கூறியிருப்பதன் கருத்து, மூவேந்தர்களும் நெடுங்காலமாகவே அரசாண்டு வந்தனரென்பதே ஆகும்.

முதன் முதலாக அரசன் எவ்வாறு தோன்றியிருக்கலாம் என்று சிலர் ஆய்ந்துள்ளனர். 'கோன்' என்னும் சொல் அரசனைக்

220. மலைபடு. 39-40. 221. குறள், 635

குறித்தது. ஆனால், முல்லை நிலத்தில் ஆடு மாடுகளைக் காப்பவனையும் 'கோன்' என்னும் சொல் குறிப்பிட்டது. ஆகவே, முல்லைநிலப் பகுதியிலேதான் முதன்முதலாக அரசன் தோன்றியிருக்கலாமென்பது சிலர் கருத்து.

இதுபற்றி முடிவாகக் கூறுவதற்கில்லை. சேரநாட்டில் மன்னனின் அடையாளமாக இருந்தது வில் என்பதை இங்கு எண்ணும்போது ஆதியில் வேடனாக இருந்தவன் நாளடைவில் மன்னனாகத் திகழ்ந்திருக்கலாம் என்று கருத இடமுண்டு. பொதுவாகக் கூறுமிடத்து, கூட்டம் கூட்டமாக வாழ்ந்தவருள் தலைமை நிலைமையை எய்தியிருந்தவர் அரசராக உருவெடுத்தாரெனக் கொள்ளலாம்.

சங்க காலத்திற்கு முன்னதாகவே அரசாட்சி தலைமுறை தலைமுறையாகத் தகப்பன் பின் மைந்தன் அரசனாகும் முறை அமைந்திருக்கவேண்டும். மன்னனின் மூத்த மகனே அம் மன்னனாட்சியைத் தொடர்ந்து நடத்தும் உரிமை பெற்றிருந்தான். சேர மன்னன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மூத்த புதல்வன் செங்குட்டுவன் அரசு கட்டில் ஏறுவதற்குத் தகுதியற்றவன் என்று கணி கூறியதன் விளைவாகக் குடும்பச் சச்சரவு நேரிடாமலிருக்கும் பொருட்டு இளையவன் (இளங்கோ) துறவியாயினான் என்பதுபற்றி அறிகிறோம். இதிலிருந்து மூத்த புதல்வனே அரச பதவிக்கு உரியவன் என்று கருதப் பட்டமைபுலனாகும். இளைய அரசகுமாரர்களுக்கு இளங்கோ, இளங்கோசர், இளஞ்செழியன், இளஞ்சேரல், இளவெளிமான், இளவிச்சிக் கோன் போன்ற பெயர்கள் வழக்கிலிருந்தன.

சங்க காலத்திலேயே சேர மன்னரிடை மருமக்கள் தாயமுறை வழக்கிலிருந்ததா என்ற ஐயப்பாடு தோன்றியுள்ளது. ஆனால், ஆழ்ந்து ஆராய்ந்தால் அவ்வழக்கம் மிகப் பிற்காலத்திலேயேதான் வந்திருக்கவேண்டுமெனத் தோன்றுகிறது.

சங்க காலத்திய அரசாட்சி, செங்கோலாட்சியாகவே எப்போதும் விளங்கியதாவென்று திட்டமாகக் கூறுவதற்கில்லை. ஆனால் அக்காலக் கொள்கைப்படி அரசர்கள் நீதி, நற்குணம் ஆகிய பண்பாடுகள் அமைந்தவர்களாகவே இருந்தனரெனக் கருதலாம். சிலர் கொடுங்கோல் மன்னர்களாகவும் ஆட்சி புரிந்திருக்கக்கூடும். செங்கோலாட்சியின் மேன்மையை எடுத்து விளக்கும் திருவள்ளுவர், கொடுங்கோன்மை பற்றியும் நன்கு விளக்கியுள்ளார்:

அரசனுக்கு உதவி புரிய அமைச்சர்கள் இருந்தனரென்பதற்கு ஐயமில்லை. தலைமை அமைச்சரும் அவருடன் இணைந்து ஒத்துழைக்கும் பல அலுவலாளர்களும் இருந்தனர். பொதுவாகவே அவர்கள் கற்றறிந்தவர்களாகவும் திறமை வாய்ந்தவர்களாகவும் திகழ்ந்தனரெனக் கருதலாம்.

பண்டைய நூல்கள் சிலவற்றில் ஐம்பெருங்குழு, எண்பேராயம் ஆகிய கூட்டத்தினரைப் பற்றி அறிகிறோம். மதுரைக் காஞ்சியிலும் பிற்காலத்தைச் சார்ந்த சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை ஆகிய நூல்களிலும் அவைபற்றிக் கூறப் பட்டுள்ளன. மதுரைக்காஞ்சியில் (510) நாற்பெருங்குழுவைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். இவற்றின் அமைப்பு, பொறுப்புகள், உரிமைகள்பற்றிக் கருத்து வேற்றுமைகள் காணப்படுகின்றன.

சில சங்க நூல்கள் இக் குழுக்களைப் பற்றிக் கூறவேயில்லை. திருக்குறளில் இக் குழுக்களைப்பற்றி எதையும் காணோம். எட்டுத் தொகையிலும் தொல்காப்பியத்திலும் இவைபற்றிய குறிப்பொன்றுமில்லை. ஆனால், இதிலிருந்து இக் குழுக்கள் மிகப் பிற்காலத்தவை யென்ற முடிவுக்கு வரமுடியாது.

இவற்றின் உறுப்பினர்கள்:

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களிலிருந்து குறிப்பிட்ட சில உறுப்பினர்கள் இக் குழுக்களில் இருந்தனரெனத் தெரிகிறது. ஐம்பெருங்குழு உறுப்பினர்கள் கீழ்க் குறிக்கப் படுவோர் ஆவர்:

(1) புரோகிதர்

(2) படைத்தலைவர்

(3) தூதுவர்

(4) ஒற்றர்

(5) அமைச்சர்.

எண்பேராயத்தின் உறுப்பினர்கள் பின்வருமாறு:

(1) கரணத்தியலவர் அதாவது அரசு கணக்கர்கள்

(2) கருமகாரரர் அல்லது செயலர்

(3) கனகச் சுற்றம் அதாவது அரசியல் கஜானா அலுவலர்

(4) கடைகாப்பாளர் அதாவது அரண்மனை காப்போர்

(5) நகரமாந்தர் அதாவது நகரில் வாழும் மக்களில் சிறந்த தலைவர்கள்

(6) படைத்தலைவர் (காலாட்படையின் தலைவர்கள்)

(7) யானை வீரர் (யானைப்படைத் தலைவர்கள்)

(8) இவுளி மறவர் அதாவது குதிரைப் படையின் தலைவர்கள்.

இவருள் மிகப்பலரும் அரசாங்கத்தின் அலுவலர்கள் என்பது தெளிவு; நகரமாந்தர் எனப்பட்டோரை மக்களின் தலைவர்களாகவும் கருதலாம். ஆனால், மக்களின் எல்லாத் தலைவர்களும் இக் குழுவில் இருந்தனரெனத் திட்டமாய்க் கூறுவதற்கில்லை; மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவருமில்லை. ஆயினும் இக் குழுக்களிலிருந்த மற்ற அலுவலர்களைப் போலல்லாது இவர்கள் மக்களின் பொதுப் பிரதிநிதிகள் எனக் கருதலாம். இக் குழுக்களுக்குக் கூட்டுப் பொறுப்பு இருந்ததெனக் கூறுவதற்கும் இடமில்லை. பொதுவாக அவரவருக்கு அளிக்கப்பட்டிருந்த துறைகளின் பொறுப்புகளை அவர்கள் பார்த்து வந்தனர்.

பொதுவாக அரசு எவ்விதம் நடைபெற்று வந்தது. மக்கள் நலம் எவ்விதம் கருதப்பட்டுவந்தது என்பது மன்னனைப் பொறுத்தே இருந்தது. உண்மையும், மக்கள்பால் வாஞ்சையுமுடைய அரசர் இடைவிடாது செயலாற்றி வந்தனர். ஒற்றர்கள் வாயிலாக மக்கள் நிலையை அறிந்து அதற்கு ஏற்றவாறு பணியாற்றி வந்தனர். ஒற்றர்கள் மீது வேறு ஒற்றர்களையும் ஏவி உண்மையை அறிந்து வந்தனர். சங்க நூல்களிலிருந்து பொதுவாக மன்னர்கள் மக்கள் நல்வாழ்வுக்காக அரும்பாடு பட்டனர் என்றே கூறலாம்.

### ஊராட்சி

எக்காலத்திலும் பாரதநாட்டில் அடிப்படையாயிருந்தவை சிற்றூர்களே. பண்டைத் தமிழகத்திலும் அஃது அவ்விதமே இருந்தது விந்தையன்று. ஆகவே, ஊராட்சிபற்றி அறிவது மிகத் தேவை. பிற்காலம், குறிப்பாகச் சோழப்பேரரசு காலத்தில் ஓங்கி வளர்ந்த ஊராட்சிக்கு வழிகோலியாயிருந்தது சங்ககால வழக்கமேயாகும்.

ஊர்களில் கூடின கூட்டத்திற்கு மன்றம், பொதியில், அம்பலம், அவை என்னும் பெயர்கள் விளங்கியிருந்தனவாகப்

பண்டைத் தமிழ் இலக்கியங்களிலிருந்து அறிகிறோம். இவை யாவும் ஊர்க் கூட்டத்தின் பெயர்களெனவே கருதலாம். திருமுருகாற்றுப்படையில் மட்டிலும், மன்றமும் அம்பலமும் வேறுபடுத்திக் கூறப்பட்டுள்ளன. அதன் உரையாசிரியர் பின் வருமாறு கூறியுள்ளார்: மன்றம் என்பது ஊர் நடுவிலுள்ள மக்கள் கூடிய இடம் எனவும், அம்பலம், பொதியில் என்னும் இரண்டும் ஒரு சிறு மாளிகையைக் குறிப்பிட்டனவென்றும் அதன் நடுவில் ஒரு பீடம் இருந்ததாகவும் கருதுகின்றார். இதை ஒட்டிப் பலர் பல ஊகங்களைப் வெளியிட்டுள்ளனர். எடுத்துக் காட்டாக, கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார், மன்றம் என்றது ஒரு மாளிகை என்றும், பொதியில் என்றது ஒரு பொது இடம் என்றும் கருதுகிறார். பொதியில் என்றது பொது இல் என்னும் சொற்களின் இணைப்பில் ஏற்பட்டதெனலாம்; அதாவது பொதுவான இருப்பிடம் என்பது பொருள்.

பொதியில் சாணத்தால் மெழுகப்பட்டிருந்ததெனப் பட்டினப் பாலை 246-49 ஆம் அடிகளிலிருந்து அறிகிறோம். சில ஊர்களில் பெரிய மரத்தடியில் மன்றம் அல்லது பொதியில் கூடியது. குறிப்பாக, வேப்ப மரத்தடியில் இவை அமைந்திருந்தனவெனப் புறநானூற்றுச் செய்யுள்களிலிருந்து அறிகிறோம்.[222]

மன்றம் அல்லது பொதியில் என்ற கூட்டங்களின் சிறந்த பணி மக்களிடையே நிகழ்ந்த வழக்குகளைத் தீர்ப்பதாகவே இருந்தன. அக் கூட்டங்களின் முதியோர் இவ் வழக்குகளைத் தீர்த்துவைத்தனர். இத் தலைவர்கள் ஊர்மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரெனக் கூற முடியாது. வயதிலும் அறிவிலும் முதியோராயிருந்தவர் தாமாகவே தலைவராக அமர்ந்திருந்தனரெனவே கருத வேண்டும். வழக்குகளை ஒழுங்குபடுத்துவதைத் தவிர ஊர்ப் பொதுக்காரியங்களையும் சமூகநலத் திட்டங்களையும் மன்றத்தார் பொறுப்பேற்று நடத்தி வந்தனரெனவும் கூறலாம். அரசு, ஊர்களின் அன்றாடச் செயல்களிலும் பொறுப்புகளிலும் தலையிட்டதென்பதற்குச் சான்றுகள் இல்லை.

ஊரின் சில பகுதிகள் சேரிகள் என்று அழைக்கப்பட்டிருந்தன. சேரிகளில் சில வகுப்பினர் குடியிருந்துவந்தனர். தாழ்ந்த வகுப்பினர் வாழ்ந்த இடங்களுக்குத்தாம் அப் பெயர் வழங்கப்பட்டிருந்ததெனக் கூறமுடியாது; பறைச்சேரி என்பதுபோல் பார்ப்பனச்சேரி, இடைச்சேரி என்றெல்லாம் பெயர்கள்

222. புறம். 76, 79, 371.

இருந்தன. சாதிப் பிரிவுகள் ஊர் அமைப்பில் அக்காலத்திலேயே இடம்பெற்றுவிட்டதெனத் தோன்றுகின்றது.

## நகராட்சி

சங்க காலத் தமிழகத்தில் சில நகரங்கள் இருந்தன. ஊர்களில் சிற்றூர், பேரூர், மூதூர் என இருந்தமைபோல், நகரங்களில் பட்டினம், பாக்கம் எனச் சில இருந்தன. பட்டினம் என்றது கடலோரமாயிருந்த நகரைக் குறித்தது. பாக்கம் பட்டினத்தின் ஒரு பகுதியெனலாம்.

சங்ககாலத்தில் வளர்ச்சிபெற்றிருந்த நகரங்களுள் சிறந்தவை புகார் (காவிரிப்பூம்பட்டினம்), கொற்கை, மதுரை, வஞ்சி அல்லது கரூர், முசிறி, காஞ்சி முதலியவை. இவற்றைப்பற்றி இலக்கியங்களில் கிடைத்துள்ள விவரங்கள் முழுவதையும் நம்புவதற்கில்லை. கவிஞர்களின் கற்பனைகளும் சொல்வன்மைகளும் விவரணங்களில் இடம் பெற்றுள்ளன.

ஆயினும், பொதுவாக நகரங்கள் வணிகத்தினாலும் தொழில் சிறப்பினாலும் வளமுற்றிருந்தன. குறிப்பாக, மதுரையும் காவிரிபூப்பட்டினமும் சிறப்புற்று வளர்ந்திருந்தன. தமிழக நகரங்களில் மக்களின் சுயாட்சி நிலவியதென்பதற்குச் சான்றுகளில்லை. ஆட்சிமுறையும் வடஇந்தியாவில் பாடலிபுத்திரத்தில் அமைந்திருந்ததுபோல் இங்கு நன்கு அமைக்கப்பட்டிருந்ததென்பதற்கு அறிகுறியில்லை. ஆயினும் மதுரை, வஞ்சி போன்ற தலைநகரங்கள் சீராக ஆளப்பட்டு வந்தனவெனக் கூறலாம். மதுரை மாநகரின் தெருக்கள் அன்றாடம் காலையில் பெருக்கப்பட்டுச் சுத்தமாயிருந்தனவென்று தெரிகிறது.

இராப்பொழுதில் நகரங்கள் அக்கறையாகப் பாதுகாக்கப்பட்டு வந்தன; ஊர்காவலர் என்று அழைக்கப்பட்ட காவலாளர்கள் அமர்த்தப்பெற்றிருந்தனர். பாதுகாப்புக்காகக் காவல் நாய்களும் பயன்படுத்தப்பட்டிருந்தன. மன்னர்களது அரண்மனைகள் ஆழ்ந்த அக்கறையுடன் பாதுகாக்கப்பட்டமை விந்தையன்று.

பொதுவாக சங்க காலத்தில் சிற்றூர்களும், பேரூர்களும், நகரங்களும் அவற்றிற்குத் தகுந்தவாறு ஆளப்பட்டு வந்தனவெனக் கூறலாம். அவை மிகச் சிறந்த முறையில் நடைபெற்று வந்தனவென்றோ பிற்காலங்களில் திகழ்ந்த முறைக்கு ஒப்பாக இருந்தனவென்றோ கருத இடமில்லை.

கடவுளும் சமயமும்

தமிழருக்கு முன்பு தமிழகத்தில் வாழ்ந்திருந்த ஆதிகுடிகளின் கடவுட்கொள்கைகளும், தமிழ் மக்களின் சமயக் கொள்கைகளும், ஆரியரின் சமயக் கொள்கைகளும் ஒன்றுகலந்து சங்க காலத்து மக்கள் சமுதாயத்தில் இடம் பெற்றிருந்தன. தமிழர் உயிர் துறந்த வீரர்கட்குக் கல்நாட்டி வணங்கினர். வீரக்கல் நடும் வழக்கம் தொல்காப்பியத்துக்கு முன்பே காணப்பட்டது. அந் நடுகற்களுக்கு மலர்மாலை அணிவித்து மயிற்பீலிகளால் அணி செய்வர்.[223] பழந்தமிழர் பேய்பூதங்களில் நம்பிக்கைகொண் டிருந்தனர்.[224] அவர்கள் காலத்தில் மரணத்துக்குப் பிற்பட்ட துறக்கம், நரகம் என்ற நிலைகளைப்பற்றிய கொள்கைகள் உருவாகிவிட்டன.[225]

மரத்தின்கீழ்த் தெய்வங்கள் தங்கியிருந்தன என்று அக் காலத்து மக்கள் நம்பினர்.[226] ஆலமரத்தின்கீழ்ச் சிவபெருமான் அமர்ந்திருப்பதாகப் புராணக் கூற்றுகள் உண்டு.[227] ஆலிலை மேல் திருமால் பள்ளிகொண்டார். வேம்பு, கடம்பு, வில்வம், கொன்றை முதலிய மரங்கள் தெய்விகம் பெற்றிருந்தன. மன்னர் தமக்கெனக் காவல் மரங்கள் கொண்டிருந்தனர்.[228] பண்டைக்காலத்தில் மூன்றாம் பிறையைத் தொழும் வழக்கம் பெரிதும் காணப்பட்டது.[229]

ஹாரப்பா, மொகஞ்சதாரோ மக்கள் சிவலிங்க வழிபாடு செய்துவந்தனர் என்று அங்குக் கிடைத்துள்ள சான்றுகள் சிலவற்றால் அறிகின்றோம். இவ் வழிபாட்டைப் பால்குறி வழி பாட்டின் வடிவமாகக் கொள்ளுகின்றனர். தமிழர்கள் இப் பண்டைய நாகரிகத்தைச் சார்ந்தவர்கள் என்று ஆராய்ச்சி யினால் உறுதியாகுமாயின் பால்குறி வழிபாடு இற்றைக்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழரிடையே நிலவி வந்த தெனக் கொள்ளலாகும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து திணைகட்கும் ஐந்து கடவுளர் வழிபாட்டுக்குரியவர் களாக இருந்தனர். சேயோன், மாயோன், வேந்தன், வருணன், கொற்றவை ஆகிய இக் கடவுளரைப்பற்றிய எண்ணற்ற புராணக் கதைகள் சிலப்பதிகாரக் காலத்துக்குள் தமிழகத்தில் நுழைந்து

223. புறம். 232, 264.
224. பதிற்றுப். 13: 15
225. புறம். 240: 6.
226. அகம். 270 :12.
227. புறம். 198: 9.
228. புறம். 23, 36, 57, 162, 336.
229. புறம். 1; 9-10; குறுந். 178.

விட்டன. தமிழகத்தில் குடியேறிய ஆரியர்கள் சமயக் கதைகள் பலவற்றைப் புனைந்து பரப்பிவிட்டனர். அவர்கள் வேள்விகள் வளர்க்கத் தொடங்கினர். அதற்கு மன்னரின் துணையை நாடிப் பெற்றனர். பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற மன்னன் சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்திருந்தவன். அவன் அந்தணருக்குப் பல வேள்விச் சாலைகளை அமைத்துக் கொடுத்தும், பல வேள்விகளை வேட்பித்தும் தன் பெயருக்குமுன் ‘பல்யாகசாலை’ என்ற விருது ஒன்றைப் பெற்றுக்கொண்டான். இராசசூய வேள்வி வேட்டுச் சோழ மன்னன் ஒருவன் ‘இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி’ என்ற பட்டம் பெற்றான். பல் யானைச் செல்கெழு குட்டுவன் என்ற சேர மன்னன் பாலைக் கவுதமனார் என்ற புலவர் ஒருவரின் உதவியுடன் ஒன்பது வேள்விகள் வேட்பித்தான்.

சங்க காலத்திலும் ஊழையும் கடவுளையும் பொய்யெனக் கருதியவர்கள் இருந்தனர். அக்காலப் புலவர்கள் அவர் களுடைய கொள்கையை ஏற்றுக்கொண்டிலர்; வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் அதை அவர்கள் வன்மையாக மறுத்து வந்தனர்.[230] ‘உலகத்தார் உண்டு என்பது இல்என்பான் வையத்து அலகையா வைக்கப் படும்’[231] என்று திருவள்ளுவரும் அக் கொள்கையினரைக் கடிந்து பாடியுள்ளார். ‘குணம் குறி களைக் கடந்தும், மனம் மெய்களுக்கு எட்டாமலும் உள்ள ஒருவனே இறைவன்’ என்ற பொருளைக் குறிக்கும் ‘கடவுள்’ என்னும் சொல் தமிழில் சிறப்புடைய சொற்களில் ஒன்றாகும்.[232] இச் சொல் சுட்டும் கருத்துச் சங்க காலத்தில் நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது.[233] சிவன் முழுமுதற் கடவுளாகக் கொள்ளப் பட்டான்.

பண்டைய தமிழகத்தில் சங்க காலத்தில் சிறுதெய்வ வழி பாடும் நடைபெற்று வந்தது. ‘கள்ளி நிழற்கடவுள்’[234]. ‘கூளி’[235], ‘பேய்’[236] ஆகிய தெய்வங்கட்கும் மக்கள் வணக்கம் செலுத்தி வந்தனர். உற்பாதங்களிலும், தீயகனவுகளிலும், பறவை நிமித்தத்திலும், விண்ணினின்றும் கொள்ளி மீன் விழுவதிலும், உன்னமரம் பூத்ததிலும் மக்கள் பின்னர் நிகழவிருந்த நிகழ்ச்சி களை முன்னரே அறிவிக்கும் குறிகளைக் கண்டனர்.

230. புறம். 29: 11, 52.
231. குறள். 850.
232. புறம். 106, 399.
233. புறம். 100: 7; கலித். 10: 7.
234. புறம். 260.
235. புறம். 23.
236. புறம் : 37, 238, 369, 373

## அரச பரம்பரை

### சேரர்

சங்க இலக்கியத்தில் முந்நூற்றுக்கு மேற்பட்ட மன்னர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. ஆனால், அவர்களுடைய அரசியல் வரலாற்றைத் தொடர்ச்சியாக எழுதுவதற்கான குறிப்புகள் சங்க நூல்களில் கிடைக்கவில்லை. வேந்தர்கள் பலர் வியப்பூட்டும் வீரச்செயல்கள் ஆற்றியுள்ளனர். பாரதப் போரில் பங்கு கொண்டவரெனக் கூறப்படும் மன்னர் மூவரின் பெயர்கள் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன. வரலாற்றில் நம் கருத்தை முதன் முதலாகக் கவர்பவன் உதியஞ்சேரல் என்னும் சேர மன்னனாவான். பாரதப் போரில் கலந்துகொண்ட கௌரவ, பாண்டவ சேனைகளுக்குப் பெருஞ்சோறு வழங்கினான் இம் மன்னன் என்று தமிழ் இலக்கியத்தில் சில குறிப்புகள் காணப் படுகின்றன.[237] இப்போது மறைந்து கிடக்கும் பதிற்றுப்பத்தின் முதற்பத்தின் பாட்டுடைத் தலைவன் இவனே என்று எண்ண இடமுண்டு. பாரதப் போரில் சோறு வழங்கியவன் இச் சேர மன்னன்றானா என்பதைப்பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் ஆய்வாளரிடையே காணப்படுகின்றன. இவன் மகன் இமயவரம் பன் இரண்டாம் பத்துக்குப் பாட்டுடைத் தலைவனாக விளங்கு கின்றான். இவன் அரபிக் கடலில் கடற்கொள்ளை நடத்தி வந்த கடம்பர்களை வென்று அவர்களுடைய காவல் மரமான கடம்பை அறுத்து வெற்றிக்கொடி நாட்டினான். இவன் யவனர்களைப் பல போர்களில் தோல்வியுறச் செய்தான்.[238] வடஇந்தியாவில் இமயமலை வரையிலும் படையெடுத்துச் சென்று ஆரிய மன்னரை வணங்கவைத்தான்.[239] இவனைப் பற்றிக் குமட்டூர்க் கண்ணனார் பாடிய பாடல் பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

சேர மன்னருள் மிகவும் சீருடனும் சிறப்புடனும் திகழ்பவன் சேரன் செங்குட்டுவன் ஆவான். இவன் இமயவரம்பனுக்கு இரண்டாம் மனைவியின்பால் பிறந்தவன். சோழன் கரிகாலன் இறந்த பிறகு அவனுடைய மகன் கிள்ளிவளவன் அரசுகட்டில் ஏறாதவாறு சோழ இளவரசர்கள் எழுவர் கிளர்ச்சி செய்தனர். செங்குட்டுவன் கிள்ளிவளவனுக்குப் போர்த் துணை நல்கி அவனுக்கு முடிசூட்டுவித்தான்.

237. புறம்.2; அகம். 233; சிலப். 23: 55.
238. பதிற்றுப். பதி. 8.
239. புறம். 39: 15-16; அகம். 396: 17.

சேரர்களின் பரம்பரையில் விளங்கிய மற்றொரு வேந்தன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்பான். குட்டநாட்டின் மேல் படையெடுத்துவந்தவர்களான சதகன்னர்களை முறியடித்தவன் இவன்.

செல்வக் கடுங்கோ வாழியாதன் என்ற மற்றொரு சேர மன்னனைப்பற்றிக் கபிலர் பாடிய பாடல் பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்தாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இவன் மகன் பெயர் பெருஞ்சேரல் இரும்பொறை என்பதாகும். தகடூர் என்ற இடத்தில் நிகழ்ந்த பெரியதொரு போரில் சோழ பாண்டிய மன்னரை முறியடித்து வரலாற்றுப் புகழ்பெற்ற வெற்றி யொன்றைக் கொண்டான். இவனுடைய போர்த்திறனை வியந்து 'தகடூர் யாத்திரை'' என்னும் ஒரு நூலை ஒரு புலவர் பாடினார். இந் நூல் இப்போது மறைந்துவிட்டது. பெருஞ் சேரல் இரும்பொறை தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் பாராட்டிப் புரந்தவன்,

பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பத்துத் தலைவன் இளஞ்சேரல் இரும்பொறை என்பவன். கோப்பெருஞ் சோழனையும், இளம் பழையன் மாறன் என்ற பாண்டியனையும், விச்சி என்ற குறுநில மன்னன் ஒருவனையும், இச் சேர மன்னன் போரில் வென்றான்.[240]

## சோழர்

சங்க இலக்கியங்களுள் மிகவும் பழையன எனக் கருதப் பெறும் பாடல்களால் தொகுக்கப்பட்டுள்ள புறநானூற்றில் பல சோழ மன்னர்களைப்பற்றிய செய்திகள் பொதிந்து கிடக்கின்றன. அவர்களைப் புலவர் பலர் பாடியுள்ளனர். எனினும், அவர்களைப் பற்றிய வரலாறுகள் ஒன்றும் திட்டமாகக் கிடைக்கவில்லை. அவர்களுள் தலைசிறந்து விளங்குபவன் சோழன் கரிகால் பெருவளத்தான் ஆவான். இவன் பொருநராற்றுப்படைக்கும் பட்டினப்பாலைக்கும் பாட்டுடைத் தலைவனாகக் காட்சி தருகின்றான். இவனுடைய தந்தை சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி அழுந்தூர் வேளிடை மகள் கொண்டான். கரிகாற்சோழன் நாங்கூர் வேளிடைப் பெண் கொண்டான்.[241] இவனுடைய அம்மான் இருப்பிடர்த்தலையார். இவன் இளமையில் தீயில் சிக்கி உயிர் பிழைத்தான். முதியோர் இருவர் தம்முள் மாறுபட்டு வந்து கரிகாலனிடம் வழக்குத் தீர்த்துக்கொள்ள விரும்பினர், ஆனால்,

240. புறம். 200 : 8.
241. தொல்.பொருள். அகத். 30 (நச்சர் உரை)

இவன் இளையோன் என்று கருதி இவனை இகழ்ந்தனர். கரிகாலன் தானும் ஒரு முதியோன் போல உருமாறி வந்து அவ் வழக்கை நேர்மையுடன் தீர்த்து அவர்களை மகிழ்வித்தான்.[242] இவன் கருவூரில் தங்கியிருந்தபோது கழுமலத்திலிருந்து யானை ஒன்று வந்து இவனைத் தன் முதுகின்மேல் ஏற்றிக்கொண்டு வந்து அரியணையின்மேல் அமர்த்திற்றாம்.

கரிகாலன் தமிழ்ப் புரவலன். தன்மீது பட்டினப்பாலை என்னும் நூலைப் பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணனாருக்கு இவன் பதினாறு நூறாயிரம் பொன் பரிசளித்தான் என்று கூறப் பட்டுள்ளது.[243] முடத்தாமக் கண்ணியார் என்ற மற்றொரு புலவர் இவன்மேல் பொருநராற்றுப்படையைப் பாடியுள்ளார்.

தஞ்சைக்கு இருபத்துநான்கு கிலோமீட்டர் தொலைவி லுள்ள வெண்ணி என்னும் ஊரில் நிகழ்ந்த ஒரு போரில் சோழன் கரிகாலன் சேரன் பெருஞ்சேரலாதனையும், பாண்டியன் ஒருவனையும் பதினொரு வேளிரையும் ஒருங்கே தோல்வியுறச் செய்தான்.[244] இவனைப் பற்றிய பாடல்கள் புறநானூற்றில் சேர்க்கப்பட்டுள்ளன. இமயம்வரையில் படையெடுத்துச் சென்று தன்னை எதிர்த்து நின்ற மன்னர் அனைவரையும் வணக்கி இமயத்தில் புலி இலச்சினையைப் பொறித்துத் திரும்பி னான். தன் தோள் வல்லமையினால் தமிழகம் முழுவதையும் கரிகாலன் தன் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தான்.

கரிகாலன் இலங்கையின்மேல் படையெடுத்துச் சென்றான், அது இவனுடைய வாழ்க்கையிலேயே ஒரு பெரிய நிகழ்ச்சியாகும். இலங்கையின் வரலாற்றைக் கூறும் மகாவமிசம் என்னும் நூலில் இப் படையெடுப்பைப் பற்றிய செய்திகள் காணப்படவில்லை. எனினும், இலங்கையின் பிற்காலத்திய வரலாறுகள் அதைப் பற்றிக் கூறுகின்றன. இலங்கைப் போரினால் கரிகாலனுக்கு விளைந்த நன்மைகள் பல. அவன் சிங்களவர் பன்னீராயிர வரைச் சிறை செய்து கொண்டுவந்து காவிரிப்பூம்பட்டினத்தில் கோட்டை கட்டுவதற்கு அவர்களைப் பணிகொண்டான்.

கரிகாலன் தன் குடிமக்களுக்குப் பல் நன்மைகள் புரிந்தான். அவற்றுள் மிகவும் சிறப்பானது காவிரியாற்றின்மேல் இவன் கட்டிய அணையேயாகும். மக்களுக்கு உணவை வழங்கிய உழவுத்

242. மணி. 4: 107-108: பொருநர். 187-8:பழமொழி, 21, 62, 105.
243. கலிங். 198.
244. பொருநர். 146-8; அகம். 55: 10-11; 246;8-13; புறம். 7, 66, 224.

தொழிலை வளர்த்தலில் பழங்காலத் தமிழ்மன்னர்கள் கண்ணுங் கருத்துமாக இருந்து வந்தனர்.[245] 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்னும் பேருண்மையை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். கரிகாலன் திருவரங்கத்துக்கு மேற்கே பெரிய தோர் அணையைக் கட்டிப் பல கால்வாய்களின் மூலம் காவிரித் தண்ணீரை உழவுக்குத் திருப்பிவிட்டான். அக் கால்வாய்களுள் மிகவும் பெரியது இப்போது வெண்ணாறு என்று வழங்குகின்றது. தஞ்சை மாவட்டத்துக்குச் செழுமையை வழங்குவது அவ்வாறு தான். கரிகாலன் ஆட்சியில் மேலும் பல ஆக்கப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. உள்நாட்டு அயல்நாட்டு வாணிகங்கள் செழிப்புடன் நடைபெற்று வந்தன. இசையும் கூத்தும் வளர்ந் தன. சமணப்பள்ளிகள் பலவும், பௌத்தப் பள்ளிகள் பலவும் பூம்புகாரில் பூசல்கள் ஏதும் இன்றி நடைபெற்று வந்தன.[246]

சோழநாட்டில் அரசுரிமைப் போர்கள் நடைபெற்றன. சேட்சென்னி என்ற நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் அரசுரிமைப் போராட்டம் நெடுநாள் நீடித்து வந்தது. நெடுங் கிள்ளி ஆவூர்க் கோட்டைக்குள்ளிருந்து போர் செய்து கொண் டிருந்தான். நலங்கிள்ளியின் தம்பியான மாவளத்தான் என்ப வன் அக் கோட்டையை முற்றுகையிட்டிருந்தான். முற்றுகை அகலவுமில்லை; நெடுங்கிள்ளி பணிந்து வரவுமில்லை. கோட்டைக்குள் குழந்தைகள் பாலின்றிப் பசியால் அரற்றின. சூடுவதற்கு மலர்கள் இன்றிப் பெண்கள் வெறுங்கூந்தல் முடித் தனர். மக்கள் குடிக்கவும் தண்ணீரின்றித் தவித்தனர். கோவூர் கிழார் என்ற புலவர் இத் துன்பங்களைக் கண்ணுற்று உள முடைந்தார். மக்கள் பட்ட இன்னல்களை அவர் நெடுங் கிள்ளிக்கு எடுத்துக் காட்டி, 'நீ அறமுடையவனாயின் கோட்டை வாயிலைத் திறந்துவிடு. மறம் உடையவனாயின் போர் செய்' என்று இடித்துக் கூறினார்.[247] மன்னன் அவருடைய அறவு ரைக்கு இணங்கவில்லை. எனவே, அவர் நலங்கிள்ளியையும் ஒருங்கே விளித்து, 'நீங்கள் இருவரும் ஒரே குலத்தினர். உங்க ளுக்குள் ஒருவர் தோற்றாலும், தோல்வி என்னவோ சோழர் குலத்துக்குத்தானே. நீங்களோ வெற்றியடைவது என்பது முடியாது. ஆகவே, இப் போரைக் கைவிடுங்கள்' என்று அறி வுறுத்தினார். வேறொரு சமயம், இளந்தத்தன் என்ற புலவர் ஒருவரைப் பகையொற்றன் என்று ஐயுற்ற நலங்கிள்ளி அவரைக் கொல்ல முயன்றான். அப்போது கோவூர்க்கிழார் இவ்விக்

245. பட்டினப். 205.
246. பட்டினப். 53.
247. புறம். 44.
248. புறம். 47.

கட்டில் குறுக்கிட்டு உண்மையை விளக்கி அப் புலவரைக் காப்பாற்றி விட்டார்.[248]

கிள்ளிவளவன் நாட்டில் பல தீநிமித்தங்கள் தோன்றின. எரிகொள்ளிகள் வானத்திலிருந்து எட்டுத் திசைகளிலும் கீழே விழுந்தன. மரங்கள் பற்றி எரிந்தன. அச்சந்தரக்கூடிய பறவைகள் கூவின. பற்கள் உதிர்ந்து கீழே கொட்டுவது போலவும், தலையில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளுவது போலவும், பன்றிமேல் ஏறுவது போலவும், உடுத்தின ஆடையைக் களைவது போலவும், படைக்கலங்கள் கழன்று விழுவது போலவும் மக்கள் பல தீக்கனவுகள் கண்டனர். இத்தனை தீய குறிகளையும் பொருட்படுத்தாதவனாய் மன்னன் போர்க்கோலங்கொண்டான். அவனுடைய அறியாமையை எடுத்துக்கூறிக் கோவூர் கிழார் அவனுடைய போர் முனைப்பைத் தணிக்க முயன்றார்.[249]

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி. சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி எனப் பல சோழ மன்னர்கள் சங்ககாலத்தில் அரசு புரிந்து புலவர் பெருமக்களின் பாக்களில் புகழுடம்பு பெற்றுள்ளனர். இச் சோழ வேந்தர் அனைவரினும் மேலான புகழ் மாலைகளைப் பெற்று விளங்குபவன் சோழன் கோச்செங்கணான் என்பவன். இவன் திருப்போர் என்ற இடத்தில் சேரன் கணைக்கால் இரும்பொறையை வென்று புறங்காட்டச் செய்தான். அவனைச் சிறை செய்து குடவாயிற் கோட்டத்துச் சிறையில் அடைத்துவைத்தான். சேர மன்னனுக்கு ஒரு சமயம் நீர்வேட்கை ஏற்படவே காவலாளரைத் தண்ணீர் கேட்டான். அவர்கள் காலந் தாழ்த்துத் தண்ணீர் கொணர்ந்தனர். சேரன் அதை ஏற்றுக்கொள்ள மறுத்து, 'மன்னர்கள் குலத்தில் ஆண் குழந்தை இறந்து பிறந்தாலும், ஊன் பிண்டம் ஒன்று பிறந்தாலும், அதைப் பிறந்தவாறே மண்ணில் அடக்கம் செய்வது மன்னர் அறத்துக்கு இழுக்காதலால் அதை ஒரு வாளினால் பிளந்த பிறகே அடக்கம் செய்வர்'[250] என்னும் பொருள்பட ஒரு பாடலை இயற்றித் தன் மானமுடைமையைப் புலப்படுத்தினான். அவனுடைய நண்பரான பொய்கையார் என்ற புலவர் 'களவழி நாற்பது' என்னும்

248. புறம். 47. 250. புறம். 74
249. புறம். 41.

அரியதொரு நூலைப் பாடிச் சோழனை மகிழ்வித்துச் சேர மன்னனைச் சிறையினின்றும் மீட்டார். இப்போர் கழுமலம் என்ற இடத்தில் நடைபெற்றதாக இந்நூல் தெரிவிக்கின்றது. இது பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகத் தொகுக்கப் பட்டுள்ளது.

சோழன் செங்கணான் மிகவும் சிறந்த சிவத்தொண்டன். இவன் 'எண்தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து' உலகம் ஆண்டதாகத் திருமங்கையாழ்வார் பாடுகின்றார்.[251] இவன் வைணவக் கோயில்களும் எடுப்பித்தான். சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையில் நாயன்மார் வரிசையிலே கோச்செங்கணானும் சேர்க்கப்பட்டிருப்பது அவனுடைய பெருமையை எடுத்துக்காட்டுகின்றது.

## பாண்டிய மன்னர்

சங்ககாலப் பாண்டிய மன்னர்களுள் காலத்தால் மிகவும் முற்பட்டவன் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் என்பான். இவனுடைய அரசவையிற்றான் தொல்காப்பியம் அரங்கேற்றப் பட்டது என்று நச்சினார்க்கினியர் கூறுவார்.[252] இவன் முடிசூடிக் கொண்டு நெடுங்காலம் ஆண்டு வந்தான் எனத் தெரிகின்றது. 'நெடியோன்' என்று இவனைச் சங்க நூல்கள் பாராட்டு கின்றன.[253] இவன் வழியில் வந்தவன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பவன். இவனை வேள்விக்குடிச் செப்பேடுகள், 'கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந் தவிர்த்த-பல்யாக (சாலை) முதுகுடுமிப் பெருவழுதியெனும் பாண்டியாதிராசன்' என்று புகழ்ந்துரைக்கின்றன. சங்கநூல் தரும் செய்தி செப்பேடுகளினால் சான்று பெறுவது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. இப் பாண்டிய மன்னன் வேதியருக்குப் பல யாகசாலைகள் அமைத்துக் கொடுத்தான் என்றும், இவனே பல வேள்விகளைச் செய்வித்தான் என்றும் கூறுவர்.[254]

சங்ககாலப் பாண்டியருள் சிறந்து விளங்கிய மற்றொருவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்பவன். மதுரைக்காஞ்சிக்கும் நெடுநல்வாடைக்கும் இவனே பாட்டுடைத் தலைவனாகக் காட்சியளிக்கின்றான். நெடுஞ்செழியன் மிக இளமையிலேயே அரசுகட்டில் ஏறினான். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், சேரமான்

251. நா. திவ். பிர. 1505.
252. தொல். பாயி. உரை (நச்சி)
253. மதுரைக். 60-61.
254. புறம். 6, 9, 12, 15, 64.

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் வேளிர் ஐவரும் ஒன்றுகூடி மதுரையின்மேல் படையெடுத்தனர்; நகரை முற்றுகையிட்டனர். பாண்டியன் வீரத்துடன் போராடி மதுரையை விடுவித்துக் கொண்டதுமன்றிப் பகைவரைத் துரத்திக்கொண்டுவந்து தலையாலங்கானம் என்ற இடத்தில் அவர்கள் அனைவரையும் ஒருங்கே முறியடித்தான்.[255] சேர மன்னனைச் சிறைபிடித்துப் பாண்டியநாட்டுச் சிறையில் அடைத்து வைத்தான். எவ்வி என்ற வேளிர் மன்னனுடைய மிழலைக் கூற்றத்தையும், முத்தூற்றுக் கூற்றத்தையும் கைப் பற்றித் தன் நாட்டுடன் இணைத்துக்கொண்டான். இப் பாண்டியன் தானே புலமை சான்றவனாக விளங்கினான். கல்வி கற்றலின் பெருமையையும் சிறப்பையும் வியந்து கூறும் இவனுடைய பாடல் ஒன்று புறநானூற்றில் சேர்க்கப் பட்டுள்ளது.[256] ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என் பானும், கண்ணகி வழக்கில் அறம்பிழைத்து உயிர் நீத்தவனும் இம் மன்னனேயாவான் என்று நினைப்பதற்கு இடமுண்டா? தலையாலங்கானத்துப் போரில் இந் நெடுஞ்செழியன் பெற்ற மாபெரும் வெற்றியை மூன்றாம் இராசசிம்ம பாண்டியனுடைய சின்னமனூர்ச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன

பாண்டியன் கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதி எனற மன்னன் கடைச்சங்கப் பாண்டிய மன்னருள் இறுதியாய் வாழ்ந்தவனாவான். இவன் தன் பகைவன் வேங்கை மார்பனை வென்று அவனுடைய கானப்பேரரணைக் கைப்பற்றினான்.[257] மாவெண்கோ என்ற சேர மன்னனுடனும், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற சோழனுடனும் நட்புப் பூண்டிருந்தான்.[258] இவனே சிறந்த புலவனாக விளங்கினான். திருக்குறளைப் பாராட்டும் வெண்பா ஒன்று இவன் பேரால் காணப்படு கின்றது.[259] எட்டுத் தொகையுள் அகநானூற்றைத் தொகுப் பித்தவன் இம் மன்னனே யாவான். இவனுடைய அரசவை யிற்றான் திருக்குறள் அரங்கேற்றம் செய்யப்பட்டதாகக் கருது கின்றனர். இவனைப் பற்றிய குறிப்புகள் இறையனார் அகப் பொருள் உரையிலும், சிலப்பதிகார உரையிலும் காணப்படு கின்றன. இவனை ஐயூர் மூலங்கிழாரும்,[260] ஔவையாரும்[261] பாடியுள்ளனர். இவன் பாடியதாகக் கொள்ளப்படும பாட்டு

255. புறம். 19, 23; நற்றி. 387.
256. புறம். 183.
257. புறம். 21.
258. புறம். 367.
259. திருவள். மாலை. 4.
260. புறம். 21
261. புறம். 367

ஒன்று அகநானூற்றிலும்,[262] மற்றொன்று நற்றிணையிலும்[263] சேர்க்கப்பட்டுள்ளன.

மேலே குறிப்பிடப்பட்ட பாண்டியரே அன்றி வேறு சில பாண்டிய மன்னரின் பெயர்களும் எட்டுத்தொகை நூல்களில் காணப்படுகின்றன. அவர்களைப் பற்றிய விளக்கம் கிடைக்க வில்லை. சங்க காலத்துப் பாண்டிய மன்னருள் பன்னிருவர் சிறந்த தமிழ்ப் புலவர்களாக விளங்கினர் என்பது பாராட்டத் தக்கதாகும். இவர்களுடைய பாடல்கள் புறநானூறு, அக நானூறு, நற்றிணை, குறுந்தொகை, பரிபாடல் ஆகிய நூல் களில் காணப்படுகின்றன.

### குறுநில மன்னர்கள்

தமிழகத்தில் குறுநில மன்னர்கள் பலர் ஆங்காங்கு வாழ்ந் திருந்தனர்; அவர்களுள் வேளிர்கள் என்பவர்கள் ஒரு குடியைச் சேர்ந்தவர்கள். அவர்களுள் சிறந்தவன் ஆய் அண்டிரன் என்ற மன்னன். அவனைப் பாடிய புலவர்கள் பலர்.[264] அவன் கடை யெழு வள்ளல்களுள் ஒருவனாக வரிசைப்படுத்தப்பட்டுள்ளான். அவன் பொதிய மலையை ஆண்டுவந்தான். கொங்கு நாட்டைத் தனக்குப் பணிய வைத்தவன். ஆய் அண்டிரன் மிகச் சிறந்த பண்பாளன் என்று ஔவையார் பாடியுள்ளார்.[265] இப் பிறப்பில் செய்யும் நன்மை மறுபிறப்புக்கு உதவும் என்று கருதித் தன் பொருளைக் கொடையாக அளித்து அறத்தை விலைக்கு வாங்கும் வணிகன் அல்லன் ஆய் என்று அவன் பாராட்டப் பட்டுள்ளான்.

கபிலரின் நண்பனான பாரி என்பான் மற்றொரு வேளிர் குலத் தலைவனாவான். பாண்டி நாட்டில் கொடுங்குன்றம் என்ற இடத்தினின்றும் ஆட்சி புரிந்து வந்தான். கேட்டவர்கள் கேட்ட வாறே வாரி வழங்கிய வள்ளல் என்று பிறகாலத்தவரான சுந்தரமூர்த்தி சுவாமிகள்[266] பாடியுள்ளார். 'ஒசிந்த கொடி முல்லைக்குக் கொழு கொம்பாகத் தன் தேரை நிறுத்தினான் இவன்' என்று கூறுவார்.[267] இவனைப்பற்றிக் கபிலர் பாடிய பாடல்கள் பல. சேர சோழ பாண்டியர் ஆகிய மூவரும் இவனுடைய கோட்டையை முற்றுகையிட்டனர். முற்றுகை அளவு கடந்து நீடித்தது. கோட்டைக்குள் உணவுப்பண்டங்கள் குறைந்துவிட்டன. கபிலர் பல கிளிகளைப் பிடித்துப் பயிற்று

262. அகம். 26.
263. நற்றி. 98.
264. புறம். 127, 240, 241, 374, 375
265. புறம். 34.
266. தேவாரம் 7 : 34 ; 2
267. சிறுபாண். 89-91

வித்துப் பகைவரின் படைகளுக்கு அப்பாலிருந்து நெற்கதிர்களைக் கொண்டுவரும்படி ஏவினார். அவை கொணர்ந்த நெல் மணிகளைக் கொண்டு பாரியின் உணவுக் குறையைத் தீர்த்து வைத்தார். ஆனால், எத்தனை நாள் இந்நிலை நீடிக்கும்? இறுதியில் பாரி வள்ளல் தோற்றுவிட்டான்: போரில் மாண்புடன் மரணமடைந்தான். அவனுடைய இரு பெண்மக்களையும் தம்முடன் அழைத்துக்கொண்டு சென்று பல மன்னர்களை யண்டி அவர்களை மணந்துகொள்ளும்படி கபிலர் வேண்டிக்கொண்டார். பாரியின் புகழில் அழுக்காறுற்றிருந்த அம் மன்னர்கள் மறுக்கவே அப் பெண்களைச் சில பார்ப்பனப் பெரியாரிடம் ஒப்படைத்து விட்டு வாழ்க்கையில் சலிப்புற்று அவர் வடக்கிருந்தார். இச் செய்தி புறப்பாட்டு ஒன்றின் அடிக்குறிப்பு ஒன்றினால் தெரிய வருகின்றது.[268] ஆனால், அவர் அவ்வாறு தம் வாழ்க்கையை மடித்துக் கொண்டதாக அகச்சான்று ஏதும் கிடைத்திலது. இப் பெரும் புலவரே சேரன் செல்வக் கடுங்கோ வாழியாதனை அடுத்துப் பதிற்றுப்பத்துப் பாடல்களுள் ஒரு பத்தை அவன்மேல் பாடி நூறாயிரம் பொன்னையும், ஒரு மலைமீதேறி நின்று கண்ணுக்கெட்டியவரை தோன்றிய நாட்டையும் பரிசிலாகப் பெற்றார். கபிலரைப் 'புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்' என்று மாறோக்கத்து நப்பசலையார் புகழ்ந்துள்ளார்.[269] பிற் காலத்தில் அகவற்பா ஒன்று பாடிய கபிலர் வேறு, இவர் வேறு ஆவார்.

குறுநில மன்னர்கள் இன்னும் வேறு பலர் வாழ்ந்திருந்து சிறப்புற்றுப் புலவர்களால் பாடப்பெறும் பேற்றையடைந்துள்ளார்கள்.

## இலங்கை

தமிழகத்து வரலாற்றுடன் இலங்கையின் வரலாறும் இணைந்து வந்துள்ளது. இலங்கையின் வரலாற்றைத் தெரிவிக்கும் நூல்கள் யாவும் தமிழகத்தைப்பற்றிய குறிப்புகளைக் கொண்டுள்ளன. அத் தீவில் கி. மு. 188-177-ஆம் ஆண்டுகளில் இரு தமிழர்கள் நாட்டு ஆட்சியைக் கைப்பற்றி அரசாண்டு வந்தனர். அவர்களுடைய ஆட்சி முடிவுற்ற பிறகு மீண்டும் சிங்கள மன்னன் ஒருவன் அரசுரிமை ஏற்றான். இவனும் எளாரா என்ற தமிழன் ஒருவனிடம் தோற்றுத் தன் ஆட்சியைப் பறிகொடுத்தான். எளாரா என்பவன் நாற்பத்து நான்கு ஆண்டுகள் (கி. மு. 145-101) இலங்கையை ஆண்டு வந்தான்.

268 புறம். 236. 269. புறம். 126.

இவன் துட்டகாமணி என்ற சிங்கள மன்னன் கைகளில் தோல்வியுற்று உயிரிழந்தான். துட்டகாமணிக்குப் பிறகு நாட்டில் அரசுரிமைப் போராட்டமும் அதனால் கிளர்ச்சிகளும் எழுந்தன. அவற்றுக்கு ஒரு முடிவுகட்டி வட்டகாமணி என்பான் பட்டத்துக்கு வந்தான் (கி. மு. 43). அவன் காலத்தில் இலங்கையின்மேல் தமிழரின் படையெடுப்பு ஒன்று நேர்ந்தது. தமிழரின் கைகளில் நாட்டின் அரசாட்சியை ஒப்படைத்துவிட்டு நாட்டைத் துறந்துவிட்டு ஓடிவிட்டான். ஆனால், மீண்டும் அவன் இலங்கையில் தோன்றித் தமிழரை முறியடித்து அரசைக் கைப் பற்றிக் கொண்டான்.

வசபன் என்ற மன்னன் நாற்பத்து நான்கு ஆண்டுகள் (கி.பி. 127-171) இலங்கையை ஆண்டு வந்தான். அவனுடைய காலத்திற்றான் சோழன் கரிகாலன் இலங்கையின்மேல் படையெடுத்தான். ஆனால், கயவாகு என்ற சிங்கள மன்னன் (கி.பி. 174-196) சோழர்களை நாட்டைவிட்டு வெருட்டி இலங்கை முழுவதையும் தன் குடையின்கீழ்க் கொண்டு வந்தான். அஃதுடன் அமையாமல் அவன் சோழ நாட்டின்மேலும் படையெடுத்து வந்தனன் எனவும், அவனுடன் சோழ மன்னன் ஒருடன்படிக்கை செய்துகொண்டதாகவும் சிங்கள வரலாறுகள் கூறுகின்றன.

**சங்க காலத்தின் இறுதி**

மதுரைமா நகரில் நடைபெற்று வந்த கடைச்சங்கம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முடிவுற்றது. பாண்டி நாட்டில் மிகக் கொடியதொரு பஞ்சம் நேர்ந்ததாகவும் பன்னிரண்டாண்டுகள் அது நீடித்திருந்து மக்களை வாட்டியதாகவும், பாண்டிய வேந்தன் சங்கப் புலவர்களைப் பாதுகாக்க இயலாதவனாய் வெளியே பல இடங்கட்கும் சென்று வாழும்படி அவர்கட்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டான் என்றும், அஃதுடன் தமிழ்ச் சங்கம் இறுதியான முடிவை எய்தியது எனவும் செவிவழி வரலாறுகள் கூறுகின்றன. தமிழ்ச் சங்கம், முடிதற்கு வேறு காரணங்களும் சிலர் காட்டுவர். அவை ஒன்றுக்கேனும் போதிய சான்றுகள் இல்லை. எனினும், சங்கம் அழிவுற்றதற்கும், தமிழரின் பண்டைய பண்பாடுகளும் கலைகளும் மறைந்து போனதற்கும் தக்க காரணங்கள் இல்லாமற் போகவில்லை. ஏற்கெனவே ஆரியப் பண்பாடுகளாலும் சமயக் கருத்துகளாலும் சமுதாயக் கொள்கைகளாலும் அரிப்புண்டிருந்த தமிழரின் சமூகம் வேறு பல புரட்சிகளுக்கும் உட்படுவதாயிற்று. தமிழகம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே களப்பிரர் என்ற ஒரு குலத்தினரின் படையெடுப்புக்குட்பட்டு

அல்லலுற்றது. அவர்கள் தமிழரல்லர்; பிறமொழியாளர். அவர்கள் மாபெரும் சூறாவளியைப்போல நாட்டில் நுழைந்து மக்களைக் கொன்று குவித்து உடைமைகளைச் சூறையாடினர். சோழரையும் பாண்டியரையும் வெருட்டி ஓட்டி அவர்களுடைய நாடுகளைக் கைப்பற்றிச் சிலகாலம் அரசாண்டு வந்தனர். அயல்நாட்டினர் வேறு ஒரு நாட்டை வென்று கைக்கொண்ட பிறகு அவர்களுடைய மொழி, இலக்கியம், கலை, நாகரிகம் ஆகியவற்றை அழிப்பதையே தம் முதற் கடமையாகக் கொள்ளுவர். இது வரலாறு கண்ட உண்மையாகும். பேராசிரியர் பி. ஜி. எல். ஸ்வாமி களப்பிரர், கங்கர்களே என்றும், ஒருசில ஆண்டுகளே தமிழகத்தில் இருந்தனரென்றும் கூறுவது ஒப்புக் கொள்ளக் கூடியதன்று. ஆரியரால் விளைவிக்கப்பட்ட பண்பாட்டுப் புரட்சியினாலும், களப்பிரரால் நேர்ந்த அரசியல் புரட்சியினாலும் தமிழர் வாழ்வு சீர்குலைந்தது; அவர்களுடைய மொழிக்கும், நூல்களுக்கும், கலைகளுக்கும், பண்பாட்டுக்கும் தீரா இன்னல்களும் இடையூறுகளும் நேர்ந்தன. தமிழை வளர்த்துவந்த சங்கமும் தமிழ்க் கலையும் அழிவதற்கு நெருக்கடி ஒன்று தோன்றிற்று.

தமிழகத்தில் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஓரிருள் பரவத் தொடங்கிற்று. தமிழக வரலாற்று அரங்கில் ஒரு காட்சி முடிவுற்றுத் திரையும் விழுகின்றது. மீண்டும் அத்திரையானது மேலே சுருண்டெழுவதற்குள் முந்நூறு ஆண்டுகள் உருண்டோடிவிடுகின்றன.

# 9. களப்பிரர்கள்

களப்பிரர் யார், எங்கிருந்து வந்தவர்கள், எப்போது தமிழகத்தில் நுழைந்தார்கள் என்னும் ஆய்வு இன்னும் முடிந்த பாடில்லை. களப்பிரரைக் களவர் என்றும், கள்வர் என்றும் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. தமிழகத்தின் வட வெல்லையான வேங்கடத்துக்கும் மேற்பாலில் வாழ்ந்திருந்த வர்கள் அவர்கள் என ஆய்வாளர் ஊகிக்கின்றனர். களப் பிரர்கள் ஆந்திரர்களால் நெருக்குண்டு தெற்கு நோக்கிக் குடி பெயர்ந்தார்கள். தமிழகம் முழுவதிலும் இவர்கள் பரவினார்கள். தொண்டை மண்டலம், சோழ மண்டலம், பாண்டி மண்டலம் ஆகியவற்றுள் ஒன்றேனும் இவர்களுடைய கொடுமையினின்றும் தப்பவில்லை. தமிழகத்துக்கு இவர்களால் ஏற்பட்ட குழப்பமும் இழப்பும் அளவிறந்தன. இவர்கள் கொடுங்கோலர்கள்; கலி யரசர்கள். இவர்களைப் பற்றிய சில விளக்கங்கள் வேள்விக் குடிச் செப்பேடுகளிலும் பல்லவர்கள், சளுக்கர்கள் ஆகியவர் களுடைய செப்பேடுகளிலும் கிடைத்துள்ளன. கடுங்கோன் என்ற பாண்டிய மன்னன் ஒருவனாலும்,[1] சிம்ம விஷ்ணு,[2] முதலாம் நரசிம்மவர்மன் என்ற பல்லவ மன்னர்களாலும், முதலாம் விக்கிரமாதித்தன், இரண்டாம் விக்கிரமாதித்தன் என்ற சளுக்க மன்னர்களாலும் களப்பிரர்கள் அழிவுற்றனர் என அறிகின்றோம். இவர்கள் கொடும்பாளூர் முத்தரையருடன் (கி. பி. 8-11ஆம் நூற்றாண்டு) தொடர்பு கொண்டவர்கள் எனச் சிலர் கருதுவர்.[3] மதுரையைச் சிறிது காலம் ஆண்டுவந்த கருநாடரே களப்பிரர்கள் என்றும் ஒரு கருத்து நிலவுகின்றது. தமிழ் இலக்கியத்திலும் கல்வெட்டுகளிலும் குறிப்பிடப்படுபவர் களும், வேளாள குலத்தைச் சார்ந்தவர்களுமான களப்பாளர் என்பார் களப்பிரர் என்ற பெயரில் விளங்குகின்றனர் என்று சிலர் ஊகிக்கின்றனர். இவ்வூகம் பொருத்தமானதாகத் தெரியவில்லை.

களவர் இனத்தைச் சேர்ந்தவனான புல்லி என்ற மன்னன் ஒருவன் வேங்கடத்தை ஆண்டுவந்தான்.[4] தமிழகத்திற்கு

1. வேள்வி. செப். Ep. Ind. XVII-p.306.
2. காசக். செப். S.I.I.
3. Ep. Ind. XV-49.
4. அகம். 83.

வடக்கே ஆட்சிபுரிந்த சாதவாகனரின் வீழ்ச்சியாலும், பல்லவர்களின் கை ஓங்கி வந்ததாலும், சமுத்திரகுப்தனின் படையெடுப்பினாலும் கி.பி. 3, 4 ஆம் நூற்றாண்டுகளில் தொண்டை மண்டலத்தில் மிகப் பெரியதோர் அரசியற் குழப்பம் ஏற்பட்டது. அப்போது வேங்கடத்தைச் சார்ந்து வாழ்ந்து வந்த களப்பிரர்கள் திடீரென்று குடிபெயர்ந்து தெற்கு நோக்கிப் பாய்ந்து பல்லவரையும், சோழரையும், பாண்டியரையும் ஒடுக்கித் தமிழகத்தில் கலகமும் கொள்ளையும் கொலையும் விளைவித்தனர். சோழநாட்டைக் கைப்பற்றி ஆண்டு வந்தவன் களப்பிர மன்னனான அச்சுதவிக்கிராந்தன் என்பவன். தொண்டை நாட்டில் களந்தை என்னும் இடத்தில் கூற்றுவன் என்றொரு மன்னன் ஆண்டு வந்தனன் எனவும், அவனே கூற்றுவ நாயனாராகத் திருத்தொண்டத் தொகையில் இடம் பெற்றனன் எனவும் பெரிய புராணம் கூறும்.[5] இவன் களப்பிர குலத்தைச் சார்ந்தவன் என்று சிலர் கொள்ளுகின்றனர். கருநாடக தேசத்துக் கல்வெட்டுகளில் கலிகுலன், கலிதேவன் என்னும் குறிப்புகள் காணப்படுகின்றன. கன்னட நாட்டுக் கலிதேவன் ஒருவனைப்பற்றிக் கொப்பரம் செப்பேடுகள் பேசுகின்றன.[6] களபோரா என்னும் பெயருள்ள குலம் ஒன்று இருந்ததாக மைசூர் இராச்சியத்தின் பேலூர்க் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகின்றது.[7] களப்பிரர் என்போர் கன்னட நாட்டுடன் தொடர்பு கொண்டவர்களா என்று ஐயுறவும் இடமுண்டு.

களப்பிரர் முதலில் பௌத்தராகவும் பிறகு சமணராகவும் சமயச் சார்புற்றிருந்தனர். களப குலத்தைச் சார்ந்த அச்சுதவிக்கிராந்தன் என்றொரு மன்னன் சோழ நாட்டைக் கைப்பற்றி அரசாண்டு வந்தான் என அறிகின்றோம். இவன் காலத்தில் புத்ததத்தர் என்ற பௌத்த அறிஞர் 'விநய விநிச்சயம்' என்னும் நூலைத் தாம் எழுதியதாகக் கூறுகின்றார். பிற்காலத்தில் களப்பிரர்கள் சமண சமயத்தைத் தழுவி அதன் வளர்ச்சிக்குத் துணைபுரியலானார்கள். களப்பிரர் காலத்தில் ஆக்கத் துறைகள் பலவற்றில் வளர்ச்சி காணப்பட்டது. பௌத்த சமண ஒழுக்கங்கட்குச் செல்வாக்கு உயர்ந்தது. பௌத்தரும் சமணரும் வைதிகச் சடங்குகளையும், வேள்விகளையும், ஆரிய சமய தத்துவங்களையும் மறுத்தவர்கள். கொல்லாமை, புலால் உண்ணாமை, பொய்யாமை, பிறப்பினால் உயர்வு தாழ்வு காணாமை என்னும் உயர்ந்த அறங்களை ஓம்பி வளர்த்தவர்கள். ஆயிரம் வேள்விகள்

5. பெரிய பு. கூற். நாயனார். 8.
6. Ep. Ind. XVIII. p 259. line 8.
7. My. AR. 1936. No. 16, line. 2.

வேட்பதினும் ஓர் உயிரைக் கொல்லாமையே மேலாம் அறமாகும் என்று புத்தர் போதித்த அறத்தை வலியுறுத்தி வந்தனர் பௌத்தர்கள். நாடெங்கும் சமணப் பள்ளிகளும், பௌத்த விகாரைகளும் அமைக்கப்பட்டு வந்தன. மக்களுக்குள் ஒழுக்கத்தையும், அமைதியையும், பிற உயிர்கள்மாட்டு அன்பையும் வளர்ப்பதில் சமண பௌத்தத் துறவிகள் முனைந்து வந்தனர். பாண்டி நாட்டில் சமண நிர்க்கிரந்தர்கள் எண்ணற்றவர்கள் வாழ்ந்து வந்தனர் என யுவான் சுவாங் என்னும் சீன யாத்திரிகர் எழுதுகின்றார். இக் காரணங்களால் வேள்விகளையும், குல வேறுபாடுகளையும் படிகளாகக் கொண்டு உயர்ந்து வந்த வைதிக சமயம் தன் செல்வாக்கை இழந்து வந்தது.

களப்பிரர் காலத்தில் தமிழ் மொழிக்குத் தாழ்வும், பிராகிருதத்துக்கும் பாலி மொழிக்கும் அரசாங்கச் செல்வாக்கும் கிடைத்தன. எனினும் தமிழ், மன்னரின் ஆட்சி மொழி என்ற ஓர் உயர்நிலையினின்றும் இழிந்ததாயினும் சமயத்தையும் தத்துவத்தையும் ஒழுக்கத்தையும் பொதுமக்களுக்குப் புகட்டும் நிலைமையை எய்திற்று. தமிழில் போதித்தாலொழியத் தத்தம் சமயங்கள் மக்களின் கருத்தைக் கவரா எனப் பௌத்தரும் சமணரும் நன்கு உணர்ந்தனர்.

பூச்சியபாதர் என்பவரின் மாணவரான வச்சிரநந்தி என்பார் மதுரையில் 'திராவிட சங்கம்' ஒன்றை நிறுவினார் (கி. பி. 470). சமண அறத்தைப் பரப்புவதும், சமணக் கொள்கைகளை விளக்கக் கூடிய நூல்களைத் தோற்றுவிப்பதுமே இச் சங்கத்தின் நோக்கமாகும். பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் பல இச் சங்க காலத்தில் இயற்றப்பெற்றவையாம். மணிமேகலையும் சிலப்பதிகாரமும் இக்காலத்தில் எழுந்தவையெனத் தோன்றுகின்றன. நீலகேசி, குண்டலகேசி, யசோதர காவியம், சீவக சிந்தாமணி ஆகிய காவியங்கள் தமிழில் தோன்றுவதற்குக் காரணமாக இருந்ததும் இத் திராவிட சங்கத்தின் தொண்டே காரணமாகும். எதையும் ஏற்றுக்கொள்ளும் விரிந்த உளப்பான்மையும், எப்பொருள் எத்தன்மைத்தாயினும், அப்பொருள் மெய்ப்பொருள் காணும் பண்பும் வாய்க்கப் பெற்றிருந்த தமிழர்கள் புறச் சமயத்தார்கள் மேற்கொண்ட தமிழ் வளர்ச்சிப் பணிகளைப் பாராட்டி ஏற்றுக்கொண்டனர். பௌத்த சமண அறவொழுக்கங்கள் பலவற்றையும் அவர்கள் பின்பற்றலானார்கள். தாம் எண்ணிய சமயத்தை எண்ணியாங்குத் தழுவிக்கொள்ளும் பண்பாட்டைச் சிறப்புரிமையாகக் கொண்டிருந்தனர் என அறிகின்றோம். சமணரும், பௌத்தரும், வைதிகரும், ஏனையோரும்

நெருங்கி நின்று, பூசலின்றி, இணைந்து வாழ்ந்து வந்தனர். ஆனால், சமயவாதிகளுக்குள் சொற்போர்கள் அவ்வப்போது ஆங்காங்கு நிகழ்வதுண்டு. குண்டலகேசி என்னும் பௌத்த காவியமும் நீலகேசி என்னும் சமணகாவியமும் இதை உறுதிப்படுத்துகின்றன. வஞ்சிமாநகரில் சமயக் கணக்கர் பலர் தத்தம் திறங்களை எடுத்துக் கூற மணிமேகலை அவற்றை எல்லாம் கேட்டதாகத் தெரிகின்றது. இளம் பெண்துறவி ஒருத்தியின் முன்பு தத்துவ அறிவிற் சிறந்த பல்சமயச் சான்றோர் ஓரவையில் அமர்ந்து தத்தம் சமயக் கருத்துகளை எடுத்து வாதித்தார்கள் என்பதிலிருந்து அக் காலத்து மக்களின் அறிவின் உயர்ச்சியும், பண்பாட்டின் மேம்பாடும் தெற்றென விளங்குகின்றன. களப்பிரர் காலத்தில் வழங்கி வந்த பல்வேறுபட்ட சமயங்களுள் சிறப்பானவை வைதிகம், சைவம், பிரமவாதம், ஆசீவகம், நிகண்டம், சாங்கியம், வைசேடிகம், பௌதிகம் அல்லது உலோகாயதம் என்பன.[8] இச் சமயங்களை வளர்த்த அறிஞர்கள் வாய்ப்பு நேர்ந்தபோது தத்தம் கொள்கைகளை மக்களுக்கு எடுத்து விளக்கி வந்தனர். எனினும், சமயப் போர்கள் ஏதும் நிகழவில்லை.

பௌத்தர்கள் கடவுள் ஒருவர் உளர் என்னும் கொள்கையை ஒப்புக்கொள்ளுவதில்லை. இக் காரணம் ஒன்றே பௌத்தத்துக்கு வேர்கொல்லியாக மாறிற்று. சமணர்கள் அருகனைக் கடவுளாக வழிபட்டனர். சமணக் கொள்கைகளை விளக்கக்கூடிய பல நூல்களை இவர்கள் தமிழிலேயே இயற்றிப் பொதுமக்கள், மன்னர்கள் ஆகிய அனைவருடைய கருத்தையும் கவர்ந்தனர். பௌத்தர்களைப் போலவே சமணரும் கொல்லாமையாகிய நோன்பை மேற்கொண்டவர்கள் எனினும் இவர்கள் வைதிகச் சமயத்துடனும் தொடர்புகொண்டு பௌத்தத்துக்கு மாறான சில வைதிகக் கொள்கைகளையும் சமணத்தில் ஏற்றுக்கொண்டனர். வாசுதேவனையும் பலதேவனையும் தம் தெய்வ வரிசையில் இவர்கள் சேர்த்துக் கொண்டனர். திருமகள் வழிபாடும் இவர்கட்கு உடம்பாடாக இருந்தது. சமணருக்கும் பௌத்தருக்கும் இடையிட்ட கருத்து வேறுபாடுகளின் காரணமாக அவர்களுக்குள் அடிக்கடி பூசல்கள் நேர்ந்தன. அவற்றில் சமணரின் கை ஓங்கி வந்தது. பௌத்தர்கள் காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம் போன்ற பெரிய நகரங்களில் மட்டும் விகாரைகள் அமைத்துச் சமயப்பணி செய்து வந்தனர். ஆனால் சமணரோ நகரங்களிலும், நாட்டுப்புறங்களிலும், மலைக்குகைகளிலும், காடுகளிலும் படர்ந்து சென்று எண்ணற்ற சமணப்பள்ளிகள் நிறுவியும்,

8. மணிமே. 27

தமிழில் அரிய இலக்கிய இலக்கணங்கள் இயற்றியும் பொதுமக்களுடன் மிகநெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக்கொண்டனர். இக் காரணத்தால் பௌத்தத்தின் செல்வாக்குக் குறைந்துகொண்டே வந்து இறுதியில் அச் சமயமானது நாட்டினின்றும் ஒருங்கே மறைந்து போகுமளவுக்கு அதன் நிலை குன்றிவிட்டது. பின்னர்ப் போட்டியில் எஞ்சி நின்ற சமணம் ஒன்றே சைவத்தையும் வைணவத்தையும் தனித்து நின்று எதிர்த்துப் போராட வேண்டிய நெருக்கடி நிலை ஏற்பட்டுவிட்டது. பௌத்தர் ஒருவர் மறைமுகமாகச் சிவனை வழிபட்டதாகவும் பெரியபராணம் கூறுகின்றது.[9]

சிவன் வழிபாடு தொன்றுதொட்டே தமிழகத்தில் வழங்கி வருகின்றது. சிவனையே முழுமுதற் கடவுளாகப் பண்டைய தமிழர் வழிபட்டுவந்தனர் எனச் சங்க இலக்கியச் செய்திகள் கூறுகின்றன. பல இடங்களில் சிவனுக்குக் கோயில்கள் எழுந்தன. சிவனைப் பற்றிய புராண வழக்குகள் அத்தனையும் தமிழகத்தில் அப்போதே பரவிவிட்டன. சைவ வழிபாட்டில் அடிப்படையான கொள்கைகள் சில உண்டு. அவை: ஒருவன் செய்கின்ற வினை, வினையைச் செய்கின்றவன், செய்த வினையால் அவனுக்கு நேரிடும் விளைவுகள், வினைபுரிபவனையும் அவன் புரியும் வினையின் பயனையும் ஒன்று கூட்டும் கடவுள் ஆகிய நான்கு மெய்ப்பொருள்கள் ஆகும். சிவன் வழிபாடும், ஊழ்வினையில் ஆழ்ந்த உடன்பாடும் தமிழ்நாட்டில் ஊறிப் போயிருந்தமையால் கடவுள் இல்லை என்று திட்ட வட்டமாகக் கூறிய பௌத்த சமயத்துக்குச் செல்வாக்குக் குன்றிவந்ததில் வியப்பேதுமில்லை. அஃதுடன் பௌத்த சமயத் தலைவனான அச்சுத விக்கிராந்தன் கடுங்கோன் என்ற பாண்டியனாலும், சிம்ம விஷ்ணு என்ற பல்லவ மன்னனாலும் ஒறுக்கப்பட்டு அவனுடைய ஆட்சிக்கு ஒரு முடிவு ஏற்பட்ட பிறகு பௌத்தத்துக்கு வெகு விரைவாக இறங்குமுகம் ஏற்பட்டு வந்தது.

9. பெரிய பு. சாக்கிய நாயனார். 4.

# 10. பல்லவர்கள்

இந்தியாவிலேயே மிகச் சிறந்த நகரங்களாக விளங்கியவை ஏழு என்பர். அவற்றுள் சிறந்தோங்கி வருவது காஞ்சிபுரமாகும். பண்டைய புகழினும், கல்வி, கலை, சமய தத்துவங்கள், நாகரீகங்கள் ஆகியவற்றின் வளர்ச்சியிலும் மேம்பட்டு விளங்குவது இந் நகரம். இங்குக் காணப்படும் நூற்றுக்கணக்கான கோயில்களும், குளங்களும் மறைந்துபோன பேரரசுகளையும், பேரரசர்களையும் நினைவூட்டுகின்றன. காஞ்சிமாநகரம் ஏறக்குறைய ஆறு நூற்றாண்டுக் காலம், கி.பி. மூன்று முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரையில், பல்லவரின் ஆட்சியில் இருந்துவந்தது.

சென்ற ஐம்பது ஆண்டுகளாகவே பல்லவர்கள், யார், எங்கிருந்து வந்தவர்கள் என்னும் ஆய்வு வரலாற்று ஆராய்ச்சியாளரால் மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளது. எனினும், அவர்களுக்குள் உடம்பாடான முடிவு ஒன்றும் ஏற்படவில்லை. பல்லவர்கள் ஆதியில் வாழ்ந்த இடம் இன்னதென்பதும், தமிழகத்துக்கு எப்படி வந்தனர் என்பதும் இன்னும் மறைபொருளாகவே இருந்துவருகின்றன. சங்க இலக்கியத்தில் பல்லவரைப் பற்றிய குறிப்பு ஒன்றும் காணப்படவில்லை. ஆனால், பல்லவர்கள் எழுதி வைத்துச் சென்ற கல்வெட்டுகள், எழுதிக் கொடுத்துள்ள செப்பேடுகள் ஆகியவற்றைக்கொண்டு அவர்களைப் பற்றிய வரலாற்றை ஒருவாறு கோவை செய்துகொள்ளலாம். பல்லவர்களுடைய கல்வெட்டுகள் மகேந்திரவாடி, தளவானூர், பல்லாவரம், திருச்சிராப்பள்ளி, திருக்கழுக்குன்றம், வல்லம், மாமண்டூர், மண்டகப்பட்டு, சித்தன்னவாசல், மாமல்லபுரம் ஆகிய இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. பல்லவர்கள் முதன்முதல் பிராகிருத மொழியில் சாசனங்களைப் பொறித்து வந்தனர் (கி. பி. 250-350). பிறகு சமஸ்கிருத மொழியில் செப்பேடுகளையும் கல்வெட்டுகளையும் பொறிக்கும் வழக்கத்தை மேற்கொண்டனர். கி.பி. 7ஆம் நூற்றாண்டில் கிரந்த-தமிழ் எழுத்தில் எழுதப்பட்டன.

பல்லவரின் அரசியல் முறைகள் ஆதியில் சாதவாகனரின் அரசியல் முறைகளுடனும், கௌடிலியரின் அர்த்தசாத்திரக்

கோட்பாடுகளுடனும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. பல்லவருடைய பண்பாடுகள் பலவும் தமிழ் மன்னருடைய பண்பாடுகட்கு முற்றிலும் முரண்பாடாகக் காணப்பட்டன. அவர்கள் வடமொழியையே போற்றி வளர்த்தனர். இக் காரணங்களைக் கொண்டு பல்லவர் பரம்பரையின் தொடக்கம் தமிழகத்துக்குப் புறம்பாக ஏற்பட்டிருக்கவேண்டும் என்று ஆய்வாளர் சிலர் கருதுகின்றனர். சாதவாகனரின் ஆட்சி குன்றிவரும்போது பல்லவர்கள் தொண்டைமண்டலத்தைக் கைப்பற்றினார்கள் என்றும், அதற்கு முன்பு அவர்கள் சாகர்களுடன் இணைந்திருந்து மேற்கிந்தியப் பகுதிகளிலும், சிந்துவெளியிலும், 'பஹ்லவர்' அல்லது 'பார்த்தியர்' என்ற பெயரில் குடியேறி வாழ்ந்து வந்தார்கள் என்றும் ஒரு கருத்து நிலவுகின்றது. அப்படியாயின் அவர்கள் காஞ்சிபுரத்துக்கு ஏன் வந்தார்கள் என்னும் கேள்விக்கு விளக்கங் கிடைக்கவில்லை. பல்லவர்களுடைய கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் பஹ்லவர் என்னும் சொல்லே வழங்கப்படவில்லை. பல்லவர்கள் அசுவமேத யாகம் வேட்பது வழக்கமாகக் கொண்டிருந்தனர். ஆனால், பஹ்லவர்களிடம் இவ்வழக்கம் காணப்படவில்லை. அவர்கள் அந்நியப் பண்பாட்டினர். காஞ்சிபுரம் வைகுண்டப் பெருமாள் கோயிலில் யானையின் மத்தகத்தைப் போன்று வடிவமைக்கப்பட்ட உருவம் ஒன்று மணிமுடி சூடிய கோலத்தில் தீட்டப்பட்டுள்ளது. இதைக் கொண்டு பல்லவர்கள் பார்த்தியர்களைச் சேர்ந்தவர்கள் எனவுங் கூறுவர். ஏனெனில், இந்தோ பாக்டிரிய மன்னனான டெமிட்டிரியஸ் என்பான் ஒருவனுடைய உருவம் அவனுடைய நாணயம் ஒன்றின்மேல் இத்தகைய முடியுடன் காட்சியளிக்கின்றது. இச் சான்று ஒன்றைமட்டுங் கொண்டு பல்லவர்கள் பார்த்தியர்களைச் சேர்ந்தவர்கள் என்று கொள்வது பொருந்தாது.

பல்லவர்கள் வாகாடகர்களுள் ஒரு பிரிவினர் என்றும், வாகாடகர்களைப் போலவே பல்லவர்களும் தம்மைப் பார்த்து வாசக் கோத்திரத்தினராக கூறிக்கொள்கின்றனர் என்றும், இவர்கள் இரு பிரிவினருமே பிராமணக் குலத்தினர் என்றும், பல்லவரைச் சார்ந்த வீரகூர்ச்சா என்பான் ஒருவன் நாக கன்னிகை ஒருத்தியை மணந்தான் என்றும் கூறுவர். சோழன் வெள்வேற் கிள்ளிக்கும் பீலிவளை என்ற நாககன்னிகைக்கும் தொண்டைமான் இளந்திரையன் பிறந்தான். அவனுடைய பெயரினால் தொண்டைமண்டலம் தோற்றுவிக்கப்பட்டது. இவ் வரலாற்றை மணிமேகலை தருகின்றது. இதனுடன் கூர்ச்சா என்பவன் நாககன்னிகையை மணந்த செய்தி முரண்படுகின்றது.

தளவானூர்க் குகைக் கல்வெட்டுகளில் மகேந்திரவர்ம பல்லவனே 'தொண்டை' மாலை யணிந்தவன் எனக் குறிப்பிடப்படுகின்றான். பல்லவர்கள் சாதவாகனரின்கீழ்க் குறுநில மன்னராகவும், ஆட்சி அலுவலராகவும் செயற்பட்டு வந்தனர் என்றும், 'பல்லவர்' என்னும் சொல்லும் தொண்டையர் என்னும் சொல்லும் ஒரு பொருளையே குறிக்குமென்றும், சாதவாகனப் பேரரசு வீழ்ச்சியுற்ற பிறகு இப் பல்லவர்கள் காஞ்சிபுரத்தில் தம் பெயரில் ஆட்சிப் பரம்பரை யொன்றைத் தொடங்கினர் என்றும், அதன் பின்னர்த் தொண்டையர் என்னும் பெயர் மறைந்து பல்லவர் என்னும் பெயருக்கு இடங்கொடுத்தது என்றும் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் கருதுவார்.

பல்லவர்கள் தொண்டை மண்டலத்திலேயே தோன்றியவர்கள் என்னும் கொள்கைக்கும் போதிய சான்றுகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. மோரிய மன்னன் அசோகனின் குடிமக்களுள் புலிந்தர் என்றோர் இனத்தவரும் இருந்தனரென அப் பேரரசனின் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. அக்காலத்தில் தொண்டை மண்டலத்தில் குறும்பர் என்ற ஓரினத்தினர் வாழ்ந்து வந்தனர். இவர்களே அப் புலிந்தர்கள் போலும். தொண்டை மண்டலத்தில் இரு பெரும் கோட்டங்களில் ஒன்றுக்குப் புலி நாடு என்றும் மற்றொன்றுக்குப் புலியூர்க் கோட்டம் என்றும் பெயர் வழங்கிற்று. வயலூர் என்ற இடத்தில் இராசசிம்மனின் தூண் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. அக் கல்வெட்டில் அசோகனின் முன் பரம்பரையைக் கூறிவரும்போதும் அசுவத்தாமாவின் பெயரையடுத்தும், அசோகன் பெயருக்கு முன்பும் 'பல்லவன்' என்னும் ஒரு பெயர் காணப்படுகின்றது. எனவே, அசோகனுக்கு முன்னே பல்லவப் பரம்பரை இருந்ததாக ஊகிக்க இடமுள்ளது. அசோகனின் கல்வெட்டுகள் சிலவற்றுள் புலிந்தர்கள் 'பலடர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளனர். பலடர் என்னும் சொல் காலப் போக்கில் பல்லவர் என்றும் மாறியிருக்கக் கூடும் என்றும் சிலர் எண்ணுகின்றனர். தொண்டை மண்டலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. முதல் நூற்றாண்டு வரையில் மிகவும் புகழ்பெற்று விளங்கியதற்கு மணிமேகலை சான்று பகர்கின்றது. கரிகால் சோழன் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் பாலாற்றுக்குத் தென்புறத்திலிருந்த தொண்டை மண்டலப் பகுதியை வென்று சோழ நாட்டுடன் இணைத்துக் கொண்டான். அப்போது காஞ்சிபுரத்தில் வழங்கிவந்த மோரிய நிறுவனங்களை அவன் அழித்திருக்க முடியாது. ஏனெனில், பல்லவர்கள் சாதவாகனருக்குத் திறை செலுத்தி வந்தனர். ஆகையால், சாத்வாகனருடைய பாதுகாப்பு காஞ்சிபுரத்துக்கு

அரண் செய்தது. சாதவாகனரின் ஆட்சி கி.பி. 225-ல் வீழ்ச்சியுற்றது. அவர்களுக்குப் பின்னர்க் காஞ்சிபுரத்தில் பல்லவரே முழு ஆட்சிப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டனர். நாளடைவில் அவர்களுடைய ஆட்சியானது காஞ்சிபுரத்திலிருந்து வடக்கில் கிருஷ்ணா நதிவரையில் பரவிற்று. மயிதவொளு, ஹீரஹதஹள்ளி என்னும் ஊர்களில் கிடைத்துள்ள சிவஸ்கந்த வர்மனின் பிராகிருத மொழிச் செப்பேடுகளில் இதற்குச் சான்றுகள் காணப்படுகின்றன. சாதவாகனருடன் தொடர்பு கொண்டிருந்த காரணத்தால் பல்லவர்கள் பிராகிருத மொழியிலும், சமஸ்கிருத மொழியிலும் பயிற்சி மிக்கவர்களாக இருந்தனர்; அம் மொழிகளிலேயே சாசனங்களையும் பொறித்து வைத்தனர். ஆகவே, பல்லவர்கள் சாதவாகனரின் குலத்தைச் சார்ந்தவர்கள் என ஊகிக்கவும் இடமுண்டு.

சிவஸ்கந்தவர்மன் கி.பி. நான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காஞ்சிபுரத்தினின்றும் அரசாண்டான். அப்போது அவனுடைய அரசு வடக்கே கிருஷ்ணா நதியிலிருந்து தெற்கில் தென்பெண்ணைவரையில் பரவியிருந்தது. அவன் காலத்திய சாசனங்கள் பிராகிருத மொழியில் பொறிக்கப்பட்டன.

ஸ்கந்தவர்மன் வழிவந்தவன் விஷ்ணுகோபன். அவன் ஏறத்தாழக் கி.பி. 350–375 ஆண்டுகளில் ஆட்சி புரிந்தவன். சமுத்திரகுப்தன் என்ற மோரிய மன்னனிடம் தோல்வியுண்ட பன்னிரண்டு தட்சிணாபத அரசருள் விஷ்ணுகோபனும் ஒருவன்.

பல்லவ சமஸ்கிருதச் செப்பேடுகளில் பதினாறு மன்னரின் பெயர்கள் காணப்படுகின்றன. அவர்கள் கி.பி. 330-575 கால அளவில் ஆண்டு வந்தவர்கள். பல்லவ மன்னர் பரம்பரையில் முன்னே கூறப்பட்ட வீரகூர்ச்சா என்பவனும், பிறகு ஸ்கந்த சிஷ்யனும் ஆண்டகாலத்தில் காஞ்சிபுரத்தில் பிராமண கடிகைகள் நடைபெற்று வந்தன. அவை பிராமணருக்கு வடமொழியையும், வேதங்களையும் பயிற்றிவந்தன. அவற்றின் நிருவாகத்தில் ஏதோ ஒழுக்கக் கேடுகள் நேர்ந்தன போலும். அரசாங்க ஆணைகட்குக் கட்டுப்படாமல் அவை எதிர்ப்புக் காட்டியிருக்க வேண்டும். அதனால் ஸ்கந்தசிஷ்யன் படைவலிமையைக் கொண்டு அவற்றைக் கைப்பற்றினான்.[1]

சமுத்திரகுப்தன் கைகளில் விஷ்ணுகோபன் தோல்வியுற்ற பிறகு காஞ்சிபுரத்து அரசியலில் பெருங்குழப்பமும் சிக்கல்களும்

1. S.L.I. II. p. 108 p. II; 13.

ஏற்பட்டன. குமாரவிஷ்ணு என்பவன் மிகவும் முயன்று காஞ்சிபுரத்தைக் கைப்பற்றினான் என்று வேலூர்ப்பாளையம் செப்பேடுகள் தெரிவிக்கின்றன.[2] விஷ்ணுகோபனுக்கும் குமாரவிஷ்ணுவுக்கும் இடையிட்ட காலத்தில் நேர்ந்த குழப்பங்கட்குக் காரணம் காஞ்சிபுரத்தின்மேல் சோழன் செங்கணான் படையெடுத்ததேயாகும்.

பல்லவர் பரம்பரையில் சிம்மவர்மன் என்பவன் சு. கி. பி. 436-ல் அரசுகட்டில் ஏறினான். இவனுடைய ஆட்சிக்குப் பிறகு இரண்டாம் சிம்மவர்மன் மணிமுடி தரித்துக் கொண்டான் (கி.பி. 575). அவன் காலத்தில், தொடக்க முதல் இறுதிவரையில் நாட்டில் களப்பிரர் படையெடுப்பினால் கலகமும் கிளர்ச்சியும் குழப்பமும் மேலிட்டன. அவன் மகன் சிம்மவிஷ்ணு என்பவன் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் இறுதியில் அரசுரிமை ஏற்றான். பல்லவ காலத்திய இலக்கிய வளர்ச்சியும், பண்பாட்டு மேம்பாடும், அரசியல் விரிவும் சிம்மவிஷ்ணுவின் காலத்திலிருந்தே தொடங்குகின்றன. இவன் களப்பிரரையும் சேர, சோழ, பாண்டிய மன்னரையும், மாளவரையும், சிங்களவரையும் வென்று வாகை சூடினான் என்று காசக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன.[3] இவனுடைய அரசாட்சியானது தெற்கில் கும்பகோணம் வரையில் விரிவுற்று நின்றது. இவனுடைய அரசவைப் புலவரான பாரவி என்பார் ‘கிராதார்ச்சுனீயம்’ என்னும் வடமொழிக் காவியத்தை இயற்றினார். சிம்மவிஷ்ணுவின் உருவமும், இவருடைய பட்டத்தரசிகள் இருவரின் உருவமும் மாமல்லபுரத்தில் புடைப்போவியங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.

சிம்மவிஷ்ணுவுக்குப் பிறகு அவன் மகன் முதலாம் மகேந்திரவர்மன் (சு.கி.பி. 600-630) பட்டத்துக்கு வந்தான். இவனுக்கு விசித்திரசித்தன் என்றொரு விருது பெயருமுண்டு. பல்லவர் பரம்பரையிலேயே புகழ் ஏணியில் ஏறி நின்ற முதல் மன்னவன் மகேந்திரன்தான். இவன் காலத்தில்தான் பல்லவ சளுக்கப் போர்கள் தொடங்கலாயின. பல்லவர்களுக்கும் கடம்பர்களுக்குமிடையே நெருங்கிய நட்புறவு இருந்து வந்தது. சளுக்க மன்னனான இரண்டாம் புலிகேசியின் முன்னோர்கள் கடம்பரை வென்று அடிபணிய வைத்தனர். அதனால் கடம்பரின் நண்பர்களான பல்லவர்களுக்கும் சளுக்கர்களுக்கும் அடிக்கடி போரும்

2. S.I.I. II. p. 508.
3. S.I.I. II. Kasak. Cop. Pl.

பூசலும் மூண்டு வந்தன. சளுக்கர்கள் வேங்கியைப் கைப்பற்றி மகேந்திரன்மேல் வெற்றிகண்டனர். காஞ்சிபுரத்தையடுத்துள்ள புள்ளலூர் என்ற இடத்தில் மகேந்திரவர்மன் சளுக்கரை அழித் தான் என்று காசக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இவன் செந்தகாரி (கோயில் கட்டுப்பவன்), மத்தவிலாசன் (இன்பம் விரும்புபவன்), சித்திரகாரப் புலி (ஓவியர்க்குப் புலி) என்ற விருதுகள் சிலவற்றையும் மேற்கொண்டான்.

ஒரே பாறையில் குடைந்து கோயில்கள் அமைக்கும் சிற்ப மரபானது தமிழகத்தில் முதன்முதல் மகேந்திரவர்மனாற்றான் தோற்றுவிக்கப் பெற்றது. புதுச்சேரிக்கு அண்மையிலுள்ள மண்டகப்பட்டு, திருச்சிராப்பள்ளி, பல்லாவரம், செங்கற்பட்டுக்கு அண்மையிலுள்ள வல்லம், மாமண்டூர், தளவானூர், சீயமங்கலம், மகேந்திரவாடி ஆகிய இடங்களிலும் இவன் குகைக்கோயில்கள் குடைந்துள்ளான். அக் கோயில்களில் அவன் பொறிப்பித்த கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. 'செங்கலின்றி, மரமின்றி, உலோகமின்றி, காரையின்றிப் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய தெய்வங்களுக்கு 'விசித்திரசித்தன் இக் கோயிலை ஆக்கினான்' என்று இவனுடைய மண்டகப்பட்டுக் கல்வெட்டு வியந்து கூறுகின்றது. மகேந்திரவர்மன் மகேந்திரவாடி ஏரியைக் கட்டி உழவுக்கு உதவினான். சிற்பத்திலும் ஓவியத்திலும் மட்டுமன்றி இசையிலும் இவ்வேந்தன் வல்லுநனாக இருந்தான். இவனுடைய இசைப் புலமைக்குக் குடுமியாமலைக் கல்வெட்டுச் சான்று எனச் சிலர் கருதுகின்றனர். இக் கல்வெட்டுச் சற்றுப் பிற்காலத்தைச் சார்ந்தது என வேறு சிலர் கூறுகின்றனர். இதுபற்றி இறுதியான முடிவுக்கு வரமுடியாது.

மகேந்திரவர்மன் ஆதியில் சமணனாக இருந்தான். திரு நாவுக்கரசரிடம் ஈடுபாடுகொண்டு பிறகு சைவ சமயத்தைத் தழுவினான். இவன் சிவலிங்க வழிபாடு உடையவன் என்று திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டுக் கூறுகின்றது. தான் சைவனான பிறகு பாடலிபுரத்தில் (திருப்பாதிரிப்புலியூரில்) இருந்த ஒரு சமணப் பள்ளியை இடித்து நிரவினான்.

## முதலாம் நரசிம்மவர்மன் (சு. கி. பி. 630 - 668)

மகேந்திரவர்மனுக்குப் பிறகு அவன் மகன் முதலாம் நரசிம்ம வர்மன் அரியணையேறினான். போரிலும் புகழிலும், தன் தந்தையினும் நரசிம்மவர்மன் மேம்பட்டு விளங்கினான். சளுக்கரின்மேல் அவன் பல வெற்றிகளைக் கொண்டான். மணிமங்கலத்தில் ஒரு முறையும், வாதாபியில் இரு முறையும் அவன் சளுக்க மன்னன்

இரண்டாம் புலிகேசியின்மேல் போர்தொடுத்து மாபெரும் வெற்றி பெற்றான். இரண்டாம் வாதாபிப் போர் வரலாற்றுப் புகழ்பெற்றதாகும். அப்போரை நடத்தி வெற்றிவாகை சூடி வந்த படைத் தலைமையர் பரஞ்சோதியே, பிறகு சிறுத்தொண்ட நாயனாராகத் திருத்தொண்டத் தொகையில் இடம் பெற்றார். நரசிம்மவர்மன் இரண்டாம் வாதாபிப் போரில் அந் நகரைக் கைப்பற்றிய பிறகு புலிகேசி நீண்ட நாள் உயிர் வாழவில்லை. அவன் காலமான பிறகு (கி. பி. 642) சளுக்கர் நாட்டில் ஏற்பட்ட குழப்பத்தின் காரணமாக அந் நாட்டின் தென்பகுதிகள் பதின் மூன்று ஆண்டுகள் பல்லவரின் ஆட்சியில் இருந்து வந்தன. அக் கால அளவில் மூன்று அரசர்கள் சளுக்க அரியணைமேல் அமர்ந்து ஆட்சி புரிந்து வந்தனர் என விக்கிரமாதித்தன் கல்வெட்டுகள் கூறுகின்றன. அம் மூவரும் பல்லவனுக்கு அடிபணிந்திருந்தனர் போலும். இரண்டாம் புலிகேசியினிடம் ஹர்ஷவர்த்தனன் தோல்வியுற்றுத் தன் வீரத்துக்குக் களங்கம் கற்பித்துக் கொண்டான். அதே புலிகேசியை வென்று வாகை சூடி முதலாம் நரசிம்மவர்மன் தன் தந்தைக்கு ஏற்பட்ட இழுக்குக்குக் கழுவாய் கண்டான்; 'வாதாபிகொண்டான்' என்னும் ஒரு விருதையும் பெருமையுடன் புனைந்துகொண்டான்.

முதலாம் நரசிம்மவர்மனிடம் மாபெரும் கடற்படை ஒன்று இருந்தது. அதன் துணையைக்கொண்டு இருமுறை இலங்கையின்மேல் படை செலுத்திச் சென்று வெற்றி கண்டான். அவன் தன் நண்பன் மானவர்மன் என்ற சிங்கள மன்னனுக்கு இலங்கையின் அரசுரிமையை வழங்கினான் (கி. பி. 631).

இந் நரசிம்மவர்மன் சிவனிடத்தில் பெரிதும் ஈடுபாடுடையவன். மாமல்லபுரத்துச் சிற்பங்களைப் படைத்துத் தமிழகத்து வரலாற்றில் அழியாத புகழிடத்தைப் பெற்றுக்கொண்டான் இம் மன்னன். இவன் காலத்தில் சீன யாத்திரிகன் யுவான்-சுவாங் காஞ்சிபுரத்துக்கு வந்திருந்தான் (கி. பி. 640). அவனுடைய குறிப்புகளிலிருந்து அவன் கண்ட தொண்டை மண்டலத்தைப் பற்றிய செய்திகள் பல கிடைக்கின்றன. காஞ்சிபுரம் ஆறு மைல் சுற்றளவு இருந்தது. அக் காலத்துத் தமிழகத்து நகரங்களுள் இது மாபெரும் நகரமாகக் காட்சி அளித்தது. அந் நகரில் நூறு பௌத்தப் பள்ளிகள் நடைபெற்று வந்தன. அங்குப் பதினாயிரம் பிக்குகள் தங்கி அறம் வளர்க்க வசதிகள் அமைக்கப்பட்டிருந்தன. இப் பள்ளிகளில் பெரும்பாலன திகம்பரப் பிரிவைச் சார்ந்தவை. தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பௌத்தத்துக்குச் செல்வாக்குக் குன்றி வந்துவிட்டதெனினும் காஞ்சிபுரத்தில் அது

சீரும் சிறப்புடன் வளர்ந்து வந்தது. நாலந்தாப் பல்கலைக் கழக ஆசிரியர் தருமபாலர் என்பார் காஞ்சிபுரத்திலிருந்து பயின்று சென்றவர்தாம். அக் காலத்தில் தொண்டை மண்டலத்து மக்கள் கல்வியறிவுக்கும் சமயவளர்ச்சிக்கும் அளித்திருந்த செல்வாக்கின் உயர்ச்சியை இதனால் நாம் நன்கு அறிந்துகொள்ளுகின்றோம்.

முதலாம் நரசிம்மவர்மனுக்குப் பின்னர் அவன் மகன் இரண்டாம் மகேந்திரவர்மன் பல்லவ அரசனாக முடிசூட்டிக் கொண்டான். இவன் ஈராண்டுகளே அரசாண்டான் (கி. பி. 668-670). அவன் வருணாசிரம தருமத்தை நிலைநாட்டினான் எனவும், கடிகைகளை வளர்த்தான் எனவும் கல்வெட்டுச் செய்திகள் தெரிவிக்கின்றன. அவன் சளுக்க மன்னன் விக்கிரமாதித்தனுடன் போரில் ஈடுபட்டிருந்தான் என்று அறிகின்றோம்.

இரண்டாம் மகேந்திரனுக்குப் பின்பு அவனுடைய மகன் முதலாம் பரமேசுவரவர்மன் (கி. பி. 670-695) அரசாண்டான். சளுக்க மன்னன் தொடர்ந்து பல்லவருக்குத் தொல்லை கொடுக்கலானான். சளுக்க மன்னன் விக்கிரமாதித்தன் கைகளில் பரமேசுவரவர்மன் தோல்வியுற்றான் எனவும், பல்லவ குடும்பத்தையே சளுக்கர்கள் வேரறுத்துவிட்டனர் எனவும் விக்கிரமாதித்தனுடைய கடவால் செப்பேடுகள் (கி. பி. 674) தெரிவிக்கின்றன. அவன் காவிரியின் தென்கரையில் உள்ள உறையூரிலிருந்து அவ்வேடுகளை எழுதி வழங்கியதாகவும் அவற்றினின்றும் அறிகின்றோம். ஆனால், பல்லவருடைய சாசனக் குறிப்புகள் கடவால் செப்பேடுகள் கூறும் செய்திக்கு முற்றிலும் முரணாகக் காணப்படுகின்றன. திருச்சிக்கு அண்மையில் பெருவளநல்லூரில் பல இலட்சம் சேனையுடன் போராடிய விக்கிரமாதித்தனைப் பல்லவ மன்னன் வென்று, அச் சளுக்க மன்னன் சுற்றிய கந்தையுடன் போர்க்களத்திலிருந்து ஓடச் செய்தான் என்று கூரம் செப்பேடுகள் கூறுகின்றன.[4]

பரமேசுவரவர்மன் சிறந்த சிவத்தொண்டன். காஞ்சிபுரத்துக்கு அண்மையில் கூரம் என்ற இடத்தில் சிவன்கோயில் ஒன்று எழுப்பினான்; மாமல்லபுரத்திலும் சில கோயில்கள் செதுக்குவித்தான்.

4. S. I. I. Vol. I. pp. 144, 145.
Ep. Ind. XVII. pp. 340-345.

முதலாம் பரமேசுவரவர்மனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம் நரசிம்மவர்மன் இராசசிம்மன் (சு.கி.பி. 695-722) மணிமுடி சூட்டிக்கொண்டான். இவனுடைய கல்வெட்டுகள் அனைத்தும் சமஸ்கிருதத்திலேயே பொறிக்கப்பட்டுள்ளன. இவன் ஏறக்குறைய இருநூற்றைம்பது விருதுகளைத் தன் பெயருடன் இணைத்துக் கொண்டான். அவற்றுள் சிறப்பானவை இராசசிம்மன், சங்கரபத்தன், ஆகமப்பிரியன் என்பனவாம். பிராமணரின் கடிகைகளின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்து வந்தான். மேலும், பல சிறப்புகளை இவனுடைய ஆட்சியில் காண்கின்றோம். சீன தேசத்துக்குத் தூது ஒன்றை அனுப்பிப் படைத்துணை பெற்றுத் திபேத்தின்மேல் போர்தொடுத்தான். இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவனின் ஆட்சி சில தீவுகளிலும் செலுத்தப்பட்டு வந்தது. அஃதுடன் கிழக்கிந்தியத் தீவு இராச்சியங்களுடன் இவன் நட்புறவு வைத்திருந்தான்.

இவ் விரண்டாம் நரசிம்மவர்மன் காலத்தில் காஞ்சிபுரத்தில் வாழ்ந்திருந்த தண்டி என்ற வடமொழிப் புலவர் தமிழில் அணியிலக்கணம் ஒன்றை இயற்றியுள்ளார். அது அவர் பெயராலேயே 'தண்டியலங்காரம்' என்று வழங்கி வருகின்றது. இப் பல்லவ மன்னன் பனைமலை, மாமல்லபுரம் ஆகிய இடங்களிலும் கற்றளிகள் எழுப்பியுள்ளான். மாமல்லபுரம் நகரமே இவன் காலத்தில் அமைக்கப்பட்டதுதான். அங்கு ஒரே பாறையில் குடையப்பட்டுள்ள கோயில்களும் சிற்பங்களும் கடற்கரைக் கோயிலும் இவன் காலத்தில் செதுக்கப்பட்டவையேயாம். இம் மன்னனுக்குப் பெரும் புகழையும், சைவசமயத்தில் என்றும் அழியாத இடத்தையும் பெற்றுக்கொடுத்தது காஞ்சிபுரத்தில் இவன் எழுப்பிய கைலாசநாதர் கோயிலாகும். திருத்தொண்டத் தொகையில் நாயன்மார்களுள் ஒருவராகச் சேர்க்கப்பட்டிருக்கும் பூசலார் நாயனார் திருநின்றவூரில் சிவபெருமானுக்குத் தம் நெஞ்சிலேயே கோயில் ஒன்றை எழுப்பிய காலத்தில் காஞ்சிபுரத்தில் கற்றளி ஒன்றை இம் மன்னன் கட்டி, அதில் சிவபெருமானை எழுந்தருளுவித்தான் எனப் பெரியபுராணம் கூறும். திருத்தொண்டத் தொகையில் கழற்சிங்க நாயனாராகச் சேர்க்கப்பட்டுள்ள மன்னன் இந் நரசிம்மவர்ம பல்லவன்தான். இவனுக்கு அழகிற் சிறந்த மனைவியர் இருவர் இருந்தனர். ஒருத்தி நடனத்தில் மிகவும் வல்லவள். அவள் பெயர் அரங்கப் பதாகை.

இரண்டாம் நரசிம்மவர்மனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம் பரமேசுவரவர்மன் (கி.பி.722-730) பட்டமேற்றான். இவன்

நீண்ட நாள் அரசாட்சியில் நீடித்திருக்கவில்லை. இவனுடைய ஆட்சியின் இறுதியாண்டுகளில் சளுக்கர்கள் பல்லவரின்மேல் மீண்டும் படையெடுத்தனர். விளந்தை என்ற ஊரில் நடை பெற்ற போரில் இவனைக் சங்க மன்னன் ஸ்ரீபுருஷன் என்பான் கொன்றான். பரமேசுவரன் இறந்த பிறகு நாட்டில் அரசுரிமைக் குழப்பம் ஒன்று ஏற்பட்டது. அரசுரிமையை ஏற்று அரியணை ஏற யாருமே முன்வரவில்லை. அவ்வமயம் பல்லவரின் இளைய பரம்பரையைச் சேர்ந்த இரணியவர்மனிடம் மக்கள் முறை யிட்டுக் கொண்டனர். அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி அவன் பன்னிரண்டு வயதே நிரம்பிய தன் மகன் பரமேசுவரனுக்கு முடி சூட்டுவிக்க ஒப்புக்கொண்டான். இச் சிறுவன் இரண்டாம் நந்திவர்ம பல்லவன் என்ற பெயரில் அரசுகட்டில் ஏறினான் (கி. பி. 730-795). வைகுண்டப் பெருமாள் கோயில் கல்வெட்டு ஒன்று இச் செய்தியைத் தெரிவிக்கின்றது.

பல்லவ சளுக்க பாண்டியரின் கல்வெட்டுகளிலிருந்து நந்தி வர்மனின் ஆட்சியைப்பற்றிப் பல அரிய செய்திகளை அறிந்து கொள்ளுகின்றோம். அரிய வாய்ப்பு ஒன்று பழுத்துத் தன் மடியில் விழக்கண்ட சளுக்க மன்னன் இரண்டாம் விக்கிரமாதித் தன் காஞ்சிபுரத்தின்மேல் படையெடுத்து வந்து (கி. பி. 740), அதை எளிதில் கைப்பற்றிக்கொண்டான். நந்திவர்மன் காஞ்சி யைக் கைவிட்டுத் தோற்றோடிவிட்டான். விக்கிரமாதித்தன் நகரத்தையும் கோயில்களையும் அழிக்கவில்லை. கோயில்களின் சிற்ப அழகுகளில் சொக்கி அவற்றுக்குப் பொன்னையும் பொரு ளையும் வாரி வழங்கினான். முந்திய தாக்குதலில் அவற்றினிட மிருந்து சளுக்கர்கள் கைப்பற்றிச் சென்றிருந்த விலையுயர்ந்த அணிகலன்களை அவற்றுக்கே திருப்பி அளித்துவிட்டான். அஃதுடன் அமையாமல் தமிழகத்துக் கைதேர்ந்த சிற்பிகளைத் தன் நாட்டுக்குக் கூட்டிச் சென்று பட்டடக்கல் முதலிய இடங் களில் தமிழகத்துச் சிற்ப அழகுகள் ததும்பும் வகையில் பல் கோயில்களையும் எழுப்பினான்.

இரண்டாம் நந்திவர்மன் ஓய்ந்திருக்கவில்லை. உதயசந்திரன் என்ற திறன்மிக்க படைத்தலைவன் ஒருவன் துணைகொண்டு காஞ்சிபுரத்தையும் பல்லவ அரசையும் மீட்டுக்கொண்டான். ரேவா என்ற இராஷ்டிரகூடப் பெண்ணை அவன் மணந்து அவள் மூலம் தந்திவர்ம பல்லவனைப் பெற்றெடுத்தான்.

இரண்டாம் நந்திவர்மன் வைணவ சமயத்தைப் பின்பற்றி யவன். காஞ்சியில் முக்தேசுவரர் கோயிலையும், வைகுண்டப்

பெருமாள் கோயிலையும் இவன் எழுப்பினான். திருமங்கையாழ்வார் இவன் காலத்தில் வாழ்ந்தவர். நந்திவர்மன் அறுபத்தைந்து ஆண்டுகள் அரசாண்டான். இவனுடைய அறுபத்தொன்றாம் ஆண்டில் பொறித்துக் கொடுக்கப்பட்ட பட்டத்தாள்மங்கலம் செப்பேடுகள் இவனுடைய தந்தையின் பெயர் இரணியவர்மன் என்றும், இவன் இளமையிலேயே முடிசூட்டப் பெற்றான் என்றும் தெரிவிக்கின்றன. இவனுடைய 21ஆம் ஆண்டில் வெட்டிக் கொடுக்கப்பட்ட காசக்குடிச் செப்பேடுகள் இவன் சிம்ம விஷ்ணுவின் இளவல் என்றும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பரமேசுவர போத்தராசாவின் நாட்டையே ஆண்டு வந்தான் என்றும் தெரிவிக்கின்றன.

இரண்டாம் நந்திவர்மனின் உடன்காலத்தவனான கங்க மன்னன் ஸ்ரீபுருஷகொங்கணி மகாதிராசா என்பவன் (கி.பி. 725-78) இரண்டாம் விக்கிரமாதித்திய சளுக்கனுக்கு உடந்தையாகப் பல்லவ நாட்டின்மேல் படையெடுத்து வந்தான் (கி. பி.731). வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள ஸ்ரீபுருஷ மங்கலம் (இப்போது சீஷமங்கலம் என்று அழைக்கப்படுவது) இவன் பெயரில் ஏற்பட்டதுதான். போரின் தொடக்கத்தில் கங்க மன்னன் நந்திவர்மன்மேல் வெற்றிகண்டான்; பல்லவரின் கொற்றக் குடையையும், 'பெருமானபு' என்ற விருதையும் பறித்துக்கொண்டான். ஆனால், போர்களின் இறுதியில் முடிவான வெற்றி நந்திவர்மனுக்கே கிடைத்தது. ஆகவே, அவன் கங்கர்கட்குச் சொந்தமான கங்கபாடி—6000 என்ற நிலப்பகுதியைக் கைப்பற்றித் தன் போர்த்துணைவன் பாண மன்னனுக்குத் தன் நன்றிக்கு ஈடாக அதை வழங்கினான்.

நந்திவர்மனுடைய படைத் தலைவனான உதயசந்திரன் விண்ணப்பம் செய்துகொண்டதன் மேல் மன்னன் பாலாற்றங் கரையின்மேல் இருந்த ஒரு கிராமத்தின் பெயர் குமாரமங்கல வெள்ளட்டூர் என்றிருந்ததை மாற்றி, அதற்கு 'உதயசந்திர மங்கலம்' என்று பெயரிட்டு, அங்கு அதர்மம் செய்தாரை ஒழித்து, அக் கிராமத்தை நூற்றெட்டுப் பிராமணருக்குத் தானம் செய்தான் என்று உதயேந்திரம் செப்பேடுகள் கூறுகின்றன. 5 பிராமணருக்குத் தானம் செய்யப்பட்ட கிராமத்தில் ஏற்கெனவே குடியுரிமை பெற்றிருந்த பலருடைய உரிமைகள் விலக்கப்பட்டன என்ற பொருள்படஇச்செப்பேடுகள் கூறுவதால், அக் குடிகளின் அதர்மம் எவ்வாறு கண்டறியப்பட்டது, எவ்வாறு

5. S.I.I: II. No. 74.

ஆய்ந்து முறை செய்யப்பட்டது, அக் குடிகளுக்கு வேறுநிலங்கள் அளிக்கப்பட்டனவா, தம்மிடமிருந்து விலக்கப்பட்ட நிலங்கட்கு இழப்பீடு அளிக்கப்பெற்றனரா என்ற ஐய வினாக்கட்கு விளக்கங் காண முடியவில்லை. தானம் பெற்ற அந்தணர்கள் தமிழ் நாட்டினராகத் தோன்றவில்லை; வட இந்தியாவினின்றும் வர வழைக்கப்பட்ட, அன்றித் தாமாக வந்து குடியேற இடமின்றி உழன்றுகொண்டிருந்த பிராமணர்கள் அவர்கள் என்று அவர் களுடைய பெயர்கள் எடுத்துக்காட்டுகின்றன. இச் செப்பேட் டுச் சாசனத்தின்கீழ்ப் பயன்பெற்ற சில பிராமணரின் பெயர்கள் கௌண்டின்ய கோத்திரம் பிரவசன சூத்திரம் ருத்ரசர்மன், கௌண்டின்ய கோத்திரம் ஆபஸ்தம்ப சூத்திரம் மாதவசர்மன், காசியப கோத்திரம் ஆபஸ்தம்ப சூத்திரம் காளசர்மன், முத்கல கோத்திரம் ஆபஸ்தம்ப சூத்திரம் சன்னகாளி, கௌசிக கோத்திரம் ஆபஸ்தம்ப சூத்திரம் கங்கபுரம், துரோண சிரேஷ்ட புத்திரன் ரேவதி ஆகியவையாம். உதயேந்திரம் செப்பேடு களில் எழுதப்பட்டுள்ள மெய்க்கீர்த்திக் கவிதையை இயற்றியவன் மேதாவிகுலத்து உதித்த பரமேசுவர கவி என்பவனாவான்.

இரண்டாம் நந்திவர்மன் கால் சாய்ந்தது. அவனுக்குப்பின் அவன் மகன் தந்திவர்மன் மணிமுடி சூட்டிக்கொண்டான் (கி.பி. 796-846). நந்திவர்மன் இறந்த பிறகு பல்லவ வரலாற்றில் ஒரு திருப்பம் காணப்படுகின்றது. வடக்கில் இராஷ்டிரகூடரின் செல்வாக்கு உயர்ந்து வந்து கொண்டிருந்தது. பல்லவர்க்கு அவர்களுடன் நல்லுறவு கிடையாது. தெற்கே விசயாலய சோழனின் பரம்பரை தொடங்கிவிட்டது. பல்லவ அரசின் பண்டைய புகழ் ஒளி மங்கலாயிற்று. உள்நாட்டுக் கலகங்களும், சூழ்ச்சிகளும் மலிந்தன. நாட்டில் அமைதி குலைந்துவிட்டது. பல்லவ அரசு ஆட்டங் கொடுக்கலாயிற்று. தந்திவர்மன் இராஷ் டிரகூடரின் பிடியிலிருந்து ஓரளவு தப்பினானாயினும், சோழர் களுடன் போரிட்டுத் தன் வலிமையை இழக்கும் அளவுக்கு அவ னுடைய ஆற்றல் குன்றிவிட்டது. தந்திவர்மனின் மனைவி கதம்ப குலத்தவளான அக்களநிம்மடி என்பவள் வயிற்றில் பிறந் தவன் மூன்றாம் நந்திவர்மன். தந்திவர்மனுக்குப் பிறகு இவனே அரியணை ஏறினான் (கி.பி. 846-69).

மூன்றாம் நந்திவர்ம பல்லவன் இராஷ்டிரகூட இளவரசி சங்கா என்பவளை மணந்திருந்தான். இவள் வயிற்றில் பிறந் தவன்தான் அடுத்த பல்லவ மன்னனாக இருந்த நிருபதுங்கன் என்பவன். நந்திவர்மனின் மற்றொரு மனைவியான கண்டன் மாறம்பாவை என்பாள் வயிற்றில் பிறந்தவன் அபராஜித விக்கிரமவர்மன்.

நந்திவர்மன் சிறந்த போர்த்திறம் படைத்தவன். நந்தி போத்தரசன், நந்தி விக்கிரமவர்மன், விசயநந்தி விக்கிரமவர்மன் என்று பல பெயர்கள் இவனுக்கு உண்டு. நந்திக் கலம்பகத்தில் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் எனப் பாராட்டப்படுபவன் இவனே யாவான். தெள்ளாற்றில் மட்டுமன்றி, வெள்ளாறு, கடம்பூர், வெறியலூர், தொண்டி, பழையாறு ஆகிய இடங்களில் தன் பகைவரைப் பொருது வெற்றிகண்டான் இவன் என நந்திக் கலம்பகம் கூறுகின்றது. கொங்கு நாடும், சோழ நாடும் இவனுக்குத் தோற்று அடிபணிந்தனவாகையால் இவனுக்குக் 'கொங்கன்' என்றும் 'சோணாடன்' என்றும் விருதுகள் எய்தின. மூன்றாம் நந்திவர்மன் கி.பி. 862 ஆம் ஆண்டளவில் இரண்டாம் வரகுண பாண்டியனுக்குத் துணையாக இலங்கை மன்னன்மேல் போர் தொடுத்தான். இவனுக்குப் பக்கபலமாக நின்று அப் போரை நடத்திக் கொடுத்தவன் இளவரசன் நிருபதுங்கன் ஆவான். மூன்றாம் நந்திவர்மன் நந்திக் கலம்பகத்தில் அவனி நாராயணன் என்றும், ஆட்குலாம் கடற்படைட் அவனி நாரணன் என்றும், நுரை வெண்திரை நாற்கடற்கு ஒரு நாயகன் என்றும் பாரட்டப் பெறுகின்றான். மல்லையிலும் மயிலையிலும் துறை முகங்கள் அமைந்திருந்தன. இப் பல்லவ மன்னன் கடல் கடந்து சென்று அயல்நாடுகளுடன் தொடர்புகொண்டிருந்தான் என்பது விள்க்கமாகின்றது.

மூன்றாம் நந்திவர்மனையடுத்து அவன் மூத்த மகன் நிருபதுங்கன் முடிசூட்டிக்கொண்டான். இவனுடன் பிறந்த தம்பியின் பெயர் கம்பவர்மன் என்பது. இவனுடைய மாற்றாந் தாய் வயிற்றுப் பிறந்த அபராஜிதன் நிருபதுங்கன்மேல் அரசுரி மைப் போர் தொடுத்து அவன்மேல் திருப்புறம்பயம் என்ற இடத் தில் வெற்றி கண்டான்(சு. கி. பி. 895). இப் போரில் இவனுக்குக் கங்கரும் சோழரும் துணை நின்றனர். இப் போர் முடிவுற்ற பிறகு இருபத்தாறு ஆண்டுகள் வரையில் நிருபதுங்கனைப் பற்றிய செய்தியே கிடைக்கவில்லை. அவன் தன் நாற்பத்தொன்பதாம் ஆட்சியாண்டில் நாட்டிய கல்வெட்டு ஒன்று திருத்தணிகைக்கு அண்மையிலுள்ள மடவளம் என்னும் ஊரில் காணப்படுகின்றது. அபராஜிதனின் ஆட்சிக் காலத்தின் இறுதியில் நிருபதுங்கன் தான் ஒதுங்கியிருந்த இடத்திலிருந்து மீண்டும் வெளிப்பட்டான் என்று இதனால் அறிகின்றோம். அபராஜிதனின் ஆட்சி பதி னெட்டு ஆண்டுகள் நீடித்தன (கி. பி. 895—913). அவனுடைய செல்வாக்குத் தொண்டைமண்டலத்தின் தென்பகுதி வரை யிற்றான் எட்டி இருந்தது. தொண்டைமண்டலம் சோழரின் பிடியில் சிக்குண்டிருந்தது. இக் காலத்தில் நாட்டப்பட்ட ஆதித்த

சோழனின் கல்வெட்டுகள் தொண்டைமண்டலத்தில் பல இடங்களிலும் காணப்படுகின்றன. வாணகோவரையர்கள் ஆதித்தனுக்குத் திறை செலுத்தி வந்தனர் என்ற செய்தியைத் திருவொற்றியூர்க் கல்வெட்டுகள் இரண்டு தெரிவிக்கின்றன. அபராஜிதனை ஆதித்த சோழன் போரில் கொன்றான் (கி. பி. 913) என்ற செய்தியை வீரராசேந்திரனின் கன்னியாகுமரிக் கல்வெட்டு ஒன்றினால் அறிகின்றோம். இராசேந்திர சோழனின் திருவாலங்காட்டுச் செப்பேடுகளும் இப் போரைக் குறிப்பிடுகின்றன.

அபராஜிதன் தன் இறுதியாண்டுகளில் அடைந்த இன்னல்களைப் பயன்படுத்திக்கொண்டு நிருபதுங்கன் தன் அரசியற் செல்வாக்கை வளர்த்துக்கொண்டான். ஏற்கெனவே முதுமையினால் வாடிய அபராஜிதன் நீண்ட காலம் உயிர் வாழ்ந்திருக்கவில்லை. இம் மன்னனுக்குப் பிருதிவீ மாணிக்கம், வீரமகாதேவியார் என இரு மனைவியர் இருந்தனர். முன்னவள் பேரால் பிருதிவி மாணிக்கம்படி என்றொரு முகத்தலளவை வழங்கி வந்தது. உக்கல் என்ற ஊரில் எழுப்பப்பட்ட திருமால் கோயில் ஒன்று புவன மாணிக்க விஷ்ணு கிரகம் என்று இவ்வரசியின் பேரால் விளங்குகின்றது. வீரமகாதேவியார் இரணிய கருப்பம், துலாபாரம் என்ற சடங்குகளைச் செய்துகொண்டு கோயிலுக்குத் துலாபாரம் பொன்னில் ஐம்பது கழஞ்சு எடுத்து வழங்கினாள் என்று திருக்கோடிக்காக் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.

நிருபதுங்கனுக்குப் பிறகு பட்டமேற்ற கம்பவர்மனைப்பற்றிப் போதுமான விளக்கம் கிடைக்கவில்லை. தன் உடன்பிறந்தாராகிய நிருபதுங்கனுடனும், அபராஜிதனுடனும் இவன் சில காலம் இணைந்து ஆட்சிப் பொறுப்புகளை ஏற்றிருந்தான் என்று ஊகிக்கலாம். பிறகு பல்லவ அரசர்னது சிறுசிறு தலைவர்களின் கைக்கு மாறி இறுதியில் கி.பி. 949-ல் தன்நிலை தடுமாறித் திறன் குன்றி மறைந்து போயிற்று. அவ் வாண்டிற்றான் இராஷ்டிரகூட மன்னன் படையெடுத்து வந்து காஞ்சிபுரத்தைக் கைப்பற்றிக் கொண்டான்.

பல்லவர் காலத்திய பெருமை தமிழகத்து வரலாற்றில் சுடர்விட்டு ஒளிர்கின்றது. தமிழரின் நாகரிகத்துக்கும், பண்பாட்டுக்கும் புறம்பானவர்களான பல்லவர்கள் தமிழகத்துக்கு வந்த பிறகு நாளடைவில் தாமும் தமிழராகவே மாறிவிட்டனர். ஆதியில் வடமொழியைத் தம் ஆட்சி மொழியாகக் கொண்டிருந்தனரேனும், நாளடைவில் அவர்கள் தமிழையும் தம் ஆட்சி மொழியாகக் கொண்டனர். அவர்கள் காலத்தில் பல வட

மொழி நூல்கள் தோன்றின. வடமொழி நூலாசிரியர்கள் பலர் பல்லவராட்சியில் மேம்பாடுற்றனர். பல்லவர்கள் தமிழையும் பேணி வளர்த்தனர்.




தமிழகத்தில் ஆதியில் குடியேறிய பல்லவர்கள் காடு கொன்று நாடாக்கினார்கள். பிறகு பல்லவர்கள் பரம்பரையை விளக்கம் செய்த புகழ்பெற்ற வேந்தர்கள் மிகப் பெரிய ஏரிகளைக் கட்டியும், ஆற்றுக்கால்கள் கோலியும் உழவுக்குப் பெரிதும் வளமூட்டி வந்தனர். காடுகளை வெட்டி நாடாக்கினராகையால் பல்லவர்களுக்குக் காடுவெட்டி என்ற விருது ஒன்றும்

உண்டு. சில ஊர்களின் பெயர்களில் அவ் விருது சேர்ந்திருப்பதை இன்றும் காணலாம். ஆந்திரப் பிரதேசத்திலுள்ள கார்வேட்டி நகரம் காடுவெட்டி நகரம் என்பதன் மரூஉவேயாகுமெனத் தோன்றுகின்றது. சென்னைக்குப் பன்னிரண்டு கல் தொலைவில் 'காடுவெட்டி' என்ற பெயருள்ள சிற்றூர் ஒன்றும் உண்டு.

## மலை வண்ண ஓவியம்

பண்டைத் தமிழர்கள் ஓவியக் கலையில் தேர்ச்சி யடைந்திருந்தனரென்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. ஆனால் அக்கால ஓவியங்கள் யாவும் கற்சுவர் அல்லது கற்பாறை மீது தீட்டப்பட்டிருந்ததென்றும் கூறமுடியாது; சுவர் மேலும் தூண்மீதும் சில அமைந்திருக்கலாம்.

கற்பாறை மீது தீட்டப்பட்ட ஓவியங்கள் சில பல்லவர், பாண்டியர் கோயில்களில் காணப்படுகின்றன. இவை யாவற்றிற்கும் வழிகாட்டியாயிருந்தவன் விசித்திரசித்தன் என்ற புகழ் பெற்ற முதலாம் மகேந்திரவர்மப் பல்லவனே எனக் கருதலாம். மாமண்டூர்க் குகைக்கோயிலிலுள்ள கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட 'தக்ஷிணசித்திர' என்னும் ஓவிய நூலைப் படைத்தவன் மகேந்திரனே ஆவான் எனக் கருதலாம். அவனுக்குச் 'சித்திர காரப் புலி' என்ற விருதும் உண்டு.

சித்தன்னவாசல், மலையடிப்பட்டி (புதுக்கோட்டை மாவட்டம்), மாமல்லபுரம் ஆதிவராகக் குகைக்கோயில், மாமண்டூர்க் குகைக்கோயில் ஆகியவற்றிலும், வடஆர்க்காட்டு மாவட்டத்தைச் சார்ந்த அர்மாமலைக் குகைக்கோயிலிலும் கற்பாறைமீது தீட்டப்பட்ட பழைய ஓவியங்களைக் காணலாம்.

மாமல்லபுரத்துச் சிற்பங்கள் யாவும், வராகக்குகையின் சில பகுதிகளிலும் மாமண்டூர்க் குகையில் காணுவதுபோல் ஓவியமாகவே தீட்டியிருக்கலாம். ஆனால் நடுவில் காணும் ஆதிவராகச் சிலையிலுள்ள சாயப்பூச்சு இக்காலத்தைச் சார்ந்ததென்று மிகப் பலரும் கருதுகின்றனர். மாமல்லபுரத்து மிகச் சிறப்பு வாய்ந்த சிலர் பகீரதன் தவம் (அருச்சுனன் தவம்) எனப்படுவதும் வேறு சில புடைப்புச் சிற்பங்களும் ஓவியப் படைப்பாக ஆதியிலேயே அமைக்கப் பெற்றதெனச் சிலர் கருதினர். ஆனால், தற்போதைய ஆராய்ச்சியாளருள் பெரும்பாலாரும் அதை ஒப்புக் கொள்ளவில்லை. ஆதியிலேயே இன்றிருப்பது போல்தான் தோன்றியிருக்க வேண்டும் என்பது அவர்கள் கருத்து.

பல்லவர் காலத்து ஓவியங்கள் சில சித்தன்னவாசலில் காணப்படுகின்றன. இங்குள்ள குகை முழுவதும் ஆதியில் சாய மடிக்கப்பட்டிருந்ததாகத் தோன்றுகிறது. ஆனால் தற்போது குகையின் உபரிப்பகுதியிலும், மேல்தளத்திலும், தூண்களிலும் தாம் ஓவியப்படைப்பின் அடையாளங்கள் காணப்படுகின்றன. எஞ்சியுள்ளவற்றில் மிக்க கவர்ச்சியளிக்கும் ஓவியம் அங்குச் சித்திரிக்கப்பட்டிருக்கும் ஒரு குளமே. அதில் தாமரை மலர், மீன்கள், எருமைகள், யானைகள் முதலியவையும், மூன்று மனித உருக்களும் சித்திரிக்கப்பட்டுள்ளன. அம் மூன்று மனிதர் களையும் சமணர்களெனக் கருதலாம். தூண்களில் பெண்கள் சிலர் நடனமாடுவதைக் காட்டியிருக்கிறார்கள்.

சித்தன்னவாசல் குகை ஆதியில் சமணதீர்த்தங்கரர்களுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டிருந்தது. அங்குக் காணும் ஓவியப் படைப்புகள் முதலாம் மகேந்திரவர்மன் காலத்தைச் சார்ந்தவை எனப் பலரும் முன்னாளில் கருதினர். ஆனால், தற்போதைய ஆராய்ச்சியாளர் மிகப்பலரும் அவை ஒன்பதாவது நூற் றாண்டைச் சார்ந்த பாண்டியர் காலத்தவை என எண்ணு கின்றனர்.

வடஆர்க்காட்டு அர்மாமலையில் ஒரு குன்றின்மேல் தோன்றும் குகையில் முன்பு சிவன்கோயில் ஒன்று இருந்தது. அங்கே பாறைமீது செடிகொடி, தாமரை ஆகியவற்றின் ஓவியச் சின்னங்கள் காணப்படுகின்றன.

### சோழர்கள்

நான்காம் நூற்றாண்டிலிருந்து எட்டாம் நூற்றாண்டுவரை யில் உறையூர்ச் சோழரைப்பற்றிய செய்திகள் ஒன்றேனும் கிடைக்கவில்லை. களப்பிரர் சோழ நாட்டைக் கைப்பற்றி ஆண்டுவந்தமைதான் இதற்குக் காரணம். களப்பிர குல மன்னன் அச்சுதவிக்கிராந்தன் என்பவன் காவிரிப்பூம்பட்டினத் தினின்றும் அரசாண்டு வந்தான் என்று பௌத்த நூலாசிரிய ரான புத்ததத்தர் என்பவர் கூறுகின்றார். சோழன் கரிகாலனுக் குப் பின்பு வந்த சோழர்கள் களப்பிரர் ஆட்சியின்கீழ் ஒளிமங்கி இருப்பிடம் தெரியாமல் உறையூரில் ஒடுங்கிக்கிடந்து வாழ்ந்தனர்.

பல்லவரும் பாண்டியரும் களப்பிரரை முறியடித்துத் தத்தம் நாடுகளை மீட்டுக்கொண்டனராயினும் சோழர் மட்டும் தலை தூக்காமலேயே சில நூற்றாண்டுகள் கழித்துவிட்டனர். பிறகு காலப்போக்கில் திருமணத் தொடர்புகளைக் கொண்டு அவர்கள்

தாம் இழந்திருந்த செல்வாக்கைச் சிறிது சிறிதாக மீட்டுக் கொண்டு வந்தனர். இறுதியாக உறையூருக்கு அண்மையில் ஒரு குறுநில மன்னனாகக் காலங்கடத்தி வந்த விசயாலயன் வியக்கத் தக்க சோழ பரம்பரையொன்றைத் தொடக்கி வைத்தான்.

## ரேனாண்டுச் சோழர்கள்

தம் செல்வாக்குக் குன்றியிருந்த காலத்தில் சோழர்கள் காவிரிக்கரையிலேயே முடங்கிக் கிடக்கவில்லை. சோழ அரசிளங் குமரர்களுள் சிலர் சோழநாட்டை விட்டு வெளியேறித் தெலுங்கு, கன்னட நாடுகளுக்குச் சென்று குடியேறினர். அவர்களுள் வரலாற்றுச் சிறப்பெய்தியவர்கள் கடப்பை, கர்நூல், அநந்தப் பூர் மாவட்டங்களில் குடியேறிய 'ரேனாண்டுச் சோழர்கள்' ஆவர். அவர்களைப்பற்றி யுவான்-சுவாங் என்ற சீன வழிப் போக்கன் தன் குறிப்புகளில் கண்டுள்ளான் (கி.பி.640). அவன் அந் நாட்டைச் 'சூளியே' என்று குறிப்பிடுகின்றான். சூளியே என்னும் சொல் சோழயர் அல்லது சோழர் என்னும் சொல்லின் திரிபாகும். அவர்களுடைய கல்வெட்டுகளும், புண்ணியகுமார னின் மாலேபாடு (கடப்பை மாவட்டம்) செப்பேடுகளும் கி.பி. ஏழாம் நூற்றாண்டுடன் தொடர்பு கொண்டிருப்பனவாகக் காணப்படுகின்றன. புண்ணியகுமாரனின் பரம்பரையினர் ஒரு நூற்றாண்டு ஆட்சி புரிந்து வந்தனர். இவர்கள் தாம் சோழன் கரிகாலன் பரம்பரையினர் என்று தம்மைக் கூறிக்கொண்டனர். சோழ மகாராசாக்கள் என்ற பட்டப் பெயரால் தம்மை அவர் கள் அறிமுகப்படுத்திக் கொண்டனர். புண்ணியகுமாரனுக்குப் பின்பு அவனுடைய பரம்பரை சீர்குலைந்து தென்னிந்தியாவில் பல இடங்களில் சிதறுண்டு போயிற்று. 'சோழ மகாராசாக் களின் சோழராச்சியம் தானியகடகத்துக்குத் தென்மேற்கே 200 கல் தொலைவில் அமைந்திருந்தது; அது 480 கல் சுற்றள வும், அதன் தலைநகரம் இரண்டு கல் சுற்றளவும் கொண்டிருந் தன. நாடுமுழுவதும் காடு மண்டிக் கிடந்தது. காற்றில் வெப்ப மும் ஈரமும் மிகுதியாகக் காணப்பட்டன; மக்கள் கொடியவர்க ளாகவும், ஒழுக்கங் குன்றியவர்களாகவும் தென்பட்டனர். பௌத்த விகாரைகள் சிதைவுண்டு கிடந்தன. நாடெங்கும் தேவர் கோயில்கள் மலிந்து கிடந்தன. திகம்பரச் சமணர்கள் எண்ணற்றவர்கள் காணப்பட்டனர்' என்று யுவான்-சுவாங் எழுதியுள்ளான்.

## பாண்டியர்கள்: ஏழு எட்டாம் நூற்றாண்டுகளில்

சங்க காலத்துக்குப் பிறகு கி. பி. 7ஆம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுவரையில் ஆட்சி புரிந்துவந்த பாண்டிய

மன்னரைப்பற்றிய காலமோ தலைமுறைகளோ இன்னும் திருத்தமாக வரையறுக்கப் படவில்லை. இவற்றைப்பற்றிய விளக்கங்களை ஒருவாறு அறியத் துணைசெய்பவை பாண்டியன் நெடுஞ்சடையனின் வேள்விக்குடிச் செப்பேடுகள்,[6] சின்னமனூர்ச் சிறிய செப்பேடுகள்,[7] சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகள் (இவை இரண்டும் இராசசிம்மன் வழங்கியவை), சென்னைக் கண்காட்சி சாலையில் உள்ள செப்பேடுகள் (சீவரமங்கலத்தவை), ஆனைமலையில் கண்டெடுக்கப்பட்ட மாறன் சடையன் கல்வெட்டு ஒன்று, பராந்தகன் கல்வெட்டு ஒன்று (கி. பி. 770), இரண்டாம் வரகுண பாண்டியன் கல்வெட்டு ஒன்று (கி.பி. 870) முதலியவையாம். இவற்றைக்கொண்டு ஆராய்ச்சிகள் புரிந்து கீழ்க்கண்டவாறு பாண்டியரின் ஆட்சி ஆண்டுகளை வரலாற்று அறிஞர்கள் அறுதியிட்டுள்ளனர். பாண்டியன் கடுங்கோன் (கி.பி. 575-600), மாறவர்மன் அவனிசூளாமணி (கி.பி. 600-625), சடையவர்மன் செழியன் சேந்தன் (கி.பி. 625-640). மாறவர்மன் அரிகேசரி (கி.பி. 641-670). கோச்சடையன் ரணதீரன் (கி. பி. 670-710), மாறவர்மன் அரிகேசரி பராங்குசன், முதலாம் இராசசிம்மன் (கி.பி. 710-765), நெடுஞ்சடையன் பராந்தகன் (கி. பி. 765-790), இரண்டாம் இராசசிம்மன் (கி.பி. 790-792), வரகுணமகாராசன் (கி.பி. 792-835), சீமாறன் பரசக்கர கோலாகலன் சீவல்லபன் (கி.பி. 835-862), வரகுணவர்மன் (கி.பி. 862-895), பராந்தக பாண்டியன் (கி.பி. 880-905), மூன்றாம் இராசசிம்மன் (கி. பி. 900-920), வீரபாண்டியன் (கி. பி. 946-966),

கடுங்கோன் என்ற பாண்டியன் பாண்டி நாட்டைக் களப்பிரரின் கொடுங்கோன்மையிலிருந்து கி.பி. 6ஆம் நூற்றாண்டில் மீட்டுக்கொண்டான். 'பாண்டி நாடு கடல் முத்துகளின் களஞ்சியம்; மக்கள் கறுப்பு நிறம், கடுமையானவர்கள்; எளிதில் உணர்ச்சி வயப்படுபவர்கள்; இங்குப் பல சமயங்கள் காணப்படுகின்றன; மக்கள் வாணிகத்திலேயே கண்ணும் கருத்துமாக உள்ளார்களே ஒழியப் பண்பட்டவர்களாகக் காண்கின்றிலர்' என்று யுவான்-சுவாங் எழுதுகின்றார். சிறிது காலமே பாண்டி நாட்டில் தங்கியிருந்து, சிற்சில மக்களையும் பழக்க வழக்கங்களையுமே கண்டறிந்த இந்தச் சீன வழிப்போக்கன் கூறியுள்ள செய்திகள் அவ்வளவும் உண்மை என்று கொள்ளுதல் நலமன்று.

அக் காலத்தில் ஒரு சில பிக்குகளே பாண்டி நாட்டில் காணப்பட்டனர்; பௌத்த விகாரைகள் பாழ்பட்டுக் கிடந்தன. களப்

6. Ep. Inp. XIII. p. 291. 7. S.I.I. III No. 206.

பிரர் இழைத்த கொடுமையினால் மதுரை மாநகரம் தன் பண் பாட்டுச் சிறப்பையும், பொலிவையும் இழந்து கிடந்தது. மூன்றாம் மன்னனான சேந்தன் போர்மறம் கெழுமியவன். இவன் சேரரை வென்று வானவரம்பன் என்ற விருது ஒன்றை ஏற்றான். இவன் மகன் மாறவர்மன் அரிகேசரி என்பவன். பெரியபுராணத்தில் நின்றசீர் நெடுமாற நாயனார் என்று பாராட்டப்படுபவனும் திருவிளையாடற் புராணத்தில் கூன் பாண்டியன் என்றும், சுந்தர பாண்டியன் என்றும் அழைக்கப் படுபவனும் இம் மன்னனேயாவான். இவன் சேர வேந்தனை யும், குறுநில மன்னர் பலரையும், பாழி, நெல்வேலி, செந்நிலம் முதலிய ஊர்களில் பொருது வென்றனன் என்றும், சோழநாட் டின் தலைநகராகிய உறையூரை ஒரு பகலில் கைப்பற்றினன் என்றும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இப் போருக்குப் பிறகு இவன் 'வளவர்கோன் பாவை' யாகிய மங்கை யர்க்கரசியை மணந்திருக்க வேண்டும். இம் மாறவர்மன் இலங்கையின்மேல் படையெடுத்து வெற்றிமாலை சூடியதாகவும் தெரிகின்றது. இவனுடைய சிறப்புகளைப்பற்றிப் பேசும் பாண்டிக்கோவை என்னும் நூல் ஒன்று வரலாற்றுச் செய்திகளை யும் தெரிவிக்கின்றது. இவனுக்கு நெடுமாறன், புலியன், மீன வன், நேரியன், வானவன் மாறன், அரிகேசரி, பராங்குசன், விகாரி, அதிசயன், ரணோதயன், ரணாந்தகன் என்றெல்லாம் பெயர் வழங்கினவெனப் பாண்டிக்கோவை தெரிவிக்கின்றது. இந் நூல் முழுவதும் இப்போது கிடைக்கவில்லை. பல நூல் களின் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட முந்நூற்றைம்பது செய்யுள்கள் மட்டும் கிடைத்துள்ளன. இம் மன்னன் முதலில் சமணனாக இருந்தான் என்றும், அவனுடைய மனைவி மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் ஆகிய பெருமக்களின் முயற்சியால் திருஞானசம்பந்த நாயனார் இவனைச் சைவத்துக்கு மீட்டார் என்றும் பெரிய புராணம் கூறும்.

அரிகேசரியை அடுத்துப் பட்டங்கட்டிக் கொண்டவன் கோச் சடையன் ரணதீரன். இவன் போர்த் தொழிலில் வல்லவன். இவன் பல இடங்கட்கும் படையெடுத்துச் சென்றான். திருநெல் வேலி மாவட்டத்தில் அம்பாசமுத்திரத்திற்கு அண்மையிலுள்ள மருதூரில் ஆய் என்னும் குறுநில மன்னனை வென்றான். கொங்குதேசத்தையும் வென்று கொங்கர் கோமான் என்றொரு விருதையும் சூடினான். மங்களூர், அதாவது மங்கலாபுரம் என்ற ஊரில் இவன் மராட்டியர்மேல் போர் தொடுத்து வெற்றி கொண்டான் எனவும் அறிகின்றோம்.

முதலாம் மாறவர்மன் இராசசிம்மன் மிகப் பெரிய வீரன்;
ஆட்சித் திறன் வாய்ந்தவன். இவன் நந்திபுரத்தை முற்றுகை
யிட்டு நந்திவர்ம பல்லவனைப் புறமுதுகிடச் செய்தான்; காவிரிக்
கரைப் பகுதிகளைக் கைப்பற்றினான். நந்திபுரத்துப் போரில்
தான் நந்திவர்மனின் படைத் தலைவனான உதயசந்திரன் தன்
மன்னனின் துணைக்கு விரைந்து சென்று அவனை மீட்டான்.
இம் மாபெரும் வீரனின் சிறந்த தொண்டைப் பாராட்டிப்
பல்லவ மன்னன் இவனை வில்வலம் என்ற ஊருக்குக் குரிசில்
ஆக்கினான். வட ஆர்க்காடு மாவட்டத்தில் வாணியம்பாடிக்கு
அண்மையில் உள்ள ஊர் ஒன்று இவன் பேரால் உதயசந்திரபுரம்
என்று இன்றளவும் விளங்கி வருகின்றது. பல்லவ மன்னனை
வென்று பல்லவ பாஞ்சனன் என்று ஒரு விருதையும் இராசசிம்மன்
தன் பெயருடன் இணைத்துக்கொண்டான். கொங்குதேசப்
போர்களில் இம் மன்னனுக்குக் கிடைத்த வெற்றிப் பரிசுகளில்
கொடுமுடியும் ஒன்றாகும். இவன் மேலைக்கங்கரின் அரசிளங்குமரி
பூசுந்தரி என்னும் ஒருத்தியை மணந்தான்; சளுக்க மன்னன்
கீர்த்திவர்மனை ஒரு போரில் தோல்வியுறச் செய்தான்; கூடல்
(மதுரை), வஞ்சி, கோழி (உறையூர்) ஆகிய ஊர்களிலிருந்த
அரண்மனைகளையும், கோட்டை கொத்தளங்களையும் புதுப்
பித்தான். மேலும், இவன் கோசகசிரங்கள், இரணிய கருப்பங்
கள், துலாபாரங்கள் போன்ற 'மகாதானங்கள்', அதாவது
பெருங்கொடைகள் பல வழங்கினனென அறிகின்றோம்.

முதலாம் இராசசிம்மனையடுத்து அரியணை ஏறியவன்
நெடுஞ்சடையன் பராந்தகன் என்பவன். இவன் கங்கநாட்டு
இளவரசி பூசுந்தரி வயிற்றில் பிறந்தவன். வேள்விக்குடிச்
செப்பேட்டுத்[8] தானங்களை வழங்கிய மன்னன் இவனேயா
வான். இவன் முன்னோனான பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு
வழுதி என்ற பாண்டிய மன்னன் கொற்கைகிழான் நற்கொற்ற
னுக்கு வழங்கிய வேள்விக்குடி என்ற ஊரைக் களப்பிரர்
கவர்ந்துகொண்டனர். அக் கொற்கைகிழான் கால்வழியினனான
நற்சிங்கன் என்ற பெயரவன் ஒருவன் இம் மன்னன் முன்பு தன்
உரிமையை யெடுத்துக்கூறி அவ்வூரை மீண்டும் தன்பால் உரிமை
யாக்குமாறு முறையிட்டுக்கொண்டான். அவனுடைய வேண்டு
கோளுக்கு இசைந்து அவ்வூரை நெடுஞ்சடையன் பராந்தகன்
அவனுக்கே மீட்டுக்கொடுத்த சாசனமே வேள்விக்குடிச் செப்
பேடுகள் என்பன. அவை இப்போது இலண்டன் பொருட்
காட்சிச் சாலையில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

8 Ep. Ind. XVII. p. 116.

வேள்விக்குடிச் செப்பேடுகளும், சென்னைப் பொருட்காட்சிச் சாலையிலுள்ள சீவரமங்கலச் செப்பேடுகளும்,[9] ஆனை மலைக் கல்வெட்டுகளும், திருப்பரங்குன்றத்துக் கல்வெட்டுகளும் கிடைத்திராதிருப்பின் களப்பிரரைப்பற்றியும், இடைக்காலப் பாண்டிய மன்னரின் வரலாறுகளையும் நாம் அறிந்துகொள்ள இயலாது.

### கொங்குநாடும் சேரநாடும்

கொங்குநாடு பல தொல்லைகளுக்குட்பட்டுக் கொண்டிருந்தது. மேலைக் கங்கர்கள், பல்லவர்கள், பாண்டியர்கள் ஆகியவர்கள் ஒருவருக்குப்பின் ஒருவராகக் கொங்கு நாட்டின்மேல் படையெடுத்தபடியே இருந்தனர். சங்க காலத்துக்குப் பிந்திய சேரநாட்டைப்பற்றிய செய்திகள் விரிவாகக் கிடைக்கவில்லை. மாகோதைச் சேரர் என்றவர் ஆண்டனரெனக் கூறப்படுகிறது. சேரமான் பெருமாள் என்ற பெயர் கொண்ட மன்னர் சிலர் ஆண்டுவந்தனர் என அறிகின்றோம். ஆறாம் நூற்றாண்டிலேயே சேரநாட்டில் கிறித்தவ சமயம் அண்டிவிட்டதாகக் 'கிறித்தவ நிலப்பரப்புகள்' என்னும் தம் நூலில் காஸ்மாஸ் இந்திகோ பிளியுஸ்டீஸ் என்பார் எழுதுகின்றார். பாண்டியருடைய கல்வெட்டுகள் சிலவற்றிலிருந்து சேரநாட்டின் வரலாற்றை ஒருவாறு ஆய்ந்தறியலாம். பாண்டியர்கள் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் முடிவுவரையில் சேர நாட்டு ஆய் மன்னர் ஆண்டுவந்த பகுதிகளின்மேல் பன்முறை படையெடுத்தனர். பாண்டிய மன்னன் அரிகேசரி ஆய்நாட்டின்மேல் படையெடுத்தான். அவன் மகன் கோச்சடையன் ரணதீரன் மருதூர்ப் போரில் ஆய் மன்னனைப் பொருது வெற்றிகண்டான்; அடுத்து இரு பாண்டி மன்னர்கள் சேரநாட்டின்மேல் அடுத்தடுத்துப் படையெடுத்தனர். மாறன் சடையன் ஆய் மன்னனையும், வேணாட்டு மன்னனையும் போரில் வென்றான். வேணாட்டு மன்னனைப் போரில் வென்றதுமன்றி அவனைக் கொன்று அவனுடைய யானைகளையும் குதிரைகளையும் கவர்ந்து சென்றான். ஆய்குல மன்னன் கருநந்தடக்கன் கி.பி. 857-ல் அரியணை ஏறினான். தென் திருவிதாங்கூர் முழுவதும் அவன் ஆட்சியின் கீழ் இருந்தது. அப்போது சுசீந்திரமும் கன்னியாகுமரியும் பாண்டியர் வயம் இருந்தன. கருநந்தடக்கன் மகன் வரகுணன் கி.பி. 885-925 ஆண்டுகளில் ஆட்சி புரிந்தான், வரகுணன் காலமான பிறகு ஆய்குலம் வரலாற்றிலிருந்து மறைந்து விடுகின்றது.

9. Ind. Ant. Vol. XII p. 69, 25.

## குறுநில மன்னர்கள்

வாணகோவர்கள் சாதவாகனரின்கீழ்க் குறுநில மன்னராக இருந்துவந்தனர். பிறகு அவர்கள் பல்லவரின் மேலாட்சிக்கு உட்பட்டு நாடாண்டு வந்தனர். இவர்களைப்பற்றிய குறிப்புகள் கி.பி. 4 ஆம் நூற்றாண்டு முதல் கிடைக்கின்றன. தென்னிந்தியாவின் பல பகுதிகளிலும் இவர்களுடைய கல்வெட்டுகள் கிடைக்கின்றன. எனவே, இன்ன பகுதியைத்தான் இவர்கள் ஆண்டு வந்தார்கள் என்று அறிய முடியவில்லை. காலத்துக்கேற்றவாறு அவர்கள் இடம் மாறி ஆண்டு வருவது வழக்கமெனத் தெரிகின்றது. வாணகோவர்கள் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் தென்னார்க்காட்டுப் பகுதியிலிருந்து அரசாண்டு வந்தனர். அப்போது அவர்கள் பல்லவர்களுக்குத் திறை செலுத்திவந்தனர் களப்பிரர் ஆட்சியின்கீழ் இவர்கள் இன்ன நிலையில் இருந்தார்கள் என்று அறிந்துகொள்ள முடியவில்லை. பல்லவருக்கும் சளுக்கருக்கும் நேரிட்ட பூசல்களில் வாணகோவர்கள் மேலைச் சளுக்கருடன் நட்புக் கொண்டிருந்தனர். ரேனாண்டுச் சோழ மன்னன் புண்ணிய குமாரனின் கல்வெட்டு[10] ஒன்று, அவன் பெண்ணாற்றங்கரை வரையில் பரவியிருந்த வாணகோவரின் நாட்டையும் ஆண்டுவந்தான் என்னும் செய்தியைக் கூறுகின்றது. எனவே, பிறகு வாணகோவர்கள் மேலைச் சளுக்கருடனும் முரண்பட்டிருந்தார்கள் என்று ஊகிக்க வேண்டியுள்ளது. வாணகோவர்கள் வாணமன்னன் ஜயநந்திவர்மன் (கி.பி. 733-772) காலத்தில் பல்லவருக்குத் திறை செலுத்துபவரானார்கள். அவர்கள் பல்லவருக்குத் துணைநின்று மேலைக் கங்க மன்னன் ஸ்ரீபுருஷன் மேல் போர் தொடுத்தார்கள். இராஷ்டிரகூட மன்னன் மூன்றாம் கோவிந்தன் கையில் தந்திவர்ம பல்லவன் தோல்வியுற்ற பிறகு (கி.பி. 806), வாணகோவர்கள் இராஷ்டிரகூடருடன் சேர்ந்துகொண்டார்கள். மேலைக் கங்க மன்னன் முதலாம் இராச மல்லன் பல்லவர்மீது படையெடுத்தான். அப்போது வாணகோவரை வென்று அவர்கள் நாட்டைத் தன் நாட்டுடன் இணைத்துக் கொண்டான். ஆனால், விதியின் விளையாட்டினால் வாணகோவர்கள் மீண்டும் பல்லவரின் மேலாட்சியின்கீழ் இயங்கி வரலானார்கள். வாணகோவர்கள் பலவகையான அரசியல் சூழ்நிலையால் அலைப்புண்டு திருப்புறம்பயம் போருக்குப் (கி.பி. 895) பிறகு முழுச் சுதந்தரம் பெற்றார்கள்.

போரிலும் நிரைகவர் சச்சரவுகளிலும் இறந்துபட்ட வீரர்களுக்கு வீரக்கல் நாட்டும் வழக்கம் வாணகோவரிடையே

10. Ep. Rep. 284, 37-38.

இருந்துவந்தது. இவர்கள் சைவ ஈடுபாடுடையவர்கள். குடிமல்லம் பரசுராமேசுவரரின் கோயிலுக்கும், திருவல்லம் வில்வநாதேசுவரர் கோயிலுக்கும் இவர்கள் பல நிவந்தங்கள் அளித்துள்ளனர்.

## முத்தரையர்கள் (சு.கி.பி. 650—சு.கி.பி. 860)

குறுநில மன்னருள் தலைசிறந்து விளங்கியவர்கள் முத்தரையர்கள். முத்தரையர்கள், களப்பிர குலத்தைச் சார்ந்தவர்களெனச் சிலர் கருதுகின்றனர். ஆனால், அதற்குப் போதிய சான்றுகள் இல்லை. அவர்கள் பல்லவப் பேரரசுக்கு உட்பட்டுத் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, பழைய புதுக்கோட்டை சமஸ்தானம் ஆகிய நிலப்பகுதியை ஆண்டுவந்தனர். திருக்காட்டுப் பள்ளிக்கு அண்மையில் இப்போது ஒரு சிற்றூராகக் காட்சியளிக்கும் செந்தலை என்பது முத்தரையர் ஆட்சியில் சந்திரலேகா என்ற அழகிய பெயரில் அவர்களுடைய தலைநகராகச் செயல்பட்டுவந்தது. பாண்டியரோடும் சோழரோடும் பல்லவர்கள் போர் புரிந்த போதெல்லாம் முத்தரையர்கள் பல்லவருக்குத் துணைநின்று வெற்றிகாண உதவியுள்ளனர்.

முத்தரையருள் முதன்முதல் கல்வெட்டுகளில் நாம் அறிந்து கொள்ளும் குறுநில மன்னன் பெரும்பிடுகு முத்தரையன் என்பான் ஆவான். செந்தலைக் கல்வெட்டில்[11] இவன் பெயர் காணப்படுகின்றது. இவன் கி.பி. 655—680 ஆண்டுகளில் வாழ்ந்திருந்தவன்; முதலாம் பரமேசுவரவர்மன் காலத்தவன். இவனையடுத்து இவன் மகன் இளங்கோவடியரையன் என்கிற மாறன் பரமேசுவரன் (கி.பி. 680—சு. 705) என்பவனும், அவனையடுத்து அவன் மகன் இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையன் என்கின்ற சுவரன் மாறன் (சு.கி.பி. 705—சு. 745) என்பவனும் அரியணை ஏறினர். சுவரன்மாறன் இரண்டாம் பரமேசுவரன், இரண்டாம் நந்திவர்மன் காலத்தவன்; பிந்திய பல்லவ மன்னனுடன் நட்புப் பூண்டிருந்து அவனுக்குப் பெருந் துணையாக நடந்துகொண்டான். பாண்டியன் முதலாம் இராசசிம்மன் இரண்டாம் நந்திவர்மனைத் தாக்கிப் பல இடங்களில் போர் தொடுத்து நெருக்கிக் கொண்டிருந்தபோது பல்லவ மன்னனின் படைத் தலைவனான புகழ்பெற்ற உதயசந்திரன் பல்லவனுக்குத் துணையாகப் போரில் நுழைந்து அவனைக் கடும் முற்றுகை ஒன்றினின்றும் விடுவித்ததுமன்றி மேலைச் சளுக்கரையும் தொண்டைமண்டலத்தை விட்டு விரட்டினான். இந்த

11. Ep. Ind, XIII. p. 139.

நெருக்கடியில் சுவரன்மாறன் முத்தரையன் பல்லவனுக்கு ஆற்றிய பணி மிகப் பெரிதாகும். அவன் பாண்டியரையும் சேரரையும் கொடும்பாளூர், மணலூர், திங்களூர், காந்தளூர், அழுந்தியூர், காரை, மறங்கூர், அண்ணல்வாயில், செம்பொன் மாறி, வெங்கோடல், புகலி, கண்ணனூர் ஆகிய இடங்களில் போரிட்டு வென்றான் என்று செந்தலைக் கல்வெட்டுக் கூறுகின்றது. வேள்விக்குடிச் செப்பேடுகள் இவற்றுள் கொடும்பாளூர்ப் போர் ஒன்றினையே குறிப்பிடுகின்றன; அதிலும் அப்போரில் பாண்டியனே வெற்றி கொண்டதாகவும் கூறுகின்றன. எனினும், போர் நடந்ததற்குச் சான்று ஒன்று உள்ளதால் முத்தரையன் ஏதேனும் ஒரு போரில் வெற்றி கண்டிருப்பான் என்பதில் ஐயமில்லை. சுவரன்மாறனுக்குச் சத்துருகேசரி, அபிமான தீரன், கள்வர்கள்வன், அதிசாகசன், ஸ்ரீதமராலயன், நெடுமாறன், வேள்மாறன் முதலிய விருதுப் பெயர்கள் உண்டு.

சுவரன்மாறனை அடுத்து விடேல் விடுகு விழுப்பேரடி அரசன் என்ற சாத்தன்மாறன் (சு.கி.பி. 745—சு. 770) முடிசூட்டிக் கொண்டான். இவன் சுவரன்மாறனின் மகன் என்று கொள்ளுவதற்குச் சான்றுகள் உள்ளன. பல்லவ மன்னரும் 'விடேல் விடுகு' என்ற விருதைத் தாங்கி வந்திருப்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இம் முத்தரையன் காலத்தில் நெடுஞ்சடையன் பராந்தகன் என்ற பாண்டிய மன்னன் பெண்ணாகடத்தில் பல்லவரை முறியடித்துச் சோழர்மேல் பெரும் வெற்றியொன்றைக் கொண்டான். இப் போரில் முத்தரையர்கள் பங்கு கொண்டதும் கொள்ளாததும் விளங்கவில்லை.

அடுத்துப் பட்டத்துக்கு வந்தவன் மார்ப்பிடுகு பேரடியரையன் (சு.கி.பி. 770-791) என்பான். இவன் விடேல்விடுகு விழுப்பேரடி முத்தரையனுடன் எவ்வகையான உறவு பூண்டவன் என்பது தெரியவில்லை. இவன் தந்திவர்ம பல்லவனின் உடன் காலத்தவன். இவன் ஆட்சியின்போது பாண்டியன் நெடுஞ்சடையன் இரண்டாம் முறையும் சோழ நாட்டின்மேல் படையெடுத்துவந்து ஆயிரவேலி, அயிரூர், புகழியூர் என்ற இடங்களில் கொங்கு மன்னன்மேல் வெற்றி கொண்டான். இப் போர்களில் கொங்கு மன்னனுக்குப் பல்லவரும், சேர மன்னரும் துணை நின்றனர். பல்லவர் தோல்வியுற்றுத் தம் காவிரிக்கரை நாடுகளை இழந்தனர். இப் போர்களில் இம் முத்தரைய மன்னன் கலந்துகொண்டதும், கொள்ளாததும் தெரியவில்லை. ஆலம்பாக்கத்தில் 'மார்ப்பிடுகு ஏரி'யைக் கட்டினவனும், திருவெள்ளறையில் 'மார்ப்பிடுகு பெருங்கிணறு' தோண்டியவனும் இவனேயாவான்.[12]

12. S.I.I. XIII. No. 222; EP. Ind. Vol. XV p. 156.

முதலாம் மகேந்திரன் 'மத்த விலாசம்' என்றொரு நாடகத்தையும் வடமொழியில் எழுதினான். நிருத்தம், தாளம், இலயம் ஆகியவற்றிலும் அவன் வல்லுநனாக இருந்தான். அவனுடைய இசை வல்லமைக்குத் திருமெய்யக் கல்வெட்டு ஒன்றும் சான்று பகர்கின்றது.

இசையில் புதுமைகள் பல புகுந்தன. அதைப் போலவே தமிழ்க் கூத்துகளிலும் புதுமைகள் புகுந்தன.

**சிற்பம்**

பாறைகளைக் குடைந்து கற்றளிகள் அமைத்தது பல்லவ மன்னர்கள் கையாண்ட புதுமைகளுள் ஒன்றாகும். முதலாம் நரசிம்மவர்மன் மாமல்லபுரத்தில் முழுப் பாறைகளைச் செதுக்கிக் கற்கோயில்களை எழுப்பினான். உலகப் புகழ்பெற்ற மாமல்ல புரத்துச் சிற்பங்கள் அனைத்தும் ஒரே காலத்தில் எழுப்பப்பட்டன வல்ல. பல சிற்பங்களுக்கு வடிவு கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால், அவற்றில் புனைவும் மெருகும் காணப்படவில்லை. முதலாம் மகேந்திரனின் உருவமும், அவனுடைய இரு அரசியரின் உருவங்களும் மாமல்லபுரத்தில் புடைப்போவியங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. ஆகையால் மாமல்லபுரத்துச் சிற்பங்கள் செதுக்கும் பணி இவன் காலத்திலேயே தொடங்கினபோலும். ஒற்றைக் கற்களில் செதுக்கப்பட்டு இப்போது இரதங்கள் என்று அழைக்கப்படும் கோயில்கள் முதலாம் நரசிம்மவர்ம பல்லவன் காலத்தில் தோன்றியவையாம். இரண்டாம் மகேந்திரன் சில கோயில்களைக் குடைவித்தான். இந்த இரதங்கள் பஞ்சபாண்டவர் பேராலும், திரௌபதியின் பேராலும் வழங்குகின்றன. சோழர் பாண்டியர் காலத்துச் சிற்பிகள் படைத்த சிற்பங்கள் சிலவற்றுக்கு வடிவ அமைப்பு முறைகளைக் காட்டி உதவிய பெருமை மாமல்லபுரத்துச் சிற்பங்களைச் சாரும்.

இராசசிம்மனின் மிகச் சிறந்த சிற்பப் படைப்புக் காஞ்சி புரத்துக் கைலாசநாதர் கோயிலாகும். இக் கோயில் இம் மன்னனுக்கு மட்டுமன்றி அவனுடைய பல்லவப் பரம்பரைக்கும், தமிழகத்துக்கும் என்றென்றும் அழியாத புகழைத் தேடித் தந்துள்ளது. இக் கோயிலை அமைப்பதற்கு இவனுக்கு இவனுடைய பட்டத்தரசியும் மகனும் பலவகையில் துணைபுரிந்தனர். கண்களுக்கு விருந்தாக அமைந்துள்ள சிற்பக்கோலங்கள் பலவற்றை இக்கோயிலில் காணலாம். இக் கோயிலின் கருவறையைச் சுற்றி ஐம்பத்தெட்டுச் சிறு கோயில்கள் அமைந்துள்ளன.

ருக்கும் சோழருக்கும் இடையே இருந்த தடைகள் நீங்கின; சோழர்கள் பல்லவரின்மேல் நேருக்கு நேர் பகை நடவடிக்கைகள் மேற்கொள்ளுவதற்கு வாய்ப்பும் ஏற்றங்கண்டது.

முத்தரையர் சைவ, வைணவ சமய வளர்ச்சிக்கு உதவிவந்தன ராயினும் சமண சமயத்துக்கும் பேராதரவு காட்டி வந்தனர். முத்தரையர் காலத்தில் இயற்றப்பட்ட நாலடியார்[15] நூலில் காணப்படும் குறிப்புகள் இதனைத் தெரிவிக்கின்றன. தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் முத்தரையர் துணை புரிந்து வந்தனர். அவர்களுடைய அரசவையில் பல தமிழ்ப் புலவர்கள் அமர்ந் திருந்தனர். பாச்சில்வேள் நம்பன், ஆசாரியர் அநிருத்தர், கோட்டாற்று இளம்பெருமானார், பவடாயமங்கலம் அமருந் நிலை என்பார் அவர்களுள் சிலர். இப் புலவர்களின் பாடல்கள் செந்தலையில் உள்ள சுந்தரேசுவரர் கோயில் தூண்களின்மேல் செதுக்கப்பட்டுள்ளன. இப் பாடல்கள் வெண்பா, கட்டளைக் கலித்துறைச் சீர்களில் இயற்றப்பட்டுள்ளன. அமிதசாகரர் இயற்றிய யாப்பருங்கலவிருத்தியில் (கி. பி. 10ஆம் நூற்றாண் டின் இறுதி) தமிழ் 'முத்தரையர் கோவை' என்னும் நூலைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. அந்நூல் இப்போது கிடைக்கவில்லை.

முத்தரையர்கள் கோயில் கட்டுவதிலும், கற்றளிகள் குடைவ திலும் தம் நோக்கத்தைச் செலுத்திவந்தனர். சாத்தன் பழியிலி என்ற முத்தரைய மன்னன் பழியிலீசுவரம் குடைவித்தான். அவனுடைய மகள் அதற்கு முகமண்டபம், பலிபீடம், நந்தி இடபமண்டபம் ஆகியவற்றை அமைத்துக் கொடுத்தாள். திரு மெய்யம் தாலூக்காவில் பூவனைக்குடி என்ற இடத்தில் குடை யப்பட்டுள்ள புஷ்பவனேசுரர் கோயில் பூதி களரி அமருன்றி முத்தரையன் அமைத்ததாகும். தேவர்மலைக் கற்றளியும் முத்தரையர் செதுக்கியதே எனக் கருதுவர்.

## இருக்குவேளிர்

புதுக்கோட்டையை அடுத்துள்ள கொடும்பாளூர், அன்ன வாசல், ஒல்லையூர் ஆகிய மூன்று கூற்றங்கள் கொண்ட நாட்டை ஆண்டுவந்த குறுநில மன்னர்கள் இவர்கள். இவர்களுடைய தலைநகரம் கொடும்பாளூர். இவ்வூரில் எழுப்பப்பட்டுள்ள மூவர் கோயிலில் பூதிவிக்கிரமகேசரி என்ற மன்னன் செதுக்குவித்த கல்வெட்டு[16] ஒன்று காணப்படுகின்றது. அதில் மன்னர் பரம் பரை ஒன்று கொடுக்கப்பட்டுள்ளது. அஃதாவது: 1. யானைப்

15. நாலடி. 200. 16. Ep. Rep. 129/1907

படையை முறியடித்த மன்னன், 2. பரவீரசித், 3. மழவரை வென்ற வீரதுங்கன், 4. அதிவீரன், 5. சங்ககிருது, 6. நிருப கேசரி, 7. வாதாபிகொண்ட பரதுர்க்கமர்த்தனன், 8. சமராபி ராமன்; அதிராசமங்கலப் போரில் சளுக்க மன்னனைக் கொன்ற வன், 9. பூதி விக்கிரமகேசரி. புதுக்கோட்டைக்கு அண்மையி லுள்ள தேனிமலையில் 7ஆம் நூற்றாண்டினதெனக் கொள்ளப் படும் கல்வெட்டு ஒன்றில் இருக்குவேள் ஒருவன் அங்கிருந்த சமணமடத்துக்குத் தானம் செய்து கொடுத்த செய்தி ஒன்று கிடைக்கின்றது. அம் மன்னன் இன்னான் எனத் தெரியவில்லை.

பூதி விக்கிரமகேசரி வீரபாண்டியனுடன் போரிட்டு வெற்றி கண்டான் என்றும், அவன் பல்லவர் படைகளைக் கொன்று காவிரியாற்றில் செந்நீர் ஓடச்செய்தான் என்றும், வஞ்சிவேள் என்பானைக் கொன்றான் என்றும் கொடும்பாளூர்க் கல்வெட்டு மேலும் கூறுகின்றது. அவனுக்குக் கற்றளி, வரகுணா என்று இரு மனைவியர் உண்டு. தென்னவன் இளங்கோ வேளார் என்னும் மறவன் பூதியார் என்பவன் மனைவி கற்றளிப்பிராட்டி யார் என்று ஒரு கல்வெட்டுக்[17] கூறுகின்றது. தில்லைத்தானம் கல்வெட்டினின்று வரகுணப் பெருமானார் என்பவர் பராந்தக இளங்கோ வேளாரின் அரசர் என்று அறிகின்றோம். எனவே, பூதி விக்கிரமகேசரியானவன் பராந்தக சுந்தர சோழனுக்குக் கீழ்ப்பட்ட ஒரு சிற்றரசன் என்று கொள்ளலாம். மற்றும் லால் குடியில் கிடைத்துள்ள ஒரு கல்வெட்டுச்[18] செய்தியானது நங்கை வரகுணப் பெருமானார் சோழ மன்னனோடு உடன்பிறந்தவள் எனக் கூறுகின்றது. தனக்குக் கற்றளியின் வயிற்றில் பிறந்த இரு ஆண் மக்களுக்கு விக்கிரமகேசரி பராந்தகன் என்றும், ஆதித்தன் என்றும் பெயரிட்டான். கொடும்பாளூரைச் சேர்ந்த பராந்தகச் சிறியவேளான் சோழரின் படைத் தலைவர்களுள் ஒருவன்; சிங்களத்துப் படையெடுப்பில் தலைமை தாங்கியவன்.

முதலாம் பராந்தகனுக்கும் கொடும்பாளூர் இருக்குவேளிர் களுக்குமிடையே நட்புறவு வளர்ந்திருந்தது. அக் காரணத்தா லேயே வீரபாண்டியனை வெல்லுவதற்கு விக்கிரமகேசரி சோழ மன்னருக்கு உதவி செய்துள்ளான் என்று அறிகின்றோம்.

பூதி விக்கிரமகேசரி வென்று முடிகொண்ட வஞ்சிவேள் இன்னான் என அறியமுடியவில்லை. காவிரிக்கரையில் இந்த விக்கிரமகேசரி பல்லவர்களை எவ்வாறு போரிட்டு வென்றிருக்க முடியும் என்பதும் விளங்கவில்லை. கொடும்பாளூர்க் கல்

17. Ep. Rep. 272/1903. 18. Ep. Ind. XX p. 53

வெட்டின் காலத்தைக் கண்டராதித்தியன் காலத்துக்கு முற்பட்டதாகக் கொள்ளுவதற்கில்லை. எனவே, இந்தப் பூதி விக்கிரம கேசரியானவன் இராஷ்டிரகூட மன்னன் கிருஷ்ணன் சோழ நாட்டின்மேல் படையெடுத்து வந்தபோது போர்க்கோலங் கொண்டு அவன்மேல் வெற்றி கண்டுள்ளான். எனவே, பல்லவன் என்னும் சொல் 'வல்லபன்' என்னும் சொல்லின் மரூஉவாக இருக்கலாம் என்று ஊகிக்க வேண்டியுள்ளது. இக் கருத்துக்கு மாறுபட்ட கருத்துகளும் வரலாற்றாய்வாளரிடம் காணப்படுகின்றன.

கொடும்பாளூரிலுள்ள மூவர்கோயிலைக் கட்டியவர்கள் இருக்கு வேளிர்கள். இவர்கள் காளாமுக அல்லது பாசுபத சைவத்தின் வளர்ச்சிக்கு உதவியுள்ளனர்.

சோழப் பேரரசானது 12ஆம் நூற்றாண்டில் வீழ்ச்சியுற்ற பிறகு இருக்கு வேளிர்களின் செல்வாக்கும் மங்கிவரலாயிற்று. சோழப் பேரரசில் இவர்கள் பல பெரும் ஆட்சிப் பொறுப்புகளைச் செலுத்தி வந்துள்ளனர். இருக்குவேள், இருங்கோவேள் என்பன ஒரு பொருட் பெயர்கள். சோழர் ஆட்சிக் காலக் கல்வெட்டுகள் சிலவற்றில் 'மும்முடிச் சோழ இருக்குவேள்' என்ற பெயரும் வழங்கியதாகக் குறிப்புகள் உள்ளன. மூவேந்த வேளான், இளங்கோ வேளான் என்ற பெயர்களும் இருக்கு வேளிரைக் குறிக்கின்றன. இவர்கள் சோழரின் அரசமைப்பில் செயலாளராகவும், நாட்டுக் கண்காணிப்பாளராகவும், கோயில் நிருவாகிகளாகவும் பணிபுரிந்து வந்துள்ளனர். சோழேந்திரசிங்க மூவேந்த வேளான், நெறியுடைச் சோழ மூவேந்த வேளான், உதயமார்த்தாண்ட மூவேந்த வேளான், வீரசோழ இருங்கோவேள், குலோத்துங்க மூவேந்த வேளான், பரகேசரி மூவேந்த வேளான், சோழன் மூவேந்த வேளான், இராசேந்திரசிங்க மூவேந்த வேளான் என்ற பெயர் படைத்த இருக்கு வேளிர்கள் பெரிய ஆட்சிப் பொறுப்புகளில் அமர்த்தப்பட்டிருந்தனர்.

### அதிகமான்கள் (கி. பி. 550-880)

சங்க காலத்திலிருந்தே இலக்கியத்திலும் வரலாற்றிலும் அதிகமான்கள் இடம்பெற்று வந்துள்ளனர். 'அதிகன் என்ற ஒரு வள்ளல் தனது நாட்டின் உயர்ந்த மலையில் பழுத்துக்கனிந்த நெல்லிக் கனியை ஔவையாருக்கு ஈந்தான்' என்று சிறுபாணாற்றுப்படை[19] தெரிவிக்கின்றது. இந்த அதிகமான்மேல்

19. சிறுபாண். 98-103.

ஔவையார் இருபத்திரண்டு பாடல்கள் பாடியுள்ளார். அவை யாவும் புறநானூற்றில் தொகுக்கப்பெற்றுள்ளன. இவனுடைய புகழ் வேறுபல சங்க நூல்களிலும் பாடப்பட்டுள்ளது. அதிக மான்கள் தகடூரினின்றும் ஆண்டுவந்த குறுநில வேந்தர்கள். ஓர் அதிகமான் பெரியபுராணத்தில் புகழ்ச்சோழ நாயனார் புராணத்தில் இடம் பெற்றுள்ளான்[20]. இவ் வதிகமான் கி.பி. 306-600 கால அளவில் வாழ்ந்தவன் எனக் கருதுகின்றனர். ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் நிகழ்ந்த பல்லவ-சளுக்கப் போர்களில் அதிகமான்கள் யாரும் கலந்து கொண்டனரெனத் தெரியவில்லை. நாமக்கல்லில் உள்ள அரங்கநாதர் குடைவரைக் கோயில் கல்வெட்டு ஒன்று பல்லவ கிரந்த எழுத்துகளில் காணப்படுகின்றது. அதில் அக் கோயில் 'அதியேந்திர விஷ்ணு கிரகம்' என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது. அக் கல் வெட்டில் அதிகமான்களின் விருதுப் பெயர்களும் எண்ணப்படு கின்றன. இதைக் கொண்டு நாமக்கல் வரையில் அதிகமான்கள் ஆட்சி பரவியிருந்தது எனக் கொள்ளத்தகும்.

பராந்தகன் நெடுஞ்சடையன் என்ற பாண்டியன் (கி. பி. 765—790) ஆயிரவேலி, அயிரூர், புகழியூர் என்னும் இடங்களில் ஓர் அதிகமானை வென்றான் என அறிகின்றோம்.

பிற்றைய காலத்தில் தகடூர் நாடு நுளம்ப பல்லவருக்கு அடிமைப்பட்டு நுளம்பபாடி என்று பெயர் பெற்றது. முதலாம் இராசராச சோழன் நுளம்பரை வென்றான். அந் நிகழ்ச்சிக்குப் பின்பு அதிகமான்கள் சோழரின்கீழ்ச் சிற்றரசராகவும், உயர்தர அலுவலராகவும் விளங்கலானார்கள். தமிழக வரலாற்றில் அதிகமான்களின் பெயர் பதின்மூன்றாம் நூற்றாண்டுவரையில் காணப்படுகின்றது. அதிகமான் மன்னர்கள் குடிமக்களுடன் இயைந்து வாழ்ந்தவர்கள் என ஊகிப்பதற்கு இடமுண்டு. அவர்கள் பெயரால் பல ஊர்கள் அமைந்துள்ளன. அதிகம நல்லூர் (அதிகமான்நல்லூர்—செங்கற்பட்டு மா. வ.), அதியனூர் (வ.ஆ. மாவட்டம், கன். கு. மா. வ.), திருவதிகை (தெ. ஆ. மாவட்டம்), நெடுமானூர் (நெடுமான் அஞ்சியூர்—தெ. ஆ. மா. வ.), அதமன்கோட்டை (அதியமான் கோட்டை-தருமபுரி மா. வ.), அத்கப்பாடி (தருமபுரி மா. வ.) என்னும் ஊர்ப் பெயர்கள் அதிகமான்களின் ஆட்சியை நினைவுக்குக் கொண்டு வருகின்றன.

அதிகமான்கள் சைவம் வைணவம் இரண்டையும் வளர்த்த வர்கள். நாமக்கல் அரங்கநாதர் கோயில் அதிகமான் மன்னன்

20. பெரி. பு. புகழ்ச். 17-30.

ஒருவனால் எழுப்பப்பட்டதாகும். தருமபுரி, அதமன்கோட்டை, பஸ்திபுரம் ஆகிய இடங்களில் சமண உருவச் சிலைகள் கிடைத்துள்ளன. தருமபுரியில் சமணப் பள்ளி ஒன்றும் அமைந்திருந்ததாகத் தெரிகின்றது.[21] எனவே, அதிகமான்கள் சமணர்கள் வளர்ச்சிக்கும் சார்புடையவர்களாக இருந்து வந்துள்ளனர் என்பது விளக்கமாகின்றது.

## சிற்றரசர்கள்

தமிழகம் முழுவதிலும் சிற்சில இடங்களில் சிறு மன்னர்கள் பேரரசர்கட்குத் திறை செலுத்தி அரசாண்டு வந்துள்ளனர். அவர்களுள் தென்னார்க்காட்டு முனையரையரும் சேர்ந்தவர்கள். திருமுனைப்பாடி நாட்டை யாண்டுவந்த நரசிங்க முனையரையர் சுந்தரமூர்த்தி சுவாமிகளை வளர்த்தவர். அவர் இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவனுக்குத் திறை செலுத்தியவர். பெரியபுராணத்தில் வரும் மெய்ப்பொருள் நாயனார் சேதி நாட்டு வேந்தர். இரண்டாம் நந்திவர்மனின் படைத்தலைவன் உதயசந்திரன் ஒரு சிற்றரசனாக விளங்கினான். இவர்களல்லாமல் வேறு பல சிற்றரசர்களும் கல்வெட்டுக் குறிப்புகளில் காணப்படுகின்றனர்.

21. Ep. Ind. X pp. 58-70

# 11. தமிழகத்தில் நான்காம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டுவரையில் சமூக நிலை

சங்க காலம் கழிந்துக் களப்பிரரும் பல்லவரும் தமிழகத்தில் நுழைந்து அரசியல் செல்வாக்கு எய்திய பிறகு தமிழரின் பண்பாடுகள் புதிய வடிவங்களில் மலர்வதைக் காணலாம். வடமொழியும், ஆரிய சமயங்கள் தத்துவங்கள் ஆகியனவும், புராணங்களும் தமிழகத்தில் நுழைந்து தமிழர் வாழ்வில் பல புதுமைகளை வளர்த்தன. தமிழர் தம் பண்டைய பண்பாடு களையும், ஐந்திணை வாழ்வையும், இசையையும், கூத்தையும், சங்கநூல்கள் காட்டிய அறத்தையும், வாழ்க்கை முறை களையும் மறந்துவிட்டனர். குலப் பிரிவுகளும், பிராமணரின் மேம்பாடும், வடமொழியின் ஏற்றமும், தமிழ்மொழிக் கலப் படமும் தமிழரின் சமூகத்தில் துறைகள்தோறும் ஏற்பட்டன. அதனால் மக்களின் பெயர் வடிவங்களிலும், அவர்கள் எண்ணிய எண்ணங்களிலும், வாழ்ந்த வாழ்க்கையிலும், அரசியலிலும் புரட் சிகரமான மாறுபாடுகள் தோன்றின. எனினும் அவர்களின் அடிப் படையான பண்பாடுகளான விருந்தோம்பல், புதுமைவேட்கை, எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப் பொருள் காணவேண்டும் என்னும் துடிப்பு ஆகியவை மாற வில்லை. பிறமொழிச் சொற்கள் தமிழ் வடிவு ஏற்றுத் தமிழ் மொழியில் கலப்பதைப்போல அன்னிய பழக்கவழக்கங்களும், பண்பாடுகளும், சமயக் கருத்துகளும் தமிழ் மரபுக்கேற்ப உரு மாறித் தமிழரின் சமூகத்தில் எல்லாத் துறைகளிலும் ஆட்சி பெற்றன.

தமிழகத்தில் நான்கு முதல் ஒன்பதாம் நூற்றாண்டுவரை யிலும் காணப்பட்ட சமூக வளர்ச்சிகளை இனி ஆய்ந் தறிவோம்.

## சமயம்

சங்கம் கலைந்து களப்பிரர் ஆட்சியின்போதும், பிறகும் மூன்று சமயங்கள் தமிழகத்தில் வளர்ந்து வந்தன. வைதிக சமயம், சமணம், பௌத்தம் என்பன அவை. இம் மூன்றும் ஒன்றோடொன்று கடும் போட்டியில் இறங்கின. போட்டியில் கிடைக்கும் வெற்றியே அவற்றின் நிலைப்புக்கும், வளர்ச்சிக்கும் அடிப்படை என்னும் அளவுக்கு அச் சமயங்களின் போக்கானது அமைக்கப் படலாயிற்று. இம் மூன்று சமயங்களுக்குமிடையே ஏற்பட்ட போட்டியில் தொடக்கத்தில் சமணத்துக்கும், பௌத்தத்துக்கும் செல்வாக்கானது ஏற்றம் பெற்றுவந்தது. ஆனால், நாயன்மார் களும், வைணவ ஆழ்வார்களும் தோன்றிச் சைவத்துக்கும், வைணவத்துக்கும் ஆற்றிய பெருந்தொண்டின் காரணமாக அச் சமயங்கட்கு ஏற்பட்டிருந்த செல்வாக்குப் படிப்படியாகக் குறைந்து வரலாயிற்று. இறுதியாகப் பௌத்த சமயம் தேய்ந்து மறைந்தே போயிற்று. புத்தரும் திருமாலின் அவதாரங்கள் பத்தினுள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டார். சமணமும் நாட்டின் மூலைமுடுக்குகளில் ஒதுங்கி ஒடுங்கி இயங்க வேண்டிய நிலையை அடைந்தது. வேந்தன் எச் சமயத்தில் ஈடுபாடு கொண்டானோ அச் சமயத்துக்கே உயர்வு உண்டாயிற்று. ஆகவே, மன்னனின் கருத்தையும், ஈடுபாட்டையும், சார்பையும் தம்பால் கவர்ந்து கொள்ளுவதற்குச் சமயங்கள் ஒன்றையொன்று முந்திக்கொள்ள முனைந்தன. போட்டியில் எச் சமயம் வெற்றிகண்டதோ அச் சமயத்தையே மன்னனும் மக்களும் பின்பற்றுவது வழக்க மாயிற்று.

சைவமும் வைணவமும் இந்து சமயத்தின் இரு கண்கள் எனலாம். சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார்களும் வைதிக சமயத்துக்குப் புத்துயிர் அளிப்பதற்காகவே பிறவி யெடுத்தவர்கள்; தாம் மேற்கொண்ட பணியைத் திறம்படப் புரிந்து தாம் எடுத்த பிறவியின் நோக்கம் நிறைவுற்றதைக் கண்ணால் கண்டவர்கள். வைதிக சமயம் மீண்டும் ஒருமுறை தன் ஒளி குன்றி ஆக்கத்தில் சரியாதபடி திடமான அடிப்படை யின்மேல் அதை நிறுவினார்கள். தமிழகத்தில் சமண சமய நூல்கள் பெருகின. ஒழுக்கத்தை வற்புறுத்தும் நூல்களும், இலக்கியமும் இலக்கணமும் தோன்றின. பதினெண்கீழ்க் கணக்கில் தொகுக்கப்பட்டுள்ள சிறுபஞ்சமூலம், ஏலாதி, திணை மாலை நூற்றைம்பது, ஐந்திணை எழுபது, நாலடியார், ஆசாரக்கோவை ஆகியவை சமணர் படைத்த இலக்கியங்கள். நீலகேசி என்னும் காப்பியமும் சமண நூலாகும். சமணர்கள்

தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும், வாழ்க்கையில் விழுப்பம் கொடுக்கும் ஒழுக்கத்தை உயிரினும் ஓம்புவதற்கும் உழைத்தன ரேனும் அவர்களுடைய உழைப்பானது அவர்கட்கு உற்ற இடத்தில் கைகொடுத்து உதவவில்லை. சைவசமய குரவர் களும், ஆழ்வார்களும் பெருக்கிவிட்ட பக்தி வெள்ளத்தில் சமணர்கள் செயலற்று மூழ்கிப்போயினர். எனினும், சமண சமயம் தனக்குற்ற இன்னல்களையும் இடையூறுகளையும் கடந்தேறி மன்னர் ஆதரவையும் மக்களின் பாராட்டையும் ஈடு பாட்டையும் ஓரளவு தொடர்ந்து பெற்று வரலாயிற்று.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் அளவையால் கட்டுண்டு கிடக்கும் தத்துவங்களையோ, உயிர்ப்பை ஒடுக்கும் யோக நெறியையோ, கடவுள் முன்னிலையில் தன்னையே அழித்துக் கொள்ளத் தூண்டும் உணர்ச்சி வெறியையோ பாராட்டிலர். கடவுளிடத்து அயராத அன்பு ஒன்றையே அவர்கள் மக்களுக்குப் போதித்து வந்தனர். 'காதலாகிக் கசிந்து, கண்ணீர் மல்கி ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது ..... நாதனாமம் நமச்சிவாயவே' என்று திருஞானசம்பந்தர் பாடினார். கடவுள் அன்புக்குக் கட்டுப்பட்டவன் என்பதும், அவனிடத்தில் இடையறாத ஈடுபாடு உடையவர்களுக்கு அவனுடைய திருவருள் தானாக வந்து சொரியும் என்பதும், செல்வச் செருக்கும் வாதாடுந் திறனும் அத் திருவருளுக்குத் தடையாக நிற்பன என்பதும் சைவத்துக்கும் வைணவத்துக்கும் பொதுவான கொள்கைகள். நாயன்மார்கள், வைணவ ஆழ் வார்கள் ஆகியவர்களுள் ஒருவரேனும் துறவு பூண்டு காட்டிலும் மலையிலும் ஒடுங்கி வாழ்ந்தவர்கள் அல்லர். அவர்கள் மக்களிடையே வாழ்ந்து வந்தார்கள்; தம்முள் எழுந்த இறை யன்பை எளிய, இனிய சொற்களால் இசையுடன் விளக்கிய வர்கள். கடவுளுக்கு அஞ்சவேண்டியதில்லை. அவரிடத்தில் ஈடுபாடுகொண்டு, அகங்குழைந்து, நெஞ்சமாகிய திரையில் அவரைப்பற்றிய எண்ணங்களை அழியாமல் தீட்டிவைத்து 'நான்' என்னும் செருக்கை அறுப்பார்களாயின் கடவுளின் திருவருள் தானாக வந்தெய்தும் என்பது இச் சமயச் சான்றோரின் மெய்யுரைகளாகும். மறைபட்டுக் கிடந்த ஒரு பேரின்ப வாயில் இவர்களால் மக்கள் முன்பு திடீரென்று திறந்து நின்றது. அவ் வாயிலுக்குள் நுழைவதற்கு நூலுணர்வு வேண்டா; சொல்வன்மை வேண்டா: செல்வம் வேண்டா; காட்டுக்கும் மலைக்கும் ஓடவேண்டா. இறைவன் மாட்டு இடையறாத வேட்கையும், எப் பொருளையும் அவன் வடிவமாகக் காணும் காட்சிப் பேறும் போதுமானவை. இந்தக் கொள்கையை இச்

சான்றோர் வளர்த்து வந்தனர். தாம் பெற்ற பேரின்பத்தை மறையாது, வரையாது அவர்கள் மக்களுக்கும் வாரி வழங்கினர். உலக இயல்புகளையும், இயற்கை எழிலையும் அவர்கள் மறுக்கவும் இல்லை; மறக்கவும் இல்லை. வெளி, வளி, தீ, நீர், நிலம் என்னும் ஐந்து பூதங்களிலும், பேசுகின்ற சொல்லிலும், எண்ணுகின்ற எண்ணங்களிலும் கடவுள் கலந்துள்ளார் என்பதை வலியுறுத்தி, எண்ணம், செயல் ஆகியவற்றில் தூய்மை வேண்டும் என்று மக்களுக்கு எடுத்தோதினர்.

திருநாவுக்கரசு நாயனார், திருஞானசம்பந்தர், திருமங்கையாழ்வார் ஆகிய இம்மூவரும் பல்லவர் காலத்து வாழ்ந்தவர்கள். திருஞானசம்பந்தரால் அன்புடன் 'அப்பரே' என்று அழைக்கப்பட்ட திருநாவுக்கரசர் வேளாள குலத்தைச் சார்ந்தவர். தென்னார்க்காட்டு மாவட்டத்தில் திருவாமூர் என்னும் சிற்றூரில் தோன்றியவர். இவர் எண்பத்தொரு வயதுவரையில் உலக வாழ்க்கையில் இருந்தார். சைவக்குடியில் பிறந்த இவர் சமணராக மாறி நெடுங்காலம் துறவு பூண்டிருந்தார். பிறகு தம் தமக்கையாரின் அன்பு ஈர்ப்புக்கு உடன்பட்டு மீண்டும் சைவரானார். வாழ்க்கையில் ஏற்படும் பல திருப்பங்களைக் காணவும், பல இன்னல்களைக் கடந்தேறி வாழ்க்கைப்பயனை எய்தவும் இவருடைய முதுமை இவருக்குப் பெரிதும் துணை புரிந்தது. முதலில் சமணனாக இருந்த மகேந்திரவர்ம பல்லவனும் சமண சமயத்தைக் கைவிட்ட அப்பருக்குப் பல இன்னல்கள் இழைத்தான் என்று பெரியபுராண வரலாறு கூறுகின்றது.

திருநாவுக்கரசர் பாடிய பதிகங்கள் மொத்தம் முந்நூற்றுப் பத்தாகும். அவர் தனித்தும் திருஞான சம்பந்தருடன் பல சிவன் கோயில்களுக்குச் சென்றும் பாடல்கள் பாடினார். ஏழை எளியவர், பிணியோர் அனைவரும் அவருடைய அன்புக்கு ஆட்பட்டிருந்தனர். அப்பூதியடிகள் என்ற அந்தணர் ஒருவர் திருநாவுக்கரசரைத் தம் வழிபாட்டுத் தெய்வமாகவே கொண்டிருந்தார்.

திருநாவுக்கரசரின் தமிழ், படிப்போர் உள்ளத்தைத் தொடக் கூடியது. எவ்வுயிரினும் சிவத்தையும் சக்தியையும் இணைத்துக் காணவேண்டும் என்ற தத்துவம் இவரிடம் விளக்கம் பெற்றுள்ளது. கடவுளை 'இப்படியன், இந் நிறத்தன், இவ் வண்ணத்தன், இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாது' என்ற உயர்ந்த தத்துவத்தை இவர் வாக்கில் முதன்முதல் காண்கின்றோம். திருநாவுக்கரசர் தேவாரத்தில் அகத்துறைப் பாடல்கள்

பல உள்ளன. தாண்டகம் என்னும் செய்யுள் இலக்கணத்தைக் கையாண்டு இவர் பாடல்கள் பாடியுள்ளார். ஆதலால் இவருக்குத் தாண்டக வேந்தர் எனவும் பெயருண்டு. அவை இசையிலும், சொல்வன்மையிலும், பொருட் செறிவிலும் சிறந்தோங்கி விளங்குகின்றன. தொண்டு செய்தே மெய்யுணர்வுப் பாதையில் நடக்கவேண்டும் என்பது இவரது துணிபு. 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று இவர் பாடினார். கோயில்களில் புல் பூண்டுகளைச் செதுக்கியும், அலகினால் பெருக்கியும், சாணத்தால் மெழுகியும் தூய்மைப்படுத்தும் திருப்பணியை இவர் செய்து வந்தார். அதற்காக இவர் எப்போதும் தம் கையில் புல் செதுக்கும் உழவாரப்படையொன்றைத் தாங்கிக்கொண்டேயிருந்தார். 'நான்' என்னும் முனைப்பை அறவே ஒழித்த மெய்ஞ்ஞானி இவர். தம் வாணாளின் இறுதியில் 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' எனக் கூறிச் 'சிவானந்த வடிவமாகித் திருப்புகலூரில் சிவபெருமான் திருவடிக்கீழ் அமர்ந்திருந்தார்' என்று பெரிய புராணம் கூறும்.

மகேந்திரவர்மன் தான் சைவனான பிறகு இப்போது திருப்பாதிரிப்புலியூர் என வழங்கும் பாடலிபுத்திரத்திலிருந்த சமணப் பள்ளிகளை இடித்துத் திருவதிகையில் தன் பெயரிலேயே 'குணபதீச்சுரம்' என்ற கோயிலை எழுப்பினான் என்று பெரிய புராணம் கூறும். 'குணபரன்' என்பது மகேந்திரவர்மனைக் குறிக்கும் சிறப்புப் பெயர்களுள் ஒன்றாகும். இச் செய்தியைத் திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டு ஒன்று உறுதிப்படுத்துகின்றது. 'இலிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் பெயர் கொண்ட அரசன் இந்த இலிங்கத்தினால் புறச்சமயத்திலிருந்து திரும்பிய அவனது ஞானம் நெடுங்காலம் நிலைப்பதாகுக' என்பதுதான் அச் செய்தி. குணபரன் என்றும் அழைக்கப்பட்ட மகேந்திரவர்மன் சமணத்தைக் கைவிட்டுச் சைவ சமயத்தைத் தழுவித் திருச்சிராப்பள்ளி மலைக்கோயிலைக் கட்டினான் என்று இக் கல்வெட்டுச் செய்தியினால் புலனாகின்றது.

திருநாவுக்கரசர் மொத்தம் 49,000 பாடல்கள் பாடினார் என்றும், அவற்றுள் மறைந்தவை போக இப்போது எஞ்சி நிற்பவை 310 பதிகங்களே என்றும் திருமுறை கண்ட புராணம் பகர்கின்றது.

திருநாவுக்கரசருடன் இணைந்திருந்து சைவநெறியைத் தழைத்தோங்கச் செய்தவர் திருஞானசம்பந்தர். இவர் சீர்காழியில் பிறந்தவர். மூன்றாமாண்டிலேயே இவர் மெய்ஞ்ஞானம்

கைவரப் பெற்றார் என்பர். சிவன் கோயில்கள் பலவற்றுக்கும் சென்று தேவாரப் பாடல்கள் பாடினார். இவர் மொத்தம் 16,000 பதிகங்கள் பாடினார் என்றும், இப்போது 384 பதிகங்களே கிடைத்துள்ளன என்றும் திருமுறை கண்ட புராணம் கூறுகின்றது. திருநீலகண்டப் பெரும்பாணரும் அவர் மனைவி மதங்க சூளாமணியும் சம்பந்தர் பாடல்களுக்கு இசை வகுத்தார்கள்.

சம்பந்தரின் பாடல்கள் பெரும்பாலனவற்றுள் ஒவ்வொன்றிலும் முதற்பாதியில் இயற்கை எழில் வண்ணங்களைக் காணலாம். செறிந்த காடும், உயர்ந்து மஞ்சு சூழ்ந்த மலைகளும், சந்தனமும், அகிலும், சாதித் தேக்கமரமும், கரும்பும், தேன்கட்டியும், மலைச் சரிவுகளில் துள்ளி ஓடும் ஆமான்களும், பலவின் கனிகளைப் பிளந்துண்ணும் குரங்குகளும், சிறையாரும் மடக்கிளிகளும், புன்னைப் பறவைகளும், அன்னங்களும், நாரைகளும் காட்சியளிப்பதைக் காணலாம். திருஞானசம்பந்தர் சித்திர கவிகளும், யமக கவிகளும், யாழ்முரியும் பாடவல்லவர். தம் பாடல்கள் எல்லாவற்றிலும் சமணரையும் பௌத்தரையும் மிகவும் கடுமையாகத் தாக்கியிருக்கின்றார். சமணம் தமிழ்நாட்டில் செல்வாக்குக் குன்றி, ஒளிமங்கி வந்ததற்குக் காரணம் திருஞானசம்பந்தரின் முயற்சியேயாகும். கடவுளை ஒழித்த சமயங்களை ஒழிக்கும் நோக்கத்துடனேயே இவர் பிறவியெடுத்தார் போலும்.

பாண்டிய மன்னன் அரிகேசரி பராங்குசன் சமணத்தைத் தழுவி வாழ்ந்தவன். அவனைச் சைவத்துக்கு மீட்டுக்கொள்ளவேண்டும் என்று விரும்பிய அவன் மனைவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் திருஞானசம்பந்தரை நாடினர். அவர் சமணருடன் வாதிட்டு அவர்களை வென்றார். மன்னனும் சைவனானான். திருத்தொண்டத் தொகையில் சேர்க்கப்பட்டுள்ள நின்றசீர் நெடுமாறநாயனார் என்பவர் இம் மன்னன்றான்.

திருஞானசம்பந்தருக்குப் பதினாறாம் ஆண்டில் திருமணம் ஏற்பாடாயிற்று. நல்லூர்ப் பெருமணம் என்ற ஊரில் திருமணம் நடந்துகொண்டிருந்தபோது தெய்விகப் பேரொளி ஒன்று தோன்றிற்று என்றும், அதில் திருஞானசம்பந்தரும் மணமகளும் பந்தலில் கூடியிருந்த சுற்றத்தார் அனைவரும் கலந்து மறைந்து விட்டனர் என்றும் புராண வரலாறு கூறுகின்றது. அவ்வாறு அவர் மறைவதற்கு முன்பு அவர் இறுதியாகப் பாடிய பதிகம் ஒன்றில் ஐந்தெழுத்தின் சிறப்பை வியந்து ஓதினார். 'வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது நாதன் நாமம் நமச்சிவாயவே' என்றும்,

அதை ஓதுபவர்கள் 'பந்தபாசம் அறுக்க வல்லார்கள்' என்றும் அவர் அப் பதிகத்தில் உணர்த்துகின்றார்.

பெரிய புராணத்தில் சேர்க்கப்பட்டுள்ள நாயன்மார்கள் அறுபத்துமூவருள் சிலர் திருஞானசம்பந்தர் காலத்தவர். அவர்களுள் தலையாயவர் சிறுத்தொண்ட நாயனார் என்பவர். இவர் முதலாம் நரசிம்மவர்மனின் படைத் தலைவராகப் பணியாற்றி வாதாபியை முற்றுகையிட்டு இரண்டாம் புலிகேசியின்மேல் மாபெரும் வெற்றி கொண்டார் எனப் பலர் கருதினர். ஆனால், இவர் உண்மையில் முதலாம் பரமேசுவர வர்மனின் படைத் தலைவராவார். அப்போது அவருடைய பெயர் பரஞ்சோதி என்பதாகும். பிறகு அம்மன்னனுடைய வேண்டுகோளின்படி தம் பிறந்த ஊராகிய திருச்செங்காட்டங்குடியை அடைந்து தம் மனைவி வெண்காட்டு நங்கையுடன் மனையறம் நடத்தி வந்தார். இவர் காலத்தில் காபாலிகர், காளாமுகர், பாசுபதர் என்னும் சமயத்தைச் சேர்ந்த வைராகிகள் தமிழகத்திலும் உலவி வந்தனர் என அறிகின்றோம். '...விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் காபாலிகள் தெருவினிற் பொலியும் திருவாரூர் அம்மானே...' என்று திருநாவுக்கரசர் பாடியுள்ளார்.[1] அவர்கள் சக்தி வழிபாடு செய்பவர்கள்; தேவிக்கு நரபலி கொடுக்கவும் தம் உயிரையே அவளுடைய திருவடிகளில் சேர்ப்பிக்கவும் அஞ்சாதவர்கள். அத்தகைய வைராகி ஒருவர் சிறுத்தொண்டரை அண்மித் தமக்குப் பிள்ளைக்கறி சமைத்துப் போடவேண்டுமென்று கேட்டுக் கொண்டாராம். சிவவேடந் தரித்தவர்கள் யார் எதை விரும்பினாலும் மறுக்காது வழங்கும் வள்ளன்மை பொருந்திய சிறுத்தொண்டர் தம் குழந்தை சீராளனையே அரிந்து கறி சமைத்து வைராகிக்குப் படைத்ததாகவும், அவருடைய பரிவுக்கும், செயற்கரிய செயலுக்கும் இணை காணமுடியாத வைராகி மறைந்து விட்டதாகவும், வைராகியாக வந்தவர் சிவபெருமானே என்று கண்ட சிறுத்தொண்டரும் அவர் மனைவியாரும் அளவற்ற மகிழ்ச்சி கொண்டனரெனவும், சிவபெருமான் சீராளனை உயிர்ப்பித்துத் தந்ததுமன்றிச் சிறுத்தொண்டருக்கும் அவர் மனைவிக்கும் வீடுபேறு அளித்தனர் எனவும் பெரிய புராணம் கூறும்.

சமணர், பௌத்தர் ஆகிய இரு சமயத்தாருமே எல்லா உயிர்களையும் பொதுப்பட நோக்கி அவற்றினிடம் அன்பையும், அருளையும் காட்டுவதையே தம் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். தரையின்மேல் நடந்துபோகும்போது ஈ, எறும்புக்கும்

1. தேவாரம். 4: 20: 3.

எவ்வித ஊறும் நேரிடாதவாறு சமணர்கள் மயிற்பீலியால் தரையைத் தடவிக்கொண்டே நடப்பர். இரவில் விளக்கேற்றி வைத்தால் விளக்கில் விட்டில்கள் விழுந்து இறந்துபோம் என்று அஞ்சி மாலையில் விளக்கு ஏற்றும் முன்பே அவர்கள் உணவு உண்ணுவது வழக்கம். சமணர், இன்றும் இவ் வழக்கத்தை நெகிழவிடாமல் கடைப்பிடித்து வருவதைக் காணலாம். கொல்லாமையாகிய நோன்பைச் சமணர் வழுவாமல் நோற்றுவந்ததுடன் மக்களுக்கும் விரித்துரைத்தனர். தமிழ் மக்கள் அவர்களை விரும்பி ஏற்று அவர்களுடைய நல்லுரைகட்குச் செவிசாய்த்து வந்தனர். ஆனால், சமணர்கள் தம் சமயத்துக்கு ஏற்றமளித்ததுமன்றி வைதிக சமயத்தினரை வாதுக்கிழுத்தனர். உயிரைவிட நேர்ந்தாலும் தம் கொள்கைகளை வாதில் விட்டுக்கொடுக்காத வன்னெஞ்சர்களாக அவர்கள் மாறி வந்தனர். சமணத்துக்கு முன்பே தமிழகத்தில் நுழைந்து இடம் பெற்றுவிட்டிருந்த வேத நெறியைப் பழித்தும், தூற்றியும், மக்களுடைய நம்பிக்கைகளைச் சிதைத்தும், மந்திர தந்திரங்களைக் கையாண்டும் தம் சமயத்துக்கு ஆக்கம் தேடிவந்தனர். சமணரைப் போலவே பௌத்தரும் வைதிக சமயத்தை இகழ்ந்து பேசிவந்தனர் என்பது திருஞானசம்பந்தரின் தேவாரப் பாடல்களால் தெரிகின்றது. கொல்லாமை நோன்பில் இவர்களுக்கும் ஈடுபாடு உண்டு. ஆனால், தானே ஒரு விலங்கைக் கொல்லாமல், அதனுடைய ஊனைப் பிறர் கொடுத்தால் அதை வாங்கி உண்ணலாம் என்ற கொள்கையுடையவர்களாக இருந்தனர். சமணர், பௌத்தர் இருவருக்குமே கடவுள் ஒருவர் உண்டு என்ற கொள்கையில் உடன்பாடு இல்லை. ஐயம் திரிபு இன்றிக் 'கடவுள் உண்டு' என்று உறுதியாகக் கொண்டு ஒழுகி வருதலே பண்டைய தமிழரின் பண்பாடாகும். சமணமும் பௌத்தமும் குன்றுவதற்கும், வேதநெறி தழைத்தோங்கி, மிகு சைவத் துறை விளங்குவதற்கும் இவ்வொரு காரணமே போதுமானதாய் இருந்தது.

தேவாரப் பாடல்கள் பாடிச் சைவசமயத்தை வளர்த்த சமய குரவர் மூவருள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசருக்கும் சம்பந்தருக்கும் காலத்தால் பிந்தியவர். திருஞான சம்பந்தர் சிவபெருமானிடம் மகன் அன்பையும், திருநாவுக்கரசர் ஒரு தொண்டனின் அன்பையும், சுந்தரர் தோழனின் அன்பையும் கொண்டிருந்தவர்கள் எனக் கூறுவதுண்டு. தாம் வழிபட்ட இறைவனிடம் நட்புமுறையில் நடந்துகொண்டவர் ஆகையால் தம் திருப்பதிகங்களில் தாம் விரும்பியதைக் கேட்டுப் பாடும் உரிமையைச் சுந்தரர் பெற்றிருந்தார். தாம் பரவை,

சங்கிலி என்னும் இரு மனைவியரை மணந்து கொண்டபோதும் சிவபெருமானின் துணையை வேண்டிப் பெற்றார் என்று பெரிய புராணம் கூறும்.

சேக்கிழார் பாடிய பெரிய புராணம் முதலிலிருந்து இறுதி வரையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாற்றைக் கூறுவது போலவே அமைந்துள்ளது. எனவே, பெரிய புராணத்துக்குப் பாட்டுடைத் தலைவர் சுந்தரர்தாம்.

சுந்தரர் தென்னார்க்காடு மாவட்டத்தில் திருநாவலூர் என்னும் சிற்றூர் ஒன்றில் பிறந்தவர்; ஆதி சைவ குலத்தினர். இவர் தந்தையின் பெயர் சடையனார்; தாயாரின் பெயர் ஞானியார். சுந்தரருக்கு ஆரூரன் என்றும் ஒரு பெயர் உண்டு. திருமுனைப்பாடியின் மன்னர் நரசிங்க முனையரையர் என்பவர் திருநாவலூரைத் தம் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தார். இக் குறுநில மன்னர்தாம் சுந்தரரை இளமையில் எடுத்து வளர்த்தவர். சுந்தரருக்குத் திருமணம் செய்விக்க ஏற்பாடுகள் ஆயின. திருமண நாளன்று வயது முதிர்ந்த அந்தணர் ஒருவர் தோன்றிச் சுந்தரருக்கும் தமக்கும் பெருவழக்கு ஒன்று உண்டு என்றும், அவ்வழக்குத் தீர்ந்த பிறகுதான் மணவினைகள் நடைபெறவேண்டும் என்றும் வாதாடினார். சுந்தரரின் பாட்டன் தம்மையும் தம் வழிவழி வருபவரையும் இம் முதியோருக்கு அடிமைப்படுத்திக் கொண்டதாக ஆளோலை ஒன்று எழுதிக் கொடுத்துள்ளார் என்றும், அதனுடைய மூலப்படி திருவெண்ணெய் நல்லூரில் இருப்பதாகவும் கூறிச் சுந்தரரையும் ஏனைய அந்தணரையும் அழைத்துக்கொண்டு அவ்வூரிலுள்ள 'அருட்டுறை' என்னும் கோயிலுக்குள் சென்று மறைந்து விட்டார். வந்த முதியவர் தம்மை ஆட்கொள்ளவந்த சிவபெருமானே எனத் தெளிவுற்றவராய்ச் சுந்தரர் இறைவன் மீது அன்பு கனிந்து 'பித்தா, பிறைசூடி' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடினார். சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பட்டவராகையால் சுந்தரருக்கு வன்றொண்டர் எனவும் ஒரு பெயர் ஏற்பட்டது. சுந்தரர் பிறகு தவநெறியை மேற்கொண்டு தமிழகம் முழுவதும் சிவன் கோயில்களுக்குச் சென்று தேவாரத் திருப்பாட்டுகள் பாடிவந்தார். இவர் பாடிய பதிகங்களின் தொகை மொத்தம் 33,000 எனத் திருமுறை கண்ட புராணம் கூறும். ஆனால், இப்போது கிடைத்துள்ளவை 200 பதிகங்களேயாம். சைவ நாயன்மார்கள் அறுபத்து மூவரின் பெயர்களைத் தொகுத்துத் 'திருத்தொண்டத் தொகை' என்னும் திருப்பாட்டு ஒன்றைச் சுந்தரர்

பாடியுள்ளார். இப் பாட்டை அடிப்படையாகக் கொண்டு, பின்னர்த் தோன்றிய நம்பியாண்டார் நம்பிகள் 'திருத் தொண்டர் திருவந்தாதி' என்னும் நூல் ஒன்றை இயற்றினார். இவ் வந்தாதியை அடிப்படையாகக் கொண்டுதான் சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தை இயற்றினார்.

திருவாரூரில் கோயில் தொண்டு செய்தும் ஆடியும் பாடியும் தியாகேசனை வழிபட்டுவந்த பதியிலாரானவரும் உருத்திர கணிகையர் குலத்துத் தோன்றியவருமான பரவையார் என்பவரைச் சுந்தரர் மணந்தார். திருவொற்றியூரில் வேளாளர் குலத்துப் பிறந்த சங்கிலியார் என்ற மற்றொரு பெண்ணையும் பின்னர் அவர் மணம் பரிந்தார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரநாட்டு வேந்தரான சேரமான் பெருமாள் என்பவருடைய நட்பைப் பெற்றவராய் அவர்பால் மிகவும் ஈடுபாடுடையவரானார். அவருடைய அழைப்புக்கு இணங்கி அவர் சேரநாட்டுக்குச் சென்றுவந்தார். கொங்கு நாட்டில் திருமுருகன்பூண்டிக்கு அண்மையில் 'வடுகர்'[2] என்ற வழிப்பறி கள்வர்கள் சுந்தரருடைய பொருள்களைக் கவர்ந்தனர் என்று அவருடைய தேவாரப் பதிகம் ஒன்றினால் அறிகின்றோம். அவிநாசியில் பல ஆண்டுகட்கு முன்பு முதலையுண்ட பார்ப்பனச் சிறுவன் ஒருவனைச் சுந்தரர் மீண்டும் அழைத்துக் கொடுத்தார் என்று பெரிய புராணம் கூறும். இவர் பாடிய அவிநாசிப் பதிகத்தில் '...புரைக்காடு சோலைப் புக்கொளியூர் அவிநாசியே கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச் சொல்லு காலனையே' என்று வரும் சொற்களை அந் நிகழ்ச்சிக்குச் சான்றாக எடுத்துக்காட்டுவர்.

சுந்தரர் பதினெட்டு ஆண்டுகள் இவ்வுலக வாழ்வில் தங்கினார். இறுதியில் சேரமான் பெருமாளுடன் தம் பூத உடம்புடன் கயிலைக்குச் சென்று சிவபெருமானின் திருத்தொண்டில் அமர்ந்தார் என்று சேக்கிழார் கூறுகின்றார். கயிலைக்குச் செல்லத் தொடங்குமுன்பு தம் ஊன் உடம்பு அறிவு உடலாக மாறிற்று என்றும் தாம் மரணத்தை வென்றுவிட்டதாகவும் இவர் தம் பதிகம் ஒன்றில் தெரிவிக்கின்றார்.

சுந்தரரின் பாடல்களில் இறைவனிடத்தில் அவர் கொண்டிருந்த இடையறாத அன்பு மட்டுமன்றிப் பல இலக்கியச் சுவை

2. தேவாரம். 7:49:1

களையும் நுண்மைகளையும் கண்டு இன்புறலாம். நகைச்சுவை, பிணக்கு, கொஞ்சுதல், கெஞ்சுதல், மிஞ்சுதல், சினம் ஆகிய பல மெய்ப்பாடுகளையும் இவர் தேவாரப் பாடல்களில் காணலாம்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் முத்திபெற்ற பிறகு சில ஆண்டுகளில் சுந்தரர் பிறந்தார் என்று கொள்ளுவதற்குச் சான்றுகள் உள. இவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இறுதியிலும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர் எனச் சிலர் கருதுவர். சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில் 'கடல் சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான் காடவர் கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்' என்று தாம் வாழ்ந்த காலத்து ஆட்சி புரிந்துவந்த பல்லவ மன்னனைக் குறிப்பிடுகின்றார். கழற்சிங்கன் என்னும் பெயரில் 'கழல்' என்பது கழலையணிந்தவன் என்று பொருள் விரியும். சிங்கன் என்பவன் கழலை யணிந்த மன்னவன். பல்லவர் பரம்பரையில் இரண்டு சிங்கர்கள் அதாவது சிம்மர்கள் அரசாண்டு வந்தனர். ஒருவன் முதலாம் நரசிம்மவர்மன். இவனே வாதாபி கொண்டவன். அடுத்தவன் இராசசிம்மன் என்று வழங்கும் இரண்டாம் நரசிம்மனாவான். இவ்விரு மன்னருள் முதலாம் நரசிம்மவர்மன் திருஞானசம்பந்தர், அப்பர் காலத்தவன். எனவே, இவ்விரு சமய குரவர்களுக்கும் பிந்தியவரான சுந்தரர் இவன் காலத்தராக இருக்க முடியாது. ஆகவே, இவரை இரண்டாம் நரசிம்மவர்மன் காலத்தவராகக் கொள்ளுதலே பொருத்தமானதாகக் காணப்படுகின்றது. சில ஆய்வாளர் இவரை ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதுகின்றனர். அது ஒப்பத்தக்கதன்று.

இந்த இரண்டாம் நரசிம்மன் சிவசூடாமணி என்று புகழ்ந்து பாராட்டப்பட்டவன். காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலை எழுப்பியவன்; இரண்டாம் நரசிம்மவர்மன் காலம் கி.பி. 690-728. சுந்தரரை எடுத்து வளர்த்த நரசிங்கமுனையரையர் பல்லவருக்குத் திறை செலுத்தி வந்தவர். சுந்தரர் காலத்தில் பல்லவரும், சேரரும், சோழரும், பாண்டியரும் ஒன்றுபட்டு வாழ்ந்த காலம் என்று கருதலாம். சேரமான் பெருமாள் சுந்தரருடன் மதுரைக்குச் சென்றதும் அங்கு இவ்விருவரையும் பாண்டிய மன்னனும் அப்போது அவனுடன் இருந்த சோழன் ஒருவனும் வரவேற்றார்கள் என்பதே இதற்குச் சான்றாம்.

தேவாரப் பாடல்கள் யாவும் இசையுடன் பாடவேண்டியவை. அக்காலத்தில் தமிழ்ப் பண்கள் சீரும் சிறப்பும் பெற்று மக்களால்

பயிலப்பட்டு வந்தன. தமிழ்ப் பண்களுள் பகலில் பாட வேண்டியவை என்றும், இரவில் பாட வேண்டியவை என்றும் பாகுபாடு உண்டு. தேவார ஆசிரியர் காலத்தில் பயின்று வந்த பண்களின் தொகை நூற்று மூன்றாகும். 'ஏழிசையாய், இசைப்பயனாய்' என்று சுந்தரர் இறைவனைப் பாராட்டிப் பாடுவதிலிருந்து அவருடைய நாள்களில் இசைக்கு அளிக்கப்பட்டிருந்த பெருஞ் சிறப்பானது தெளிவாகின்றது.[3] இசையை வளர்ப்பதற்கென்றே பாணர்கள் என்பவர்கள் தமிழகத்தில் பண்டைய காலந்தொட்டு ஒரு தனிக் குலமாக வாழ்ந்து வந்துள்ளனர் என்பது முன்னரே கூறப்பட்டுள்ளது.

## ஆழ்வார்கள்

பல்லவர்கள் காலத்தில் வைணவமும் கிளர்ச்சியுற்று எழுந்தது. இரண்டாம் நந்திவர்மன் காஞ்சிபுரத்தில் வைகுண்டப் பெருமாள் கோயில், பரமேசுர விண்ணகரத்துக் கோயில், மதங்கேசுரர் கோயில் ஆகியவற்றை எழுப்பினான். அவனுடைய பட்டத்தரசி முத்தீசுரர் கோயிலைக் கட்டினாள். இந் நந்திவர்மன் காலத்தில் வாழ்ந்தவர் திருமங்கையாழ்வார். இவருடைய பாசுரங்கள் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் 'பெரிய திருமொழி' என்னும் பெயரில் இரண்டாம் ஆயிரமாகத் தொகுக்கப்பட்டுள்ளன. திருமங்கையாழ்வாரின் பாசுரங்கள் முழுமைக்கும் பண்களும் தாளங்களும் வகுக்கப்பட்டிருந்தன என்பது அவற்றுக்குப் பேருரைகள் வழங்கியவர்களின் வாக்கினால் தெரிந்துகொள்ளலாம். இவருடைய பாடல்களில் எட்டாம் பத்து, ஏழாம் திருமொழியின் இறுதிப்பாட்டில் '...... தமிழ்இவை விழுமிய இசையினோடு ஒலிசொலும் அடியவர் உறுதுயர் இலரே' என்னும் குறிப்பு இவ்வுண்மையை எடுத்துக் காட்டுகின்றது. வைணவ சமயத்தில் நெஞ்சை அள்ளும் பாடல்களைப் பாடித் தமிழகத்தில் பக்தி வெள்ளம் பெருக்குவித்தவர்கள் ஆழ்வார்கள். அவர்களுள் சிலர் சைவக் குரவரின் உடன் காலத்தவர் ஆவார்கள். ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்களுள் ஒருவர் ஆண்டாள் என்பவர். தமிழகத்தின் பல இடங்களிலும் தோன்றியவர்கள் ஆழ்வார்கள். நால்வர் பல்லவ நாட்டைச் சார்ந்தவர்கள்; சோழ நாட்டினர் மூவர்; சேரநாட்டினர் ஒருவர்; பாண்டிய நாட்டைச் சார்ந்தவர் நால்வர். அவர்கள் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் நாச்சியார், குலசேக

3. தேவாரம். 7: 51: 10

ராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்னும் திருநாமம் சூடியவர்கள். இப் பன்னிருவரும் தமிழகத்தில் கி.பி. 500 ஆம் ஆண்டு முதல் கி.பி. 800 ஆம் ஆண்டு வரையிலான ஒரு கால அளவில் வாழ்ந்தவர்கள் என ஆய்வாளர் சிலர் கருதுவர். வைணவ சமயம் பல்லவ நாட்டில் தோன்றிச் சோழ நாட்டில் வளர்ந்து பாண்டி நாட்டில் மலர்ச்சியுற்றது. ஆழ்வார்களுள் பெரிதும் போற்றப் படுபவரான நம்மாழ்வார் தென்பாண்டி நாட்டில் தோன்றியவர். ஆழ்வார்கள் பல குலத்தைச் சார்ந்தவர்கள். நம்மாழ்வார் வேளாளர்; பெரியாழ்வார் ஸ்ரீவைணவ அந்தணர்; திருமங்கையாழ்வார் கள்ளர் மரபைச் சார்ந்தவர்; திருப்பாணாழ்வார் தீண்டாதார் என்று அக்காலத்தில் கருதப்பட்ட பாணர் குலத்தில் வந்தவர்.

இப் பன்னிரு ஆழ்வார்களும் பாடிய பாசுரங்களும் சேர்ந்துள்ள தொகை நூலுக்கு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்று பெயர் வழங்குகின்றது. முதலாயிரத்தில் பெரியாழ்வார், ஆண்டாள் நாச்சியார், குலசேகரப் பெருமாள், திருமழிசையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், மதுர கவியாழ்வார் ஆகியவர்களின் பாடல்கள் அடங்கியுள்ளன. இவ் வாயிரத்துக்குத் 'திருமொழி' என்று பெயர். இரண்டாம் ஆயிரத்தில் திருமங்கை யாழ்வாரின் பாசுரங்கள் மட்டும் தொகுக்கப்பட்டுள்ளன. இவ் வாயிரத்துக்குப் 'பெரிய திருமொழி' என்று பெயர். மூன்றாம் ஆயிரத்தில் பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியவர்களின் பாடல்களுடன் திருமழிசை யாழ்வார், நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார் ஆகியவர்களுடைய பாடல்கள் சிலவும் சேர்ந்துள்ளன; இவ்வாயிரத்துக்கு 'இயற்பா' என்று பெயர். நான்காம் ஆயிரத்தில் சேர்க்கப்பட்டுள்ள பாசுரங்கள் யாவும் நம்மாழ்வார் அருளியவை. இவ் வாயிரத்துக்குத் 'திருவாய் மொழி' என்று பெயர்.

வைணவக் கோயில்களில் மூர்த்தியினண்மையில் அமர்ந்து நாலாயிரப் பிரபந்தப் பாடல்கள் பாராயணம் செய்யும் வழக்கம் உண்டு. வைணவ மரபுக்குக் கிடைத்துள்ள உரிமை யாகும் இது. இவ் வுரிமையை இன்றளவும் சைவக் கோயில் களில் திருமுறைகள் ஓதுவதற்குப் பெறவில்லை என்பது குறிப் பிடத்தக்கது. மூர்த்திக்கு அண்மையில் வடமொழி மந்திரங்கள் உச்சரிப்பதும், தொலைவில் குறிப்பிட்ட இடத்துக்கப்பால் நின்று ஓதுவார்கள் திருமுறைப் பாடல்கள் இசைப்பதும் மரபாக

இருந்து வருகின்றது. தமிழகத்தில் 'தென்னாடுடைய சிவன்' கோயிலில் தமிழிசை முழங்கும் உரிமையைச் சைவ வழிபாட்டினர் பெறவில்லையா? அல்லது பெற்றிருந்த உரிமையை இழந்து விட்டார்களா? அப்படியாயின் இழந்த உரிமையை மீண்டும் பெறுவதற்கு அவர்கள் முயன்றார்களா என்பதற்கு வரலாற்றுச் சான்றான விளக்கம் கிடைக்கவில்லை.

தேவார ஆசிரியர்களால் பதிகங்கள் பாடப்பெற்ற கோயில் களுக்குப் 'பாடல் பெற்ற தலங்கள்' என்று பெயர் வழங்குகின்றது. அக் கோயில்கள் இன்றும் மங்காத புகழுடன் விளங்கி வருகின்றன. அதைப்போலவே, ஆழ்வார்கள் 'மங்களா சாஸனம்' செய்த திருப்பதிகள் புகழொளி குன்றாமல் இன்றளவும் சிறப்புற்றுக் காணப்படுகின்றன.

ஆழ்வார்கள் இறைவனிடத்தில் அயராத ஈடுபாடும், ஆன்மிக உறவும் பெற்றிருந்தார்கள். எனினும், மக்களிடையே வாழ்ந்திருந்து மக்கள் ஒழுக்கத்தை வளர்த்தும், திருமாலிடம் அன்பைப் பெருக்கியும் பெரும்பணி யாற்றி வைணவத்தை வளர்த்தார்கள். சைவ சமய குரவர்களைப் போன்றே ஆழ்வார்களும் சமணத்தையும் பௌத்தத்தையும் வன்மையாகக் கண்டித்து வந்தனர். 'புலையறமாகி நின்ற புத்தொடு சமணம்' என்றும், 'தர்க்க சமணர்' என்றும், 'சாக்கியப் பேய்கள்' என்றும் ஆழ்வார்கள் பாடியுள்ளனர். அவர்கள் பல இடங்களில் சூனிய வாதிகளையும் வெறுத்துப் பாடியுள்ளனர்.[4]

திருமாலின் அவதாரமானவரான கண்ணனைக் குழந்தையாகக் கொண்டு பெரியாழ்வார் பாடிய பாசுரங்கள் தமிழ் இலக்கியத்தில் ஒப்புவமை இல்லாதவையாம். ஆண்டாள் நாச்சியார் கண்ணன்மேல் பாடிய அகத்துறைப் பாடல்கள் தெவிட்டாத இனிமையும், பேரின்பப் பெருக்கும்கொண்டு திகழ்கின்றன. திருமங்கையாழ்வார் பெண் ஒருத்தி மடலூரத் துணிந்தாளெனப் பாடியுள்ளார். அவருடைய வாக்கில் அகப்பொருள் இலக்கணமே புரட்சி பெறுகின்றது. பெண்கள் மடலூரும் மரபு தமிழ் இலக்கணத்தில் காணமுடியாத தொன்றாகும். பல்லவன் மல்லையர் கோன், அபிமானதுங்கன், பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர் குலபதி, தொண்டையர்கோன், கச்சி வயிரமேகன், பரமேச்சுரப் பல்லவன், தில்லைச் சித்திரகூடத்துக்குப் பொன்னும் மணியும் தந்தவன், திருநாங்கூர் மன்னன், கோச்செங்கணான்,

4. நாலா. திவ். பிர. 2889.

மலையரையன், குணபரன் என்ற மன்னர்களின் பெயர்கள் பிரபந்தப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

நம்மாழ்வாருடைய பாசுரங்கள் வைணவர்களுடைய ஈடுபாட்டை மிகவும் பெற்றுள்ளன. உபநிடதங்களின் கருத்துகள் யாவும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் அடங்கியிருப்பதாக வைணவர்கள் போற்றிப் பரவுகின்றனர். நம்மாழ்வார் வேளாளராயினும் அவருக்கு மதுரகவி என்பார் தலைசிறந்த சீடராக அமர்ந்தார். மதுரகவி யாழ்வார் ஓர் அந்தணர். பன்னிரு ஆழ்வார்களுள் இவரும் ஒருவர்.

ஆண்டாள் நாச்சியார் இளம் வயதிலேயே திருவரங்கத்துக் கண்ணன் மேல் ஆராத காதல் கொண்டு பல அகத்துறைப் பாடல்கள் பாடியுள்ளார். அக் காதல் முதிர்ந்து திருவரங்கம் கோயில் கருவறைக்குள் மணப்பெண் கோலத்துடன் நுழைந்து கண்ணபெருமானுடன் கலந்துவிட்டனள் எனக் கூறுவர். இவர் பாடிய 'வாரணமாயிரம்' என்னும் பாசுரம் தரும் குறிப்புகளி' லிருந்து இவர் காலத்திய மணவினை நடைமுறைகளையறிந்து கொள்ளலாம். ஆண்டாள் நாச்சியார் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாரின் வளர்ப்பு மகளாக வளர்ந்து கோதை என்னும் பெயர் பூண்டு, தம்மை முற்காலத்திய கோபிகைப் பெண்களுள் ஒருத்தியாகவே கருதிக் கண்ணனையடைய நோன்பு நோற்றவர். ஆயர்பாடி இளம் கன்னிப் பெண்கள் மார்கழி மாதம் விடியற் காலையில் ஒருத்தியையொருத்தி எழுப்பிப் பாவை நோன்பு நோற்றுக் கண்ணனையடைந்த பேரின்பத்தைத் திருப்பாவைப் பாடல்களில் இவர் பாடியுள்ளார். முப்பது பாடல்கள் கொண்டது இத் திருப்பாவை. வைணவர்கள் இப் பாடல்களை மார்கழி மாதங்களில் நாடோறும் வைகறையில் பாராயணம் செய்து வருகின்றனர்.

**மாணிக்கவாசகர்**

சைவ சமய குரவருள் நான்காமவராக வைத்துப் போற்றப் படுபவர் மாணிக்கவாசகர். இவர் பாடிய பாடல்களுக்குத் 'திருவாசகம்' என்பது பெயர். திருக்கோவையார் என்னும் அகத்துறை நூல் ஒன்று சிதம்பரம் நடராசரின்மேல் பாடியுள்ளார். திருவாசகமும் திருக்கோவையாரும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டுள் எட்டாம் திருமுறையாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. மாணிக்கவாசகரின் பிள்ளைப் பெயர் திருவாதவூரர் என்பது. அவருடைய பாடல்களைக் கேட்டுமகிழ்ந்த சிவபெருமான் அவருக்கு மாணிக்கவாசகர் என்று பெயர் சூட்டினார்

எனப் புராணங்கள் கூறுகின்றன. பெரும்பற்றப்புலியூர் நம்பி (கி.பி. 13ஆம் நூற்றாண்டு)இயற்றிய திருவிளையாடற் புராணத்திலும், பரஞ்சோதி முனிவர் (கி.பி. 17ஆம் நூற்றாண்டு) பாடிய திருவிளையாடற் புராணத்திலும், இவருக்குப் பிந்திய காலத்தவரான கடவுள் மாமுனிவர் இயற்றிய திருவாதவூரர் புராணத்திலும், இப்பால் எழுந்த திருவுத்தரகோசமங்கைப் புராணம், திருப்பெருந்துறைப் புராணம் ஆகிய தலபுராணங்களிலும் மாணிக்கவாசகரின் வரலாறு விரிக்கப்படுகின்றது.

மதுரையை அரசாண்டுவந்த பாண்டிய மன்னனிடம் இவர் அமைச்சராகப் பணியாற்றி வந்தார். அவனுக்காக இவர் குதிரைகள் வாங்கச் சென்றதும், சிவபெருமானின் திருவருள் நோக்கத்தைப் பெற்றதும், குதிரை வாங்க மன்னன் இவரிடம் ஒப்படைத்த பொருளைக் கொண்டு இவர் திருப்பெருந்துறையில் கோயில் ஒன்றை எழுப்பியதும், அதற்காகப் பாண்டியன் இவரை ஒறுத்ததும், சிவபெருமான் இவரை ஆட்கொண்டதும் இப் புராணங்களில் விளக்கமாக அறியலாம். மாணிக்கவாசகர் தம் அமைச்சுப் பதவியைத் துறந்து சிவவழிபாட்டில் ஆழ்ந்து திருவாசகப் பாடல்களையும், திருக்கோவையாரையும் பாடினார். சிதம்பரத்தில் திருச்சிற்றம்பலத்தில் நடம்புரியும் மெய்ப்பொருளே தம் பாடல்களின் உட்பொருள் என்று கூறித் திருச்சிற்றம்பலத்துக்குள் கலந்துவிட்டார் என்பது செவிவழிச் செய்தி. மாணிக்கவாசகரும் கன்னிப்பெண்கள் பாவை நோன்பு நோற்பதாகக் கருத்துட்கொண்டு திருவெம்பாவை என்னும் நூல் ஒன்று பாடியுள்ளார். இது இருபது பாடல்கள் கொண்டது. இப் பாடலுக்குப் பலர் பலவகையில் பொருள் கொள்ளுவர். நவசக்திகள் ஒருவரையொருவர் எழுப்புவதாகவும், சிறு பெண்கள் ஒருத்தியை ஒருத்தி அழைத்துக்கொண்டு சிவபெருமான் பேர் பாடிக் கொண்டு பாவை நோன்பு நோற்கச் செல்லுவதாகவும் இப்பாடல்கள் அமைந்துள்ளன என்று சிலர் மாறுபட்டுக் கூறுகின்றார்கள். திருவெம்பாவைப் பாடல்களில் கிடைக்கும் அகச் சான்றுகளைக்கொண்டு ஆயும்போது, கோயில் பிணாப் பெண்கள் (அதாவது கோயிற்பணிக்கு என விடப்பட்ட பதியிலார் பெண்கள்) ஒருத்தியை யொருத்தி வைகறையில் எழுப்பிக் கொண்டு சிற்றம்பலவன் சீர்பாடி நீர்த் துறையில் நீராடிப் பாவை நோன்பு நோற்றனர் என்று கொள்ளுவதே சாலப் பொருத்தமானதாகத் தோன்றுகின்றது.

திருவாசகப் பாடல்கள் மிகவும் இனிமையானவை; கல்நெஞ்சையும் கரைத்து நெகிழ்த்து உருக்கக்கூடிய தன்மை வாய்ந்தவை.

'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்று தொன்றுதொட்டுவரும் கூற்று ஒன்று உண்டு. 'திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின் கருங்கல் மனமும் கரைந்து உருகக் கண்கள் தொடுமணல் கேணியில் சுரந்து நீர் பாய, மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிப்பு எய்தி, அன்பர் ஆகுநர் அன்றி மன்பதை உலகில் மற்றையர் இலரே' என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளும், 'வான்கலந்த மாணிக்க வாசக நின் ! வாசகத்தை நான் கலந்து பாடுங்கால், நற் கருப்பஞ் சாற்றினிலே, தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து என் ஊன் கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே' என்று இராமலிங்க அடிகளாரும் வியந்து பாடியுள்ளார்.

இலங்கையிலிருந்து வந்த பௌத்தர்களை வாதில் வென்று சைவத்துக்கு வெற்றி தேடிக்கொடுத்தார் மாணிக்கவாசகர் என்று புராணங்கள் கூறுகின்றன. சிவபெருமானின் திருப்புகழைப் பாடிக்கொண்டே பெண்கள் உந்தீ பறத்தல், தோணோக்கம் ஆடுதல், பூவல்லி கொய்தல், பொன்னூசல் ஆடுதல், அம்மானை விளையாடுதல் போன்ற விளையாட்டுகளை ஆடுவதைப்போல் பல இனிய பாடல்களை இவர் பாடியுள்ளார்.

திருவாசகத் தொகுப்பில் முதலிடம் பெற்றுள்ள 'சிவபுராணம்' என்னும் பாடலானது 'நமச்சிவாய' என்று தொடங்குகின்றது. இறுதியாக வைக்கப்பட்டுள்ள 'முத்திநெறி யறியாத' என்று தொடங்கும் பதிகத்தில் மாணிக்கவாசகர் 'சித்தமலம் அறுவித்துச் **சிவமாக்கி** எனை ஆண்ட அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே !' என்று வியந்து கூறுகின்றார். அவர் தாமே சிவம் ஆனதாக உள்ளது அவர் கூற்று. ஆன்மா **சிவமாக** மாறுவது என்னும் தத்துவம் சமய குரவர் ஏனைய மூவர் வாக்குகளில் காணப்படவில்லை.

'நானே பிரமம்' என்ற அத்துவித வேதாந்தக் கொள்கை மாணிக்கவாசகர் காலத்தில் தமிழகத்தில் சூறாவளியைப்போலச் சுழன்றடித்து வந்ததென்று தெரிகின்றது. இக் கொள்கைக்குத் தமிழகத்தில் மாயாவாதம் என்று பெயர் வழங்கி வந்தது. இவ் வத்துவிதக் கொள்கையை நாடு முழுவதிலும் பரவச் செய்தவர் ஆதிசங்கரராவார்.

மாணிக்கவாசகர் வாழ்ந்திருந்த காலத்தைப் பலர் பலவாறாக அறுதியிட்டுள்ளனர். இவர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் முந்தியவர் என்று சிலரும் பிந்தியவர் என்று சிலரும் கூறுவர். மறை

மலையடிகளார் 'மாணிக்கவாசகர் கால ஆராய்ச்சி' என்னும் தம் நூலில் மாணிக்கவாசக சுவாமிகள் திருஞான சம்பந்தருக்கும் முற்பட்டவர் என்று வரையறை செய்துள்ளார். ஆனால், இக் கொள்கை, பிற்கால ஆய்வாளரின் உடம்பாட்டைப் பெறவில்லை. மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் பிந்தியவர் என்று கருதுவதற்குப் பல சான்றுகள் உள்ளன. திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையாகச் சேர்க்கப்பட்ட காலத்திலேயே மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் பிற்பட்டவர் என்ற கருத்து வேரூன்றி விட்டிருக்க வேண்டும். அன்றேல், இவருடைய பாடல்கள் முதல் திருமுறையாக வகுக்கப்பட்டிருக்கும். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தம் திருத்தொண்டத் தொகையில் மணிவாசகரைச் சேர்க்கவில்லை. மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் 'வரகுணனாம் தென்னவன் ஏத்தும் சிற்றம்பலத்தான்'[5] என்று தம் காலத்து வாழ்ந்திருந்த பாண்டிய மன்னனை வாழ்த்தியுள்ளார். இவ் வரகுணன் சிவபக்தன். இவனைப் பிற்காலத்தவரான பட்டினத்தடிகளாரும் பாராட்டியுள்ளார்.[6] பாண்டியர் பரம்பரையில் வரகுணன் என்ற பெயருடைய மன்னர் இருவர் ஆட்சி புரிந்து வந்துள்ளனர். முன்னவன் கி.பி. 862-880 ஆண்டுகளில் வாழ்ந்தவன். இவ்விருவருள் இரண்டாம் வரகுணனே திருக்கோவையாரிலும், பட்டினத்தாரின் பாடலிலும் பாராட்டப் படுபவன் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. ஆதிசங்கரர் தாம் பாடிய சௌந்தரியலகரியில் ஞானசம்பந்தரைக் குறிப்பிட்டுள்ளார். எனவே, இவருடைய காலம் எட்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகும். சங்கரரின் 'மிண்டிய மாயாவாதம்'[7] என்ற தத்துவத்தைக் குறிப்பிட்ட மாணிக்கவாசகர், காலத்தால் சங்கரருக்குப் பிற்பட்டவர் எனக் கொள்ளல் பொருத்த முடைத்து. தேவார ஆசிரியர்கள் பாடாத கோயில்கள் பல திருவாசகத்தில் இடம் பெற்றுள்ளன. எனவே, மாணிக்க வாசகர் இரண்டாம் வரகுணபாண்டியன் (கி.பி. 862-880) காலத்தில் வாழ்ந்தவர் எனக் கொள்ளுதலே சாலவும் ஏற்புடைத்தாகும்.

சைவத் திருமுறைகளில் பத்தாம் திருமுறையாகத் தொகுக்கப் பட்டிருப்பது 'திருமந்திரம்' என்னும் நூலாகும். இதன் ஆசிரியர் திருமூலர் ஆவார். இவர் திருத்தொண்டத் தொகையில் நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவராக வைத்து எண்ணப்படுகின்றார்.

5. திருக்கோ. 306.
6. திருவிடை, மும்மணிக். 28: 55
7. திருவா. போற்றித். 54.

திருமந்திரம் மூவாயிரம் செய்யுள்கள் கொண்டுள்ளது. இந் நூல் ஆதியில் எண்ணாயிரம் பாடல்களைக் கொண்டிருந்த தென்றும் சிலர் கருதுகின்றனர். சுந்தரரின் திருத்தொண்டத் தொகையில் இடம்பெற்றுள்ளதால் திருமூலர் 8ஆம் நூற் றாண்டுக்கு முற்பட்டவராதல் வேண்டும். தேவார ஆசிரியர் களின் பாடல்களில் காணப்படும் சொற்றொடர்களும் கருத்து களும் திருமந்திரத்தில் பல இடங்களில் எடுத்தாளப்பட்டிருப் பதைக் காணலாம். ஆகவே, திருமூலர் கி.பி. ஏழாம் நூற் றாண்டுக்குப் பிற்பட்டு வாழ்ந்தவர் எனக் கொள்ளல் தகும்.

'சித்தாந்தம்' என்னும் சொல்லையும், 'சமரச சன்மார்க்கம்' என்னும் சொற்றொடரையும் முதன் முதல் ஆண்டவர் திருமூலர் ஆவார். சித்தாந்தம் என்னும் சொல் பிறகு சைவ சித்தாந்த நூல்களுள் சேர்ந்துவிட்டது. 'சமரச சன்மார்க்கம்' என்னும் மேலாம் நிலையைப் பிற்காலத்தவர்களான தாயுமானவரும் இராமலிங்க அடிகளும் விரித்து விளக்கியுள்ளனர்.

சைவ ஆகம முடிபுகளும், தந்திரங்களும், மந்திரங்களும், சக்தி வழிபாடும் திருமந்திரத்தில் மிகுதியாய் இடம் பெற்றுள்ளன. யோக நிலைகளை விளக்கும் நூலாகவும் திருமந்திரம் விளங்கு கின்றது. சமயத்திலும் தத்துவங்களிலும் எழுந்த மிக அரிய கருத்துகளும், மெய்யறிவு கைவந்தவர்களின் அனுபவ நிலை களும், மக்கள் வாழவேண்டிய நிலைகளும் திருமந்திரத்தில் திருமூலரால் விளக்கப்பட்டுள்ளன. அவருடைய பாடல்கள் பல, பொருள் விளக்கம் எளிதில் காணவியலாதவாறு சொல் லமைப்புக் கொண்டுள்ளன. இந் நூல், அடிக்கு நான்கு சீர்கள் கொண்ட கலிவிருத்தம் என்னும் செய்யுள்களால் ஆனது. 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'[8] என்ற ஆன்ற கொள் கையைத் திருமூலர் வலியுறுத்துகின்றார். இறைவனுக்குச் செய்யும் வழிபாடுகளால் வருந்தும் உயிர்களுக்கு ஒரு பயனும் கிடைக்காது எனவும், ஆனால் வருந்தும் உயிர்கட்குச் செய்யும் நலம் இறைவனுக்குச் செய்யும் வழிபாடாக மலரும் என்றும் கூறி அவர் திருநாவுக்கரசரைப் போலவே உயிர்கட்குத் தொண்டு செய்வதன் பயனை வலியுறுத்துகின்றார்.

களப்பிரர் காலத்திலும் பல்லவர் காலத்திலும் ஒழுக்க நூல்களேயன்றி இலக்கிய நூல்களுள் சிலவும் இயற்றப்பட்டன. அவற்றுள் சிறந்தது முத்தொள்ளாயிரம் என்னும் ஒரு நூல் ஆகும். இந்நூலில் சேர சோழ பாண்டிய மன்னர்கள் பாட்டு

8. திருமந். 2108.

டைத் தலைவர்களாகக் காட்சியளிக்கின்றனர். மூவேந்தரும் தனித்தனித் தொள்ளாயிரம் பாடல்களால் பாடப்பட்டமையால் இந் நூலுக்கு முத்தொள்ளாயிரம் என்னும் பெயர் எய்தியது. இந் நூல் முழுவதும் கிடைக்கவில்லை. இப்போது கிடைத்துள்ளவை நூற்றொன்பது பாடல்களேயாம். இது வெண்பா வகைச் செய்யுளால் ஆனது. இந் நூற் பாட்டுகள் யாவும் சொற்செறிவும் பொருள் இனிமையும் வாய்ந்தவை. இந் நூலைப் பாடினார் பெயரும் வரலாறும் தெரியவில்லை. இவர் கி.பி. 6ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென ஆய்வாளர் கருதுகின்றனர்.

சமண சமயம் செழிப்புற்று விளங்கிய காலமாகிய கி.பி. 5ஆம் நூற்றாண்டில் கிளி விருத்தம், எலி விருத்தம், நரி விருத்தம் என்னும் நூல்கள் இயற்றப்பட்டுப் பெரிதும் மக்கள் கருத்தைக் கவர்ந்திருந்தன எனத் தெரிகின்றது. இவை சமண சமய ஒழுக்கத்தை வலியுறுத்தின. யாக்கை நிலையாமையும், செல்வம் நிலையாமையும், பொய், கொலை, களவு, காமம், கள் ஆகியவற்றால் மக்களுக்கு ஏற்படும் தீங்குகளும் இந் நூல்களில் விரித்துரைக்கப்பட்டன.

பதினோராம் சைவத்திருமுறையில் காரைக்கால் அம்மையார் நூல்கள் நான்கு இடம் பெற்றுள்ளன. இவ்வம்மையாரைச் சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவராகச் சேர்த்துப் பாடியுள்ளார். இவ்வம்மையார் காரைக்காலில் பிறந்து, வாழ்க்கைப்பட்டு, பிறகு உலகை வெறுத்துச் சிவபெருமானை வேண்டிப் பேயுருவம் பெற்றுத் திருவாலங்காட்டில் நடராசப் பெருமானின் எடுத்த திருவடியின்கீழ் என்றும் இருந்தார் என்று சேக்கிழார் கூறுகின்றார். இவருடைய பாட்டுகளில் வடமொழிச் சொற்கள் நிரம்ப உள்ளன. எனவே, வடமொழிச் சொற்கள் தமிழில் பரவி இடம் பெற்ற ஒரு காலத்தில் இவ்வம்மையார் வாழ்ந்தவராதல் வேண்டும். இவர் வீடு பெற்ற பெருமையையும், தூய்மையையும் திருவாலங்காடு வாய்க்கப் பெற்றிருந்ததனால் அதன்மேல் அடியெடுத்துவைக்க அஞ்சித் திருஞான சம்பந்தர் நகர்ப்புறத்தே ஒதுங்கித் தங்கியிருந்தார் என்று சேக்கிழார் கூறுவார். எனவே, காரைக்கால் அம்மையார் திருஞானசம்பந்தருக்கு முற்பட்டவர் என்பதில் ஐயமின்று. ஆகவே, ஏறத்தாழக் கி.பி. 5,6ஆம் நூற்றாண்டுகளில் இவ்வம்மையார் வாழ்ந்தவர் எனக் கொள்ளல்தகும்.

## நந்திக் கலம்பகம்

தெள்ளாறெறிந்த மூன்றாம் நந்திவர்மன்மேல் பாடப் பட்ட நந்திக் கலம்பகம் என்னும் நூல் பல்லவர் காலத்து எழுந்த நூல்களுள் சிறந்த தொன்றாகும். இதை இயற்றியவர் இன்னார் என்பது தெரியவில்லை. இப் பல்லவ மன்னனின் தம்பி ஒருவர் தம் அண்ணனை அறம்பாடிக் கொன்று தாமே அரசுகட்டில் ஏறும் தீய எண்ணத்துடன் சில நச்சுச் சொற்களை இடையிட்டு இந் நூலைப் புனைந்தார் என்று செவிவழி வரலாறு ஒன்று உண்டு. இதற்குச் சான்றுகள் ஏதும் இல. அகச் சான்றுகளாகக் காட்டப்படும் சில செய்யுள்களும் இடைச்செருகல்கள் என அறிஞர்களால் விலக்கப்படுகின்றன. மூன்றாம் நந்திவர்மனை நந்திக் கலம்பகம் வானளாவப் புகழ்கின்றது. இதில் இலக்கியச் சுவை ததும்புகின்றது; வரலாற்றுக் குறிப்புகள் சிலவும் பொதிந் துள்ளன.

மூன்றாம் நந்திவர்மன் காலத்தில் பாரத வெண்பா என் றொரு நூலைப் பெருந்தேவனார் என்பவர் பாடியதாகத் தெரி கின்றது. இந்நூல் முழுவதும் இப்போது கிடைக்கவில்லை. சங்க காலத்தில் பாண்டியன் ஒருவன் ஆட்சியில் பாரதம் ஒன்று இயற்றப்பட்டதாகச் சின்னமனூர்ச் செப்பேடுகள் கூறு கின்றன. பிற்காலத்தில் மூன்றாங் குலோத்துங்கன் காலத் திலும் பாரத மொழிபெயர்ப்பு ஒன்று எழுந்ததாகத் திருவாலங் காட்டுக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.

பல்லவ மன்னருள் முதலாம் மகேந்திரவர்மன் சில வடமொழி நூல்கள் இயற்றி உள்ளான். தான் இசை வல்லவனென்னும் ஒரு விருதையும் புனைந்திருந்தான். இவன் புதிய இசை ஒன்றை அமைத்தான். அதனால் சங்கீர்ண ஜாதி என்றொரு சிறப்புப் பெயரும் பெற்றிருந்தான். குடுமியா மலை என்றொரு குன்றின் மேல் உள்ள குடுமிநாதசுவாமி கோயில் பின்புறத்தில் பெரும் பாறை ஒன்றின்மேல் இசைக்கலை நுணுக்கம் சிலவற்றைப் பொறித்துவைத்தான். இப்பாறை பதின்மூன்றடிக்குப் பதினான் கடிப் பரப்புள்ளது. குடுமியாமலை என்பது புதுக்கோட்டையைச் சார்ந்த குளத்தூர்த் தாலுக்காவில் உள்ளது. இக் கல்வெட்டு வடமொழியில் பொறிக்கப்பட்டுள்ளதேனும், அது கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வழங்கிவந்த இசையையே விளக்கி நிற்கின்றது எனச் சிலர் கருதுகின்றனர். அண்மையில் பல அறிஞர்களும் அது பிற்காலத்தில் தோன்றியதெனக் கூறுகின்றனர்.

9. Ep. Ind. XII pp. 226-237.

முதலாம் மகேந்திரன் 'மத்த விலாசம்' என்றொரு நாடகத்தையும் வடமொழியில் எழுதினான். நிருத்தம், தாளம், இலயம் ஆகியவற்றிலும் அவன் வல்லுநனாக இருந்தான். அவனுடைய இசை வல்லமைக்குத் திருமெய்யக் கல்வெட்டு ஒன்றும் சான்று பகர்கின்றது.

இசையில் புதுமைகள் பல புகுந்தன. அதைப் போலவே தமிழ்க் கூத்துகளிலும் புதுமைகள் புகுந்தன.

### சிற்பம்

பாறைகளைக் குடைந்து கற்றளிகள் அமைத்தது பல்லவ மன்னர்கள் கையாண்ட புதுமைகளுள் ஒன்றாகும். முதலாம் நரசிம்மவர்மன் மாமல்லபுரத்தில் முழுப் பாறைகளைச் செதுக்கிக் கற்கோயில்களை எழுப்பினான். உலகப் புகழ்பெற்ற மாமல்லபுரத்துச் சிற்பங்கள் அனைத்தும் ஒரே காலத்தில் எழுப்பப்பட்டன வல்ல. பல சிற்பங்களுக்கு வடிவு கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால், அவற்றில் புனைவும் மெருகும் காணப்படவில்லை. முதலாம் மகேந்திரனின் உருவமும், அவனுடைய இரு அரசியரின் உருவங்களும் மாமல்லபுரத்தில் புடைப்போவியங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. ஆகையால் மாமல்லபுரத்துச் சிற்பங்கள் செதுக்கும் பணி இவன் காலத்திலேயே தொடங்கினபோலும். ஒற்றைக் கற்களில் செதுக்கப்பட்டு இப்போது இரதங்கள் என்று அழைக்கப்படும் கோயில்கள் முதலாம் நரசிம்மவர்ம பல்லவன் காலத்தில் தோன்றியவையாம். இரண்டாம் மகேந்திரன் சில கோயில்களைக் குடைவித்தான். இந்த இரதங்கள் பஞ்சபாண்டவர் பேராலும், திரௌபதியின் பேராலும் வழங்குகின்றன. சோழர் பாண்டியர் காலத்துச் சிற்பிகள் படைத்த சிற்பங்கள் சிலவற்றுக்கு வடிவ அமைப்பு முறைகளைக் காட்டி உதவிய பெருமை மாமல்லபுரத்துச் சிற்பங்களைச் சாரும்.

இராசசிம்மனின் மிகச் சிறந்த சிற்பப் படைப்புக் காஞ்சிபுரத்துக் கைலாசநாதர் கோயிலாகும். இக் கோயில் இம் மன்னனுக்கு மட்டுமன்றி அவனுடைய பல்லவப் பரம்பரைக்கும், தமிழகத்துக்கும் என்றென்றும் அழியாத புகழைத் தேடித் தந்துள்ளது. இக் கோயிலை அமைப்பதற்கு இவனுக்கு இவனுடைய பட்டத்தரசியும் மகனும் பலவகையில் துணைபுரிந்தனர். கண்களுக்கு விருந்தாக அமைந்துள்ள சிற்பக்கோலங்கள் பலவற்றை இக்கோயிலில் காணலாம். இக் கோயிலின் கருவறையைச் சுற்றி ஐம்பத்தெட்டுச் சிறு கோயில்கள் அமைந்துள்ளன.

கருவறைக்கு முன்பு எழுப்பப்பட்டுள்ள மண்டபத்தின் சுவர்களின் மேல் மிக அழகிய வண்ண ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. அவை இப்போது மங்கி மறைந்து வருகின்றன.

மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயிலானது சுழுண்டு பொங்கி வரும் அலைகள் தன்னைக் கழுவிக் கழுவிச் சென்றும் காலத்தை வென்று நிமிர்ந்து நிற்கின்றது. அதனிடம் காணப் படும் சிற்பங்களின் மென்மையும், நுண்மையும், எழிலும் கடலுக்கே தனி ஒரு சோபையைக் கொடுத்து வருகின்றன. காஞ்சி உலகளந்த பெருமாள் கோயிலையும் அதனுள் நின்று நிமிர்ந்திருக்கும் ஓங்கி உலகளந்த உத்தமனான பெருமாளின் நெடுந்தோற்றத்தையும் காணும்போது இக்கோயிலை எழுப்பிய இரண்டாம் நந்திவர்ம பல்லவனின் உள்ளத்தின் உயர்ச்சியை யும் விரிவையும் எண்ணி எண்ணி வியப்பில் ஆழ்கின்றோம்.

பனைமலையிலுள்ள கோயில் பல்லவருடைய மற்றொரு புகழ் பெற்ற படைப்பாகும். இக் கோயில் ஓவியச் சிறப்பு வாய்ந்த தாகும். அங்குத் தீட்டப்பட்டுள்ள சிவபெருமான், பவானியம்மன் திருவுருவ ஓவியங்கள் கண்கவரும் எழிலின. ஆனால், சிதை வுற்றுள்ள அவற்றை நோக்கி அவற்றின் அவலநிலைக்குக் கண் கலங்கவேண்டியுள்ளது. இந்தியாவிலேயே மிகச் சிறந்தவை எனப் பாராட்டப்பெறும் பனைமலை ஓவியங்கள் இன்று அழிந்து விட்டன. அவற்றின் மங்கிய தோற்றத்தில் அஜந்தாவின் சாயலையும் பல்லவ ஓவியர்களின் கைவண்ணத்தையும் கண்டு கண்டு களிப்புறுகின்றோம்.

அண்மையில் செங்கற்பட்டு மாவட்டத்தில் பெரிய வெண்மணி என்னும் கிராமத்தில் பல்லவர் காலத்திய சிற்பம் ஒன்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. அச் சிற்பம் புடைப்புச் சிற்ப வகையைச் சேர்ந்தது. அச் சிற்பம் துர்க்கையின் பல தோற்றங்களுள் ஒன்றை எடுத்துக் காட்டுகின்றது. சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் பெண்கள் பலர் கூடி ஓர் இளம் பெண்ணுக்குத் துர்க்கையின் வேடம் புனைந்து வேட்டுவவரிப் பாடல்களைப் பாடி வழிபட்டன ரெனக் கூறுகின்றார். அப்போது துர்க்கையின் கோலத்தை விளக்கும்போது அவள் முறுக்குண்ட கொம்புகளையுடைய கலைமான் ஊர்தியின்மேல் அமர்ந்திருந்தாள்; அவள் கையில் சூலமேந்தியிருந்தாள் ; அவளுடைய சீறடிகளில் சிலம்பும் கழலும் புலம்பின ; அவள் இரண்டு வேறு உருவில் திரண்ட தோள் அவுணன் (மகிடாசுரன்) தலைமிசை நின்ற தையலாவாள் என்று குறிப்பிடுகின்றார். இளங்கோவடிகள் அளித்துள்ள இலக்

கணங்கள் அத்தனையும் இப் பெரிய வெண்மணிச் சிற்பத்தில் காணலாம். இலக்கியத்துக்குச் சான்றாக அமைந்திருப்பது இதன் சிறப்பாகும்.

அரசியல்

சங்க காலத்து மன்னர்களைப் போலவே பல்லவ வேந்தர்களும் கடவுளாகவே பாராட்டப்பட்டு வந்தனர். நாடாளும் பொறுப்பு முழுவதும் மன்னன் கைகளிற்றான் ஒடுங்கிநின்றது. அரசுகட்டில் ஏறும் உரிமையானது பரம்பரை உரிமையாய் இருந்து வந்தது. இம்முறை சிலசமயம் தவறியதுமுண்டு. இரண்டாம் பரமேசுவர பல்லவன் இறந்த பிறகு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மன்னன் ஒருவனிடம் அரசுரிமை ஒப்படைக்கப்பட்டது.

பல்லவ மன்னர்கள் உயர்ந்து நிமிர்ந்த அழகிய தோற்றமுடையவர்களாக இருந்திருக்கவேண்டும் என்று கருதுவதற்குச் சான்றுகள் உள்ளன. மாமல்லபுரத்து வராகக் குகையில் செதுக்கப்பட்டுள்ள சிம்மவிஷ்ணு, மகேந்திரவர்மன் ஆகிய அரசர்களின் தோற்றம் எடுப்பாகவும் அரசக் களையுடையதாகவும், மிடுக்காகவும் காணப்படுகிறது. பல்லவ மன்னர்கள் கல்வி, அறிவு, கலைப் பயிற்சி, பண்பாடு ஆகிய நலன்களில் குறைவிலா நிறைவாக விளங்கினர். சமயத்திலும், இறைவழிபாட்டிலும் அவர்கட்கு அளவற்ற ஈடுபாடு உண்டு. பல்லவ மன்னர்களுக்கு 'விடேல் விடுகு' என்று ஒரு விருதும் உண்டு. பல்லவர்கள் நந்தி யுருவம் தீட்டிய கொடியைத் தாங்கினர்.

பல்லவ மன்னர்களுக்கு அமைச்சர்கள் அரசியலில் துணை புரிந்து வந்தனர்.[10] மந்திரிகளும் பட்டப்பெயர்களுடன் விளங்கியதைக் காண்கிறோம். ஓர் அமைச்சருக்கு 'விடேல் விடுகு காடுவெட்டித் தமிழ்ப் பேரரையன்' என்ற பெயர் வழங்கிற்று. மன்னருக்கு மந்தணம் கூறுவதும், அரசரின் அயல்நாட்டுத் தொடர்புக்குத் தக்க நெடுமொழிகள் உதவுதலும் அமைச்சரின் சீரிய பணிகளாக இருந்தன. அரசாங்கப் பணிகளை நன்கு நிறைவேற்றி வைப்பதற்குப் பல ஊழியர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர். அவர்களுள் 'வாயில் கேட்பார்' என்போர் தலைமைச் செயலாளருக்கு உதவிபுரிந்து வந்தனர். அரசாங்க மூல பண்டாரம் 'மாணிக்கப் பண்டாரம் காப்பன்', கொடுக்கப்பிள்ளை என்பவர்களின் பொறுப்பில் செயற்பட்டு வந்தது.

10. பெரிய. புரா. திருநாவு. புரா. 90-92.

பல்லவரின் அரசியலில் மன்னனே நீதியின் தலைவனாகச் செயற்பட்டான். கோட்டங்களிலும் சிற்றூர்களிலும் நீதி மன்றங்கள் இயங்கி வந்தன. காஞ்சிபுரத்தில் நடைபெற்ற நீதி மன்றத்துக்கு 'அதிகரணம்' என்று பெயர். கோட்ட நீதிமன்றங்கள் விதித்த தண்டனைக்கு 'அதிகரண தண்டம்'[11] என்றும், சிற்றூர்களில் நடைபெற்று வந்த நீதிமன்றங்கள் விதித்த தண்டனைக்குக் 'கரண தண்டம்' என்றும் பெயர்.

உழவு நிலங்களும், தரிசுகளும் அளந்து கணக்கிடப்பட்டன. நிவந்தங்களாக அளிக்கப்பட்ட நிலங்களுக்கு எல்லைகள் வரையறுக்கப்பட்டதாகக் கல்வெட்டுகளினின்றும் செப்பேடுகளிலிருந்தும் குறிப்புகள் கிடைக்கின்றன. கழனிகளுக்கு வரம்பிட்டு வேலியும் நட்டு வைத்தனர்.

அரண்மனைப் பொற்கொல்லனின் தொழில் பரம்பரை உரிமையாகப் பாதுகாக்கப்பட்டு வந்தது. சாசனங்களைச் செப்பேடுகளில் பொறிக்கும் பொறுப்பை மேற்கொண்டிருந்த அலுவலன் 'தபதி' எனப்பட்டான். இவனும் பரம்பரைப் பணியாளன் ஆவான். தானங்களையும் நிவந்தங்களையும் ஆவண உருவத்தில் எழுதி அமைத்தவன் 'காரணத்தான்' அல்லது 'காரணிகன்' என்பவன். காரணிகளைப் பற்றிய குறிப்புகள் சோழர்களின் கல்வெட்டுகளிலும் வடஇந்தியக் கல்வெட்டுகளிலும் காணப்படுகின்றன. காரணிகருள் பல படிநிலைகள் உண்டு. காரணிகன், அவனுக்குமேல் உத்தரகாரணிகன், அவனுக்குமேல் பரமோத்தர காரணிகன் என்று காரணிகர் முத்தரத்தினர் பணிசெய்து வந்தனர். இப்போது தமிழகத்தில் ஊர்தோறும் ஊர்க்கணக்கு எழுதும் கிராமக்கணக்கன் அல்லது கர்ணம் என்பவர் பல்லவர் காலத்திய காரணிகன் பணியையே தொடர்ந்து நடத்திவருகின்றனர். செங்கற்பட்டு, வடஆர்க்காடு, தென்னார்க்காடு, சேலம், தர்மபுரி ஆகிய மாவட்டங்களில் காரணிகன் அல்லது கருணீகன் அல்லது கணக்கன் என்னும் குலமே ஒன்று தனியாகக் காணப்படுகின்றது.

பல்லவர்கள் ஆற்றல்மிக்க கடற்படைகள் வைத்திருந்தனர். நாட்டிலும் துறைமுகங்கள் சில செழித்து விளங்கி வந்தன. அவற்றுள் மாமல்லபுரம், நாகப்பட்டினம் ஆகிய ஊர்களில் செயற்பட்டிருந்த துறைமுகங்கள் சிறப்பானவை. பல்லவருக்கும் சீனருக்கும் கடல் வாணிகத் தொடர்பு இருந்து வந்தது. பல்லவ

11. S.I.I. II. No. 353.

மன்னர்கள் இலங்கையின்மேல் படையெடுத்ததற்கும், இலட்சத் தீவுகளை வென்றதற்கும் கல்வெட்டுச் சான்றுகள் உள.

அரசு தண்டிய இறைப் பணத்தால் மன்னனுடைய பண்டாரங்கள் நிரம்பின. உப்பு எடுக்குந் தொழில் மன்னருடைய ஏகபோக உரிமையாகப் பாதுகாக்கப்பட்டு வந்தது. தறிகளில் நெசவு செய்பவர்கள், நூல் நூற்போர், கள்ளிறக்குவோர், இடையர்கள் ஆகியவர்கள்மேல் தொழில்வரிகள் விதிக்கப்பட்டன. இவ் வரிகளே யன்றி ஈழம் பூட்சி, இடைப் பூட்சி, பிராமண ராசக் காணம், கலியாணக் காணம், காசுக் காணம், தட்டுக் காணம், விசக்காணம், பாறைக்காணம், தரகு, செக்கிறை முதலிய வரிகள் பல தண்டப்பட்டன. கன்னார்கள், தோல்கருவிகள் செய்பவர்கள், கழைக்கூத்தாடிகள், ஆசீவகர்கள், தரையடி நீர் காண்பவர்கள், சூதாடிகள், சவரத் தொழிலாளர் ஆகியவர்களிடத்திலிருந்து வரிகள் தண்டப்பட்டன.[12]

சில நிலங்களுக்குப் 'பட்டி' என்றும், 'பாடகம்' என்றும் பெயர் வழங்கின. அவற்றைத் தானமாகப் பெற்றவர்களின் பெயர்களின் முன்பு பாடகம் என்னும் சொல் இணைக்கப்பட்டது. பாடகம் மாத்துருபூதி சடங்கவி சோமயாஜி, பாடகம் சுவாமிதேவ சடங்கவி என்ற பெயர்கள் அதற்குச் சான்றாகும்.

பல்லவர் காலத்தில் வழங்கிய நில அளவைகள் குழி, வேலி என்பன; முகத்தல் அளவைகள் கருநாழி, பொறக்கால், காடி, நால்வா நாழி, நாராய நாழி, மானாய நாழி, பிழையா நாழி, விடேல்விடுகு உழக்கு, செவிடு, சோடு, மரக்கால், குறுணி, பதக்கு, கலம் ஆகியவை; பொன் அளவைகள் கழஞ்சு, மஞ்சாடி என்பன. வெள்ளியாலும் செம்பாலும் நாணயங்கள் வழங்கி வந்தன.

பல்லவ மன்னர்கள் உழவுக்கு ஆற்றிய தொண்டு அளப்பரியதாகும். அவர்கள் மிகப் பெரிய ஏரிகள் கட்டினார்கள். முதலாம் மகேந்திரவர்மன் கட்டிய மகேந்திரவாடி ஏரியானது மிகவும் பெரியதாகும். அதனுடைய மதகுநீர் பீரிட்டோடி ஏழெட்டுக் கல் தொலைவுக்கப்பாலும் நிலங்களை ஊட்டி வளர்த்தது. மாமண்டூர் ஏரியும், உத்தரமேரூர் ஏரியும் இம் மன்னன் அமைத்தவையோம். தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காவேரிப்பாக்கத்து ஏரியைக் கட்டினான். இவ்வேரி இருபத்தேழு சதுர மைல் பரப்புள்ளது. முதலாம் பராந்தகன் காலத்தில் இவ்

12. S. I. I. XI. Cop. pl. (2).

வேரியின் நிருவாகம் ஓர் ஏரி வாரியத்தினிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது. பல்லவர்கள் காலத்தில் பெருங் கிணறுகள் எடுக்கப்பெற்றன. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில், திருவெள் ளறை என்னும் ஊரில் தோண்டப்பட்டுள்ள 'மார்ப்பிடுகு பெருங்கிணறு' மிகவும் பெரிய தொன்றாகும். இதன் பரப்பு முப்பத்தேழு சதுர அடி. இது சுவஸ்திக வடிவத்தில் அமைக்கப் பெற்றுள்ளது. அதனால் இது 'நால்மூலைக் கிணறு' என்று வழங்கி வருகின்றது. நான்கு பக்கத்திலிருந்தும் படிக் கட்டுகள் கிணற்றின் அடிப்புறத்துக்கு இறங்கிச் செல்லுகின்றன. இப் படிக்கட்டுகளில் பல அழகிய சிற்பங்கள் அணி செய்து நிற்கின்றன.

## தான முறைகள்

நிலங்கள் தானமாக அளிக்கப்படுவதற்கு முன்னர் அவற்றின் மேலிருந்த குடி (தனிப்பட்ட குடிகளின் உரிமை), கோ (மன்ன னுக்கு இருந்த வரி விதிப்பு உரிமை), பொறி (காணிக்கல் போன்ற உரிமை அடையாளங்கள்) ஆகியவை மாற்றப்படும்.[13] தனக்கு உரிமையான ஒன்றையே ஒருவன் தானமாக அளிக்க முடியும். ஆகையால் தானம் அளிக்க விரும்பும் ஒருவன் தான நிலத்தின் உரிமையாளரிடமிருந்து அதை விலைக்கு வாங்கித் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளுவான்; பிறகே பிறருக்குத் தானமாக அதை வழங்குவான். பிராமணர்களுக்குத் தானமாக வழங்கப்பட்ட நிலம் 'பிரமதேயம்' எனப் பெயர் பெற்றது. கோயில்களுக்கு அளிக்கப்பட்ட தானத்துக்குத் தேவபோகம் அல்லது தேவதானம் எனப் பெயர் வழங்கிற்று. பௌத்த சமண சமயக் கோயில்களுக்கும் மடங்களுக்கும் வழங்கப்பட்ட நிலம் 'பள்ளிச் சந்தம்' எனப் பெயர் பெற்றது. பிரமதேய பள்ளிச் சந்த தானங்களுடன் குறிப்பிட்ட சில உரிமைகளும், பரிவாரங் களும் வழங்கப்பட்டன. கொடுக்கும் தானங்களைக் காப்பாற்றி வரும்படி பின்தலைமுறையினரைக் கேட்டுக்கொள்ளும் கட்டுரை யும் சாசனங்களில் சேர்க்கப்படுவது வழக்கம்.

## ஊராட்சி முறைகள்

தமிழகத்தில் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்கு முன்பு வழங்கி வந்த ஊராட்சி முறைகளைப் பற்றிய விரிவான செய்திகள் கிடைக்கவில்லை. நந்திவர்ம பல்லவன் காலத்திலிருந்து கல்வெட்டுகளின் வாயிலாக அவை கிடைத்து வருகின்றன.

13. T. A. I. II. p. II. Cop. pl. of Naragunan

தமிழகத்தைப் பற்றிய வரையில் பல்லவரின் ஆட்சிக்குட்பட்ட நிலப் பகுதியானது கோட்டம், நாடு, ஊர் என்று மூன்று பிரிவு கட்கு உட்பட்டிருந்தது. நாட்டின் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக் கப்பட்டிருந்தவர்கள் நாட்டார் என்றும், ஊரின் ஆட்சிக்குப் பொறுப்பானவர்கள் ஊரார் என்றும் பெயர்பெற்றனர். மன்ன வரின் ஆணையின்மேல் நிலங்களை ஒருவருக்கு உரிமையாக்கு வதும், ஒருவரிடமிருந்து நில உரிமைகளை பறிப்பதும் நாட்டாரின் கடமைகளில் சிலவாம். மன்னன் பிறப்பித்த ஆணைக்குத் 'திருமுகம்' என்றும் 'கோனோலை' என்றும் பெயர். ஒருவருக்கு மாற்றித் தரவேண்டிய நிலங்களின் பரப்பை வரை யறை செய்து கொடுக்கும் கட்டளைக்கு 'வரையோலை' என்று பெயர் வழங்கிற்று.

ஊரார் என்னும் சொல் சிற்றூர் ஒன்றின் மக்கள் அவை யைக் குறிப்பிட்டு நின்றது. பண்டைத் தமிழரின் ஊர்மன்றத் தைப்போலவே இஃதும் குடிமக்களின் ஆட்சிச் சபையாக விளங் கிற்று. இவ்வூராரின் உரிமைகள், பொறுப்புகள், ஆட்சி வரம்புகள் யாவை என்பன விளங்கவில்லை. எந்தவிதமான விதிகளுக்கும், ஒழுங்கு முறைகளுக்கும் உட்படாமல் ஊர்க் குடிமக்கள் ஒன்று கூடித் தம் தம் ஊரின் நலத்தைப் பற்றிய ஆய்வுகள் செய்து ஒரு முடிவுக்கு வருவது ஊராரின் கடமையெனத் தெரிகின்றது. பிராமணருக்குத் தானமாக அளிக்கப்பட்ட ஊர்கட்குப் 'பிரம தேயங்கள்' என்று பெயர். பிரமதேயம் என்ற கிராமத்தை நிருவகிக்கும் பொறுப்பு அக் கிராமத்தைத் தானமாகப் பெற்ற பிராமணரிடமே ஒப்படைக்கப்பட்டிருந்தது. அக் கிராமத்துக்குள் 'நாடு காப்பானும் வியவனும் (அரசாங்க அதிகாரி) நுழையக் கூடாது...அவர்கள் செய்யவேண்டிய் பணியைத் தானம் பெற்ற வர்களும் அவர்களுடைய சந்ததியாருமே கவனித்து நிறைவேற்ற வேண்டும்' என்பது தானத்தின் நிபந்தனையாகும். மன்னன் பிராமணருக்குப் பிரமதேயம் அளித்த திருமுகத்தை நாட் டார்கள் தம் தலையின்மேல் வைத்து அறையோலை (அறிக்கை யோலை) எழுதி வெளியிடுவார்கள்.

பிரமதேயம் அல்லது பிராமணரின் கிராம ஆட்சி ஊர்ச் சபையினர் அல்லது மகாசபையினரிடம் ஒப்படைக்கப்பட் டிருந்தது. இச் சபையினரைப் 'பெருமக்கள்' என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. பல்லவராட்சியில் தமிழகத்தில் ஏறக்குறைய இருபது வகையான சபைகள் இயங்கிவந்தன. ஒவ்வொரு சபை யும் பல பணிகளை நிருவகித்து வந்தது. கோயில் நிவந்தங்கள், நீர்ப்பாசனங்கள், உழவு நிலங்கள், நீதி விசாரணை ஆகிய

வற்றுக்குச் சபைகள் அமைக்கப்பட்டிருந்தன. இச் சபைகளின் கீழ்ப் பல வாரியங்கள் (குழுக்கள்) செயல்பட்டு வந்தன. ஒவ்வொரு வாரியமும் ஒரு குறிப்பிட்ட பணியை மேற்கொண்டு செய்து வந்தது. ஏரி வாரியம் ஏரியின் நிருவாகத்தை நடத்தி வந்தது. தோட்ட வாரியம் தோட்டக் கால்களை நிருவகித்து வந்தது. வாரியங்கள் அல்லாமல் 'அருங்கணத்தார்' என்றும் ஒரு குழுவினர் இருந்து வந்தனர். கல்வியறிவிற் சிறந்தவர்கள் இக் குழுவில் உறுப்பினராக அமர்ந்திருந்தனர். நிலங்களை வாங்குவதும் விற்பதும் இவர்களுடைய கடமையாகும்.

ஒவ்வொரு கிராமமும் வீடுகள், தோட்டங்கள், குளம் குட்டைகள், ஏரிகள், புறம்போக்குகள், பொதுக் குளங்கள், குற்றுக் காடுகள், நீரூற்றுகள், வாய்க்கால்கள், கோயில்கள், கோயில் நிலங்கள், கடைகள், தெருக்கள், சுடுகாடுகள், இடு காடுகள், நன்செய் புன்செய் நிலங்கள் ஆகியவற்றைக் கொண்ட ஒரு நிலப்பரப்பாகும். கிராமங்கள் அளந்து எல்லை யிடப்பட்டன. கோயில்களுக்கும் பிராமணருக்கும் தானமாக விடப்பட்ட நிலங்கள் தனியாகப் பதிவு செய்யப்பட்டன.

கோயிலைக் கொண்டு பலதரப்பட்ட மக்கள் பிழைப்பை நடத்தி வந்தனர். காபாலி சைவர்கள் கோயில்களில் உண்பது வழக்கம். பல மடங்கள் கோயில்களுடன் தொடர்புகொண்டு நடைபெற்றுவந்தன. காஞ்சிபுரத்துத் திருமேற்றளி மடமும், கொடும்பாளூர்க் காளாமுகர் மடமும் இத்தகைய நிறுவனங் களாம்.

**கோயில்கள்**

பல்லவ மன்னரும் அவர்களுடைய குடிமக்களும் கோயில் வழிபாட்டில் மிக்க ஈடுபாடுடையவர்களாய் இருந்தனர். காஞ்சி புரத்திலும் வேறு பல இடங்களிலும் கோயில்கள் எழுப்பப் பட்டன. கோயில் அருச்சகர்கள், பணி செய்வோர், கூத்திகள் ஆகியவர்கட்கு நிலங்கள் தானமாக அளிக்கப்பட்டன. கூத்தி களுக்கு அடிகள்மார், மாணிக்கத்தார், கணிகையர், உருத்திர கணிகையர் என்றும் பெயர்கள் உண்டு. சோழர்களின் கல் வெட்டுகளில் பெரும்பாலும் இவர்களுக்குத் 'தேவரடியார்' என்ற பெயரே வழங்கி வந்தது.

வாழ்க்கையில் சில நெருக்கடிகள் நிகழும்போது தெய்வங் கட்கு உயிர்ப்பலியூட்டும் வழக்கம் உலகம் முழுவதிலும் காணப் பட்ட தொன்றாகும் என்பதைப் பண்டைய மக்களின் வரலாறு கள் எடுத்துக் கூறுகின்றன. தமிழகம் இதற்கு விலக்கு அன்று.

# 12. சோழப் பேரரசின் தோற்றம்

விசயாலய சோழன் (கி.பி. 850-'71) தஞ்சையைக் கைப் பற்றித் தன் வெற்றியின் சின்னமாக நிசும்பசூதினி என்ற கோயிலை எழுப்பினான்.[1] இவ் வெற்றிக்கு முன்பு தஞ்சாவூர்ப் பகுதி முழுவதும் முத்தரையரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. முத் தரையர்கள் செந்தலை அல்லது நியமம் என்ற இடத்திலிருந்து தஞ்சையை ஆண்டு வந்தனர். அவர்கள் அரசியல் சூதாட் டத்தில் கைவந்தவர்கள். அவர்களுடைய அரசியல் சார்பு மாறிக் கொண்டே இருந்தது. பல்லவருடனோ அன்றிப் பாண்டிய ருடனோ துணைபூண்டு பிற மன்னரைப் பொருவார்கள். பல்ல வருக்கும், வரகுண பாண்டியனுக்குமிடையே விளைந்த போரில் முத்தரையர்கள் பாண்டியருடன் இணைந்தனர். அப்போது விசயாலயன் பல்லவருக்குத் துணை நின்றான். போரில் விசயா லயன் வெற்றி கண்டான். தஞ்சாவூரைக் கைப்பற்றித் தன் ஆட் சிக்கு ஆக்கத்தையும் விரிவையும் தேடிக்கொண்டான். உறை யூருக்கு அண்மையில் தங்கீழ் ஒரு குறுநில மன்னனாகத் திறை செலுத்தி முடங்கிக்கிடந்த விசயாலயனின் கைகள் இவ் வெற்றி யால் மிகவும் வலுவடைந்துவிடும் என்று பல்லவர்கள் எதிர் பார்த்தவர்களல்லர். தமிழ்நாட்டு வரலாற்றிலேயே ஈடிணை யற்ற பெரும் புகழை ஈட்டிக்கொண்ட சோழப் பேரரசர் பரம் பரை யொன்றைத் தான் தொடங்கி வைக்க விருந்ததை விசயா லயனும் கனவுகூடக் கண்டிருக்கமாட்டான்.

விசயாலயன் வெற்றியின் காரணமாக முத்தரையரின் கை ஓடுங்கிவிட்டது. முத்தரையரின் போர்த் துணையைப் பெற்றிருந்த வரகுண பாண்டியன் மீண்டும் ஒருமுறை வடக்கே பல்லவரின்மேல் படையெடுத்து வந்தான். பல்லவ மன்னனான அபராசிதன் தனக்குத் துணை நின்ற மன்னர் அனைவரையும் ஒன்று கூட்டினான். அவனுக்குத் துணைபுரிய எழுந்தவர்களுள் கங்க மன்னன் முதலாம் பிருதிவிபதியும் ஒருவன். பல்லவருக்கும் கங்கருக்குமிடையே நீண்டகாலமாகவே நல்லுறவு நீடித்துவந்தது. இந் நிகழ்ச்சிகளுக்கிடையில் விசயாலயன் காலமானான். அவனை

1. S. I. I. III. No. 205

யடுத்து அவன் மகன் ஆதித்த சோழன் முடிசூட்டிக்கொண்டான். பாண்டியருக்கும் பல்லவருக்கும் திருப்புறம்பயம் என்னும் இடத்தில் பெரும் போர் ஒன்று நிகழ்ந்தது. இப் போரில் ஆதித்த சோழன் பல்லவருடன் இணைந்தான். போரில் அபராசிதன் வெற்றி கண்டான். அவனுடைய துணைவன் பிருதிவிகங்கன் போர்க்களத்தில் புண்பட்டு மாண்டான்; வரகுணன் தோல்வியுற்றான்.[2] அபராசிதன், ஆதித்தன் தனக்குப் புரிந்த பேருதவியைப் பாராட்டினான். விசயாலயன் முத்தரையரிடமிருந்து கைப்பற்றித் தந்த நாட்டுடன் தானும் ஆதித்தனுக்குச் சில ஊர்களைப் பரிசாக வழங்கினான்.

முதலாம் ஆதித்தன் (கி.பி. 871-907) அரசியல் ஆற்றல் மிக்கவன்; போர்த்திறன் வாய்ந்தவன். சோழநாட்டுக்கு விரிவு தேடவேண்டும் என்ற சீரிய நோக்கங் கொண்டவன். தன் தந்தை தனக்கு மீட்டுக் கொடுத்த சோழ நாட்டாட்சியை வலுவான அடிப்படையின்மேல் நிலைநாட்ட முயன்றான். அன்பில் செப்பேடுகளில் இவனைப்பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. சயாத்திரி மலைகளிலிருந்து கீழைக் கடற்கரை வரையில் காவிரியின் இருமருங்கிலும் சிவபெருமானுக்காகக் கற்றளிகள் பல எடுப்பித்தான். சோழ நாட்டின் பெரும்பகுதி பல்லவரின் ஆட்சியின்கீழ் இருந்துவந்ததைக் கண்டு ஆதித்தன் மனம் பொறாதவனாய் அதை மீட்கும் முயற்சிகளில் ஈடுபட்டான். பல்லவருடன் போர் தொடுத்தான். போரில் மாபெரும் வெற்றியுங் கண்டான். உயர்ந்ததொரு யானையின்மேல் அமர்ந்து போர் செய்து கொண்டிருந்த அபராசித பல்லவனை ஆதித்தன் வாளால் ஒரே வீச்சில் கொன்றதாகக் கன்னியாகுமரிக் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது. பல்லவ அரசு கவிழ்ந்தது. பல்லவரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றி ஆதித்தன் சோழ நாட்டுடன் இணைத்துக்கொண்டான். சோழ நாட்டெல்லை விரிவடைந்து வடக்கே இராஷ்டிரகூடரின் ஆட்சி வரம்பை எட்டி நின்றது (கி.பி. 890.)

ஆதித்தன் கண்ட வெற்றிகட்கெல்லாம் அவனுக்குக் கங்கர்கள் துணை நின்றனர். ஆதித்தன் 'இராசகேசரி' என்ற விருது ஒன்றை ஏற்றான். பல்லவ இளவரசி ஒருத்தி ஆதித்தனுக்கு மண முடிக்கப் பெற்றாள். இராஷ்டிரகூட மன்னன் இரண்டாம் கிருஷ்ணன் என்கிற வல்லவரையன் மகள் இளங்கோன் பிச்சி என்பவளை ஆதித்தன் தன் பட்டத்தரசியாக ஏற்றுக்கொண்டான்.

2. S.I.I.II. 76. marxe. 18.

கொங்கு நாட்டில் ஆதித்தனின் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அவற்றைக் கொண்டு கொங்கு தேசத்தையும் அவன் வென்று தன் ஆட்சியின்கீழ் இணைத்துக்கொண்டான் என்று ஊகித்தறியலாம். இவன் தழைக்காடு என்ற ஊரைக் கைப் பற்றினான் என்று 'கொங்கு தேச இராசாக்கள்' என்னும் நூல் குறிப்பிடுகின்றது. ஆதித்தன் கொங்கு நாட்டிலிருந்து கைப்பற்றிக் கொணர்ந்த பொன்னைக் கொண்டு தில்லையம்பலத்துக்குக் கூரை வேய்ந்தான் என்று நம்பியாண்டார் நம்பியும் கூறு கின்றார்.[3] கங்க மன்னனான இரண்டாம் பிருதிவிபதி ஆதித்த னுக்குக் கீழ்ப்பட்ட மன்னனாகவே ஆட்சிபுரிந்து வந்தானாகை யால் மேலைக் கங்கரிடமிருந்தே ஆதித்தன் தன் நாட்டைக் கைப் பற்றியிருக்க வேண்டும்.

ஆதித்தன் சேர மன்னன் தாணுரவியுடன் நல்ல நட்புறவு கொண்டிருந்தான். விக்கியண்ணன் என்ற படைத் தலைவன் ஒருவனுக்கு இவ்விரு அரசரும் 'தவிசு, சாமரை, சிவிகை. கோயில், போனகம். காளம், ஆண் யானை' ஆகிய விருதுகளையும் 'செம் பியன் தமிழவேள்' என்ற பட்டப்பெயரையும் வழங்கியுள்ளனர்.[4] இவ் வீரன் தாணுரவியின் படைத் தலைவனாக அமர்ந்திருந்து சோழனுடைய கொங்குநாட்டுப் போர்களில் அம் மன்னனுக்குப் படைத்துணை வழங்கியுள்ளான்.

காளத்தியை அடுத்துள்ள தொண்டைமான் நாடு என்ற இடத்தில் ஆதித்தன் இம் மண்ணுலகை நீத்தான். அவனுக்குப் பராந்தகன் என்றும், கன்னரதேவன் என்றும் இரு மக்கள் இருந் தனர். கன்னரதேவன் இளங்கோன் பிச்சி வயிற்று மகன். ஆதித்தனுக்குப் பிறகு முடிசூட்டிக் கொண்ட பராந்தகன் தன் தந்தையின் சமாதியின்மேல் 'கோதண்ட ராமேச்சுரம்' என்ற பெயருடைய கோயிலை எழுப்பினான்.[5] ஆதித்தனுடைய காலத் திலிருந்தே சோழப் பரம்பரையானது சைவ சமயத்தில் ஈடுபாடு கொண்ட பரம்பரையாகவே தொடங்கிற்று. சோழர்கள் சூரிய குலத்து வந்தவர்கள் என்றும், விசயாலயனுக்கு முன்பு இக் குலத்தினர் பதினைவர் அரசாண்டனர் என்றும் அன்பில் செப் பேடுகள் கூறுகின்றன. அப் பதினைவருள் கரிகாலன், கிள்ளி கோச்செங்கணான் ஆகியோர்களின் பெயர்களும் சேர்ந் துள்ளன.

3. நம்பி. ஆண். நம்பி. திருத். திருவந்: 65.
4. S.I.I. III. No. 89.
5. Ep. Ind. 286/1906; Ep. Ind. 230/1903.

**பராந்தகன் (கி.பி. 907-955)**

ஆதித்தன் மிகச் சிறந்த வீரர்களுள் ஒருவனாகத் திகழ்ந்து சோணாட்டு அரசுகட்டிலை அணிசெய்து வந்தவன். திருப்புறம் பயம் போர் நிகழ்ந்து இருபத்தைந்து ஆண்டு கால அளவில் சோழ அரசு வியக்கத்தக்க அளவு விரிவடைந்துவிட்டது. இப் போரில் தோல்வியுற்ற வரகுண பாண்டியன் போர் முடிவுற்ற வுடனே தன் உலக வாழ்வையும் நீத்தான், அவனையடுத்து அவன் மகனான ஸ்ரீபராந்தக வீரநாராயணன் பட்டத்துக்கு வந்தான். பாண்டிய நாட்டில் விளைந்த உள்நாட்டுக் கலகங் களின் காரணமாக அவனும் தன் ஆற்றலை இழந்துகொண் டிருந்தான்.

ஆதித்தனையடுத்து அவன் மகன் முதலாம் பராந்தகன் அரியணை ஏறினான். அப்போது சோழ நாட்டின் வடவெல்லை காளத்தி வரையிலும், தெற்கில் காவிரி வரையிலும் விரிவடைந் திருந்தது. மைசூர்ப் பீடபூமியும், கேரளக் கடற்கரையும் சோழ அரசுக்குப் புறம்பாக நின்றன. பராந்தகனின் ஆட்சி நாற்பத் தெட்டு ஆண்டுக் காலம் நீடித்தது. பராந்தகன் பாண்டியரைத் தனக்குப் பணிய வைத்துத் தன் ஆட்சியைத் தெற்கில் கன்னியா குமரி வரையில் விரிவுறச் செய்தான். தன்னுடைய மூன்றாம் ஆட்சி யாண்டுக்குள் பராந்தகன் பாண்டி நாட்டின்மேல் படை யெடுப்பு ஒன்றை மேற்கொண்டான். அவனை எதிர்த்து நிற்கும் வலியிழந்து இப் பாண்டியன் தன் நாட்டைக் கைவிட்டு முதலில் இலங்கைக்கு ஓடினான்; பிறகு அங்கிருந்து கேரளத்துக்கு ஓடினான். சின்னமனூர், உதயேந்திரம் செப்பேடுகளிலிருந்து இப் பாண்டிய மன்னனின் பெயர் இராசசிம்மன் என்று அறிகின் றோம். இலங்கை வேந்தன் ஐந்தாம் காசிபன் (கி.பி. 913-923) தனக்குப் படைத்துணை அனுப்பியும், பாண்டியன் வெற்றி காணத் தவறினான். அவன் வெள்ளூர் என்ற இடத்தில் சோழ னிடம் படுதோல்வியுற்றான் (கி.பி. 915). இம் மாபெரும் வெற் றிக்குப் பிறகு பராந்தக சோழனின் செல்வாக்கானது மேலும் ஓங்கி வளரலாயிற்று. அவன் பாண்டி நாட்டின் அரசனாகவும் மதுரையில் முடிசூட்டிக் கொள்ள அவாவினான். ஆனால், பாண்டிய நாட்டு மணிமுடியும் செங்கோலும் மதுரையில் இல்லை என்று அறிந்த பராந்தகன் பெரிதும் ஏமாற்றமடைந்தான். பாண்டியன் இராசசிம்மன் நாட்டைத் துறந்து இலங்கைக்கு ஓடி யவன், அவற்றை அங்கேயே கைவிட்டுக் கேரளம் போயிருந்தான். அம் மணிமுடியையும், செங்கோலையும் தனக்கு உடனே அனுப்பி வைக்கும்படி பராந்தகன் அந் நாட்டு மன்னன் நான்காம் உதயன்

(கி.பி. 945-53)என்பானுக்குத் தூது ஒன்று அனுப்பினான். அக் கட்டளைக்கு உதயன் மறுக்கவே பராந்தகன் அவன்மேல் படை யெடுத்தான். அவனுடைய படைபலத்துக்கு அஞ்சி உதயன் ரோகணம் என்ற பகுதிக்கு ஓடிப்போய்விட்டான்; போகும் போது பாண்டி நாட்டு மணிமுடியையும், செங்கோலையும் உடன் கொண்டு போனான். பராந்தகனின் நோக்கம் நிறைவேறாமற் போய்விட்டது. அவனும் ஏமாற்றத்துடன் தன் நாடு திரும்பினான்.

கேரள மன்னனும், கீழப்பழுவூரைச் சேர்ந்த பழுவேட்டரை யரும், கொடும்பாளூர் வேளிர்களும் பராந்தகனுக்குத் துணைபுரிந் தார்கள். பராந்தகனின் மக்களுள் ஒருவனான அருள்கேசரி என்பான் கொடும்பாளூர்ப் பரம்பரையைச் சார்ந்த தென்னவன் இளங்கோ வேளான் என்பவனின் மகள் பூபதி ஆதிச்ச பிடாரியை மணம் புரிந்துகொண்டான். கங்க மன்னன் இரண்டாம் பிருதிவி பதிக்குப் பராந்தகன், 'வாணாதிராசன்' என்ற பட்டமொன்றை வழங்கிப் பாராட்டினான். வைதும்பரை வென்று சோழ மன்னன் வெற்றிவாகை சூடினான்.

பராந்தகனை அரியணையினின்றும் இறக்கித் தன் மகள் வயிற்றுப் பிறந்த கன்னரதேவனைச் சோழ நாட்டு மன்னனாக முடிசூட்டுவிக்கும் சூழ்ச்சி ஒன்றில் இராஷ்டிரகூடன் இரண்டாம் கிருஷ்ணன் ஈடுபடலானான். தனக்குத் திறை செலுத்தியவர் களான வாணகோவரையரின் துணைகொண்டு அவன் சோழ நாட்டின்மீது போர் தொடுத்தான். கங்க மன்னன் இரண்டாம் பிருதிவிபதியின் துணையைப் பெற்றுப் பராந்தகன் தன் படை வலிமையைப் பெருக்கிக்கொண்டான். பராந்தகனுக்குக் கங்க மன்னன் இரண்டாம் பிருதிவிபதி படைத்துணை நல்கினான். சோழரின் படைகளும் இராஷ்டிரகூடரின் படைகளும் திருவல்லத் தில் மோதிக்கொண்டன (கி.பி. 910-11). கிருஷ்ணனும் அவனு டைய போர்த் துணைவரும் படுதோல்வியடைந்தனர். பராந் தகன் வீரவெற்றி கண்டான்; 'வீரசோழன்' என்ற விருது ஒன்றையும் ஏற்றுக்கொண்டான்.

வாணகோவர்கள் மிகப் பழையதொரு பரம்பரையில் வந்த வர்கள். இவர்கள் திருக்காளத்திக்கு வடக்கே அரசாண்டு வந்தனர். வாதாபி சளுக்கர்களின் ஆதிக்கம் ஓங்கி வரவே வாண கோவர்களின் அரசியற் செல்வாக்கும், ஆட்சி எல்லைகளும் சுருங்கிவந்தன. பராந்தகன் காலத்தில் இவர்களுடைய ஆட்சி வரம்பானது பாலாற்றுக்கு வடக்கிலே புங்கனூருக்கும் திருக்

காளத்திக்கும் இடையில் பரவியிருந்த நிலப்பகுதியில் ஒடுங்கி நின்றது. இவர்களுடைய நாட்டுக்குப் பெரும்பாணப்பாடி என்று பெயர். வாணகோவரின் ஆட்சியானது ஏறக்குறைய இருநூறு ஆண்டுகள் நிலைத்து நின்றது. இப் பரம்பரையில் இறுதியாக அரியணை ஏறியவன் மூன்றாம் விக்கிரமாதித்தன் ஆவான். இவன் இராஷ்டிரகூடமன்னன் கிருஷ்ணனுடன் நெருங்கிய நட்புறவு பூண்டிருந்தான்.

கங்க மன்னன் இரண்டாம் பிருதிவிபதி பராந்தகனிடம் வாணாதிராசன் என்ற வீர விருதைப் பெற்றுப் பிறகு சிறிது காலம் வாணர்களிடம் (Banas) திறை பெற்று வந்தான். இரண்டாம் விக்கிரமாதித்தனும், மூன்றாம் விசயாதித்தனு மான இரு வாண மன்னர்கள் பெரும்பாணப்பாடியைப் பராந் தகனுக்குப் பறிகொடுத்துவிட்டு இராஷ்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணனிடம் அடைக்கலம் புகுந்தார்கள்.

பராந்தக சோழன் வாணகோவரின்மேல் போர் தொடுக்க எழுந்தபோது அவனுக்கு வைதும்பர் என்ற தெலுங்கு மன்னரின் எதிர்ப்பை முதலில் முறியடிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. வைதும்பர்கள் என்பவர்கள் ரேநாண்டு-7000 என்ற நாட்டை ஆண்டு வந்தவர்கள்; வாணகோவரின் துணைவர்கள், பெரும் பாணப்பாடியின்மேல் பராந்தகன் படையெடுத்தபோது சந்தயன் திருவயன் என்பவனோ அன்றி அவனுக்கு முற்பட்டு இருந்த ஒருவனோ மன்னனாக ஆட்சிபுரிந்து வந்திருக்க வேண்டும். சோழரின் கடும் தாக்குதலைத் தாங்கமுடியாதவ னாய் வைதும்பனும் இராஷ்டிரகூடனிடம் சரண் புகுந்தான்.

பராந்தக சோழனின் பேரரசு வெகுவிரைவில் வளர்ந்து வந்து ஐம்பது ஆண்டுக்கால அளவில் மிகவும் விரிவடைந்து விட்டது. அது வெகு துரிதமாக வளர்ந்து வந்ததால் நாடு முழுவதிலும் வலிமையானதோர் அடிப்படையில் ஆங்காங்கு அரசாங்கத்தை நிறுவுவதற்குப் பராந்தகனுக்குக் காலமும் வாய்ப்பும் போதவில்லை. அவனுடைய வெம்போர்த் தாக்கு தல்களைத் தாங்கவியலாதவராகி நாடு கடந்தோடிய மன்னர்கள் அவன்மீது பழிவாங்கக் காலங்கருதிவந்தனர். பராந்தகனின் போர் ஆற்றலின் பெருக்கமானது இராஷ்டிரகூடர்கள், கீழைச் சளுக்கியர்கள் ஆகியவர்களுடைய நெஞ்சில் அச்சத்தையும் வஞ்சத்தையும் மூட்டிவிட்டது. வாணரும் வைதும்பரும் தனக்கு அஞ்சி ஓடி ஒளிந்து வாழ்ந்து வந்ததையும், அதனால் ஏற்படக் கூடிய விளைவுகளையும் பராந்தகன் நன்கு அறிந்திருந்தான்.

மேலைக் கங்கர் வேறு அவனுக்குத் தொல்லை கொடுக்க முனைந் தனர். அவர்களுடைய மன்னனான பெருமானடிகளும் சோழ நாட்டு எல்லைக்குள் புகுந்து ஆனிரைகளைக் கவர்ந்தோடத் தொடங்கினான். வடஆர்க்காடு மாவட்டத்தில் நிகழ்ந்த கங்க மன்னனின் பசுக் கவரும் படையெடுப்பு ஒன்றின்போது சோழ மறவன் ஒருவன் அவனை எதிர்த்துப் போராடிப் போர்க் களத்தில் புண்பட்டிருந்தான். அவனுடைய தொண்டின் சிறப் பையும், வீரத்தையும் பாராட்டிய பராந்தகன் அவனுக்கு வீரக்கல் ஒன்று எடுப்பித்தான்.[6] சோழ நாட்டின்மேல் சுழன்று, புரண்டு வீசத் தொடங்கிய பகைப்புயலைப் பராந்தகன் நன்கு அறிந்துகொண்டு முன்னராகவே தற்பாதுகாப்பு நடவடிக் கைகளை மேற்கொள்ளலானான். திருமுனைப்பாடி நாட்டில் அவன் தன் மூத்தமகன் இராசாதித்தனை ஒரு பெரும் படையின் தலைமையில் நிலைப்படுத்தியிருந்தான். அப் படையில் யானை யணிகளும், குதிரையணிகளும் அடங்கியிருந்தன. இராசாதித் தனின் தண்டுகள் திருமுனைப்பாடி நாட்டில் சுந்தரமூர்த்தி நாயனாரின் பிறப்பிடமாகிய திருநாவலூரில் பல ஆண்டுகள் நிறுத்தப்பட்டிருந்தன. அவ்வூர் கி.பி. 1140 வரையில் இராசா தித்தபுரம் என்னும் பெயரிலேயே விளங்கி வந்தது. பல ஆண்டு களாகத் திரண்டு உருவாகிக்கொண்ட பகைப்புயல் இறுதி யாகச் சோழ நாட்டின்மேல் தாக்கிப் புடைக்கத் தொடங்கிற்று. பகைப் படைகள் இராசாதித்தனைத் தக்கோலம் என்னும் இடத்தில் எதிர்த்து நின்றன. அங்குப் பெரும் போர் விளைந்தது (கி.பி. 949). தக்கோலம் என்னும் ஊர் வட ஆர்க்காடு மாவட்டத்தில் அரக்கோணத்துக்குச் சுமார் பத்துக் கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. தக்கோலத்துக்குத் 'திருவூறல்' என்றொரு பழம் பெயர் உண்டு. இவ்வூர் உமாபதி ஈசுவரர் கோயிலின் நந்திச் சிலையொன்றின் வாயிலிருந்து எப் பொழுதும் தண்ணீர் வடிந்துகொண்டே இருக்கும். மிக அண்மையிற்றான் இவ்வூற்று வறண்டுவிட்டது. எப்போதும் தண்ணீர் ஊறிக்கொண்டே இருந்ததால் இவ்வூர் திருவூறல் என்னும் பெயரெய்திற்று.

தக்கோலத்துப் போரில் இரு படைகளின் கைகலப்பும் மிகக் கடுமையாய் இருந்தது. போர் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தபோது, இராஷ்டிரகூடப் படைத்தலைவர்களுள் பூதுகன் என்பான் ஒருவன் இராசாதித்தன் அமர்ந்திருந்த யானையின்மேல் துள்ளியேறி இராசாதித்தனைக் கத்தியால்

6. Ep. Ind. IV. p. 22 B.

குத்திக் கொன்றான். போரின் முடிவில் வெற்றிவாகை இராஷ்டிரகூடனுக்குக் கிடைத்தது. அவனும் தன் படைத் தலைவனான பூதுகன் தனக்காற்றிய அரிய தொண்டுக்காகவும் அவன் துணிவைப் பாராட்டியும் அவனுக்கு வனவாசி 12,000, வெள்வோணம்-300 ஆகிய நாடுகளை வழங்கித் தன் நன்றியைத் தெரிவித்துக்கொண்டான். தக்கோலத்துப் போரில் இராசாதித்தன் 'வீரசொர்க்கம்' அடைந்ததாகத் திருவாலங்காட்டுச் செப்பேடும், லீடன் செப்பேடும் கூறுகின்றன. சோழ நாட்டின் பெரும்பகுதிகளை இராஷ்டிரகூடரும் அவர்களுடைய போர்த் துணைவர்களும் தமக்குள் பங்கு போட்டுக்கொண்டனர்.

தக்கோலத்துப் போர்முனையில் உயிரிழந்த இராசாதித்தனின் அன்னையின் பெயர் கோக்கிழான் அடிகள். பராந்தகனின் மற்றொரு மனைவி கேரளத்து அரசிளங்குமரியாவாள். இவள் மகன் அரிஞ்சயன். இவளுடைய செல்வாக்கின் துணைகொண்டு சேர நாட்டவர் பெருந்தொகையில் தமிழகத்தில் ஆங்காங்குக் குடியேறினர். பலர் அரண்மனையில் பணியாளராக அமர்ந்தனர். சேர நாட்டைச் சேர்ந்தவனான வெள்ளன் குமரன் என்பான் ஒருவன் இராசாதித்தனுக்குப் படைத்தலைவனாகப் பணியாற்றிக் கொண்டிருந்தான். இவன் திருநாவலூருக்கு அண்மையில் கிராமம் என்ற இடத்தில் கோயில் ஒன்று எழுப்பினான். இவனே பிறகு துறவுபூண்டு திருவொற்றியூரில் மடம் ஒன்று எழுப்பிச் சதுரானன பண்டிதர் என்ற தீட்சைப் பெயரில் அம் மடத்தின் தலைவனானான். இவனைத் தொடர்ந்து சேர நாட்டுக் குடிகள் பலர் கோயில்களுக்குச் சிறு சிறு நிவந்தங்கள் அளித்து வந்தனர். இராசாதித்தனைத் தவிர்த்துப் பராந்தகனுக்கு ஆண் மக்கள் வேறு நால்வரும், பெண் மக்கள் இருவரும் உண்டு. ஆண் மக்கள் கண்டராதித்தன், அரிகுலகேசரி, உத்தமசீலி, அரிஞ்சயன் ஆவர். பெண் மக்கள் வீரமாதேவியும் அநுபமாவும் ஆவர். வீரமாதேவி கோவிந்த வல்லவராயருக்கும், அநுபமா கொடும்பாளூர்க் குறுநில மன்னன் ஒருவனுக்கும் வாழ்க்கைப்பட்டனர்.

முதலாம் பராந்தகன் கி.பி. 955 ஆண்டுவரையில் உயிர் வாழ்ந்திருந்ததாகக் கல்வெட்டுக் குறிப்புகளால் அறிகின்றோம். இவன் தன் ஆட்சிக் காலத்தில் மக்களுக்கு ஆற்றிய நன்மைகள் பல. ஊராட்சி முறையைத் திருத்தியமைத்து, அதனுடைய நடைமுறை விதிகளையும் அறுதியிட்டான் என்று உத்தர

7. Ep. Ind. XXVII. p. 47. 8. Ep. Ind. XI p. 24.

மேரூர்க் கல்வெட்டு[8] ஒன்று குறிப்பிடுகின்றது. இவன் பாசனக் கால்வாய்கள் பல வெட்டி உழவின் வளர்ச்சியைத் தூண்டி விட்டான். இம் மன்னன் இரணியகருப்பம், துலாபாரம் பல புரிந்தான். பிராமணருக்குப் பல பிரமதேயங்கள் வழங்கினான். தில்லையம்பலத்துக்குப் பொன் வேய்ந்தான். தன் தந்தை ஆதித்தனைப் போலவே பராந்தகனும் சிவபெருமானுக்கெனப் பல கோயில்களை எழுப்பினான். பல துறைகளிலும் இவனுடைய செங்கோல் சிறப்புற்று விளங்கிற்று.

பராந்தகனுக்குப் பிறகு முப்பது ஆண்டுகள் வரை, அதாவது முதலாம் இராசராசன் அரசுகட்டில் ஏறியவரையிலும் சோழ அரசில் ஒரு பெரும் குழப்பம் ஏற்பட்டது. இக் காலத்தில் நாட்டப்பெற்ற கல்வெட்டுகள் பலவும், பொறிக்கப்பட்ட அன்பில் செப்பேடுகளும் வரலாற்று நிகழ்ச்சிகளை இணைத்துச் சோழ மன்னரின் ஆட்சி வரிசையை அறுதியிடத் துணைசெய்கின்றன.

பராந்தகனையடுத்துக் கண்டராதித்தன் பட்டத்துக்கு வந்தான். தமிழகத்து வரலாற்றில் புகழொளி வீசி விளங்கும் செம்பியன் மாதேவியே இவன் பட்டத்தரசியாவள். இவள் கட்டிய கோயில்கள் பல. இவளும் இவள் கணவனும் சேர்ந்து சைவ சமய வளர்ச்சிக்காகப் பல அரிய தொண்டுகள் புரிந்துள்ளனர். கண்டராதித்தன் பாடிய தோத்திரப் பாடல்கள் சில சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாந் திருமுறையில் வைக்கப்பட்டுள்ளன. இச் சோழ மன்னனின் வாணாள் இறுதியில் (கி. பி. 957) சோழப்பேரரசானது மிகவும் சிறியதொரு நாடாகச் சுருங்கி வந்துவிட்டது. அப்போது தொண்டை மண்டலம் முழுவதும் இராஷ்டிரகூடன் மூன்றாம் கிருஷ்ணனுக்கு உட்பட்டிருந்தது.

கண்டராதித்தனை யடுத்து அவனுடைய இளவலான அரிஞ்சயன் அரியணை ஏறினான். அவன் இரண்டாண்டுகள் அரசாண்டான். அவனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தர சோழன் முடிசூட்டிக் கொண்டான் (கி. பி.957). இவன் வைதும்ப இளவரசி கல்யாணியின் மகன். இவனுடைய ஆட்சி கி.பி. 973 வரை நீடித்தது. தான் ஆட்சிப் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டவுடனே இவன் தன் இரண்டாம் மகனான இரண்டாம் ஆதித்தனுக்கு இளவரசு பட்டஞ்சூட்டினான். இவன் காலத்தில் தெற்கே பாண்டி நாட்டில் வீரபாண்டியன் ஆட்சி புரிந்து வந்தான். சிங்கள மன்னனான நான்காம் மகிந்தன் இவனுடன் நட்புறவு கொண்டிருந்தான். ஒருமுறை சோழன் கண்டராதித்

8. Ep. Ind. XI. p. 24.

தனை இப் பாண்டியன் போரில் வென்று வீரமுழக்கம் செய்து கொண்டிருந்தான். அவனை ஒறுக்கும் நோக்கத்துடன் சுந்தர சோழன் பாண்டி நாட்டின்மேல் படையெடுத்துச் சென்றான். சோழருக்கும் பாண்டியருக்குமிடையே இரு பெரும் போர்கள் நிகழ்ந்தன. சேவூரில் நடைபெற்ற கடும்போரில் பாண்டியனின் யானைப் படைகள் சிதறுண்டு அழிந்து போயின. நூற்றுக்கணக் கான யானைகள் வெட்டுண்டு மாய்ந்தன. அவற்றின் குருதியா னது போர்க்களத்தில் ஆறாகப் பாய்ந்தது. இளவரசன் கரிகாலன் என்னும் இரண்டாம் ஆதித்தன் ஆண்டில் இளைஞன் எனினும், தானும் போர்க்கோலம் பூண்டு மதயானையை இளஞ்சிங்கம் பொருதலைப் போலப் பாண்டிய மன்னனுடன் நேருக்கு நேராகக் கடும்போர் புரிந்தான்.[9] அவன் தாக்குதலைத் தாங்கக் கூடாமல் பாண்டியன் துவண்டான். போர்க்களத்தினின்றும் புறமுதுகிட் டோடிச் சயாத்திரி மலைமுழை யொன்றில் ஒளிந்தான். ஆதித்த னின் சிறந்த வீரத்தைப் பாராட்டிச் சோழன் அவனுக்குப் 'பாண்டியனின் முடிகொண்ட சோழன்' என்றொரு விருதை வழங் கினான். சோழரின் படைகள் தாம் பெற்ற வெற்றியைத் தொடர்ந்து பாண்டி நாட்டுக்குள்ளும் நுழைந்தன. இவற்றின் தலைவர்களுள் கொடும்பாளூர்க் குறுநில மன்னன் பராந்தகன் சிறிய வேளான் என்பவனும் ஒருவன். பாண்டி நாட்டுப் படைகள் முறியடிக்கப்பட்டன. அவை மட்டுமன்றிப் பாண்டியருக்குத் துணை புரிய வந்த சிங்களப் படைகளும் சிதறுண்டு சிங்களத்தை நோக்கித் திரும்பி யோடின. அவற்றைத் துரத்திச் சென்ற சிறிய வேளான் இலங்கைத் தீவின் மேலும் படையெடுத்துச் சென்றான். ஆனால், அங்கு அவன் வெற்றி கண்டும் போரில் புண்பட்டு வீர மரணம் எய்தினான் (கி. பி. 965).

இரண்டாம் ஆதித்தனேயன்றிப் பார்த்திவேந்திர வர்மன் என்ற பெயருள்ள சோழ மன்னன் ஒருவனும் வீரபாண்டியனை வென்று முடிகொண்டதாகத் தொண்டைமண்டலத்துக் கல் வெட்டுகள் சில தெரிவிக்கின்றன. இவனுக்குப் 'பரகேசரி' என்றும், 'கோவிந்தராசமாராயர்' என்றும் விருதுகள் வழங்கிய தாகக் கல்வெட்டுச் செய்திகள்[10] கிடைத்துள்ளன. இவனுடைய அரசியருக்கு 'உடையார் தேவியார் வில்லவன் மகாதேவியார்,' 'பெருமானடிகள் தேவியார்' தன்மப் பொன்னாராகிய திரை லோக்கிய மகாதேவியார்' என்ற பட்டப் பெயர்கள் வழங்கி வந்ததாகத் தெரிகின்றன.[11] இவற்றை நோக்கின் பார்த்தி

9. Ep. Ind. Verse No. 28.
10. S.I.I: III. No. 180; S.I.I. II. No. 186; S.I.I. III. No. 158.
11. S.I.I. No. 193; Ep. Rep. 17/1921.

வேந்திர ஆதித்தவர்மனும் இரண்டாம் பரகேசரி ஆதித்தனும் வெவ்வேறானவர் அல்லர்; ஒருவரே என்று புலப்படுகின்றது.

வீரபாண்டியனை எதிர்த்துப் போரிட்ட மற்றொருவன் கொடும்பாளூர் பூதிவிக்கிரமகேசரி என்பான். இவனுக்குக் கற்றளிபிராட்டி என்றும், வரகுணப்பெருமானார் என்றும் இரு மனைவியர் உண்டு.

சுந்தர சோழனின் ஆட்சி பலவகையிலும் சிறப்புற்றிருந்தது. அவன் இராஷ்டிரகூடரிடமிருந்து சோழ நாட்டின் வடபகுதி களை மீட்டுக் கொள்ளுவதிலேயே நோக்கமாக இருந்து இறுதியில் அவர்களுடன் போரிட்டுத் தொண்டைமண்டலத்தைத் தன் குடைக்கீழ் இணைத்துக்கொண்டான். காஞ்சிபுரத்தில் தன் பொன்மாளிகையில் அவன் உயிர் துறந்தான். அதனால் அவனுக்குப் 'பொன்மாளிகைத் துஞ்சிய தேவன்' என்று ஒரு பெயர் ஏற்பட்டது. அவனுடைய அரசியர் இருவருள் வான வன்மாதேவி என்பவள் மலையமான் பரம்பரையில் வந்தவள். இந்திய வரலாற்றிலேயே ஈடிணையற்ற சீரும் சிறப்பும் பெற்று ஓங்கிய முதலாம் இராசராச சோழனின் தாய் இவள். அவள் தன் கணவனுடன் உடன்கட்டையேறி உயிர் துறந்தாள். அவள் மகளான குந்தவை பிராட்டியார் தஞ்சைப் பெருவுடையார் கோயிலுள் அவளுக்காகச் சிலை ஒன்று எடுப்பித்துள்ளாள். மற்றொருத்தி சேர நாட்டினள். இவள் கி. பி. 1001 வரையில் உயிர் வாழ்ந்திருந்தாள்.

வீரசோழியம் என்னும் இலக்கண நூலின் உரையாசிரியர் சுந்தர சோழனுக்குப் புகழ் மாலைகள் சூட்டியுள்ளார்.[12] இம் மன்னனுக்கும் தென்னாட்டுப் பௌத்த சங்கத்துக்கு மிடையில் தொடர்ந்து நட்புறவு வளர்ந்து வந்திருந்ததாகத் தெரிகின்றது.

சுந்தரசோழனின் இறுதி நாள்கள் துன்பத்தில் தோய்வுற்றன. முதலாம் பராந்தகனின் இரண்டாம் மகனுக்குப் பரகேசரி மதுராந்தகன் உத்தம சோழன் என்றொரு மகன் இருந்தான். பராந்தகனின் மூன்றாம் மகனான அரிஞ்சயன் கால்வழி வந்தவன் இரண்டாம் ஆதித்தன். எனவே, இயல்பாகத் தனக்குக் கிடைக்க வேண்டிய அரசுரிமையை அவ்வாதித்தன் பறித்துக்கொண்டான் என்று எண்ணி எண்ணி மனங் கருகினான் உத்தம சோழன். திடுமென ஒரு நாள் ஆதித்த சோழன் கொலையுண்டு இறந்து விட்டான். தன் மகனின் அகால மரணத்துக்கு மனமுடைந்த

12. வீரசோழி. யாப். செய். 11.

வனாய்ச் சுந்தரசோழனும் தொடர்ந்து விண்ணுலகெய்தினான். அவனை யடுத்து உத்தம சோழன் அரசுகட்டில் ஏறினான். சோழனைக் கொலை செய்தவர்கள் இன்னார் எனப் புலன்கண்டு பிடித்து அவர்களை ஒறுக்கும் முயற்சியை உத்தம சோழன் தன் ஆட்சிக் காலம் முழுவதிலும் எடுக்கவே இல்லை. சோழன் என்பான் ஒருவனும் அவன் தம்பியும் பாண்டியன் தலைகொண்ட கரிகாற் சோழனைக் கொலை செய்தார்கள் என்றும் அக் குற்றத்துக்குத் தண்டனையாக அவர்களுடைய உடைமைகளும், அவர்களுடைய சுற்றத்தாரின் உடைமைகளும் பறிமுதல் செய்யப்பட்டனவென்றும், பிறகு விற்கப்பட்டனவென்றும் இராசகேசரி வர்மன் (முதலாம் இராசராசன்) பேரில் வெளியான கல்வெட்டு (கி. பி. 988)[13] ஒன்று தெரிவிக்கின்றது. எனினும், இக் கொடுங் கொலைக் குற்றத்தில் உத்தம சோழனுக்கும் பெரும் பங்கு உண்டு என்று வரலாறு வற்புறுத்துகின்றது.

பலவான கல்வெட்டுகளிலிருந்தும் செப்பேடுகளிலிருந்தும் உத்தம சோழனின் ஆட்சியைப் பற்றிய குறிப்புகள் பல கிடைத்துள்ளன. அவன் காலத்தில் வெளியிடப்பட்ட சோழ நாணயம் ஒன்றும் கண்டெடுக்கப்பட்டுள்ளது. அதன்மேல் 'உத்தம சோழன்' என்னும் பெயர் கிரந்த எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது.

சென்னைப் பொருட்காட்சி சாலையில் வைக்கப்பட்டுள்ள உத்தம சோழனின் செப்பேடு ஒன்று (கி. பி. 984-5)[14] அம் மன்னனைப் பற்றியும், அவனுடைய அரசிமார்களைப் பற்றியும், ஆட்சியைப் பற்றியும் பல செய்திகளைத் தெரிவிக்கின்றது. அச் செப்பேட்டில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகள் மிகவும் அழகாக விளங்குகின்றன. அம்பலவன் பழுவூர் நக்கன் என்பான் ஒருவன், குவலாளத்தைச் (கோலாரை) சேர்ந்தவன், உத்தம சோழனுக்குப் பெருந்தரத்துப் பணியாளனாகத் தொழில் புரிந்து வந்ததாகத் திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டுகள் சில தெரிவிக்கின்றன. திருநாவுக்கரசரின் பாடலைப்பெற்ற விசயமங்கலத்துக் கோயிலை இவன் கற்றளியாக மாற்றியமைத்தான். இவன் மிகச் சிறந்த ஆட்சித் திறனும் இனிய பண்பாடுகளும் வாய்ந்தவன் என அறிகின்றோம். முதலாம் இராசராசன் காலத்திலேயே இவன் சோழர் பணியில் அமர்ந்திருந்தவன். இவனுடைய திறமையைப் பாராட்டி உத்தமசோழன் இவனுக்கு 'விக்கிரமசோழமாராயன்'

13. Ep. Ind. XXI. No. 27.
14. S. I. I. III, No. 128.

என்ற விருது ஒன்றை வழங்கினான். இவனுக்கு இராசராசனே 'மும்முடிச் சோழன்' என்றும், 'இராசராசப் பல்லவராயன்' என்றும் விருதுப் பெயர்களைச் சூட்டியிருந்தான்




உத்தம சோழனுக்குப் பல மனைவியர் இருந்தனரெனக் கல்வெட்டுகள் மூலம் அறிகின்றோம். அவர்களுள் உரத்தாயன் சொரப்பையார் என்பவள் பட்டத்தரசியாக விளங்கினாள். அவள் கன்னட நாட்டு இளவரசி போலும். அவளுக்கு அக்கிரமகா தேவியார் என்றும் மூத்த நம்பிராட்டியார் என்றும் வேறு பெயர் களும் உண்டு. இவையன்றி அவள் திரிபுவன மகாதேவியார்

என்ற விருதுப் பெயர் ஒன்றையும் ஏற்றிருந்தாள். உத்தம சோழனின் அரசிகள் அனைவருமே கோயில்களுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளனர். உத்தம சோழனுக்கு மதுராந்தகன் கண்ட ராதித்தன் என்று ஒரு மகன் இருந்தான். இவன் பிற்பாடு முதலாம் இராசராசன் காலத்தில் மிகவும் உயர்ந்ததோர் அரசாங்கட் பொறுப்பில் அமர்த்தப்பட்டான்.

# 13. சோழப் பேரரசின் வளர்ச்சியும் வீழ்ச்சியும்

## மாமன்னன் முதலாம் இராசராசன் (கி.பி. 985-1014)

உத்தம சோழனுக்குப் பிறகு இராசராசன் அரியணை ஏறினான். இவன் பல்லாண்டுகள் இளவரசனாக அமர்ந் திருந்து, ஆட்சிப் பொறுப்புகள் பலவற்றை ஏற்று நடத்தி அரசியலில் ஆழ்ந்த அனுபவமும், ஆற்றலும், நுண்ணறிவும் வாய்க்கப் பெற்றிருந்தான். சோழப் பரம்பரையின் பேரையும் புகழையும் பன்மடங்கு உயர்த்திவிட்டவன் இராசராசன்தான். இவன் காலத்திலும், இவன் மகன் இராசேந்திரன் காலத்திலும் தமிழரின் மறமும் பண்பாடுகளும் கடல் கடந்து சென்று மக்கள் கருத்தைக் கவர்ந்தன. இராட்டிரகூடரின் படையெடுப்பு களினால் திறனிழந்து வளமிழந்து சுருங்கிவிட்ட சோழ நாட்டை மீண்டும் விரிவுற்று மிகப் பெரியதொரு பேரரசாக வரலாற்றில் திகழவைத்த பெருமை முதலாம் இராசராசனையே சாரும். இப் பேரரசன் தன் வாழ்க்கையில் எய்திய மாபெரும் வெற்றிகளை நோக்கும்போது, இவன் நெடுந்தோற்றமும், உடற்கட்டும், மேனியழகும், பேராற்றலும், நுண்ணறிவும், கலைப் பயிற்சியும், நிருவாகத்திறனும் வாய்க்கப்பெற்றிருக்க வேண்டும் என்று எளிதில் ஊகித்தறியலாம்.

இராசராசன் தன் குடும்பத்தைப் போற்றிப் புரந்தான். இவனுக்குப் பதினைந்து மனைவியர் இருந்தனர். எனினும், தந்திசக்தி விடங்கி என்பவளே பட்டத்தரசியாகத் திகழ்ந்தாள். இவளுக்கு உலகமகாதேவி யென்றும் ஒரு பெயர் உண்டு. திருவிச னூர்க் கோயிலில் இராசராசன் துலாபார விழா எடுத்தபோது இவள் இரணியகருப்பம் என்னும் விழா எடுத்தாள். இவ்விரு விழாக்களிலும் கிடைத்த பொன்னைக் கொண்டு தந்திசக்தி விடங்கியானவள் திருவலஞ்சுழியில் கோயில் ஒன்று எடுப் பித்தாள். முதலாம் இராசேந்திரனைப் பெற்றெடுத்த பெருமைக்குரியவள் வானவன் மகாதேவி என்கிற திரிபுவன மகாதேவியாவாள். இராசராசனின் தமக்கையார் குந்தவை

என்னும் ஆழ்வார் பராந்தகன் குந்தவை பிராட்டியார் ஆவாள். இவள் வல்லவரையர் வந்தியதேவனின் மனைவி. குந்தவைமேல் இராசராசன் குடும்பத்தில் அளவிறந்த அன்பும் நன்மதிப்பும் சொரியப்பட்டன. தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் இராச ராசன் வழங்கிய நிவந்தங்களையடுத்து இவளுடைய நிவந்தங்கள் தாம் இடம் பெறுகின்றன. இராசராசனின் பெண்மக்கள் மூவருள் சளுக்க விமலாதித்தனின் மனைவியான குந்தவை ஒருத்தி; மற்றொருத்தி மாதேவடிகள். மகள் குந்தவை மீதும், உத்தம சோழனின் அன்னையாரான செம்பியன் மாதேவி யிடத்தும் இராசராசன் பேரன்பைப் பொழிந்து வந்தான்.

தான் சோழநாட்டின் அரியணை ஏறியவுடனே 'இராச கேசரி அருண்மொழி' என்றும், 'மும்மடிச்சோழன்' என்றும் சில விருதுகளைத் தன் பேருடன் இணைத்துக் கொண்டான். மும்மடி என்றால் மும்முறை சோழன் என்று பொருள். இரும்பு, நூறுமடி என்ற விருதுகளையும் இவன் தன் ஆட்சிக்காலத்தின் இரண்டாம் ஆண்டிலிருந்து முப்பத்தொன்றாம் ஆண்டுவரையில் ஏற்றுக்கொண்ட செய்திகளைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. கல்வெட்டு மெய்க்கீர்த்திகளில் மன்னனின் ஆட்சியின் வர லாற்றைச் சேர்த்து எழுதும் வழக்கம் இவன் காலத்திற்றான் முதன்முதல் தொடங்குகின்றது. இவ் வழக்கத்தைப் பின்வந்த மன்னரும் பின்பற்றி வந்தனர். இராசராச சோழனின் அரசியலைப் பற்றிய செய்திகள் பலவற்றைத் தெரிந்துகொள்ளு வதற்கு இம் மெய்க்கீர்த்திகள் பெரிதும் துணைபுரிகின்றன. இம் மெய்க்கீர்த்திகள் கூறும் செய்திகளை உறுதி செய்யக்கூடிய பிற சான்றுகள் ஒன்றேனும் இப்போது கிடைத்திலது. இராச ராசனின் இருபத்தொன்பதாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு ஒன்று,

'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்,
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி,
வேங்கை நாடும் கங்கை பாடியும்,
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்,
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்,
முரட்டெழில் சிங்களர் ஈழமண் டலமும்,
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்,
முன்னீர்ப் பழந்தீவு பன்னீரா யிரமும்
திண்திறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டும்

தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வன்மரான
ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பது
வரை...'

என்று கூறி மெய்க்கீர்த்தியானது அவன் கொண்ட வெற்றி களையும் விளக்குகின்றது. மும்மடிச் சோழன், சோழ மார்த் தாண்டன், சயங்கொண்டான், பாண்டிய குலாசனி, கேரளாந் தகன், சிங்களாந்தகன், தெலிங்ககுலகாலன் என்பவை இராச ராசன் ஏற்றுக்கொண்ட விருதுகளில் சில. இவை யாவும் அவ னுடைய வெற்றிப் பெருமைகளை எடுத்துக் காட்டுகின்றன.

சோழநாட்டின் மணிமுடி புனைந்துகொண்டவுடனே இராசராசன் அண்டை நாடுகளை வென்று சோழநாட்டின் எல்லையை விரிவுபடுத்தும் வீரச் செயலில் ஈடுபடலானான். முதன்முதல் அவன் மேற்கொண்ட திக்குவிசயமானது தென் பாண்டி நாட்டுப் போருடன் தொடங்கப் பெற்றதென்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றன. பாண்டியரும், சேரரும், சிங்களரும் என்றுமே சோழரை எதிர்த்துப் போரிடு வதென்று ஓருடன்படிக்கை செய்து கொண்டிருந்தார்கள். இராச ராசன் காலத்திலும் இவ் வுடன்படிக்கை செயலில் இருந்துவந்தது. எனவே, இராசராசன் முதன்முதல் பாண்டியன் மேலும், சேரன் மேலும் போர் தொடுத்தான். அப்போது அமரபுசங்கன் பாண்டி நாட்டு அரியணையையும் பாஸ்கர ரவிவர்மன் திருவடி என்பான் (கி.பி. 964-1021) சேரநாட்டு அரியணையையும் அணிசெய்து வந் தனர். இராசராசன் தொடக்கத்தில் கேரளத்தில் விழிஞும் என்ற இடத்தைக் கைப்பற்றினான். பிறகு காந்தளூர்ச்சாலை என்ற இடத்தைத் தாக்கி வென்று அங்கு அணிவகுத்து நின்ற மரக்கலங் களையெல்லாம் அழித்தான். சாலை என்னும் இடம் இப்போது திருவனந்தபுரத்தின் ஒரு பகுதியாக உள்ளது என்று சிலர் கருதுவர். ஆனால், அது உண்மையில் அந் நகருக்குத் தெற்கில் பதினாறு கிலோமீட்டர் தொலைவில் உள்ள ஓர் இடமாகும்.

இராசராசனின் மெய்க்கீர்த்திகள் அனைத்தும் அம் மன்னன் பெயருக்கு முன்பு 'காந்தளூர்ச்சாலைக் கலமறுத்தருளிய' என்னும் அடைமொழியைக் கொண்டே விளங்குகின்றன. இவ் வடைமொழிச் சொற்கள் இராசராசனின் நான்காம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டுகளிலேயே காணப்படுகின்றன. அப் பேரர சன் தன் வாழ்க்கையில் பெற்ற வெற்றி இஃதே போலும். இவ் விருது எந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றது என்பதைப் பற்றி

ஆய்வாளரிடையே ஆழ்ந்த கருத்து வேறுபாடுகள் இருந்து வருகின்றன. 'இராசராசன் காந்தளூரில் மணிமண்டபம் ஒன்று கட்டினான்' என்று ஒரு கருத்து முதன்முதல் நிலவி வந்தது. பிறகு காந்தளூரில் அரசன் கலம் ஒன்றைத் துண்டாக்கினான் என்று ஒரு கருத்தும் ஆய்வாளரினடயே தோன்றிற்று.[2] காந்தளூர்த் துறைமுகத்தில் மன்னன் கலங் (கப்பல்)களை அழித்தான் என்று கொள்ளுவதையே ஆய்வாளர் பலரும் ஏற்றுக்கொண்டார்கள்; 'காந்தளூர் அறச் சாலையில் சோறு அடுவதை மன்னன் நிறுத்திவிட்டான்' என்ற கருத்தும்,[3] 'அரசன் காந்தளூர்ச் சோற்றுச் சாலையில் உணவு வழங்க வேண்டிய முறையை நிருணயித்துத் திட்டஞ் செய்தான்' என்ற கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் கருத்தும் ஏலாவென ஒதுக்கப்பட்டன. காந்தளூர்ச் சாலையில் கலமலறுத்தருளிய விருதை முதலாம் இராசராசனே யன்றி, அவனுக்குப் பின் முதலாம் இராசேந்திரன்,[4] முதலாம் இராசாதிராசன்,[5] முதலாம் குலோத்துங்கன்[6] ஆகிய மன்னரும், சடாவர்மன் பராந்தக பாண்டியனும்[7] ஏற்றுக்கொண்டுள்ளனர்.

பழங்காலந்தொட்டே காந்தளூர் என்பது சிறந்ததோர் இடமாக விளங்கி வருகின்றது. சுவரன் மாறன் என்ற முத்தரைய மன்னன் ஒருவன் காந்தளூரில் மாற்றானுடன் போராடிப் பெரு வெற்றி கண்டான் என்று செந்தலைக் கல்வெட்டு ஒன்று[8] கூறுகின்றது. காந்தளூர்ச் சாலை என்னும் சொற்றொடர் ஆய்குல வேந்தன் கருநந்தடக்கன் என்பவன் பொறிப்பித்த செப்பேடு ஒன்றிலும் (கி.பி. 868) காணப்படுகின்றது. காந்தளூரில் உள்ள சாலையை மாதிரியாகக்கொண்டு அதைப் போலவே மற்றொரு சாலையைப் பார்த்திவசேகரபுரம் என்னும் இடத்தில் அவன் நிறுவியதாக அச் செப்பேட்டுச் சாசனம் கூறுகின்றது.[9] இந்தச் செய்தியைக் கொண்டு காந்தளூரில் புகழ் பெற்ற சாலை ஒன்று இருந்ததென்றும், அதையே தன் குறிக்கோளாகக் கொண்டு கருநந்தடக்கன் வேறு ஊரிலும் சாலையை அமைத்தான் என்றும் அறிகின்றோம். காந்தளூர்ச் சாலையில் என்ன நிகழ்ந்து வந்தது என்று தெரியவில்லை. ஆனாலும், கருநந்தடக்கன் செப்பேட்டில், அரசன் சிறிது சிறிதாக மின்சிறை என்னும் ஊர்ச் சபையாரிடமிருந்து சில விளைநிலங்களைப் பெற்றான்

1. S.I.I. p. 65.
2. S.I.I. II. p. 35. 37. 241-47.
3. T.A.S. II. pp. 3 & 4.
4. Ep. Rep. 368/17.
5. S.I. III. p. 56.
6. விக். சோ. உலா, 24.
7. T.A.S.I. p. 18.
8. Ep. Ind. XIII. p. 146.
9. T.A.S. I. p. 1-14.

என்றும், அதற்கு ஈடாக வேறு சில நிலங்களை அளித்தான் என்றும், அந் நிலங்களைக்கொண்டு பார்த்திவசேகரபுரம் என்னும் கிராமத்தை நிறுவி, அக் கிராமத்தில் விஷ்ணு பட்டாரகருக்கு ஒரு கோயிலை எழுப்பினான் என்றும், காந்தளூர் மரியாதையால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்கு ஒரு சாலையும் செய்து கொடுத்தான் என்றும் சில குறிப்புகள் காணப்படுகின்றன. மேலும் அச் செப்பேட்டில், 'இச்சாலைக்குப் பெய்த கலத்தில் பவிழிய சரணத்தார் உடைய கலம் நாற்பத்தைந்து; தயித்திரியச் சரணத்தார் உடைய கலம் முப்பத்தாறு; தலவகார சாணத்தார் உடைய கலம் பதினான்கு. இனி வருங்காலம் மூன்று சரணத்தார்க்கும் ஒப்பாது'—என்னும் செய்தியும் காணப்படுகின்றது. எனவே, பார்த்திவசேகர புரத்துச் சாலை என்பது மாணவர்கள் தங்கிக் கல்வி கற்று வந்த நிறுவனம் என்று அறிகின்றோம். அதைக் கொண்டு இச் ச்சாலைக்கு முன்மாதிரியாக அமைந்திருந்த காந்தளூர்ச் சாலை யும் ஒரு கல்வி நிறுவனமாக இருந்திருக்கலாம் என்று டி. என். சுப்பிரமணியம் கருதுகின்றார்.[10] அவர் கருத்துக்குப் பல சான்று களையும் கொடுத்துள்ளார். இவ்விரு சாலைகளிலும் மாண வர்கள் தங்கியிருந்து, உணவு கொண்டு கல்வி பயின்று வந்துள் ளனர். தற்காலத்துப் பல்கலைக்கழகங்களுக்கு இச் சாலை களை ஒப்பிடலாம். பிறருடைய தலையீடு ஏதும் இன்றியே இச் சாலைகள் நடைபெற்று வந்தன. மாணவருக்குக் கல்வி பயிற்றி வந்த குருகுலங்கள் நாட்டில் ஆங்காங்கு நடைபெற்று வந்தன. மாணவர்கள் தங்கிக் கல்வி பயிலுவதற்கு இறையிலி நிலங்கள் நிவந்தங்களாக விடப்பட்டன. கல்வெட்டுகளில் காணப்படும் சாலை, சாலாபோகம் என்னும் சொற்கள் அக் கல்வி நிறுவனங்களையும், அந் நிவந்தங்களையுமே குறிப்பனவாகக் கொள்ளவேண்டியுள்ளது. பார்த்திவசேகரபுரத்துச் சாசனம் வேறு சில செய்திகளையும் தெரிவிக்கின்றது. அவ்வூர்ச் சாலை யில் கல்வி பயிற்றிய சட்டர்கள் (ஆசிரியர்கள்) சேர, சோழ, பாண்டியரின் ஆட்சியில் பங்கு கொள்ளும் பயிற்சியும் அறிவும் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும் என்றும், விதிக்கப்பட்ட சில ஒழுங்கு முறைகளுக்கு உட்பட்டு அவர்கள் படைக்கலங்கள் தாங்கும் தகுதி பெற்றிருக்க வேண்டுமென்றும், வேதங்கள் வியாகரணங்கள் மட்டுமன்றி அரசியலிலும் போர்களிலும் பெற வேண்டிய பயிற்சியை மாணவர்கள் சுவடிகளின் வாயிலாகவும், நடைமுறையிலும் அளிக்கப்பட்டு வந்தனர் என்றும் அச் சாசனத்

10. S. I. Temp. Inscrpts. Vol. III. (2)I. p. 15. Tamil portion Edn. Govt. Orl. Mss. Library.

தால் அறிகின்றோம். காந்தளூர்ச் சாலையும் பார்த்திவசேகர புரத்துச் சாலையும் அரசாங்கத்தின் பொருளுதவியின்றியே நடைபெற்று வந்திருக்க வேண்டும்.

தஞ்சாவூர் மாவட்டத்தில் ஏறக்குறைய இக் காலத்தைச் சேர்ந்ததாகக் காணப்படும் கல்வெட்டு ஒன்றிலும், 'கலமறுத்த' என்னும் சொல் ஆளப்பட்டுள்ளது.[11] அக் கல்வெட்டு இராசகேசரி என்பவனுடைய பதினான்காம் ஆட்சியாண்டில் நாட்டப்பட்டது. ஆண்டுதோறும் மார்கழி மாதம் திருவாதிரை நாள் இரவு திருச்சேனூர் மகாதேவர் முன்பு 'ஜைமினிகள் சாமவேதத்து மேற்பாதத்து ஒரு துருவும், கீழ்ப்பாதத்து ஒரு துருவும், கரைப்பறிச்சு பட்டம் கடத்துப் பிழையாமே சொன்னார்'க்குப் பரிசு அளிக்க ஒருவன் இருபது காசு பொன் அளித்த செய்தியை அக் கல்வெட்டுக் கூறுகின்றது. அந்த இருபது காசு முதலுக்கு ஆண்டுதோறும் கிடைத்த பலிசை மூன்று காசையும் 'ஒருகால் கொண்டார் அல்லாதாரை மெய்க்காட்டுத் தீட்டினார் எல்லாரும் தம்மில் அஞ்சு புரியினும் சொல்லிக் கலமறுத்து நல்லாராயினார் ஒருவருக்கு எம்பெருமானே அருள வேண்டும்' என்பது ஏற்பாடு. முன் ஆண்டுகளில் பரிசு பெற்றவர் பின் ஆண்டுகளில் போட்டியிட முடியாது என்று இதனால் அறிகின்றோம். போட்டியில் வெற்றி பெற்றவர் 'கலமறுத்து நல்லார் ஆனார் ஒருவர்' என்று கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றார். இவ்விடத்தில் 'கலமறுத்து' என்னும் சொற்களுக்குச் 'சாசனத்தால் அல்லது ஓயாமல் வரையறுக்கப்பட்ட' என்னும் பொருள் பொருத்தமாகக் காணப்படுகின்றது.

முதலாம் இராசராசன் ஆட்சியின் தொடக்கத்திலே அவனுக்கும், காந்தளூர்ச் சாலை அறங்காவலருக்குமிடையே கருத்து மாறுபாடுகள் தோன்றியிருக்கவேண்டும். அச் சாலை நடைமுறையில், தான் தலையிட்டுச் சில திருத்தங்களைச் செய்ய அம் மன்னன் முனைந்திருக்கலாம். அரசு கட்டுதிட்டங்கட்கு உட்படாமல் இயங்கி வந்த காந்தளூர்ச் சாலை அவனுடைய தலையீட்டை வெறுத்து அவனுக்கு எதிர்ப்புக் காட்டியிருக்கக் கூடும். அப்பேரரசன் தன் படை வலியைப் பயன்படுத்தி அச் சாலையைத் தன் வழிக்குத் திருப்பிக் கொண்டுவந்தனன் என அறிகின்றோம்.

கருநந்தடக்கன் செப்பேடுகளில் சாலை நிறுவிய ஆண்டு கி.பி. 868 என்று குறிக்கப்பட்டுள்ளது. ஆனால், அதில் பொறிக்கப்

11. S.I.I. XIII. No. 250.

பட்டுள்ள வடிவம் கி.பி. 868ஆம் ஆண்டுக்குப் பிந்தியதாகக் காணப்படுகின்றது. எழுத்து வடிவமும் இராசராசன் காலத்திய தமிழ் எழுத்து வடிவமாகக் காணப்படுகின்றது. அவன் காலத்துக்கு முன்பு வட்டெழுத்துகளே அப் பகுதியில் வழங்கி வந்தன. அச் சாசனம் கருநந்தடக்கன் காலத்ததாக இருந் திருக்குமானால் அது வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். இக் காரணத்தாலும், வேறு சில காரணங்களாலும் இச் சாசனமும் முதலாம் இராசராசன் காலத்தில் கருநந்தடக்கன் பெயரில் வேறு ஒரு மன்னன் பொறித்துக் கொடுத்ததாகக் கொள்ளவேண்டும்.

எனவே, பார்த்திவசேகரபுரத்திலிருந்த சாலையைப் போலவே அதற்கு முன்மாதிரியாக அமைந்திருந்த காந்தளூர்ச் சாலையையும் இராசராச சோழன் தன்னுடைய ஆணையின் கீழ்க் கொண்டுவந்து, அதனிடம் இருந்த படை பலத்தைக் குறைத்துச் சாலையின் நடைமுறையிலேயே பெரிய மாறுதல் களைச் செய்து சாலையைச் சீர்திருத்தி அமைத்திருக்க வேண்டும். முதலாம் இராசராசனின் மெய்க்கீர்த்திகளில், 'காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளிய' என்னும் சொற்றொடர்கள் அவனு டைய இந்தச் சிறப்பான பணிகளைக் குறிப்பிடுகின்றன என்று கொள்ளுவதே பொருத்தமானதெனக் கொள்ளலாம்.

இராசராசன் அடுத்துக் கொல்லத்தைக் கைப்பற்றினான். பாண்டி நாட்டின்மேல் வெற்றி காண்பதையே தம் பெரு நோக்கமாகக் கொண்டிருந்தவர்கள் சோழர்கள். எனவே, இராசராசன் பாண்டி நாட்டின்மேல் தன் படைகளைத் திருப்பி னான்; மதுரையைத் தாக்கி அழித்தான்; பாண்டியன் அமர புசங்கனின் செருக்கை ஒடுக்கினான். பாண்டியனுக்குப் பக்கபல மாக நின்று வந்த சேரனின் போர்த் திறனையும் ஒடுக்கினா லன்றிப் பாண்டி நாட்டு வெற்றி முழுப் பலனைத் தாராதெனக் கண்ட இராசராசன் சேர நாட்டின்மேல் படையெடுத்தான். குடநாடு அல்லது குடமலை நாட்டைக் கைப்பற்றி உதகை என்ற மலைக்கோட்டையை அவன் தகர்த்தான். ஆங்குத் தன் ஆட்சியை நிறுவிய பின்பு தான் பிறந்த நாண்மீனாகிய சதயந் தோறும் கேரளத்தில் விழா எடுப்பிக்க ஏற்பாடுகள் செய்தான். பதினெட்டுக் காடுகளைக் கடந்து சென்று, தன் தூதுவனுக்காக இராசராசன் உதகையை முற்றுகையிட்டுக் கைப்பற்றினான் என்று ஒட்டக்கூத்தர் தம் மூவருலாவில் கூறுகின்றார். இராச ராசன் தூதுவனைச் சேரன் இழித்துப் பேசி இருக்க வேண்டும் என்றும், அதைக் கேட்ட சோழன் அதையே காரணமாகக்

கொண்டு உதகையைத் தாக்கிக் கைப்பற்றிகொண்டான் என்றும் ஊகிக்க வேண்டியுள்ளது.

குடநாட்டுப் போர்களில் சோழரின் படைகட்குத் தலைமை பூண்டு பல போர்களில் ஈடுபட்டு வெற்றிவாகை சூடி இராசராசனுக்குப் பேரையும் புகழையும் ஈட்டிக் கொடுத்தவன் அவனுடைய மகனான இளவரசன் இராசேந்திரன். இராசராசனும் தன் மகன் கொண்ட வெற்றிகளைப் பாராட்டி வேங்கி மண்டலத்துக்கும் கங்க மண்டலத்துக்கும் அவனை 'மகாதண்ட நாயக'னாகப் பதவியில் உயர்த்தினான். 'பஞ்சவன் மாராயன்' என்னும் விருது ஒன்றுக்கும் இராசேந்திரன் உரியவனாக்கப் பெற்றான். மேலும் இராசேந்திரன் துளுவரையும் கொங்கணரையும் மலையாளரையும் புறமுதுகிடச் செய்தான்; தெலுங்கரையும் இரட்டிகையரையும் வென்று வாகை சூடினான். இராசராசன் கொண்ட வெற்றிகள் அனைத்தினும் சிறந்து விளங்குவது அவன் ஈழத்தைக் கைப்பற்றியதாகும். அவன் இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1014-ல்) தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்குச் சிங்களத்துச் சிற்றூர்கள் பலவற்றை நிவந்தமாக வழங்கினான். 'இராமன் குரங்குகளின் துணைகொண்டு இலங்கைக்கு வழி அமைத்துக் கூரிய அம்புகளினால் இராவணனைக் கொன்றான். ஆனால், இராசராசன் தன் ஆற்றல் மிக்க கடற்படையைக் கொண்டு இலங்கையைக் கைப்பற்றி, அதற்கு எரியூட்டித் தன் போர்த் திறனில் தான் இராமனையும் விஞ்சியவனெனக் காட்டிக்கொண்டான்' என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அவனைப் புகழ்ந்து பாராட்டுகின்றன. இராசராசன் படையெடுப்பின்போது ஐந்தாம் மகேந்திரன் என்பவன் சிங்களத்துக்கு மன்னனாக இருந்தான். இலங்கையில் கேரளரும் கருநாடரும் சேர்ந்திருந்த கூலிப் படைகள் கிளர்ச்சி ஒன்றில் ஈடுபட்டன. அக் காரணத்தினால் மகேந்திரன் இலங்கையில் காடும் மலையும் செறிந்த ரோகணம் என்ற இடத்துக்கு ஓடி ஒளிந்து வாழ்ந்து வந்தான். அந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்ட இராசராசன் இலங்கையின் வடபகுதியைக் கைப்பற்றி அதற்கு மும்முடிச் சோழ மண்டலம் என்று பெயர் சூட்டி அதைச் சோழ நாட்டு மண்டலங்களுள் ஒன்றாக இணைத்துக்கொண்டான். ஆயிரம் ஆண்டுகட்கு மேலும் இலங்கையின் தலைநகராக விளங்கி வந்த அநுராதபுரத்தை இராசராசன் தாக்கியழித்துவிட்டான். பொலன்னருவையை ஈழத்தின் தலைநகராக்கினான். பிற்காலத்தில் முதலாம் விசயபாகு என்ற சிங்களத்து மன்னன் தன் நாட்டைச் சோழரிடமிருந்து மீட்டுக்கொண்டபோது அவனுடைய முடி

சூட்டு விழா அநுராதபுரத்திலேயே நடைபெற்றது. எனினும், அவன் தொடர்ந்து பொலன்னருவையையே தன் தலைநகராக வும் கொண்டு ஆட்சிபுரியலானான். இராசராசன் பொலன் னருவைக்கு ஜனநாத மங்கலம் என்று புதுப் பெயர் சூட்டி அங்குக் கருங்கல்லாலும் சலவைக் கல்லாலும் கண்கவரும் எழிலையுடைய சிவாலயம் ஒன்றை எழுப்பினான். அவனுடைய பெயராலேயே இராசராசேச்சுரம் அல்லது இராசராசபுரம் என்ற கோயில் ஒன்றைச் சோழரின் பணியாளன் தாழிகுமரன் என்பான் எடுப்பித்தான். இராசராச சோழன் தொடர்ந்து மேலைக் கங்கரின் நாட்டின்மேல் தன் போர் நோக்கத்தைச் செலுத்தி னான். அந் நாடு கங்கபாடி, தடிகைபாடி, நுளம்பபாடி என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அம் மூன்றையும் இராசராசன் வென்று சோழப்பேரரசின் மண்டலங்களாக அவற்றை இணைத்துக்கொண்டான். அவை கி.பி. 1117 வரை யில் சோழரின் ஆட்சிக்குட்பட்டுக் கிடந்தன.

கீழைச் சளுக்கர்களுள் உள்நாட்டுப் பூசலும் போரும் குமுறிக்கொண்டிருந்தன. பத்தாம் நூற்றாண்டில் வேங்கி மன்னன் தன் அரசாற்றல் அழிந்து முடங்கிக் கிடந்தான் (கி.பி. 973-999). இராசராசன் அவனுக்குப் படைத்துணை வழங்கி மீண்டும் வேங்கியின் அரியணையின்மேல் ஏற்றிவைத்தான். அப்போது மேலைச் சளுக்கரின் மன்னனாக இருந்தவன் சத்தி யாசிரயன் என்பவன். அவன் கீழைச் சளுக்கரையும், மேலைச் சளுக்கரையும் ஒன்றுபடுத்தி ஒரே நாடாக அதைத் தன் குடைக் கீழ்க் கொண்டுவரத் திட்டமிட்டுக் கொண்டிருந்தான். இராச ராசன் இத் திட்டத்தைக் குலைக்கும் நோக்கத்தின் அடிப்படை யிற்றான் சத்திவர்மனை மீண்டும் வேங்கியின் மன்னனாக முடி சூட்டுவித்தான் (கி. பி. 999). வேங்கிச் சளுக்கரிடம் திறை கொண்டு அவர்கள்மேல் தனக்கேற்பட்ட ஆதிக்கத்தை வெளிப் படையாகவே காட்டிக்கொண்டான். வேங்கி நாட்டுக் கிளர்ச்சி களையும் உள்நாட்டுப் போரையும் ஒரு முடிவுக்குக் கொண்டு வந்து சோழப் பேரரசன் நாடு முழுவதும் அமைதியை நிலைநாட் டினான். சோழரின் படைத்துணைகொண்டு மீண்டும் மணிமுடி தரித்துக் கொள்ளும் வாய்ப்பினைப் பெற்ற வேங்கி மன்னன் முதலாம் சத்திவர்மனுடைய தம்பியான விமலாதித்தனுக்கு (கி.பி. 1011-1018) இராசராசனின் மகள் குந்தவை மணமுடிக்கப் பெற்றாள். கீழைச் சளுக்க நாடும் சோழநாடும் ஒன்றாக இணை யும் ஓரரிய வாய்ப்பை இத் திருமணம் உருவாக்கிக் கொடுத்தது. கீழைச்சளுக்கர்கள் வேங்கியில் அமர்ந்து முந்நூறு ஆண்டுகள் ஆட்சிபுரிந்து வந்தனர். இக் காலம் முழுவதும் அவர்கள் மேற்குத்

தக்கணத்து இராட்டிரகூடருடன் தொலையாப் பெரும்போரில் ஈடுபட்டிருந்தனர். உள்நாட்டில் அரசுரிமைக் கிளர்ச்சிகள் வேறு அவர்களை அலைக்கழித்தன. இத் தொல்லைகளினால் கீழைச் சளுக்கர்கள் தம் படையாற்றலையும், ஆக்கத்தையும் இழந்து அல்லலுற்றிருந்தனர். அழிவு காலத்தை நோக்கித் தள்ளாடிச் சென்றுகொண்டிருந்த அச் சளுக்கர்களுக்குச் சோழர்களுடன் கொண்ட இந்தத் திருமண உறவு புத்துணர்ச்சியையும், மறுவாழ்வையும் அளித்து ஊக்குவித்தது என்றால் மிகையாகாது. இத் தொடர்பினால் சளுக்கர் மட்டுமன்றிச் சோழரும் பெரும் பயன் எய்தினர். முதலாம் குலோத்துங்கன் காலத்திலும் அவனுக்குப் பின் அரசாண்ட சோழ-சளுக்கப் பரம்பரை மன்னர் காலத்திலும் சோழப் பேரரசானது மங்காத புகழுடன் தழைத்து நின்றதற்கும் இத்திருமண உறவு சிறப்பானதொரு காரணமாகும்.

மேலைச் சளுக்கர் பல நூற்றாண்டுகள் இராட்டிரகூடருக்கு அடிமைப்பட்டிருந்தனர். இரண்டாம் தைலப்பன் மிகவும் முயன்று மேலைச் சளுக்கருக்கு முழு அரசுரிமையையும் மீட்டுக் கொடுத்தான். அவர்களும் அவன் தலைமையில் வீறுகொண்டெழுந்தனர். ஆனால், இரட்டபாடி ஏழரை இலக்கம் மட்டுந்தான் அவர்களுடைய ஆணையின்கீழ் நிலைத்திருந்தது. அதனால் அவர்கள் வடக்கில் பரமாரர்களையும், தெற்கில் சோழர்களையும் எதிர்த்துப் போராடும் வழியின்றி இடருற்றிருந்தனர். எனவே, மேலைச் சளுக்கர் கீழைச் சளுக்கரைத் தம்முடன் இணைத்துக்கொள்ள எடுத்துக்கொண்ட முயற்சியனைத்தும் விழலுக்கிறைத்த நீராயிற்று. தைலப்பனையடுத்துச் சத்தியாசிரயன் அரசுகட்டில் ஏறினான். இந்நிலையில் இராசராசனின் நாட்டம் அவன் நாட்டின்மேல் தாவிற்று. அவன் தன் மகன் இராசேந்திரன் தலைமையில் படையொன்றை அனுப்பினான். சத்தியாசிரயனுடன் மேற்கொண்ட கடும்போர் ஒன்றில் இராசேந்திரன் வெற்றிகொண்டான்; இரட்டபாடி ஏழரை இலக்கத்தைக் கைப்பற்றினான். அவன் அஃதுடன் அமையாமல் நாட்டுக்கு எரியூட்டி அதை முழுவதும் அழித்துப் பார்ப்பனரையும் குழந்தைகளையும் கொன்று குவித்துப் பெண்களின் கற்பைச் சூறையாடினான் என்று சத்தியாசிரயனின் கல்வெட்டு ஒன்று (கி.பி. 1007) கூறுகின்றது. பகையரசன் நாட்டிய கல்வெட்டாகையால் இது கூறும் செய்திகளை உண்மை என்று நம்பலாகாது. நீதியிலும் நேர்மையிலும், சிவத்தொண்டிலும் மேம்பட்டிருந்த சோழமன்னனின் படைகள் இத்தகைய கொடுமைகளை மக்களுக்கு இழைத்திருக்க முடியாது. எனினும், 9,00,000 போர் வீரர்களுக்குத் தலைமை தாங்கிச் சென்ற இராசேந்திரன் ஆற்றிய போர்

மிகவும் கடுமையானதொரு கைகலப்பாக இருந்ததென்றும், அதனால் மேலைச் சளுக்கர்கட்குப் பேரிழப்பு ஏற்பட்டதென்றும் உறுதியாக நம்பலாம். இராசேந்திரனின் படைகள் சூறையாடிய செல்வங்களில் ஒரு பகுதி தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு வழங்கப்பட்டது. சத்தியாசிரயன் ஓய்ந்திருக்கவில்லை. தன் ஆற்றலையும் ஊக்கத்தையும் இழக்கவில்லை. மீண்டும் முனைப் புற்றுச் சோழருடன் போரில் இறங்கினான். போர்களில் ஓரளவு வெற்றிபெற்றுச் சோழர்களைத் துங்கபத்திரையின் தென்கரை யோடு ஒடுக்கிவிட்டான். அவனுடைய நாட்டுக்கும் சோழப் பேரரசுக்குமிடையே துங்கபத்திரையாறு எல்லையாக ஓடிற்று.

இராசராசன் முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரத்தின் மேற் கொண்ட வெற்றியே அவனுடைய வாணாளில் அவனுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும். காந்தளூர்ச்சாலைக் கல மறுக்கவும், ஈழத்தைக் கைப்பற்றிச் சோழ மண்டலமாக்கிக் கொள்ளவும் அவனுக்குத் துணைபுரிந்த மாபெரும் கடற் படைகள், இத் தீவுகளைத் தாக்கிக் கைப்பற்றவும் உதவின. முதலாம் இராசேந்திரன் பிற்காலத்தில் இப் படைகளைக் கொண்டே கடல் கடந்து சென்று அயல்நாடுகளைக் கைப்பற்றும் வாய்ப்புடையவனானான்.

இராசேந்திரன் தன் இருபத்தைந்தாம் ஆண்டில் இளவரசு பட்டம் சூட்டப்பெற்றான் (கி.பி. 1012). அதனால் இராச ராசனை யடுத்துச் சோழப் பேரரசின் மணிமுடிக்கு இவனே உரிய வனானான். புகழ் பூத்த இராசராசனின் ஆட்சியும் கி.பி. 1014-ல் முடிவுக்கு வந்தது.

சோழப் பரம்பரையிலேயே இராசராசன் மிகச் சிறந்த ஒரு வெற்றி வீரனாகத் திகழ்ந்தான்; இணையற்ற சமயப்பற்றும் கலைத்திறனும் வாய்க்கப் பெற்றிருந்தான். அவன் எழுப்பிய தஞ்சைப் பெருவுடையார் கோயிலானது சோழப் பேரரசின் பெரு மையையும், சீரையும் உலகுக்கு எடுத்துக்காட்டும் அழியாச் சின்ன மாக இன்றளவும் நிமிர்ந்து நின்று வருகின்றது. இக் கோயிலின் சிற்ப எழிலை எக்கோணத்திலும் நின்று கண்டு களிக்கலாம். இதன் விமானமும், ஒற்றைக் கல்லால் சமைக்கப்பட்ட மிகப்பெரிய நந்தியும், நுண்ணிய புடைப்போவியங்களும் காண்போர் கண் களுக்கு இனிய விருந்தாகக் காட்சியளித்து வருகின்றன. தஞ்சைப் பெருவுடையார்மீது கருவூர்த்தேவர் பாடிய திருவிசைப்பா ஒன்று ஒன்பதாம் சைவத் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது.[12]

12. ஒன்பதாந் திருமுறை, கருவூர். திருவிசை. 9.

## முதலாம் இராசேந்திரன் (கி. பி. 1012—1044)

பரகேசரிவர்மன் முதலாம் இராசேந்திரன் சோழராட்சிக்குப் புதியவனல்லன். பல ஆண்டுகள் அவன் தன் தந்தையுடன் இணைந்திருந்து போர்க் கலைகளிலும், ஆட்சிக் கலையிலும் சீரிய பயிற்சியும், தெளிவும், ஆற்றலும் வாய்க்கப் பெற்றிருந்தான். திலவு திருவாதிரையுடன் கூடியிருந்த நாளன்று இவன் பிறந்தான்.

இராசேந்திரன் சோழரின் அரியாசனத்தை முப்பத்திரண் டாண்டுகள் அணிசெய்து வந்தான். தன் ஆறாம் ஆட்சியாண் டிலேயே அவன் மகன் இராசாதிராசனுக்கு இளவரசு பட்டங் கட்டிவிட்டான். இராசேந்திரன் நடத்திய போர்களைப்பற்றியும் அவன் கொண்ட வெற்றிகளைப்பற்றியும் பல கல்வெட்டுகளும் திருவாலங்காட்டுச் செப்பேடுகளும் விரிவான செய்திகளைத் தெரிவிக்கின்றன. திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அவனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டவை (கி.பி. 1017). இச் செப்பேட்டுக் கொத்தில் முப்பத்தோர் ஏடுகள் கோக்கப் பெற்றுள்ளன.

இராசேந்திரனின் இருபத்து நான்காம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு (கி.பி. 1035-36) ஒன்று அவன் பெற்ற வெற்றிகளைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றது :

திருமன்னி வளர, இருநில மடந்தையும்.
போர்ச்சயப் பாவையும், சீர்த்தனிச் செல்வியும்
தன்பெருந் தேவிய ராகி இன்புற
நெடிதியல் ஊழியுள் இடைதுறை நாடும்
தொடர்வன வேலிப் படர்வன வாசியும்,
சுள்ளி சூழ்மதில் கொள்ளிப் பாக்கையும்
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்,
பொருகடல் ஈழத்து அரசர்தம் முடியும்,
ஆங்கவர் தேவியர் ஓங்கெழில் முடியும்,
முன்அவன் பக்கல் தென்னவன் வைத்த
சுந்தர முடியும், இந்திரன் ஆரமும்,
தெண்திரை ஈழ மண்டலம் முழுவதும்,
எறிபடைக் கேரளன் முறைமையின் சூடும்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்,
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவல் பல்பழந் தீவும்,
செருவிற் சினவி இருபத் தொருகால்

அரசுகளை கட்ட பரசு ராமன்
மேவரும் சாந்திமத் தீவும், அரண்கருதி
இருத்திய செம்பொன் திருத்தகு முடியும்,
பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்டு
ஒளித்த சயசிங்கன் அளப்பரும் புகழொடு
பீடியல் இரட்டை பாடி ஏழரை
இலக்கமும், நவநிதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமும்
முதிர்பட வல்லை மதுரை மண்டலமும்,
காமிடை வளைஇய நாமணைக் கோணமும்,
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்,
பாசுடைப் பழன மாசுணி தேசமும்,
அயர்வில் வண்கீர்த்தி ஆதிநகர் அகவையில்
சந்திரன் தொல்குலத்து இந்திர ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்,
கிட்டருஞ் செறிமிளை ஒட்ட விஷயமும்,
பூசுரர் சேரும்நற் கோசலை நாடும்
தன்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்,
இரண சூரனை முரணுகத் தாக்கித்,
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்,
கோவிந்த சந்தன் மாவிழந்து ஓட,
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகழற் சங்கு கொட்டன்மகி பாலனை
வெஞ்சமர் வளாகத்து அஞ்சுவித் தருளி,
ஒண்திறல் யானையும், பெண்டிர்பண் டாரமும்,
நித்தில நெடுங்கடல் உத்தர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத்து எறிபுனல் கங்கையும்,
அலைகடல் நடுவில் பலகலம் செலுத்திச்
சங்கிராம விசையோத் துங்கவர்மன் ஆகிய
கடாரத்து அரசனை வாகையம் பொருகடல்
கும்பக் கரியொடும் அகப்ப டுத்து,
உரிமையின் பிறக்கிய பெருநிதிப் பிறக்கமும்,
ஆர்த்தவன் அகநகர்ப் போர்த்தொழில் வாசலில்
விச்சா திரத்தோ ரணமும் மொய்த்தொளிர்
புனைமணிப் புதவமும், கனமணிக் கதவமும்,
நிறைசீர் விசயமும், துறைநீர்ப் பண்ணையும்,
வன்மலை யூர்எயில் தொன்மலை யூரும்,

ஆழ்கடல் அகழ்சூழ் மாயிரு டிங்கமும்,
கலங்கா வல்வினை இலங்கா சோகமும்,
காவலம் புரிசை மேவிலிம் பங்கமும்
விளைப்பந் தூருடை வளைப்பந் தூரும்
கலைதக் கோர்புகழ் தலைத்தக் கோலமும்
தீதமர் வல்வினை மதமா லிங்கமும்,
கலாமுதிர் கடுந்திறல் இலாமுரி தேசமும்
தேன்நக்கு வார்பொழில் மானக்க வாரமும்,
தொடுகடல் காவல் கடுமுரண் கிடாரமும்
மாப்பொரு தண்டால் கொண்ட....'

இக் கல்வெட்டில் காணப்பெறும் ஊர்களில் பலவற்றைக் கண்டுபிடிப்பதில் ஆராய்ச்சியாளரிடையே ஆழ்ந்த கருத்து வேற்றுமைகள் எழுந்துள்ளன. இடைதுறை நாடு என்பது இராய்ச்சூர் ஆற்று இடைவெளியாகும்; வனவாசி என்பது பாணவாசி; கொள்ளிப்பாக்கை என்பது ஐதராபாத்தின் அண் மையிலுள்ள குல்பர்கா என்னும் இடம்; மண்ணைக் கடக்கம் என்பது மானியகேதம்; ஈழம் என்பது இலங்கை; பழந்தீவுகள் என்பன மாலத் தீவுகள்; சாந்திமத் தீவு என்பது அரபிக் கடலிலுள்ளதொரு தீவாகும்; இரட்டபாடி ஏழரை இலக்கம் மேலைச் சளுக்க நாட்டின் ஒரு பகுதி; சயசிங்கன் என்பான் மேலைச் சளுக்க மன்னன் இரண்டாம் சயசிம்மன் (கி.பி. 1015-1043); முயங்கி அல்லது முசங்கி என்னும் ஊர் பழம் ஐதராபாத்து இராச்சியத்திலுள்ள மஸ்கி என்பதாகும்; சக்கரக்கோட்டம் பஸ்தாரில் உள்ளது. மதுரை மண்டலம், நாமனைக்கோட்டம், பஞ்சப்பள்ளி என்பன பஸ்தாரின் பிரிவுகளாம். பஸ்தாருக்கு மாசுணி தேசம் என்று ஒரு பெயர் உண்டு. மாசுணி தேசம் என்பது இப்போது பாகிஸ் தானத்தில் உள்ள சிந்து மாகாணத்தில் உள்ளதோர் ஊர் என்றும் கூறுவர். இவை யாவும் நாகவமிச மன்னரின் ஆட்சிக்குட் பட்டிருந்தவை. ஆதிநகர் என்பது ஒரிஸ்ஸா இராச்சியத்தி லுள்ள ஜார்ஜ் நகர் என்பதுதான். இந்திரரதன் சோமவமிச மன்னரில் ஒருவன்போலும்; ஒட்டவிஷயம் என்பது இக் காலத்தில் உள்ள ஒரிஸ்ஸா இராச்சியமாகும். கோசலை நாடு என்பது மகாநதியின் கரையோரம் அமைந்திருந்தது. தண்டபுத்தி என்பது மிதுனபுரி மாவட்டத்தில் உள்ளது. இரணசூரனும், கோவிந்தசந்த(சந்திர)னும் வங்க நாட்டுக் குறுநில மன்னராவர்; மகிபாலன் என்பவன் வங்கம், பீகார்ப் பகுதியில் அரசாண்டு வந்த பாலர் வமிசத்து முதலாம் மகிபாலன் ஆவான். சங்கு என்பவன் அவனுடைய படைத் தலைவனாகப் பணிபுரிந்தவன் போலும். தக்கண லாடம், உத்தர லாடம் என்பன தெற்கு

ராதாவும் வடக்குராதாவும் ஆம். அவையிரண்டும் சேர்ந்து கங்கைக்குத் தென்புறம் உள்ள வங்காள நாட்டின் பகுதிகளாக இலங்கிவந்தன. வங்காள தேசம் என்பது இக் காலத்திய வங்காள இராச்சியத்தின் கீழ்ப்பகுதியும் தென்பகுதியுமாம்.

சீர்விசயம் என்ற நாடு ஸ்ரீவிஜயம் என்ற புகழ்பெற்ற நாடாகும். இது சுமத்திராத் தீவில் அமைந்திருந்தது. அத் தீவின் கீழைக் கடற்கரையில் பண்ணை என்ற நாடு இருந்தது. மலையூர் என்பது ஸ்ரீவிஜயம் அல்லது பண்ணையாதல் வேண்டும். மாயிருடிங்கம் மலேயாவில் லீகாருக்கு அண்மையில் இருந்தது. அதற்குத் தெற்கில் இலங்காசோகம் விளங்கிற்று. மேவிலிம்பங்கமும், வளைப்பந்தூரும் இன்ன இடத்தில் இருந்தன என்பது அறிய முடியவில்லை. தலைத்தக்கோல மானது சிரா பூசந்தியின்மேல் இருந்த ஒரூராகும். மத மாலிங்கம் என்ற இடம் மலே தீபகற்பத்தில் பண்டன் விரிகுடா வுக்கு அண்மையில் இருந்ததெனத் தெரிகின்றது. இலாமுரி தேசம் வடசுமத்திராவின் ஒரு பகுதியாகும். இப்போது அதற்கு 'லம்ரி' என்னும் பெயர் வழங்குகின்றது. மானக்க வாரம் என்பது நிக்கோபார்த் தீவுத் தொகுதியாகும். கிடாரம் அல்லது கடாரம் என்பது பெனாங்கை அடுத்துள்ள கேடா என்னும் இடமாக இருக்கலாம் என்று ஆய்வாளர் கருது கின்றனர்.

இராசேந்திரனின் வடநாட்டுப் படையெடுப்பானது ஒரு பெரும் திக்கு விசயமாகும். வட இந்தியாவில் பல மன்னர் களை அவன் வென்று வாகை சூடினான். அவன் வட இந்தியத் திக்குவிசயத்தில் ஈடுபட்டிருந்தபோது கஜினி முகமதுவின் படையெடுப்பு ஒன்று நிகழ்ந்தது. கன்னோசி நாட்டை அப்போது ராஜ்யபாலன் என்ற மன்னன் அரசாண்டு வந்தான். [கஜினி முகமது அவனுடைய நாட்டைக் கி.பி. 1018-ல் தாக்கினான். ராஜ்யபாலன் அவனை எதிர்த்து நின்று போராடாமல் நாட்டைக் கைவிட்டு ஓடிவிட்டான். கஜினி முகமதுவும் வழக்கம்போல் கோயில்களை இடித்தும், அவற்றின் உடைமைகளைச் சூறையாடியும், ஊருக்கு எரியூட்டியும் நாட் டுக்குப் பேரிழப்பை விளைத்தான். ராஜ்ய பாலனுடைய கோழைத்தன்மையைக் கண்ட அப்பக்கத்து மன்னர்கள் அவனைத் தண்டிக்க முற்பட்டனர். அவர்கள் சந்தெல்லர் மன்னன் வித்தியாதரன் என்பவன் தலைமையில் கன்னோசி யைத் தாக்கி ராஜ்யபாலனைக் கொன்றனர்; அவனுடைய மகன் திரிலோசன பாலனை அரியணை ஏற்றுவித்தனர்.

இந்தச் செய்திகளைக் கஜினி முகமது கேள்வியுற்று வெகுண்டான். அம் மன்னர்களின்மேல் பழிவாங்கும் எண்ணத்துடன் அவன் மீண்டும் 1019-ல் கன்னோசியின்மேல் படையெடுத்தான். திரிலோசன பாலன் அவனை எதிர்த்து நின்று போராடியும் வெற்றி காணவியலாதவனாய் நகரைத் துறந்து ஓடிவிட்டான். இரண்டாண்டுகளுக்குப் பின்பு முகமது வித்தியாதரன்மேல் படையெடுத்து வந்தான் (கி.பி.1021-22); தனக்கு எதிராகக் கூட்டணி ஒன்று நிறுவியதற்காக வித்தியாதரனை ஒறுக்க எண்ணினான். இதே ஆண்டுகளில்தாம் முதலாம் இராசேந்திரன் கங்கை கொள்ளுவதற்காக வடநாட்டு விசயம் செய்தான். அவனுக்குப் போசராசன் நட்பும், சேதி நாட்டுக் காளச்சூரி மன்னன் காங்கேய விக்கிரமாதித்தன் நட்பும் கிடைத்தன. அவர்களுடன் கூட்டுறவு பூண்டு இராசேந்திர சோழனும் வித்தியா தரனுக்கு உதவ விரைந்தான். சக்கரக் கோட்டத்தைக் கைப் பற்றிய பிறகு இராசேந்திரன் மதுரை மண்டலம், நாமனைக் கோட்டம், பஞ்சப்பள்ளி, மாசுணி தேசம் ஆகியவற்றைக் கைப்பற்றினான் என்று அவனுடைய மெய்க்கீர்த்திகளினின்றும் அறிகின்றோம். மாசுணி தேசம் என்றால், பாம்பு நாடு என்று பொருள் கொள்ளுவதைவிட அப்படி ஒரு தேசம் வட இந்தியாவில் இருந்ததா என்று தேடிப் பார்த்தல் நலம். அலெக்சாந்தர் இந்தியாவின்மேல் படையெடுத்து வந்தபோது, சிந்து நதியின் முகத்துவாரத்தில் புகுந்து நதி வழியே கப்பலில் சென்றுகொண்டிருந்தான் என்றும், அவ் வமயம் ஆற்றின் இரு கரைகளிலும் அமைந்திருந்த சோத்ரி, மாசுணி ஆகிய இரு வகுப்பாரின் அடைக்கலத்தையும் ஏற்றுக்கொண்டான் என்றும் கிரேக்க வரலாற்று ஆசிரியரான டயடோரஸ் எழுதுகின்றார். மாசுணி என்ற இடம் சிந்து நதிக்கரை ஓரிடத்தைத் தவிர இந்தியாவில் வேறெங்கும் இல்லை. எனவே, இந்த மாசுணி தேசமே மெய்க்கீர்த்தியில் குறிக்கப்பட்டுள்ள மாசுணி நாடு எனக் கொள்ளலாம். இராசேந்திரனின் நண்பனான போசராச னும் சிந்து நாட்டில் முஸ்லிம் மன்னனைப் பொருது வெற்றி கண்டான் என்று வரலாறு கூறுகின்றது.

மதுரை மண்டலம் என்பது யமுனைக் கரையில் உள்ள மதுரையே என்பதில் ஐயமில்லை. இந்தியாவிலேயே புகழ்பெற்ற மதுரைகள் இரண்டே உண்டு. இராசேந்திரன் வெற்றி கண்டது வடமதுரைதான். அந் நகர் அக் காலத்தில் செல்வமும் புகழும் பொதிந்து காணப்பட்டதால் அந் நகரின்மேல் கஜினி முகமது பன்முறை தாக்குதல் தொடுத்தான்; பன்முறை அதைக் கொள்ளையிட்டான். இவ் வடமதுரையை இராசேந்திரனும்

வென்று கைப்பற்றினான். இவ்விரு மன்னரின் போர்களுக்கிடையே ஒரு தொடர்பு காண விழைவதில் வழுவேதுமில்லை.

இராசேந்திரனின் வடநாட்டுத் திக்கு விசயத்தின்போது ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக் கோவைபட இணைத்து நோக்கும் போது போசரராசன், காங்கேயன், மற்றும் பல மன்னருடன் கூட்டுக்கூடிக் கஜினி முகமதுவுடன் போரிட்டு அவன் தொல்லையை ஒழித்துக் கட்டுவதற்காகவே அவனுடைய வடநாட்டு நண்பர்களின் வேண்டுகோளின்படி அவன் வடநாட்டுக்குப் படை திரட்டிச் சென்றான் என்று கருதத் தோன்றுகின்றது.

இராசேந்திரன் கி.பி. 1018-ல் இலங்கை முழுவதையும் வென்று தன் குடைக்கீழ்க் கொண்டுவந்தான். முதலாம் பராந்தகனிடம் தோற்றோடிய வீரபாண்டியன் அன்று சிங்களத்தில் கைவிட்டோடிய பாண்டி நாட்டு மணிமுடியையும் செங்கோலையும் இராசேந்திரன் மீட்டுக்கொண்டதுமன்றிச் சிங்கள மன்னனின் மணிமுடியையும் அவன் பட்டத்தரசியின் மணிமுடியையும் பறித்துக் கொண்டு வந்தான். இலங்கைத் தீவு முழுவதும் சோழநாட்டு மண்டலங்களுள் ஒன்றாக இணைத்துக்கொள்ளப்பட்டது. அத்தீவில் அவன் சிவனுக்கும் திருமாலுக்கும் பல கோயில்கள் எழுப்பினான். அதே ஆண்டில் சேரனும் தன் அரசுரிமையை இராசேந்திர சோழனுக்குப் பறிகொடுத்தான். அஃதுடன் 'செங்கதிர்' வீசிய மணிமாலை ஒன்றும் இராசேந்திரன் கைக்கு மாறிற்று.

இராசேந்திரன் மதுரையில் தன் மகனைப் பிரதிநிதியாக அமர்த்தி, அப் பிரதிநிதியினிடம் பாண்டிநாடு, கேரளம் ஆகியவற்றின் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தான் (கி.பி. 1018-19). இவனுக்குச் சடாவர்மன் சுந்தரபாண்டியன் என்ற பட்டப்பெயரும் அளிக்கப்பட்டது. ஒரு மன்னனுக்கு ஏற்பட்டிருந்த உரிமைகள் அத்தனையும் இவன் செலுத்தி வந்தான். இவன் தங்கியிருக்கும் பொருட்டுப் பெரிய மாளிகை ஒன்றை இவனுக்கு இராசேந்திரன் மதுரையில் கட்டிக்கொடுத்தான். சடாவர்மன் சுந்தர பாண்டியன் இருபத்து மூன்று ஆண்டுகள் அரசாண்டான். நாஞ்சில் நாட்டிலுள்ள சுசீந்திரத்துக்குச் சுந்தர சோழ சதுர்வேதி மங்கலம் என்றொரு பெயரும் வழங்கலாயிற்று. கோட்டாறு என்ற இடத்தில் இவன் சோழரின் படைகளில் ஒன்றை நிறுத்தி வைத்தான்.

இராசேந்திரன் மேலைச் சளுக்கர்மேல் படையெடுத்துச் சென்றான். அந் நாட்டு மன்னன் இராசசிம்மனை முயங்கி அல்லது முசங்கி என்ற இடத்தில் முறியடித்தான் (கி.பி. 1021).

எனினும் இராசசிம்மன் தளராத ஆற்றலோடு சோழருடன் மீண்டும் போர் தொடுத்தான். இராய்ச்சூரை மீட்டுக்கொண்டு துங்கபத்திரை வரையில் தன் ஆட்சியை நிலைநிறுத்திக்கொண்டான். இரட்டபாடி ஏழரை இலக்கம் முழுவதையும் இராசேந்திரன் வென்றான் என்று அவனுடைய மெய்க்கீர்த்திகள் கூறுவது மிகைபாடாகும்.

இராசேந்திரனின் நாட்டம் அடுத்துக் கங்கை வெளியின்மேல் பாய்ந்தது. சோழப் படைத்தலைவன் ஒருவன் ஆணையின்கீழ்ப் படைகள் வடக்குநோக்கிப் புறப்பட்டன. மேலைச் சளுக்க மன்னன் இரண்டாம் சயசிம்மனுக்குப் படைத்துணையாக நின்றவர்களான கலிங்கத்து அரசனும், ஒட்டவிஷய அரசனும் சோழரின் படைகளுக்கு அடிபணிந்தனர். இப் படைகள் மேலும் வடக்கே முன்னேறிச் சென்று, இந்திரதரன், இரணசூரன் ஆகியவர்களை வென்று புறங்கண்டு, இரணசூரனின் மூலபண்டாரத்தைச் சூறையாடித் தருமபாலன் என்ற மன்னனையும் வென்று முதுகுகாட்ட வைத்துக் கங்கைவெளியில் அடிவைத்தன. வங்க நாட்டுப் பாலவமிசத்து மன்னன் மகிபாலன் என்பான் படையின் தண்டநாதனுக்குத் தலைவணங்கினான். கங்கையாற்றைக் கடந்து சென்றும் சோழர் சிற்சில இடங்களில் போரிட்டு வெற்றி கொண்டார்கள். வங்காளம் முழுவதுமே சோழப் பேரரசின் மேலாட்சிக்கு இணங்கிற்று. வடநாட்டு வெற்றிகளுக்குப் பிறகு நாடு திரும்பிய இராசேந்திரன் சோழகங்கை என்ற குளம் ஒன்றை வெட்டி அதில் கங்கைநீரைச் சொரிந்து, 'கங்கா ஜலமயம்-ஜயஸ்தம்பம்' என்று அதைப் பாராட்டித் தன் வெற்றிக்கு விழாக் கொண்டாடினான்.

இராசேந்திரனுடைய படைகளுடன் இணைந்து சென்றவனான கருநாடகக் குறுநில மன்னன் ஒருவன் மேலை வங்கத்தில் குடியேறினான். அவன் வழியில் சமந்தசேனன் என்ற ஒருவன் தோன்றினான். அவன் வங்க நாட்டில் சேனர் பரம்பரை யொன்றைத் தொடங்கி வைத்தான். கங்கைக் கரைகளிலிருந்து சைவர்கள் சிலரை இராசேந்திரன் வரவழைத்தான் என்றும், அவர்களைக் காஞ்சிபுரத்தில் குடியேற்றினான் என்றும் திரிலோசன சிவாசாரியார் என்பார் எழுதிய சித்தாந்த சாராவளி என்னும் நூல் கூறுகின்றது. கங்கைக்கரைப் போர்களில் வெற்றிவாகைசூடி மாபெரும் புகழுடன் திரும்பி வந்துகொண்டிருந்த தன் தண்டநாதனைச் சோழப் பேரரசன் இராசேந்திரன் கோதாவரிக் கரையில் எதிர்கொண்டான். அவ்வமயம் கலிங்கரும், ஒட்டவிஷயத்தாரும் அவனைத் தாக்கிப் போர் மூழக்கம் செய்தனர். இராசேந்

திரன் அவர்களை ஒறுத்து ஒடுக்கினான்; பிறகு தன் மருகன் இராசராச நரேந்திரனை வேங்கி நாட்டு மன்னனாக மணிமுடி சூட்டுவித்தான். தன் மகள் அம்மங்கா தேவியையும் அவனுக்கு மணம் முடித்துவைத்தான். வேங்கி நாட்டில் அரசுரிமைக் குழப்பங்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. அங்கு முதலாம் சக்திவர்மன் இறந்தவுடனே அவனுடைய இளவலான விமலாதித்தன் அரசுரிமை ஏற்றான். அவன் இராசேந்திரனின் தங்கை குந்தவையை மணந்திருந்தான். அவனுடைய ஆட்சியும் கி. பி. 1019ஆம் ஆண்டுடன் முடிவடைந்தது. குந்தவையின் மகன்தான் இராசராச நரேந்திரன். அவனுக்கு அரசுரிமை எய்துவதை இரண்டாம் சயசிம்மன் எதிர்த்து வந்தான்; தன் மாற்றாந்தாய் மகன் ஏழாம் விஷ்ணுவர்த்தன விசயாதித்தன் என்பவனை வேங்கி நாட்டின் அரியணை ஏற்றுவிக்க அவன் முனைந்திருந்தான். எனவே, இராசராச நரேந்திரனின் முடிசூட்டு விழா முடிவுறாமல் காலந் தாழ்ந்து வந்து கொண்டிருந்தது. கங்கைகொண்டு வெற்றிமுழக்கம் செய்து கொண்டிருந்த இராசேந்திரனுக்கு அம் முடிசூட்டு விழாவையும் முற்றுவிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது (கி.பி. 1035). சோழரின் சினத்துக்கு அஞ்சி நாட்டைக் கைவிட்டோடிய விஷ்ணுவர்த்தன விசயாதித்தனும் அவனுக்குப் பக்கத் துணையாக நின்ற சயசிம்மனும், கலிங்கரும், ஒட்டரும் சோழரால் முறியடிக்கப்பட்டு உயிருக்கு அஞ்சி ஓடிப் பிழைத்தார்கள். ஆனால், இராசராச நரேந்திரனின் தொல்லைகள் அஃதுடன் தீர்ந்தபாடில்லை. அவன் மீண்டும் மீண்டும் பகைவருக்கு இடங்கொடுத்துத் தன் நாட்டைத் துறந்து ஓடவேண்டிய நெருக்கடிகள் ஏற்பட்டன. இறுதியாக இராசேந்திர சோழன் பெரும் படையொன்றை இராசராச பிரம்ம மகாராசன், உத்தமசோழன் மிலாடுடையான், உத்தமசோழ சோழகோன் என்ற படைத்தலைவர் மூவரின் தலைமையில் அனுப்பிவைத்தான். களிதிண்டி என்ற இடத்தில் நிகழ்ந்த பெரும் போர் ஒன்றில் இவர்கள் மூவரும் புண்பட்டு மாண்டுபோனார்கள். ஆனால், வெற்றி சோழருக்கே கிடைத்தது. இம் மாபெரும் வீரர்கள் மூவரும் தனக்காற்றிய நன்றியை வீரராசேந்திரன் மறந்தானல்லன்; தன் நன்றியின் சின்னமாக அவர்கட்கு மூன்று கோயில்கள் எடுப்பித்தான்.

இராசேந்திர சோழனிடம் மிகப் பெரியதொரு கடற்படை இருந்தது. அதனுடைய பயன்பாட்டையும் கலங்களின் ஆழ்கடல் ஊரும் ஆற்றலையும் தேர்ந்தறியும் அரிய வாய்ப்பு ஒன்று, எதிர்நோக்கி நின்று அவனை அழைத்தது. தமிழகத்தின் மரக்கலங்கள் வாணிகச் சரக்குகளை ஏற்றிக்கொண்டு பல நூற்றாண்டுகளாகக் கிழக்கிந்தியத் தீவுகளுக்கும் சீனத்துக்கும் பாய்விரித்தோடிக்

கொண்டிருந்தன. ஆனால், கி. பி. 10 ஆம் நூற்றாண்டளவில் சீனத்தில் ஏற்பட்டிருந்த உள்நாட்டுக் கலகங்களினால் இக் கடல் வாணிகம் தடைபட்டுப் போயிருந்தது. அவ் வாணிகத்தை மீண்டும் தொடங்கும் முயற்சியில் சீனம் ஈடுபடலாயிற்று. தென் கடல் நாடுகளுடன் வாணிகம் செய்துகொண்டிருந்த அயல்நாட்டு வணிகர்களையும், கடல்கடந்து அன்னிய நாடுகட்குச் சென் றிருந்த வணிகர்களையும் மீண்டும் சீனத்துடன் வாணிகத் தொடர்பு கொள்ளுமாறு தூண்டும்பொருட்டுச் சீனத்துப் பேரர சன் தன் தூதுவரை அயல்நாடுகட்கு அனுப்பிவைத்தான். அவர் களிடம் பொன்னையும், துணி வகைகளையும், தன் அரசாங்க முத் திரையையும் ஒப்படைத்தான். அப்போது சுமத்திராவில் ஆண்டு கொண்டிருந்த ஸ்ரீவிஜய மன்னர்கள் இவ்வழைப்புக்கு இணங்கிக் கி.பி. 1003-1008 ஆண்டுகளில் தம் தூதுவர்களைச் சீனத்துக்கு அனுப்பிவைத்தனர். இராசராச சோழனின் தூதுவர்கள் முதன் முதல் கி. பி. 1015-ல் சீனத்துக்குச் சென்றனர். இராசேந்திரனும் ஒரு தூது அனுப்பிவைத்தான். குலோத்துங்கன் காலத்தில் (கி.பி. 1077) ஒரு தூது சீனத்துக்கு அனுப்பிவைக்கப்பட்டது. கிழக்கிந் தியத் தீவுகளுடனும், சீனத்துடனும் மிக நெருங்கிய வாணிகத் தொடர்பு வளர்ந்து வந்தது. சீனம் தன் வாணிகத் தொடர்பை மீண்டும் தொடங்கிய காலத்திலிருந்து இருபத்தைந்து ஆண்டுக் கால அளவில் (கி.பி. 1003-1028) கிழக்கிந்தியத் தீவுகளைப்பற்றியும் அங்கு ஆட்சி புரிந்து வந்த அரசர்களைப்பற்றியும் பல செய்தி களை அறிந்துகொள்ளுவதற்குப் போதிய காலமும் வாய்ப்பும் சோழ மன்னருக்குக் கிடைத்தன. ஸ்ரீவிஜய நாட்டின் சைலேந்திர மன்னனான மாரவிசயோத்துங்கன் இராசராச சோழனுடைய உதவியைப் பெற்று நாகப்பட்டினத்தில் சூடாமணி விகாரை என்ற பௌத்தமடம் ஒன்றைக் கட்டினான். இராசேந்திர சோழன் பட்டத்துக்கு வந்த பிறகு அம் மடத்துக்குத் தன் தந்தை இராசராசன் நிவந்தமாகக் கொடுத்திருந்த ஆனைமங்கலம் என் னும் கிராமத்தை அம் மடமே தொடர்ந்து 'சூரியசந்திரர் உள்ள வரை' அனுபவித்து வருமாறு ஆணை பிறப்பித்தான். எனவே, தான் ஆட்சிபுரியத் தொடங்கிப் பத்து ஆண்டுகட்குமேல் கிழக் கிந்தியத்தீவு நாடுகளான ஸ்ரீவிஜயம், கடாரம் ஆகிய நாடுகளின் மன்னருடன் இவன் தொடர்ந்து நட்புக்கொண்டிருந்தான் எனத் தெரிகின்றது. எனினும், அவன் திடீரெனக் கடாரத்தின் மேலும் ஸ்ரீவிஜயத்தின்மேலும் பாய்வதற்கு அவனைத் தூண்டிவிட்ட காரணம் இன்னதென விளங்கவில்லை. ஒருவேளை சோழர்கள் சீனத்துடன் மேற்கொண்டிருந்த வாணிகத் தொடர்பைத் துண் டித்துவிட ஸ்ரீவிஜய மன்னன் முயன்றனனாக வேண்டும். அன்றித் திக்குவிசயம் புரிந்து, கடல் கடந்து சென்று, பல நாடுகளின்மேல்

போர் தொடுத்து, அவற்றைத் தனக்கு அடிபணிய வைத்துத் தன் குடிமக்களும், அண்டை அயல்நாட்டு வேந்தர்களும் தன் வெற்றியை வியந்து பாராட்ட வேண்டும் என்ற பேரவா ஒன்று இராசேந்திரனைப் பிடர்பிடித்து உந்தியிருக்கக் கூடும். எக்காரணத்தாலோ இராசேந்திரன் கிழக்கிந்தியத் தீவு நாடுகளின்மேல் படையெடுத்துச் சென்று அவ்விடங்களில் ஆண்டுகொண்டிருந்த அரசரை வென்று திறைகொண்டான்.

இராசேந்திரனின் கல்வெட்டு மெய்க்கீர்த்திகளுள் ஒன்று அவனுடைய கடாரத்துப் போரை விளக்கமாகப் பாராட்டிப் புகழ்கின்றது. 'அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்திச் சங்கிராம விசையோத் துங்கவர்மன் ஆகிய கடாரத்து அரசனை வாகையம் பொருகடல் கும்பக் கரியொடும் அகப்படுத்து, உரிமையின் பிறக்கிய பெருநிதிப் பிறக்கமும், ஆர்த்து அவன் அக நகர்ப்போர்த்தொழில் வாசலில் விச்சாதிரத் தோரணமும், மொய்த்து ஒளிர் புனைமணிப் புதவமும், கனமணிக் கதவமும்... தொடுகடல் காவல் கடுமுரண் கிடாரமும் ... மாப்பொரு தண்டால்...' இராசேந்திரன் கைக்கொண்டான் என்பது அக் கல்வெட்டுக் கூறும் செய்தியாகும்.

கடாரத்து மன்னனிடமிருந்து இராசேந்திரன் கைப்பற்றிய முதல் நாடு ஸ்ரீவிஜயமாகும். அது சுமத்திராவில் உள்ளது. அதற்கு இப்போது பாலம்பங் என்று பெயர் வழங்கி வருகின்றது. பிறகு அவன் அவனுடைய மெய்க்கீர்த்தியில் கண்டுள்ள ஏனைய கிழக்காசிய நாடுகளையும் வென்று திறைகொண்டான். கடாரத்தைக் கலிங்கத்துப் பரணியானது 'குளிறு தெண்திரை குரை கடாரம்'[13] என்று குறிப்பிடுகின்றது. பட்டினப்பாலையின் உரையாசிரியரான நச்சினார்க்கினியர் அப்பாட்டில் குறிப்பிடப் படும் 'காழகம்' என்ற இடம் கடாரமாகும் என்று குறிப்பிடுகின்றார். பிங்கலந்தை நிகண்டும் இவருடைய கூற்றை உறுதிப் படுத்துகின்றது. தமிழகத்துக்கும் கிழக்காசிய நாடுகளுக்கும் இடையே ஓடிய கடல்வழியின்மேல் கடாரம் அமைந்திருந்த காரணத்தினால், அதை வென்று தன் ஆணையின்கீழ்க்கொண்டு வருவது தமிழகத்தின் கடல் வாணிக வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்று இராசேந்திரன் உணர்ந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. அக்காலத்தில் கடாரம் மிகவும் சிறந்ததொரு துறைமுகப்பட்டினமாக விளங்கி வந்தது. ஆகவே, கடாரத்தின்மேல் அவன் கொண்ட வெற்றியானது சோழர் சீனர் வாணிகத்தின் வளர்ச்சிக்கு ஒரு தூண்டுகோலாக அமைந்துவிட்டது.

13. கலிங். 202.

கடாரத்தின்மேல் வெற்றி கொண்டானாயினும் இராசேந்திரனின் போர்த் தொல்லைகள் ஓய்ந்தபாடில்லை. சிங்களத்தில் சு. கி. பி. 1029-ல் சுதந்தரப் போராட்டங்கள் தலைதூக்கலாயின. பாண்டி நாட்டிலும், சேர நாட்டிலும் அரசியற் கிளர்ச்சிகள் மூண்டன; எனினும், இளவரசன் இராசாதிராசன் அவற்றை யெல்லாம் உடனுக்குடன் ஒடுக்கிவிட்டான் (கி. பி. 1018).

இராசேந்திரனின் வாணாள் முடிவுக்கு வந்துகொண்டிருந்தது. மேலைச் சளுக்க மன்னன் முதலாம் சோமேசுவர ஆகவமல்லன் (கி.பி. 1043-68) தீராத் தொல்லை கொடுத்துக்கொண்டேயிருந்தான். அதனால் இராசாதிராசன் அவன்மேல் படையெடுத்துச் சென்றான். கிருஷ்ணை நதிக்கரைமேல் உள்ள பூண்டி என்ற இடத்தில் இராசாதிராசன் சோமேசுவரனை வென்று வெற்றி வாகை சூடினான். கலியாணபுரியை அழித்து அங்கிருந்த துவாரபாலகர் சிலையைக் கவர்ந்துகொண்டு வந்தான். அச் சிலையைத் தாராசுரத்தில் இன்றும் காணலாம். சோழரின் படையெடுப்பினால் மேலைச் சளுக்கர் தலைகுனிய நேரிட்டது. அவர்களுடைய நாடும் சீர்குலைந்து போயிற்று.

சோழர்கள் மைசூரிலும் சில போர்களில் ஈடுபடவேண்டிய நெருக்கடி நேர்ந்தது. அங்கு அவர்கள் பசுக்களைக் கவர்ந்து வந்ததாகவும், கொடும் போர்கள் விளைத்தனர் என்றும் அறிகின்றோம்.

இராசேந்திரன் சீரிலும், சிறப்பிலும், வீரத்திலும், நிருவாகத் திறனிலும் தன் தந்தை இராசராசனையும் மிஞ்சி நின்றான். 'மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல்எனுஞ் சொல்' என்னும் குறளுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிற்று இராசேந்திரனின் அரசியல். அவனுடைய விருதுகளில் சிறப்பானவை 'முடிகொண்டான்', 'கங்கைகொண்டான்', 'கடாரங் கொண்டான்', 'பண்டித சோழன்' என்பவையாம். புகழ்பெற்று விளங்கிய இராசேந்திரனின் வாணாள் கி.பி. 1044-ல் முடிவுக்கு வந்தது.

போரில் மட்டுமன்றிக் கல்வி, கலை, சமயத்தொண்டு ஆகிய துறைகளிலும் இராசேந்திரன் இணையற்றுத் திகழ்ந்தான். அவனால் படைக்கப்பட்ட கலைக்கூடமான கங்கைகொண்ட சோழபுரத்தையே தன் தலைநகரமாகக் கொண்டு கலை வளர்ச்சிக்கான பணிகள் பலவற்றைப் புரிந்து வந்தான்.

இராசேந்திரன் மனைவியருள் சிறப்பாகக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளவர்கள் திரிபுவனம் அல்லது வானவன் மாதேவியார், முக்கோக்கிழாள், பஞ்சவன் மாதேவியார், வீரமா தேவியார் என்பவர்கள் ஆவர். அரசன் இறந்தவுடன் அவனுடன் வீரமாதேவியார் உடன்கட்டையேறிவிட்டாள். இராசேந்திரனின் பிள்ளைகளான இராசாதிராசன், இராசேந்திரன், வீரராசேந்திரன் ஆகியவர்கள் ஒருவருக்குப்பின் ஒருவராகப் பட்டங்கட்டிக் கொண்டார்கள். சோழபாண்டியப் பிரதிநிதியாக மதுரையினின்றும் அரசு புரிந்துவந்த சடாவர்மன் சுந்தர சோழ பாண்டியன் என்பான் இம் மூவருள் ஒருவனா அன்றி வேறானவனா என்பது விளங்கவில்லை. இவர்களேயன்றி இராசேந்திரனுக்கு வேறு ஆண் மக்களும் இருந்தனர் எனத் தெரிகின்றது. அவனுக்கு இரு பெண் மக்களும் உண்டு. ஒருத்தி **அருண்மொழி நங்கையார் அல்லது பிரானார்**. இவளுடைய உடன்பிறந்தானான இராசாதிராசன் ஆட்சியில் விலையுயர்ந்த முத்துக் குடை ஒன்றைத் திருமழபாடிக் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்திருக்கின்றாள். மற்றொருத்தி **அம்மங்காதேவி** என்பவள். இவள் கீழைச் சளுக்க மன்னன் முதலாம் இராசராசனை மணந்து முதலாம் குலோத்துங்கனைப் பெற்றுக் கொடுத்தாள்.

## முதலாம் இராசாதிராசன் (கி.பி. 1018-1054)

இராசாதிராசன் தன் தந்தையுடன் இருபத்தைந்து ஆண்டுகள் இணைந்திருந்து அவனுடைய அரசியலில் பொறுப்பேற்று ஆழ்ந்த ஆட்சித் திறனும், போர்த்திறனும் வாய்க்கப் பெற்றிருந்தான். இவன் அரியணை ஏறியவுடனே சிங்களத்தில் சோழரின் ஆட்சியை எதிர்த்துக் கிளர்ச்சிகள் எழுந்தன. இராசாதிராசன் மிகவும் கடுமையான போர் நடவடிக்கைகளை மேற்கொண்டு இக் கிளர்ச்சிகள் அனைத்தையும் அவ்வப்போது ஒடுக்கினான். அவன் சிங்களத்தில் இழைத்தனவாகக் கூறப்பெறும் சில கொடுமைகள் சோழரின் செங்கோன்மைக்கு இழுக்கை விளைவித்தன. சிங்கள மன்னன் விக்கிரமபாகு போரில் புண்பட்டு மாண்டான். அவனுடைய மணிமுடியை இராசாதிராசன் கைப்பற்றிக் கொண்டான். அம் மன்னனது அன்னையின் மூக்கையும் சோழர்கள் அறுத்துவிட்டனர்.

சளுக்கரின் தொல்லைகள் மீண்டும் தலைதூக்கின. சளுக்க மன்னன் சோமேசுவரனை எதிர்த்துச் சோழர்கள் இரண்டாம் முறையும் போர் தொடுக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டது (கி.பி.1044-46). சளுக்கருக்குத் துணை நின்ற மன்னர் பலரை

இராசாதிராசன் போரில் முறியடித்தான். கம்பிலியில் இருந்த சளுக்க மன்னரின் அரண்மனை யொன்றை அவன் இடித்துத் தரைமட்டமாக்கினான். கலியாணபுரமும் மண்ணோடு மண்ணாக மறைந்தது. அங்கிருந்த மாளிகைகளும், அரண்மனைகளும் தவிடு பொடியாயின. இராசாதிராசன் கலியாணபுரத்தில் அமர்ந்து 'விசயராசேந்திரன்' என்ற விருது ஒன்றை ஏற்று வீராபிடேகம் செய்துகொண்டான். அவன் கவர்ந்து வந்து தாராசுரத்தில் வைத்திருக்கும் துவார பாலகர் சிலையின்மேல், 'சுவஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீ விஜய ராசேந்திரதேவர் கலியாணபுரம் எரித்துக் கொண்டுவந்த துவார பாலகர்' என்னும் சொற்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

ஆனால், சளுக்கப் போர் தொடர்ந்து நடைபெற்று வந்தது. இராசாதிராசனுக்கு அவனுடைய தம்பி இராசேந்திரன் பெருந்துணையாக இருந்தான்; சளுக்கப் போரில் சோழரின் படைகளுக்குத் தலைமை தாங்கினான். கொப்பம் என்ற இடத்தில் கொடும் போர் ஒன்று நிகழ்ந்தது (கி.பி. 1052). சளுக்க மன்னன் சோமேசுவரன் சோழரின் தாக்குதலுக்குச் சளைத்துத் தோற்றோடி விட்டான். சோழர்கள் மாபெரும் வெற்றி வீரர்களாகத் திகழ்ந்தார்கள். ஆனால், இராசாதிராசன் போர்க்களத்தில் புண்பட்டு வீர மரணம் எய்தினான். பிற்காலக் கல்வெட்டுகள் அவனை 'ஆனைமேற் றுஞ்சிய மன்னன்' என்று புகழ்கின்றன. இராசாதிராசன் தன் மரணத்தைத் தானே தேடித் தழுவிக் கொண்டான். தன் முன்னோர் தூக்கி நிறுத்திய வெற்றிக் கொடியைத் தாழாது உயர்த்திப் பிடிக்கவேண்டும் என்ற சீரிய நோக்கத்துடன் அவன் கொப்பத்துப் போரை மேற்கொண்டான். இப் போரில் மட்டுமன்றி வேறு பல போர்களிலும் அவன் தானே போர்க்களத்தில் நேரில் நின்று வீரச் செயல்கள் புரிந்து வந்துள்ளான். இராசாதிராசன் பிறவியிலேயே ஈடிணையற்றுப் போர்த் தொழிலில் வீரனாக விளங்கினான். தன் தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே பல பகைவரை அடிபணிவித்துப் பகை களைந்து அசுவமேத யாகம் ஒன்று இயற்றுவித்தான். தன் பெரிய தந்தையார், தன் உடன்பிறந்தார், தன் மக்கள் அனைவருக்குமே தன் ஆட்சிப் பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுத்திருந்தான்.

இராசாதிராசன் பூரட்டாதியில் பிறந்தவன். அவனும் கங்கைகொண்ட சோழபுரத்தையே தலைநகராகக் கொண்டிருந்தான். அவனுடைய மனைவியருள் ஒருத்தி 'திரைலோக்கியம் உடையார்' என்ற பட்டப் பெயரைப் பெற்றிருந்தாள். கலியாணபுரத்தில் தான் மேற்கொண்ட வெற்றி நீராட்டு விரு

தான விசயராசேந்திரன் என்ற பெயருடன் வீரராசேந்திர வர்மன், ஆகவமல்ல குலாந்தகன், கலியாணபுரம் கொண்ட சோழன் ஆகிய விருதுகளையும் தன் பெயருடன் இணைத்துக் கொண்டான். இராசராசனின் குருதேவர், 'அதிகாரிகள் பாராசரியன் வாசுதேவ நாராயணன்' என்பவர். இவருக்கு 'உலகளந்த சோழன் பிரம மாராயன்' என்று மற்றொரு பெயரும் உண்டு.

இராசாதிராசனின் மகன் இளவரசன் இராசேந்திரன் கொப்பம் வெற்றிக்குப் பெருந்துணை புரிந்தான். தன் தந்தை இறந்தவுடனே போர்க்களத்திலேயே தான் இரண்டாம் இராசேந்திரனாக அவன் முடிசூட்டிக்கொண்டான் (கி.பி. 1052-64). அவன் கோலாப்பூரின்மேல் படையெடுத்துச் சென்று ஆங்கு வெற்றித் தூண் ஒன்றை நாட்டினான். சோழன் தாக்குதல் களால் பலமுறை சீர்குலைந்து போயிருந்த சளுக்க நாடு வலிகுன்றி நின்றதாயினும், தான் சோழ மன்னருக்குத் திறை செலுத்தி வருமளவுக்குத் தன் சுதந்தரத்தை இழக்கவில்லை. இந் நிலையைக் கண்டு பொறானாய் இரண்டாம் இராசேந்திரன் மீண்டும் ஒருமுறை சோமேசுவரன்மேல் போர் தொடுத்தான் (கி.பி. 1062). சோமேசுவரனின் போர்வலியும் துணைவலியும் பெருகி வந்தன. அஃதுடன் அவன் கீழைச் சளுக்கரின் அரசியலி லும் தலையிட்டு வந்தான். அவனுடைய துடுக்கை ஒடுக்கவே இராசேந்திரன் இப் படையெடுப்பை மேற்கொண்டான். இதில் அவன் மாபெரும் வெற்றியுங் கண்டான்.

இராசேந்திரன் தன் மூத்த மகனான இராசமகேந்திரனுக்கு இளவரசு பட்டம் சூட்டினான் (கி.பி. 1059). ஆனால், இராச மகேந்திரன் இளமையிலேயே இவ்வுலகை நீத்தான். அவனை யடுத்து முதலாம் வீரராசேந்திரன் இளவரசு பட்டம் எய்தினான் இரண்டாம் இராசேந்திரனின் ஆட்சி கி.பி. 1063-ல் முடிவுற்றது. அவனுக்குப்பின் அவன் இளவல் முதலாம் வீரராசேந்திரன் அரசு கட்டில் ஏறினான் (கி.பி. 1063-70).[14] சளுக்கமன்னன் சோமேசுவரன் தன் போர் முயற்சிகளில் சளைத்தானல் லன். அவனுடைய கை ஓங்கிக்கொண்டே போயிற்று. கூடல் சங்கமம் என்ற ஓரிடத்தில் தன்னைக் களத்தில் எதிர் நிற்கும்படி அவன் வீரராசேந்திரனை அறைகூவி அழைத்தான். அவனுடைய அழைப்பை ஏற்றுக்கொண்டவனாய் வீரராசேந்தி ரனும் மேலைச் சளுக்க நாட்டின்மேல் படையெடுத்துச் சென் றான். மேலைச் சளுக்கரின் தாக்குதலுக்காக அவன் கரந்தை

14. S.I.I. III. p.37.

என்ற இடத்தில் ஒரு திங்கள் காத்துக் கொண்டிருந்தான். அவன் நின்றபக்கமே சோமேசுவரன் திரும்பவில்லை. ஆனால். அவன் 'ஓடி மேலைக் கடலில் ஒளிந்துகொண்டான்.' இக் கோழைத்தனத்தைக் கண்டு ஏமாற்றமும் வெகுளியும் கொண்ட வீரராசேந்திரன் துங்கபத்திரையின் கரையின்மேல் வெற்றித் தூண் ஒன்றை நாட்டிவிட்டு, சோமேசுவரனின் கொடும்பாவி ஒன்றைக் கட்டியடித்துவிட்டுத் தன் நாடு திரும்பினான். சோமேசுவரனோ மிகக் கொடியதொரு காய்ச்சல்வாய்ப்பட்டுத் துங்கபத்திரையில் மூழ்கித் தற்கொலை செய்துகொண்டான்.

வீரராசேந்திரன் வேங்கிக்குத் தன் படைகளைச் செலுத்திச் சென்று விசயவாடாவுக்கு அண்மையில் தன்னை எதிர்த்து நின்ற மேலைச் சளுக்கப் படையொன்றை முறியடித்து, வேங்கியில் தன் ஆட்சியை நிலைநாட்டிவிட்டுக் கங்கைகொண்ட சோழபுரம் திரும்பினான். இலங்கையில் மீண்டும் கிளர்ச்சி ஒன்று புகைந்தது. வீரராசேந்திரன் படையொன்றை அங்கு அனுப்பி அக் கிளர்ச்சியை ஒடுக்கினான். அவன் தானும் கடல் கடந்து படை செலுத்திக் கடாரத்தை வென்று (கி.பி. 1069) தன்னுடன் நட்புறவு பூண்டிருந்த மன்னன் ஒருவனை கடாரத்தின் அரியணை மேல் ஏற்றுவித்தான்.

வடக்கில் மீண்டும் போர் முழக்கம் எழுந்தது. முதலாம் சோமசுவரனையடுத்து முடிசூட்டிக்கொண்ட இரண்டாம் சோமேசுவரன் (கி.பி. 1068–76) சோழரை எதிர்த்துப் போர்க் கோலங்கொண்டான். மீண்டும் ஒருமுறை வீரராசேந்திரன் படை திரட்டிச் சென்றான். சளுக்கருக்கும் சோழருக்கும் இடையே விளைந்த போரில் சோமேசுவரன், வீரராசேந்திரன் ஆகிய இருவருமே வெற்றிக்கு உரிமை கொண்டாடினர். இரண்டாம் சோமேசுவரனுக்கும் அவனுடைய தம்பி ஆறாம் விக்கிரமாதித்தனுக்கும் (கி.பி. 1068-76) இடையே அரசுரிமைப் பூசல்கள் மூண்டன. விக்கிரமாதித்தன் சோழரின் படைத் துணையை நாடினான். வீரராசேந்திரனின் தலையீட்டுக்கு அஞ்சிச் சோமேசுவரன் தன் நாட்டை இரண்டாகப் பங்கிட்டு ஒரு பங்கைத் தன் தம்பிக்கு அளித்தான். விக்கிரமாதித்தன் அரசுரிமை பெற்றதுடன் சோழர் குலத்து இளவரசி ஒருத்தியையும் மணந்தான்.

வீரராசேந்திரன் பல விருதுகளை ஏற்றுக்கொண்டான். சகலபுவனாசிரயன், மேதினிவல்லபன், மகாராசாதிராசா, ஆகவமல்ல குலகாலன், பாண்டிய குலாந்தகன், இராசாசிரயன், வல்லப வல்லபன், வீரசோழன், கரிகாலன் ஆகிய விருதுகள்

அவன் வெற்றிகளை எடுத்துக்காட்டுகின்றன. தில்லைச் சிற்றம் பலத்து நடனமாடுங் கடவுளின் மணிமுடியை அணி செய்ய, 'திரைலோக்கிய சாரம்' என்ற விலை மதிப்பற்ற மாணிக்கமணி ஒன்றை அவன் வழங்கினான்.[15] சோழநாடு, தொண்டை நாடு, பாண்டி நாடு, கங்கபாடி ஆகிய நாடுகளில் அவன் பல பிரம தேயங்களை நிறுவினான். வீரராசேந்திரன் வெற்றி முழக்கத் துடன் சோழநாடு திரும்பிக் கங்கைகொண்ட சோழபுரத்தில் எழுப்பப்பட்டிருந்த 'சோழ கேரள மாளிகை'யில் அமர்ந்து 'இராசேந்திர சோழமாவலி வாணராசன்' என்ற அரியணை மேல் கொலுவீற்றிருந்து வெற்றிவிழாக் கொண்டாடினான். அவன் கி.பி. 1070-ல் இவ்வுலகை நீத்தான். அவனுடைய மகனும், சளுக்க மன்னன் ஆறாம் விக்கிரமாதித்தனின் மைத்துன னுமான அதிராசேந்திர தேவன் அரசுகட்டில் ஏறினான். வீர ராசேந்திரனின் அரசியருள் ஒருத்தியின் பெயர் அருண்மொழி நங்கை. அவனுடைய காலத்தில் வீரசோழியம் என்னும் தமிழ் இலக்கணநூல் ஒன்றைப் புத்தமித்திரர் என்பார் இயற்றினார். தமிழ்வளர்ச்சிப் பணிகள் வீரராசேந்திரன் காலத்தும் தொடர்ந்து நடைபெற்று வந்ததென இதனால் அறிகின்றோம்.

அதிராசேந்திரன் தான் முடிசூட்டிக் கொள்வதற்கு முன்பு தன் தந்தையுடன் அமர்ந்திருந்து ஆட்சி நடத்தி வந்தான். அரியணை ஏறிய பின்பு ஒருமாத காலமே இவன் ஆட்சி புரிந் தான். விசயாலய சோழனின் நேர் பரம்பரை இவனுடைய வாணாளுடன் முடிவடைந்தது.

## முதலாம் குலோத்துங்கன் (கி.பி. 1070-1120)

வீரராசேந்திரன் கண்களை மூடியவுடன் சோழ நாட்டில் அரசுரிமைக் கிளர்ச்சிகள் சில நடைபெற்றன. ஒரு கிளர்ச்சியின்போது அதிராசேந்திரன் மாண்டு போனான். இவனையடுத்து முதலாம் குலோத்துங்கன் பட்டத்துக்கு வந்தான். வைணவசைவ வரலாறுகளில் வரும் கிருமிகண்ட சோழன் என்பவன் அதிராசேந்திரனே எனச் சிலர் கூறுவர். வைணவ சமய ஆசாரியருள் ஒருவரான இராமானுசரை நாட்டைவிட்டு ஓட்டியவனும் இவனே என்று சிலர் கூறுகின்றனர். முதலாம் வீரராசேந்திரனோ அன்றி, முதலாம் குலோத்துங் கனோ இராமானுசரை வெருட்டியவன் என்றும் ஐயப்படு கின்றனர்.

15. Ep. Ind. XVII. 54.

முதலாம் குலோத்துங்கன் இருவழியில் இராசராச சோழனின் கொள்ளுப் பேரனாவான். இராசராசனின் மகன் முதலாம் இராசேந்திரனின் மகள் அம்மங்காதேவியின் மகன் இவன். இவனுடைய தந்தை கீழைச் சளுக்க மன்னன் முதலாம் இராச ராசன். இவன் வேங்கி நாட்டு விமலாதித்தனுக்கும் முதலாம் இராசராச சோழன் மகள் குந்தவைக்கும் பிறந்தவன். குலோத் துங்கன் உடலில் பெருமளவு ஓடியது சோழர் குலக் குருதிதான். சளுக்க மன்னன் முதலாம் இராசராசன் கி.பி. 1060–ல் கால மானான். பிறகு பத்தாண்டுகள்வரை இரண்டாம் இராசேந் திரன் என்ற பெயரில் குலோத்துங்கன் வேங்கி நாட்டை ஆண்டு கொண்டிருந்தான். அப்படி ஆண்டுவந்த காலத்தில் பஸ்தார் நாட்டுக் குறுநில மன்னர் சிலரைப் போரில் வென்று அவர்களை ஒடுக்கி வைத்தான். ஆறாம் விக்கிரமாதித்தனுடனும் இவன் போரிட்டு வெற்றி கண்டான். மேலைச் சளுக்கரின் ஆதிக்க விரிவை எதிர்த்துப் போராடிய முதலாம் வீரராசேந்திரனுக்குத் துணை நின்று வேங்கி நாட்டின்மேல் சோழரின் அரசியல் செல்வாக்கு நிலைத்து நிற்பதற்கு வேண்டிய உதவிகளையும் குலோத்துங்கன் புரிந்து வந்தான்.

குலோத்துங்கன் பிறந்தவுடனே கங்கைகொண்ட சோழனின் தேவியான இவன் பாட்டியார் இவனைத் தன் இரு கைகளாலும் வாரியெடுத்து, இவனுடைய உடற்குறிகள் சிலவற்றை உற்று நோக்கி இவன் சூரிய குலத்துக்கு அரசனாவான் எனக் கூறி மகிழ்ந்தாள் என்று கலிங்கத்துப் பரணி ஆசிரியர் செயங்கொண்டார் கூறுகின்றார்.[16]

முதலாம் குலோத்துங்கன் சோழநாட்டு அரியணை ஏறிய சில ஆண்டுகட்குள் காலசூரி மன்னன் யசகர்ணன் என்பான் வேங்கி நாட்டின்மேல் படையெடுத்தான்; ஆனால், வெற்றி காணாதவனாய்ப் புறமுதுகிட்டு ஓடிவிட்டான் (கி.பி. 1073). குலோத்துங்க சோழன் முடிசூட்டிக் கொள்வதற்கு முன்பு சோழ நாட்டில் ஏற்பட்ட கலவரங்களின்போது சிங்கள நாட்டில் விசயபாகு (கி.பி. 1055-1110) என்பான் பொலன்னரு வையைக் கைப்பற்றித் (கி.பி. 1070) தானே சிங்களத்து மன்ன னாகப் பட்டங்கட்டிக் கொண்டான் (கி.பி. 1076–77). பொலன னருவைக்கு விசயராசபுரம் என்று மாற்றுப் பெயர் சூட்டினான். அயல்நாட்டு மன்னருடன் திருமண உறவுகளை மேற்கொண் டான். கன்னோசி மன்னன் ஜகதிபாலனின் மகள் லீலாவதி

16. கலிங். 237.

யைத் தான் மணம் புரிந்துகொண்டான். லீலாவதியின் தாய் முன்னொரு காலத்தில் சோழநாட்டுச் சிறையினின்றும் தப்பி யோடியவள். மற்றும், கலிங்கத்து இளவரசி திரிலோகசுந்தரி யையும் விசயபாகு மணந்தான். தன் தங்கை மித்தை என்ப வளைப் பாண்டிநாட்டு இளவரசன் ஒருவனுக்கு மணம் புரிவித் தான். இவனுடைய பேரனான சிங்கள மன்னன், மகாபராக்கிரம பாகு என்பவன்.

சிங்களம் தன்னுரிமை எய்தியது சோழர்கட்குப் பெரும் இழப்பு என்று கூறமுடியாது. சோழநாட்டுக்குச் சிங்களம் எவ் விதமான ஊறுபாடும் செய்யும் நிலைமையில் இல்லை. சோழர் களின் கை உள்நாட்டு அரசியலில் ஓங்கி நிற்கும் வரையில் சிங்கள வர்கள் அவர்களை ஒன்றும் இடர்ப்படுத்த முடியாது. ஆனால், என்றுமே பாண்டி நாட்டை ஒடுக்கித் தன் ஆட்சியின்கீழ் வைத்திருக்க வேண்டிய மிகப் பெரிய பொறுப்பு ஒன்று உண்டு என்று குலோத்துங்கன் நன்கு உணர்வான். பாண்டிநாடு தலை தூக்கினால் சோழரின் ஆட்சிக்கு இடும்பைகள் நேரிடக்கூடும் என்ற நிலையைச் சோழ மன்னன் அளந்து வைத்திருந்தான். எனவே, பாண்டி நாட்டையும் கேரளத்தையும் அடக்கித் தனக்கு அடிமையாக்கிக் கொள்ளும் செயல்களில் குலோத்துங்கன் முனைப்புடன் இறங்கினான். அவ்விரு நாடுகளிலும் பல்வேறு கிளர்ச்சிகள் மூண்டெழுந்தன. அவற்றைத் திறம்பட ஒடுக்கி னான். ஆங்காங்குத் தன் ஆணையை நிறைவேற்றி வைப்பதற் கென நிலப்படைகளை நிறுத்திவைத்தான். ஆனால், பாண்டி நாட்டிலும், கேரள நாட்டிலும் வழக்கில் இருந்துவந்த ஆட்சிமுறைகளில் இவன் தலையிடவில்லை.

குலோத்துங்க சோழன் கடாரத்தையும் வென்றதாக அவனு டைய மெய்க்கீர்த்திகள் கூறுகின்றன. ஆனாலும், கி.பி. 1099-ல் கடாரத்து வேந்தன் ஒருவனிடமிருந்து இராச வித்யாதர ஸ்ரீ சாமந்தனும், அபிமானோத்துங்க ஸ்ரீசர்மந்தனும் தூது வந்தனர் எனவும், அம் மன்னனின் விருப்பப்படியே, குலோத் துங்கன் நாகப்பட்டினத்தில் நடைபெற்றுவந்த பௌத்த விகாரைகட்கு ஏற்கெனவே கொடையாக அளிக்கப்பட்டிருந்த கிராமத்தை இறையிலிக் கிராமமாக மாற்றிக்கொடுத்தான் எனவும் அறிகின்றோம். அக்காலத்தில் நாகப்பட்டினத்துக்குச் சோழ குல வல்லப பட்டினம் என்றொரு பெயர் வழங்கிவந்தது. மேற்கூறப்பட்ட இரண்டு விகாரைகட்கும் 'இராசேந்திரப் பெரும்பள்ளி' யென்றும் 'இராசராசப் பெரும்பள்ளி' என்றும் பெயர்கள் வழங்கின. இராசராசப் பெரும்பள்ளிக்கு ஸ்ரீ

சைலேந்திர சூடாமணி விகாரை என்றொரு பெயரும் உண்டு. சுமத்திராத் தீவில் கிடைத்துள்ள ஒரு கல்வெட்டில் (சகம் 1010, கி.பி. 1088) திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்ற வாணிகச் சங்கம் ஒன்று சோழநாட்டில் நடைபெற்று வந்ததாகக் குறிப்புக் காணப்படுகின்றது.

சோழரை எதிர்த்து வேணாட்டில் ஒரு கிளர்ச்சி மூண் டெழுந்தது. குலோத்துங்கனின் புகழ்பெற்ற படைத் தலைவர் களுள் ஒருவனான நரலோக வீரன் என்பான் வேணாட்டின் மேல் படையெடுத்துச் சென்று அக் கிளர்ச்சியை உடனுக் குடனே அடக்கிவிட்டான் (கி.பி. 1098).

குலோத்துங்கன் இருமுறை கலிங்கத்தின்மேல் படையெடுத் தான். தென் கலிங்கமானது வேங்கி நாட்டின் மாகாணங்களில் ஒன்றாகச் சளுக்கர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அங்குப் பெரிய தொரு கலகம் ஏற்பட்டது. குலோத்துங்கன் படையொன்றை அனுப்பி அக் கலகத்தை அடக்கினான் (கி.பி. 1096). இரண்டாம் படையெடுப்புதான் மிகவும் சிறப்பு வாய்ந்தது. அப் படையெடுப் பின்போது குலோத்துங்கனுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றி யைப் பாராட்டிச் செயங்கொண்டார் என்ற புலவர் பரணி ஒன்று பாடினார். அந் நூலுக்குக் கலிங்கத்துப் பரணி என்று பெயர். சொற்கட்டிலும், பொருளாழத்திலும், பல்வேறு இலக்கியச் சுவை களிலும், மெய்ப்பாடுகளிலும் இணையற்று விளங்குவது இந் நூல். இரண்டு அடிகள் கொண்டுள்ள தாழிசை என்னும் செய்யுளில் இந் நூல் முழுதும் யாக்கப்பட்டுள்ளது. வடகலிங்க வேந்தன் தனக்குத் திறை செலுத்தத் தவறினான் என்ற காரணத்துக்காக முதலாம் குலோத்துங்கன் வெகுண்டெழுந்து கலிங்கத்தின்மேல் போர் தொடுத்தான் என்று கலிங்கத்துப் பரணி இயம்புகின்றது. அப் போது அரசாண்டு வந்த வடகலிங்க வேந்தன் கலிங்க நகரத்து அநந்தவர்மன் சோடகங்கன் ஆவான் (கி.பி. 1078-1150). இவன் சோழ நாட்டு இளவரசி இராசசுந்தரி என்பவளின் மகன்.

காஞ்சிமா நகரின் தென்மேற்குத் திசையில் நின்ற பொன் மாளிகைச் சித்திரமண்டபத்தில் உள்ள அரியணைமேல் குலோத் துங்கன் அமர்ந்திருந்தான். அவனுடைய அரசிகள் தியாகவல்லி யும், ஏழிசைவல்லபியும் உடன் அமர்ந்திருந்தனர். குலோத்துங் கனின் மற்றொரு மனைவியான மதுராந்தகியின் பெயர் கலிங்கத் துப் பரணியில் காணப்படவில்லை.' எனவே, கலிங்கப் போருக்கு முன்னரே அவள் காலமாகிவிட்டிருக்க வேண்டும் என்று ஊகிக்க

இடமேற்படுகின்றது. குலோத்துங்கன் கொலுவில் ஆடல் பாடல் மகளிர், சூதர் (நின்று புகழ்வோர்), மாகதர் (இருந்து ஏத்து வோர்), மங்கலப் பாடகர்கள் ஆகியோர் குழுமியிருந்தனர். இசைவிருந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. பலநாட்டு அரசிகள் பணிவிடை செய்து நின்றனர். வடகலிங்க மன்னன் மேல் படையெடுத்துச் சென்று வெற்றிபெற்று வருவதாகக் கூறிக் கருணாகரத் தொண்டைமான் என்ற வண்டை நகரத்துக் குறுநில மன்னன் விறுகொண்டு எழுந்தான். அவன் தலைமையில் மாபெரும் படையொன்று திரண்டது. இப்படையில் யானைகள், குதிரைகள், தேர்கள், காலாள்கள் ஆகிய நாற்பிரிவும் அடங்கி யிருந்தன. பாலாறு, குசத்தலையாறு, பொன்முகரி, கொல்லி, வடபெண்ணை, மண்ணாறு, குன்றியாறு, கிருஷ்ணை, கோதா வரி, பம்பை, காயத்திரி, கோதமை ஆறுகள் எல்லாவற்றையும் அப் படை கடந்து சென்று கலிங்கத்தின்மேல் போர்தொடுத்தது (கி.பி. 1110). சோழர்களின் தாக்குதலை எதிர்த்து நிற்கமாட்டா தவனாய்க் கலிங்க மன்னன் அநந்தவர்மன் ஓடி ஒளிந்தான். கலிங்கர் மாற்றுருக்கொண்டு போர்க்களத்தினின்றும் தப்பி யோடினர். சோழர்கள் போர்க்களத்தில் ஆயிரம் யானைகளுக்கு மேல் கொன்று குவித்தனர்; அளவற்ற செல்வத்தையும், குதிரை களையும், யானைகளையும், ஒட்டகங்களையும், மகளிரையும் கலிங்கரிடமிருந்து கைப்பற்றிச் சென்றனர்.

கலிங்க மன்னனின் செருக்கை ஒடுக்கிவிட்டுக் கருணாகரத் தொண்டைமான் வெற்றி முழக்கத்துடன் நாடு திரும்பி வந்து மன்னனிடமிருந்து மாபெரும் வரவேற்பையும் பாராட்டையும் பெற்றான். ஆனால், கலிங்க நாட்டின் ஒரு சிறு பகுதியேனும் சோழப் பேரரசுடன் இணைக்கப் பெறவில்லை.

கன்னோசி மன்னர் காடவாலருடன் நட்புறவு பூண்டிருந்தனர் என்று குலோத்துங்கனின் கல்வெட்டு ஒன்று (கி.பி. 1111) கூறு கின்றது. சோழப் பேரரசு விரிவடைந்துகொண்டிருந்தது. சிங் களம் ஒன்று மட்டும் சுதந்தரம் பெற்றிருந்தது. சோழப் பேரரசின் ஆதிக்கம் கி.பி. 1115 ஆம் ஆண்டளவில் மிக உயர்ந்த நிலையை எட்டியிருந்தது. ஆனால், அடுத்து இரண்டு மூன் றாண்டுகளில் கங்கபாடியும், வேங்கி மாகாணங்களும் சோழரின் பிடியிலிருந்து நழுவிவிட்டன. விஷ்ணுவர்த்தனன் என்ற போசள மன்னன் கங்கபாடியையும், நுளம்பபாடியையும் கைப்பற்றிக் கொண்டான். பிறகு அவன் தழைக்காட்டையும் கைப்பற்றித் தனக்குத் தழைக்காடு கொண்டான் என்றொரு விருதையும் சூட்டிக்கொண்டான். இப் போசள மன்னன் சோழநாட்டின்

மேல் படைசெலுத்தி வந்து இராமேசுவரம் வரையில் முன்னேறினான். ஆடுதுறைக் கோயில் சிலைகளைக் கைப்பற்றி ஹலேபீடு என்ற ஊருக்கு எடுத்துச் செல்ல முயன்றான்; ஆனால், அம் முயற்சி வெற்றி பெறவில்லை.

இந் நிலையில் ஆறாம் விக்கிரமாதித்தன் வேங்கியைக் கைப்பற்றிக் (கி.பி. 1118) குலோத்துங்கன்மேல் தன் பரம்பரை வஞ்சத்தைத் தீர்த்துக்கொண்டான். அவனுடைய வாணாள் வரையில் வேங்கி அவனுடைய ஆட்சிக்கு உட்பட்ட நாடாகவே இருந்து வந்தது. சோழரின் மேலாட்சியிலிருந்து கீழைச் சளுக்க நாட்டைப் பிரித்து வைக்க வேண்டுமென்பதையே அவன் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தான். அந் நோக்கம் நிறைவுபெற்றதும் அவனுடைய இதயமும் அமைதி அடைந்தது.

ஆனால், குலோத்துங்கனின் மன நிறைவு குலைந்தது. அவன் முனைப்புற்று எழுந்தான்; மேலைச் சளுக்கர்மேல் பாய்ந்தான். வேங்கியையும், கங்கபாடியின் சில பகுதிகளையும் மீட்டுக்கொண்டான். வேங்கியைத் தன் நாட்டின் மாகாணங்களுள் ஒன்றாக மாற்றி இணைத்துக்கொண்டான்.

குலோத்துங்கனின் பல விருதுகளையும், சிறப்புப் பெயர்களையும் பூண்டிருந்தான். அவனுடைய ஐந்தாம் ஆட்சியாண்டு வரையில் அவன் பெயர் இராசேந்திரன் என்றே வழங்கி வந்தது. இராச கேசரி, பரகேசரி, திரிபுவன சக்கரவர்த்தி, சர்வலோகாசிரயன், விஷ்ணுவர்த்தனன், பராந்தகன், பெருமானடிகள், விக்கிரம சோழன், குலசேகர பாண்டிய குலாந்தகன் என்ற விருதுகள் அவன் பெயரை அணி செய்ததைக் கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன. விருதராச பயங்கரன், அகளங்கன், அபயன், சயதரன் என்னும் விருதுகளையும் அவன் புனைந்திருந்தான் என்று கலிங்கத்துப் பரணி கூறுகின்றது. குலோத்துங்கன் சுங்கம் தவிர்த்தவன் என்று சில கல்வெட்டுகள் அவனைப் பாராட்டுகின்றன. அவன் மேற்கொண்டு செய்த அரசியல் சீர்திருத்தங்கள் யாவை, எந்தச் சுங்கங்களை அவன் தவிர்த்தவன் என்ற விளக்கங்கள் கிடைக்கவில்லை. சோழநாடு முழுவதிலும் அவன் கி.பி. 1086-ல் நில அளவை ஒன்றைச் செய்து முடித்தான். இதே ஆண்டில் இங்கிலாந்தின் நிலங்கள், உழவரின் உடைமைகள் ஆகியவற்றின் விரிவான கணக்கீடு ஒன்று செய்யப்பட்டது குறிப்பிடவேண்டிய நிகழ்ச்சியாகும்.

குலோத்துங்கனுக்கு ஏழு ஆண்மக்களும் ஒரு பெண்ணும் பிறந்தனர். ஆண் மக்களுள் சோடகங்கன், மும்முடிச் சோழன், வீரசோடன், விக்கிரம சோழன் என்பவர்கள் வேங்கி நாட்டு ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தி வந்தனர். மகள் சிங்கள இளவரசன் ஒருவனுக்கு மணமுடிக்கப் பெற்றாள்.

கங்காபுரி அல்லது கங்கைகொண்டசோழபுரமே குலோத்துங்கனின் தலைநகராகத் தொடர்ந்து விளங்கிவந்தது. காஞ்சிபுரத்திலிருந்தும் பல ஆணைகளைப் பிறப்பிப்பது குலோத்துங்கனுக்கு வழக்கமாக இருந்தது.

### விக்கிரம சோழன் (கி.பி. 1120-1135)

முதலாம் குலோத்துங்கனை யடுத்து அவனுடைய மூத்த மகன் விக்கிரம சோழன் சோழநாட்டுப் பேரரசனாக முடிசூட்டிக் கொண்டான் (கி.பி. 1120). மேலைச் சளுக்க மன்னன் ஆறாம் விக்கிரமாதித்தன் கி.பி. 1126-ல் காலமானான். விக்கிரமன் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டான். வேங்கியின் அரசை மேலும் உறுதிப்படுத்தினான். கங்கபாடியின் ஒரு பகுதியான கோலாரை மீட்டுக்கொண்டான். அவனுடைய ஆட்சியில் கி.பி. 1125ஆம் ஆண்டளவில் வடஆர்க்காடு, தென்னார்க்காடு மாவட்டங்களில் வெள்ளமும் பஞ்சமும் ஏற்பட்டு மக்கள் அல்லலுற்றனர்.

சோழரின் தலைநகரமான கங்கைகொண்டசோழபுரத்துக்கு அண்மையில் சிதம்பரம் அமைந்துள்ளது. அங்குள்ள திருச்சிற்றம்பலம் என்னும் நடராசர் கோயிலுக்கு முதலாம் பராந்தகன் முதல் பின்னிட்டு வந்த சோழர் அனைவரும் அளவற்ற தானங்கள் அளித்து வந்துள்ளனர். விக்கிரம சோழனும் கி.பி. 1128-ல் இக்கோயிலுக்குப் பெரியதொரு நன்கொடை வழங்கினான். நாடு முழுவதிலும் அடிக்கடி சுற்றுலா வரும் நல்லதொரு வழக்கத்தை விக்கிரமன் மேற்கொண்டிருந்தான். அவன் பன்முறை சிதம்பரத்திலும் தங்கியிருந்ததுண்டு. அவனுடைய விருதுகளில் ஒன்றான 'தியாக சமுத்திரம்' என்பது அவனுடைய வள்ளன்மையையும், மற்றொன்றான 'அகளங்கன்' என்பது அவன் வாழ்க்கைத் தூய்மையையும் எடுத்துக் காட்டுகின்றன. சிதம்பரம் நடராசர் கோயிலுக்குப் பல திருப்பணிகள் புரிந்தான். அக் கோயிலின் அமைப்பில் பல புதுமைகளை இயற்றினான். நரலோக வீரன் குலோத்துங்கனின் இறுதி நாள்களில் தொடங்கிய பல திருப்பணிகளை விக்கிரம சோழன் தன் காலத்தில் முற்றுவித்தான். கோயிலின் புறமதிற்சுவருக்கு விக்கிரம சோழன் திருமாளிகை என்று

பெயர் வழங்கி வருகின்றது. மாடவீதிகளுள் ஒன்றுக்கும் இவனுடைய பெயர் வழங்கியதாக இச் சோழனின் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது. விக்கிரமன் திருவரங்கத்து அரங்கநாதர் கோயிலின் ஐந்தாம் திருச்சுற்றைக் கட்டினான் என்று கோயிலொழுகு கூறுகின்றது.

விக்கிரம சோழனுக்குப் பல குறுநில மன்னர்கள் திறை செலுத்தி வந்தனரென விக்கிரம சோழன் உலாக் கூறுகின்றது. சூரை நாயகன் என்கிற மாதவராயன், செங்கேணில் பரம்பரையினரான சம்புவராயர்கள், திருக்காளத்தியின் அண்மையில் அரசாண்ட யாதவராயரின் முன்னோர்கள் அக் குறுநில மன்னருள் சிலர் ஆவர்.

## இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1135-50)

விக்கிரம சோழனை யடுத்து அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கன் அரியணை ஏறினான். முடிசூட்டு விழா சிதம்பரத்தில் சிறப்பாக நடைபெற்றது. குலோத்துங்கன் நடராசர் கோயிலுக்குப் பெரிய திருப்பணிகள் ஆற்றினான். திருச்சிற்றம்பலத்துக்குப் பொன் வேய்ந்தான். நடராசர் கோயிலுக்குள் தெற்றியம்பலத்தில் அமைக்கப்பட்டிருந்த கோவிந்தராசப் பெருமானின் சிலையைப் பெயர்த்தெடுத்துக் கடலில் எறிவித்தான்.

இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் நாட்டில் கலகங்கள், கிளர்ச்சிகள் ஒன்றும் எழவில்லை. சைவ வைணவப் பூசல்கள் மட்டும் தலைதூக்கி நின்றன. பொதுவாக நாட்டில் அமைதி நிலவிற்று; குடிநலம் ஓங்கிற்று. இவன் காலத்தில் சேக்கிழாரும் ஒட்டக்கூத்தரும் வாழ்ந்திருந்தனர். இவனுடைய ஆட்சி கி. பி. 1150-ல் முடிவுற்றது.

## இரண்டாம் இராசராசன் (கி. பி. 1146-1173)

இரண்டாம் குலோத்துங்கனின் வாணாள் முடிவதற்கு நான்காண்டுகட்கு முன்பே அவனுடைய மகன் இரண்டாம் இராசராசன் ஆட்சிப்பொறுப்புகளை ஏற்று நடத்தி வந்தான். அவன் நாட்டிய கல்வெட்டுகள் கி.பி. 1146 ஆம் ஆண்டு முதற்கொண்டே காணப்படுகின்றன. அவனுடன் அரியணையில் அமர்ந்திருந்தவள் அவனிமுழுதுடையாள் என்ற அரசியாவாள். அவளையன்றிப் புவனமுழுதுடையாள், தரணிமுழுதுடையாள், உலகுடைமுக்கோக்கிழான் என்று இராசராசனுக்கு வேறு மூன்று மனைவியருமுண்டு. அவன் முத்தமிழ்த்தலைவன் என்னும் விருது ஒன்றைப்

புனைந்திருந்தான். தமிழ் வளர்ச்சிக்கு அவன் ஆற்றிய பணிகளின் சிறப்பை இவ் விருது எடுத்துக்காட்டுகின்றது.

இரண்டாம் இராசராசன் ஆட்சிக் காலத்தில் இறுதியாண்டு களில் மத்திய ஆட்சியும், மாகாண ஆட்சியும் தளர்ச்சியுறலாயின. குறுநில மன்னர்கள் சோழனின் மேலாட்சியினின்றும் நழுவத் தொடங்கினர். கிராமத்து ஆட்சி முறைகளும், ஊர் வாரியங்களும் எவ்விதமான மாறுதல்களுக்கும் உட்படவில்லையாயினும், மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடும் கோன்முறையும் முதலாம் இராசராசன் காலத்தில் பெற்றிருந்த உறுதியையும் ஒழுங்கு முறையையும் இழந்துவிட்டன.

இராசராசனின் ஆட்சி கி. பி. 1173ஆம் ஆண்டுடன் முடிவுற்றது. அவனுக்குப்பின் இரண்டாம் இராசாதிராசன் பட்ட மேற்றான. இவன் இரண்டாம் இராசராசனின் மகன் அல்லன்; விக்கிரம சோழனுடைய பெண் வயிற்றுப்பேரர்களுள் ஒருவ னாவன்.

### இரண்டாம் இராசாதிராசன் (கி. பி. 1163-1179)

இரண்டாம் இராசராசன் காலத்திலேயே பாண்டி நாட்டில் உள்நாட்டுப் போர் ஒன்று மூண்டது. பராக்கிரம பாண்டியன் என்பவனும் குலசேகர பாண்டியன் என்பவனும் அரசுரி மையை நாடினர். பராக்கிரம பாண்டியன் என்பவன் சிங்கள மன்னன் பராக்கிரமபாகுவின் படைத்துணைக்காக விண்ணப்பம் அனுப்பியிருந்தான். காலத்தில் படைகள் வந்து அவனுக்கு உதவவில்லை. அதற்குள் குலசேகர பாண்டியன் பராக்கிரம பாண்டியனையும் அவனுடைய குடும்பத்தினர் சிலரையும் கொன்று மதுரையைக் கைப்பற்றினான். சிங்களப்படை இலங்கா புரன் என்பவன் தலைமையில் மதுரையை அடைந்தது. மதுரைக் குள் நுழைந்து இப் படைத்தலைவன் பல இடங்களையும் அழித் தான். பராக்கிரம பாண்டியன் மகன் வீரபாண்டியனை அரியணை ஏற்றினான். ஆனால், சோழரின் துணையை நாடிய குலசேகர னுக்கு நற்காலம் பிறந்தது. சோழர்கள் அவனை மீண்டும் பாண்டி நாட்டு மன்னனாக முடிசூட்டினர். அஃதுடன் அமையாமல் சோழர்கள் சிங்களத்தின்மேல் படையெடுத்துச் சென்றனர். சந்தர்ப்பவாதியான பராக்கிரமபாகு என்பான் குலசேகர பாண் டியனுடன் நட்புறவு ஏற்படுத்திக்கொண்டான். குலசேகரன், சோழர் தனக்குச் செய்த நன்றியைக் கொன்று அவர்களையே எதிர்க்கலானான். சோழர்கள் அரசியல் சூழ்ச்சியில் பாண்டிய ருக்கு எவ்வகையிலும் பிற்பட்டவர்கள் அல்லர். அவர்கள் வீர

பாண்டியனுடன் உறவு பூண்டு அவனைப் பாண்டி நாட்டு அரியணையில் ஏற்றி வைத்தனர். சோழர், பாண்டியர், சிங்களவர் இம் மூன்று நாட்டு மன்னர்களும் விளையாடிய அரசியல் சூதாட்டம் இரண்டாம் இராசராசன் ஆட்சிக்குப் பிறகு கி.பி. 1179 வரையில் தொடர்ந்து நடைபெற்று வந்தது.

## மூன்றாம் குலோத்துங்கன் (கி. பி. 1178-1216)

இரண்டாம் இராசாதிராசனின் விருப்பப்படியே அவனுக்குப் பிறகு மூன்றாம் குலோத்துங்கன் அரசுகட்டில் ஏறினான். மூன்றாம் குலோத்துங்கன் சோழப்பேரரசர்களின் நேரான பரம்பரையில் வந்தவனல்லன். இவனுக்கும் இரண்டாம் இராசாதிராசனுக்கும் எந்த வகையான உறவு என்பது விளங்கவில்லை. மூன்றாம் குலோத்துங்கன் பட்டமேற்றவுடனே வீரபாண்டியன் மீண்டும் சிங்களவருடன் அரசியல் சூழ்ச்சிகளில் இறங்கிச் சோழரை எதிர்க்கலானான். குலோத்துங்கன் வீரபாண்டியனைக் கவிழ்த்துக் குலசேகர பாண்டியனின் உறவினனான விக்கிரம பாண்டியனுக்குப் பட்டம் சூட்டுவித்தான் (கி.பி. 1182). கேரள மன்னனின் துணைகொண்டு வீரபாண்டியன் மீண்டும் அரசியல் கிளர்ச்சிகளில் இறங்கினான். ஆனால், குலோத்துங்கன் அவனை முறியடித்தான். வீரபாண்டியன் கொல்லத்தில் அடைக்கலம் புகுந்தான். வழக்கம்போல் சிங்களமும் இக்கிளர்ச்சியில் தலையிட்டது. எனினும், சோழரின் படைவலிக்கு அது அடிபணிய வேண்டியதாயிற்று. எனினும், சிங்கள மன்னன் நிகசங்கமல்லன் இருமுறை பாண்டி நாட்டின்மேல் படையெடுத்து வந்து இராமேசுவரத்தைக் கைப்பற்றினானெனச் சிங்களத்து வரலாறுகள் கூறுகின்றன.

குலோத்துங்கன் கி.பி. 1190-94 ஆண்டுகளில் பலமுறை கொங்கு நாட்டின்மேல் படையெடுத்துக் கிளர்ச்சிகளை ஒடுக்கிச் சோழப் பேரரசின் மேலாட்சியை நிலைநாட்ட வேண்டிய நிலைமை ஏற்பட்டது. வடஆர்க்காட்டுக்கும் நெல்லூருக்கும் இடையிட்ட நாடு தெலுங்குச் சோடரின் ஆட்சியில் இருந்து வந்தது. காஞ்சிபுரமும் அவர்கள் கைவசத்திலேயே இருந்தது. சோழருக்கும் தெலுங்குச் சோடருக்குமிடையே நல்லுறவு பொருந்தியிருந்தது. எனினும், குலோத்துங்கன் அவர்களிடமிருந்து காஞ்சியைக் கைப்பற்றிக் கொண்டான் (கி.பி. 1196).

இச் சமயத்தில் சடாவர்மன் குலசேகரன் பாண்டி நாட்டை ஆண்டுகொண்டிருந்தான். இவன் விக்கிரம பாண்டியனின் மகன் போலும். இவன் சோழரின் மேலாட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தான். குலோத்துங்கன் பெரும் படையொன்றைப்

பாண்டி நாட்டின்மேல் ஏவி, அந் நாட்டின் பல இடங்களை அழித்தான். மதுரையில் எழுப்பப்பட்டிருந்த முடிசூட்டு விழா மண்டபத்தை இடித்து நிரவினான். சடாவர்மன் படுதோல்வியடைந்தான். எனினும், சோழன் பாண்டி நாட்டு ஆட்சியை அவனிடமே ஒப்படைத்தான் (கி. பி. 1205).

குலோத்துங்கன் ஆந்திர நாட்டின் மேலும் ஒருமுறை படையெடுக்க வேண்டியிருந்தது (கி. பி. 1208).

பாண்டியர்கள் சோழரை எதிர்த்துச் செய்துவந்த கிளர்ச்சிகள் ஓய்வு காணவில்லை. சடாவர்மன் சுந்தரபாண்டியனையடுத்து அவன் தம்பி முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் அரியணையேறி இருந்தான். சோழரின் மேலாட்சிக்கு இறுதி ஒன்றைக் காணும் முயற்சியில் அவன் முழுமூச்சுடன் இறங்கினான். சோழ நாட்டின்மேல் படையெடுத்துப் போரில் வெற்றி கண்டான். குலோத்துங்கன் தோல்வியுற்றான். சோழர்களுக்குத் தக்க காலத்தில் போசளர்களின் படைத்துணை கிடைத்தது. எனவே, சுந்தர பாண்டியன் தான் பெற்ற வெற்றியின் பயன் முழுவதையும் துய்க்கும் வாய்ப்பைப் பெற்றிலன்.

குலோத்துங்கன் பேராற்றலும், நுண்ணறிவும், அரசியல் சூழ்ச்சித் திறனும் வாய்க்கப் பெற்றவன். அவனுடைய ஆட்சிக் காலம் முழுவதும் பாண்டியரின் பகையைத் தேய்த்துத் தன் வலியைப் பெருக்கிக் கொள்ளுவதிலேயே கழிந்தது. 'மதுரையும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளிய' என்ற விருது ஒன்றைத் தன் பேருடன் இணைத்துக்கொண்டான். தனக்குத் திறை செலுத்திவந்த மன்னர்கள் தன்னை மீறாதவாறு அவர்களை ஒடுக்கி வந்தானாயினும், தெலுங்குச் சோடர்கள், பாணர்கள், சம்புவராயர்கள், காடவர்கள், மலையமான்கள், அதிகமான்கள் ஆகிய குறுநில மன்னர்கள் படிப்படியாகத் தம் அரசாதிக்கத்தை வளர்த்து வந்தனர். சோழரது பேரரசின் ஆட்சியும் தளர்ச்சியுற்று வந்தது.

மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலும் கங்கைகொண்ட சோழபுரமே சோழப் பேரரசின் தலைநகரமாகத் தொடர்ந்து செயல்பட்டு வந்தது. சோழ நாட்டில் இரண்டாண்டுக் காலம் (கி. பி. 1201-2) கொடும் பஞ்சம் ஒன்று ஏற்பட்டுக் குடிமக்கள் அவதியுற்றனர். பஞ்ச நிவாரணப் பணிகள் பல அரசாங்கத்தின் சார்பில் மேற்கொள்ளப்பட்டன. தனிப்பட்டவர்களும் நிவாரணப் பணியில் பங்கு கொண்டனர்.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலைப் போலவும், கங்கை கொண்ட சோழீச்சுரம்போலவும் மூன்றாம் குலோத்துங்கன் கும்பகோணத்துக்கு அண்மையிலுள்ள திரிபுவனம் என்னும் ஊரில் அழகும், அமைப்பும் வாய்ந்த சிவன்கோயில் ஒன்றை எழுப்பினான். அவனுடைய கலைத்திறனுக்கும், சிவ பக்திக்கும், இதய விரிவுக்கும் அழியாச் சின்னமாக உயர்ந்து நின்று வருகின்றது அக்கோயில்.

## மூன்றாம் இராசராசன் (கி. பி. 1216-1246)

குலோத்துங்கனையடுத்து மூன்றாம் இராசராசன் முடிசூட்டிக் கொண்டான். இவ்விருவரும் எம் முறைக் கேளிர் என்று விளங்கவில்லை. ஒருவேளை இராசராசன் குலோத்துங்கனின் மகனாகவும் இருக்கக்கூடும். இராசராசன் அரியணையில் அமர்ந்தவுடனே அரசியல் சுழிகள் இவனை விழுங்கக் காத்துக்கொண்டிருந்தன. பாண்டியரின் செல்வாக்கு உயர்ந்துகொண்டே போயிற்று. போசளர், காடவர்கள், தெலுங்குச் சோடர்கள் ஆகியவர்கள் ஒருபுறம் இராசராசன்மேல் பாயக் காலங்கருதி வந்தனர். பாண்டியருடன் சோழர் மேற்கொண்டிருந்த சமாதான உடன்படிக்கையை இராசராசன் மீறினான். உடனே பாண்டியர்கள் சோழ நாட்டின்மேல் படையெடுத்து வந்து தலைநகரைக் கைப்பற்றிக் கொண்டனர். இராசராசன் நாட்டைக் கைவிட்டு ஓடினான். காடவராயன் கோப்பெருஞ்சிங்கன் என்பான் அவனைத் தாக்கிச் சிறையிட்டான் (கி.பி. 1231).

மேற்கில் போசளர்களின் கையும் ஓங்கி வந்தது. அரசியல் செல்வாக்கிலும், சூழ்ச்சியிலும், படைவலியிலும் அவர்கள் மேம்பட்டு வந்தனர். போசள மன்னன் இரண்டாம் வல்லாளன் (கி.பி. 1173-1220) என்பவன் சோழ நாட்டு இளவரசி ஒருத்தியை மணம் புரிந்திருந்தான். அவள் வயிற்றுப் பிள்ளை இரண்டாம் நரசிம்மன் சோழப் பேரரசன் இராசராசனைச் சிறையிட்டு வைத்த கோப்பெருஞ்சிங்கனின் நெஞ்சுரத்தைக் கண்டு வெகுண்டான். இராசராசன் சேந்தமங்கலத்தில் சிறைசெய்யப்பட்டிருந்தான். கோப்பெருஞ்சிங்கன் சோழ நாட்டில் பல் இடங்களிலும் தன் படைகளை ஏவிக் கோயில்களையும் இடித்து நிரவினான். இரண்டாம் நரசிம்மன் தன் தலைநகரமான துவாரசமுத்திரத்தை விட்டுப் புறப்பட்டு வந்து, திருவரங்கத்துக்கு அண்மையில் உள்ள பாச்சூரில் தண்டு நிறுத்தினான்; திருவரங்கத்தையும், காஞ்சிபுரத்தையும் கைப்பற்றினான்; தன் படைத்தலைவர் இருவரைக் கோப்பெருஞ்சிங்கன்மேல் செலுத்திவிட்டு இராமேசுவரம் சென்று அங்கு வெற்றித் தூண் ஒன்றை நாட்டினான் (கி. பி. 1231-2). படைத் தலைவர்களான அப்பண்ணாவும் சமுத்திர

கோபய்யாவும் இராசராச சோழனைச் சிறையினின்றும் விடுவித்துக் கோப்பெருஞ்சிங்கனுக்குத் துணையாக வந்தவனான சிங்களத்து இளவரசன் ஒருவனையும் கொன்றனர். சோழநாட்டைக் காடவனிடமிருந்து மீட்டு நிலைநிறுத்தின தன் பெருமையைப் பாராட்டிக் கொள்ளும் வகையில் நரசிம்மன் 'சோழ ராச்சிய பிரதிஷ்டாபனாசாரியன்' என்றொரு விருதைப் புனைந்தான். அவன் பாண்டி நாட்டைத் தாக்கிப் பாண்டி மன்னனை அடிபணிய வைத்து அவனிடம் திறை கவர்ந்தான். எனினும், அவனுடன் திருமணத் தொடர்புகள் மேற்கொண்டான். இயல்பாகவே பாண்டிய-போசள உறவுகள் வலுவுற்றன. போசளருக்குக் கீழ்ப்பட்டதொரு நிலைக்குச் சோழர் இருந்து வரலானார்கள். சோழரின் மேலாட்சி தளர்வுற்றவுடனே சோழப் பேரரசுக்குத் திறை செலுத்தி வந்த நாடுகள் யாவும் சுதந்தரம் பெற்றுக் கொண்டன. பாண்டியரின் உறவையும் சோழரின் பணிவையும் பெற்ற போசள மன்னனுக்குத் தமிழகத்தில் செருக்கும் செல்வாக்கும் அதுவரையில் காணப்படாத அளவு உயர்ந்து வந்தன. இரண்டாம் நரசிம்மனின் மகன் (கி.பி.1234-63) தமிழகத்திலேயே, திருச்சிராப்பள்ளியை யடுத்த கண்ணனூரில் தங்கிச் சோழரின் ஆட்சியில் அடிக்கடி தலையிட்டுத் தன் அரசியல் ஆதிக்கத்தைப்பெருக்கிக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டுக்கொண்டிருந்தான். இந் நிலையில் மூன்றாம் இராசராசனின் வாணாள் முடிவுற்றது; மூன்றாம் இராசேந்திரனின் ஆட்சி தொடங்கிற்று.

### மூன்றாம் இராசேந்திரன் (கி.பி.1246-1279)

மூன்றாம் இராசேந்திரன் தன் செல்வாக்கை மீண்டும் உயர்த்திக்கொள்ளும் பொருட்டுத் தெலுங்குச் சோடரின் துணையை நாடினான். பாண்டியரின் சார்பில் போசளர் படைபலம் வழங்கி வந்தும் இராசராசன் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனைப் போரில் புறங்கண்டு சோழரின் தாழ்வுற்ற கொடியை நிமிர்த்தி நாட்டினான். இப் பாண்டியனை யடுத்து முதலாம் சடாவர்மன் சுந்தரபாண்டியன் பட்டமெய்தினான். அவன் ஆட்சியரியணையில் அமர்ந்தவுடனே நரசிம்மனையடுத்துப் போசளர் மன்னனான சோமேசுவரனின் அரசியலில் மாறாட்டம் ஒன்று கண்டது. அவன் பாண்டியரைக் கைவிட்டுச் சோழரின் நட்புறவுக்குத் தாவினான். சோழப்பேரரசுக்கு வடக்கில் ஒரு தொல்லை ஏற்பட்டது. காகதீய மன்னன் கணபதி என்பான் கி.பி. 1250-ல் காஞ்சியைக் கைப்பற்றினான். சடாவர்மன் சுந்தரபாண்டியனுக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அவன் மிகவும் பெரியதொரு படை திரட்டிக்கொண்டு சோழநாட்டின் மேல் பாய்ந்தான். சோமேசுவரன் போர்க்களத்தில் புண்பட்டு

வீரமரணம் எய்தினான். பாண்டியன் சோழரின் படைகளை முறி யடித்தான். கோப்பெருஞ்சிங்கனிடம் திறை கவர்ந்து அவனைத் தனக்குக் கீழ்ப்பட்ட குறுநில மன்னருள் ஒருவனாக்கினான். வெற்றியினால் ஊக்கப்பட்டு அவன் மேலும் வடக்கு நோக்கிப் படை செலுத்திச் சென்றான். தெலுங்குச் சோடருடன் கை கலந்து அவர்களை வீழ்த்தினான். காஞ்சியைக் கைப்பற்றியிருந்த காகதீயரை நகரைவிட்டு விரட்டியோட்டினான். மேலும் வடக்கே சென்று இப் பாண்டியன் நெல்லூரையும் கைப்பற்றி னான். இராசராச சோழனும், இராசேந்திர சோழனும் எழுப்பிய வெற்றிக் கோட்டைகள் சரிந்தன. சோழப் பேரரசு சிதறுண்டது; பாண்டி நாட்டுக்குத் திறை செலுத்துமளவுக்கு அதன் ஆக்கம் குன்றிவிட்டது.

### கோப்பெருஞ்சிங்கன் (கி. பி. 1229-1278)

பாண்டியரும், போசளரும், காகதீயரும் மேற்கொண்ட அரசியற் சூதாட்ட அரங்கில் காடவர்கோன் கோப்பெருஞ் சிங்கனின் பெயரானது சுடர்விட்டு ஒளிர்கின்றது. சோழர் பாண்டியர், போசளர் ஆகியவர்கள் அனைவரையுமே வென்று வாகை சூடியதாக விருதுகள் பல புனைந்து கொண்டான். பாண்டிய மண்டல தாபனசூத்ரதாரன், சகேளதர சுந்தரன், கர்ணாடலக்ஷ்மீலுண்டாகன், காடகுல திலகன், பெண்ணான தீநாதன் என்பன அவற்றுள் சிலவாம்.

கோப்பெருஞ்சிங்கன் தென்னார்க்காடு மாவட்டம் சேந்தமங் கலத்திலிருந்து அரசாண்டான். பல்லவர் அல்லது காடு வெட்டிகள் பரம்பரையில் தான் தோன்றியதாகப் பெருமை பிதற்றி வந்தான். தெற்கில் தஞ்சாவூர் மாவட்டம் முதல் வடக்கே கோதாவரி மாவட்டம் வரையில் இவனுடைய கல் வெட்டுகள் காணப்படுகின்றன.

கோப்பெருஞ்சிங்கனுக்குச் சிதம்பரம் நடராசரிடம் அளவு கடந்த அன்புண்டு. சிதம்பரம் கோயிலின் தெற்குக் கோபுரத்தை எழுப்பிய பெருமை இவனையே சாரும். இவன் தனக்குப் பரத மல்லன் என்ற விருது ஒன்றை இணைத்துக்கொண்டது நேர்மை யானதென்றே கொள்ள வேண்டியது.

இராசராச சோழமன்னன்கீழ்க் குறுநிலமன்னனாகத் தன் ஆட்சியைத் தொடங்கிய கோப்பெருஞ்சிங்கன், அப் பேரரச னையே தெள்ளாற்றுப் போரில் தோல்வியுறச் செய்தான் (கி.பி. 1231). அவனைச் சேந்தமங்கலத்தில் சிறையிட்டும் வைத்தான். போசள நரசிம்மன் சோழர் சார்பில் தலை

யிட்டதன் பேரில் இராசராசனைக் கோப்பெருஞ்சிங்கன் சிறையி னின்றும் விடுவித்தான். ஆனால், மீண்டும் சோழப் பேரரசுக்குத் தலை வணங்கினான். எனினும், தன் விடாமுயற்சியை அவன் கைவிட்டானல்லன். பெரம்பலூர் என்னும் இடத்தில் போசள ருடன் போர் தொடுத்து அவர்களைத் தோல்வியுறச் செய்து அவர்களுடைய மகளிரையும் சிறைபிடித்துச் சென்றான். அப் போரில் தான் இழைத்த கொடுமைகளுக்குக் கழுவாயாகப் பழமலைநாதருக்குப் பல நிவந்தங்கள் வழங்கினான்.

கோப்பெருஞ்சிங்கனின் வாழ்க்கையில் விதி விளையாடிற்று. சடாவர்மன் சுந்தர பாண்டியன் சேந்தமங்கலத்தை முற்றுகை யிட்டுக் கைப்பற்றினான் (கி.பி. 1255). கோப்பெருஞ்சிங்கன் மீண்டும் வேற்றரசு ஒன்றுக்கு அடிமையானான். பாண்டிய மன்னனின் வடக்கத்திய போர்முனைகளுக்குத் தன் படைத் துணையையும் நல்கினான்.

## பாண்டியர்கள்

தமிழக வரலாற்றில் மாபெரும் திருப்பம் ஒன்றை இக் காலத்தில் காண்கிறோம். சோழர் குலம் தாழ்கின்றது; பாண்டியர் குலம் உயர்கின்றது; கங்கை கொண்ட சோழ புரத்தில் வளர்ந்து கொண்டிருந்த சோழரின் கொற்றம் மங்கி விடுகின்றது. சடாவர்மன் சுந்தரபாண்டியன் பாண்டிய நாட்டுப் பேரரசு ஒன்றைத் தொடக்கிப் பண்டைய பாண்டியர் ஏற்றி வைத்துச் சென்ற புகழொளியைத் தூண்டிவிட்டான். சடா வர்மன் கி.பி. 1251-ல் அரியணை ஏறினான். வீரத்திலும், ஆட்சித் திறனிலும் அவனுக்கு இணை அவனேதான். பாண்டி நாட்டுப் பேரரசுக்கு இரண்டாம் முறையாகத் தமிழகத்தில் மட்டற்ற செல்வாக்கையும் சீரையும் தேடித் தந்தான். சோழரும் போசளரும் அவனுடைய வீரத்திற்கும் கொற்றத்துக்கும் தலை வணங்கினர். வடக்கே கிருஷ்ணை நதிவரையில் இவனுடைய ஆட்சி ஓங்கி நின்றது. காடவரையும், தெலுங்குச் சோடரையும் வென்று நெல்லூரில் அவன் வெற்றி நீராட்டு விழா அயர்ந்தான்.

இராசேந்திர சோழனின் வாணாளின் இறுதிக்குள் பாண்டியப் பேரரசு அரசியல் வானில் கதிரவன்போல் சுடர்விட்டு ஒளிர்ந்தது. சீனரும் அரபியரும் தம் வரலாறுகளில் இக் காலத்துப் பாண்டி யரின் ஆக்கத்தைக் குறிப்பிட்டுள்ளனர். மூன்றாம் இராசேந்திர னுக்குப் பின் சோழநாடு முடிசூட்டு விழா ஒன்றைக் கொண் டாடும் பேற்றை இழந்துவிட்டது. சோழ நாடானது பாண்டிய நாட்டுடன் இணைந்து ஞாயிற்றின் ஒளியில் கலந்த விளக்கொளி யாகக் கரைந்துவிட்டது.

# 14. சோழர் காலத்தில் தமிழரின் சமுதாயம்

## (கி. பி. 10ஆம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரை)

சங்க காலத்து மன்னரைப் போலவே சோழப் பேரரசர்களும் திருமாலின் அவதாரங்களாகக் கருதப்பட்டு வந்தனர். நாட்டு ஆட்சியின் முழுப்பொறுப்பும் அவர்கள் கையிலேயே ஒடுங்கியிருந்தது. நாட்டின் எல்லைகளின் வளர்ச்சிக்கு ஏற்றவாறு அவர்களுடைய பெருமையும் விரிவடைந்து வந்தது. சோழ மன்னர்கள் தம்மைச் 'சக்கரவர்த்திகள்' என்றே மெய்க்கீர்த்திகளில் பெருமைப்படுத்திக் கொண்டனர். மன்னரின் இல்வாழ்க்கை இன்பகரமாகவும் பயனுள்ள வகையிலும் ஓடிக்கொண்டிருந்தது. அவர்கள் பெரிய அரண்மனைகளில் வாழ்ந்து வந்தனர். மன்னருக்கும் அவருடைய குடும்பத்துக்கும் பணி செய்வதற்கென்று பல ஊழியர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர். அரசர்களுக்கு மெய்காப்பாளர்கள் பலர் தொண்டு புரிந்து வந்தனர். பல தொழில்களில் பெண்கள் அமர்த்தப்பட்டிருந்தனர். அரண்மனை நீராட்டு அறையிலும், மடைப்பள்ளியிலும் பெரும்பாலார் பெண்களே பணிபுரிவது வழக்கமாய் இருந்தது. அரண்மனைப்பணிப்பெண்களுக்கு அக் காலத்தில் பொதுவாகப் பெண்டாட்டிகள் எனப் பெயர் வழங்கி வந்தது.[1] முதலாம் இராசேந்திரனின் சமையற்காரி ஒருத்தி 'திருவமுதிடும் பெண்டாட்டி' என்று குறிப்பிடப் பட்டுள்ளாள்.[2] அகமுடையாள்,[3] என்னும் சொல்லும் மணவாட்டி[4] என்னும் சொல்லும் மனைவியைக் குறித்து நின்றன. இப்போது பெண்டாட்டி என்னும் சொல் மனைவி என்னும் பொருளில் வழங்கி வருகின்றது.

அரண்மனைப் பணியாளருக்கெனத் தனி விடுதிகளும் தெருக்களும் அமைந்திருந்தன. அவ் விடுதிகளுக்கு 'வேளம்' என்று பெயர். அவற்றுள் சில அபிமானபூஷண தெரிந்த வேளம், உய்யக்

1. S. I. I. III. No. 110.
2. T. A. S. I. P. 161.
3. S. I. I. IV. No. 616.
4. S. I. I. VI. No. 507. 512

கொண்டான் தெரிந்த திருமஞ்சனட்டார் வேளம், இராசராச தெரிந்த பாண்டித் திருமஞ்சனத்தார் வேளம் என்பனவாம்.[5] குறிப்பிட்ட ஒரு பணியில் ஈடுபட்டிருந்த தொழிலாளருக்கெனத் தனி வேளம் ஒன்று ஒதுக்கப்பட்டிருந்தது. தஞ்சாவூரில் இவ் வேளங்கள் யாவும் நகரின் எல்லைக்கு அப்பால் 'புறம்பாடி' யில் அமைக்கப்பட்டிருந்தன. கங்கைகொண்ட சோழபுரத்திலும் வேளங்கள் உண்டு. போரில் சிறைபிடிக்கப்பட்ட ஆண்களும் பெண்களுமே பெரும்பாலும் வேளத்தில் அமர்த்தப்பட்டனர். வேளத்தைச் சேர்ந்தவர்களின் தொழில் இழிவானதாகக் கருதப் படவில்லை.

சோழ மன்னர்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள். குரு ஒருவரிடம் தீட்சை பெறவேண்டும் என்பது சைவ சமயக் கோட்பாடுகளுள் தலையாய தொன்றாகும். ஆகவே, அரசவையில் மன்னரின் குருக்கள் சிறப்பிடம் பெற்று அமர்ந்திருப்பது வழக்கமாக இருந்தது. முதலாம் இராசராசன் கல்வெட்டுகளிலும், முதலாம் இராசேந்திரன் கல்வெட்டுகளிலும் ஈசான பண்டிதர், சர்வசிவ பண்டிதர், பவன பிடாரன் என்ற குருமாரின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.[6] முதலாம் குலோத்துங்கன் தன்னுடைய குலகுருவைக் கலந்துகொண்டு, அவருடைய உடன்பாட்டின் மேல் நூற்றெட்டுச் சதுர்வேதிப் பட்டர்களுக்குப் பிரமதேயம் ஒன்றைத் தானமாக வழங்கினான். சமயச் சார்பான நிறுவனங்களின் நிருவாகத்தை மூன்றாம் குலோத்துங்கன் தன் 'சுவாமி தேவர்' (குரு) வசமே ஒப்படைத்திருந்தான்.

சோழவேந்தர்கள் எழுப்பிய கோயில்களுக்குப் பெரும்பாலும் அம் மன்னனின் பெயரையோ, விருதுப் பெயர்களில் ஏதேனும் ஒன்றையோ சூட்டுவது வழக்கமாய் இருந்தது. இராசராசன் கட்டிய கோயிலுக்கு இராசராசேசுவரம் என்றும், கங்கை கொண்ட சோழனான இராசேந்திரன் எழுப்பிய கோயிலுக்குக் கங்கைகொண்ட சோழீசுரம் என்றும் பெயர்கள் வழங்கிவருவது இவ் வழக்கத்துக்குச் சான்றாகும். உயிரிழந்த மன்னருக்கு நினைவுச் சின்னங்களாகவும் சில கோயில்கள் எழுப்பப்பட்டன. முதலாம் பராந்தகன் தொண்டைமானாட்டில் ஆதித்தியேசுரம் என்ற கோயிலைத் தன் தந்தையின் பள்ளிப்படையாக எழுப்பினான். முதலாம் இராசராசன் ஆற்றூரில் துஞ்சிய அரிஞ்சயனுக்கு மேல்பாடியில் அரிஞ்சிகையீசுரம் என்ற கோயிலை எழுப்பினான். இத்தகைய கோயில்கள் மேலும் பல உள.

5. S.I.I. II 53. 94 6. S. I. I. II No. 90

சோழ வேந்தரின் சிலைகள் சில கோயில்களில் வைக்கப் பட்டுள்ளன. அவற்றுக்கு முறையான வழிபாடுகளும் நடை பெற்று வந்துள்ளன. இரண்டாம் சுந்தர சோழன் பராந்தகனின் மகளான குந்தவை பிராட்டியார் தன் தாய்க்கும், தந்தைக்கும் சிலைகள் வைத்து வழிபாடு நிறுவினாள்.[7]

படைகள்

எல்லாப் படைகளுக்கும் தலைவனாக மன்னன் செயல்பட்டு வந்தான். சோழரிடம் ஆற்றல்மிக்க தரைப் படையும், கப்பற் படையும் இருந்தன. இப் படைகளின் பிரிவுகள் ஒவ்வொன் றுக்கும் தனித்தனிப் பெயர்கள் வழங்கி வந்தன. யானைப் படைகளும் குதிரைப் படைகளும், சோழரின் அணிவகுப்புகளில் சிறப்பிடம் பெற்றன. காலாட் படையில் சிறப்பிடம் பெற்றது கைக்கோளப் பெரும்படை என்பது.[8] கைக்கோளர் என்ற பெயர் வெற்றியைக் கைக்கொள்ளும் சிறந்த வீரர் என்ற பொருளில் வழங்கி வந்தது. அது மட்டுமன்றி அச் சொல் ஒரு குலத்தைக் குறிப்பிடுவதாகவும் கல்வெட்டுகளிலிருந்து அறி கின்றோம். கைக்கோளப்படை அல்லாமல் வில்லிகளையும், வாள் வீரர்களையும் கொண்ட படைகள் வேறு நிறுவப்பெற் றிருந்தன. வலங்கை இடங்கை என்னும் பாகுபாடுகளைத் தமிழகத்து வரலாற்றில் முதன்முதல் சோழரின் ஆட்சியில்தான் காண்கின்றோம். வலங்கை வேளைக்காரர்படை என அணி ஒன்று சிறப்புற்றுக் காணப்பட்டது. இடங்கைப் படை என்று ஒரு பிரிவு இலங்கையில் வகுக்கப்பட்டிருந்ததாகப் பொலன் னருவையில் காணப்பெறும் விசயபாகு என்ற மன்னனின் கல் வெட்டு ஒன்று (கி.பி. 1065—1120) தெரிவிக்கின்றது. வேளைக் காரர்கள் என்பவர்கள் அரசனுக்கு அணுக்கத்திலேயே நின்று அவனுக்குத் தொண்டு செய்தவர்கள் ஆவார்கள். மன்னனுக்கு விளையக்கூடிய எந்த வகையான இன்னல்களையும், ஊறுகளை யும் வேளைக்காரர்கள் தாமே ஏற்றுக்கொள்ளுவார்கள்; தமக்கு எந்தவிதமான ஊறுபாடும் ஏற்படாதவாறு காக்கின்ற கடவுள் முருகன் என்னும் பொருள்படத் தம் திருப்புகழ்ப் பாடல் ஒன்றில் முருகக் கடவுளை அருணகிரிநாத சுவாமிகள் 'வேளைக்காரப் பெருமாளே' என்று பாராட்டுகின்றார்.

முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் ஆகிய வர்கள் காலத்தில் மூன்று கை மகாசேனை என்று ஒரு படையும்

7. S. I.I. II. No. 73, 76.
8. S. I.I. VII. No. 112.
9 Ep. Ind. XVIII. No. 38.

திரட்டப்பட்டிருந்ததாகத் தெரிகின்றது. இப் படை வைணவ ஈடுபாடு உடையதாக இருந்தது. கன்னரதேவனை அது தோற்றோடச் செய்ததாம். மேலும், அது கடல் கடந்து சென்று ஈழ நாட்டு மாதோட்டத்தை அழித்துப் பல வீரச் செயல்கள் புரிந்து சோழ மன்னனுக்கு மாபெரும் வெற்றிகளை ஈட்டித் தந்தது.

சோழநாடு முழுவதிலும் ஆங்காங்குப் படைகள் நிறுத்தப் பட்டிருந்தன. படைகள் தங்கியிருந்த தண்டுகளுக்குக் 'கடகங்கள்' என்று பெயர். எந்தெந்த ஊர்களில் படைகள் தங்கியிருந்தனவோ அந்த ஊர்களில் இருந்த கோயில்களின் பாதுகாப்பும் கோபுரங்களின் பாதுகாப்பும் அப் படைகளின் கையில் ஒப்படைக்கப்பட்டிருந்தன.[10] படைகள் திரட்டப்பட்ட விதமும், அவற்றுக்குப் பயிற்சியளிக்கப்பட்ட முறையும் அறிந்துகொள்ள முடியவில்லை.

சோழ மன்னர் போர்ப்படைகளில் அறுபதினாயிரம் யானைகளும் பல்லாயிரக் கணக்கான குதிரைகளும் இருந்தன. தமிழ் மக்கள் இந்தோனேசியா, மலேசியா ஆகிய கிழக்கிந்திய நாடுகளிலும், இலங்கையிலும் பெருந்தொகையினர் குடியேறியிருந்தனர். பல்லவர்கள் காலத்திலிருந்தே கடலுக்கப்பால் உற்ற நாடுகளுடன் தொடர்பு வளர்ந்து வந்தது. ஆகவே, சோழர் பாண்டியர், சேரர் ஆகிய மூவரிடமும் சிறந்த கப்பல் படைகள் இருந்து வந்தன. ஆனால், கப்பல்களின் அளவும், அவை கட்டப்பட்ட முறைகளும் இன்னவென அறிவிக்கக் கூடிய நூல்களோ, ஆவணங்களோ ஒன்றேனும் இன்று கிடைத்திலது.

நாட்டு ஆட்சிக்குத் தலைவன் மன்னன். அவன் சிற்சில இடங்களில் அமர்ந்து குடிமக்களின் விண்ணப்பங்களை ஏற்று ஆணைகளைப் பிறப்பிப்பான். அரசன் மொழியும் ஆணைகள் வாய்மொழியாகவே இருக்கும். அவற்றுக்குத் திருவாய்க் கேள்விகள் என்று பெயர். இவ் வாணைகளைக் கேட்டு உரியவர்களுக்கு எழுத்து மூலம் அனுப்பி வைக்கும் பொறுப்புடையவனுக்கும் திருவாய்க்கேள்வி என்றே பெயர். வேந்தன் ஆணை பிறக்கும் முறையும், அது நிறைவேற்றப்பட்ட முறையும் முதலாம் இராசராசனின் செப்பேடுகளில் விளக்கப்பட்டுள்ளன.[11] இச்செப்பேடுகள் இப்போது ஐரோப்பாவில் லீடன் என்னும் ஊர்ப் பொருட்காட்சி

10. Ep. Rep. 189/1895.
Ep. Rep. 167/1909.
Ep. Rep. 188/1925.
11. Ep. Ind. XXII. No 34 p. 213

சாலையில் வைக்கப்பட்டுள்ளதால் அவை லீடன் செப்பேடுகள் என்னும் பெயராலேயே வழங்கி வருகின்றன. ஸ்ரீவிசய நாட்டு மன்னன் சூளாமணிவர்மன் என்பவன் தமிழகத்தில் நாகப்பட்டினத்தில் சூடாமணி விகாரை என்று ஓர் ஆலயத்தைப் புத்த பகவானுக்கு எடுப்பித்த செய்தியையும், அந்த மன்னனின் வேண்டுகோளுக்கிணங்கிச் சோழ மன்னன் அக் கோயிலுக்கு ஆனை மங்கலம் என்ற சிற்றூர் ஒன்றைத் தானமாகக் கொடுத்த செய்தியையும் லீடன் பட்டயங்கள் தெரிவிக்கின்றன.

சோழ மன்னன் வாய்மொழியாகப் பிறப்பித்த ஆணையைக் கோட்டத்து அவையினரான நாட்டார்கள், பிரமதேயக் கிழவர்கள், தேவதானத்து ஊர்களிலார், பள்ளிச் சந்தங்கள், கணமுற்றூட்டு, வெட்டிப்பேறு, நகரர்கள் ஆகியவர்கள் நிறைவேற்றி வைப்பார்கள். நாட்டாரின் சபையான நாடும், பிரமதேயத்தின் சபையும், ஊர்ச்சபையான ஊராரும் அரசாணையின்மேல் பிறப்பித்த கட்டளைகளை மத்தியஸ்தனும், கரணத்தானும் ஆவணத்தில் எழுதி வைப்பார்கள். சபையின் தலைவனுக்குத் திருவடிகள் என்று பெயர். சபையின் கூட்டங்கட்கு உறுப்பினர் அனைவரும் வந்து நடவடிக்கைகளில் கலந்துகொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடு ஒன்று உண்டு. அப்படி வராதவருக்குத் தண்டப் பொன் விதிக்கப்பட்டது.[12] தானம் செய்யப்பட்ட ஊரின் எல்லைகளையும், தானத்தின் நிபந்தனைகளையும் அறுதியிடுவதற்காக அரசாங்க அலுவலர்கள் நால்வர் அமர்த்தப்பட்டனர். ஊரார் இட்டிய ஆவண ஓலையில் கையொப்பமிடவேண்டிய பொறுப்பு மத்தியஸ்தனைச் சார்ந்தது. இம் மத்தியஸ்தனுக்குக் கரணத்தான் என்றும், வேட்கோவன் என்றும் வேறு பெயர்கள் உண்டு.

அரசன் தன் அமைச்சரையும், ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தப்பட்ட தலைமைச் செயலாளரையும் கலந்துகொண்டுதான் தன் ஆணையைப் பிறப்பிப்பான். உயர்தரச் செயலாளருக்குப் பெருந்தனம் என்றும், கீழ்ப் பிரிவுச் செயலாளருக்குச் சிறுதனம் என்றும் பெயர்.

கிராமங்கள் அனைத்தும் மத்திய அரசின் உறுப்புகளாகவே விளங்கின. பல கிராமங்கள் சேர்ந்தது கூற்றம். கூற்றத்துக்குக் கோட்டம் என்றும், நாடு என்றும் பெயருண்டு. பல கூற்றங்கள் சேர்ந்தது ஒரு வளநாடு. பல வள நாடுகள் சேர்ந்தது ஒரு மண்டலம் ஆகும்.

12. S. I. I. V. 588.

மன்னனுக்கு அணுக்கத்திலேயே சில நிருவாக அலுவலர்கள் எப்போதும் காத்துக்கொண்டிருப்பார்கள்; அவர்களுக்கு 'உடன் கூட்டம்' என்று பெயர்.

நீதி வழங்கும் பொறுப்பானது ஊர்ச் சபையினரிடமும், குலப் பெரியதனக்காரரிடமும் ஒப்படைக்கப்பட்டிருந்தது. வழக்கு களை விசாரிக்கவும், தீர்ப்பு வழங்கவும் விதிகளும் முறைகளும் வகுக்கப்பட்டிருந்தன. கரணத்தான் துணையுடன் நீதிமன்றங்கள் செயல்படும். ஆவணச் சான்றுகளைக் கொண்டும், பிறர் கூறும் சான்றுகளைக் கொண்டும், தாந்தாம் நேரில் கண்டவற்றைக் கொண்டும் நீதிமன்றத்தினர் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புக் கூறினர். நீதிபதிகள் தம் முன்பு விசாரணையில் இருந்து வந்த வழக்குகளில் தாம் நேரில் கண்டவற்றைக் கொண்டோ, தாம் தனிப்பட்ட முறையில் அறிந்துகொண்டவற்றைக் கொண்டோ தீர்ப்புக் கூறுவது இக் காலத்திய இந்தியச் சாட்சியச் சட்டத்துக்கு முரணாகும் என்பது இங்குக் கருதத்தக்கது.

உடலைப்பற்றிய குற்றங்கள் என்றும், உடைமைகளைப் பற்றிய குற்றங்கள் என்றும் இப்போது செய்யப்பட்டுள்ள பாகு பாடுகள் சோழர் காலத்தில் காணப்படவில்லை. குற்றங்களைப் பெரும்பாலும் கிராம நீதிமன்றங்களே விசாரித்துத் தீர்ப்புக் கூறின. குற்றங்கட்குத் தண்டனையாகக் குற்றவாளியின் உடை மைகளைப் பறிமுதல் செய்வதைத்தான் அவை முறையாகக் கொண்டிருந்தன. திருடு, பொய்க் கையொப்பம், விபசாரம் ஆகியவை கொடுங் குற்றங்களாகக் கருதப்பட்டன. இக் குற்றங் களைப் புரிந்து தண்டனை பெற்றவர்கள் ஊராட்சி அவைகளில் அமரும் தகுதியை இழந்துவிடுவார்கள்.

தெரிந்தோ தெரியாமலோ செய்த சில குற்றங்களுக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்படுவதில்லை. குற்றவாளிகள் கோயில்களுக்கோ அன்றி மடங்களுக்கோ இவ்வளவு தானம் கொடுக்க வேண்டும் என்று தீர்ப்புகள் வழங்கப்பட்டன. சில தீர்ப்புகள் நமக்கு வியப்பை யளிக்கக் கூடியவையாகும். ஒருவன் ஒரு பிராமணனைக் கொன்றுவிட்டான். அக் குற்றத்துக்காக அவனைச் சிலர் எருமைக் கடாவின் காலில் பிணித்துவிட்டனர். கடாவினால் அங்கும் இங்கும் இழுப்புண்டு அவன் மாண்டு போனான். அவனை அவ்வாறு கொன்றவர்கள் தம் குற்றத்துக்குக் கழுவாயாகத் திருத்தொண்டத்தொகை என்ற மடத்தில் சிறப்பு வழிபாடு ஒன்று நிறுவ வேண்டுமென்று நீதிமன்றம் தீர்ப்புக்

கூறிற்று.[13] பரிவேட்டைக்குப்போன செல்வப் பேரரையன் என்பவன் ஒருவனைத் தேவன் என்பவன் கைப்பிழையால் அம்பெய்து கொன்றுவிட்டான். இவன் அறியாமல் செய்த குற்றத்துக்குக் கழுவாயாகக் கோயிலுக்கு அரைநந்தா விளக்கு வைத்துவர வேண்டுமென்று நீதிமன்றம் தீர்ப்புக் கூறிற்று.[14]

பிறர் நலத்துக்காகத் தன்னலந் துறந்து உயிர்விட்டவர்களின் வழிவந்தோருக்கும் உறவினருக்கும் நிலங்கள் தானமாக வழங்கப் பட்டன. இத்தகைய தானங்கட்கு 'உதிரப்பட்டி' என்று பெயர். தன்னைப் புரந்துவந்த மற்றொருவனுக்கு உற்ற துன்பத்தைத் துடைக்கும் பொருட்டுத் தற்கொலை செய்துகொண்டவன்,[15] போரில் விழுப்புண் பெற்று வீர மரணத்தைத் தழுவியவன்,[16] கோயில் மண்டபம் ஒன்று கட்டி முடிந்ததை முன்னிட்டுத் தன்னையே பலியாகக் கொடுத்துக்கொண்டவன்,[17] கோயில் நிருவாகியின் தவறுகளைக் கண்டித்துத் தீப்புக்கு (தீப்பாய்ந்து) மாண்டவன்[18] ஆகிய வீரர்களின் வாரிசுதாரர்கள் உதிரப்பட்டி வழங்கப் பெற்றனர்.

சோழர் காலத்தில் நாட்டாட்சி முறையில் கிராம நிருவாகத் துக்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டது. கிராமத்தின் நிருவாகம் நாட்டின் அரசாட்சிக்கு அடிப்படையாக அமைந்திருந்தது. முதலாம் பராந்தகனின் உத்தரமேரூர்க் கல்வெட்டு ஒன்று[19] இந்த ஆட்சியின் அமைப்பையும், அது செலுத்தவேண்டிய பொறுப்பு களையும் விளக்குகின்றது. இந்த முறையானது கி.பி. 800ஆம் ஆண்டிலேயே பாண்டி நாட்டில் பிராமணருடைய கிராமங் களில் கையாளப்பட்டு வந்ததாகத் திருநெல்வேலி மாவட்டத்தில் மானூரில் கண்டெடுக்கப்பட்ட மாறஞ்சடையனின் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.[20]

உழுதுண்டு வாழ்ந்துவந்த வேளாண் மக்கள் குடிபொருந்திய இடத்துக்கு 'ஊர்' என்று பெயர். அவ்வூர் ஆட்சியை நடத்தி வந்த குழுவுக்கு 'ஊர்' என்றும், 'ஊரவர்' என்றும் பெயர். பிராமணரின் குடியிருப்புகள் அகரம், பிரமதேயம், சதுர்வேதி

13. Ep. Rep. 104/1909.
14. S. I. I. VI. No. 327.
S. I. I. VII No. 68.
S. I. I. VI. No. 85.
15. Ep. Rep. 138/12.
16. Ep. Rep 47/28, 29.
17. Ep. Rep. 197/34-35.
18. S. I. I. VII. No. 759.
19. Ep.Ind. XXII No. 24.
20. Ep. Ind. XXII No. 3.

மங்கலம் என்று அழைக்கப்பட்டன. அக் குடியிருப்புகளுக்குக் 'கிராமங்கள்' என்று பெயர். கிராமங்களின் ஆட்சியை நடத்தி வந்த குழுக்களுக்குச் 'சபை' என்று பெயர். வணிகர் நிறைந் திருந்த இடத்துக்கு 'நகரம்' என்ற சபை ஊராட்சிப் பொறுப்பை மேற்கொண்டிருந்தது. ஒரே இடத்துக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சபைகளும் செயல்பட்டு வந்ததாகக் கல்வெட்டுகளின் மூலம் அறிகின்றோம். இச்சபைகள் அல்லாமல் உழவுத் தொழில் மேற் கொண்டிருந்த வேளாண் குடிகளுடைய குழுக்கள் 'சித்திரமேழி' என்ற பெயரில் நடைபெற்று வந்தன. அக் குழு உறுப்பினர்கள் சித்திரமேழிப் பெரிய நாட்டினர் என்று அழைக்கப்பெற்றனர். இதைப்போலவே குலம், சமயம், பொருளாதாரம் ஆகியவற்றைப் பற்றிய ஒழுகலாறுகளைப் போற்றிப் பாதுகாத்து வந்த வேறு சில குழுக்களும் ஊராருடன் ஒன்றுபட்டுப் பணியாற்றி வந்தன. மற்றும், பலதேசத்து வணிகர்கள் தமக்குள் அமைத்துக்கொண்ட 'நானாதேசி' யென்னும் 'திசையாயிரத்து ஐந்நூற்றுவர்', தச்சர், கம்மாளர் ஆகியவர்களைப் போன்ற கைவல் கம்மியர் தமக்குள் அமைத்துக்கொண்ட 'இரதகாரர்' ஆகிய நிறுவனங்கள் குலநலம், வாணிகநலம் ஆகியவற்றுக்குத் தொண்டு புரிந்துவந்தன.

ஊராட்சிகள், கிராம சபைகள், சித்திரமேழிகள் ஆகியவை மேற்கொண்ட பண்டைய பழக்கவழக்கங்கள், அறவொழுக்கம் புண்ணியம் பாவம் என்ற சமயச் சார்புள்ள நம்பிக்கைகள் ஆகிய வற்றின் அடிப்படையிலேயே தொழிற்பட்டு வந்தன; அவற்றுக் கெனத் தனிச் சட்டங்களும், விதிகளும் வகுக்கப்படவில்லை. அச் சபைகள் செய்த விசாரணைகளும், அவை மேற்கொண்ட முடிபுகளும் ஊர்க் குடிமக்கள் அனைவரையும் கட்டுப்படுத்தக் கூடியன. அம் முடிபுகளும் காலத்தாழ்ப்பின்றி உடனுக்குடன் நிறைவேற்றி வைக்கப்பட்டன. ஓரமும் ஒருதலையும் இச் சபை யின் தீர்ப்புகளில் காணமுடியாது.

உத்தரமேரூர்க் கல்வெட்டுகள்[21] அக் காலத்தில் வழங்கிய கிராமச் சபைகளின் அமைப்பு முதலியவற்றைப்பற்றிய விரிவான செய்திகளைத் தருகின்றன. உத்தரமேரூர்க் கிராமம் முப்பது தொகுதிகள் அல்லது 'குடும்பு'களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இக்குடும்புகள் ஒவ்வொன்றும் சபைக்குத் தேர்ந்தெடுப்பதற்கான தகுதியுடையவர் ஒருவரை நியமனம் செய்யவேண்டும். அவ்வாறு நியமனம் செய்யப்பட்டவர்களுக்கு இருக்க வேண்டிய தகுதி களாவன: அவர்கள் குறைந்த அளவு கால்வேலி நிலத்துக்காவது

21. S. I. I. VI. No. 295.

உரிமை கொண்டிருக்க வேண்டும். அவர்கள் குடியிருந்த வீட்டு மனை அவர்களுக்கே சொந்தமானதாக இருக்கவேண்டும்; அவர்களுடைய வயது முப்பத்தைந்துக்குக் குறைந்திருக்கக் கூடாது; எழுபதுக்கு மேற்பட்டிருக்கக்கூடாது. மேலும் அவர்கள் வேதத்துடன் தொடர்பு கொண்ட மந்திர பிராமணங்களைப் பயின்றிருக்க வேண்டும்; அல்லது குறைந்த அளவு அரைக்கால் வேலி நில உரிமையும், ஒரு வேதத்தையோ, ஒரு பாடியத்தையோ ஓதும் திறனையும் பெற்றிருக்க வேண்டும். ஏதேனும் ஒரு சபை அல்லது வாரியத்திலாவது மூன்றாண்டுகள் ஒருவர் உறுப்பினராக இருந்திருந்தால் அவர் மீண்டும் உறுப்பினராக நியமனம் பெறும் உரிமையிழந்தவர் ஆவார். ஏற்கெனவே ஒரு குழுவிலோ, வாரியத்திலோ உறுப்பினராக இருந்து ஒழுங்காகக் கணக்குக் காட்டத் தவறியவர்களும், அவர்களுடைய சுற்றத்தார்களும், பிறருடைய உரிமைகளைப் பறித்துக்கொண்டவர்களும், இழிந்த ஒழுக்கமுடையவர்களும் நியமனம் பெற உரிமையற்றவர்களாவார்கள். குடும்புகளால் நியமனம் செய்யப்பட்டவர்கள் அனைவரும் கூடிக் குடும்புக்கு ஒருவராக மொத்தம் முப்பது உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பார்கள். இக் காலத்தைப் போலவே அக் காலத்திலும் வாக்குப்பதிவுமுறை ஒன்று பிராமணர் கிராமங்களில் கையாளப்பட்டது. அம்முறைக்குக் 'குடவோலை முறை' என்று பெயர். குடும்பினால் நியமனம் செய்யப்பட்டவர்கள் சபைக்கு உறுப்பினராகும் தகுதியுடையவர்களின் பெயர்களை ஓலை நறுக்குகளில் எழுதி அவற்றை ஒரு குடத்துக்குள் இடுவார்கள். பிறகு குடத்தை நன்றாகக் குலுக்குவார்கள். சபைக்கு எத்தனை உறுப்பினர்கள் தேவையோ அத்தனை ஓலை நறுக்குகளை எடுக்கும்படி ஒரு சிறுவனை ஏவுவார்கள். அவன் குடத்துக்குள் கையிட்டு வெளியில் எடுத்த ஓலைகளில் காணப்படும் பெயரினர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினருள் ஆண்டிலும் அறிவிலும் முதிர்ந்தவர்களான பன்னிருவர், ஏற்கெனவே தோட்ட வாரியம், ஏரி வாரியம் ஆகியவற்றின் உறுப்பினராக இருந்து அனுபவம் பெற்றிருந்தவர்களாயின், ஆட்டை (ஆண்டு) வாரியத்துக்கு உறுப்பினராக அமர்த்தப்படுவார்கள். ஏனையோருள் அறுவர் ஏரி வாரியத்துக்கும், பன்னிருவர் தோட்ட வாரியத்துக்கும் நியமனம் செய்யப்படுவார்கள். பஞ்சவார வாரியம், பொன் வாரியம், உதாசீன வாரியம் என வேறு வாரியங்களும் அமைக்கப்பட்டிருந்தன. மகா சபைக்குப் பெருங்குறி என்றும், வாரிய உறுப்பினருக்கு வாரியப் பெருமக்கள் என்றும் பெயர். சபைகளும் வாரியங்களும், பொதுவாகக் குளத்தங்கரையிலும், மரத்தடியிலும் கூடுவது வழக்கம்.

கிராமப் புறம்போக்கு நிலங்கள் யாவும் இச் சபைகளின் உடைமையாக இருந்தன. தனிப்பட்டோர் நிலங்களையும் கண்காணிக்கும் உரிமை இச் சபைகளுக்கு உண்டு. அரசாங்கம் ஏற்பாடு செய்த நில விற்பனை, நில தானம்போன்ற உரிமை மாற்றங்கள் ஒழுங்காக முடிவு பெறுவதற்கு இச் சபைகள் துணை புரிய வேண்டும். நிலங்களின் வருமானத்தைக் கணக்கிடுதல், வரி விகிதங்களை அறுதியிடுதல், வரி தண்டுதல், வரி செலுத்தத் தவறியவர்களின் நிலங்களைக் கைப்பற்றி விற்று விற்பனைத் தொகையை வரி நிலுவைக்கு ஈடுகட்டிக் கொள்ளுதல் ஆகிய சீரிய கடமைகள் இச் சபையினரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. மற்றும், காடுகொன்று நாடாக்குதல், தரிசு நிலங்களை உழவுக்குக் கொண்டுவருதல், குடிமக்களின் நிலவுரிமைகள், பாசன உரிமைகள் ஆகிய வேளாண்மை உரிமைகளை அறுதியிடுதல், குடிமக்களின் வழக்குகளைத் தீர்த்துவைத்தல் ஆகிய பணிகளை இம் மகாசபைகள் புரிந்துவந்தன. நில அளவைகளை மத்திய அரசாங்கமே மேற்கொண்டது. எனினும் நில அளவையின்போது ஆய்ந்து அறிந்துகொள்ள வேண்டிய நிலவளம், நிலத்தரம் ஆகிய வற்றுக்கு இச் சபையின் உடன்பாட்டை மத்திய அரசாங்கம் பெற்றாக வேண்டும்.

பொன்னை உரைகாண்பதற்கென்றே தனி வாரியம் ஒன்று அமைக்கப்பட்டது. பொன் வாரியத்தின் உறுப்பினர்களும் குடவோலை முறையிலேயே தேர்ந்தெடுக்கப்பட்டனர்.[22] இவ் வாரியத்தில் உறுப்பினர் ஒன்பதின்மர் அமர்ந்து பணிபுரிந்தனர். மாதந்தோறும் ஏழரை மஞ்சாடிப் பொன் இவர்கட்கு ஊதியமாக அளிக்கப்பட்டது. வயது கடந்தவர்களும் சிறுவர்களும் பொன் வாரியத்திற்கு உறுப்பினராக முடியாது. இவ் வாரியத்தில் உறுப்பினராக அமர்த்தப்பட்ட பெருமக்கள் ஒன்பதின்மரில் இருவர் படைவீரர்கள்; மூவர் சங்கரபாடிகள் (வாணியர்கள் அல்லது செக்கர்) ஆவர். இப் பெருமக்கள் ஒரவஞ்சனையின்றிக் குடிமக்களின் பொன்னை மாற்றறியக் கடமைப்பட்டவர்கள். இவர்கள் ஆற்றிய பணிகளுக்கும் சில விதிகள் வகுக்கப்பட்டிருந்தன. அவர்கள் பொன்னை உரைக்கும் கட்டளைக்கல் மிகவும் பெரியதாக இருக்கக்கூடாது; ஆணிக்கல்லையே அவர்கள் உரைகல்லாகப் பயன்படுத்த வேண்டும்; அவ்வப்போது ஆணிக்கல்லை ஒற்றி எடுத்த மெழுகு உண்டையானது பொன் துகளுடன் ஏரி வாரியப் பெருமக்களிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்; பொன் வாரியப் பெருமக்கள் மூன்று திங்களுக்கு ஒருமுறை ஆட்டை வாரியத்துக்கு

22. Ep. Ind. XII. No. 24

முன்பு நின்று, 'நாங்கள் எங்களுக்கு இட்ட கட்டளையை மீறி, உரைகாணவந்த பொன்னைக் கையாடி இருப்போமாயின், நாங்கள் என்றென்றும் பசிப்பிணியால் வருந்தி அழிவோமாக' என்று உறுதிமொழி ஒன்று எடுத்துக்கொள்ள வேண்டும். பொன் வாரியத்தின் பெருமக்கள் ஒன்பதின்மரும் ஒன்றுகூடிக் கூட்டாகச் செயல்படாமல், அவரவர்கள் தனித் தனியாகவே பொன்னை உரைகண்டு வரவேண்டும். பொன்னை மாற்றுக் காண்பதற்கெனவே ஒரு தனி வாரியம் ஒவ்வொரு கிராமத்திலும் அமைக்கப்படும் அளவுக்கு அக் காலத்தில் நாட்டில் பொன் நடமாட்டம் மலிந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

அரசாங்கம் குடிமக்களின்மேல் விதித்துவந்த வரிகளும், கட்டணங்களும் பலவகைப்பட்டன. அவற்றுள் சில: ஊர்க் கழஞ்சு (ஊரில் பொதுவாக வைக்கப்பெற்றிருந்த ஓர் எடையைப் பற்றிய வரி), குமர கச்சாணம் (முருகக் கடவுளின் கோயிலுக்காகச் செலுத்தவேண்டிய ஒரு பொன்வரி), மீன்பாட்டம் (மீன் பிடிக்கும் உரிமைக்குச் செலுத்தவேண்டிய கட்டணம்), கீழிறைப் பாட்டம் (சிறு வரிகள்), தசபந்தம் (குளம் முதலிய நீர் நிலைகளை வெட்டுவோர் அதன் ஆயக்கட்டில் பத்தில் ஒரு பங்கைத் துய்ப்பதாகும்), மாடைக் கூலி (பொன்னை நாணயமாக அச்சடிப்பதற்கான கூலி), வண்ணக்கக் கூலி (நாணயங்களின் பொன் மாற்றையும் அளவையும் சோதிக்கும் வண்ணக்கனுக்குக் கொடுக்க வேண்டிய கட்டணம்), முத்தாவணம் (அந் நாளைய விற்பனை வரி), திங்கள் மேரை (மாதந்தோறும் தண்டப்பட்ட ஒரு வரி), வேலிக்காசு (ஒரு வேலி நிலத்துக்கு இவ்வளவு என்று கொடுக்கப்பட வேண்டிய வரி; வேலிப் பயறு எனவும் வழங்கும்), நாடாட்சி (நாட்டின் நிருவாகத்துக்கெனத் தண்டப்பட்ட வரி வகை), ஊராட்சி (கிராம நிருவாகத்துக்கெனத் தண்டப்பட்ட வரி வகை), வட்டி நாழி (கழனிக்குத் தண்ணீர் பாய்வதற்கான நாழிகையைக் கணக்கிட்டு, அதன்படி செலுத்த வேண்டிய தண்ணீர்க் கட்டணமாக இருக்கலாம்), பிடா நாழி அல்லது புதா நாழி (வீடுதோறும் வாயில் நிலைகளைக் கணக்கிட்டு நாழி நாழி நெல்லாகத் தண்டிய வரி போலும்), கண்ணாலக் காணம் (திருமணம் செய்யும்போது செலுத்தப்பட்ட கட்டணம்), வண்ணாரப் பாறை (துணி வெளுப்போர் பயன்படுத்திய கற்பாறைகளின்மேல் விதிக்கப்பட்ட ஒரு கட்டணம்), குசக்காணம் (குயவர்கள் செலுத்தி வந்த தொழில் வரி), நீர்க்கூலி (தண்ணீர் வரி), தறிப் புடவை அல்லது தறிக் கூறை (தறி நெய்பவன் கொடுக்க வேண்டிய வரி), தரகு அல்லது தரகுபாட்டம் (தரகர்மேல் விதிக்கப்பட்ட வரி).

தட்டார்பாட்டம் (பொற்கொல்லர்கள்மேல் விதிக்கப்பட்ட வரி), ஆட்டுக்கிறை அல்லது ஆட்டுவரி (ஆட்டின்மீது விதிக்கப் பட்ட வரி), நல்லா, நல்லெருது (கிராமத்தில் காட்சிப் பொரு ளாக வைக்கப்பட்டிருந்த பசு, எருதுகளின் வளர்ப்புக்கெனத் தண்டப்பட்ட வரிகள்), நாடு காவல் (நாடு என்னும் பெரும் பிரிவின் காவலை மேற்கொள்ளுவதற்காக ஏற்படும் செலவு களுக்கு ஈடு செய்யும் பொருட்டுத் தண்டிய வரி), ஊடுபோக்கு (ஒரு தானியம் பயிர் செய்யும்போது அதன் இடையில் வேறு தானியம் விதைத்துப் பயிர் செய்வதற்கான வரி; குறுவை நெல்லுடன் பச்சைப்பயறு விதைப்பதைப் போன்றது), விற்பிடி (விற்கிரய ஆவணப் பதிவுக்குக் கட்டவேண்டிய கட்டணம்), வால மஞ்சாடி அல்லது வாலக் காணம் (வீட்டு மனையின் நீள அளவின் மேல் விதிக்கப்பட்ட கட்டணம்), உல்கு (சுங்கம்), ஓடக் கூலி (ஓடங்கட்குச் செலுத்த வேண்டிய உரிமைக் கட்டணம்), மன்று பாடு (நீதிமன்றங்களுக்குச் செலுத்த வேண்டிய தண்டனைப் பணம்), மாவிறை (அரசனுக்குத் தனிப்பட்ட உரிமையான வரி), தீயெரி (கோயிலில் தீயோம்பி அதில் சோற்றைப் பலி தூவுவதற் காகத் தண்டப்பட்ட வரி), ஈழம் பூட்சி (கள் இறக்குவதற்குச் செலுத்திக் கொள்ள வேண்டிய வரி)—என்பன.

ஒவ்வோர் ஊரிலும் சிலவகை நிலங்களுக்கு வரி விலக்கு அளிப்பதுண்டு. ஊர் நத்தம், கோயில்கள், ஏரிகள், ஊருக்குள் ஓடும் வாய்க்கால்கள், பறைச்சேரி, கம்மாளச் சேரி, சுடுகாடு ஆகியவற்றுக்கு வரிகள் கிடையா. அரசாங்கத்தால் விதிக்கப் பட்ட வரிகளும் கட்டணங்களும் நானூற்றுக்கு மேற்பட்டவை சோழர், பாண்டியர் கல்வெட்டுகளில்[23] காணப்படுகின்றன.

விக்கிரம சோழன் காலத்தில் 'டிரம்மா' (டிராக்மா) என்ற கிரேக்க நாணயம் குடிமக்களிடையே செல்லுபடியாய்க் கொண் டிருந்தது. மன்னரும் குடிமக்களும் பொதுநலத்தில் கண்ணுங் கருத்துமாய் இருந்துவந்தனர். தேடிய பொருளை முடக்கி வைக்கும் பழக்கம் அக்காலத்திலும் காணப்பட்டது. எனினும், குடிமக்கள் தம் வருவாயைத் தம் குடும்பத்துக்கு மட்டுமன்றிக் கோயில்களுக்கும், மடங்களுக்கும், அன்னதானங்களுக்கும் வரையின்றி வழங்கினர். கோயில்கள் இறைவழிபாட்டு இடங்களாக மட்டுமன்றி இன்னலுற்ற மக்களுக்குப் புகலிடங் களாகவும் பயன்பட்டன. வறட்சியிலும் பஞ்சத்திலும் குடிமக்களுக்குக் கோயில்களிடமிருந்து பொருளுதவி கிடைத்தது.

23. Ep. Rep. 280.1910.

மன்னர்கள் தாம் தண்டிய வரிப் பணத்தையும் பகைவரிட மிருந்து கவர்ந்துவந்த பொன்னையும் பொருளையும் மக்கள், கோயில்கள் நலனுக்காகவே செலவிட்டனர்.

நகரங்களில் மக்கள் நெருங்கி வாழ்ந்தனர். காஞ்சிபுரம், தஞ்சாவூர், மதுரை போன்ற நகரங்களில் அக் காலத்திலும் குடிவளம் செழித்திருந்தது. மத்திய அரசின் செங்கோன்மையின் கீழ்க் குடிமக்கள் இன்னல்களும் இடையூறுகளுமின்றி அமைதி யான வாழ்க்கை வாழ்ந்து வந்தனர். பல்லவர் ஆட்சியில் தோன்றி வந்த குலப்பிரிவுகள் சோழர் காலத்தில் நூற்றுக் கணக்கில் மலிந்துவிட்டன. மக்களிடையே புதுப் புதுப் பிரிவுகள் தோன்றலாயின. குலங்களுள் வலங்கைச் சாதியினர் என்றும் இடங்கைச் சாதியினர் என்றும் ஆழ்ந்த பிளவு ஒன்று புதிதாகத் தோன்றிற்று. தமிழ்மக்கள் சமூகத்தில் பிராமணரின் செல் வாக்கு ஓங்கி நின்றது. சங்க காலப் பார்ப்பனர் தமிழ்மக்கள் ஆவர். அவர்களுடைய பண்பாடும் நாகரிகமும் தமிழ்மக்கள் வளர்த்து வந்தவையேயாம். அவர்கள் பேசியதும், புலமை பெற்றதும் தமிழ்மொழியில்தான். அவர்கள் தம்மைத் தமிழகத் தில் பிறந்து வளர்ந்த தமிழராகவே எண்ணி வாழ்ந்தனரே யல்லாது, தாம் அயலிடங்களிலிருந்து குடிவந்தவர்கள் என்றோ, அயல்மொழி பேசியவர்கள் என்றோ ஒரு காலமும் கருதிய வர்கள் அல்லர். ஆனால், பல்லவர் காலத்திலும் சோழர், பாண்டியர் காலத்திலும் மன்னரின் அழைப்பின் பேரிலோ, தாமாகவோ தமிழ்கத்தில் அலையலையாக வந்து குடியேறிய பிராமணர்கள் புதுப்புதுப் பெயர்களைப் பூண்டவர்கள்; புதிய குலதருமத்தைக் கடைப்பிடித்தவர்கள்; வடமொழியையன்றி வேறு மொழியை விரும்பாதவர்கள்; வடமொழியின் ஏற்றத் துக்கு என மன்னரிடம் பல சலுகைகளையும் செல்வாக்கையும் கைக்கொண்டு தமிழுக்குக் கூற்றமாக வந்தவர்கள்.

தமிழகத்து வேந்தர்கள் தமிழகத்து அந்தணரிடம் எக் குறை பாடுகளைக் கண்டார்கள் என்பது விளங்கவில்லை. தமிழகத் தில் சமய வளர்ச்சியும், வேதப் பயிற்சியும், ஆகமங்களின் வளர்ச் சியும், கோயில் வழிபாடும் பலதரப்பட்ட துறைகளில் விரிவடை யவே அவற்றுக்கு ஏற்றவாறு தம்மைத் திருத்தியமைத்துக் கொள்ளும் ஆற்றல்கள் தமிழ்ப் பிராமணரிடம் பெருகவில்லை போலும். ஆனால், வடவரின் இலக்கியமும், சமயக் கருத்து களும் பண்பாடுகளும் தமிழ்நாட்டில் பெருக்கெடுத்துப் பாயவே அவற்றை வளர்ப்பதற்கும், மேற்கொண்டு பல புதுமைகளைப் பெருக்கிக் கொள்ளுவதற்கும், மன்னர்கள் ஆயிரக்கணக்கில்

அயல்நாட்டுப் பிராமணரை இறக்குமதி செய்து கோயில்களிலும், மடங்களிலும், கல்வி நிறுவனங்களிலும் அவர்களை அருச்சகர்களாகவும், புரோகிதர்களாகவும், வேத பாராயணம் செய்வோராகவும் ஆங்காங்கு அமர்த்தினர். வேதநெறி தழைத்தோங்குவதற்காக மன்னரும் மக்களும் புதிதாகக் குடிபுகுந்த பிராமணருக்குப் பொன்னையும், பொருளையும், குடியுரிமைகளையும் வாரி வழங்கினர். பிராமணருக்குத் தனி நிலங்களும், முழுமுழுக் கிராமங்களும் தானமாக வழங்கப்பட்டன. அக் கிராமங்கள் அக்கிரகாரம், அகரம், சதுர்வேதி மங்கலம், பிரமதேயம் எனப் பல பெயரில் வழங்கின. இக் குடியிருப்புகள் அனைத்தும் பிராமணரின் நிருவாகத்துக்கே விடப்பட்டன. அரசனுடைய ஆணைகள் அவற்றினுள் செயல்படா. அக் கிராமங்களுக்கு எல்லாவிதமான வரிகள், கட்டணங்கள், கடமைகள், ஆயங்கள் முதலியவற்றினின்றும் முழு விலக்கு அளிக்கப்பட்டன. ஒவ்வொரு கிராமத்தின் உள்ளாட்சிக்கும் ஒரு மகா சபை அமைத்துக் கொண்டு பிராமணர்கள் தத்தம் கிராமத்தின் நிருவாகத்துக்குத் தாமே பொறுப்பேற்றுக் கொண்டார்கள். பிராமணர் தமிழகம் முழுவதும் பரவிக் குடியமர்ந்தார்கள். உள நிறைவுடன் நல் வாழ்க்கையில் நின்று வேதம் ஓதி, இறைப்பணி புரிந்து, அறம் ஓம்பி, மக்களிடையே கல்வியறிவையும் ஆன்மிக விழிப்பையும் தோற்றுவிப்பதற்காகவே மன்னரும் மக்களும் அவர்கட்குத் துணைநின்றார்கள். ஆனால், விளைவோ வேறு விதமாயிற்று. தமிழ் மன்னரும் தமிழ்மக்களும் வரையாது வழங்கிய வாழ்க்கை நலன்களைப் பெற்ற பிராமணர்கள் தனித்து வாழ்ந்து, மக்களிடையே குல வேறுபாடுகளைப் பெருக்கித் தமிழர் அனைவரையுமே சூத்திரர் என்ற இழிகுலத்தினராகக் கருதிக் கோயில்களிலும், மடங்களிலும், ஏனைய பொது அறச்சாலைகளிலும் ஒதுக்கிவைத்துவிட்டார்கள். ஒரு கோயிலைக் கட்டிக் குடமுழுக்குச் செய்விக்கும் தமிழன் ஒருவன், தான் கட்டிய கோயிலிலேயே தொலைவில் ஒதுங்கி நிற்கவும், பிராமணர்களின் பின்னின்று கோயில் 'பிரசாதங்களைப்' பெறவும் ஒப்புக் கொண்டு விட்டான். கோயில் கருவறையில் வடமொழியின் ஆரவார ஓசை ஓங்கவும், தமிழ் ஒலி மறையவும் வழக்காறுகள் வகுக்கப்பட்டன. தேவார ஆசிரியர்கள் காலத்தில் தமிழர் கருவறைக்குட் செல்லும் உரிமை பெற்றிருந்தும் சோழர் பாண்டியர் காலத்தில் அவ் வுரிமையை அவர்கள் இழந்து விட்டார்கள்.

கோயிலின் பாதுகாப்புப் பணியும், அறக்கட்டளைகளும் பிராமணரிடையே ஒப்புவிக்கப்பட்டன. சிவன்கோயில் நிரு

வாகமானது மூலபருடையார் என்ற சபையாரிடம் ஒப்படைக்கப் பட்டது. அச்சபையின் உறுப்பினர் அனைவரும் பிராமணர் களாகவே இருந்தனர். மூலபருடைய சபையினர் கோயில் நிருவாகத்துடன் வேறு சில நடவடிக்கைகளிலும் ஈடுபடுவது வழக்கம். 'பெருமாள் குலசேகர தேவரைத் (பாண்டிய மன்னன் திரிபுவன சக்கரவர்த்திகள் குலசேகர தேவரை) திருவடி தொழ மதுரை ஏறப் போகைக்கு ஸ்ரீமது திரவியம் வேண்டினமையில்' இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூர் மூலபருடையினர் கிராமத்தில் திருத்தளியாண்ட நாயனார் கோயிலில் ஆயிரத் தெழுநூற்றுவர் திருமண்டபத்தில் கூடிக் கோயிலுக்குச் சொந்த மான சில நிலங்களில் பயிரிடும் உரிமையை இருநூறு சோழிய நற்பழங் காசுக்கு விற்றுக் கொடுத்த செய்தியை அவ் வூர்க் கல்வெட்டு[24] ஒன்று தெரிவிக்கின்றது.

அரசாங்க அதிகாரமும், சமயச் செல்வாக்கும் குவியப் பெற்றிருக்கும் கைகள் என்றுமே ஓய்ந்திருப்பதில்லை. இது பன்னாட்டு வரலாறுகள் காட்டும் ஒரு பேருண்மையாகும். அவ் வதிகாரத்தையும் செல்வாக்கையும் மென்மேலும் பெருக்கிக் கொள்ளவும், பெருகினவற்றை அழியாமல் பாதுகாத்துக் கொள்ளவும் அக் கைகள் பரபரத்துக் கொண்டிருப்பது இயல்பு. எனவே, உழைப்பின்றியே தானமாகப் பெற்ற நிலங்களும் ஊர் களும், அரசாங்கச் செல்வாக்கும், வேள்வி வளர்க்கும் தனி உரிமையும் தம்மிடம் குவிக்கப்பெற்ற பிராமணர்கள் அவை யாவும் எக்காலமும் தம்மிடமே நிலைத்து நிற்கவும், மென் மேலும் வளர்ந்து வரவும், தம் குலத்தின் தலைமைப் பதவி நீடித்து வரவும் பல முயற்சிகளை மேற்கொள்ளலானார்கள். மன்னரின் முழு ஆதரவையும் அவர்கள் பெற்றனர். வேந்தர் களுக்கும், அவர்களைச் சார்ந்தவர்களுக்கும் வமிசங்களையும், கோத்திரங்களையும், சூத்திரங்களையும் கற்பித்துக் கொடுத் தார்கள். மன்னர்களும் சாதி ஒழுக்கத்தை நிலைநாட்டுவதே தம் சீரிய கடமையாம் எனக் கூறும் மெய்க்கீர்த்திகளைப் புனைந்துகொண்டனர். ஆரியப் பழக்கவழக்கத்தைப் பாராட் டிக் கூறும் சாஸ்திரங்களும் புராணங்களும் எழுந்தன. அவற் றைப் பிராமணர் பயில்வதற்கென அரசர்கள் பல கல்வி நிறு வனங்களை அமைத்துக் கொடுத்தனர்.

ஊர்ப் பொதுமக்களுக்குக் கல்விப் பயிற்சி யளிக்கப்பட்டதா, கல்வியளிக்கப்பட்டிருந்தால் அதன் தரமும், அது பயிற்றப்பட்ட

24. Ep. Rep. 101. 1098.

முறையும் எத்தகையன என்ற கேள்விகளுக்கு விடை காண முடிய வில்லை. ஊர்ப் பொதுமக்கள் பிழையற எழுதும் அளவுக்குக் கல்வியறிவு பெறவில்லை என்று ஊகிக்க வேண்டியுள்ளது. அரசாணைகளையும், உடைமை மாற்று ஆவணங்களையும் அழி வின்றிக் கல்லில் பொறிக்கும் தொழிலை மேற்கொண்டிருந்த கல்தச்சர்கள் பொறித்த கல்வெட்டுகளில் நூற்றுக்கணக்கான எழுத்துப் பிழைகளைக் காண்கின்றோம். ஒரு சில வரிகளை யேனும் பிழையின்றி எழுதும் அடிப்படையான இலக்கண அறிவு அவர்கள் பெற்றிருக்கவில்லை எனத் தெரிகின்றது. கல்லில் பொறிக்கும்படி வாசகம் எழுதிக்கொடுத்த அரசாங்க அலுவலர் களே இலக்கணப் பிழைகளை அறியாதவர்களாய் இருந்தனரா, அன்றிப் பிழையுடன் பொறிக்கப்பட்டு வரும்போது அதைக் கண்காணித்து அவ்வப்போது திருத்தும் வழக்கம் அந் நாளில் இல்லையா என்றெல்லாம் ஐயப்பாடுகள் எழுகின்றன. கல்லுக்கும் சுதைக்கும் உயிர்களை யூட்டிய சிற்பிகளும், ஓவியர்களும், கட்ட டக் கலைஞரும் அக் காலத்தில் வாழ்ந்து வந்தனர். தஞ்சைப்பெரு வுடையார் கோயிலைக் கட்டிய சிற்பிகளும், அக் கோயிலின் உட் சுற்றாலைச் சுவர்களின்மேல் வண்ண ஓவியங்களைத் தீட்டிக் கண்களுக்கு விருந்தளித்த ஓவியப் புலவர்களும் கல்வியறிவு அற்றவர்கள் என்று கூற முடியாது; தம் தொழில்நுட்பங்கள் மட்டுமன்றி அத் தொழிலில் பயன்படுத்தப்பட்ட கல் வகைகள், வண்ணக் கலவைகள், சுதைப் பூச்சு ஆகியவை பற்றிய நுண்ணறி வையும் படைத்தவர்களாகவே அவர்கள் தோன்றுகின்றனர். சிலைகளைக் கல்லில் வடிக்கவும், வடிவங்களை அழியாத அழகிய வண்ணங்களில் தீட்டவும் போதுமான ஆக்கப் பயிற்சி யும் அவர்கள் பெற்றவர்களாக வேண்டும். மிகப் பெரிய கற் பாறைகளைக் கோபுரங்களின் மேலும் கட்டடங்களின் மேலும் ஏற்றவும், வேண்டிய கோணங்களில் அவற்றைச் செதுக்கியமைக் கவும், அவற்றை இழைத்து மெருகூட்டவும் தேவையான பொறியியல் நுட்பமும் அவர்கள் வாய்க்கப் பெற்றிருந்தனர். இந்த நுண்ணறிவை அவர்கள் பள்ளிகளில் கற்றனரா, நூன் முகத்தில் பெற்றனரா, அன்றி ஆசானிடமிருந்து நேர்முகமாகப் பெற்றனரா என்று அறிந்துகொள்ளுவதற்குப் போதுமான சான்றுகள் கிடைக்கவில்லை. சயங்கொண்டாரும், ஒட்டக்கூத் தரும், சேக்கிழாரும், கம்பரும், புகழேந்தியும் வாழ்ந்திருந்த காலத்துத் தமிழ்மக்கள் அவர்களுடைய இலக்கியப் படைப்பு களைப் பயின்று பயன்பெற்றனரா, அன்றி அரசவையினர் மட்டும் அவற்றைப் படிக்கக் கேட்டு வந்தனரா, அன்றிப் பிரமதேயங்களிலும் அவை பயிலப்பட்டனவா என்றும் திட்ட வட்டமாக அறிந்துகொள்ள முடியவில்லை.

மன்னர்கள் நிறுவிய பள்ளிகள் யாவும் பிராமணருக்குமட்டும் வடமொழிப் பயிற்சியை யளித்து வந்தன; தமிழ் இலக்கிய இலக்கணம் பயிற்றி வரவில்லை. அப்பள்ளிகளில் புராணங்கள், இதிகாசங்கள், சிவதருமம், சோம சித்தாந்தம், இராமாநுச பாடியம், பிரபாகரரின் மீமாமிசை, வியாகரணம் ஆகிய வடமொழி இலக்கிய, இலக்கணங்களையே பிராமணர்கள் பயின்று வந்தனர். வடஆர்க்காட்டு மாவட்டத்தில் போளூர் தாலுக்காவில் தாம்புல்லூர் (காப்பலூர்) என்னும் கிராமத்தில் வேதப் பயிற்சிப்பள்ளி ஒன்று நடைபெற்றது. செங்கற்பட்டு மாவட்டத்தில் ஆணியூர் (ஆனூர்) என்னும் இடத்தில் வேதம், அஷ்டாத்தியாயி (இலக்கணம்) ஆகியவற்றுக்குப் 'பட்டவிருத்திகள்' நிறுவப்பட்டன. தென்னார்க்காட்டில் இராசராச சதுர்வேதி மங்கலம் (எண்ணாயிரம்) என்னும் ஊரில் முதலாம் இராசேந்திரன் காலத்தில் வேத மீமாமிசப் பள்ளி ஒன்று நடைபெற்று வந்தது. அதில் 340 பிராமண மாணவர்கள் பயிற்சி பெற்று வந்தனர்; 14 ஆசிரியர் வேதாந்தம் பயிற்றி வந்தனர். அவர்கள் நாள் ஒன்றுக்கு ஒரு கலம் நான்கு மரக்கால் நெல் ஊதியமாகப் பெற்றார்கள். வேறு சில ஆசிரியர்கள் நெல்லுடன் பொன்னும் சேர்த்து ஊதியமாகப் பெற்றார்கள். புதுவையை யடுத்துள்ள திரிபுவனியிலும், திருமுக்கூடலிலும், திருவாவடுதுறையிலும், பெருவேளூரிலும், திருவொற்றியூரிலும் பிராமணருக்காக வேத வியாகரணப் பள்ளிகள் நடைபெற்று வந்தன. மன்னர்கள் தமிழ் வளர்க்கத் தவறினார்கள் என்ற உண்மையை ஒப்புக்கொள்ளும் வரலாற்று ஆசிரியர் சிலர் மன்னர் அப்பணியைச் செய்யாவிடினும் சைவ மடங்கள் அதில் ஈடுபட்டிருந்தன என்று கூறுவர். இக் கூற்றுக்குச் சான்றுகள் இல்லை. சைவ மடங்கள் திருப்பதிகம் ஓதுவதற்குச் சிலருக்கு வாய்ப்பளித்திருக்கக் கூடும். ஆனால், இம் மடங்களும் வடமொழி வளர்ச்சியில் தம் கருத்தைச் செலுத்தி வரவில்லை என்று கூறமுடியாது. சோழர் காலத்தில் எழுந்த சைவ, வைணவ நூல்கள் யாவும் வடமொழிக் கலப்புள்ளவை. இம் மடங்கள் சமயத்தை வளர்த்தன என்பது மறுக்க முடியாத உண்மையே; ஆனால், அவை தமிழை வளர்க்கவில்லை. பிராமணத் தவசிகளுக்கும் அநாதி கிரீசர்களுக்கும், மருத்துவமும் இலக்கணமும் கற்றுவந்த வேதியருக்கும் மடம் ஒன்று விக்கிரம சோழன் காலத்தில் நிறுவப்பட்டதாக விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்று (கி.பி. 1120)[25] கூறுகின்றது. இன்றும் சைவ மடங்கள் பிராமணருக்கும் வடமொழி மரபுகளுக்கும் அளித்துவரும் அத்துணைச் சலுகைகளைத் தமிழ்ப் புலவர்களுக்கும் திருமுறை ஓதுவார்களுக்

25. Ep. Rep. 159/25.

கும் அளிப்பதில்லை என்பது அனைவரும்அறிந்த உண்மையாகும்; அண்மையில் தமிழ்மறை நூல்களும் இடம் பெற்றுள்ளன.

பிராமணரைப் பின்பற்றி வேறு சில குலங்களும் தத்தமக் கெனச் சில உரிமைகளையும் சலுகைகளையும் அரசாங்கத்திட மிருந்து பறித்துக் கொண்டதுண்டு. கண்மாளர் (கம்மாளர்),[26] கைக்கோளர், அகம்படியர் ஆகிய குலத்தினருக்குச் சில சிறப் புரிமைகள் வழங்கப்பட்டன.[27] அவற்றின் அடிப்படையில் அவர் கள் மாடிவீடு கட்டிக்கொள்ளுதல், குடைபிடித்தல், தமக்கு முன்பு சங்கு எக்காளம் ஊதுவித்தல் போன்ற விருதுகளை யும் வலிந்து பெற்றார்கள்.

இப்போது தமிழரின் சமூகத்தைத் துண்டாடி, உயர்வு தாழ்வு கற்பித்துக் குடிநலன்களை ஒரு சிலர் கைகளிலேயே குவித்துவரும் குல வேறுபாடுகள் அத்தனையும் சோழர் காலத்திலேயே கிடைத்துவிட்டன. வேளாளர் முதலியோர், செட்டிமார்கள் மற்றவர்களைவிட உயர்ந்தோரெனவும் பிராமணருக்கு அடுத்த படியிலுள்ளவரெனவும் கருதி வந்தனர்.

### வலங்கை இடங்கைக் குலங்கள்

சோழர் காலத்தில் ஓங்கி வளர்ந்த குல வேறுபாடுகளில் மிகவும் தீய விளைவுகட்குக் களனாக இருந்தது வலங்கை-இடங் கை என்னும் பிளவாகும். இவ் விரு பிரிவினருக்குமிடையே பல கடும் பூசல்கள் நேரிட்டுள்ளன. இப் பூசல்கள் சோழப் பேரரசின் காலத்திற்கு முன்னே தோன்றி விசயநகரத்துப் பேரரசர் காலத்தில் தொடர்ந்து வளர்ந்து வந்து ஆங்கிலேயர் அரசாட்சி யிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் நடை பெற்று வந்தன. சென்ற நூற்றாண்டில் இப் பூசல்களின் காரண மாகச் சென்னையின் தெருக்களில் மனித இரத்தம் சிந்தியதுண்டு. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வலங்கை-இடங்கை வேறுபாடுகள் திடீரென மறைந்துவிட்டன. இப்போது மக்களுக்கு அப் பெயர்களின் பொருளே இன்னதெனவிளங்குவதில்லை. இந்த வேறுபாட்டை வரலாற்று நூல்களின் பக்கங்களிற்றாம் விளங்கக் காண்கின்றார்கள். ஒன்பது நூற்றாண்டுகளாகத் தமிழரின் வாழ்க்கையை அலைக்கழித்துவந்த சமூகக்கேடு ஒன்றன் தோற்றமும் முடிவும் வரலாற்று விளக்கங்காணாத மறைபொருள்களாகவே உள்ளன.

26. S.I.I.II. 97;S.I.I.III. 25; S.I.I. V. 238; Ep. Rep. 227/27-28.
27. Ep. Rep.162/18.

வலங்கை-இடங்கைப் புராணம் என்னும் நூற்சுவடி ஒன்று மக்கன்ஸி என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டுச் சென்னைப் பழஞ் சுவடிகளின் நூல்நிலையத்தில் வைக்கப்பட்டுள்ளது. வலங்கைப் பிரிவில் தொண்ணூற்றெட்டுக் குலங்களும், இடங்கைப் பிரிவில் தொண்ணூற்றெட்டுக் குலங்களும் சேர்ந்திருந்தன வென்றும், அக் குலங்களுள் பெரும்பான்மையானவை கலப்புக் குலங்கள் என்றும் அச் சுவடி கூறுகின்றது. கரிகாற்சோழன் வலங்கை-இடங்கைப் பாகுபாட்டைத் தோற்றுவித்தான் என்று ஒரு வரலாறு கூறுகின்றது. வேறு வரலாறும் உண்டு. மூன்றாம் குலோத்துங்கனின் நாற்பதாம் ஆண்டுக் கல்வெட்டு[28] ஒன்றில், மூன்றாம் குலோத்துங்கனுக்குக் கரிகாலன் என்ற பெயரும் வழக்கி லிருந்தது வெளிப்படுகிறது. ஆகவே, மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில்தான் இப் பாகுபாடு வகுக்கப்பட்டதென்றும் சிலர் கூறு வர். இடங்கைப் பிரிவினர் தாம் எப்படித் தோன்றினர் என்பதைப் பற்றிய செய்தி ஒன்றைக் கூறுகின்றனர். அஃதாவது, காசிபமுனி வர் இயற்றிவந்த வேள்விக்கு அரக்கர்கள் பல இடையூறுகளை இழைத்து வந்தனர். அம் முனிவரின் கட்டளையின்படி இடங் கைத் தொண்ணூற்றெட்டு வகுப்பினர் ஓமக்குண்டத்தினின்றும் தோன்றி வேள்வியைப் பாதுகாத்து வந்தனர். அவர்கள் சோழ நாட்டுக்கு வந்து சேர்ந்தனர். அரிந்தம சக்கரவர்த்தியானவன் காசிபரோடு உடனிருந்து, வேள்வியை வளர்த்து உதவிய வேதிய ரைப் பாராட்ட விரும்பினான். அதற்காக அவர்களைப் பல்லக் கில் ஏற்றிச் சென்றான். இடங்கை வகுப்பினர் பல்லக்கின் பின் புறம் அமர்ந்து அப் பிராமணரின் குடைகளையும் மிதியடிகளை யும் ஏந்திச் சென்றனர். பிராமணர்கள் கீழே இறங்கும்போது இடங்கையினர் அவர்களுக்கு இடப்புறம் நின்று கைகொடுத்துத் தாங்கிக்கொண்டார்கள். அதனால் அவர்களுக்கு இடங்கையினர் எனப் பெயர் வழங்கி வரலாயிற்று. அப் பிராமணர்கள் திரு வெள்ளறை, பாச்சல், திருவாசி, திருப்பிடவூர், ஊற்றத்தூர், காரைக்காடு ஆகிய இடங்களில் குடியேறினர். இடங்கையினர் என்று தமக்குப் பெயர் வந்ததையும், தாம் பெற்ற விருதுகளை யும் இவர்கள் காடுகளில் இழந்துவிட்டனர். நெடுங்காலம் கழிந்த பிறகு இவர்கள் வழிவந்தவர்கள் தம் பிறப்பை யறிந்தனர். ஆகவே, தமக்குள் வேற்றுமை எதையும் வளர்த்துக்கொள்ளக் கூடாதென்றும், தம் குல உரிமையை என்றும், எங்கும் நிலை நாட்டிக் கொள்ளவேண்டும் என்றும், தாம் நடந்து போகும்போது தமக்கு முன்பு குடை பிடித்தல், கொம்பு ஊதுதல் ஆகிய கௌர வச் சின்னங்களைத் தம் பிறப்புரிமையாகக் கொள்ளவேண்டு

28. Ep. Rep. 489/12

மென்றும் இடங்கையினர் ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொண்டனர். இவ் வரலாறு வெறுங்கற்பனை என்றே தோன்றுகிறது.

வலங்கையினரைப்பற்றிய வரலாறு ஒன்றும் கிடைக்கவில்லை. மன்னனிடத்தில் இரு கட்சியினர் தமக்குள் ஏற்பட்ட பூசல்களைப் பற்றி முறையிடும்போது ஒரு கட்சி மன்னனின் வலப்புறத்திலும், மற்றொரு கட்சி அவனுடைய இடப்புறத்திலும் நிற்றல் மரபு. இன்றும் நீதிமன்றங்களில் நீதிபதிக்கு எதிரில் குற்றம் சாட்டுபவர் ஒருபுறத்திலும், குற்றம் சாட்டப்பட்டவர் மறுபுறத்திலும் நிற்பதைக் காணலாம். மன்னனின் வலப்புறம் நின்ற கட்சியைச் சேர்ந்த வகுப்பினருக்கு வலங்கையினர் என்றும், இடக்கைப்புறம் நின்ற கட்சி வகுப்பினருக்கு இடங்கையினர் என்றும் பெயர் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று ஊகிக்க வேண்டியுள்ளது. காஞ்சி புரத்தில் இம் முறை வழங்கியதாக அறிகின்றோம். அதனாலேயே அந் நகரத்தில் வலங்கை-இடங்கைக் கோயில், வலங்கை-இடங்கை மண்டபங்கள், வலங்கை-இலங்கைத் தேவரடியார்கள் என்ற பாகுபாடு காணப்பட்டது குறிப்பிடத் தக்கதாகும்.

வலங்கை இடங்கை வகுப்பினரிடையே பல பெரும் பூசல்கள் விளைந்து வந்துள்ளன என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள. இத்தகைய கலகம் ஒன்று ஏற்பட்ட செய்தியைத் திருவரங்கத்தின் கல்வெட்டு[29] ஒன்றின் வாயிலாக அறிகின்றோம். அக் கல்வெட்டு முதலாம் குலோத்துங்க சோழனுடைய பதினோராம் ஆட்சியாண்டில் நாட்டப்பட்டது. வலங்கை இடங்கைக் கலகம் அவனுடைய இரண்டாம் ஆட்சியாண்டில் நடைபெற்றது (கி.பி. 1071). இக் கலகம் நடைபெற்றபோது கலகக்காரர்கள் கிராமத்தைச் சுட்டு எரித்தனர்; கோயில்களை இடித்துத் தள்ளினர். அவர்களைத் தொடர்ந்து கொள்ளைக்காரர்கள் கோயில் சிலைகளையும் கோயில் பண்டாரத்தையும் சூறையாடினர். அவர்களுடைய கொள்ளைகளிலிருந்து சில பொருள்கள் மீட்கப்பட்டன. அவற்றைக் கோயிலில் வைத்துப் பாதுகாக்க முடியவில்லை. கிராமத்தை மீண்டும் சீரமைக்கவும், மக்களை அங்குக் குடியமர்த்தவும், இடிந்துபோன மதிற்சுவர்களை எழுப்பிக் கோயிலைப் பழுதுபார்த்துச் சிலைகளை மீண்டும் பழையபடியே அமைக்கவும் கிராமச்சபையினர் கோயில் பண்டாரத்திலிருந்து ஐம்பது கழஞ்சுப் பொன் கடன் வாங்கினர். இராசேந்திர சோழன் மாடைக்கு அரைமாற்றுக் குறைவாக

29. Ep. Rep. 31/37.

இருந்தது அப் பொன். கடன்மேல் இருபத்து ஐந்து கழஞ்சுப் பொன் வட்டி ஏறிற்று. வட்டியும் முதலுமாகக் கூடிய எழுபத்தைந்து பொன்னில் ஐந்து கழஞ்சுப் பொன் கோயிலைப் புதுப்பிக்கவும், சிலைகளை அமைக்கவும் செலவாயிற்று. மிகுதி எழுபது கழஞ்சுப் பொன்னுக்கு ஈடாக அச் சபையானது கோயிலின் அன்றாட வழிபாட்டுக்காகக் கோயில் நிலங்களை இறையிலி நிலங்களாக மாற்றிக் கொடுத்தது.

இக் கலகம் விளைந்த இடம் இராசமகேந்திர சதுர்வேதி மங்கலம் என்ற பிராமணக் கிராமமாகும். அக் கிராமம் நித்த விநோத வளநாட்டுக் காந்தார நாட்டைச் சேர்ந்தது. இப்போதைய பாபநாசம், நன்னிலம் தாலுக்காக்களுக்கு அக் காலத்தில் நித்த விநோத வளநாடு என்று பெயர் வழங்கி வந்தது. நாட்டின் இப் பகுதியில் ஏற்பட்ட பூசல்களைப்பற்றிய செய்தியைத் திருவரங்கம் கோயிலின்மேல் பொறித்து வைத்ததற்குக் காரணம், அக் கல்வெட்டானது பெரியதொரு கோயிலில் பொறிக்கப்பட்டால் நீண்ட காலம் அழியாமல் இருக்கும் என்பதற்காகத்தான் இருக்கவேண்டும். சிறு கிராமத்தில் நாட்டப் பெறும் கல்வெட்டுகள் இத்தகைய கலகங்களினாலோ, வேறு எக் காரணத்தாலோ என்றும் அழிந்து மறைந்து போகக்கூடும்.

இக் கல்வெட்டுக் செய்தி கூறும் வலங்கை இடங்கைப் பூசல் நடைபெற்றதற்கு ஆழ்ந்ததொரு காரணம் ஏதேனும் இருந்திருக்க வேண்டும். இன்றேல், கோயிலை இடித்து நிரவுமளவுக்கு அக் காலத்துக் குடிமக்களுக்கு நெஞ்சுரம் ஏற்பட்டிராது. இப் பூசல் நீண்ட காலமாகவே இருந்து வந்திருக்க வேண்டும். வலங்கை வகுப்பினர்களுக்கு அரசாங்கச் செல்வாக்கும், வாழ்க்கை வசதிகள் விருதுகள் போன்ற நலன்களும், சிறப்புகளும் ஏராளமாக வழங்கப்பட்டு வந்தன என்று கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன. இடங்கையினரின் நிலைமை பல படிகள் தாழ்ந்தே இருந்துவந்தது. அதனால் அவர்கள் மனம் புழுங்கியவர்களாய், வலங்கையினரின் மேல் போர் தொடுத்தனர் என அறிகின்றோம். வலங்கையினர் மட்டுமன்றிப் பிராமணர், வேளாளர், வன்னியர் போன்ற இதர குலத்தினரும் இடங்கை வகுப்பினர்க்கு இன்னல்கள் விளைத்தனர்.[30] ஆனால், பெரும்பாலும் பிராமணரும் வேளாளரும் இப் பிரிவுகளில் பங்குகொள்ளவில்லை.

வலங்கையினர், மன்னரின் படைகளில் சிறப்பிடம் அளிக்கப் பெற்றிருந்தனர். வலங்கைப் பழம் படைகளிலார், பெருந்

30. Ep. Rep. 34/1913.

தனத்து வலங்கைப் படைகள், அழகிய சோழ தெரிந்த வலங்கை வேளைக்காரப் படைகள், இராசராச தெரிந்த வேளைக்காரப் படைகள் என்ற பெயரைத் தாங்கிய படைகள் சோழ மன்னரிடம் இருந்தன.[31] இடங்கையினரைப் பற்றிய தனிக் குறிப்புகள் கல்வெட்டுகளில் காணப்படுவதில்லை; வலங்கையினருடன் வைத்தே அவர்களைப் பற்றிய செய்திகள் கொடுக்கப் பட்டுள்ளன. எனவே, படைகளுடன் இடங்கையினரும் ஏதேனும் ஒரு தொடர்பு கொண்டிருந்தனரோ என்று ஊகிக்கவேண்டியுள்ளது. எனினும், அவர்கள் பெரும்பாலும் வணிகர்களாகவும், தொழிலாளராகவுமே பிழைப்பை நடத்தி வந்தனர் எனத் தெரிகின்றது. இவ் ஊகத்துக்குச் சான்று ஒன்றும் உள்ளது. சிங்கள மன்னன் விசயபாகுவின் பொலன்னருவைக் கல்வெட்டு[32] ஒன்று ஒரு செய்தியைக் கொண்டுள்ளது. அவன் புனிதச் சின்னமான புத்த பகவானின் பல் ஒன்றை வைத்து அதன்மேல் கோயில் எழுப்பினான். அக் கோயிலுக்கு 'மூன்று கை திரு வேளைக்காரன் தலதாயப் பெரும்பள்ளி' என்று பெயர் சூட்டி அதை வேளைக்காரரின் பாதுகாப்பில் விட்டுவைத்தான். அவ் வேளைக்காரர்கள்'மாதாந்திரத்தோங்கூடி, எங்களுக்கு மூதாதைகளாயுள்ள வளஞ்சியரையும் எங்களோடு கூடிவரும் நகரத்தார் உள்ளிட்டாரையும் கூட்டி...., கலந்து பேசி, மன்னனுடைய விருப்பத்துக்கு ஒப்புக்கொண்டு, கல்வெட்டில் வலங்கை, இடங்கைச் சிறுதனம் பிள்ளைகள், தனம் வடுகர், மலையாளர், பரிவாரக் கொந்தம் பலகலனையுள்ளிட்ட திருவேளைக் காரோம்' என்று கையொப்பமும் இட்டார்கள். கலனையென்றால் தொழிலாளர்கள் என்று பொருள்.

மாதாந்திரத்தாரின் மூதாதையரான வளஞ்சியரும், மாதாந்திரத்தாருடன் இணைத்துப் பேசப்படும் நகரத்தாரும் வாணிகம் நடத்தியவர்கள். வளஞ்சியருக்கும் நகரத்தாருக்கும் உள்ள வேறுபாடு என்ன எனத் தெரியவில்லை. மாதாந்திரத்தாரின் தலைமை அல்லது மூல அலுவலகம் வடக்கே பீஜப்பூரின் அண்மையிலுள்ள ஐயப்பொழிலில் அமைந்திருந்தது. வளஞ்சியர்கள் இம்மூல இடத்தைச் சார்ந்தவர்கள் ஆவர். எனவே, மாதாந்திரத்தாரின் மூதாதையர் 'வளஞ்சியர்' எனக் குறிக்கப்பட்டுள்ளனர். ஐயப்பொழிலைத் தலைமையிடமாகக் கொண்டு நடைபெற்ற வாணிக நிறுவனத்துக்கு 'நானாதேசி திசையாயிரத்து ஐந்நூற்றுவர்' என்றும் பெயர். மாதாந்திரத்தார் படைத்தலைமையின் நிருவாகக் குழுவாவர். ஆகவே, இக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள வேளைக்

31. S. I. I. II. Preface.
32. Ep. Ind. 18. No. 338; Ep Rep. 600.12.

காரர்கள் வாணிகத் துறையுடன் தொடர்புகொண்டவர்கள் என ஊகிக்க இடமுண்டு.

கோயில்களைப் படையினரிடம் பாதுகாப்புக்காக ஒப்படைக்கும் வழக்கம் அந் நாளில் தமிழகத்திலும் இருந்துவந்ததாகப் பல கல்வெட்டுச் செய்திகளின் மூலம் தெரிந்துகொள்ளுகின்றோம். முதலாங் குலோத்துங்கன் காலத்தில் சேரன்மாதேவி பக்தவச்சலன் கோயிலுக்கு அளிக்கப்பட்ட சில அறங்களைப் பாதுகாக்கும் பொறுப்பு 'மூன்றுகை மாசேனை' என்ற பெயருள்ள படை ஒன்றினிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.[33] திருவாலீசுரத்தின் கோயிலும் இச் சேனையின் பாதுகாப்பிலேயே இருந்துவந்தது.[34] தஞ்சை மாவட்டத்திலுள்ள புஞ்சை என்னுமிடத்தில் கிடைத்துள்ள கல்வெட்டு[35] ஒன்று, அவ்வூர்த் தேவதான நிலங்களில் சில கோயிலுக்கே உரிமையானவை என்பதை உறுதியாக்கும் பொருட்டுத் திரிசூல வேளைக்காரர் நால்வர் தீக்குளித்து உயிரை மாய்த்துக்கொண்டனர் என்ற செய்தியைத் தெரிவிக்கின்றது. கோயில்களிலும் வேளைக்காரர் பணிபுரிந்து வந்தனர் என்று இதனால் அறிகின்றோம். பாண்டி நாட்டில் பெருங்குளம் என்ற ஊரில் வலங்கை மகாசேனையினர் குன்றமெறிந்த பிள்ளையார் கோயிலுக்குச் சில நிலங்களை விற்றார்கள். இப் பெரும்படையினில் எட்டுப் பிரிவுகள் அடங்கியிருந்தன.[36]

இக் கல்வெட்டுச் செய்திகளை யாய்ந்து நோக்கில் மூன்று கை மகாசேனை என்பது மூன்று பிரிவுகளாக அமைக்கப்பட்டிருந்ததென்றும், அவற்றுள் ஒன்றான வலங்கைப் பிரிவு நிலையான பிரிவு என்றும், இடங்கை என்பது வணிகர்களையும் சில தொழிலாளர்களையும் கொண்டது என்றும், மூன்றாவது பிரிவு கோயில் பணியாளர்களைக் கொண்டிருந்ததென்றும் ஊகிக்க இடமேற்படுகின்றது.

இடங்கை வகுப்பினர் பலராலும் துன்புறுத்தப்பட்டு வந்தனர். இவர்கள் அவ்வக்காலங்களில் பட்ட துன்பங்களையும் அவர்கள்மீது ஏற்றப்பட்ட வரிச் சுமைகளையும் பற்றிப் பல கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன. நிகரிலிச் சோழ மண்டலத்து எழுபத்தெட்டு நாடுகளும், சயங்கொண்ட சோழ மண்டலத்தின் நாற்பத்தெண்ணாயிரம் பூமியும், பெரும்படை வலங்கை மகாசேனைக்கு வழங்கப்பட்ட இராசேந்திர சோழப் பதினெண் பூமியும் உள்ளிட்ட நாடுகளில் சோழ வமிசம் தோன்றின நாள்

33. Ep. Rep. 189/1895.
34. Ep. Rep. 967/1909.
35. Ep. Rep. 188/15.
36. Ep. Rep. 232/32-33.

முதலே பசுக்களுக்கும் எருமைகளுக்கும் வரி விதிக்கப்பட்டதில்லை என்றும், அதனால் அதிகாரி மூவேந்த வேளான் விதித்த இப் புதிய வரிகளை அவர்கள் செலுத்த வேண்டியதில்லை என்றும் கிளர்ச்சி செய்து பதினெண் விஷயத்தார்களும் தாம் கொடுக்கவேண்டிய வரி விகிதங்களை அறுதியிட்டு முடிவு கட்டினார்கள்.[37]

வளஞ்சியர் என்ற வாணிகக் குழுவினைப்பற்றி முதலாம் இராசேந்திர சோழன் காலத்திய காட்டூர்க் கல்வெட்டு[38] ஒன்று விரிவான செய்திகளைக் கூறுகின்றது. வீர வளஞ்சிய சமயத்தைப் பாதுகாப்பவர்கள் இவர்களே என்றும், இவர்கள் வாசுதேவன், கந்தழி, வீரபத்திரன் ஆகிய கடவுளரிடம் தோன்றியவர்கள் என்றும், பட்டாரகி (துர்க்கை)யை வழிபடுபவர்கள் இவர்கள் என்றும் அக் கல்வெட்டுக் கூறுகின்றது. இவர்களுள் பல பிரிவினர் உண்டு. நான்கு திசைகளின் ஆயிரம் வட்டங்கள், பதினெண் நகரங்கள், முப்பத்திரண்டு வேளர்புரங்கள், அறுபத்து நான்கு கடிகைத்தானங்கள் ஆகியவற்றினின்றும் இவர்கள் வந்தவர்கள். இவர்கள் குழுவில் செட்டிகள், செட்டிப் பிள்ளைகள், கவரர்கள், கந்தழிகள், பத்திரகர்கள், காவுண்ட சுவாமிகள், சிங்கம், சிறுபுலி, வலங்கை, வாரியன் ஆகியவர்களும் சேர்ந்திருந்தனர். இந்த நானாதேசிகள் மயிலார்ப்பு (மயிலாப்பூர்) என்னும் இடத்தில் கூடிப் பேசி ஒரு முடிவுக்கு வந்தார்கள். ஐயப்பொழிலாக இருந்த காட்டூரை வீரப்பட்டினமாக மாற்றவேண்டும்; எல்லா வரிகளினின்றும் அதற்கு விலக்கு அளிக்கவேண்டும்; குழுவினர் பெற்றுவந்த ஊதியத்தை இரட்டிப்பு மடங்காக்கவேண்டும். அன்று முதல் உருவிய வாளுடன் வரிதண்டுவோர்கள், வரிக்காகச் சிறைபிடிப்போர்கள், வரி கொடாதவர்களைப் பட்டினி போட்டோ, அல்லது வேறு எந்த வகையிலோ துன்புறுத்துபவர்கள் ஆகிய வணிகர்கள் இந் நகரத்தில் வாழக்கூடாது. அப்படி வாழ்வார்களாயின் அவர்கள் வளஞ்சியர் குலத்தினின்றும் விலக்கப்படுவார்கள்.

சில சமயம் வலங்கையினர், இடங்கையினர் ஆகிய இரு வகுப்பினருமே பிராமணரையும் வேளாளர்களையும் எதிர்த்துப் போராடவேண்டிய நெருக்கடி நிலைமை ஏற்பட்டதுண்டு. ஆடுதுறை வட்டத்தில் பிராமணர்களும், வேளாளர்களும் காணியாட்சி கொண்டாடினர். அவர்களுக்கு எதிராக வலங்கை 98 குலங்களும், வழுதலம்பட்டு ஊசவாடி ஆகிய ஊர் இடங்கை

37. Ep. Cer nane's. 10-458/1911.
38. Ep. Rep. 256/12.

யினரும் தமக்குள் ஒற்றுமை உடன்படிக்கை யொன்றைச் செய்து கொண்டார்கள்.[39] இவ் வுடன்படிக்கையின் அடிப்படையில் பராந்தக நாட்டுக் குடிமக்களான வலங்கை 98 குலத்தினர், இடங்கை 98 குலத்தினர் ஆகியவர்கள் தாம் அரசாங்கத்துக்குக் கொடுக்க வேண்டிய **இராசகரம் இறை முறைமையை**யும், கோயிலுக்கு அளிக்கவேண்டிய வரிகளையும், தம் தம் நிலங்களின் தரத்துக்கு ஏற்றவாறு நிர்ணயம் செய்துகொண்டனர் என்று வைகாவூர்க் கல்வெட்டுகள் கூறுகின்றன.[40] நிலத்தின் தரங்கள் பின்வருமாறு பிரிக்கப்பட்டன : நெல் வயல்கள், உழவுக்குக் கொண்டு வந்த தரிசுகள், காடுகொன்று நிலமானவை,'கடைப் பூநிலங்கள், இறைப்பு நிலங்கள், வாழைத் தோட்டங்கள், கரும்புத் தோட்டங்கள், படுகைத் தாக்கிலுள்ள வாழை கரும்புத் தோட்டங்கள், செந்தாமரை பூக்கும் சதுப்புகள், மஞ்சள், இஞ்சி, வெங்காயம், வெள்ளைப் பூண்டு விளையும் தோட்டங்கள், வழுதுணங்காய் (கத்தரிக்காய்), பூசணிக்காய் முதலியவை விளையும் நிலங்கள், நெல்லுப் பருத்தி, வரகு பருத்தி, கடுகு, பனிக்கடலை, கோதுமை, குசும்பை ஆகியவை விளையும் நிலங்கள், ஏரிவாய், தாங்கல்வாய், கொள் விளையும் புழுதி, எள் விளையும் புன்செய், தனிப்பருத்தி, தனி ஆமணக்கு, தினை, பனிவரகு, சாமை விளையும் நிலங்கள், வேதி கொழுந்து, ஒளிமுடு கொழுந்து விளையும் நிலங்கள், பாக்கு, தென்னை, பலா ஆகிய வான்பயிர் விளையும் நிலங்கள் என்பன அத் தரங்கள். இவ் வலங்கை இடங்கையினர் தாம் வீட்டு வரி செலுத்தவும் ஒப்புக்கொண்டனர். தந்திரிமார்செட்டி, கைக்கோள நெசவாளர், சாலிய நெசவாளர், நியாயத்தார், மன்றாடிகள், சரிகைத்தறி நெய்வோர், குயவர், நாவிதர், வண்ணார், கள்ளக்காணன், வாணியர், பறையர் ஆகியவர்கள் மேல் தொழில்வரி விதித்தார்கள்.

அரசாங்க அதிகாரிகளும், சீவித நிலங்களின் உரிமையாளரும், காணியாளரும், பிராமணரும் அரசாங்கத்தின் சார்பில் வலங்கை இடங்கையினரிடமிருந்து தண்டிய வரியைத் தாமே கையாடி வந்தனர். அதனால் இக் குலத்தினர் அவர்கட்குக் குடியிருப்பு வசதிகளைச் செய்து தரக்கூடாதென்றும், அவர்களுக்குக் கணக்கு எழுதக்கூடாதென்றும், அவர்கள் திட்டங்கள் எவற்றுக்கும் உடன்படக்கூடாதென்றும் தமக்குள் ஓர் ஒப்பந்தம்செய்துகொண்டனர். இவ் வொப்பந்தத்தை மீறுபவர்களைக் கண்ட இடத்தில் குத்திக் கொன்றுவிடவேண்டுமென்றும், அவர்கள் கண்டிப்பான முடிவு ஒன்றை மேற்கொண்டனர். இச் செய்தியை விருத்தாசலம்

39. Ep. Rep. 34/13. 40. Ep. Rep.. 59, 361, 362/14.

கல்வெட்டு[41] ஒன்று தெரிவிக்கின்றது. இதே விதமான ஒப்பந்தம் ஒன்றைத் தஞ்சை மாவட்டம் கொறுக்கைக் கல்வெட்டு ஒன்றும் கூறுகின்றது. அவ்விடத்தில் வலங்கை தொண்ணூற்றெட்டுக் குலத்தினர், இடங்கை தொண்ணூற்றெட்டுக் குலத்தினர் ஆகியவர்கள்மேல் விதிக்கப்பட்ட வரிகள் அவர்களுடைய நிலத்தில் கிடைத்துவந்த வருமானத்தின் அடிப்படையில் அமைந்திருக்கவில்லை. அவ் வரிகளின் சுமையைத் தாங்கமுடியாமல் இவர்கள் ஊரைவிட்டு ஓடிவிடவும் எண்ணினர். தாம் ஒற்றுமையாக இராத காரணத்தால்தான் இக் கொடுங்கோன்மை நிகழ்ந்து வந்தது என்று அறிந்து தம் வருமானத்துக்கு ஏற்ற வரியையே கொடுப்பது என்றும், முறையற்ற வரிகளை எதிர்ப்பது என்றும் இவர்கள் தமக்குள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர்.[42]

வலங்கை உய்யக்கொண்டான் குலத்தினர் வறுமைவாய்ப்பட்டவர்களாய் அரசாங்கத்தினிடம் மன்றாடித் தாம் செலுத்தி வந்த வரி விகிதத்தைக் குறைத்துக்கொண்டனர்.[43]

வலங்கை இடங்கை மகன்மை என்றொரு வரி தண்டப்பட்டதென்றும் அவ் வரித் தொகை கோயிலுக்குக் கொடுக்கப்பட்டதென்றும் திருவெண்காட்டுக் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.[44]

இடங்கைப் பிரிவில் சேர்க்கப்பட்டுள்ள குலங்களுள் சில வாணிகத்துடனும் உழைப்புடனும் தொடர்புடையன. அவர்கட்குப் பெரிய சுமையாக இருந்தது சுங்க வரி. இவ் வரியினால் வணிகர்கட்குப் பலவிதமான இடைஞ்சல் ஏற்பட்டிருக்கவேண்டும். அவர்கள் சுங்கவரியை எதிர்த்துக் கலகங்கள் விளைத்தனர். திருவரங்கத்துக் கல்வெட்டுத் தெரிவிக்கும் கலகமும் அவற்றுள் ஒன்றாக இருக்கலாம் என்றும் ஐயுற வேண்டியுள்ளது. ஏற்கெனவே வலங்கையினருக்கும் பிராமணருக்கும் வேளாளருக்கும் அரசன் அளித்திருந்த சலுகைகளைக் கண்டு இடங்கையினர் பொருமிக் கொண்டிருந்தனர். அஃதுடன் சுங்கத்தின் சுமை வேறு அவர்களை வாட்டி வந்தது. சுங்கம் மனுவின் காலத்திலிருந்தே விதிக்கப்பட்டு வந்ததாகவும், மனுதருமத்தில் சுங்கமும் ஏற்றம் பெற்றிருந்ததும் தெரிகின்றது.[45] மிகப் பண்டைய அரசுரிமையினின்றும் விலக்குப் பெறுவது அவ்வளவு எளிதன்று. விண்ணப்பத்தாலும் வேண்டுகோளினாலும் அதைச் சாதித்துக்கொள்ள முடியாது என்று இடங்கை

41. Ep. Rep. 92/18.
42. Ep. Rep. 216/17.
43. Ep. Rep. 269/17.
44. S. I. I. V. No. 976.
45. குலோ. சோ. உலா. கண்ணி-26.

யினர் உணர்ந்தவர்களாய், வேறு ஒன்றும் சமாதானமாகச் செய்ய முடியாத நிலையில் உளம் கனன்று புரட்சியில் இறங்கலாயினர். அவர்கள் குடிமக்கள் செய்யக்கூடாத கொடுமைகளைச் செய்தனர்; கோயில் ஒன்றை இடித்தார்கள். கொள்ளைக்காரர்கள் இவர்களுடைய எதிர்ப்பு நடவடிக்கைகளைப் பயன்படுத்திக் கொண்டு கோயில் சிலைகளையும் மூலபண்டாரத்தையும் திருடிச் சென்றனர்.[46] இத்தகைய கலகங்கள் வேறு இடங்களிலும் ஏற்பட்டிருக்கக்கூடும். இவர்களுடைய வன்முறைச் செயல்கள் முதலாம் குலோத்துங்கனின் கருத்தைக் கவர்ந்திருக்க வேண்டும். அவன் வணிகரின் எதிர்ப்பின் நோக்கத்தை உணர்ந்து சுங்க வரியை நீக்கிவிட்டான்.[47] சுங்கந் தவிர்த்த சோழன் என்று ஒரு விருதும் அவனுடைய பெயருடன் இணைந்தது. வீரராசேந்திர சோழன் இறந்து அவனுடைய மகன் அதிராசேந்திரன் பட்டத்துக்கு வந்தான் (கி. பி. 1070). அப்போது நாட்டில் பெருங் குழப்பமும் கலகமும் உண்டாயின. ஒரு கலகத்தின்போது அதிராசேந்திரன் கொல்லப்பட்டான். இடங்கையினரின் கலகங்கள் கோயிலுக்கும் கோயில் உடைமைகட்கும் சேதம் உண்டுபண்ணினதுமன்றி ஒரு மன்னன் உயிரையே குடிக்குமளவுக்கு மிக வன்மையானதாக இருந்திருக்க வேண்டும்.

வலங்கையினருக்கும் கைக்கோளருக்குமிடையே உரிமைகளுக்காகவும், விருதுகளுக்காகவும் பெரும் பூசல்கள் நேர்ந்துள்ளன.[48]

சில குலத்தினர் ஒன்றுகூடி அரசியலிலும் அரசுரிமைப் போராட்டங்களிலும் தலையிட்டு வந்தனர் எனக் கல்வெட்டுச் செய்தி ஒன்று தெரிவிக்கின்றது.[49] வடஆர்க்காடு மாவட்டம், செங்கம் இடபேசுவரர் கோயிலில் இக் கல்வெட்டு அமைக்கப்பட்டுள்ளது. பல குலத்தினர் ஒன்றுகூடித் தமக்குள் ஒப்பந்தம் ஒன்று செய்துகொண்டனர். தாம் அனைவரும் குறிப்பிட்ட குறுநில மன்னன் ஒருவனுக்கே குடிகளாக வாழ்ந்து வரவேண்டியவர்கள் என்றும், அவனுடைய மகனோ ஏனைய தலைவர்களோ அரசுரிமை பாராட்டுவாராயின் அவர்களையும் அவர்களுக்கு உடந்தையானவர்களையும் கொன்றுவிட வேண்டுமென்றும், அவர்களுடைய பெண்டிரைக் கற்பழிக்க வேண்டுமென்றும், அவர்களைச் சார்ந்தவர்களைக் குலநீக்கம் செய்யவேண்டுமென்றும் தமக்குள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர். இந்த ஒப்பந்தத்தை மீறியவர்கள் 'புல்லுப் பறிக்கிற பறைய'ருக்குத் தம் பெண்ணைக்

46. Ep. Rep. 31/37.
47. Ep. Rep. 408/12.
48. S. I. I. VIII. No. 155.
49. S. I. I. V. No. 118.

கொடுத்த இழிவை யடைந்தவர்களாவார்கள்; தாயின் 'மிணாஎன்' (மணாளன்) ஆன மாபாதகர்களாகக் கருதப்படுவர்; அது மட்டுமன்றி, செவ்வாய்க்கிழமைதோறும், செயங்கொண்ட நாச்சியார் என்ற கிராம தேவதையின் முன்பு ஆடுகள் பலியாகும் இடத்தில் அவர்கள் நரபலியிடப்படுவார்கள் என்று அவ்வொப்பந்தம் சில தண்டனைகளையும் குறிப்பிடுகின்றது. 'நாட்டு நாயகம் செய்வோர்களும், மன்றாடுவோர்களும், பிள்ளை முதலிகளும், தனியாள்களும்...கூலிச் சேவகர்களும், கோவிந்த விச்சாதிரரும், நவிரமலைத் தென்பற்று நாட்டவரும், நாட்டு முதலிகளும் உள்ளிட்ட பல சனத்தோமும், அடிவாரத்து மலையாளரும், மலையாள முதலிகளும், முதுநீர் மலையாளரும், மலையரண் முதலிகளும், செட்டிகளும், வணிகரும், கணக்கரும், கருமப் பெரும் பன்னாட்டவரும், பன்னாட்டு முதலிகளும், பொற்கொற்றக் கைக்கோளரும், ஆண்டார்களும், சிவப்பிராமணரும், உவச்சரும், தென்கலைநாட்டு, வடகலை நாட்டவரும், தென்மலை நாட்டவரும்...புலவரும், பண்ணூவாரும், நியாயத்தாரும், பன்னிரண்டு பணிமக்களுமுள்ளிட்ட பெரும்வேடரும், பாணரும், பறையரும், இருளரும் உள்ளிட்ட அனைத்துச் சாதிகளும், அந்தணன் தலையாக அரிப்பன் கடையாக அனைத்துச் சாதிகளும்...' இவ்வொப்பந்தத்தில் கையொப்பம் செய்துள்ளனர். இக் கல்வெட்டின் காலம் கி.பி. 1250. அக் காலத்தில் உயர்ந்த குலம், அந்தணர் குலம் என்றும், மிகத் தாழ்ந்த குலம், அரிப்பர் குலம் என்றும் அறிகின்றோம். அரிப்பர் என்போர் மணலையரித்துப் பொன்னெடுப்போர் ஆவர்.

வலங்கை-இடங்கைப் பிரிவுகளல்லாமல், இரதகாரர் என்று வேறு ஒரு குலப்பிரிவும் இருந்ததாகவும், அவர்கள் அனுலோமர்கள் என்றும் சில கல்வெட்டுகள் கூறுகின்றன. உயர் குலத்துத் தந்தைக்கும் தாழ்குலத்துத் தாய்க்கும் பிறந்தவர்கள் அனுலோமர் எனப்படுவர். க்ஷத்திரியத் தந்தைக்கும் வைசியத் தாய்க்கும் பிறந்தவர் மாகிஷ்யர்கள்; வைசியத் தந்தைக்கும் சூத்திரத் தாய்க்கும் பிறந்தவர்கள் கரணீகள்; மாகிஷ்யர் தந்தைக்கும் கரணீத் தாய்க்கும் பிறந்தவர்கள் இரதகாரர்கள்; யாக்ஞவல்கியர், கௌதமர், கௌடிலியர் ஆகியவர்களின் சூத்திரங்களை அடிப்படையாகக் கொண்டு இந்த இரதகாரர்கள் இன்ன தொழிலில்தான் ஈடுபடலாம் என்று இராசாசிரய சதுர்வேதி மங்கலத்துப் பிராமணர்கள் விதிகள் வகுத்தனர். அவற்றின்படி கட்டடம் கட்டுதல், இரதங்களைச் சமைத்தல், வேதியரின் வேள்விகளுக்கு வேண்டிய சட்டுவங்கள், தட்டுகள் முதலியவற்றைச் செய்து கொடுத்தல், மண்டபங்களைக் கட்டுதல், மன்னர்

களுக்கு மணிமுடிகள் வனைதல் ஆகிய பணிகள் இரதகாரர் களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. இவ் வகுப்பினருக்கு உபநயனம் செய்துகொள்ளும் உரிமையுண்டு. இரதகாரர்கள் பிரதிலோமர்களைவிட உயர்ந்தவர்களாகக் கருதப்பட்டனர்.[50]

குலங்கள் ஒன்றோடொன்று கலந்ததனால் பல புதிய குலங்களும் நூற்றுக்கணக்கில் தோன்றலாயின.

பறையர் என்ற குலத்தினரைப்பற்றி இலக்கியங்களிலும், கல்வெட்டுகளிலும் பல செய்திகள் கிடைக்கின்றன. பறையர்கள் தனித்தனிச் சேரிகளில் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கெனத் தனிச் சுடுகாடும் ஒதுக்கப்பட்டிருந்தது.[51] ஏனைய குலத்தினரைப் போலவே அவர்கள் முழுச் சொத்துரிமை பெற்ற குடிகளாக வாழ்ந்தனர். கிராமத்தார்கள் எழுதிக் கொடுத்த ஆவணங்களில் பறையர்கள் கையெழுத்திட்டுள்ளனர். சோழர் காலத்தில் தீண்டாதவர்கள் என்றோ, சண்டாளர்கள் என்றோ இவர்கள் அழைக்கப்படவில்லை. ஆனால், 'புல்லுப் பறிக்கிற பறையன்'[52] தாழ்ந்தவனாகக் கருதப்பட்டான். அஃதுடன் ஆவுரித்துத் தின்று வாழ்ந்த புலையரும் சமூகத்தில் தாழ்ந்தவராகக் கொள்ளப் பட்டனர். இக் குலத்தினருள் 'ஊர்ப் பறையன்' என்று ஒரு பிரிவினரும் இருந்தனர். ஊர்ப் பறையன் மண்டை சோமநாதன் ஏழிசை மோகப் படைச்சன் என்பான் ஒருவன் முதலாம் இராசராசன் காலத்தில் கோயிலில் சந்திவிளக்கு ஒன்று ஏற்றிவரத் தானம் அளித்துள்ளான்.[53] பறையடியான் ஒருவன் திருக்கழுக்குன்றம் கோயிலில் விளக்கு ஒன்று எரிக்க ஏற்பாடுகள் செய்து வைத்தான்.[54] வேறு பலரும் கோயில்களுக்குத் தானம் அளித்த செய்திகள் கல்வெட்டுகளில் கிடைக்கின்றன.[55] ஆனால், கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் திருக்கோவலூர்ப் பகுதியில் பறையர் மிகவும் இழிந்த நிலையில் வைக்கப்பட்டிருந்தனர்.[56]

பறையருக்கும் ஏனைய குலத்தினருக்குமிடையே அடிக்கடி பூசல்கள் விளைந்ததுண்டு. கற்றுப்பட்டு, பாகனேரி என்ற ஊர்களை யுள்ளிட்ட இருபத்துநான்கு ஊர்களின் குடிமக்களுக்கும் பறையருக்குமிடையே பூசல் ஏற்பட்டது. பறையர் செய்துவந்த ஊழியத்துக்குத் தக்க கூலியை அக் குடிமக்கள் கொடுக்கவில்லை என்பதுதான் அப் பூசலுக்குக் காரணம் என அறிகின்றோம். இரு

50. Ep. Rep. 479/1908.
51. S.I.I. VII. No. 63; S.I.I.
52. S. I. I. VII. 118.
53. S. I. I. No. 794.
54. S. I. I. VII. Nos, 31, 32, 33.
55. S. I. I. 203/40-41.
56. S. I. IIX No. 164.

கட்சியினரும் ஒருவரோடொருவர் கைகலந்தனர். குருதி சிந்திற்று. கங்கையராயன் என்பான் ஒருவன் தலையிட்டுப் பூசலைத் தீர்த்து வைத்தான். குடிமக்கள் பறையருக்குச் சில உரிமைகளை வழங்க வேண்டுமென்றும், சுப அசுப காலங்களில் அவர்களுக்குக் குறிப்பிட்ட அளவு அறுவடைப் பண்டங்களை அளக்க வேண்டுமென்றும் அவன் ஏற்பாடுகள் செய்து கொடுத்தான்.[57]

பிராமணரையும் வேளாளரையும் எதிர்த்தும் கலகங்கள் விளைந்துள்ளன. இவ்விரு வகுப்பாரையும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்பவர்களுக்கு இருபதினாயிரம் காசுகள் தண்டம் விதிக்கப்படும் என்றும், தண்டம் செலுத்தத் தவறினால் குற்றவாளிகளின் நிலங்கள் பறிமுதல் செய்யப்படும் என்றும் மூன்றாம் குலோத்துங்கனின் ஆணை ஒன்று பிறந்தது. கவுணியன் ஸ்ரீகபாடன், ஸ்ரீகிருஷ்ணன், ஸ்ரீகபாடன் பெரியாண்டான் ஆகியவர்கள் கலகம்செய்து அரிநாராயணன் என்ற பிராமணன் வீட்டுக்கு எரியூட்டியதாகவும் அதற்காக அவர்கட்குத் தண்டம் விதிக்கப்பட்டதாகவும் கீழையூர்க் கல்வெட்டுச் செய்தி ஒன்று கூறுகின்றது.[58] கவுணியன் ஸ்ரீகபாடன் என்பவன் சிவப் பிராமணன் ஆவான். அந்தணருக்கே இக் கோத்திரம் உரியது. பிராமணர்கள் பிராமணரையே எதிர்த்துக் கலகம் விளைத்துள்ளனர். எனவே, பிராமணருக்குள்ளேயே பூசல்களும், கலகங்களும் நேரிட்டிருக்கின்றன என்று கொள்ள வேண்டியுள்ளது.

கோயிலின் கொட்டு மேளங்களிடையே, பதியிலாரும் தளிச்சேரிப் பெண்களும் ஆடிய இசைக் கூத்துகளிடையே, அந்தணர் ஆற்றிய வேள்விகள், ஓதிய மறையொலி ஆகியவற்றுக்கிடையே, பேரரசர்களும் சிற்றரசர்களும் ஆங்காங்குக் கொண்டாடிய விழாக்கள், களியாட்டங்களினிடையே குடிமக்கள் வாழ்வில் ஆழ்ந்த சாதிப்பிளவுகளும், உரிமைப்போராட்டங்களும் வரிச்சுமைப் பாரமும், ஏழ்மையும், பஞ்சமும் அவர்களுக்கு அளவற்ற இன்னல்களையும், சீர்கேட்டையும் விளைவித்து வந்தன. தாம் பிறந்த குலத்தின் காரணமாகவும், தாம் செய்து வந்த தொழிலின் காரணமாகவும், தாம் விளைவு செய்த பண்டங்களின் காரணமாகவும், பலவகையான வரிகளையும், கட்டணங்களையும், கடமைகளையும், மகன்மைகளையும், சுங்கங்களையும் அரசாங்கத்துக்கும் கோயில்களுக்கும் செலுத்த வேண்டியவர்கள் ஆனார்கள். சோழர்கள் காலத்தில் குடிமக்களின்மேல் விதிக்கப்பட்ட வரிகள் நானூற்றுக்கும் மேற்பட்டிருந்தன எனக் கல்வெட்டுகள் கூறும் செய்திகளால் அறிகின்றோம்

57. Ep. Rep. 69/14. 58. Ep. Rep. 80/25.

குடிமக்களின் வரிப்பணத்தைக் கொண்டும் பகைவரிடம் கைப்பற்றிய பொருள்கள், கவர்ந்த திறைகள் ஆகியவற்றைக் கொண்டும் மன்னர் கோயில்கள் எழுப்பினார்கள்: மடங்கள் அமைத்தார்கள்; அக்கிரகாரங்களையும் நூற்றுக்கணக்கான சதுர்வேதி மங்கலங்களையும் நிறுவினார்கள். கோயில்களிலும், மடங்களிலும் வேதம் முழங்கிற்று. 'குழல் ஒலி, யாழ் ஒலி, கூத்தொலி, ஏத்தொலி, விழவொலி விண்ணளவுஞ் சென்று விம்மின.' சிதம்பரம் போன்ற நகரங்களில் 'தெங்கு திருவீதிகள்' அமைக்கப்பட்டன. தேவரடியார்களுக்குத் தனித்தனி இல்லங்களும், தெருக்களும் ஒதுக்கப்பட்டன. ஆனால், கிராமங்களையும் ஊர்களையும் அடுத்திருந்த புலைப்பாடியில், 'பழங்கூரையையுடைய புல் குரம்பைச் சிற்றில்கள்' நெருக்குண்டு காணப்பட்டன.[59] ஆங்குப் பிறந்து வளர்ந்த குழந்தைகள் 'கார் இரும்பின் சரி செறிகைக் கருஞ்சிறார்'களாகக் காட்சியளித்தனர். அப்பாடியில் வாழ்ந்திருந்த புலையர்கள் 'ஊரில் விடும் பறைத் துடவை உணவு உரிமையாகக் கொண்டு சார்பில் வரும் தொழில் செய்வார்.' குடிமக்கள் நெஞ்சில் குமுறல்களும், ஏமாற்றமும், ஏக்கமும் வளர்ந்து சாதிப் பூசல்களாகவும், கலகங்களாகவும் கவடுவிட்டுப் படர்ந்தன.

## பெண்கள்

சோழர் காலத்தில் பெண்கள் எவ்விதமான கட்டுப்பாடுமின்றிச் சுதந்தரமாக வாழ்ந்து வந்தனர். கற்பு ஒழுக்கம் பெண்களுக்கு அணிகலனாகக் கருதப்பட்டது. பெண்கள் சொத்துரிமை[60] பெற்றிருந்தனர். மன்னரும், செல்வரும் பல மனைவியரை மணந்தனர். ஆனால், பல மனைவியரைக் கொள்ளும் பழக்கம் குடிமக்களிடம் காணப்படவில்லை. சோழர் காலத்திலும் பெண்கள் உடன்கட்டையேற வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஆனால், அரசியர் சிலர் தம் கணவனுடன் உடன்கட்டையேறினர் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. ஒரு பெண், கணவனையிழந்தவள், தானாகவே உடன்கட்டையேறுவதாகவும், தன் கணவனுக்குப்பின் உயிருடன் இருந்தால் தன் சக்களத்தியருக்குத் தான் அடிமை செய்ய வேண்டி வரும் என்றும், தான் தன் கணவனுடன் உடன்கட்டை யேறுவதை யாரும் தடுக்கக் கூடாது என்றும், சுற்றியிருப்பவர்கள் தன்னைக் கயிற்றால் பிணித்து நெருப்பில் எறிந்துவிட வேண்டுமென்றும் உடன்கட்டை

59. பெரிய. பு. திருநாளை. நாயனார், 6.
60. Ep. Rep. 418/18, 419/18; Ep. Rep. 401/15
Ep. Rep. 39/25 S. I. I. R. No. 210: S. I. I. XI No. 20.

ஏறிய பெண் ஒருத்தி கேட்டுக்கொண்டதாக ஒரு கல்வெட்டுக்[61] கூறுகின்றது.

உயர்ந்த வெண்சுதை தீட்டிய மாடிகளின் மேலிருந்து பெண்கள் தம் கணவனுக்கு வெற்றிலை மடித்துக் கொடுப்பார்கள். பெண்கள் மாடிகளின்மேல் நின்று தெருவில் சென்ற விழாக்கோலங்களைக் காண்பார்கள். மக்கள் வெண்மையான விரிப்பினால் போர்த்தப்பட்ட பஞ்சு மெத்தையின்மேல் துயில் கொள்ளுவார்கள்.

அரசர்களுடைய அலுவல்களில் பட்டத்தரசியரும் பங்கு கொண்டனர். அரசியர் தனிப்பட்ட முறையில் கோயில்கள் எழுப்புவதும், கோயில்களில் திருப்பணி செய்வதும் ஆகிய பொது நலன்களில் ஈடுபட்டிருந்தனர். கண்டராதித்தன் மனைவியும் உத்தம சோழனின் அன்னையுமான செம்பியன் மாதேவியார், (இவருக்கு மாதேவடிகள் என்னும் சிறப்புப் பெயரும் உண்டு) கோனேரிராசபுரம் என வழங்கும் திருநல்லத்தில் உள்ள திருக்கோயிலைத் தம் கணவர் பெயரால் கண்டராதித்தம் என்ற கற்றளியாகப் புதுப்பித்துக் கண்டராதித்தராகிய தம் கணவர் சிவபெருமானைத் 'திருவடி தொழுகின்ற'தாக ஒரு படிமம்செய்து அக் கோயிலில் வைத்தார்.[62] இவர் பல கோயில்கள் எழுப்பினார்; பல கோயில்களைப் புதுப்பித்தார்; பல கோயில்களுக்குத் திருமேனிகள், அணிகலன்கள், கலங்கள் ஆகியவற்றைக் கொடுத்தார்;[63] பல கோயில்களுக்கு விளக்குகள் வைத்தார்.[64] இவர் செய்த கோயில் திருப்பணிகளில் தனிச் சிறப்பு முறை ஒன்றைக் காண்கிறோம். ஒரு கோயிலைப் புதுப்பிக்கு முன்பு அக் கோயிலில் காணப்பட்ட கல்வெட்டுச் சாசனங்கள் அனைத்துக்கும் புதிய படி ஒன்று எடுத்து அமைப்பது அவர் வழக்கம். இருபத்தாறு சாசனங்களுக்கு இவர் படி எடுத்துள்ளார். அவர் படி எடுத்த கல்வெட்டுகளில் 'ஸ்வஸ்தி ஸ்ரீ; இதுவும் ஒரு பழங் கற்படி' என்னும் சொற்கள் சேர்க்கப்பட்டிருத்தல் அதற்குச் சான்று. தென்னார்க்காட்டு மாவட்டம் உடையார்குடிக் கோயில் மகாதேவரைத் திங்கள்தோறும் சங்கராந்தி தினத்தன்று ஆயிரம் குடம் நீராட்டுவிக்க அரிஞ்சய பராந்தகதேவர் ஆச்சியார் உடைய பிராட்டியார் வீமன் குந்தவையார் நிலம் கொண்டு விட்டார்.[65] சிறிய வேளார்தேவி இராசாதிச்சி என்பவளும் அவளுடைய மகள் குஞ்சரமல்லியும் ஒரு கோயிலில் இரண்டு விளக்கு எரிக்க இருபத்

61. Ep. Rep. 156/1906.
62. S. I. I. III. No. 146.
63. Ep. Rep. 252/1937.
64. Ep. Rep. 540/20.
65. Ep. Rep: 572/20.

தைந்து ஈழக் காசுகள் அளித்தார்கள்.[66] பார்ப்பனப் பெண்கள் கோயில்களுக்குத் தானங்கள் வழங்கியுள்ளனர்.[67] முதலாம் இராசராச சோழனின் உடன்பிறந்தாளான குந்தவை பிராட்டியார் சிவன் கோயிலும், திருமால் கோயிலும், சமணக் கோயில் ஒன்றையும் எழுப்பினாள். தேவரடியார்களும், அரண்மனை அடிசில் தொழில் புரிந்த பெண்டிரும் அறக்கட்டளைகள் நிறுவி வந்துள்ளனர்.

### சிறுசேமிப்பு

முதலாம் இராசராசன் காலத்தில் பெண்களும் குழந்தைகளும் சிறுபாடு (சிறுசேமிப்பு) செய்யும் பழக்கம் மேற்கொண்டிருந்தனர் என்று ஒரு கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது.[68]

### தேவரடியார்

இசையிலும் கூத்திலும் வல்லுநரான பெண்கள் பலர் கோயில் பணிகளில் ஈடுபட்டிருந்தனர். கல்வெட்டுகளில் இவர் தேவரடியார்கள் என்று அழைக்கப்பட்டுள்ளனர். தேவரடியார்களுக்குத் தலைக்கோலிகள், தளிச்சேரிப் பெண்டுகள், பதியிலார், கோயிற் பிணாக்கள் என்றும் பெயர்கள் வழங்கின. கோயிலில் திருவலகிடுவதும், திருமெழுக்கிடுவதும், மலர் தொடுத்தலும் தேவரடியார்கள் மேற்கொண்டிருந்த திருத்தொண்டுகளிற் சில. தேவாரம், திருவாசகம் ஓதுவதும், நடனம் ஆடுவதும், அவர்கள் சிறப்பாக ஈடுபட்டிருந்த கலைத்தொண்டுகளாம். அவர்கள் கல்வியிலும், கலையிலும் சிறந்த பயிற்சியளிக்கப்பட்டிருந்தனர். ஏறக்குறைய எல்லாக் கோயில்களிலுமே தேவரடியார்கள் தொண்டு செய்து வந்தனர் எனத் தெரிகின்றது. அவர்கள் பிழைப்புக்கு மானியங்கள் வழங்கப்பட்டன. தேவரடியார்களுள் சிலர் திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்திவந்தனர் என்று சில கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன.

தஞ்சைப் பெருவுடையார் கோயில் திருத்தொண்டுக்காக இராசரர்சன் நானூறு தேவரடியார்களை அமர்த்தினான் என்றும், அவர்கள் அனைவருக்கும் தனித்தனி வீதிகள் வகுத்து, அவற்றில் வரிசை வரிசையாக வீடுகள் அமைத்துக் கொடுத்தான் என்றும் தஞ்சாவூர்க் கோயில் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.[69]

தேவரடியார்களைப்போலவே நட்டுவனார்களும் தானங்கள் வழங்கப் பெற்றனர்.[70] கோயிலில் பாட்டுப் பாடுவதற்குப்

66. S. I. I. III. No. 122.
67. Ep.Rep. 10/44-45.
70. Ep. Rep 361/29.
68. S. I. I. III. No. 222.
69. S. I. I. II. No. 66.

பாணர்கள் அமர்த்தப்பட்டனர்.[71] தேவரடியார்கள் பாடிய பாடல்களில் அகமார்க்கம் என்பது ஒரு வகையாகும்.[72] அதைப் பாடுவதற்கு மிகச்சிறந்த பயிற்சியும் இசைப் புலமையும் தேவை. சத்துவம், இராசதம், தாமதம் என்ற முக்குணம் பற்றிவரும் மெய்க்கூத்து வகைகளில் அகமார்க்கம் ஒன்றாகும் என்று அடியார்க்கு நல்லார் கூறுவர்.[73] சில கோயில்களில் திருவிழாக் காலங்களில் தேவரடியார்கள் நாடகங்கள் நடிப்பதுமுண்டு.[74] திருவொற்றியூரில் திருவாதிரை விழாவின்போது திருவெம்பாவை ஓதப்பட்டு வந்தது. இருபத்திரண்டு தளியிலார் நடனம் ஆடினர். ஒருவன் நட்டுவாங்கம் செய்தான்; பதினாறு தேவரடியார்கள் தேவாரப் பதிகங்களை அகமார்க்க முறையில் பாடினார்கள்.[75]

தளிச்சேரிப் பெண்டுகளுள் பதியிலார் என்றும் தேவரடியார் என்றும் பிரிவுகள் உண்டு. திருவதிகையில் நூற்றுக்கால் மண்டபத்தில் 'சுவாமி ஏறியருளினால் முதலில் திருத்திரை எடுத்தால் பதியிலார் ஆடவும், பிற்பாடு திரை எடுத்தால் தேவரடியார் ஆடவும்' ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.[76] இன்ன பதிகங்களை இன்னவர்கள் இன்ன முறையில் பாடவேண்டுமென்று வற்புறுத்தத் தேவரடியார்களுக்கு உரிமை இருந்தது. அவ் வுரிமையைத் தேவரடியார்கள் விற்று வந்தனர் என்றும் அறிகின்றோம்.[77]

சங்க காலத்தில் விறலியரும், பாணரும் வளர்த்துவந்த இசையையும், கூத்தையும் தேவரடியார்கள் தொடர்ந்து வளர்த்து வந்து அவற்றுக்குப் புதுப்பொலிவூட்டினர். மக்கள் நெஞ்சையள்ளும் இசையிலும், கூத்திலும் வல்லுநராக விளங்கிய தேவரடியார்கள் மக்கள் சமூகத்தில் பெருமதிப்புப் பெற்றிருந்தனர். கோயில் நிருவாகிகளும் அவர்களைப் போற்றிப் பாராட்டி வந்தனர். இக் கலையரசிகளுள் பலர் திரண்ட செல்வத்தையும் மேலாம் செல்வாக்கையும் பெற்றிருந்தனர். கோயில்களுக்கும் கலைவளர்ச்சிக்கும் தேவரடியார்களும் நன்கொடைகள் வழங்கியுள்ளார்கள். கலை வளர்ச்சியிலும், இறைவழிபாட்டிலும் அவர்கள் கொண்டிருந்த பற்றுக்கும், ஈடுபாட்டுக்கும் அவர்களுடைய வள்ளன்மை சான்று பகர்கின்றது.

தேவரடியார்கள் பலவகையான கூத்துகள் நிகழ்த்திவந்தனர். அந் நாள்களில் நடைபெற்றுவந்த கூத்து வகைகளில்

71. S.I.I. V. No. 705.
72. Ep. Rep. 211/12.
73. சிலப். 3: 12 (உரை)
74. Ep. Rep. 57/16; Ep. Rep. 446/29-30.
75. Ep. Rep. 128/12; Ep. Rep. 228/12.
76. S.I.I. VIII. No. 333.
77. Ep. Rep. 143/40, 41; Ep. Rep. 414/40-41.

சாந்திக் கூத்து,[78] ஆரியக் கூத்து,[79] சாக்கைக்கூத்து,[80] தமிழக் கூத்து,[81] தெருக்கூத்து[82] எனச் சில வகைகள் உண்டு. சில கூத்து களில் பெண்களுடன் ஆண்களும் கலந்துகொள்ளுவதுண்டு. கூத் தாடுபவர்களைக் கூத்தப் பெருமக்கள் என்று அழைத்தனர்.[83] கோயில்களில் மட்டுமல்லாமல் மடங்களிலும் கூத்துகள் நிகழ்ந்து வந்தன.[84] கூத்துகள் நடைபெறுவதற்குக் கோயில்களில் நாடக சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன.[85]

கோயில்களில் மார்கழிதோறும் திருவெம்பாவை ஓதப்பட்டு வந்தது.[86] அதற்கெனவே தேவரடியார்கள் அமர்த்தப்பட் டிருந்தனர்.[87] வைணவத் திருப்பாடல்களான திருப்பள்ளி யெழுச்சியும் திருவாய்மொழியும் பாராயணம் செய்யப்பட்டன.[88] தேவாரத் திருப்பதிகங்கள் ஓதுவதற்குப் பல நிவந்தங்கள் அளிக்கப்பட்டிருந்தன.[89] தேவாரம் பாடிய ஓதுவார்கள் 'திருப்பாட்டு ஓதும் மகேசுரர்' என்று அழைக்கப்பட்டனர்.[90] இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் பதினாறு குருடர்கள் திருவாமாத்தூர்க் கோயிலில் தேவாரம் பாடி வந்தனர் என்றும், அவர்களுக்குக் 'கண் காட்டுவார்' வேறு அமர்த்தப்பட்டிருந்தனர் என்றும் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.[91] இது வியப்பூட்டும் ஒரு செய்தியாகும். ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளில் பதினாறு குருடர்கள் தனித்தனிப் பதிகங்கள் பாடப்பயின்று ஒரேகோயிலில் ஒன்றுசேர்ந்து பாடினார்கள் என்பது எளிதில் நேரமுடியாத ஒரு நிகழ்ச்சியாகும். ஆகவே, திருவாமாத்தூர்க் கோயிலிலோ, வேறு ஊரிலோ குருடர்களுக்கெனவே தேவார இசைப்பள்ளி நடை பெற்று வந்திருக்கவேண்டும். திருவாமாத்தூரில் பாடிய குருடர் கள் அப்படிப் பயின்றவர்களாதல் வேண்டும். அக் காரணத்தாற் றான் அவர்கள் அனைவருக்கும் 'கண் காட்டுவான்' ஒருவன் அமர்த்தப்பட்டிருந்தான். மற்றொரு வியக்கத்தக்க செய்தியை யும் ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது.[92] ஓதுவார்களுடன் பிராமண ரும் இணைந்து தேவாரம் ஓதியதே அச் செய்தியாகும்.

குலோத்துங்கனின் சீரையும் சிறப்பினையும் 'பாரசீக' இளம் பெண்கள் தாமாகவே விரும்பிப் பாடி வந்தனர் எனச் சிதம்பரம்

78. Ep. Rep. 254/14.
79. Ep. Rep. 120/25.
80. Ep. Rep. 8/28-29; Ep. Rep. 160/40-41.
81. Ep. Rep. 90/31-32.
82. Ep. Rep. 42/21.
83. Ep. Rep. 55/30-32.
84. Ep. Rep. 94/31-35.
85. Ep. Rep. 252/24; S.I.I. III. No. 124.
86. Ep.Rep.421/12; Ep.Rep.285/27.
87. Ep. Rep. 149/36-37.
88. Ep. Rep. S.I.I. V. 508.
89. Ep. Rep. 104/28-29.
90. S.I.I. VII. 109.
91. S.I.I. VIII. No. 749.
92. Ep. Rep. 99/28-29.

கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.[93] உடுக்கை யடித்தும் தாளம் தட்டியும் தேவாரப் பதிகங்கள் பாடுவதுமுண்டு.[94] தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் திருப்பதிக விண்ணப்பம் செய்ய நாற்பத்தெட்டுப் பிடாரர் (ஓதுவார்) களையும், அவர்களுடைய பாட்டுக்கு நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனையும் முதலாம் இராசராசன் அமர்த்திக் கொடுத்தான்.[95]

கோயில்களிலும் மடங்களிலும் வேதங்களும் உருத்திரமும் ஓதப்பட்டன. அவற்றை வீணையுடன் அத்தியயனம் செய்து வந்தார்கள்.[96] இவ் வழக்கம் இப்போது அற்றுவிட்டது. பிரபாகரம் விரிவுரையாற்றுவதற்காகக் கும்பகோணத்தில் பிராமணருக்குப் பட்டவிருத்தி நிலங்கள் அளிக்கப்பட்டன.[97] வியாகரணம் விளக்கம் செய்துவர அருண்மொழி விக்கிரம சோழன் என்ற இராசாதிராச மகாபலி வாணராயர் என்ற பெயருடைய சேனாபதி (படைத்தலைவன்) ஒருவன் ஒரு பட்டருக்கு நிவந்தம் அளித்துள்ளான்.[98] நாரணன் பட்டாதித்தன் என்ற சவர்ணன் ஒருவன் 'ஸ்ரீ ராசராச விசயம்' என்னும் நூலைப் படித்து வருவதற்காக முதலாம் இராசேந்திரன் காலத்தில் நிலம் ஒன்றைத் தானமாகப் பெற்றான்.[99] இந் நூலினின்றும் வேறான இராசராசேசுவர நாடகம் என்ற நாடகம் ஒன்று நடிக்கப்பட்டுவந்தது.[100] திருவாதிரைத் திருநாள் இரவு ஜைமினிகள் சாமவேத பாராயணப் போட்டி நடத்தி வரவும், போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கவும் தஞ்சை மாவட்டம் கோயில் தேவராயன்பேட்டையில் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ஒருமுறை பரிசு பெற்றவர்கள் மறுமுறை இப் போட்டியில் கலந்து கொள்ளும் உரிமை மறுக்கப்பட்டனர்.

## அடிமைத் தொழில்

சோழர் காலத்தில் குடிமக்கள் பிறருக்கு அடிமைகளாயினர் என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. ஆனால், அவர்கள் அடிமை பூண்டது கோயில்களுக்குத்தாமே யன்றித் தனிப்பட்டவர்களுக்கு அடிமைப்பட்டதாகவோ, அடிமைகளாக வாழ்ந்ததாகவோ சான்றுகள் இல்லை. ஐரோப்பிய, அமெரிக்க நாட்டு அடிமைகளுடன் இவர்களை ஒப்பிடலாகாது. இவர்கள் தம் குடியுரிமையை இழக்கவில்லை; மிகவும் இழிவாகவோ, கொடுமை

93. S.I.I. I. No. 158.
94. Ep. Rep. 129/14.
95. S.I.I. II.p. 111-No. 65
96. Ep. Rep. of 103/1907. p.13.
97. Ep. Rep. 283/1911; S.I.I. III. No. 200.
98. Ep. Rep. 20/40-41,
99. Ep. Rep. 120/30-31.
100. S.I.I. II.No. 306.

யாகவோ நடத்தப் பெறவுமில்லை. சில சமயம் குடிமக்கள் தம்மைத் தாமே கோயில்களுக்கு அடிமைகளாக விற்றுக்கொண்டுள்ளனர்.[101] அரசாங்கம் ஒருவனுடைய நிலங்களைப் பறிமுதல் செய்யும்போது அவனுடைய பணியாள்களையும் பறிமுதல்செய்த தாக ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது.[102] கோயில் பணி செய்வதற்காகச் சில பெண்கள் அவர்களுடைய குடும்பத்துடன் விற்கப்பட்டுள்ளனர்.[103] தலைமுறை தலைமுறையாகப் பணி செய்து வரவும் பெண்கள் விற்கப்பட்டுள்ளனர்.[104] சேக்கிழாரும் '...யானும் என்பால் வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கு ஓலை இருமையால் எழுதி நேர்ந்தேன்...' என்று சுந்தரரை அடிமைகொண்ட திருவெண்ணெய்நல்லூர் அந்தணருக்கு அவருடைய பாட்டனார் ஓலை எழுதிக் கொடுத்ததாகப் பெரியபுராணத்தில் கூறுகின்றார்.[105] பின்னிட்ட சந்ததியாரையும் சேர்த்து ஆளடிமை யோலை எழுதித்தந்த வழக்கம் அக்காலத்தில் நிலவியது போலும். அரையன் பெருங்காதி என்ற ஒரு பெண் தன் கணவனைத் தன் முதுகணாகக்கொண்டு தன்னையும், தன்னோடு எழுவரையும் முப்பது காசுக்கு விற்றுக்கொண்டாள். நம்ப நம்பி காடுகள் நங்கை என்ற மற்றொருத்தி வேளாள குலத்தினள்; தான், தன்மகள், பேரன், பேத்திகள் ஆகிய பதினைவ்ரை முப்பது காசுக்கு விற்றுக்கொண்டாள்.[106] மேலைப்பெரும்பள்ளம் என்னும் ஊரில் ஒருவன் தலைச்செங்காட்டு வலம்புரிஉடையார் கோயிலுக்கு எண்மரை விற்றுவிட்டான்.[107] மற்றவர் பதின்மூன்று காசுக்கு விற்கப்பட்டுள்ளனர்.[108] வயலூர்க் கோயிலுக்குத் திருப்பதியம் பாடவும் தொண்டுசெய்யவும் கவரிப்பிணாக்களாக மூன்று பெண்கள் தானமாக அளிக்கப்பட்டனர்.[109] இரண்டாம் இராசராசன் காலத்தில் திருவாலங்காடுடைய நாயனார் கோயிலுக்கு எழுநூறு காசுக்கு நான்கு பெண்கள் தேவரடியார்களாக விற்கப்பட்டுள்ளனர்.[110] தேவரடியார்கள் பாதங்களில் சூலக்குறியிடுவது வழக்கம். ஆனால், அதற்குச் சூட்டுக்கோலைப் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை.

## கட்டடங்களும் சிற்பங்களும்

சோழர் காலத்தில் நகரங்கள் மிகவும் பெரியவை; திட்டமிட்டு அமைக்கப்பெற்றவை. நகரங்களில் குடிமக்கள் வாழும்

101. Ep. Rep. 86/1911.
102. Ep. Rep. 301/23 & Ep. Rep. 303/23
103. Ep. Rep. 296/1911; Ep. Rep. 80/13.
104. Ep. Rep. 276/25.
105. பெரிய. பு. தடுத். 59.
106. Ep. Rep. 218, 219/125.
107. Ep. Rep. 216/25.
108. Ep. Rep. 217/25.
109. Ep. Rep. 90/26.
110. Ep. Rep. 80/13.

இடங்கள் வேறாகவும் அங்காடித் தெருக்கள் வேறாகவும் நிறுவப் பட்டிருந்தன. இன்ன இடத்தில் இன்ன வகையான வீடுகள்தாம் கட்டலாம் என்றும், இன்ன இடத்தில் இன்னவர்கள் இத்தனை மாடிகளுடன்றாம் வீடுகள் கட்டவேண்டுமென்றும், கட்டடங்கள் கட்டுவதற்குச் சுட்ட செங்கல்லைத்தாம் பயன்படுத்த வேண்டு மென்றும் ஒழுங்குமுறை விதிகள் பிறப்பிக்கப்பட்டிருந்தன.

தஞ்சை மாநகரானது உள்ளாலை என்றும், புறப்பாடி என்றும் இரு பிரிவுகளாக அமைந்திருந்தது. உள்ளாலையில் மன்னரின் அரண்மனைகளும் ஏனைய சில குடியிருப்புகளும் இருந்தன. சாலியத் தெருவும் உள்ளாலையிற்றான் இருந்தது. புறப்பாடியில் திரிபுவனமாதேவி பேரங்காடி, கோங்குவாளார் அங்காடி, இராசராச பிரம்மா மகாராசன் பேரங்காடி என்ற பெயருடைய கடைத்தெருக்கள் இருந்தன. அரண்மனைப் பணி யாளருக்கெனச் சில பகுதிகளும் புறப்பாடியில் ஒதுக்கப்பட் டிருந்தன. அபிமான பூஷண தெரிந்த வேளம் முதலிய ஐந்து வேளங்கள் அப் பணியாளன் குடியிருப்புகளாக விளங்கின. புறப் பாடியில் அமைந்திருந்த தெருக்களில் சிறப்புற்றிருந்தவை காந்தர்வத் தெரு (இசைவல்லார் குடியிருப்பு), வில்லிகள் தெரு (வில்வலார் குடியிருப்பு), ஆனைக்கடுவார் (யானைக்குத் தீனி சமைப்பார்) தெரு, ஆனையாள்கள் (யானைப்பாகர்) தெரு, பன்மையார் (பல தொழிலில் ஈடுபாடுடையாரின்) தெரு, மடைப் பள்ளித் (கோயில் சமையல் அறை) தெரு, வீரசோழப் பெருந் தெரு, இராச வித்தியாதரப் பெருந்தெரு, சூரசிகாமணிப் பெருந்தெரு என்பனவாம்.[111] கிழக்கு மேற்காக அமைந்த தெருக் கள் இரண்டில் நானூறு தளிச்சேரிப் பெண்டுகள் குடியமர்த்தப் பட்டிருந்தனர். அவர்கள் பெருவுடையார் கோயில் பணியில் அமர்த்தப்பட்டவர்கள். அவர்களுடைய பெயர்களும், அவர் களுடைய வீடுகளின் கதவு இலக்கமும் முதலாம் இராசராசன் கல்வெட்டு ஒன்றில் ஒன்றுவிடாமல் பொறிக்கப்பட்டன.[112]

சோழப் பேரரசுக்கு ஏற்பட்ட புகழையும் பெருமையையும், சோழமன்னனின் சிவத்தொண்டையும், அந்நாளைய சிற்பி களின் கைத்திறனையும் எடுத்துக்காட்டிப் பெருமிதத்துடன் வானோங்கி நிற்பது தஞ்சைப் பெருவுடையார் கோயில். இதற்கு இராசராசேசுவரம், பிருகதீச்சுரம் என்றும் பெயர்கள் உண்டு. முதலாம் இராசராசனின் இறையன்பு, கலைத்திறன், இதயத்தின் விரிவு, அறிவின் ஆழம் ஆகியவற்றை எடுத்துக்காட்டிக் கொண்டு

111. S.I.I. No. 59,94. 112. S.I.I. II. No. 66.

நிமிர்ந்து நிற்கின்றது இக் கோயில். இராசராசன் தன் இருபதாம் ஆட்சியாண்டின் 275 ஆம் நாள் (கி.பி. 1010) இக் கோயிலுக்குக் குடமுழுக்காட்டிக் கண்டுகளித்தான்.

பெருவுடையார் கோயில் 500 அடி நீளம் 200 அடி அகலம் கொண்ட பரப்பில் அமைந்துள்ளது. வெளிநுழைவாயிலைஅடுத்து 250அடி சதுரத்தில் முற்றம் ஒன்று உள்ளது. கோயிலின் கருவறையின் மேல் வடிவ அமைப்பிலும், அழகிலும், உயரத்திலும், வியப்பூட்டும் சிற்பக் கைத்திறனிலும் உலகப் புகழ்பெற்ற விமானம் உயர்ந்து நிற்கின்றது. கோயிலைச் சுற்றிப் பல கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. தன்னைச் சுற்றியுள்ள கட்டட அமைப்புகள் அனைத்தையும் குன்றச்செய்து தான்மட்டும் வானுற ஓங்கி நெடுந் தொலைவு காட்சியளிக்கும் இவ் விமானத்தின் பேரெழிலை இச் சிறு கோயில்கள் எள்ளளவும் மறைப்பதில்லை. இவ் விமானத்தின் உயரம் 190 அடி. கருவறையின் முன்பு முன் மண்டபம் ஒன்றும், அதற்கும் முன்பு நந்தி கோயிலும் அமைந்துள்ளன. விமானத்தைச் சுற்றி அம்மன் கோயில், சுப்பிரமணியர் கோயில், கருவூர்த் தேவர் கோயில் ஆகியவை அமைந்துள்ளன. இவை யாவும் பிந்திய காலங்களில் எழுப்பப்பட்டவை. ஆனால், பெருவுடையார் கோயில் ஒரே சமயத்தில் எழுப்பப்பட்டதாகும். இக் கோயில் அமைப்பின் ஒழுங்கு, மாண்பு, எளிமை, சிற்பச் சிறப்பு ஆகியவற்றைச் சொற்களால் விளக்குவது இயலாது. கோயில் புறமதிலை யொட்டி மொத்தம் முப்பத்தைந்து கோயில்கள் கட்டப்பட்டுள்ளன.

விமானம் மாடக்கோயில் வகையைச் சார்ந்தது. அது 'உத்தமக் கட்டட முறையில்' அமைந்துள்ளது. அதன் அடி (அதிட்டானம்) சதுர வடிவமானது; அதன் பக்கம் ஒவ்வொன்றும் 99 அடி நீளம் உள்ளது. அதன்மேல் 63 அடி சதுரமுள்ள உபபீடம் இருக்கின்றது. கருவறையின் உயரம் 50 அடி. அதன்மேல் விமானம் நிற்கின்றது. கருவறைக்குள் நிறுத்தப்பட்ட சிவலிங்கத் திருமேனி மிகவும் பெரியது; காண்போர் கண்களையும் நெஞ்சையும் விரியச் செய்வது, நந்தி கோயிலில் அமைக்கப்பட்டுள்ள நந்தியும் மிகவும் பெரியது. ஒற்றைக் கல்லால் அமைந்தது. இந்தியாவில் காணக்கூடிய மிகப் பெரிய நந்தி உருவங்களில் இஃது இரண்டாவதாகும்.

முதலாம் இராசராசனைப் போலவே அவன் மகன் முதலாம் இராசேந்திரனும் கங்கைகொண்ட சோழபுரத்தில் பெருவுடையார் கோயில் ஒன்றைக் கட்டினான். அமைப்பிலும், சிற்பப்

புனைநலத்திலும் அது தஞ்சைப் பெருவுடையார் கோயிலைப் போலவே அமைந்துள்ளது. ஆனால், அதன் விமானத்தின் உயரம் 160 அடிதான். இராசராசேசுவரத்தின் தோற்றத்தில் ஆண்மையையும், பெருமிதத்தையும், வலிமையையும் காண் கிறோம். கங்கைகொண்ட சோழீச்சுரத்தில் எழில், மென்மை, நெளிவு, பொங்கும் பூரிப்பு ஆகிய பெண்மை நலன்களைக் காண்கிறோம். தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் சிவ பெருமானின் உடல்கட்டும், திண்மையும் காட்சியளிக்கின்றன. கங்கைகொண்ட சோழீச்சுரத்தில் சிவசக்தியின் அன்பும், அருளும், மென்மையும், நெகிழ்ச்சியும் துளும்பி வழிகின்றன.

இவ் விரு கோயில் அமைப்புகளிலும் சோழரின் தனிப்பட்ட சிற்ப முறையானது உன்னத நிலையில் காணப்படுகின்றது. தாராசுரத்தில் எழுப்பப்பட்டுள்ள ஐராவதேசுவரர் கோயிலும், திரிபுவனத்தில் எழுப்பப்பட்டுள்ள திரிபுவனேசுவரர் கோயிலும் சோழர் காலச் சிற்ப முறையின் சிறந்த படைப்புகளாகும்.

பாண்டியரின் கட்டட முறைகளையும், சிற்பச் சிறப்பு களையும் மதுரை, திருவானைக்கா, திருவண்ணாமலை, கும்பகோணம் ஆகிய ஊர்களில் காணலாம்.

கோயில்களில் கல்லாலும், வெண்கலத்தாலும் ஆக்கப்பட்ட சிலைகள் வைக்கப்பட்டன; வெண்கலச் சிலைகள் யாவற் றிலும் அழகிலும், அமைப்பிலும், தத்துவ விளக்கத்திலும் மிகச் சிறந்து விளங்குவது நடராசரின் வடிவமாகும். நடராசர் உருவங்கள் பலவகையான தோற்றங்களில் வார்க்கப்பட்டன. கும்பகோணத்திலுள்ள நாகேசுவரர் கோயிலிலுள்ள நடராசரின் சிலை மிகவும் பெரியது; இணையற்ற எழில் வாய்ந்தது. தில்லைச் சிற்றம்பலத்திலுள்ள நடராசரின் திருவுருவம் கண்கவரும் வனப்பு உடையது; நெஞ்சை யள்ளுவது. கடவுளர் படிமங்கள் கல்லிலும், செம்பிலும் மனிதத் தோற்றத்தில் வடிக்கப்பட்டுள்ளன. எனினும், உடல் அமைப்பிலும், முகப் பொலிவிலும் தெய்விகச் சாயல் விளங்கு மாறு அவை இயற்றப்பட்டிருப்பதைக் காணும்போது சோழர் காலத்திய சிற்பிகளின் கலைப் பண்புகளையும் கைவன்மை யையும் போற்றிப் பாராட்ட வேண்டியவர்களாக உள்ளோம்.

சேரன்மாதேவி, திருக்கடையூர் ஆகிய ஊர்க் கோயில்களில் அமைக்கப்பட்டுள்ள வைணவ மூர்த்தங்களின் சிலைகள் அழகி லும், தோற்றத்திலும், முகப்பொலிவிலும், அங்க நெளிவிலும்,

எடுப்பிலும் ஈடிணையற்று விளங்குகின்றன. வைணவக் கோயில் களில் திருமாலின் வடிவங்கள் மூவகைக் கோலத்தில் காட்சி யளிக்கின்றன. அவ் வடிவங்கள் நின்ற திருமேனி, அமர்ந்த திருமேனி, கிடந்த திருமேனி என்று அழைக்கப்படுகின்றன. திருவல்லிக்கேணி, திருப்பதி, காஞ்சிபுரம் ஆகிய ஊர்களில் நின்ற திருமேனியுடனும், சோளிங்கபுரத்தில் அமர்ந்த திருமேனி யுடனும் திருமால் கோலங் கொண்டெழுந்தருளியுள்ளார்.

சைவ நாயன்மார்கள், வைணவ ஆழ்வார்கள் ஆகியவர் களின் படிமங்கள் கல்லிலும் வெண்கலத்திலும் வடிக்கப் பெற்றுப் பல கோயில்களில் அமைந்துள்ளன. அவற்றின் தோற்றத்தில் அமைதியும், அடக்கமும், ஆரா அன்பும், அருளும், பேரின்பச் செம்மாப்பும் பொலிவதைக் காணலாம். அவை சோழர் காலத்துச் சிற்பிகளின் கைத்திறனையும், நுண்ணறிவையும் ஆகமப் பயிற்சியையும் எடுத்துக்காட்டுகின்றன.

### ஓவியக்கலை

சோழர் காலத்தில் ஓவியக்கலையும் சிறப்புற்று விளங்கிற்று என்பதற்கு இலக்கியக் குறிப்புகளும் கோயிற் சுவரோவியங்களும் சான்று பகர்கின்றன. சோழர்கால ஓவியங்கள் அனைத்துமே மங்கிவிட்டன. சில கோயில்களில் அவற்றின்மேல் பிற்கால ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. தஞ்சைப் பெரிய கோயிலின் உண்ணாழியில் கருவறையின் பின்புறம் சுவர்களின்மேல் தீட்டப் பட்டிருந்த சோழர் ஓவியங்களின்மேல் மதுரை நாயக்கர்களின் ஓவியங்கள் புனையப்பட்டுள்ளன. சித்தன்னவாசலில் பல்லவர் கால ஓவியமும், திருமலைபுரம் குகையில் பாண்டியர் காலத்து ஓவியமும் காணப்படுகின்றன. அஜந்தாக் குகைகள், காஞ்சிக் கைலாசநாதர் கோயில், பனைமலைக் கோயில், சித்தன்ன வாசல் குகைக்கோயில்கள், திருமலைபுரம், மலையடிப்பட்டி, தஞ்சைப் பெருவுடையார் கோயில், இலங்கை, சிகிரியாமலைச் சுவர் ஓவியங்கள் ஆகியவை தென்னிந்திய ஓவிய மரபைச் சார்ந்தவை யாகும்.

திருநெல்வேலி மாவட்டம் திருமலைபுரம் குகைக்கோயிலில் தீட்டப்பட்டுள்ள சிற்பங்கள் மிகவும் மங்கிப் போய்விட்டன. மத்தளம் வாசிப்பவள் உருவம், ஆண்பெண் உருவம், இலைக் கொடி, பூக்கொடி, வாத்து ஆகியவற்றின் தோற்றங்கள் அழிந்து போயிருக்கின்றன. எனினும், அவற்றின் ஓவியப் பொலிவை இன்றுங் காணலாம்.

தஞ்சைப் பெருவுடையார் கோயில் ஓவியங்கள் நாயக்கர் காலத்து ஓவியங்களால் மறைக்கப்பட்டிருந்ததால் தம் பொலிவை இழக்காமல் காட்சியளிக்கின்றன. அவை சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய வாழ்க்கை வரலாற்றை விளக்குகின்றன. அவரை அடிமைகொள்ள வந்தவரான சிவபெருமான் வெண்ணரை முடித்து மூப்புமுதிர்ந்து தள்ளுநடைகொண்டு வேதியர் வேடத்தில் வந்து அடிமை முறியோலை யொன்றைக் காட்டி வலிந்து ஆட்கொண்டதும், அவ் வன்றொண்டர் சேரமான் பெருமாள் நாயனாருடன் கைலை மலைக்குச் சென்றதும், கைலாயத்தில் சிவபெருமான் பார்வதிதேவியுடன் கொலுவிருந்த காட்சியும், இசைப் பாடல்களுடனும் இசைக்கருவிகளுடனும் சிலர் நடனம் ஆடுவதும் ஆகிய காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. அவையன்றி இராசராச சோழன், கருவூர்த் தேவர் ஆகியவர்களின் திருவுருவ ஓவியங்களையும் ஆங்குக் காணலாம்.

தமிழகத்தில் ஓவியக்கலை மிகவும் பரவலாகப் பயிலப்பட்டு வந்ததற்கு இலக்கியச் சான்றுகள் பல உள. அடியார்க்கு நல்லார் காலத்திலும் ஓவிய நூல் ஒன்று வழங்கிவந்தது. ஓவியத்துக்குத் தமிழில் 'வட்டிகைச் செய்தி' என்றும் ஒரு பெயர் உண்டு. வண்ணம் தீட்டுவதற்கு முன்பு காணப்படும் ஓவிய அமைப்புக்குப் 'புனையா ஓவியம்' என்று பெயர்.[113] சீவகசிந்தாமணியின் ஆசிரியரான திருத்தக்கதேவரும் பெருங்கதையின் ஆசிரியரான கொங்குவேளிரும் தம் நூல்களில் ஓவியத்தைப்பற்றிப் பல செய்திகள் கூறுகின்றனர். இவ்விரு ஆசிரியர் காலங்களிலும் சுவர்களின்மேல் உயிர்க்களை சொட்டும் வண்ண ஓவியங்கள் தீட்டப் பெற்றிருந்தன என்று அறிந்துகொள்ளுகின்றோம்.

சோழர் காலத்துத் தமிழர் வாழ்க்கையானது பல துறைகளிலும் வளர்ச்சியும் மலர்ச்சியும் பெற்றுள்ளதைக் காண்கின்றோம். வடநாட்டு மக்களின் பண்பாடுகள், பழக்கவழக்கங்கள், இலக்கியங்கள், சமயக் கோட்பாடுகள் ஆகியவை மிகவும் விரிவான அளவில் தமிழகத்தில் இடம்பெற்றுவிட்டன. அழகு கலைகள், ஒப்பனைக் கலைகள், இசைக்கலை, கூத்துக்கலை ஆகியவை விரிவடைந்தன.

### மன்னர்களின் அரண்மனைகள்

மன்னர்கள் வாழ்ந்த அரண்மனைகள் ஒவ்வொன்றும் ஒரு நகரமாகவே காட்சியளித்தது. அதனுள் காவற்காரர்களுக்கும்,

113. மணி. 2:27, 4: 57; நெடுநல். 147.

பகைவர்கள் கொணர்ந்து செலுத்திய திறைகளைச் சேர்ப்புக் கட்டுவதற்கும், படைக்கலங்களை வைப்பதற்கும், பெண்மக்களின் அணிகலன்களின் பாதுகாப்புக்கும் தனித்தனி மாடங்கள் கட்டப்பட்டிருந்தன.[114] கூத்துப்பள்ளி (நாடகசாலை)களும், ஸ்ரீ கோயில்களும் அமைக்கப்பட்டிருந்தன.[115] அரண்மனைகட்குள்ளிருந்து பாம்புரிகள் (சுருங்கைகள்) மூலம் அகழிகளுக்குள் இறங்கலாம்.[116] அகழிகளில் முதலைகளையும் சுறாமீன்களையும் விட்டு வளர்த்து வந்தனர்.[117] மிலேச்சர்கள் வாயில்களைக் காத்துவந்தனர்.[118] அரண்மனையின் மாடங்கள் புலிமுக முகப்புகளால் அணி செய்யப்பட்டிருந்தன.[119] மன்னன் கொலுவமர்ந்த சித்திரகூடமானது அழகிய தட்டிகளால் மறைக்கப்பட்டிருந்தது.[120] சிறை பிடிக்கப்பட்ட பகைவர் நாட்டுப் பெண்கள் அரண்மனைப் பணி மக்களாக அமர்த்தப்பட்டனர்.[121] அரசியர் தங்கியிருந்த அந்தப்புரத்துக் காவல், பெண்களின் பொறுப்பிலேயே ஒப்படைக்கப்பட்டிருந்தது.[122] இதைக்கொண்டு பெண்கள் படைக்கலப் பயிற்சியும் அளிக்கப்பட்டிருந்தனர் என ஊகிக்கலாம். வண்ண ஓவியம் தீட்டிய திரைச்சீலைகளினால் சுவர்களை மறைத்து வைத்தனர்.[123] நிலைக்கண்ணாடிகட்குப் பட்டுறைகளை யிட்டு அவற்றை மூடி வைத்தனர்.[124]

எந்திரங்களால் இயக்கப்பட்ட போர்க் கருவிகளும், காப்புக் கருவிகளும் கோட்டையின் மதிற்சுவர்மேல் அமைப்பது அந் நாள்களில் வழக்கமாக இருந்தது. அவற்றுள் பல யவனக் கம்மியர்களால் சமைக்கப்பெற்றவை.[125]

அரண்மனைக்குள் பெண்கள் விளையாடுவதற்கெனத் தனிப் பொழில்கள் அமைந்திருந்தன.[126] அகழியிலிருந்து அரண்மனைக்குத் தண்ணீர் வருவதற்குச் சித்திரச் சுருங்கைகள் குடையப்பட்டிருந்தன.[127] மன்னர்கள் உல்லாசமாக அமர்ந்து இன்புறுவதற்கு அரண்மனைக்குள் மணிமண்டபங்கள் உண்டு.[128] அங்குப் பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட யானைகள், மான்

114. சீவக. 123.
115. சீவக. 154.
116. சீவக. 1250; பெருங். 3-3:17.
117. சீவக. 427, 142
118. சீவக. 431; பெருங். 2-9:34
119. சீவக. 1836.
120. சீவக. 2139.
121. சீவக. 154.
122. சீவக. 275.
123. சீவக. 655.
124. சீவக. 926.
125. சீவக. 101—103.
126. சீவக. 125.
127. சீவக. 142.
128. சீவக. 146.

கள் முதலியவற்றின் படிமங்கள் நிறுத்தப்பட்டிருந்தன; நவமணிகள் பதிக்கப்பட்ட தங்க ஊசல்கள் ஆடிக்கொண்டிருந்தன.[129]

## அணிகலன்கள்

பெண்கள் அணிந்திருந்த அணிகலன்களின் வகைகளுக்கும், அழகுக்கும், மதிப்புக்கும் அளவு காண முடியாது. இலக்கியக் குறிப்புகளைக் கொண்டும், சிற்பங்கள், ஓவியங்கள் ஆகியவற்றைக் கொண்டும், கல்வெட்டுச் செய்திகளைக் கொண்டும் பெண்கள் பூண்டிருந்த அணிகலன்களைப்பற்றி ஒருவாறு அறிந்து கொள்ளலாம். அணிகள் பெரும்பாலும் பொன்னால் ஆக்கப்பட்டவை; நவமணிகள் பதித்தவை. சோழ மன்னர்கள் கோயில்களில் உள்ள அம்மன் படிவங்களுக்கு வழங்கிய பொன் நகைகள் முத்தாலும், பவழத்தாலும், மணிகளாலும் இழைத்தவை. அரசிகள் சுட்டி, தெய்வ உத்தி, பொற்பூ ஆகிய தலையணிகளையும், நெற்றியில் சூட்டு, காதுகளில் மகரக்குழை, கழுத்தில் முத்து மாலை, பிறைவடம், நட்சத்திர மணிமாலை, வலம்புரிமுத்துகள் கோத்தவடம், நிரைத்தாலி, மாணிக்கத்தாலி, தாலிமணிவடம் ஆகியவற்றையும் பூண்பர். சுறாமீன் வடிவமுள்ள தோளணி, மகரமீன் வடிவமான குறங்கு (துடை) செறி, பவழமேகலை, பாதங்களில் தவளைக் கிண்கிணி, பாடகம், சிலம்பு, விரலாழிகள் ஆகியனவும் பெண்களை அணிசெய்தன. பெண்கள் பூண்ட அணி கலன்களின் வகைக்குக் கணக்குக் காண முடியாது. சோழ நாட்டில் பொன்னுக்கும் மணிக்கும் பஞ்சமே இல்லை. நாடெங்கும் அவை மலிந்து காணப்பட்டன. சோழர்கள் பகைவரை வென்று அவர்களிடமிருந்து கவர்ந்து வந்த பொன்னும் மணியும் மக்கள் கைகளில் குவிந்து கிடந்தன.

## ஆடைகள்

ஆண்கள் முழந்தாள் வரையில் ஆடையணிந்தனர்; தலையில் தலைப்பாகை யணிந்தனர். வேட்டியைக் கச்சமாகக் கட்டிக் கொண்டிருந்தனர். ஆண்கள் மேலாடை அணிந்திருந்ததாகத் தெரியவில்லை. பெண்கள் கொய்சகம் வைத்துப் புடைவைகள் அணிவர்.[130] பொதுவாகப் பெண்கள் மேலாடையுடுத்தித் தம் மார்பை மறைக்கும் வழக்கம் அந் நாள்களில் இல்லை. ஓவியங்களிலோ, சிற்பங்களிலோ பெண்கள் மேலாடையுடன் தோன்றவில்லை. ஆனால், அவர்கள் கச்சு மட்டும் அணிவதுண்டு; சிற்சில

129. சீவக. 147. பெருங். 1-33: 23, 34; 116.
130. சீவக. 2517.

சமயங்களில்மேலே உத்தரியம் போட்டுக் கொள்வதுமுண்டு.[131] அரசிகள் தம் உடல் வனப்பை அப்படியே எடுத்துக்காட்டுமள வுக்கு மிக மிக மெல்லிய ஆடைகளை யணிந்திருந்தனர் என்று தஞ்சைக் கோயில் ஓவியங்களினால் அறியலாம்.[132] பெண்களும் முழந்தாள் அளவே உடையணிவது வழக்கம்.

ஆடைகள் பலவகைப்பட்டிருந்தன. அவையாவன: பாலாவி போன்ற நுண்துணி, காடியூட்டிய பூந்துகில், முயல் இரத்தம் போன்ற செவ்வண்ணப் பட்டுகள், பொங்கும் நுரையைப் போன்ற கலிங்கம், எலிமயிர் ஆடைகள், கப்பலில் இறக்குமதி யான அன்னிய நாட்டுத் துணிகள், பசிய இலைத் தொழிலை யுடைய பட்டுகள், வெண்பட்டு.

படை வீரர்கள் முழந்தாள் அளவாக வட்டுடை அணிவர்.[134] வேடர்கள் செருப்பு அணிவர். எலிமயிரினால் போர்வைகள் நெய்யப்பட்டன.[135] ஆடைகட்கு நறுமணப் புகையூட்டுவார்கள்.

### உணவு வகைகள்

மக்களின் உணவு பலவகைப்பட்டதாக இருந்தது. உணவுப் பண்டங்களில் அரிசியே சிறப்பிடம் பெற்றிருந்தது. முல்லையரும்பு போலும், கொக்கு நகம்போலும், அறுத்த சங்கு போலும் சோறு வெண்மையாகவும், மெலிந்தும், நீண்டும் இருக்கும். பாற்சோறு, அக்கார அடிசில், புளிங்கறி என்று பலவகையான சோறுகள் சமைக்கப்பட்டன. காய்கறிவகைகளைப் பொரித்தும், துவட்டி யும், தாளித்தும் உண்பர். சோற்றுடன் கட்டித் தயிரும், ஆடைத் தயிரும் கலந்துகொள்வதுண்டு. அரிசி மட்டிலுமன்றிப் பயறு வகைகள், சோளம், தினை, அவரை, மலையரிசி, வரகு, கம்பு, எள், உளுந்து ஆகியனவும் உணவில் சேர்ந்தன. பொரி, அவல், மாங்கனி, வாழைக்கனி, பலாக்கனி ஆகியவை மக்கள் விரும்பி உண்டவை. அந் நாளைய மக்கள் கட்டுச்சோறு உண்ணும் வழக்கம் இருந்தது. பழச்சாற்றில் இஞ்சியை ஊறவைத்து உண்ப துண்டு. சமண முனிவர்கள் புல்லரிசி, அல்லிக்காயரிசி, மூங்கில் அரிசி, கேழல், தோரை என்ற அரிசி வகைகள், காய், கிழங்கு, பழம், வள்ளிக்கிழங்கு, மலை வாழைப்பழம் ஆகியவற்றை உண்டு வந்தார்கள். கிழங்கு, தேன், ஆண்பன்றி, முள்ளம்பன்றி இறைச்சி கள், நெய் ஆகியவை வேடர்கள் விரும்பி உண்ட பண்டங்கள். வெப்பத்தைப் பெருக்கும் கள் வகைகளை அக் காலத்து மக்கள்

131. சீவக. 2457.
132. பெருங். 2.4: 122, 2.6:124
133. சீவக. 468.
134. ஷை 1874.

குடித்துக் களித்தனர். இவை சாடிகளில் ஊற்றிப் பதமிடப் பட்டன. பெண்கள் வட்டிலில் கள்ளை முகந்து வழங்குவர்.

மணைமேல் அமர்ந்து கலங்களிலிருந்து உணவு எடுத்து உண்ணுவது அக் காலத்துப் பொதுவான வழக்கமாகக் காணப் பட்டது.

தண்ணீர்ப் பந்தல்களில் வழிப்போக்கருக்கு வழங்கிய தண் ணீரில் பூவும் சந்தனமும் கலந்திருக்கும். சமையல் அடுப்பில் நறுமணம் வீசும் விறகுகள் எரிக்கப்பட்டன. சமையற் கலையை விளக்கும் 'மடை நூல்' என்னும் பாகநூல் ஒன்று அக் காலத்தில் வழங்கி வந்தது.[135] நெடுஞ்சாலைகளில் 'அந்தணாளரோடு, அல்லோர் பிறர்க்கும் அமுதின் அன்ன அறுசுவை யடிசில், நெய்ச்சூட்டு அமைந்த சிற்றூண், ஆகிய உணவுகளை 'எப்பொழு தாயினும் அப்பொழுது ஈயும்' வெண்மணற் பந்தர்கள் ஆங்காங்கு அமைந்திருந்தன.[136]

## ஒப்பனைக் கலை

சோழர் காலத்தில் ஒப்பனைக் கலை மிக உயர்ந்த நிலையை எட்டியிருந்தது என்பதில் ஐயமில்லை. தம்மை ஒப்பனை செய்து கொள்ளுவதில் நெடுநேரம் செலவிட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது. பெண்கள் பலவகையான நறுமணப் பண் டங்கள் கலந்த நீரில் மங்கல நீராடுவார்கள்; கண்ணுக்கு மை தீட்டிக் கொள்ளுவார்கள்; மார்பில் குங்குமக் குழம்பைப் பூசிக் கொள்ளுவார்கள் ; விரல்களுக்கும் பாதங்களுக்கும் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிக்கொள்ளுவார்கள்; நறுமணப் புகையூட்டிய மலர் மாலைகள் அணிவார்கள்; கொண்டையில் மலர் வளையங்கள் சூடுவார்கள். பெண்கள் அணிந்த மாலைகளில் பலவகையுண்டு. கருப்பூர மாலை, தீம்பு மாலை, பூந்தாமம், மலர்போல் ஒப்பனை செய்த பொன்தகட்டு மாலை, மணிமாலை என்பன அவற்றுள் சில. மல்லிகை மாலைகளில் சில எழுத்து வடிவம் தோற்றும்படி யாகத் தொடுக்கப்பட்டிருக்கும்.[137] மணப்பெண்ணுக்கு உடல் முழுதும் செந்நிறம் ஊட்டுவார்கள். இக் கோலம் நச்சினார்க் கினியரின் காலத்திலேயே வழக்கொழிந்துவிட்டதாம்.[138] யானை யின் மருப்பினால் சீப்புகள் செய்யப்பட்டன. தலைவாருவதற்கு

135. சீவக. 131 (உரை)
136. பெருங். 2.2 : 76-82.
137. சீவக. 3450
138. ஷ. 2446; தொல். பொருள். செய். 80 (நச்சி)

முன்பு அதற்கு நறுமண மூட்டுவார்கள். நவமணி யிழைத்த பொற் சீப்புகளும் பயன்படுத்தப்பட்டன.[139]

கண்கவரும் ஒப்பனைகளைச் செய்துகொண்டு தம் அழகை எடுப்பாகக் காட்டிக்கொள்ளுவதைப் பெருமையாகக் கொண்டனர் சோழர் காலத்துப் பெண்மக்கள். அவர்கள் தோற்றத்தில் அதிக உயரமாகவோ, குட்டையாகவோ இல்லை; நடுத்தர உயரமுள்ளவர்களாக இருந்தனர். பெண்களின் ஒசிந்த கொடியனைய தோற்றமும், நுண்ணிடையும், அகன்று புடைத்து விளங்கிய மார்பகமும், சுழித்துத் திரண்ட கன்னங்களும், பிறையனைய நெற்றியும், முழு நிலாவைப் போன்ற முகமும், கடைந்தெடுத்த கைகளும் கால்களும், கண்ணில் கனிவொளியும், இதழ்களில் புன்னகையும், உடல்கட்டும் நெளிவும் அக்காலத்திய புலவர்கள், சிற்பிகள், ஓவியர்கள் ஆகியவர்களுடைய கண்ணையும் கருத்தையும் மிகவும் கவர்ந்திருக்க வேண்டும்.

### இசைக் கலை

இசையையும், கூத்தையும் விளக்கிய நூல்கள் பல வழங்கி வந்தன. வாய்ப்பாட்டுக்குக் குழலும், யாழும், வீணையும் பக்க மேளங்களாக நின்றன. பண் கேட்டலும், நாடகம் பார்த்தலும் மக்களின் பொழுதுபோக்குகளுள் சிலவாம். இசைக் கச்சேரி இன்ன முறையில் இயற்றப்பட வேண்டுமென்று இலக்கணம் வகுக்கப்பட்டிருந்தது. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களுள் கூறப்பட்ட யாழ்வகைகளும் பண்வகைகளும் தொடர்ந்து பயிற்சியில் இருந்துவந்தன. இடையர் ஏறு தழுவும் போது ஏறங்கோள் என்ற தனிப்பறை ஒன்று முழக்குவர். வீணையின் உறைக்கு எழினி என்று பெயர். மட்கிய மரம், வாளால் வெட்டுண்ட மரம், இடிவிழுந்த மரம் ஆகியவற்றால் வீணைகள் செய்வதில்லை. அவற்றுக்காகக் கூடிய மரத்துக்குத் தனி இலக்கணம் வகுக்கப்பட்டது.[140]

கூத்தாடி முதிர்ந்த பெண்களுக்கும், பின்பாட்டுப் பாடிய பெண்களுக்கும், நாட்டியத்துக்குப் பதம் பாடிய பெண்களுக்கும் தோரிய மடந்தையர் என்று பெயர். இசைப்புலவர்கள் பாடும் போது 'தே தா' என்று ஆளத்தி செய்வார்கள். சில யாழ்களில் நரம்புக்குள் மயிர் பொதியப்பட்டிருக்கும். வீணை வாசிக்கத் தொடங்கு முன்பு அதற்கு மலர்மாலை சூட்டுவார்கள். முழவுக்கு

139. சீவக. 2436. 140. சீவக. 718-720.

இருபுறமும் மண் பூசுவார்கள். நாட்டிய அரங்கினில் தாமாகவே திறந்து மூடிக்கொள்ளும் இயந்திர எழினிகள் (திரைகள்) கட்டப் பட்டிருந்தன.

## மற்றக் கலைகள்

மக்கள் பயின்று வந்த கலைகள் அறுபத்து நான்கு வகையாகத் தொகுக்கப்பட்டிருந்தன. இலக்கியக் கலையைப் பயின்றவர்களுள் கற்றார், கட்டுரைவல்லார், கவி என மூவகையினர் இருந் தனர்.[141] கல்வி பயிலுமிடத்துக்குக் கல்லூரி என்று பெயர்.[142] கைவல்லார்கள் (ஓவியர்கள்) ஓவியம் எழுதி அதற்குக் கண் திறப் பார்கள். மண்டபங்களின் சுவர்மேல் யானை மான்போன்ற விலங்குகளின் உருவங்களும் தாமரை, வேறு மலர்கள், குளம் ஆகியவற்றின் உருவங்களும் இயக்கிமார்களின் வடிவங்களும் வண்ணங்களால் எழுதப் பெற்றன. பாலைக்கொண்டு நீல மணியின் தன்மையை நோட்டங் காண்பதும், ஊசியை மையில் தோய்த்து ஓலையின்மேல் பிறர் கண்ணில் படாதவாறு எழுத்தை மறைத்து எழுதுவதும்,[143] யானைப் போரின் நுணுக்கங்களைக் கற்பதும்[144] சோழர் காலத்துப் பயிலப்பட்ட சில அபூர்வக் கலை களாம். அவையே யன்றித் தொலை தூரத்தில் இருப்பவர்களை இருந்த இடத்திலேயே காணக்கூடிய மதிமுகம் என்ற கலையைப் பயில்வதும்,[145] வானத்தில் பறப்பதற்கு உதவிய ஆகாசகாமினி என்ற மந்திரத்தை ஓதுவதும்[146] மக்கள் கற்ற கலைகள் என அறி கின்றோம்.

ஓலையின்மேல் எழுதிய பின்பு அதன்மேல் உருகிய அரக்கு வைத்துக் காதின் குண்டலத்தால் முத்திரையிடும் வழக்கம் அந்நாளில் காணப்பட்டது.[147]

பயிற்சி பெற்ற சோதிடப் புலவர்கள் குழந்தைகட்குச் சாதகம் கணித்துக் கொடுத்தனர். சாதகம் கணிப்பதற்குச் சிரோதயம், பூபதனம், தெரியுங்காலம் என்ற மூவியலையும் அடிப்படை நேர மாகக் கொள்ளுவதுண்டு.[148] யானைக்கு 'அப்புது, அப்புது ஆது, ஆது, ஐ ஐ' என்று ஆணைகள் இடுவார்கள்.[149]

## திருமணம்

மன்னர்கள் பல மனைவியரை மணந்தனர். கணிகள் திருமணத்துக்கேற்ற நல்ல நாளையும் வேளையையும் கணித்துக்

141. சீவக. 1054.
142. ஷை 995.
143. ஷை 1767.
144. ஷை 1677.
145. ஷை 1709.
146. சீவக. 1713
147. ஷை 1768
148. ஷை 1280, 1686 (நச்சி. உரை)
149. ஷை 1834

கூறுவார்கள். திருமணம் மாலை வேளையில் நடைபெறுவதில்லை. ஒரு பெண்ணின் கையைப் பற்றுவதற்கு முதல் உரிமை பெற்றவன் அவளுடைய தாய்மாமனாவான். இப் பழக்கம் இன்றும் சிலரிடையே நிலவுகின்றது. பெண்வீட்டார் மணமகனைத் தேடிச் செல்லுதல் பழந்தமிழரின் பண்பாட்டுக்கு முரணாகும். மணமகன் வீட்டார் பெண்ணை நாடி மணமகள் வீட்டுக்கு வரவேண்டும். மணமகன் பெண்ணுக்குப்'பரியம்' (ஸ்பரிசம் அல்லது தொடு விலை) போடவேண்டும். சங்க காலத்தில் இதனை 'முலைவிலை' என்பர். பெண்வீட்டார் மணமகனுக்கு 'வரதட்சிணை' வழங்குதல் தமிழரின் மரபு அன்று.

ஆனால், பெண்களுக்கு நிலங்களைச் சீதனமாகக் கொடுக்கும் வழக்கம் அந்நாளிலும் உண்டு.[150] தன் மனைவியின் சீதனச் சொத்தைச் செலவழிக்கும் உரிமை கணவனுக்கு இல்லை எனத் தெரிகின்றது. விக்கிரம சோழன் காலத்தில் மங்கைநல்லூரில் வாழ்ந்திருந்த அகளங்கராயன் என்பான் ஒருவன் தன் மனைவியின் சீதனச் சொத்தைச் செலவிட்டுவிட்டதற்காக, அவளுக்குச் சிறு நிலங்களை ஈடாகக் கொடுத்தான் என்று ஒரு கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது.[151] எந்தக் காரணத்தினாலோ பிற்காலத்தில் சில பிராமண குலங்களில் பெண்ணுக்குப் பரியம் கொடுக்கும் பழக்கம் நுழைந்துவிட்டதெனத் தெரிகின்றது. அதைக் கண்டித்து ஒரு கிராமத்துப் பிராமணருள் கன்னடியர், தமிழர், தெலுங்கர், இலாடர் ஆகியவர்கள் தமக்குள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர். அதன்படி கன்னியாதானமாகவே தம் பெண்களுக்குத் திருமணம் செய்விக்க வேண்டுமென்றும், மணமகளின் தந்தைக்குப் பரியப் பணம் கொடுக்கும் மாப்பிள்ளையும், பரியம் பெற்றுக்கொள்ளும் மணமகளின் தந்தையும் குலத்தினின்றும் தள்ளிவைக்கப்படுவர் என்றும் நிபந்தனைகள் ஏற்பட்டன.[152]

பெண்களுக்குப் பன்னிரண்டு ஆண்டுகளில் திருமணம் நடைபெற்றது.[153] திருமணப் பந்தலில் தீ வேட்பதுண்டு. அந்தணர்கள் திருமணச் சடங்குகளை நடத்திவைத்தனர். மணமகன் மணமகளின் இடக்கையைப் பற்றிக்கொண்டு தீயை வலம் வந்து மணைமேல் அமர்வான். மணமக்களுக்குக் காப்புக்கட்டுவதுண்டு. பெண்ணின் பெற்றோர் மணமகனுக்குத் தம் பெண்ணைத் தாரை வார்த்துக் கொடுப்பர். ஓமத்தில் நெற்பொரியிடுதல், அம்மி மிதித்தல், அருந்ததி காட்டுதல் ஆகிய சடங்குகள் நடைபெறும்.

150. Ep. Rep. 354/1909.
151. Ep. Rep. 39/25.
152. S.I.I. I. No. 56.
153. சீவக. 1453, 1978

மணமகளின் மலரடிகளை மணமகன் பாலால் கழுவவேண்டும்.[154] மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டும் பழக்கம் முதலாம் இராசராசன் காலத்திற்றான் தோன்றியிருக்கவேண்டும். கோயிலில் அம்மன் சிலைகளுக்கு நவமணிகள் பதித்த தாலிகள் வழங்கியதாகக் கல்வெட்டுச் சான்றுகள் கூறுகின்றன.[155]

மணமக்கள் ஏறிய கட்டிலைச் சுற்றிக் கொசுவலை கட்டப் படுவதுண்டு. அது எந்திரத்தால் இயக்கப்பட்டது; அதனால் அதற்கு 'எந்திர எழினி' என்று பெயர்.[156]

## நம்பிக்கைகள்

நல்ல நாள் பார்த்து ஒரு வினையைத் தொடங்குவதில் பழந் தமிழருக்குப் பெரிதும் நம்பிக்கை உண்டு. அவர்கள் நிமித்தமும் சகுனமும் பார்ப்பார்கள். விடியற்காலையில் கண்ட கனவுகள் பலிக்கும் என்றும், ஆடவருக்கு இடக்கண் துடித்தால் கேடு விளையும் என்றும், ஆனால் பெண்களின் இடக்கண் துடித்தால் நன்மை விளையும் என்றும், பகலில் கோட்டான் கூவினால் கேடு வருவது தவறாது என்றும் மக்கள் நம்பிவந்தனர். ஐப்பசி மாதத் தில் அசுவினி நாளில் பிறந்து வளர்ந்த குதிரைகள் மிகவும் உயர் தரமானவை என்று கொள்ளப்பட்டன. தும்மினால் நூறாயுசு என்று வாழ்த்துவர்.

வயது முதிர்ந்த நல்ல பாம்பு நீளத்தில் குறைந்து ஒரு கோழி யளவுக்குக் குன்றிச் சிறகு முளைத்துப் பறந்து செல்லும் என்று நம்பினர். அப் பாம்புக்குக் குக்குட சர்ப்பம் (கோழிப் பாம்பு) என்று பெயர்.

## பழக்கவழக்கங்கள்

சங்ககாலப் பழக்கங்கள் சில சோழர்காலத்திலும் தொடர்ந்து வந்துள்ளன. கார்த்திகை மாதம் கார்த்திகை நாள் அன்று குன்றின்மேல் விளக்கிட்டனர். வெள்ளம் பெருகி வருவதை முரசறைந்து மக்களுக்கு முன்னறிவிப்புக் கொடுத்து வந்தனர். மன்னரின் வரலாறுகள் நாடகமாக நடித்துக் காட்டப்பட்டன. உணவு கொண்டவுடன் நூறடி உலவி வரவேண்டுமென்று மருத்துவ நூல்கள் வற்புறுத்தின. குழந்தை பிறந்ததும் அதற்கு மண் பொட்டிடுவார்கள்; பிறகு அதைக் குளிப்பாட்டு வார்கள்; மருந்து வார்ப்பார்கள். குழந்தைகளுக்குச் சாதகங்கள்

154. சீவக. 2469
155. S. I. I. XI. 144.
156. சீவக. 838 (நச்சி. உரை)

கணித்து வைப்பதுண்டு. குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாள் அதற்குப் பெயர் சூட்டு விழா நடைபெறும். ஆண் குழந்தைகளுக்கு மழித்துக் குடுமிவைத்தலும் உபநயனமும் நடைபெறும். குழந்தையை ஐந்தாம் ஆண்டில் பள்ளிக்கு அனுப்புதல் ஒரு மங்கலச் சடங்காகக் கொண்டாடப்பட்டது. பயிற்சி தொடங்கிய நாளன்று ஆசிரியருக்குப் பொற்காசு காணிக்கை அளிப்பதுண்டு. வீட்டில் குழந்தைகளுக்குக் காவலாக விடிவிளக்கு எரிந்து கொண்டே இருக்கும். சங்ககாலத்தில் பிணங்கள் புதைக்கப்பட்டன. அவ் வழக்கத்துக்கு மாறாகச் சோழர் காலத்தில் பிணங்களைச் சுடுகாட்டில் எரிக்கும் வழக்கம் ஏற்பட்டுவிட்டது. பிணங்களுடன் சுடுகாட்டுக்குப் பெண்களும் செல்லுவர். இப்போது அவ் வழக்கம் மறைந்துவிட்டது. விதவைப் பெண்கள் தாம் அணிந்திருந்த வளையல்களை உடைத்து அணிகலன்களைக் களைந்து விடுவார்கள். பிணத்தைச் சுடுகாட்டில் வைத்ததும் அங்கிருந்த புலைமகன் உப்பில்லாமல் பொங்கிய சோற்றைப் பலியாகத் தூவுவான். மன்னன் துறவுக்கோலம் பூண்ட நாளன்று அங்காடிகள் கதவடைக்கப்பட்டன. மலையிலிருந்து குதித்து உயிர்விடும் பழக்கம் அந் நாள்களில் இருந்துவந்தது.

விருந்தினர் வீட்டுக்கு வந்தவுடன் அவர்களுக்கு வெற்றிலை பாக்கு வழங்கப்பட்டது. வெற்றிலைப் பெட்டிக்கு வெற்றிலைச் செப்பு என்று பெயர். விருந்தினர் நீராடி எழுந்தவுடன் வீட்டுக்குடையவர்கள் அவர்களைக் கால்கழுவி மணைமேல் இருத்துவார்கள். விருந்தினர் மும்முறை தண்ணீரினால் வாயைத் துடைத்துக்கொண்டு மும்முறை சில துளி தண்ணீர் அருந்துவர். தம் விரல்களால் கண் காது மூக்குகளைத் தொட்டுக்கொண்டு பிறகு தம் மேலாடையால் துடைத்துக்கொள்வர். உண்ட பிறகு வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்ளுவார்கள். பார்ப்பன விருந்தினருக்குப் பொன் தட்டும், பக்கத் தட்டுகளும் வைத்து உணவு படைப்பார்கள். மேற்குடிமக்கள் விடிந்து எழுந்தவுடன் கடுக்காய், நெல்லி, தான்றி இம் மூன்றும் சேர்ந்து ஊறிய தண்ணீரால் தம் கண்களைக் கழுவிக் கொள்ளுவார்கள்.

வெளியூர் செல்ல விடைபெற்றுக் கொள்ளும் மகன் பன்னிரண்டு வில் தொலைவில் நிற்பான்; அவன் தாய் மூன்று வில் தொலைவில் நெருங்கிச் சென்று விடை கொடுத்தனுப்புவாள்.

நாவிதன் சவரக்கத்தியைத் தீட்டிக் கல்லின்மேல் தேய்த்துத் துணியால் துடைத்துவிட்டு அதைத் தன் அங்கையின்மேல்

புரட்டிக் கூராக்குவான். இரும்பும் எஃகும் சேர்த்துச் சவரக் கத்திகள் செய்யப்பட்டன.[157]

பாம்புகளில் பல குலங்கள் உண்டு என்றும், அவை கடிப்ப தற்கு எட்டுக் காரணங்கள் உண்டு என்றும் ஒரு நம்பிக்கை நில விற்று. இசை நூல், நாட்டிய நூல், சித்தர் ஆருட நூல், விஷ வைத்திய நூல் ஆகிய நூல்கள் வழக்கில் இருந்தன.

## பொழுதுபோக்கு

ஆண்கள் ஆட்டுடன் ஆட்டையும், நாட்டுக் கோழியுடன் இறக்குமதியான கோழியையும் சண்டை மூட்டிக் களிப்பார்கள். நீர் விளையாட்டுகளில் பெண்களுக்கும் விருப்பம் இருந்தது. பெண்கள் பந்து விளையாடினர். பந்துகளைக் கையால் தட்டி எடுத்தல், எறிதல், பாம்பைப்போல் நெளிந்துநெளிந்து ஓடிப் பந்தடித்தல், பூப்பந்தாடுதல், பொம்மைக் கலியாணம் செய்தல், ஊசலாடுதல், பாத்திரங்களில் தண்ணீர் நிரப்பி அதைத் தட்டித் தட்டி முழவு முதலிய இசைக் கருவிகளின் இன்னிசையை எழுப்புதல் ஆகிய விளையாட்டுகளையும் பெண்கள் பயின்று வந்தனர்.

வாழ்க்கை வசதிகள் பலவற்றை மக்கள் துய்த்து இன்புற் றனர். பெண்கள் 'காமபானம்' என்ற தனிப்பட்ட மது ஒன்றை அருந்தினர். வெற்றிலையுடன் பச்சைக் கற்பூரம்சேர்த்து மெல்லு வதுண்டு. யவனர் செய்த பெட்டிகளில் நகைகள் பூட்டிவைக்கப் பட்டன. குடைகளில் வட்டக்குடை, பீலிக் குடை என இரு வகையுண்டு. உயர்வரிசை மக்கள் பல்லக்கேறிப் பயணம் செய் தனர். மக்கள் குளித்துவிட்டு மரக்கட்டைச் செருப்பை யணிந்து வீட்டுக்குள் நுழைவார்கள். அச் செருப்பில் பொன் ஆணி ஒன்று பதித்திருக்கும். கருங்காலி மரத்தைச் சீவித் தண்ணீரில் ஊற வைத்து அத்தண்ணீரைக் காய்ச்சி அதன் களியில் பாக்கைக் கலப் பார்கள். அப் பாக்குக் களிப்பாக்கு என்று பெயர் பெறும்.

## மருத்துவம்

மருத்துவம் நன்கு வளர்ச்சியுற்றிருந்தது. நோயை மருந்தி னாலும், அறுவையினாலும் தணிப்பதற்கு அக்கால மருத்துவர் கள் பயிற்சி பெற்றிருந்தனர். வாதம், பித்தம், சிலேட்டுமம் என் னும் மூன்று நாடிகளை நன்கு ஆராய்ந்திருந்தனர். குடிமக்களுக் கும் தவசிகளுக்கும் மருத்துவம் செய்வதற்காக ஏற்பாடுகள் செய்

157. சீவக. 2496.

யப்பட்டிருந்தன. மருத்துவர்களுடைய பிழைப்புக்கு நிவந்தங்கள் அளிக்கப்பட்டன. எண்ணாயிரம், முக்கூடல் ஆகிய இடங்களில் மருத்துவசாலைகள் நடைபெற்று வந்தன. அக்கால மருத்துவர்கள் பல அரிய மூலிகைகளின் பயனையும் அறிந்திருந்தனர்.[158]

**மடங்கள்**

சோழர் காலத்தில் பல பெரிய மடங்கள் கட்டப்பட்டுவந்தன. அவற்றின் வளர்ச்சிக்கு மன்னர்கள் பெரிதும் துணைபுரிந்தார்கள். பெரும்பற்றப்புலியூர், மேலைச்சேரி பதஞ்சலி தேவர் மடம், கீழையூர் மடம், திருவானைக்கா நடுவில் மடம், திருச்சத்தி முற்றத்து முதலியார் மடம், திருவிடைமருதில் முதலியார் சந்தானம், திருவாவடுதுறை மடம் ஆகியவை சிறப்புடன் நடைபெற்றுவந்தன. கோளகி மடங்கள் என்ற சைவச் சார்புடைய மடங்கள் நாட்டில் ஆங்காங்கு நிறுவப்பட்டன. திருவொற்றியூரில் சதுரானன பண்டிதர் என்பவர் மடம் ஒன்றை நிறுவினார்.[159] அவர் கேரள நாட்டினர்; பல கலைகளையும் பயின்றவர். தம் அறிவை வளர்த்துக்கொள்ளும் பொருட்டு இளமையிலேயே தம் நாட்டைத் துறந்து, சோழ நாட்டிற்கு வந்து இராசாதித்திய சோழனுடன் நட்புப் பூண்டார். அம் மன்னன் போரில் உயிர் துறந்தபோது அவனுடன் போர்க்களத்தில் வீரமரணம் எய்தும் வாய்ப்பின்றி உலகை வெறுத்துக் காசிக்குச் சென்றார். அங்குக் கங்கையில் நீராடி நிரஞ்சன குரு என்பாரிடம் தீக்கை பெற்றுத் திரும்பி வந்து திருவொற்றியூரை அடைந்தார். அங்குத் தம் பெயரால் மடம் ஒன்றை அமைத்தார் (கி.பி. 960). அம் மடம் நீண்ட காலம் நடைபெற்று வந்தது.

கோவிந்தபுத்தூர் திருவிசயமங்கைக் கோயிலில் திருத்தொண்டத் தொகையான திருமடம் என்று என்று ஒரு மடம் நிறுவப்பட்டது. வழிப்போக்கருக்கு உப்பு, விளக்கெண்ணெய் வழங்குவதும், நோய்க்கு மருத்துவம் செய்வதும் இம் மடம் மேற்கொண்டிருந்த சில மேலாம் கடமைகள். மலையாளத்துப் பிராமண இளைஞர்கள் வேதாந்தம் பயில்வதற்கெனத் திருவிடங்கழியில் மடம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது.[160] திருவாரூரில் தட்சிண கோளகி மடம் என்று ஒரு மடமும், மதுரையில் திருஞானசம்பந்தர் மடமும் அமைக்கப்பட்டிருந்தன.[161] மற்றும் திருநீலவிடங்கன் மடம்[162] என்றும், நாற்பத்தெண்ணாயிரவர்

158. Ep. Rep. 159/21.
159. Ep. Rep. 371/11.
160. Ep. Rep. 276/25.
161. S.I.I. V. No. 301.
162. Ep. Rep. 143/25.

மடம்[163] என்றும், இசைந்தவார் குழலி மடம்[164] என்றும் சில மடங்ககளைப் பற்றிக் கேள்விப்படுகின்றோம். விக்கிரம சோழன் காலத்தில் திருவாவடுதுறையில் அமைந்திருந்த ஒரு மடத்தில் பிராமணருக்கும், தவசிகளுக்கும், 'அநாதிகிரீசர்' என்பவர்கட்கும் உணவு வழங்கப்பட்டது; இலக்கணமும் மருத்துவமும் பயின்றவர்கட்கு உணவும் இருக்கையும் அளிக்கப் பட்டன. இப்போது திருவாவடுதுறைப் பண்டார சன்னிதி களிடம் உள்ள கோயில் ஒன்று, முதலாம் இராசராசன் காலத்தில் திருவையாறு மடம் ஒன்றுக்கு உரியவரான சதாசிவ பட்டாரர் என்பவருக்கு உரிமைப்பட்டிருந்தது.[165]

சைவமும் வைணவமும் பல்லவர் காலத்தில் வளரத் தொடங்கிச் சோழர் காலத்தில் மிக உன்னத நிலையை எட்டி யிருந்தன. சோழ மன்னர்கள் வேறுபாடுகளின்றிச் சைவம், வைணவம் ஆகிய இரு சமயத்துக் கோயில்களுக்கும் மடங் களுக்கும் தானங்கள் வழங்கியுள்ளனர். பொதுவாக இவ்விரு சமயங்களும் நாட்டில் ஒருமைப்பாட்டுடன் பயின்று வந்தன. எனினும் அவற்றுக்கிடையே அவ்வப்போது பூசல்கள் நேர்ந்த துண்டு. வைணவ ஆசாரியாரான இராமாஞ்சர் தமிழகத்தைத் துறந்து வேறு இடத்துக்குச் சென்று நெடுங்காலம் வாழ்ந்து வரவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. இரண்டாம் குலோத் துங்கன் தில்லைக் கோவிந்தராசப் பெருமானின் திருமேனியைப் பறித்துக் கடலில் எறிவித்தான். சைவக்கோயிலின் மகேசுரர் கள் வைணவக் கோயிலின் பட்டர்களுடன் உறவு கொண்டாடிய தற்காக அவர்கள் உடைமைகளைக் கோயில் மகாசபை பறி முதல் செய்ததாகக் கல்வெட்டு ஒன்று (கி.பி. 1160) கூறு கின்றது. வைணவ மடங்கள் கல்வித் துறையிலும் மருத்துவத் துறையிலும் நற்பணியாற்றி வந்தன.[166] வானமாமலையில் வைணவ மடம் ஒன்று அமைக்கப்பட்டது.[167] அது இன்றும் செயற்பட்டு வருகின்றது. மன்னார்குடியில் செண்டலங்கார மாமுனி மடமும், சேரன்மாதேவியில் மற்றொரு வைணவ மடமும் சிறந்து விளங்கிவந்தன.

### சமயம்

சைவம், வைணவம் ஆகிய இரு பெரும் சமயங்களும் சோழா, ஆட்சியில் சிறப்புடன் வளர்ந்துவந்தன. சைவத்தில் சாக்தர்

163. Ep. Rep. 150/25.
164. Ep. Rep. 525/20.
165. Ep. Rep. 101/251; Ep. Rep. 125/25
166. Ep. Rep. 576/15; Ep. Rep, 127/25.
167. Ep. Rep. 228/28.

காளாமுகர், ஷண்மார்க்கர் முதலிய பிரிவுகளும் ஆங்காங்கு நிலைத்துத் தத்தம் பணிகளை ஆற்றிவந்தன. சமணமும் பௌத்தமும் தொடர்ந்து மக்கள் ஈடுபாட்டைப் பெற்றுவந்தன. இந்து சமயத்தில் மும்மூர்த்திகள் தத்துவம் ஏற்றுக்கொள்ளப் பட்டதாயினும் சிவனே முழுமுதற் கடவுளாகக் கொள்ளப் பட்டார். ஆக்கல், அளித்தல், அழித்தல் தொழிலை இயற்றிய வராயினும் அவர் தோற்றம் இறுதியற்றவர் என்று சைவசமயம் கூறிற்று.[168] அதைச் சோழர் காலத்திய தமிழகம் ஏற்றிருந்தது. தமிழகத்துச் சைவத்துக்கும் வட இந்தியச் சைவத்துக்குமிடையே நெருங்கிய தொடர்பு இருந்துவந்தது. இதற்குச் சான்றுகள் பல உள. பல்லவர் காலத்திலேயே சைவ சமயத்தில் நடராச தத்துவம் வளர்ந்துவிட்டது. சோழர் காலத்தில் அது சிற்பத் திலும், ஓவியத்திலும் வடிக்கப்பட்டது. வடமொழி ஆகமங்கள் தமிழகத்தில் பரவியதன் காரணமாகச் சைவ சமயம் புது மலர்ச்சி பெற்றது. சமய குரவர்கள் நால்வரும் தம் பாடல் களின் மூலம் சைவ வழிபாட்டையும், நடராச தத்துவத் தையும் நாடறியப் பரப்பினார்கள். எனினும் அவர்களுடைய தமிழ்மறையில் பொதித்து கிடந்த மெய்ப்பொருள்களைத் தனியே திரட்டிச் சிலைகளில் வடித்துக்காட்டிய பெருமையானது சோழர்களையே சாரும். சங்கராச்சாரிய சுவாமிகள் அத்துவித வேதாந்தத்தை நாடெங்கும் போதித்து வந்தார். அவருடைய சிறந்த தொண்டினால் பௌத்தம் ஒளியிழந்தது. ஆனால், அதன் விளைவாக மக்களுக்குக் கடவுள்மாட்டுப் பக்தி குறைந்துவந்தது. வெறும் தருக்க வாதமாகவும் அறிவுநிலையில் மட்டும் உணரக் கூடியதாகவும் இருந்த வேதாந்தமானது மக்களிடையே கடவுட் பற்றைத் தோற்றுவிக்கவும் அறத்தாறு ஒழுக்கங்களை வளர்க் கவும் போதுமானதாகக் காணப்படவில்லை; ஆகவே, சைவமும் வைணவமும் கோயில்களின் அமைப்பிலும், சமய இலக்கிய வளர்ச்சியிலும் மக்கள் கருத்தை ஈர்க்கும் நோக்கத்தில் கருத் தூன்றலாயின. ஆகவே சைவ சித்தாந்தம், விசிட்டாத்துவிதம் என்னும் இரு கோட்பாடுகள் நிறுவப்பெற்றன.

சைவசமயத்தின் முடிவான கொள்கை சைவசித்தாந்த மாகும். கடவுள் ஒருவர் உண்டு; உயிர் என்பது ஒன்று உண்டு. அது தன்னைத்தான் அறியக்கூடாமலும், இறைவனை அறியக்கூடாம லும் அதைத் தடைசெய்யும் இருள் ஒன்று உண்டு என்பது சைவ சித்தாந்தத்தின் அடிப்படைத் தத்துவம் ஆகும். இறைவனைப் பதி என்றும், உயிரைப் பசு என்றும், இருளைப் பாசம், தடை, தளை,

168. S.I.I. No. 18.

ஆணவம் என்றும் கூறுவர். ஆணவ இருளில் சிக்குண்டு உழல்கின்ற உயிர்களிடம் இறைவனுக்கு அருள் சுரக்கின்றது. அதனால் அவன் அவற்றுக்கு உடலையும், உலகத்தையும், இன்ப துன்பங்களைத் துய்க்கும் ஆற்றலையும் வழங்குகின்றான். இவை மூன்றும் உயிர்களுக்குச் சிறு விளக்கைப்போல் உதவுகின்றன. சிறு விளக்கின் ஒளியில் உயிரானது தன்னைப்பற்றியும், தன் சூழ்நிலையைப் பற்றியும் சிறிது விளக்கங் கண்டு, பிறகு கதிரவனின் பேரொளி போன்ற, முழுமையான சிவப் பேரறிவை அடைய வேண்டும்.[169] அதற்காக உயிரானது மீண்டும் மீண்டும் பிறவிகளை எடுக்கவேண்டும். பாசம் என்பது ஆணவம், கன்மம், மாயை என முப்பொருளாய் விரியும். இவ் வுலகம் உயிரும் உயிரில்லாத பொருளுமாகக் காட்சியளிக்கின்றது. இக்காட்சியை தோற்றுவிப்பதற்குத்தான் படைப்பு என்று பெயர். உயிர்கள் ஆக்கப்படுவதுமில்லை; அழிக்கப்படுவதுமில்லை. இறைவன் என்று உண்டோ, அன்றே உயிர்களும் உண்டு. இறைவன் ஒருவன்; உயிர்கள் எண்ணிறந்தன. செம்பினிடத்தே களிம்பு இருப்பதைப் போல உயிர்களிடத்தில் ஆணவ மலம் உடன் கலந்து இருக்கின்றது. களிம்பு நீங்கின செம்பு ஒளிவிட்டுச் சுடர்வதைப்போல மலம் நீங்கின உயிர் ஞானஒளி விளக்கமுற்றுப் பேரின்பம் எய்தும். செம்பினிடத்தில் களிம்பானது ஏன், எப்போது உண்டாயிற்று என்னும் கேள்விக்கு விடை கிடையாது. அதைப்போல உயிர்களுக்கு மலம் ஏன் உண்டாயிற்று; எப்பொழுது உண்டாயிற்று என்னும் கேள்விகளுக்கும் விடையில்லை. உயிரில்லாத பொருளான இவ்வுலகம் காலத்தின் இறுதியில் நுண்பொருளாய்ப் பின்பு ஆற்றலாய் மாறி ஒடுங்கும்.

ஒவ்வோர் உயிருக்கும் இறைவன் உலகையும் உடலையும் படைத்துக் கொடுக்கின்றான்; அது அவனுடைய **படைத்தல்** தொழில். பிறவி எடுத்த உயிர்களைப் பாதுகாத்து வருகின்றான். அது அவன் **அளித்தல்** தொழில். உயிரானது பிறவியின் பயனை அறியாமல் வீண் காலங்கழித்து இறப்புக்குள்ளாவது அவனுடைய **அழித்தல்** தொழில். உயிரானது முற்பிறவிகளையும், குழந்தைப் பருவத்தையும் மறந்துவிடுவது அவனுடைய **மறைப்புத்** தொழில். இறுதியாகப் பக்குவம்பெற்ற உயிர் சிவஞானமான மெய்ஞ்ஞானம் கைவந்து சிவ ஒளியில் இரண்டறக் கலந்துவிடுவது அவனுடைய **அருளுந்** தொழிலாகும். இவ் வைந்தொழிலும் ஒவ்வோர் உயிரினிடத்திலும் நிகழ்வதைப் போலவே உலகப் படைப்பினும் நிகழ்வதுண்டு. ஆற்றலாக மாறி இறைவனிடத்தில் ஒடுங்கிய

169. ஞானா. 18. 7-20

மாயையானது அவனுடைய ஆணையால் விரிவுற்று அண்டங் களாகவும் உலகங்களாகவும் தோற்றமுறும். இந்த ஆற்றலின் துடிப்புகள் ஒவ்வொன்றும் ஒரு படைப்பும் அழிப்பும் ஆகும். இறைவன் தனித்து நிற்கின்றான்; உயிர்களிடத்திலும் காணப்படு கின்றான். உயிரில்லாத சடப் பொருள்களினிடத்திலும் காணப் படுகின்றான். இம் மூன்று நிலைகளையும் இறைவன் வேறாயும், ஒன்றாயும், உடனாயும் உறையும் நிலைகள் எனச் சைவசித்தாந் தம் கூறும். இத் தத்துவத்தையே 'அகர முதல எழுத்து எல்லாம், ஆதிபகவன் முதற்றே உலகு' என்னும் திருக்குறள் விளக்கி நிற் கின்றது. அதாவது 'அ' என்னும் உயிரெழுத்தானது தனித்து இயங்கும்; ஏனைய உயிரெழுத்துகள், உயிர்மெய்யெழுத்துகள் ஆகியவற்றுடன் கலந்து இயங்கும்; மெய்யெழுத்துகளுள் மறைந்து இயங்கும்.

இறைவனின் ஐந்தொழில் தத்துவமே நடராச உருவத்தின் தத்துவமாகும். நடராசர் திருவுருவத்தில் அமைந்துள்ள உடுக்கை, படைப்பைக் குறிக்கின்றது; அபயகரம், அளிக்கும் தொழிலைக் குறிக்கின்றது. நெருப்பு, அழித்தற்றொழிலைக் குறிக்கின்றது; ஊன்றிய பாதம் மறைப்பையும், தூக்கிய திருவடி அருளுந் தொழிலையும் குறிக்கின்றன.[170]

சிதம்பரம் கோயில் திருச்சிற்றம்பலம் எனப்படும். சைவ சித்தாந்தக் கருத்துகள் அனைத்தையும் விளக்கிக் காட்டுமாறு அமைந்துள்ளது இந்த ஞான சபை. இது இரு பிரிவுகளாக அமைக்கப்பட்டுள்ளது. முன்புறம் இருப்பது பொன்னம்பலம் அல்லது கனகசபை; வழிபடுவோர் நிற்குமிடம். தூய வினை, தூய ஒழுக்கம், உள்ளத்தின் ஒடுக்கம், விரிந்த தடையுறாத பேரறிவு ஆகியவற்றால் ஒருவர் தம் உடம்பைப் பொன் உடம் பாக்கிக் கொள்ளலாம். இவ் வுண்மையைக் குறிப்பிடுவதுதான் கனகசபை. இத் தூய உடம்பிலிருந்துகொண்டு விரிந்த, துண்டு படாத பேரறிவை யடைந்து சிவத்தோடு கலத்தலைக் குறிப்பதே சிற்றம்பலம் அல்லது ஞானசபை. இச் சபையில் நின்றுதான் நடராசப் பெருமான் ஐந்தொழில் கூத்து நிகழ்த்துகின்றான்.

இவ் வைந்தொழில் தத்துவத்தின் அடிப்படையில்தான் திருமுறைகளும், சைவசித்தாந்த சரித்திர நூல்களும் அமைந் துள்ளன. திருமூலர் திருமந்திரம் முதலாக இராமலிங்க அடிகள் திருவருட்பா ஈறாகச் சைவத்தைப் போற்றி எழுந்த சமய இலக் கியப் படைப்புகள் அத்தனையும் மிகப் பெரிதும் போற்றிப்

170. உண். விளக். 35.

புகழ்ந்து பாடிய கோயில் தில்லைச் சிற்றம்பலந்தான். இறைவன் உருவமாகவும், அருவுருவமாகவும், அருவமாகவும் உயிர்களுக்கு அவ்வவற்றின் அறிவுத் திரட்சிக்கேற்பக் காட்சியளிக்கின்றான் என்பது சைவ சித்தாந்தத்தின் பேருண்மைகளில் ஒன்றாகும். தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் இறைவனின் இம்மூன்று திருமேனி களையும் காணலாம். நடராசரின் வடிவம் உருவத் திருமேனி; திருச்சிற்றம்பலத்துக்குப் பின்புறமுள்ள திருமூலட்டானேசுரர் என்னும் சிவலிங்கம் அருவுருவத் திருமேனி; திருச்சிற்றம்பலத்தில் இரகசியம் என்று மறைத்து வைக்கப்பட்டுள்ள வெற்றுவெளி அருவத் திருமேனியாகும். ஆதித்திய சோழன் (கி.பி. 870-90) முதலாகக் கோப்பெருஞ்சிங்கன் (கி.பி. 1229-1278) ஈறாகப் பல மன்னர்கள் போட்டியிட்டுக் கொண்டு ஞானசபைக்குப் பொன் வேய்ந்துள்ளனர். தமிழில் இக் கோயிலின் வரலாற்றைக் ‘கோயில் புராணம்’ என்னும் பெயரில் உமாபதி சிவாசாரியார் இயற்றியுள்ளார். மற்றும் தமிழிலும் வடமொழியிலும் சிதம் பரத்தைப்பற்றி எழுந்துள்ள நூல்கள் பல.

### கடவுளர்கள்

சிவபெருமான், திருமால் ஆகிய கடவுளரின் வழிபாடு பல வகையாகப் பெருகிவிட்டது. சிவபெருமான் என்ற தத்துவம், இருபத்தைந்து மூர்த்திகளாக விரிவுற்றது. திருமாலை இராமனாக வும், கண்ணனாகவும் மக்கள் வணங்கி வரலாயினர். சிதம்பரத்தை யடுத்துள்ள ஸ்ரீமுஷ்ணம் என்னும் ஊரில் வராக மூர்த்தியாகவும், நரசிங்கப்பெருமாள் கோயிலிலும், சோளிங்க புரத்திலும் நரசிங்கமூர்த்தியாகவும் திருமால் காட்சி யளிக்கின் றார். விநாயகர், முருகர், காளி, பிடாரி, சப்தமாதர்கள், துர்க்கை, சீதை, அனுமன், அறுபத்துமூவர் ஆகிய தெய்வங் களின் வழிபாடும் தமிழகத்தில் பெருகிவிட்டன.

### சைவத் திருமுறைகள்

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் மூவர் தேவாரம் ஏழு திருமுறைகளாகவும், மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி, காடவ நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதின்மரின் திருவிசைப்பாவும், சேந்தனாரின் திருப்பல்லாண்டும் ஒன்பதாம் திருமுறையாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. திருமூலரின் திரு மந்திரம் மூவாயிரம் பத்தாம் திருமுறையாகவும், அமைக்கப்

பட்டது. பதினோராம் திருமுறையில் நாற்பது பிரபந்தங்கள் அமைந்துள்ளன. அவற்றைப் பாடியவர்கள் திருவாலவா யுடையார், காரைக்கால் அம்மையார், ஐயடிகள், காடவர் கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் நக்கீர தேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரண தேவர், இளம் பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி எனப் பன்னிருவர் ஆவர். பிறகு சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் பன்னிரண்டாம் திருமுறையாகச் சேர்க்கப்பட்டுள்ளது. தேவாரப் பாடல்கள் நெடுங்காலம் மறைந்துகிடந்தன. அவற்றைக் கண்டுபிடித்து முதல் ஏழு திருமுறைகளாக வகுத்துத் தந்தவர் நம்பியாண்டார் நம்பி என்பவர். சிதம்பரத்துக்கு அண்மையிலுள்ள திருநாரையூரில் இவர் வாழ்ந்திருந்தார். அவ்வூரில் கோயில்கொண்டிருக்கும் பொல்லாப் பிள்ளையாரின் திருவருள் துணைகொண்டு நம்பியாண்டார் நம்பியடிகள் திருமுறைகள் வகுத்தார் என்பது புராண வரலாறு. அவர் முதலாம் ஆதித்தன் அல்லது அவன் மகன் முதலாம் பராந்தகன் காலத்தவர் என்பர். இவர் வாழ்ந்த காலத்தைப்பற்றிக் கருத்து வேறுபாடுகள் உண்டு. நம்பியாண்டார் நம்பி தொகுப்பிலும் காணப்படாத திருஞானசம்பந்தரின் பதிகம் ஒன்று தஞ்சை மாவட்டம் திருவிடைவாயில் கோயில் கட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.[171]

சோழர்கள் தேவாரம் ஓதுவதைக் கண்காணித்து வருவதற் காகவே 'தேவார நாயகம்' என்ற உயர்நிலை அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருந்தார்.

சைவத் திருமுறைகளை வகுத்துக் கொடுத்த நம்பி யாண்டார் நம்பி அடிகள் பிறந்த ஊரான திருநாரையூருக்குச் சில கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள காட்டுமன்னார் கோயில் என்னும் ஊர் வைணவச் சமயத்துக்கு மிகச் சிறந்ததோர் இடமாக விளங்கி வருகின்றது. இவ்வூரில்தான் வைணவ ஆசாரியார் நாதமுனிகள் பிறந்தார் (10 ஆம் நூற்றாண்டு). அவர் காலத்தில் வைணவ ஆழ்வார்களின் பாடல்கள் மறைந்து கிடந்தன. குருகூர் நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரங் கள் சிலவற்றைப் பாடக் கேட்டார். பெரு முயற்சி செய்து நம் மாழ்வாரின் ஏனைய பாசுரங்களையும், பிற ஆழ்வார்களின் பாசுரங்களையும் தேடிக் கண்டுபிடித்தார். தமக்குக் கிடைத்த

171. Ep. Rep. 8/18.

பாசுரங்கள் அனைத்தையும் வகைப்படுத்தி நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்னும் தொகுப்பைச் செப்பனிட்டார். அவற்றுக்கு இசையும் வகுத்துக் கொடுத்தார்.

வைணவக் கோயில்களில் திருவாய்மொழி, திருமங்கையாழ்வாரின் பாசுரங்களையும், குலசேகர ஆழ்வாரின் பாசுரங்களையும் சாற்றுமுறை செய்துவரப் பல நிவந்தங்கள் அளிக்கப்பட்டுள்ளன. முதலாம் இராசராசன் காலத்திலேயே நம்மாழ்வாரின் வழிபாடு தொடங்கிவிட்டிருந்தது.[172] வைணவருக்குத் தலையாய கோயில் திருவரங்கத்துக் கோயில்தான். சைவ மரபில் கோயில் என்னும் சொல் சிதம்பரம் கோயிலையே குறிக்கும்; அதைப்போல, வைணவ மரபில் அச் சொல் திருவரங்கத்தையே குறித்து நிற்கும்.

வழிநடை வைணவருக்கு உண்டியளிப்பதற்காக நிவந்தம் நிறுவப்பட்ட செய்தியைத் திருக்கோவலூர்க் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.[173] வைணவ மரபினரான ஏகதண்டிச் சந்நியாசிகள் சமய வளர்ச்சியில் ஈடுபட்டிருந்தனர்.[174] சைவ, வைணவப் பூசல்களைப்பற்றிய செய்திகளைப்பற்றிச் சில கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டியன் காலத்தில் அத்தகைய பூசல் ஒன்று நடுவர்களால் தீர்த்துவைக்கப்பட்டது.[175] வைணவரோடு நெருங்கி உறவாடிய சிவன் கோயில் மகேசுரர் சிலர் தண்டிக்கப் பட்டுள்ளனர்.[176]

கோயில்களில் பல விழாக்கள் கொண்டாடப்பட்டன. சோழ மன்னர்கள் பிறந்த நட்சத்திரங்களில் விழா எடுக்கப் பட்டது. மாசி மாதந்தோறும் மக நட்சத்திரத்தன்று கோயில் களில் பெருவிழா அயர்வதுண்டு.[177] சிதம்பரத்தில் நடராசரும் ஏனைய கோயில் மூர்த்திகளும் கடலாடச் செல்லுவார்கள். கும்பகோணத்தில் மகாமகம் கொண்டாடப்பட்ட செய்தியைப் பதினான்காம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்றினால் அறிகின் றோம். சிதம்பரத்தில் ஆனித் திருமஞ்சன விழா நாள்களில் சட்டிச்சோறு ஆயிரம் அளிக்கப்படுவதற்கு முதலாம் இராசேந்திரன் தானங்கள் அளித்திருந்தான்.[178] பேரூரில் பங்குனித் திருநாளில் தெப்ப உற்சவம் நடைபெற்று வந்தது.[179] பொது

172. S.I.I. III No. 2.
173. S.I.I. VII. No. 135.
174. Ep. Rep. 544/11.
175. Ep. Rep. 31/1907.
176. Ep. Rep. 257/25.
177. S.I.I. IV. No. 225.
178. S.I.I. IV. No. 223.
179. S.I.I. V. No. 227.

வாகச் சிவன் கோயில்களில் சங்கராந்தி, தைப்பூசம், சிவராத்திரி, சித்திரை விஷு, உத்தராயணம், ஐப்பசி விஷு, கார்த்திகைத் திருநாள் ஆகிய நன்னாள்களிலும்[180] கிரகணங்கள் நிகழ்ந்த நாள்களிலும் விழாக்கள் எடுக்கப்பட்டன. திருக்காளத்தியில் முதலாம் பராந்தகன் காலத்தில் இந்திர விழா[181] எடுக்கப் பட்டது குறிப்பிடத்தக்கதாகும். வைணவக் கோயில்களில் உறியடி விழாவும், திருப்பள்ளியறை நாச்சியாருக்கு (ஆண்டா ளுக்கு) ஆடித் திருப்பூர நோன்பும்,[182] சங்கராந்தியும் கொண் டாடப்பட்டன.

நவக்கிரக வழிபாடு தமிழகமெங்கணும் பரவியிருந்தது. சூரியனுக்குத் தனிக் கோயில்கள் எழுப்பப்பட்டன. சூரியனார் கோயில் என்னும் ஊரில் கோயில்கொண்டுள்ள சூரியனுக்கு முதலாம் குலோத்துங்கன் வழிபாடுகள் ஏற்பாடு செய்தான்.[183] சூரிய தேவனுக்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் இருக்கு வேதத்திலிருந்து சௌரம் ஓதுவதற்காக முதலாம் இராசேந் திரன் திருநாமநல்லூரில் அறக்கட்டளை ஒன்றை நிறுவி னான்.[184] சைவத்தில் தமிழ்மறை எனப்படும் தேவாரத் திருப்பாட்டின் ஆசிரியரான சுந்தரருக்கு முன்பு வடமொழி வேதபாராயணம் செய்ய அறக்கட்டளை பிறந்தது குறிப்பிடக் தக்கதாகும்.

### வேண்டுதல்

தம்முடைய எண்ணங்கள் நிறைவேற வேண்டும் என்று சுவாமியின் முன்பு பிரார்த்தனை செய்துகொண்டு காணிக்கை செலுத்திக்கொள்ளும் வழக்கம் பதின்மூன்றாம் நூற்றாண்டி லேயே காணப்படுகின்றது. காணாமற்போன நல்லமங்கை என்ற தன் மகள் கிடைத்துவிட்டதற்காகக் கூத்தன் என்ற பொற் கொல்லன் ஒருவன் சுவாமிக்கு நெற்றிப்பட்டம் ஒன்று செய்து கொடுத்தான்.

### இலக்கியம்

இப்போது வழக்கில் இல்லாத நூல்கள் சிலவற்றின் பெயர் கள் கல்வெட்டுச் செய்திகளில் வெளியாகியுள்ளன. 'சைவநெறி கண்ட அரும்பாக்கத்து அறநிலை விசாகன் திரைலோக்கியமல்லன் வச்சராசன்' என்பான் ஒருவன் பாரதத்தை எழில்மிக்க தமிழில் மொழிபெயர்த்தான் என்று மூன்றாங் குலோத்துங்கன் காலத்துத்

180. S.I.I. V. No. 578.
181. S.I.I. VII. No. 529.
182. S.I.I. V. No. 277.
183. Ep.Rep. 22/27; S.I.I. V. No. 277.
184. Ep. Rep. 225/39

திருவாலங்காட்டுக் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது: 'குலோத் துங்க சோழன் சரிதை' என்ற நூல் ஒன்றை மானகுலாசனிச் சேரியைச் சேர்ந்தவனான 'திருநாராயண பட்டன் என்கிற கவி குமுதசந்திரபண்டிதன்' என்பான் இயற்றினான். முதலாம் குலோத்துங்கன் ஆணையின்மேல் வீரநாராயண விண்ணகர் ஆழ் வார் கோயிலின் முன்பு அமைக்கப்பட்ட மிகப் பெரியதொரு மேடையின்மேல் அந்நூல் அரங்கேற்றம் செய்யப்பட்டது. அதன் ஆசிரியருக்கு நிலங்கள் தானமாகக் கொடுக்கப்பட்டன.[185] புலவன் ஒருவன் ஒரு குறுநில மன்னன்மேல் பிள்ளைக்கவி பாடிப் பரிசில்பெற்றான்.[186] முதலாம் குலோத்துங்கன் காலத்திலேயே கன்னிவன புராணம் என்ற ஒரு நூலையும், நாடகம் ஒன்றையும் கமலாலயபட்டன் என்ற ஒரு புலவன் இயற்றிப் பரிசில்கள் பெற் றான்.[187] மேலே குறிக்கப்பட்ட நூல்கள் யாவும் இப்போது மறைந்தொழிந்தன.

சோழர் காலத்தில் தமிழ் வளர்ச்சியானது மிக உயர் நிலையை எட்டி இருந்தது. பல அரிய நூல்கள் இயற்றப்பட்டன. அவற்றின் சீரும் சிறப்பும் இன்றளவும் மங்காமல் ஒளிர்ந்து வரு கின்றன. கல்லாடனார் இயற்றிய கல்லாடம் என்னும் அகத்துறை நூல் ஒன்று சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. மாணிக்கவாசகரின் திருக்கோவையாரில் உள்ள செய்யுள்களுள் ஒரு நூற்றை அடிப் படையாகக்கொண்டு நூறு அகவற்பாக்களால் ஆக்கப்பட்டது இந்நூல். வழக்கொழிந்த சங்கப் பாடல்களின் போக்கிலேயே இந் நூலின் பாட்டுகள் யாக்கப்பட்டுள்ளன. இக் கல்லாடனார் சங்க காலத்துக் கல்லாடனாரினின்றும் வேறானவர். இவர் ஒன்பதாம் நூற்றாண்டினர் என்று கொள்ளத்தகும். பதினோராந் திருமுறை யில் சேர்க்கப்பட்டுள்ள திருக்கண்ணப்பதேவர் திருமறம் என்னும் நூலையும் இவரே பாடினார் என்பர். முதலாம் குலோத்துங்கன் காலத்தவரான செயங்கொண்டார் என்பவர் கலிங்கத்துப் பரணி என்னும் நூலைப் பாடினார். போரில் ஆயிரம் யானை களைக் கொன்று வெற்றிகண்ட மன்னனின் புகழைப் பாடுவது பரணி என்பதாகும். பரணி பாடுவது எளிதன்று. 'பரணிக்குச் செயங்கொண்டார்' என்று இலக்கிய உலகம் இப் புலவர் பெரு மகனைப் பாராட்டி வருகின்றது. சோழ மன்னரின் இராச பாரம் பரியத்தைப் பற்றிப் பல செய்திகளை இது கொண்டுள்ளது. குலோத்துங்கன் கலிங்கத்துப் போரைப்பற்றிப் பரவுவது இந்நூல். இது வரலாற்றுச் சிறப்புடையதாகும். இது தாழிசை என்னும் செய்யுள்களால் அமைந்துள்ளது. பாட்டுகள் சொல்லினிமையை

185. Ep. Rep. 198/19.
186. Ep. Rep. 71- 73 & 25/24.
187. S.I.I. V No. 753.

யும், இசையையும், பல்வேறு சந்தங்களையும், சிதைவுறாத முழுச் சொற்கோவையையும் கொண்டு மிளிர்கின்றன. வீரம் மட்டுமன்றி நகைச்சுவையும் இந் நூலில் பொலிவதைக் காணலாம். 'கடை திறப்பு', 'கூழ் அடுதல்' என்னும் பகுதிகள் தமிழ் இலக்கியத்தில் ஈடிணையற்ற படைப்புகளாக இருக்கின்றன. 'முருகிச் சிவந்த கழுநீரும் முதிரா இளைஞர் ஆருயிரும் திருகிச் செருகும் குழல் மடவீர் செம்பொற் கபாடம் திறமினோ' என்னும் பாடலும்,[188] 'உயிரைக் கொல்லாச் சமண்பேய்கள் ஒரு போழ்து உண்ணும், அவை உண்ண மயிரைப் பார்த்து நிணத்துகிலால் வடித்துக் கூழை வாரீரே' என்னும் பாடலும்,[189] 'அவதியில்லாச் சுவைக் கூழ்கண்டு அங்காந்து அங்காந்து அடிக்கடியும் 'பவதி பிட்சாந்தேஹீ' எனும் பனவப் (பார்ப்பன) பேய்க்கு வாரீரே' என்னும் பாடலும்[190] படிப்பவர் முகத்தில் புன்னகையை வருவிக்கும் நகைச்சுவையைக் கொண்டுள்ளன. கலிங்கத்துப் போரைப்பற்றிப் புகழ்ந்து பேசும் பல பாடல்கள் வீரசோழியம், தண்டியலங்காரம் ஆகியவற்றின் உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன.

சோழ மன்னரின் ஆட்சிக் காலத்துக்கே பெருமையையும் புகழையும் ஈட்டித் தந்தவர்கள் ஒட்டக்கூத்தர், கம்பர், புகழேந்தி, சேக்கிழார் ஆகிய மாபெரும் புலவர்கள் ஆவர். ஒட்டக்கூத்தரும் கம்பரும் உடன்காலத்தவர்கள் என்றும், அவர்களுக்குள் புலமைக் காய்ச்சல் புகைந்துகொண்டே இருந்தது என்றும் பல செவிவழி வரலாறுகள் உண்டு. ஒட்டக்கூத்தர் தம்மைப் புரந்துவந்தவனான காங்கேயன் என்ற குறுநில மன்னன்மேல் நாலாயிரக் கோவை என்னும் நூல் ஒன்றைப் பாடியுள்ளார். மூவருலா என்னும் நூலை எழுதியவரும் அப் புலவரேயாவார். விக்கிரம சோழனின் கலிங்கத்துப் போரைப் பாராட்டிப் பரணியொன்றும் இவர் பாடினார். அன்றியும் தக்கயாகப்பரணி, குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், ஈட்டி எழுபது, எழுப்பெழுது, சரசுவதியந்தாதி, அரும்பைத் தொள்ளாயிரம் ஆகிய நூல்களையும் இவர் பாடியுள்ளார். இராமாயணத்தின் உத்தர காண்டத்தைப் பாடியவர் ஒட்டக்கூத்தரே என்று கூறுவர். உத்தரகாண்டம் உட்படக் கம்பராமாயணம் 12,016 பாடல்களைக் கொண்டுள்ளது.

கல்வியிலும், கவித்திறனிலும், கற்பனை வளத்திலும், கருத்து ஆழத்திலும், சொல்லாட்சியிலும் ஒட்டக்கூத்தரை மிஞ்சியவர் கம்பர். கம்பர் இயற்றிய இராமாயணம் தமிழிலக்கியத்துக்கு மணிமுடியாக அமைந்துள்ளது; அக் காலத்தை வென்று என்றும் சீரிளமை குன்றாது ஒளிர்ந்து வருகின்றது.

188. கலிங். 50 189. கலிங். 556. 190. கலிங். 563.

கம்பர் வான்மீகி முனிவரின் வடமொழி இராமாயணத்தை முதல் நூலாகக்கொண்டு தம் நூலை இயற்றினார் என்பது மரபாக உள்ளது. ஆனால், கதையின் அமைப்பிலும், போக்கிலும் கதைப் பாத்திரங்களின் அமைப்பிலும், கம்பர் தமிழ்மரபுக்கேற்பத் தம் நூலில் பல மாறுதல்களைச் செய்துள்ளார். வான்மீகி முனிவர் இராமனை ஓர் அரசகுமாரனாகவே தீட்டியிருக்கின்றார். கம்பர் இராமனைத் திருமாலின் அவதாரமாகவே கொண்டு தம் கதையை நடத்துகின்றார். இராவணன் சீதையைத் தன் கைகளால் மார்புற அணைத்துத் தூக்கிக்கொண்டுபோனான் என்று வான்மீகி கூறுகின்றார். ஆனால், கம்பரின் தமிழ்உள்ளம் அப்படிக் கூற ஒப்பவில்லை. உலகம் ஈன்ற தாயான சீதாப் பிராட்டியைப் பிறன் ஒருவன் தீண்டினால் உயிர் வாழமாட்டாள் என்று எண்ணி இராவணன் அவள் நின்ற நிலத்தையே அகழ்ந்து தூக்கிக் கொண்டு போனான் என்று கம்பர் கூறுகின்றார். இதைப் போன்ற அடிப்படை மாறுதல்கள் பலசெய்து தமிழரின் பண்பாட்டைத் தம் நூலில் பொதிந்து வைத்து அதற்குப் பாதுகாப்பிட்டார். தமிழ்மொழியானது கம்பரின் கைகளில் சொக்கத் தங்கத்தைப் போல இழுத்த இழுப்புக்கு வந்துள்ளது. கம்பர் தமக்கு விருப்பமான முறையில் எல்லாம் இலக்கண வரம்பை மீறியும் எழுத்தாட்சியும் சொல்லாட்சியும் மாற்றிக் கொள்ளக்கூடிய ஆற்றலையும் அதிகாரத்தையும் பெற்றிருந்தார். அதனால், கவிச்சக்கரவர்த்தி என்ற ஒரு பாராட்டும் கிடைத்தது. கம்பரின் கவிகள் சொல்லாழம் உடையன; பொருள்நயம் வாய்ந்தன. கம்பரின் கவிகளில் பொருள்நயங் காண்டலையே ஒரு பெருங்கலையாகத் தமிழ்ப் புலவர்கள் கருதுவர். ‘கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்’ என்று ஒரு பழமொழி வழங்குகின்றது. அது கம்பரின் இலக்கியச் செறிவையும், அவரை யண்டினவரையும் கவிகளாக்கிவிடக்கூடிய தமிழாற்றலையும் எடுத்துக் காட்டுகின்றது. கற்பனைத் திறனில் கம்பரை மிஞ்சிய தமிழ்ப்புலவர்கள் தமிழக வரலாற்றிலேயே முன்னும் பின்னும் பிறக்கவில்லை. மக்கள் உள்ளங்களின் கூறுபாட்டையும், எழுச்சிகளையும், வேட்கைகளையும் நன்கு ஆய்ந்துணர்ந்தவர் கம்பர்.

கம்பரைப்பற்றிய வரலாறுகள் பல வழங்கி வருகின்றன. அவற்றை உண்மை என்று கூறுவதற்கோ, பொய்யென்று கூறுவதற்கோ போதிய சான்றுகள் இல. கம்பர் தேரழுந்தூர் என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்றும், சடையப்ப வள்ளல் என்பவரால் புரக்கப்பட்டவர் என்றும் தெரிகின்றது. திருக்கோடிக்கா கல்வெட்டு ஒன்று சடையப்ப வள்ளலைப்பற்றிய செய்தி ஒன்றைக் கூறுகின்றது. அவன் சேதிபன் என்றும், பிள்ளைப் பெரு

மாள் என்பவனின் மகன் என்றும், புலவரையும் வறியோரையும் புரந்த பெரிய வள்ளல் என்றும், அவன் இவ் வுலகத்தையே தரப்பெற்றாலும் பொய் மொழியான் என்றும் அது கூறு கின்றது.[191] அக் கல்வெட்டு முதலாம் குலோத்துங்கன் (1070-1120) காலத்தியதாகும். அதில் குறிப்பிடப்பட்டுள்ள சடையப்ப வள்ளலே கம்பரின் புரவலன் என்று கொள்ள வேண்டும்.

கம்பர் இராமாயணத்தின் முதல் ஆறு காண்டங்களைமட்டும் பாடினார் என்றும், ஏழாங் காண்டம் ஒட்டக்கூத்தரால் பாடப் பட்டதென்றும் கூறுவர். கம்பர் காலத்தைப்பற்றிய ஆராய்ச்சி இன்னும் முடிவுறவில்லை. எனினும், சில அகச்சான்றுகளைக் கொண்டு கம்பர் மூன்றாம் குலோத்துங்கன் (1178-1216) காலத் தவர் என்றும், ஒட்டக்கூத்தர், புகழேந்தி ஆகியவர்களுடைய முதுமைக் காலத்தில் உடன்வாழ்ந்தவர் என்றும் சில ஆய்வாளர் கள் முடிவு கட்டியுள்ளனர். சீவகசிந்தாமணியின் மொழிவளத் தையும், கற்பனைத்திறத்தையும் கம்பரின் ஒப்பற்ற படைப்பில் காணலாம். கம்பர் ஏரெழுபது, சடகோபர் அந்தாதி, மும்மணிக் கோவை ஆகிய நூல்களையும் இயற்றினார் எனக் கொள்ளுவர். அந்தாதியும் மும்மணிக் கோவையும் இப்போது மறைந்து போய் விட்டன; வழக்கில் இல்லை.

### அவ்வையார்

கம்பரின் உடன்காலத்தவராக அவ்வையார் என்றொரு பெண்பாற் புலவர் இருந்தார் என அறிகின்றோம். இவருடைய கல்வியறிவு கம்பரின் கல்வியறிவைவிடச் சிறந்ததென்றும், இவர் கம்பரையே பன்முறை சொற்போரில் மடக்கியவர் என்றும் செவிவழி வரலாறுகள் கூறுகின்றன. ஆத்திசூடி முதலாய நீதி நூல்களை யாத்தவர் இந்த அவ்வையாரே எனக் கொள்ளுகின் றனர். புறநானூற்றுப் புலவரான அவ்வையாரும், விநாயகர் அகவல் இயற்றிய அவ்வையாரும் இவரினும் வேறானவர்.

### புகழேந்தி

புகழேந்திப் புலவர் தொண்டைமண்டலத்தில் பிறந்தவர்; பாண்டியன் அவையை அணிசெய்தவர். இவ்ரைப்பற்றியும் மாறுபாடான வரலாறுகள் வழங்கிவருகின்றன. இவருக்கு அழி யாப் புகழை வாங்கித் தந்தது நளவெண்பா என்னும் நூலாகும். அது பயிலுந்தோறும் பயிலுந்தோறும் இன்பம் பயப்பது. வெண்பா என்னும் செய்யுள் வகையானது, புலவர்க்குப் புலி

191. Ep. Rep. 58/80-81.

என்பர். எனினும், புகழேந்திப் புலவர் வெண்பாவைக்கொண்டே நளன் கதையை வெகு அழகாகப் பாடியுள்ளார். கருத்து வளத்திலும், சொல்லோட்டத்திலும், வெண்சீர்களின் அமைப்பிலும் புகழேந்தியின் நளவெண்பாவானது ஏனைய காவியங்களினின்றும் தனித்து நிற்கின்றது. கடற்கரையில் மக்களின் நடையொலியைக் கேட்டு அஞ்சியோடி மணலுக்குள் புகுந்து ஒளியும் நண்டுகளைக் கண்டு ஏக்கமுடன் கேள்விகள் கேட்கும் நளனுடைய உள்ளத்தின் துன்பம் தோய்ந்த நிலை, இந்நூலைப் படித்தவர்கள் நெஞ்சில் என்றுமே பதிந்து நிற்கும். பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் பாடப்பட்ட அல்லியரசாணி மாலை, புலந்திரன் களவு மாலை, பவளக்கொடி மாலை, ஏணி ஏற்றம், தேசிங்குராசன் கதை ஆகியவற்றையும் புகழேந்திப் புலவரின் படைப்புகள் எனக் கொள்ளும் தவறான எண்ணம் எப்படியோ ஏற்பட்டுள்ளது.

### கோவைகள்

குலோத்துங்கன் கோவை, தஞ்சைவாணன் கோவை என்னும் இரு நூல்களும் சோழர் காலத்தில் இயற்றப்பட்டவையாம். முன்னதன் ஆசிரியர் இன்னாரெனத் தெரியவில்லை. தஞ்சைவாணன் கோவையைப் பாடியவர் பொய்யாமொழிப் புலவராவார். திருச்சிற்றம்பலக் கோவையை யடுத்துச் சிறப்புடன் பயிலப்படுவது இக் கோவையே யாகும்.

### சமண காவியங்கள்

சோழருடைய ஆட்சிக் காலத்தில் சமணரால் இயற்றப்பட்ட காவியங்களும், தோத்திரப் பாடல்களும், இலக்கண நூல்களும் பல தோன்றின. காவியங்களுள் மிகப்பெரிய காவியங்களாகச் சீவகசிந்தாமணியையும் பெருங்கதையையும் குறிப்பிடலாம். சீவகசிந்தாமணி திருத்தக்கதேவரால் இயற்றப்பட்டது. இவர் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவர் எனக் கருதுகின்றனர். இவர் சோழர் குலத்தில் பிறந்தவர் என்றும், வஞ்சியென்னும் ஊரிலிருந்து பொய்யாமொழி என்பவரால் புகழப்பெற்றவர் என்றும் நச்சினார்க்கினியரின் உரையினின்றும் தெரிந்துகொள்ளுகின்றோம். இவர் தமிழிலும் வடமொழியிலும் புலமை சான்றவர்; சமண சமய நூல்களை ஐயந்திரிபறப் பயின்றவர்; சமண சமயத்தைத் தழுவி இளமையிலேயே துறவு பூண்டவர். திருத்தக்கதேவர் இந்நூலில் பலவகையான இலக்கியச் சுவைகளை அமைத்துப் பாடியுள்ளார். இந்நூற் பாடல்கள் விருத்தப்பாவால் ஆக்கப்பட்டுள்ளன; பல நயங்களையும்

பொருள் நுணுக்கங்களையும் கொண்டு மிளிர்கின்றன. இந் நூல் கூறும் கதையானது வடநாட்டுச் சார்பு உடையது எனினும் தமிழகத்துச் சமூகத்தைப் பின்னணியாக வைத்துப் பாடப்பட்டுள்ளது. எனவே, திருத்தக்கதேவர் காலத்தைப்பற்றிய செய்திகளை இந்நூலினின்றும் அறிந்துகொள்ளலாம். சோழர் காலத்திய நாகரிகம், பண்பாடு, வாழ்க்கை முறைகள் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளைக் கொண்டுள்ள ஒரு கலைக்களஞ்சியமாக விளங்குகின்றது இந் நூல். சீவகசிந்தாமணிக்கு மணநூல் என்றும் ஒரு பெயருண்டு. சீவகன் என்ற மன்னன் மகளிர் எண்மரைத் தனித்தனித் திருமணம் செய்துகொண்டதும், ஒரு பெண்ணைத் தன் தோழனுக்குத் திருமணம் செய்துவைத்ததுமான செய்திகளை இந் நூல் கூறுகின்றது. இந் நூலைச் சமணர்கள் பூசித்துப் பாராயணம் செய்வர். இந் நூலுக்கு நச்சினார்க்கினியர் சிறந்ததொரு விரிவுரை தந்துள்ளார். சீவகசிந்தாமணியில் வரும் கருத்துகளும், கதைகளும் பல தமிழ் நூல்களிலும் உரைகளிலும் ஆளப்பட்டுள்ளன. கம்பரைப் போலவே இந் நூலாசிரியரும் தமிழைப் பாராட்டியுள்ளார். அழகிய பெண்களைத் 'தமிழ் தழீஇய சாயலர்'[192] என்று திருத்தக்கதேவர் புகழ்கின்றார். கம்பர் 'வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே'[193] என்றும், அதிவீரராம பாண்டியன் 'தமிழினும் இனிய மென்மையவாகி'[194] என்றும் பாடியது திருத்தக்கதேவரின் பாராட்டை நினைவுக்குக் கொண்டு வருகின்றன.

தமிழ்மொழிக்கு வளமூட்டிய மற்றொரு சமணகாவியம் பெருங்கதை என்பது; கொங்குவேளிர் என்ற புலவரால் பாடப்பட்டது. குணாட்டியர் என்பார் பைசாச மொழியில் இயற்றிய உதயணன் கதையை இந் நூல் தமிழில் கூறுகின்றது. இதில் இடையிடையே சமண தத்துவங்கள் விளக்கப்படுகின்றன. இந் நூலின் முதற் பகுதியும் இறுதிப் பகுதியும் கிடைத்தில. இது நிலைமண்டில ஆசிரியப் பாக்களினால் ஆக்கப்பட்டுள்ளது.

இந் நூலின் ஆசிரியரான கொங்குவேளிர் என்பவர் கொங்கு நாட்டு வேளாள வகுப்பைச் சேர்ந்தவர். இவர் வாழ்ந்த ஊர் கொங்கு நாட்டில் உள்ள விசயமங்கையாகும். இவர் வாழ்ந்த காலம் இன்னும் தெளிவாகவில்லை. அடியார்க்குநல்லார் தம் சிலப்பதிகார உரையில் இந் நூலைச் சிந்தாமணி என்னும் பெயருக்கு முன்பு வைத்துக் குறிப்பிடுவதால் இந் நூலாசிரியரான

192. சீவக. 2026
193. கம்ப. ரா. பம்பை. 28.
194. கூர்ம. பு. வான. 22.

கொங்குவேளிர் திருத்தக்கதேவருக்கும் முற்பட்டவரோ என்று எண்ண வேண்டியுள்ளது.

பெருங்கதையும் சீவகசிந்தாமணியைப் போலவே ஒரு கலைக் களஞ்சியமாக விளங்குகின்றது. கொங்குவேளிர் வாழ்ந்திருந்த காலத்து வழங்கிய பழக்கவழக்கங்கள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றை இந்நூலின் வாயிலாக அறிந்துகொள்ளக்கூடும். இன்றைய நாளில் நடைபெறுவதைப்போலவே அந் நாளிலும் சிறு பிள்ளைகள் தெருவில் பெண்கள் போடும் கோலங்களைச் சிதைப்பது வழக்கம். காலை வேளையில் வாரிவிடாத தலைமயிரை விரித்துக்கொண்டு விளையாடும் அச் சிறுவரை 'முனித்தலைச் சிறார்'[195] (முனிவருடைய பரட்டிய தலைபோன்ற சிறுவர்கள்) என்று கூறுவது இந் நூலைப் பயில்வோர் முகத்தில் புன்முறுவலைத் தோற்றுவிக்காமல் இராது.

வளையாபதி, நீலகேசி என்னும் சமண காவியங்களும், குண்டலகேசி என்னும் பௌத்த காவியமும் சோழருடைய காலத்தில் இயற்றப்பட்டவையே. திவாகரம், பிங்கலந்தை என்னும் இரு நிகண்டுகளும் இக் காலத்தவையேயாம். நன்னூல், நேமிநாதம், யாப்பருங்கலம், புறப்பொருள் வெண்பாமாலை, வெண்பாப் பாட்டியல், வீரசோழியம், தண்டியலங்காரம் ஆகிய இலக்கண நூல்கள் தோன்றிச் சோழரின் ஆட்சியை அணிசெய்தன.

### பெரிய புராணம்

பெரிய புராணத்தைப் பாடியவர் சேக்கிழார் ஆவார். இவர் சென்னைக்கு அண்மையில் உள்ள குன்றத்தூரில் பிறந்தவர். அநபாயன் என்ற சோழ மன்னனுக்கு அமைச்சராகப் பணியாற்றினார். இவருடைய தமிழ்ப் புலமையையும், நுண்ணறிவையும் பாராட்டிய மன்னன் இவருக்கு 'உத்தமசோழப் பல்லவன்' என்றொரு விருதைச் சூட்டினான். சைவ நாயன்மார்கள் அறுபத்து மூவரையும், தொகையடியார்களையும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தொடங்கும் திருத்தொண்டத் தொகையில் வைத்துப் பாடினார். அவருடைய திருப்பாட்டை விரித்து நம்பியாண்டார் நம்பிகள் கலித்துறை அந்தாதி ஒன்றைப் பாடினார். அநபாய சோழனானவன் சமண காவியமான சீவகசிந்தாமணியைப் பயின்று, அதன்கண் கூறப்பெறும் சமண தத்துவத்தை மெய்யென்று பலபடப் பாராட்டிக் கொண்டிருந்தான். சேக்கிழார்

195. பெருங். 2: 2: 106-7.

அவனுக்குச் சைவத்தின் பெருமையை உணர்த்தவும், சிவத் தொண்டர்களின் பெருமையை உலகெலாம் கேட்டு வியக்கவும் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தைப் பாடி னார். இவர் சோழநாட்டு அமைச்சராக இருந்தமையால் நாடு முழுதும் சென்று நாயன்மார்களின் வாழ்க்கை வரலாறுகளைப் பற்றிய பல உண்மைகளைத் துருவியாராய்ந்து பல செய்திகளை அறிந்துகொள்ளும் வாய்ப்பைப் பெற்றிருந்தார். பெரிய புரா ணத்தைப் பாடுவதற்குச் சிதம்பரத்தில் கோயில்கொண்டுள்ள அம்பலத்தாடுவானே 'உலகெலாம்' என்று முதல் அடி எடுத்துக் கொடுத்தானாம். சேக்கிழார் இந் நூலை 4,286 செய்யுள்களில் ஓராண்டுக்கால அளவில் முடித்துச் சிதம்பரம் கோயிலில் ஆயிரச் கால் மண்டபத்தில் இதை அரங்கேற்றினார் என்று சேக்கிழார் புராணம் கூறுகின்றது. அநபாயசோழன் சேக்கிழாரைப் பசும்பட் டினால் போர்த்தி அவரையும், பொற்கலத்தில் இட்டுவித்த பெரிய புராணத்தையும் யானைமேல் ஏற்றித் தானுங் கூட இவர்ந்திருந்து, புலவர் பெருமானுக்குத் தன் இருகையாலும் கவரி வீசித் திருவீதிக் கோலங்கண்டான். இக் காட்சியைக் கண்டு களித்த மக்கள்,'மதுர இராமாயணக் கதை உரைசெய்த வான்மீக பகவானும் ஒப்பல்ல, விதிவழி பாரதம் உரைசெய்து கரைசெய்த வேதவியாதனும் ஒப்பல்ல...' என்று சேக்கிழாரைப் புகழ்ந்து பரவினார்கள்.

சேக்கிழாரைத் தன் அமைச்சராகக் கொள்ளும் பெரும் பேறு வாய்க்கப்பெற்ற அநபாயசோழன் என்பான், இரண்டாம் இராச ராசசோழனே என்பர் ஆய்வாளருள் சிலர். இவரை இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சியின் பிற்பகுதியிலும் இரண்டாம் இராச ராசன் ஆட்சியின் முற்பகுதியிலும் வாழ்ந்தவராகக் கொள்ளுவது பொருத்தமானதாகத் தெரிகின்றது.

பெரும்பற்றப்புலியூர் நம்பி என்பவர் திருவிளையாடற் புராணம் ஒன்றை இயற்றினார். அவர் பதின்மூன்றாம் நூற் றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவர் என ஆய்வாளர் கருதுகின்றனர். சிவபெருமான் மதுரையில் மேற்கொண்ட அறுபத்து நான்கு திருவிளையாடல்களை விளக்கிக் கூறுவது இந் நூல்.

சைவத் திருமுறைகளின் தொகுப்பில் ஒன்பதாம் திருமுறை யில் சேர்க்கப்பட்டுள்ள பாடல்களில் சிலவற்றைப் பாடியவர்கள் கண்டராதித்தர், கருவூர்த்தேவர் என்போர் ஆவர். கண்ட ராதித்தர், முதலாம் பராந்தக சோழனின் மகன். கருவூர்த்

தேவர் முதலாம் பராந்தகனின் நண்பர். பெருவுடையார் கோயில் இலிங்கம் நன்கு பதிவுறவில்லையென்றும், கருவூர்த் தேவர் தம் ஆன்மீக ஆற்றலைக்கொண்டு அதைப் பதிப்பித்தனர் என்றும் கூறுவர். இவர் மாபெரும் சித்தர்களில் ஒருவராக வைத்து எண்ணப்படுகின்றார். இவருடைய பெயரில் மருத்துவம், இரசவாதம், பூசை விதிகள் ஆகிய நூல்கள் பல வழங்கி வருகின்றன.

## மெய்கண்டார்

சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை முறைப்படுத்திச் சிவஞான போதம் என்னும் ஒரு நூலை இயற்றியவர், வேளாளர் குலத்தைச் சார்ந்த மெய்கண்டார் ஆவார். இவர் பதின் மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர்; குழந்தைப் பருவத்திலேயே மெய்யுணர்வு பெற்றவர் என வரலாறுகள் கூறுகின்றன. வடமொழியில் உள்ள இரெளரவ ஆகமத்தின் மொழிபெயர்ப்பு இந் நூல் எனச் சிலர் கூறுவர். வடமொழி ஆகமத்தையும், சிவஞான போதத்தையும் ஒப்புநோக்கி ஆய்பவர்கட்கு இவ் விரண்டினிடையே பல வேறுபாடுகள் புலப்படும். சிவஞான போதம் பன்னிரண்டு சூத்திரங்களால் ஆனது. அது பதி, பசு, பாசம் என்னும் சைவ சித்தாந்த முப்பொருளின் உண்மை கூறி, அவற்றுள் காணப்படும் தொடர்பை விளக்கி, இறுதியில் உயிரானது பெறவேண்டிய வீடுபேற்றையும் விளக்கிக் காட்டுகின்றது. இப் பன்னிரு சூத்திரங்களுக்கு உதாரண வெண்பாக்களையும் மெய்கண்டாரே இயற்றியுள்ளார்.

சிவஞான போதம் எழுதுவதற்கு முன்பு வாகீச முனிவர் ஞானாமிர்தம் என்னும் சைவ சித்தாந்த விளக்கம் ஒன்றைப் பாடினார். அது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களால் ஆனது. இப்போது ஞானபாதம் மட்டுந்தான் கிடைத்துள்ளது. ஏனைய மூன்றும் மறைந்துபோய் விட்டன. ஞானாமிர்தம் ஆசிரியப் பாக்களால் ஆக்கப்பட்டது; எளிதில் பொருள் காண வியலாதது. வாகீச முனிவர் திருவொற்றியூரில் வாழ்ந்திருந்தவர்.

திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் இயற்றிய 'திருவுந்தியார்' என்னும் நூலும், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் இயற்றிய திருக்களிற்றுப்பாடியார் என்னும் நூலும் சைவ சித்தாந்தத் தத்துவங்களை விளக்கும் பதினான்கு சிறந்த நூல்களுள் வைத்துப் போற்றப்படுகின்றன.

மெய்கண்டாரிடம் மெய்ப்பொருள் ஞானத்தைப் பெற்றவர் அருணந்தி சிவாசாரியார் என்பவர். அவர் அந்தணர்; வேளாளர் ஒருவரைக் குருவாகக் கொண்ட தனிச் சிறப்பைப் பெற்றவர். செய்யுள்களினால் ஒரு விரிவுரை இயற்றினார். அதற்குச் சிவஞான சித்தியார் என்று பெயர். அது சுபக்கம் என்றும், பரபக்கம் என்றும் இரு பகுதிகளாக அமைந்துள்ளது. நூல் மொத்தம் 629 செய்யுள்களால் ஆனது. அருணந்தி சிவாசாரி யார் இருபா இருபஃது என்று மற்றொரு நூலையும் இயற்றி யுள்ளார். திருவதிகையில் வாழ்ந்தவரான மனவாசகங் கடந்தார் 'உண்மை விளக்கம்' பாடினார். பதின்மூன்றாம் நூற்றாண்டில் சிதம்பரத்தின் கிழக்கெல்லையில் உள்ள கொற்ற வன்குடி என்னும் ஊரில் வாழ்ந்தவரான உமாபதி சிவாசாரியார் என்பவர் தில்லை மூவாயிரவரில் ஒருவர். அவர் எட்டுச் சித்தாந்த நூல்களை இயற்றினார். அவர் சைவ சித்தாந்த உண்மைகளை யுணர்ந்து அவற்றில் தோய்ந்திருந்தார். ஆதலின், தில்லைத் தீட்சிதர்கள் அவரைக் குலத்தினின்றும் விலக்கி ஒதுக்கி வைத்தனர் எனக் கூறுவர். சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்பவை இவர் அளித்துள்ள சித்தாந்த இலக்கியங்களாம். இந் நூல்களல்லாமல் அவர் திருத்தொண்டர் புராணம் ஒன்றையும், திருத்தொண்டர் புராண சாரம், திரு முறைகண்ட புராணம், சேக்கிழார் புராணம் ஆகியவற்றையும் பாடியுள்ளார்.

## வைணவ இலக்கியம்

சோழர் காலத்தில் வைணவச் சார்புள்ள நூல்கள் அதிக மாகத் தோன்றவில்லை. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்கள் நாதமுனிகளால் தொகுக்கப்பட்டனவாயினும், அவற்றின் அடிப்படையில் வைணவத் தத்துவ நூல்கள் தமிழில் தோன்றவில்லை. யமுனாசாரியார், யாதவப் பிரகாசர், இராமநுசாசாரியார் ஆகியவர்கள் வடமொழியில் வைணவ இலக்கியத்தை வளர்த்தார்கள். பொதுமக்கள் கேட்டுக்கேட்டு உளமுருகி நின்ற ஆழ்வார்களின் இனிய பாசுரங்களுக்குத் தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் விளக்கங்கள் எழுந்தன. எளிய மக்கள் எளிதில் அறிந்துகொள்ள வியலாத, ஆடம்பரமான, வலிந்து பொருள் காணக்கூடிய மணிப்பிரவாள நடையில் தோன்றிய இலக்கிய உரைகள் ஒருசில மக்களுக்கே பயன்பட்டன. பெரியவாச்சான்பிள்ளை, நம்பிள்ளை ஆகியவர்

கள் விளக்கங்கள் தந்துள்ளனர். அவற்றுக்கு ஈடுகள் என்று பெயர். நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்குக் குருகைப்பிரான் பிள்ளான் என்பார் எழுதிய ஆறாயிரப்படி என்னும் ஈடும், கோனேரிதாசியை என்பார் எழுதிய விளக்கமும் சிறப்பு மிக்கவை. திருவரங்கத்தமுதனார் என்பவர் தம் குரு இராமாநுசாசாரியார் மேல் இராமாநுச நூற்றந்தாதி என்னும் புகழ்மாலை ஒன்றைப் பாடியுள்ளார். தென்மொழியிலும் வடமொழியிலும் கடலனைய புலமையும், பல கலைகளில் வல்லமையும் வாய்ந்தவரான வேதாந்த தேசிகர் கி.பி. 1268-ல் பிறந்து நூறாண்டுகளுக்கு மேல் இவ்வுலகில் வாழ்ந்திருந்து கி.பி. 1369-ல் திருநாடு அலங்கரிக்கச் சென்றார். அவர் தமிழில் 24 பிரபந்தங்களையும் வடமொழியில் 84 பிரபந்தங்களையும் இயற்றினார். ஆழ்வார்கள் பாடிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் வடமொழி வேதத்துக்கு ஒப்பாகும் என்ற உண்மையை அவர் வலியுறுத்தி வந்தார். பிரபத்தி அல்லது அடைக்கலம் என்ற தத்துவத்தை அவர் நிலைநாட்டினார். வேதாந்த தேசிகர் வளர்த்த வைணவ மரபுக்கு வடகலை என்று பெயர். குரங்குக் குட்டியானது தானே தன் தாயை விடாமற் பற்றிக்கொண்டிருப்பதைப்போல நாமே இறைவனைப் பற்றிக்கொண்டிருக்கவேண்டும் என்பது அவருடைய சித்தாந்தம். அதற்கு மர்க்கட (குரங்கு) நியாயம் என்று பெயர். பூனையானது தன் குட்டிகளைத் தானே தூக்கிச்சென்று பல இடங்களிலும் வைத்துப் பாதுகாப்பதைப் போல ஆண்டவனே வந்து நம்மைக் காப்பாற்றிப் பரமபதத்தையும் சாதிப்பான் என்பது தென்கலை வைணவரின் தேற்றம். அது மார்ச்சால (பூனை) நியாயம் என வழங்கும். தேசிகரின் பாசுரங்களில் இதயத்தை ஈர்க்கும் இசையைக் காணலாம்; நெஞ்சையள்ளும் பல்வண்ணச் சொல்லழகைக் காணலாம்; சொல்லுக்குச் சொல் தொடர்ந்து வீசும் இறைவனின் திருவருள் மணத்தைக் காணலாம். வேதாந்த தேசிகர் காஞ்சிபுரத்தில் வாழ்ந்திருந்தவர் ஆதலின், அந் நகரமே வடகலையாரின் தலைநகரமாயிற்று. தென்கலை மரபு வளரும் சிறப்பைத் திருவரங்கம் அடைந்து நின்றது.

வேதாந்த தேசிகரின் கருத்துகள் சில இராமாநுசாசாரியாரின் கருத்துகளுடன் முரண்படுகின்றன. பகவானிடம் ஈடுபாடு கொண்டவர்களுக்குக் குல வேறுபாடுகள் கிடையா என்பது இராமாநுசரின் கொள்கை. ஆனால், ஒவ்வோர் உயிரும் இறுதியில் பிராமணப் பிறப்பை எடுத்த பிறகுதான் பரமபதம் எய்தும் என்பது தேசிகரின் கொள்கையாகும். எனினும், தேசிகர் பெரியவாச்சான்பிள்ளை என்பவரால் தெளிவுறுத்தப் பெற்றார்

என்றும், அதன் பிறகு தாழ்ந்த குலத்தவரான திருப்பாணாழ் வார்மேல் பிரபந்தம் ஒன்று பாடினார் என்றும் வைணவ வரலாறு ஒன்று கூறுகின்றது. வடகலை-தென்கலைப் பூசல்களினால் எழுந்த கற்பனைக் கதைகளில் இஃதும் ஒன்றுபோலும்.

**உரையாசிரியர்கள்**

தொல்காப்பியத்துக்கு உரைகண்ட இளம்பூரணர், சேனா வரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் ஆகியவர்கள் சோழர் காலத்து விளங்கியவர்களாவர். பேரா சிரியர் திருச்சிற்றம்பலக் கோவையாருக்கும் உரை இயற்றியுள் ளார். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்துக்கு இணையற்ற உரையொன்றை எழுதித் தந்துள்ளார். மறைந்தொழிந்த பல தமிழ் நூல்கள், இசைத் தமிழ் நாடகத் தமிழைப் பற்றியவை இவர் உரையில் குறிப்பிடப்படுகின்றன. திருக்குறளுக்கு உரை வகுத்த பலருள் தலையாயவர் என்று கொள்ளப்படும் பரிமேலழ கர் இக் காலத்தைச் சேர்ந்தவரேயாவார். இவர் பரிபாடலுக்கும் உரை ஒன்று கண்டுள்ளார்.

சோழர்களுடைய காலம் தமிழகத்தின் வரலாற்றில் ஒரு பொற்காலமாக எண்ணப்பட வேண்டும் என்பதில் ஐயமில்லை. குடியுயர்விலும், இறைப்பணியிலும் கண்ணுங்கருத்துமாக இருந்து சோழ மன்னர்கள் ஆக்க வேலைகள் பல ஆற்றியுள்ளனர். மொழி வளர்ச்சியும் இலக்கிய வளர்ச்சியும் என்றுமே இல்லாத பல படிகள் ஏற்றமுற்றிருந்தன; தமிழுக்குப் பொன்றாப் புகழையும், பொலிவையும் தேடித் தந்த மாபெரும் இலக்கியப் படைப்புகள் சோழர் காலத்தில் தோன்றியுள்ளன.

# 15. பாண்டியரின் ஏற்றமும் வீழ்ச்சியும்

வேள்விக்குடிச் செப்பேடுகளையும், சீவரமங்கலத்துச் செப்பேடுகளையும் வழங்கிய பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகன் பேராற்றல் வாய்ந்தவன்; பாண்டி நாட்டுக்கு ஏற்றம் கண்டவன்; பல மன்னர்களையும் போரில் புறங்கண்டு தன் படைபலத்தின் சிறப்பை நாடறிய விட்டவன். குறுநில மன்னரை ஒடுக்குவதற்காகவே 'களக்குடி நாட்டுக் களக்குடியான கரவந்தபுரம்' என்ற இடத்தில் கோட்டை ஒன்றைக் கட்டி, அதில் தண்டு நிறுத்தியிருந்தான்.[1]

பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகன் தன் முன்னோர் சென்ற வழியினின்றும் சில வகைகளில் விலகிச் சென்றான். அவர்கள் அனைவரும் சைவம் வளர்த்தவர்கள்; பராந்தகன் வைணவச் சார்புடையவன். அவன் காலத்தில் பாண்டி நாட்டில் பெரியாழ்வாரும், ஆண்டாள் நாச்சியாரும் வாழ்ந்து வந்தனர். அவர்களிடத்தில் பராந்தகனுக்குப் பற்றுதல் ஏற்பட்டது போலும். வேள்விக்குடிச் செப்பேடுகளின் இறுதியில் வைணவ சமய சுலோகங்கள் காணப்படுகின்றன. மற்றும் இப் பாண்டியன் மேற்கொண்ட விருதுப் பெயர்கள் அத்தனையும் வடமொழிப் பெயர்களாகவே உள்ளன. சீவரன், சீமனோகரன், சினச்சோழன், வீதகன்மஷன், விநயவிச்ருதன், விக்கிரம பாரகன், வீர புரோகன், மானிய சாரனன், மநூபமன், மர்த்திகவீரன், கிரிஸ்திரன், கீதகின்னரன், கிருபாலயன், கண்டக நிஷ்டூரன், பாபபீரு, குணக்ராகியன், கூடநிர்ணயன் என்பன அவற்றுள் சிலவாம். தமிழ்மொழியின் காவலர்களாக இருந்துவந்த பாண்டிய மன்னரின் பரம்பரை வடமொழிக்கு ஏற்றம் கொடுத்ததையும், அம்மொழிப் பெயர்களை மன்னன் விருப்பத்துடன் ஏற்றுக் கொண்டதையும் அவனுடைய செப்பேடுகள் தெரிவிக்கின்றன.

நெடுஞ்சடையன் பராக்கிரமனை யடுத்து அவன் மகன் இரண்டாம் இராசசிம்மன் அரசுகட்டில் ஏறினான். இவன் கி.பி.

1. S.I.I. VII. 431.

790-792ஆம் ஆண்டுகளில் பாண்டிநாட்டுக் காவலனாக இருந்தான். இவன் மகன் வரகுண மகாராசன் என்பவன். சோழநாடு முழுவதிலும் வரகுணனின் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. எனவே, அவன் சோழநாடு முழுவதையும் வென்று தன் குடைக்கீழ்க் கொண்டுவந்தான் என்று ஊகிக்கலாம்.




வரகுணன் சைவப் பற்றுடையவன்; மணிவாசகரின் வாழ்க்கையுடன் தொடர்புகொண்டிருந்த பெருமை வாய்ந்தவன்; அவருடைய பாடல்களில் தன் பெயரும் இடம்பெறும் பேற்றைப் பெற்றவன். அவன் நாற்பத்து மூன்று ஆண்டுகள் (கி.பி. 792–835)

அரசாண்டிருந்தான். அவன், வரலாற்றில் முதல் வரகுணன் என்று குறிப்பிடப்படுகின்றான்.

முதல் வரகுணனுக்குப் பிறகு அவன் மகன் சீமாற சீவல்லபன் அரியணை ஏறினான் (கி. பி. 835). அவன் பல்லவர், சோழர், சேரர், கங்கர் உள்ளிட்ட பல மன்னர்களையும் வென்று புறங் கண்டான் என்று அவனைச் சின்னமனூர்ச் செப்பேடுகள் பாராட்டுகின்றன. சீவல்லபன் ஈழத்தின்மேல் படையெடுத்துச் சென்று ஆங்குப் பல நகரங்களை அழித்தான் என்றும், பொன்னாலான புத்தர் சிலைகளையும் பொன்னையும் மணியை யும் கவர்ந்துகொண்டு சிங்களத்தை வறுமைக்குள் ஆழ்த்தினான் என்றும் இலங்கை வரலாறான மகாவமிசம் கூறுகின்றது.

சீமாற சீவல்லபன் மூன்றாம் நந்திவர்ம பல்லவனுடன் கி.பி. 854-ல் தெள்ளாற்றில் பொருது தோற்றான் என்று அறிகின் றோம். நந்திவர்மன் கண்ட வெற்றி, 'தெள்ளாறெறிந்த' என்ற அழியா விருது ஒன்றை அவனுக்கு வழங்கியது. இப் போரில் பாண் டியன் சீவல்லபன் தன் பெருமையையும் தொண்டைமண்டலத் தையும் ஒருங்கே இழந்தான் என அறிகின்றோம். சீவல்லபன் கும்பகோணத்துக்கு அண்மையில் உள்ள அரிசிற்கரை என்னும் ஊரில் நிருபதுங்கவர்ம பல்லவனிடம் தோல்வியுற்றுச் சோழ நாட் டின் வடபகுதியை இழந்துவிட்டான். அவன் பல பெருந் தொல்லைகட்கு உட்பட்டு, பல போர்களை வென்றும், பலவற் றில் தோற்றும், நாட்டை ஒருவாறு கட்டிக் காத்துத் தன் மகன் இரண்டாம் வரகுணவர்மனுக்கு வைத்துவிட்டுத் தன் கண்களை மூடினான் (கி. பி. 862).

வரகுணவர்மனுக்குச் சடையவர்மன் என்றும் ஒரு பெயருண்டு. அவன் அரசியல் சூழ்ச்சியும், காலங்கருதி வினையாற்றும் ஆற்றலும் வாய்ந்தவன். நிருபதுங்க பல்லவனுடன் நட்புறவு பூண்டு வடபுலங்களினின்றும் புகைந்து வரக்கூடிய பகைக்குத் தடையிட்டான். ஆனால், நிருபதுங்கன் மகன் அபராசிதன் தொண்டைமண்டலத்தையும், சோழ நாட்டையும் பல்லவப் பேர ரசுக்கு மீட்டுக்கொள்ள முனைந்தான். ஆகவே, அவன் சோழ நாட்டின்மேல் படையெடுத்தான். சோழ நாட்டை ஆண்டு வந்த விசயாலயனாலும், அவன் மகன் ஆதித்தனாலும் அவனை எதிர்த்து நின்று வெல்ல வியலவில்லை. போர் நடைபெற்ற இட மான இடவை என்ற நகரும் அதைச் சூழ்ந்திருத்த இடங்களும் பல்லவர் வசமாயின. வெற்றி முரசு கொட்டிய அபராசிதன் தொடர்ந்து பாண்டியன்மேல் பாய்ந்தான். ஆதித்த சோழனும்

பிருதிவிகங்கனும் அவனுக்குத் துணை நின்றனர். திருப்புறம்பயம் என்னும் இடத்தில் நடந்த போரில் பிருதிவிகங்கன் உயிர் துறந்தான். பாண்டியன் தோல்வியுற்றுப் பின்னடைந்தான். அவனுடைய ஆட்சிக்குட்பட்டிருந்த சோழ நாட்டின் சில பகுதிகள், அவனுடைய பிடியினின்றும் நழுவிவிட்டன.

வரகுணனுக்கு ஆண் மகவு இல்லைபோலும். அவனுக்குப்பின் அவன் தம்பி பராந்தக பாண்டியன் மணிமுடி சூட்டிக்கொண்டான். இவன் சடையவர்மன் என்ற பட்டப் பெயரைப் பூண்டான். இவனுக்கு வீரநாராயணன் என்று மற்றொரு பட்டப் பெயரும் உண்டு. இவன் மனைவி சேரநாட்டு இளவரசி வானவன் மாதேவி என்பாள். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சேரமாதேவி என்னும் ஊர் இவ் வரசியின் பேரால் ஏற்பட்டதாகும். பராந்தக பாண்டியன் பெண்ணாகடத்தை அழித்தான் என்றும், கொங்கர்களை வென்றான் என்றும், கோயில்களுக்கும், அந்தணருக்கும், சமணப் பள்ளிகட்கும் கொடைகள் வழங்கினான் என்றும் சின்னமனூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன.

சடையவர்மன் பராந்தகன் மகன் மூன்றாம் இராசசிம்மன் தன் தந்தையின் காலத்துக்குப் பிறகு பாண்டி நாட்டின் அரசு கட்டிலை அணிசெய்தான் (கி.பி. 900). அம் மன்னன்றான் சின்னமனூர்ச் செப்புப் பட்டயங்கள் வழங்கியவன். அவன் தன் பகைவர் பலர்மேல் வெற்றி கண்டவன் என்று அச் செப்பேடுகள் கூறுகின்றன. ஆனால், அவன் கி.பி. 910-ல் முதலாம் பராந்தக சோழனிடம் தோல்வியுற்றான் என்று சோழரின் கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன. மதுரை கொண்ட கோப்பரகேசரி என்று முதலாம் பராந்தகன் விருதுப் பெயர் ஒன்றை ஏற்றான். மூன்றாம் இராசசிம்மன் தோல்வியுற்றுச் சிங்கள நாட்டில் அடைக்கலம் புகுந்த செய்தியும், அடுத்து அங்கிருந்து அவன் தன் தாயின் பிறந்த நாடாகிய சேரநாட்டுக்குச் சென்று படைத்துணை தேடியதும் சோழரைப்பற்றிய வரலாற்றுப் பகுதியில் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டன. சேர நாட்டுக்குச் சென்ற இராசசிம்மனைப் பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை.

இராசசிம்மன் மகன் வீரபாண்டியன் (கி. பி. 946-966) பாண்டி நாட்டுக்கு ஏற்றம் புரிந்தவர்களுள் ஒருவனாவான். பராந்தக சோழன் ஆட்சியில் சோழப் பேரரசின் ஆட்சிக்குட்பட்டிருந்த பாண்டி நாட்டுப் பகுதிகளை அவன் மீட்டுக் கொண்டான். அவன் 'சோழன் தலைகொண்ட கோவீர பாண்டியன்' என்று தன்னைப் பாராட்டிக் கொண்டுள்ளான்.[2]

2. S.I.I. V. 455.

அவன் கொண்டது சோழ இளவரசர்களுள் ஒருவனது தலையே போலும். முதலாம் இராசராசனின் தமையனாகிய ஆதித்த கரிகாலன் வீரபாண்டியனை வென்று அவன் முடியைக் கொண்டிருக்க வேண்டும் என்று சோழர்களின் கல்வெட்டுகளிலிருந்து விளங்குகின்றது (கி. பி 966). வீரபாண்டியன் கி. பி. 966-ல் போரில் உயிர் துறந்தான். அவனுக்குப் பிறகு பல பாண்டியர்கள் அரசாண்டு வந்துள்ளனர். அவர்களைப் பற்றிய தெளிவான செய்திகள் ஏதும் கிடைக்கவில்லை. பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் அவர்கள் தம் ஆக்கத்தில் சிறுத்துப் புகழ் மங்கிச் சிற்றரசர்களாகக் காலந்தள்ளி வந்தனர். அவர்கள் சோழர்களின் கோன்மைக்குக் கீழ்ப்பட்டுத்திறை செலுத்தி வந்தனர்.

முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் கி. பி. 1190-ல் முடிசூட்டிக் கொண்டான். அவன் சோழன் மூன்றாம் குலோத்துங்கனுடன் முரண்பட்டான்;சோழனிடம் தான் கொண்டிருந்த பகைமையை மேலும் மேலும் வளர்த்துக்கொண்டான். சோழன் வெகுண்டு குலசேகரன்மேல் படையெடுத்தான். பாண்டியன் தோற்றோடிவிட்டான். சோழன் மதுரையில் நுழைந்து பல அரண்மனைகளை இடித்துத் தள்ளி அங்குச் சோழ பாண்டியன் என்ற பட்டப் பெயருடன் வீராபிடேகம் செய்து கொண்டான்.[3] எனினும், குலோத்துங்கன் சில ஆண்டுகளுக்குப் பின் பாண்டி நாட்டு அரசுரிமையை மீளவும் குலசேகரனுக்கே வழங்கிவிட்டான்.

### மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி. பி. 1219-51)

குலசேகரனுக்குப்பின்பு முதல்மாறவர்மன் சுந்தரபாண்டியன் பட்டமேற்றான். இவன் குலசேகரனின் தம்பியாக இருக்கலாம் என்று சில ஆய்வாளர் ஊகிக்கின்றனர். சோழநாட்டில் மூன்றாம் குலோத்துங்கன் காலமான பிறகு, அவன் மகன் மூன்றாம் இராசராசன் சோழ அரியணை ஏறினான். மாறவர்மன் சுந்தர பாண்டியன் சோழரின்மேல் படையெடுத்து (கி.பி.1219) மூன்றாம் இராசராசனை வென்று அவனுடைய நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். பிறகு சுந்தரபாண்டியன் பழையாறையில் வீராபிடேகம் செய்துகொண்டு, தில்லைச் சிற்றம்பலவனைத் தொழுது தன்னாடு திரும்பினான். திரும்பும் வழியில் பொன்னமராவதியில் தங்கியிருந்தபோது இராசராச சோழனைக் கண்டு அவனுக்கே சோழநாட்டு அரியணையை மீண்டும் வழங்கி அவ

3. Ep. Rep. 554/1904.

னிடம் திறைகொண்டான். 'சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டிய தேவர்' என்று ஒரு விருதையும் அவன் இணைத்துக் கொண்டான்.[4]

மூன்றாம் இராசராசன் பாண்டியனுடன் மீண்டும் பகை பூண்டு திறை செலுத்திவந்ததை நிறுத்திவிட்டான். சுந்தர பாண்டியன் இராசராசன்மேல் படையெடுத்து (கி.பி.1231) அவனை நாட்டை விட்டே விரட்டினான்; இராசராசன் கோப் பெருஞ்சிங்கனால் பிடிபட்டுச் சேந்தமங்கலத்துக் கோட்டையில் சிறைப்பட்டான்.

சுந்தரபாண்டியனை யடுத்து இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி.1239-51) பாண்டிய நாட்டை யரசாண்டான். அவன் மூன்றாம் இராசராசேந்திரனிடம் தோல்வியுண்டான். போசள மன்னன் வீரசோமேசுரன் இரா்சேந்திரனுடன் போரிட்டு அவனை வென்று பாண்டி நாட்டு ஆட்சியைச் சுந்தரபாண்டிய னிடம் ஒப்படைத்தான்.

இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் ஆட்சி கி.பி. 1251-ல் முடிவுற்றது. அவனுக்குப் பின் முதலாம் சடைய வர்மன் சுந்தரபாண்டியன் அரியணை ஏறினான்.

### சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1251-1268)

பாண்டிய மன்னருள் பேரிலும் புகழிலும் முன்னணியில் நின்றவன் சடையவர்மன் சுந்தரபாண்டியன் ஆவான். அவன் மாபெரும் வீரன்; மங்கிக் கிடந்த பாண்டி நாட்டு ஒளியைத் தூண்டிவிட்டுப் பேரொளியாக வளர்த்தவன். அவனுடைய ஆட்சியில் பாண்டிநாட்டு ஆதிக்கம் சோழ நாட்டைக் கடந்து, கேரளம், ஆந்திரம், கொங்கு நாடு ஆகிய நாடுகளிலும் பரந்து நின்றது. சடையவர்மன் முதன்முதல் சேர மன்னன் உதயமார்த் தாண்டனை வென்று தன் வெற்றி வாழ்க்கையைத் தொடங் கினான்; மலை நாட்டை அழித்தான். கண்ணனூரில் தங்கி ஆட்சி புரிந்துவந்த போசளர் இவனுக்கு அடிபணிந்தனர்; காவிரி நாட்டைக் கைவிட்டு ஓடினர்; போசள மன்னன் சோமேசுரன் வீரமரணம் எய்தினான் (கி.பி. 1262). பாண்டியன் சோழ நாட்டைக் குன்ற வைத்துக் கோப்பெருஞ்சிங்கனுடைய சேந்த மங்கலத்தை நோக்கித் தன் படைகளைச் செலுத்தினான். காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன் அவனுக்குப் பணிந்துவந்து திறை செலுத்த உடன்பட்டும், சடையவர்மன் அவனைப் போரில்

4. Ep. Rep. 322/27-28.

வென்று அவன் நாட்டைக் கைப்பற்றினான். எனினும், அவன் விரிந்த இதயத்தினனாய்க் கோப்பெருஞ்சிங்கனுக்கே மணி முடியை வழங்கி அவனுடைய நட்பைப் பெற்றான். காடவர் கோனும் பாண்டியரின்கீழ் ஒரு சிற்றரசனாக ஆட்சி புரிந்துவர ஒப்புக்கொண்டான்.

சடையவர்மன், கோப்பெருஞ்சிங்கன்மேல் தான் கொண்ட வெற்றியைச் சிதம்பரத்தில் கொண்டாடி நடராசாவுக்குத் தன் வணக்கத்தைச் செலுத்திக்கொண்டான். அங்கிருந்து அவன் திருவரங்கம் சென்று துலாபாரங்கள் செய்தான். அடுத்துச் சடையவர்மனுடைய நோக்கம் சிங்களத்தின்மேல் பாய்ந்தது. அவன் இலங்கையின்மேல் படையெடுத்துக் கி. பி. 1254-56 ஆண்டுகளில் அத் தீவின் வடபகுதியைக் கைப்பற்றினான். தான் அரியணை ஏறிய ஆறாண்டுக்குள் பாண்டிநாட்டு மேலாட்சியைச் சேரர், போசளர், சோழர், காடவர், சிங்களர் ஆகியவர்கள் ஏற்றுக்கொள்ளும் அளவுக்குச் சடையவர்மனின் படைபலச் செல்வாக்கானது அவனை உயர்த்திக்கொண்டே போயிற்று. அவனுடைய ஆட்சியானது தெற்கில் திருவிதாங்கூரிலிருந்து வடக்கில் தென்னார்க்காடு மாவட்டம் வரையில் பரவியிருந்தது. சடையவர்மனின் திக்கு விசயம் ஓயவில்லை. அவன் தெலுங்குச் சோடமன்னன் கண்டகோபாலன்மேல் அணிவகுத்துச் சென்று அவனை ஒரு போரில் முறியடித்துக் கொன்றான். அடுத்துக் காக தீயன் கணபதியை வென்று காஞ்சிபுரத்தைக் கைப்பற்றினான். தொடர்ந்து சடையவர்மன் நெல்லூரையும் கைப்பற்றி அங்கு வீராபிடேகம்செய்துகொண்டு வெற்றிவிழாக்கொண்டாடினான்.

சடையவர்மன் சுந்தரபாண்டியன் அரசியல் திறன் வாய்க்கப் பெற்றவன்; அரைகுறையாக எதையும் விட்டு வைப்பவனல்லன். பொன்னி நாட்டைத் தன் கன்னி நாட்டுடன் இணைத்துக் கொண்டான். பல வெற்றி விருதுகளையும் அவன் அவ்வப்போது தன் பெயருடன் இணைத்துக்கொண்டான். சமஸ்தஜகதா தாரன், எம் மண்டலமும் கொண்டருளிய, ஹேமாச்சாதனா ராஜா, மகாராசாதிராச-ஸ்ரீபரமேசுவர, மரகதப் பிருதிவி பிரித் புரங் கொண்டான், எல்லாந் தலையானான் என்பன அவன், பூண்டு மகிழ்ந்த விருதுகள். அவன் திருவரங்கத்திலும் முடிசூட்டு விழா ஒன்றைக் கொண்டாடினான். சிதம்பரம், திருவரங்கம் கோயில்களுக்குப் பொன்வேய்ந்தான். சிதம்பரத்தில் பொன்னம் பலம் ஒன்று கட்டினான். திருவரங்கம் கோயிலுக்குப் பதினெண் நூறாயிரம் பொன் தானமாகக் கொடுத்தான். அவன் வெற்றி வீரனாகவும் மாபெரும் வள்ளலாகவும் திகழ்ந்தான்.

சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் அவனுடன் இருந்து, வேறு பாண்டியர் நால்வர் அரசாண்டு வந்தனர் என்று மார்க்கோ போலோ (Marco Polo) என்ற வழிப்போக்கர் கூறுகின்றார். ஆனால், வாசாப் (Wassaf) என்ற முஸ்லிம் வரலாற்று ஆசிரியர், மூவர் பாண்டியர்கள் தனித்தனியாகவும் சுதந்தரமாகவும் ஆண்டு வந்தனர் என்று எழுதுகின்றார். ஆனால், பாண்டி நாடானது ஐந்து மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்ததற்கு இலக்கியச் சான்றுகளோ, கல்வெட்டுச் சான்றுகளோ கிடையா. ஒரே சமயத்தில் ஐவர் மன்னர்கள் ஒரு நாட்டை ஆண்டனர் என்பது இயலாத செயலாகும். சடையவர்மன் சுந்தரபாண்டியனின் ஆட்சியில் சில இளவரசரும் பங்கு கொண்டனர் என்று ஊகிக்க வேண்டியுள்ளது. அவர்களுள் சடையவர்மன் வீர பாண்டியன் நாட்டாட்சியில் மிகவும் பெருமளவு ஈடுபாடு கொண்டிருந்தனன் என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள.

## மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1268-1310 )

சடையவர்மன் சுந்தரபாண்டியனை யடுத்து மாறவர்மன் குலசேகர பாண்டியன் முடிசூட்டிக் கொண்டான். பாண்டியப் பேரரசின் அரசியலில் இரண்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன் விக்கிரம பாண்டியன், மூன்றாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் ஆகிய இளவரசர்கள் மூவர் பங்கு கொண்டனர். அவர்களுள் மாறவர்மன் விக்கிரமனும், சடையவர்மன் சுந்தரபாண்டியனும் குலசேகரனின் மக்கள். மாறவர்மன் குலசேகரன் 'எம் மண்டலமும் கொண்டருளிய', 'கோனேரின்மை கொண்டான்', 'கொல்லங் கொண்டான்' என்ற விருதுகளை ஏற்றான். கேரளம், கொங்குநாடு, சோழமண்டலம், தொண்டை மண்டலம், சிங்களம் ஆகிய நாடுகளை அவன் வென்றான் என்று அவன் காலத்திய கல்வெட்டுகள் கூறுகின்றன. அவன் மூன்றாம் இராசேந்திரன் மேலும், போசள இராமநாதன் மேலும் வெற்றி கொண்டான் (கி.பி. 1279); அவர்களுடைய நாடுகளைப் பாண்டி நாட்டுடன் இணைத்துக்கொண்டான். சிங்களத்தில் அரசியற் கலகம் ஒன்று ஏற்பட்டது (கி.பி. 1283-1302). குலசேகரன் அந்த அரிய வாய்ப்பை நழுவவிடவில்லை. அவனுடைய படைத்தலைவன் ஆரிய சக்கரவர்த்தி என்பான் சிங்களத்தின்மேல் படை எடுத்தான் (கி.பி. 1284). அவன் புத்தரின் பல் சின்னம் ஒன்றைக் கைப்பற்றிக் கொண்டு மீண்டான். மூன்றாம் பராக்கிரமபாகு (கி.பி. 1302–1310) என்னும் சிங்கள வேந்தன் மதுரைக்கு வந்து பாண்டியனுக்கு அடிபணிந்து அப் புனித சின்னத்தை மீட்டுக் கொண்டு சென்றான்.

வெனிஸ் நாட்டு வழிப்போக்கனான மார்க்கோ போலோ பாண்டி நாட்டுக்கு வந்து சுற்றுப்பயணம் செய்து தன் நூலில் அதைப்பற்றிய குறிப்புகளைக் கொடுத்துள்ளான். பாண்டிய நாடு இந்தியாவிலேயே மிகச் சிறந்த நாடு என்றும், அது பண்பும் மாண்பும் வாய்ந்ததென்றும், அந்நாட்டை ஐந்து பாண்டியர்கள் அரசாண்டு வந்தனர் என்றும், அவர்களுள் ஒருவன் 'சொண்டர் பாண்டிடாவர் (சுந்தரபாண்டி தேவர்) என்பவன் முடிசூடிய மன்னன் என்றும், பாண்டி நாட்டில் மிகப் பெரிய, வனப்பு மிக்க முத்துகள் கிடைத்தன என்றும், தாமிரவருணியின் கூடல் முகத்தில் இருக்கும் காயல்பட்டினம் மிகப் பெரிய நகரம் என்றும், ஹார்மோஸ், கிரீஸ், ஏடன், அரேபியா ஆகிய நாடுகளிலிருந்து குதிரைகளையும், வேறு பல பண்டங்களையும் ஏற்றிக்கொண்டு வந்த மரக்கலங்கள் அனைத்தும் காயலுக்கு வந்துதான் போகின்றன என்றும், காயல்பட்டினத்தில் வாணிகம் செழித்தோங்கி நடைபெற்று வந்ததாயும், பாண்டிய மன்னனிடம் அளவுகடந்த பொன்னும் மணியும் குவிந்து கிடந்தன என்றும், அவன் நீதியுடனும் நேர்மையுடனும் ஆட்சிபுரிந்து வந்தான் என்றும், அவன் அயல்நாட்டு வணிகரிடம் மிகுதியும் கண்ணோட்டம் உடையவன் என்றும், மார்க்கோ போலோவின் குறிப்புகள் தெரிவிக்கின்றன. மற்றும் பாண்டிய மன்னனுக்கு ஐந்நூறு மனைவியர் இருந்தனர் என்றும், குடிமக்கள் ஆடை இன்றியே உலவி வந்தனர் என்றும், உடன்கட்டை ஏறும் வழக்கம் எங்கும் காணப்பட்டதென்றும், சகுனங்களிலும் சோதிடத்திலும் மக்களுக்கு நம்பிக்கை இருந்து வந்ததென்றும், கோயில்களில் தேவரடியார்கள் தொண்டு புரிந்து வந்தனர் என்றும் மார்க்கோ போலோ மேலும் கூறுகின்றான். வாசாப் என்பார் தரும் செய்திகள் மிகவும் சிறப்பானவை. அவர் கூறுவதாவது : 'மலைகள் போன்ற மிகப் பெருங் கப்பல்கள் கடல்மேல் காற்றெனும் சிறகுகளை விரித்து, பாண்டி நாட்டுக்கு வந்துகொண்டே இருக்கின்றன. இவை சீனம், கான்டன், இந்து, சிந்து ஆகிய இடங்களிலிருந்து அரிய பண்டங்களை ஏற்றிக் கொண்டு வந்து குவிக்கின்றன; பாரசீக வளைகுடாவின்மேல் உள்ள தீவுகள் துருக்கி, ஈராக்கு, குராசான், ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றில் காணப்படும் செல்வங்கள், பாண்டி நாட்டினின்றும் பெற்றவையாம். காலேஸ் தேவருடைய (மாறவர்மன் குலசேகரன்) ஆட்சியும், நாட்டு வளமும் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக வளர்ந்து வந்துள்ளன. இவ்வாட்சிக் காலத்தில் அந்நிய நாட்டு மன்னரின் படையெடுப்பு ஒன்றேனும் நிகழ்ந்ததில்லை. பாண்டிய மன்னனும் ஒருமுறையேனும் நோய்வாய்ப்பட்டிலன். மதுரை அரசு பண்டாரத்தில் ஆயிரத்து இருநூறு கோடிப் பொன் சேர்ப்புக் கட்டி வைக்கப்பட்டுள்ளது. அஃதன்றி முத்து, மாணிக்

கம், நீலம், பச்சை போன்ற நவரத்தினங்கள் அங்குக் குவிந்து கிடக்கின்றன. மேலும் விளக்குவதற்குச் சொற்கள் இல...'

பாண்டி மன்னனின் அமைச்சரவையில் அரபு வணிகர்கள் அமர்ந்திருந்தனர் என்றும், சுங்க அமைச்சு அப்துர் ரஹிமான் என்ற இஸ்லாமியர் ஒருவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்ததென்றும் முஸ்லிம் வரலாறுகள் கூறுகின்றன.

### பாண்டிய உள்நாட்டுப் போர்

மாறவர்மன் குலசேகரனுக்கு இரு மக்கள் இருந்தனர். ஒருவன் சடையவர்மன் சுந்தரபாண்டியன் மணந்த மனைவிக்குப் பிறந்தவன்; மற்றவன் சடையவர்மன் வீரபாண்டிய மன்னனுடைய வைப்பு மனைவிக்குப் பிறந்தவன். மாறவர்மன் பட்டத்துக்குரிய சுந்தரபாண்டியனைப் புறக்கணித்து வீரபாண்டியனுக்கு இளவரசு பட்டம் சூட்டினான் (கி.பி. 1296). சுந்தர பாண்டியன் இந்த அநீதியைப் பொறானாய் வெகுண்டெழுந்து, தன் தந்தையைக் கொன்று தானே அரியணை ஏறினான் (கி.பி. 1310). கைக் கெட்டியது வாய்க்கெட்டாத வாய்ப்பைப் பெற்ற வீரபாண்டியன் சுந்தரபாண்டியன்மேல் போர் தொடுத்தான். சுந்தரபாண்டியன் மதுரையைக் கைவிட்டு ஓடிவிட்டான். அச்சமயம் டில்லி சுல்தான் அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக்காபூர் ஒரு பெரும்படையுடன் தெற்கு நோக்கி வந்துகொண்டிருந்தான். சுந்தரபாண்டியன் அவனை அண்டிப் படைத்துணை யளிக்கும்படி விண்ணப்பித்துக் கொண்டான். மாலிக்காபூர் எந்தவிதமான உதவியை அவனுக்கு அளித்தான் என்பது தெளிவாகவில்லை; அன்றிச் சுந்தர பாண்டியனை மீண்டும் அரியணையேற்றி அவனுக்குப் பாதுகாப்பு அணி ஒன்றை நிறுத்திச் சென்றதாகவும் தெரியவில்லை. மாலிக்காபூர் மதுரையைத் தாக்கினான். வீரபாண்டியன் மதுரையைவிட்டு வெளியேறிப் பல இடங்களுக்கும் ஓடி ஓடி ஒளிந்து மாலிக்காபூருக்குத் தொல்லை கொடுத்தான். நாடு முழுவதுமே மிகப் பெரியதொரு போர்க்களமாக மாறிவிட்டது. பல இடங்களிலும், பல முனைகளிலும் வீரபாண்டியன் மாலிக்காபூரைக் கடும் போர்களில் கலக்கி வந்தான். கோட்டைக்குள் நுழைந்து ஒளிந்துகொள்ளாமல் பல இடங்களிலும் மாறி மாறித் தோன்றி டில்லிப் படைகளை அலைக்கழித்து வந்தது, வீரபாண்டியனின் போர்க்கலைப் பயிற்சியையும், நுண்ணறிவையையும் எடுத்துக்காட்டுகிறது. மாலிக்காபூர் உறையூருக்கு அண்மையிலிருந்த வீரபாண்டியனின் தலைநகரான 'பீர்தூல்' என்ற இடத்தை நோக்கித் தன் படைகளைச் செலுத்தினான். வீரபாண்டியனின் படைகளில் பணிபுரிந்து வந்த 20,000 முஸ்லிம் படைவீரர்கள்

தக்க சமயத்தில் தம் கடமையையும் நன்றியையும் மறந்தவர்களாய் மாலிக்காபூர் படையினருடன் சேர்ந்துகொண்டனர்; வீரபாண்டியன் ஊரைவிட்டே ஓடிவிட்டான். நகரம் மாலிக்காபூரின் கைக்குள் வீழ்ந்தது. அடைமழை வேறு பெயத் தொடங்கிற்று. நாடெங்கும் வெள்ளக்காடாக மாறிற்று. மேற்கொண்டு போர் நடவடிக்கைகளில் ஈடுபட இயலாதவனாய் மாலிக்காபூர் கண்ணனூரை நோக்கி விரைந்தான். அங்கு வீரபாண்டியன் காணப்பட்டான் என அவனுக்குச் செய்திகள் எட்டின. வழியில் பொன்னும் மணியும் ஏற்றிக்கொண்டு சென்ற பாண்டிநாட்டு யானைகள் நூற்றிருபதைக் கைப்பற்றிக்கொண்டான். வீரபாண்டியன் காடுகளில் ஒளிந்து ஒளிந்து வெளிப்பட்டான். தன் கைகளிலிருந்து நழுவி நழுவிச் சென்ற வீரபாண்டியனைத் துரத்திக் கொண்டு மாலிக்காபூர் சிதம்பரம் வந்தடைந்தான். ஆங்குப் பொன்னம்பலத்தை அடியுடன் பேர்த்தெடுத்துக் கொண்டு கோயிலுக்கு எரியூட்டினான்; ஊருக்கும் தீயிட்டான். உடைமைகளைச் சூறையாடினான்; ஆண்களையும்,பெண்களையும்,குழந்தைகளையும் கொன்று குவித்து வெறியாட்டயர்ந்தான். சிதம்பரத்தில் இருநூற்றைம்பது யானைகளைக் கைப்பற்றினான். கொள்ளையடித்த பொன்னையும் மணியையும் யானைகளின்மேல் ஏற்றிக் கொண்டான். மீண்டும் பீர்தூலை நோக்கித் தன் படையைச் செலுத்தினான். ஆங்காங்குத் தன் கண்ணில்பட்ட கோயில்கள் அத்தனையும் இடித்துத் தரைமட்டமாக்கினான் (கி.பி. 1311). திருவரங்கத்தையும் அவன் விட்டு வைத்தானல்லன். அரங்கநாதர் கோயிலை இடித்துப் பாழாக்கினான்; உடைமைகளைச் சூறையாடினான். அடுத்து மதுரையின்மேல் பாய்ந்தான். அவன் தாக்குதலை முன்னரே யறிந்த சுந்தர பாண்டியன் மதுரையைக் கைவிட்டு அரண்மனைப் பொக்கிஷத்துடன் ஓடிவிட்டான். போகும்போது இரண்டு மூன்று யானைகளை மட்டும் விட்டுச் சென்றான். அதைக் கண்டு பெரிதும் ஏமாற்றமடைந்த மாலிக்காபூர் வெகுண்டு மீனாட்சியம்மன் கோயிலுக்குத் தீயிட்டான். சுந்தர பாண்டியனின் சிற்றப்பனான விக்கிரம பாண்டியன் பெரும்படையொன்றைத் திரட்டி மாலிக்காபூர்மேல் ஏவினான். அக் கடுந்தாக்குதலினின்றும் மாலிக்காபூர் தப்பிப் புறமுதுகிட வேண்டியவனாயினான். அவன் ஏற்கெனவே கைப்பற்றியிருந்த 512 யானைகள், 5,000 குதிரைகள் ஆகியவற்றுடனும், தங்க அணிகளுடனும் மதுரையை விட்டுத் தண்டு தூக்கினான் (கி.பி. 1311). மதுரையை விட்டுப் புறப்பட்டு மின்னல் வேகத்தில் இராமேசுவரம் சென்று அங்கு நகரை அழித்தும்,மக்களைப் படுகொலை செய்தும், உடைமைகளைக் கொள்ளையடித்தும் படுசேதம் விளைத்தான். அங்கு மசூதி ஒன்றைக் கட்டினான் என்று

முஸ்லிம் வரலாறுகள் கூறுகின்றன. அங்கிருந்து இலங்கைக்குத் தாண்டிச் சென்று, கோயில் ஒன்றை இடித்து நிரவியதாகப் பெரிஷ்டா என்ற முஸ்லிம் வரலாற்று நூலாசிரியர் தெரிவிக்கின்றார்; ஆனால், மேற்கொண்டு சான்றுகள் அகப்படாதவரையில் உண்மை இன்னதென அறுதியிட்டுக் கூறமுடியாது.

பாண்டி நாடு தீப்பற்றி எரிந்தது; கோயில்கள் இடிந்து விழுந்தன; மக்கள் படுகொலைக்குள்ளாயினர். உடைமைகள் பறிபோயின. ஆயினும் பாண்டியர் தளர்ச்சியுறவில்லை. அவர்களையடக்கி அடிமை கொள்ளாமலேயே மாலிக்காபூர் டில்லி நோக்கிப் பயணமானான். பாண்டி நாட்டில் முஸ்லிம்களின் தலையீடும் அவனோடு மறைந்தது. மீண்டும் சுந்தர பாண்டியனும் வீரபாண்டியனும் தொடர்ந்து பாண்டி நாட்டை ஆண்டு வரத் தொடங்கினர்.

அரசுரிமைப் போராட்டங்களாலும், மாலிக்காபூரின் அட்டூழியங்களாலும் பாண்டி நாடு சீர்குலைந்து போயிற்று. குடிவளமும், படை பலமும் குன்றிவிட்டன. பாண்டி மன்னரின் குடும்பத்தில் ஒற்றுமையும், கட்டுப்பாடும் அழிந்தன. கேரள மன்னனான இரவிவர்மன் குலசேகரன் தன் முன் பழுத்து விழுந்த வாய்ப்பைக் கைநழுவவிட விரும்பவில்லை. அவன் நாடும் மாலிக்காபூரின் படையெடுப்பினின்றும் தப்பித்துக்கொண்டது. அவனுடைய செல்வத்திற்கும், படைபலத்துக்கும் அழிவு நேரவில்லை. ஆகவே, அவன் பாண்டி நாட்டின் மேலும், சோழ நாட்டின் மேலும் படையெடுத்தான். அவ்விரு நாடுகளும் துவண்டு போயிருந்த நிலையில் அவனை எதிர்த்து நிற்கும் திறனிழந்து நின்றன. எனவே, அவனுக்கு அவை அடிபணிந்தன. வேகவதியாற்றங்கரையில் சோழ பாண்டிய நாடுகளின் பேரரசனாக முடிசூட்டிக்கொண்டான். வேகவதியாறு காஞ்சிபுரத்தைத் தழுவிக் கொண்டு ஓடுகின்றதாகையால் கேரளன் காஞ்சிபுரம் வரையில் படையெடுத்து வந்தான் என்பதில் ஐயமில்லை. வீரபாண்டியன் என்ற வேறொரு மன்னன் குலசேகரனிடம் தோல்வியுண்டு காடுகளில் புகுந்து ஒளிந்துகொண்டான்.

மதுரையில் அரசாண்டு கொண்டிருந்த வீரபாண்டியன் தன் முயற்சிகளில் சளைக்காதவனாய்ப் போசள மன்னன் மூன்றாம் வீரவல்லாளன், வீர உதயமார்த்தாண்டவர்மன் ஆகியவர்களுடைய துணையை நாடிப் பெற்றுக்கொண்டான். சூழ்நிலை தனக்கு மாறாகத் தோன்றவே இரவிவர்மன் குலசேகரன் வட பாண்டி நாட்டைக் கைவிட்டுத் தென் பகுதிக்குப் பின்னிட்டு இரண்டாண்டுகள் பதுங்கி நின்றான்.

விதியும், சூழ்நிலையும், மண்ணாண்டவரின் மண்ணாசையும், சூழ்ச்சிகளும் ஒன்றுகூடிப் பாண்டி நாட்டைப் பற்றி அலைக் கழித்து வந்தன. இந் நிலையில் எதிர்பாராத ஒரு திசையிலிருந்து பாண்டி நாட்டுக்குத் தொல்லைகள் உதயமாயின. காகதீய மன்னனான பிரதாபருத்திரன் பாண்டி நாட்டின்மேல் முப்பிடி நாயகன் தலைமையில் படையொன்றை ஏவினான். பாண்டி நாட்டுக்கும் தமக்கும் மாபெரும் அழிவு எதிர்நோக்கி நின்றதை உணர்ந்தவர்களான வீரபாண்டியன், சுந்தரபாண்டியன், விக்கிரம பாண்டியன், குலசேகர பாண்டியன், பராக்கிரம பாண்டியன் ஆகியவர்கள் ஐவரும் ஒன்றுபட்டுக் காஞ்சிபுரத்துக் கண்மையில் காகதீயரை எதிர்த்து நின்றனர். ஆனால், வெற்றி வாகை காகதீயரின் கழுத்திலேயே விழுந்தது. அவர்கள் காஞ்சி புரத்தைக் கைப்பற்றினர். வீரபாண்டியனும் சுந்தரபாண்டிய னும் படுதோல்வியுற்றனர்.

மண்டி வந்த ஆபத்துகள் விலகிப் போகவே மதுரையில் அரசுரிமைக் குழப்பமும், கிளர்ச்சிகளும் மீண்டும் தலைதூக்க லாயின. உடன் உரிமை கொண்டாடிய இளவரசர்கள் ஒரு நாட்டை ஒத்து நிருவகித்து வருவதென்பது இடர்ப்பாடான தொரு வினையாகும். அயலாரின் தொல்லைகளை நாடு எதிர்த்து நிற்கவேண்டிய நெருக்கடியான ஒரு நிலையில் இருக்க, நாட்டில் அமைதியை நிலைநாட்டிக் குடிவளத்தைப் பெருக்க வேண்டிய பெரும் பொறுப்புகள் தமக்கிருக்க, பாண்டிய இளவரசர்கள் அரசுரிமைப் பூசல்களை விட்டுக்கொடுக்கவில்லை. வீரபாண் டியன் ஒரு புறமும், அவனுடைய மகன் சமுத்திர பாண்டியனும், பராக்கிரம பாண்டியனும் இணைந்து ஒரு புறமும் எதிர்த்து நின்றனர். அவர்களுக்குத் திறை செலுத்தி வந்த குறுநில மன்னர்கள் ‘பற்றி எரியும் வீட்டில் பற்றின வரையில் இலாபம்’ என்று எண்ணித் தமக்குக் கிடைத்த வாய்ப்பை நழுவவிடாமல் பயன்படுத்திக் கொண்டார்கள். இக் குறுநில மன்னருள் குலசேகரன் என்பவன் ஒருவன்; வடஆர்க்காட்டுப் பகுதியை ஆண்டு வந்த சம்புவராயர்களின் குடும்பத்தில் வந்தவன். சம்புவ ராயர்கள் சோழர்கட்கும், பிறகு பாண்டியருக்கும் திறைசெலுத்தி வந்தவர்கள். குலசேகரன் பாண்டி நாட்டின் மேலாதிக்கத்தி னின்றும் நழுவிக் கி.பி. 1317-18-ல் சுதந்தர வேந்தனானான். அவனைத் தொடர்ந்து மூன்றாம் இராசேந்திரன் மகனான சேமப் பிள்ளை என்பவனும் புதுக்கோட்டைப் பகுதியில் பாண்டியரின் அதிகாரத்தை உதறித் தள்ளினான்.

சுந்தரபாண்டியன் தொடர்ந்து கி.பி. 1320 வரையில் அரசாண்டான். அதே கால அளவில் இராமநாதபுரம் பகுதியி

லிருந்து வீரபாண்டியனும் கல்வெட்டுச் சாசனங்களைப் பிறப்பித்துக் கொண்டிருந்தான். டில்லி சுல்தான் கியாசுதின் துக்ளக் தன் மகன் உலூப்கானைப் பாண்டி நாட்டின்மேல் ஏவினான். பிற்காலத்தில் முகமது பின் துக்ளக் என்ற பேரில் டில்லி சுல்தானாக அரியணை ஏறிய மன்னன் இவனேயாவான். உலூப்கான் மதுரையைக் கைப்பற்றி (கி.பி. 1323) அதை டில்லி அரசின் மாகாணங்களுள் ஒன்றாக இணைத்துக்கொண்டான். முஸ்லிம் வரலாறுகளில் மதுரைக்கு மாபார் என்று பெயர் வழங்குகின்றது. பாண்டியரின் ஆட்சி மறையவில்லை. அவர்களுடைய ஆட்சி மதுரை, இராமநாதபுரம், தஞ்சாவூர் ஆகிய இடங்களில் தொடர்ந்து நடைபெற்றுவந்தது. சுந்தரபாண்டியனின் தம்பியான மாறவர்மன் குலசேகரன் கி.பி. 1346 வரையில் ஆட்சி புரிந்து வந்தான். அவனையன்றி வேறு சில பாண்டியரும் கல்வெட்டுச் சாசனங்கள் பிறப்பித்து வந்துள்ளனர். சடையவர்மன் பராக்கிரம பாண்டியன், சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் ஆகியவர்கள் பாண்டிநாட்டின் தனித்தனிப் பகுதிகளை ஆண்டுவந்தார்கள். அவர்களும், போசள மன்னன் மூன்றாம் வீரவல்லாளனும் மதுரையில் நடைபெற்றுவந்த முஸ்லிம் ஆட்சியை ஒழிக்க முயன்றனர்; எனினும் வெற்றி கண்டார் அல்லர். பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் விசயநகரப் பேரரசின்கீழ் மதுரையானது முஸ்லிம் ஆதிக்கத்தினின்றும் விடுதலை பெற்ற பிறகும் சில பாண்டியர்கள் திருநெல்வேலிப் பகுதியில் கி.பி. 1411 வரையில் அரசாண்டு வந்தனர்.

மூன்றாம் வீரவல்லாளன் தன்னுடைய தனிப்பட்ட முயற்சி பலனளிக்காமற் போகவே, வட ஆர்க்காட்டுப் பகுதியில் அரசு புரிந்துவந்த சம்புவராயர்களைப் பாண்டி நாட்டின் வடபகுதியின் ஆட்சியில் அமர்த்தக் கடும் ஏற்பாடுகள் செய்து வந்தான். இக் காரணத்தால் அவனுக்கும் மதுரையில் அரசாண்டு வந்த சுல்தான்களுக்குமிடையே அடிக்கடி பூசல்களும் போர்களும் நேர்ந்தன. அதனால் அவனுடைய ஆட்சிக்கு ஊனம் ஏற்பட்டு நாளடைவில் அவனுடைய படைபலமும் குன்றி வரலாயிற்று. இறுதியாக, விசயநகரப் பேரரசு போசள நாட்டை விழுங்கும் தாழ்நிலையும் வந்தெய்திற்று.

### மதுரையில் சுல்தான் ஆட்சி

மதுரையில் ஜலாலுதீன் ஹசன்ஷா என்பவன் ஐந்தாண்டுகள் ஆட்சி புரிந்தான். அவன் கி.பி. 1340-ல் கொலையுண்டு மாண்டான். அவனுக்குப்பின் அவனுடைய அமீர்களுள் ஒருவனான அலாவுதீன் உதாஜி என்பவன் மதுரையின் சுல்தானானான்.

இவன் ஓர் இரத்த வெறி பிடித்த மாபெரும் அரக்கனாவான். அவன் முதன்முதல் வல்லாளனை ஒழிக்க முயன்றான். எனவே, 1341-ல் வல்லாளன் மேல் போர்தொடுத்தான்; வல்லாளன் கி.பி. 1340ஆம் ஆண்டிலேயே திருவண்ணாமலையில் தன் படைகளை நிறுத்தியிருந்தான். அலாவுதீனுக்கும் வல்லாளனுக்கும் ஏற்பட்ட மோதலில், சுல்தான் வெற்றிகாண விரைந்த சமயம் யாரோ ஒருவன் எய்த அம்பு தன் மார்பில் தைத்து உயிர் துறந்தான். அவனை யடுத்து அவனுடைய மருமகன் மதுரையில் அரியணை ஏறினான். அவன் ஆட்சித்துறைக்குத் தகுதியற்றவனாகக் காணப்பட்டான்; அக் காரணத்தாலோ அன்றி வேறெக் காரணத்தாலோ கொலையுண்டு இறந்தான். அவனை யடுத்துக் கியாசுதீன் துக்ளக் என்பவன் பட்டம் ஏற்றான். அவ்வமயம் வீரவல்லாளன் கண்ணனூர்-கொப்பம் என்ற ஊரில் இருந்த முஸ்லிம் மலைக் கோட்டையை முற்றுகையிட்டிருந்தான். அவனுடைய முதுமையும் பேதைமையும் அவனுக்கு இடையூறாக இருந்தன. அதனால் அவனுடைய முற்றுகை தளர்ச்சியுற்றது. உடனே மதுரை சுல்தான் வாய்ப்பை நழுவவிடாமல் விரைந்து சென்று வல்லாளனைச் சூழ்ந்துகொண்டான். திகைப்பில் ஆழ்ந்த வல்லாளன் செயலற்று நின்றான். சுல்தான் அவனைச் சிறைப்பிடித்ததுமன்றி அவனுடைய செல்வங்கள், யானைகள், குதிரைகள் அனைத்தையும் கைப்பற்றிக்கொண்டான்; வயது முதிர்ந்த வீரவல்லாளனைக் கொன்று, தோலை யுரித்து உடலுக்குள் வைக்கோல் அடைத்து மதுரையின் மதிற்சுவரின்மேல் அதைத் தொங்கவிட்டான்; இந்துக் குடிகளைக் கொன்று குவித்தான். ஆண்களைக் கழுவிலேற்றினான். பெண்களின் கழுத்தை நெரித்துக் கொன்றான். தாயின் மார்பில் பால் உண்டுகொண்டிருந்த குழந்தைகளை வாளால் எறிந்தான். தான் கொன்று குவித்த மக்களின் தலைகளைக் கொய்து மாலைகளாகக் கோத்துச் சூலங்களுக்கு அணிவித்தான்.

இக் கொடுங்கோன்மை மக்களின் வாழ்க்கைக்குக் கேடு சூழ்ந்து கொண்டிருந்த போதே விசயநகர மன்னரின் ஆக்கம் வளர்ந்து கொண்டிருந்தது.

### விசய நகர ஆட்சி

முதலாம் புக்கன் (கி.பி. 1344-77) விசயநகரப் பேரரசனாக முடிசூட்டிக்கொண்ட பிறகு மேற்கொண்ட பல ஆக்கப்பணிகளுள் மதுரையைச் சுல்தான்களின் பிடியிலிருந்து விடுவித்தது மிகச் சிறந்த தொன்றாகும். இம் மாபெரும் வீரச் செயல்களைப் புரிந்து மக்களைச் சுல்தான்களின் கொடுங்கோன்மையினின்றும் மீட்

டவன் புக்கன் மகன் இரண்டாம் குமார கம்பணன் ஆவான். வழியில் இவன் சம்புவராயர்களை வென்று அவர்களுடைய ஒத்துழைப்பையும் படைத்துணையையும் பெற்றான். இவனுடைய புகழ்பெற்ற மதுரை முற்றுகையையும், இவன் பெற்ற வீர வெற்றிகளையும் இவனுடைய மனைவியான கங்காதேவி என்பவள் ‘மதுரை விசயம்’ என்னும் தன்னுடைய சமஸ்கிருத நூலில் மிகவும் விளக்கமாகத் தீட்டியுள்ளாள். பாண்டிய மன்னர்கள் செய்யத் தவறிய மிகப்பெரிய சாதனையொன்றைக் கம்பணன் செய்து காட்டினான். மதுரையானது கி.பி. 1365-70 ஆண்டுகளில் கம்பணன் கைக்கு மாறிற்று. சுல்தான் ஆட்சியும் அழிந்து மறைந்தது. முஸ்லிம்களுக்கு அஞ்சி ஒளித்து வைக்கப்பட்டிருந்த அரங்கநாதனின் திருவுருவச் சிலையும் மீண்டும் கோயிலில் அமைக்கப்பட்டது (கி.பி. 1371). குமார கம்பணன் மேற்கொண்ட முயற்சிகளை இரண்டாம் ஹரிஹரன் (கி.பி. 1376–1404) முற்றுவித்தான். அம்மன்னன் சைவம், வைணவம், சமணம் ஆகிய சமயங்களின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்தான். திருக்காளத்தி, திருப்பருப்பதம், சிதம்பரம், அகோபிலம், திருப்பதி, திருவரங்கம் ஆகிய ஊர்க்கோயில்களுக்கு நன்கொடைகள் வாரி வழங்கினான். பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் விசயநகரப் பேரரசானது தென்னிந்தியாவில் மிகப் பெரிய பேரரசாக நிலைப்பட்டுவிட்டது. அப்பேரரசின் மாகாணங்களுள் ஒன்றான இராச கம்பீர இராச்சியத்தின் சிறு பகுதிகளாகச் சோழ நாடும், பாண்டி நாடும், கொங்குதேசமும் ஒடுங்கிவிட்டன.

விசயநகரப் பேரரசு சிறிது காலம் வடநாட்டு மன்னரின் தாக்குதல்களிலிருந்து தென்னிந்தியாவுக்குப் பாதுகாப்பளித்து வந்தது. விசயநகரப் பேரரசன் இரண்டாம் தேவராயன் இறந்ததும் ஒட்டநாட்டு (கலிங்கத்து) மன்னன் கபிலேசுவர கஜபதி என்பவன் தென்னிந்தியாவின்மேல் படையெடுத்தான். முதன்முதல் அவன் விசயநகரத்தை முற்றுகையிட்டான். முற்றுகை முறிந்துவிட்டதாகையால் அதைக் கைவிட்டுத் தன் நாடு திரும்பினான். எனினும் அவன் தளராமல் அண்டை நாடுகளின்மேல் மீண்டும் மீண்டும் படையெடுத்துக்கொண்டேயிருந்தான். படிப்படியாக விசயநகரப் பேரரசின் பல இடங்களையும் கைப்பற்றி இறுதியில் காஞ்சிபுரத்தையும் திருச்சிராப்பள்ளியையும் பிடித்துக்கொண்டான் (கி.பி. 1463). காவேரியின் வடகரை வரையில் ஒட்டரின் ஆதிக்கம் விரிந்து நின்றது. வடக்கே தெலுங்கு நாடானது ஒட்டரின் ஆட்சிக்குள் நிலைத்துவிட்டது. ஆனால், தமிழகம் ஒட்டரின் பிடியிலிருந்து நழுவிவிட்டது. விசயநகரப் பேரரசன் மல்லிகார்ச்சுனன் பெயரளவில் தமிழகத்தின்

பேரரசனாக விளங்கினான். ஆனால், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், புதுக்கோட்டை ஆகிய இடங்களில் ஆட்சி புரிந்து வந்த சாளுவதிம்மன் என்கிற திருமலைதேவ மகாராசன்தான் முழுச் சுதந்தரத்துடன் கோலோச்சிவந்தான். ஒட்டர்கள் காவேரியைக் கடந்துசென்று விசயநகரப் பேரரசின் ஆட்சிக் கட்டுக்கோப்பைக் குலைக்காதவாறு அவன் பாதுகாப்பளித்து வந்தான். தமிழகத்தில் அடிக்கடி சுதந்தரக் கிளர்ச்சிகள் மூண்டுவந்தன. விசயநகரப் பேரரசின் சார்பில் சந்திரகிரியை அரசாண்டு வந்த சாளுவ நரசிம்மன் என்பான் அக் கிளர்ச்சியைத் தன் படைபலத்தால் ஒடுக்கிக்கொண்டே வந்தான். அவனுடைய துளுவப் படைத் தலைவனான ஈசுவரன் காஞ்சியை முற்றுகையிட்டு, சுல்தான் மக்களிடம் கொள்ளையடித்து அங்குச் சேர்ப்புக் கட்டி வைத்திருந்த செல்வங்களை எல்லாம் கைப்பற்றினான்.

ஒரிஸ்ஸா மன்னன் கபிலேசுவர கஜபதியின் படையெடுப்பின் (கி.பி. *1463-64*) பிறகு சாளுவ நரசிம்மனின் ஆட்சி காவேரியின் வடகரையோடு தடைபட்டு நின்றுவிட்டது. அவனுக்குப் பின்பு விசயநகரப் பேரரசை முறைகேடாகக் கைப்பற்றி அரசாண்ட நரச நாயக்கன், கி.பி. 1496-ல் அல்லது அதற்குச் சற்று முன்பு தெற்கில் தண்டு கூட்டிவந்தான். அப்போது திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர்ப் பகுதியில் விசயநகர அரசின் அலுவலனாகப் பணியாற்றிவந்த கோனேட்டிராசன் என்பான் திருவரங்கத்து வைணவர்களுக்குப் பல கொடுமைகள் இழைத்து வந்தான். நரச நாயக்கன் அவனை ஒறுத்துக் கன்னியாகுமரி வரையில் தன் ஆதிக்கத்தைப் பரப்பினான். சோழ சேரக் குறுநில மன்னரையும் அரசாண்டு வந்த மானபூஷணனையும் விசயநகரப் பேரரசின் ஆணைக்குள் அடக்கினான்.

நரசநாயக்கன் கி.பி. 1503-ல் காலமானான். அவனுக்குப் பின் அரசுரிமைச் சூழ்ச்சிகள் பல நிகழ்ந்தன. அவனுடைய மகன் இம்மடி நரசநாயக்கன் பட்டத்துக்கு வந்தான். விசயநகரப் பேரரசின் அரசுரிமையைப் பெற்றிருந்தவன் சாளுவ நரசிம்மனின் மகனான இம்மடி நரசிம்மன், சிறிது காலம் 'அரசியல் பயிற்சியில்' அமர்த்தப்பட்டுக் கி.பி. 1505-ல் கொலையுண்டிறந்தான்.

## கிருஷ்ணதேவராயன் (கி.பி. 1509–29)

அவனுக்குப் பின் நரசநாயக்கனின் மூதத மகனான இம்மடி நரசநாயக்கன் அரியணை யேறினான். அவனுக்கு வீரநரசிம்மன் என்றும் ஒரு பெயருண்டு. அவன் நான்கே யாண்டுகள் ஆட்சி

புரிந்து, கி.பி. 1509-ல் உயிர் துறந்தான். அவன் இராமேசுரம், திருவரங்கம், கும்பகோணம், சிதம்பரம், திருக்காளத்தி முதலிய ஊர்க் கோயில்களுக்குத் தானங்கள் வழங்கியுள்ளான். அவனுக்குப் பின்பு அவன் தம்பி கிருஷ்ணதேவ ராயன் பட்டத்துக்கு வந்தான் (கி.பி. 1509). அரசியலிலும், ஆட்சித் துறையிலும், போர்த் திறனிலும் கிருஷ்ணதேவ ராயன் சிறப்புற்று விளங்கினான். இப் பேரரசன் கலைவளர்ச்சியிலும், சமயப் பணிகளிலும் பெரிதும் ஈடுபட்டிருந்தான். இவன் காலத்தில் வைணவம் வளர்ந்து வந்தது. எனினும், சைவத்தையும் இவன் போற்றி வந்தான். கோயில்களுக்கும் பிராமணருக்கும் அளவற்ற கொடைகள் வழங்கினான். சிதம்பரம் கோயிலின் வடபுறத்துக் கோபுரத்தை எழுப்பிப் பேரும் புகழும் பெற்றான்.

கிருஷ்ணதேவராயன் கி.பி. 1529-ல் இறந்தான். நாட்டில் மீண்டும் அரசியல் குழப்பங்கள் எழுந்தன. அவற்றின் விளைவாகக் கிருஷ்ணதேவ ராயனின் தம்பி அச்சுதராயன் விசயநகரப் பேரரசனாக அரியணை யேறினான் (கி.பி. 1530). இடையறாத அரசியல் கிளர்ச்சிகளையும், போராட்டங்களையும் இவன் எதிர்த்து நீந்த வேண்டிய நிலையிலிருந்தான். சாளுவ நரசிம்மனுடனும், ஏனைய முடிமன்னருடனும் மேற்கொண்ட போர்களில் நாகம நாயக்கன் மகன் விசுவநாத நாயக்கன், இவனுக்கு உறுதுணையாக நின்றான். அவனுடைய உதவிக்குப் பரிசாக அவனிடம் பாண்டிநாட்டு ஆட்சிப் பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டன. அவன் விசயநகரத்துப் பிரதிநிதியாக மதுரையில் அமர்ந்திருந்து கி.பி. 1533 முதல் அச்சுதன் இறந்த ஆண்டாகிய கி.பி. 1542 வரையில் அரசாண்டு வந்தான். அச்சுதராயனுக்குப் பின்பு வழக்கம்போல் மீண்டும் நாட்டில் குழப்பங்களும் கிளர்ச்சிகளும் நேர்ந்தன. இக் குழப்பங்களை வென்று சதாசிவராயன் விசயநகரப் பேரரசனானான். இவனுடைய உட்பகைவர்கள் இவனை எதிர்த்துக் கிளர்ச்சிகள் செய்தார்கள். தமிழகத்திலும் குழப்பங்கள் மேலிட்டன.

இந் நிலையில் தென்னிந்தியாவில் கிறித்தவப் பாதிரிமார் நுழைந்து பல இந்துக்களை மத மாற்றம் செய்வித்துத் தம் சமயத்தை வளர்க்கும்பணியில் முனைப்புடன் ஈடுபடலானார்கள். செயின்ட் பிரான்சிஸ் சேவியர் என்ற கத்தோலிக்கப் பாதிரியின் தலைமையில் தென்பாண்டி 'நாட்டில் கிறித்தவ சமயம் பல இடங்களிலும் பரவலாயிற்று. முத்துக்குளியல் துறையில் எண்ணற்ற பரவர்கள் (மீனவர்கள்) கிறித்தவர்களாக மாறி 'ஞானஸ்நானம்' பெற்றார்கள். இவர்கள் போர்ச்சுகீசிய மன்ன

னுடைய குடிமக்களாக மாறி, அவனுடைய ஆணைக்கு உட்பட வேண்டுமென்றும், இவர்கள் அப்படி உட்படுவார்களாயின் முஸ்லிம் கொடுமைகளினின்றும் இவர்களைத் தாம் பாதுகாத்து வருவதாயும் கூறிப் பாதிரிகள் இவர்களுக்கு ஆசை காட்டினார்கள். பிரான்சிஸ்கன் பண்டாரங்களும் ஜெசூட் மதவெறியரும் கடற்கரை ஓரங்களில் இருந்த இந்துக்கோயில்களை இடித்து நிரவினர். அக் கோயில்கள் நின்ற இடங்களில் கிறித்தவ ஆலயங்களை எழுப்பினர். அதைவிட மாபெரும் கொடுமைகளைச் செய்யவும் அவர்கள் திட்டமிட்டனர். காஞ்சிபுரத்துக் கோயில்களை இடித்துத் தவிடு பொடியாக்கவும், அவற்றில் இருந்த பொக்கிஷத்தைச் சூறையாடவும் ஒரு சூழ்ச்சி உருவாகி நிறைவேறும் நிலையில் இருந்தது. அதற்குள் அவர்கள் நாகூரில் இருந்த அரங்கநாதர் ஆலயம் ஒன்றை இடித்து நிரவினார்கள். தக்க சமயத்தில் விசயநகரப் பேரரசின் படைகள் சின்ன திம்மா தலைமையில் சோழ நாட்டில் புகுந்து புவனகிரியைக் கைப்பற்றின; உடனே நாகூருக்குச் சென்று கிறித்தவப் பாதிரிகளால் சீரழிக்கப்பட்ட கோயிலைப் பழுதுபார்த்து மீண்டும் எழுப்பிக் கொடுத்தன.

விசயநகரப் படைகள் அஃதுடன் அமையவில்லை. அவை காவிரியாற்றைக் கடந்து தஞ்சாவூர், புதுக்கோட்டை முதலிய இடங்களைக் கைப்பற்றிக் குறுநிலத் தலைவர்களை வென்று அவர்களிடம் திறை கவர்ந்தன. அரசிழந்து நின்ற தென்பாண்டி மன்னன் அரியணை ஏற்றப்பெற்றான். போர்ச்சுகீசியரின் தொல்லைகள் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே போயின. கிருஷ்ணதேவ ராயனின் மருமகனான இராமராயனின் தலைமையில் விசயநகரப் படைகள், தென்னாடு வந்து சென்னையில் உள்ள சாந்தோம் மாதாகோயிலின்மேல் திடீரென தாக்கின (கி.பி. 1558). அங்கிருந்த கிறித்தவர்கள் இராமராயனுக்கு 1,00,000 வராகன் பொன் செலுத்திச் சமாதானத்தை விலைக்கு வாங்கினர். இந்த இராமராயன் அரவீடு பரம்பரையில் வந்தவன்; கிருஷ்ணதேவ ராயன் இறந்தவுடனே அவனுடைய சிசுவின் பெயரால் அரசாட்சியைக் கைப்பற்ற முனைந்தான்; ஆனால், அம் முயற்சியில் அவன் தோல்வியுண்டான். எனினும் அச்சுத ராயன் அரசாட்சியுரிமைகளை இராமராயனுடன் பகிர்ந்து கொள்ள ஒருப்பட்டான். இராமராயனோ செய்த நன்றியை மறந்தான். அவன் அச்சுதராயனுக்கு எதிராகத் தோன்றிய அரசியல் கிளர்ச்சிகள் யாவற்றிலும் பங்குகொண்டான். பல அரசியல் சூழ்ச்சிகள், பல கலகங்கள், பல போர்கள் ஆகியவற்றின் காரணமாக நாடெங்கும் குருதியாறு பாய்ந்தது.

கிருஷ்ணதேவ ராயனின் தம்பி மகனான சதாசிவராயனை இராம ராயன் அரியணையில் ஏற்றினான். அரியணையில் அமர்ந்திருந் தவன் சதாசிவன்; ஆனால், அரசாட்சி புரிந்தவன் இராமராயன்.

விசயநகரத்தின் வீழ்ச்சிக்குக் காரணமான தலைக்கோட்டைப் போரில் (கி.பி. 1565) இராமராயன் ஐந்து சுல்தான்களை ஒருங்கே எதிர்த்துப் போராடினான். அவனிடம் படைத்தலைவர்களாகப் பணியாற்றிய இரு முஸ்லிம்கள் தத்தம் ஆணையின்கீழ்ப் பணி யாற்றிய எண்பதினாயிரம் படைவீரர்களுடன் பகைவர்களான சுல்தான்களுடன் சேர்ந்துகொண்டனர். இவர்களுடைய நம்பிக் கைத் துரோகத்தினால் இராமராயன் தோல்வியுற்றுப் பகை வர்களின் கைகளில் கொலையுண்டிறந்தான். விசயநகரப் பேர ரசின் படைவீரர்கள் ஒரு நூறாயிரவரைச் சுல்தான்கள் படு கொலை செய்தார்கள்; விசயநகரத்தை இடித்தும் எரியூட்டியும் அழித்தார்கள். முஸ்லிம்களின் கைகளில் அன்று பாழடைந்த விசயநகரமானது இன்றளவும் ஒரு பாழ் நகரமாகவே நின்று, காண்போர் கண்களைக் கலங்கவைத்து வருகின்றது.

தலைக்கோட்டைப் போரைத் தொடர்ந்து நேரிட்ட பெருங் குழப்பத்தின்போது தமிழகத்தில் மதுரையிலும், தஞ்சாவூரிலும், செஞ்சியிலும் விசயநகரப் பேரரசின் சார்பில் அரசுபுரிந்து வந்த நாயக்கர்கள் தனித்தனித் தத்தம் நாட்டு மன்னர்களாக முடிசூட்டிக்கொண்டனர். ஆயினும், வேலூர் நாயக்கர்களும், மைசூர் உடையார்களும் தொடர்ந்து விசயநகரத்து மன்னரின் தலைமையை ஏற்றுவந்தனர். விசயநகர அரசானது அரவீடு பரம்பரை மன்னர்களின்கீழ், கி.பி. 1675 வரையில் தொடர்ந்து செயல்பட்டு வந்தது.

### வேலூர் நாயக்கர்

வேலூரில் சின்னபொம்ம நாயக்கன் விசயநகர அரசின்கீழ்க் கி.பி. 1582ஆம் ஆண்டுவரையில் அரசாண்டான். வேலூர்க் கோட்டையும் அதனுள் வழிபாடற்று மங்கிக்கிடக்கும் ‘சலகண் டேசுரர்’ கோயிலையும் கட்டியவன் இந் நாயக்கன்றான். அடைய புலம் அப்பைய தீட்சிதரின் புலமையைப் பாராட்டி அவருக்குச் சின்னபொம்ம நாயக்கன் கனகாபிடேகம் செய்தான். அவர் அப் பொன்னைக் கொண்டு தன் ஊரில் கோயிலொன்றை எழுப்பினார்.

### செஞ்சி நாயக்கர்கள்

விசயநகரப் பேரரசின்கீழ்ச் செஞ்சியானது படைபலத் திலும், அரசாதிக்கத்திலும் உயர்ந்ததொரு நிலையை எட்டி

யிருந்தது. சிதம்பரத்தில் இரண்டாம் குலோத்துங்கன் கோவிந்த ராசப் பெருமாளின் சிலையை அகற்றிவிட்ட பிறகு முதன் முதல் அங்கு மீண்டும் ஒரு சிலையை அமைத்துக் கொடுத்த பெருமை செஞ்சியின் தலைவன் கிருஷ்ணப்ப நாயக்கனையே சாரும். சிதம்பரம் திருச்சித்திரகூடத்துக்கு இவன் பல பெரும் திருப்பணிகள் செய்தான். இவனுடைய திருப்பணிகளைத் தில்லை தீட்சிதர்கள் மிகவும் கடுமையாக எதிர்த்தார்கள். திருப் பணிகள் ஓயவில்லை. பல தீட்சிதர்கள் மகளிருடன் கோபுரத்தின் மேலேறிக் குதித்துத் தம் உயிரை மாய்த்துக்கொண்டனர். கிருஷ் ணப்ப நாயக்கனின் உள்ளம் நெகிழவில்லை. அவன் வெகுண்டு தீட்சிதர்களின்மேல் துப்பாக்கியால் சுட்டான். பல தீட்சிதர்கள் குண்டுபட்டு விழுந்தனர். வெள்ளாறு கடலுடன் கலக்கும் இடத் தில் இந்த நாயக்கன் கிருட்டிணபட்டினம் என்று ஊர் ஒன்றை அமைத்து அதில் ஜெசூட் பாதிரிகள் மாதாகோயில்கள் கட்டிக் கொள்ள உரிமை வழங்கினான். அவ்வூர் இப்போது பறங்கிப் பேட்டை என்னும் பெயரில் விளங்கி வருகின்றது.

## தஞ்சை நாயக்கர்கள்

அச்சுதராயன் (கி.பி. 1530-42) காலத்தில் தஞ்சாவூரில் நாயக்கர் ஆட்சி ஒன்று தொடங்கிற்று. சோழ நாடு மதுரையி னின்றும் பிரிக்கப்பட்டது. அக்சுதனுடைய மைத்துனியின் கணவன் செல்லப்பன் என்பவன் தஞ்சாவூரில் ஆட்சியில் அமர்த் தப்பட்டான். செல்லப்பன் முஸ்லிம் தர்க்காக்களுக்கு நிவந்தங் கள் வழங்கினான். குடிமக்களுக்குப் பாசன வசதிகள் செய்து கொடுத்தான். நாகப்பட்டினத்தில் போர்ச்சுகீசியர் குடியேறு வதற்குப் பெரிதும் துணைபுரிந்தான். அவனுடைய அரசவையில் மாதவகுரு விசயேந்திர தீர்த்தருக்கும் அப்பைய தீட்சிதருக்கு மிடையே துவித அத்துவித வாதங்கள் நிகழ்ந்தன. செல்லப் பனுக்கும் அவன் மகன் இரகுநாதனுக்கும் கோவிந்ததீட்சிதர் அமைச்சராக இருந்தார். அவர் புலமை சான்றவர். அவர் தாமே ஒரு காவியத்தையும், இரகுநாதனுடன் இணைந்து இசை நூல் ஒன்றையும் இயற்றினார்.

## மதுரை நாயக்கர்கள்

மதுரையில் விசுவநாத நாயக்கன் (கி. பி. 1529-64) நாயக்கர் ஆட்சியைத் தொடங்கினான். இவனுடைய தலைமை அமைச்சர் அரியநாதர் என்பவர். அவருடைய உதவியுடன் மதுரை திருச்சி ராப்பள்ளி, திருநெல்வேலி ஆகிய நகர்களைச் சீரமைத்தான். தஞ்சாவூர் பிரிந்து சென்ற பிறகு இவனுடைய ஆட்சி திருச்சிராப் பள்ளி முதல் கன்னியாகுமரி வரையிலுமான நிலப்பகுதியின்

மேலும், சேலம், கோயமுத்தூர் ஆகிய மாவட்டங்கள் மேலும் ஓங்கி நின்றது. முதன்முதல் நாட்டைப் பல பாளையங்களாகப் பிரித்தவன் இவன்றான். ஒவ்வொரு பாளையமும் ஒரு பாளை யக்காரன் (படைத் தலைவன்) கையில் ஒப்படைக்கப்பட்டது. பாளையக்காரர்கள் அனைவரும் அவரவர் ஆண்ட பாளையங் களின்மேல் பரம்பரையுரிமை வழங்கப்பெற்றனர். அஃதுடன் காவல், நீதி வழங்குதல், வரி தண்டுதல் ஆகிய பொறுப்புகளும் பாளையக்காரரிடமே ஒப்படைக்கப்பட்டன. பாளையக்காரன் தான் தண்டிவந்த வரித்தொகையில் மூன்றில் ஒரு பங்கை நாயக் கனுக்குத் திறையாகச் செலுத்த வேண்டுமென்றும், மற்றொரு பங்கைக் கொண்டு படைகளைத் திரட்டி அவற்றை நிருவகித்து வரவேண்டுமென்றும், மிஞ்சிய மூன்றாவது பங்கைத் தன் ஊதிய மாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் நாயக்கனுக்கு ஒப்பந்தம் செய்துகொடுத்தான்.

விசுவநாதனின் மகன் முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கன் (கி.பி. 1564-72) தன் தந்தையைப் போலவே வீரத்திலும், திறனிலும் சிறந்து காணப்பட்டான். இவன் திருவிதாங்கூரின் மேலும், சிங்களத்தின் மேலும் படையெடுத்தான்; வெற்றியும் பெற்றான். அமைச்சர் அரியநாதர் தொடர்ந்து கி.பி. 1570 வரையில் பணியாற்றி வந்தார். முதலாம் கிருஷ்ணப்ப நாயக் கனை யடுத்து அவன் மகன் முதலாம் வீரப்பநாயக்கன் (1572-95) பட்டத்துக்கு வந்தான். அவனுடைய ஆட்சியின்போது மதுரை யில் ஜெசூட் பாதிரிகள் கிறித்தவ நிறுவனம் ஒன்றை அமைத் தார்கள். இந் நிறுவனத்தைச் சார்ந்த பாதிரிகளுள் ராபர்ட்-டி-நொபிலி என்பார் சிறந்து விளங்கினார்.

**பிற்காலத்துப் பாண்டியர்கள்**

மதுரை விசுவநாத நாயக்கன் காலத்தில் தளவாய் அரிய நாதர் திருநெல்வேலிச் சீமையின்மேல் படையெடுத்துச் சென்றார். ஆங்குக் கொள்ளையும், கொலையும் குழப்பமும் மலிந்து கிடந்தன. கயத்தாறுஎன்னும் இடத்தைச் சுற்றிச் சில குறுநில மன்னர்கள் போருக்கு முனைந்து நின்றனர்; இம் மண் ணுலகில் வேறு ஒரு மன்னனுடைய ஆட்சிக்குத் தாம் அடிப்பணிவதில்லை என்று இறுமாப்புற்றிருந் தனர். அவர்கள் தம்மைப் பஞ்ச பாண்டியர் எனக் கூறிக் கொண்டனர். அவர்கள் இன்னார் என வரலாற்று ஆய்வுகள் இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை. பண்டைய பாண்டியருக்குத் திறை செலுத்தி வந்த குறுநில மன்னர்கள் அவர்கள் எனச் சிலர் கூறுவர். பதினைந்தாம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட பிற்

காலப் பாண்டியரின் கல்வெட்டுகளில் இவர்களுடைய பெயர்கள் காணப்படவில்லை. பதினாறாம் நூற்றாண்டில் அரசுரிமை கொண்டிருந்த பாண்டிய மன்னன் ஒருவனேனும் மதுரையில் ஆளவில்லை எனத் தெரிகின்றது.

பாண்டி நாட்டு அரியணைக்கு உண்மையாக உரிமை கொண்டாடியவர்கள் தென்காசியில் ஒதுங்கி நின்றார்கள். இவர்களுக்குத் தொலையாத எதிர்ப்புக் கொடுத்து வந்த பல குறுநில மன்னரை அரியநாத தளவாய் ஒடுக்கிவிட்டார். அவர்கள் அனைவரும் தளவாயுடன் சிறிது காலம் போரிட்டுச் சளைத்துப் போய், இறுதியில் மதுரை நாயக்கரின்கீழ்ப் பாளையக்காரர்களாக இழிவுற்றுத் திறைசெலுத்தி வரவும் உடன்பட்டனர். வேணாட்டு மன்னன் திருவடி என்பவன் விசயநகரப் பேரரசர்களின் பகைவருக்குப் புகலிடம் கொடுத்துக் கொண்டிருந்தான். விசுவநாத நாயக்கன் அவனையும் தன் படைபலத்தால் வென்று அடக்கிவிட்டான். தென்காசிப் பாண்டியரும் மதுரை நாயக்கரின் மேலாதிக்கத்துக்குத் தலைவணங்கினர். விசயநகரப் பேரரசன் அச்சுதராயன் பாண்டி நாட்டு இளவரசி ஒருத்தியை மணந்தான். அச்சுதராயனுடைய படைத்துணையுடன் விசுவநாத நாயக்கன் திருநெல்வேலிச் சீமையை மதுரைச் சீமையுடன் இணைத்துக் கொண்டான். அரியநாதருடைய உதவியைக் கொண்டு திருநெல்வேலிச் சீமையில் பல சீர்திருத்தங்களை விசுவநாத நாயக்கன் செய்தான். உழவுத்தொழிலைத் தூண்டிவிட்டான். நாடு முழுவதிலும் பல பாசன வசதிகளை அமைத்துக் கொடுத்தான். சீர்குலைந்து கிடந்த அரசாங்கத்தை நிலைப்படுத்தி, நீதியையும் நிருவாகத்தையும், மக்கள் நலனுக்கு ஏற்ப ஒழுங்குபடுத்தினான். நாடு முழுவதிலும் அமைதி குடிகொண்டது. திருநெல்வேலி நகரம் விரிவடைந்தது. அங்குப் புதிய கோயில்கள் எழுந்தன. பழைய கோயில்கள் பழுதுபார்க்கப்பட்டன. தெருக்கள் ஒழுங்குபடுத்தப்பட்டன. மக்கள் நலன்கள் பாதுகாக்கப்பட்டன.

விசுவநாத நாயக்கனின் ஆட்சியில் மதுரை தேசத்தின் எல்லையானது விரிவடைந்தது. இக் காலத்திய மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி, கோயமுத்தூர், சேலம், திருவிதாங்கூரின் ஒரு பகுதி ஆகியவை மதுரைச் சீமையின் எல்லைக்குள் அடங்கியிருந்தன. விசுவநாத நாயக்கனின் செங்கோன்மையின்கீழ்த் தென்காசிச் சீமையில் அரசாண்டு வந்த பாண்டிய மன்னரின் ஆக்கமும், ஆட்சிப் பொறுப்புகளும் வளர்ச்சியுற்றன.

தென்பாண்டி நாட்டில் கி.பி. 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் சில பாண்டிய அரசர்களும் ஆண்டு வந்தனர். அவர்களுடைய வரலாறுகளைப் பற்றிய செய்திகள் விளக்கமாக இல்லை. அவர்கள் எந்த ஊரிலிருந்து அரசாண்டனர் என்றும் தெரியவில்லை. பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து ஒரு நூறு ஆண்டுகளுக்குள் பராக்கிரம பாண்டியன் என்ற பெயருடைய மன்னர்களும், சடையவர்மன் குலசேகர பாண்டியன், சடையவர்மன் விக்கிரம பாண்டியன் என்ற பெயர்களுடைய மன்னர் இருவரும் ஆண்டு வந்தனர் எனக் கல்வெட்டுச் செய்திகளினால் அறிகின்றோம்.

சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் (1422-63) என்பவன் பிற்காலப் பாண்டியருள் சிறப்பிடம் பெற்றுள்ளான். இம் மன்னன் அரசியல் அறிவும், போர்த் திறனும் வாய்ந்தவன்; தமிழ்ப் புலமையும், வடமொழிப் பயிற்சியும் வாய்க்கப் பெற்றிருந்தான். திருக்குற்றாலத்தில் நடைபெற்ற போர் ஒன்றில் சேர மன்னன் இப் பாண்டியனிடம் தோற்றுப் புறமுதுகிட்டான்.[5] சடையவர்மன் தென்காசிக் கோயிலை எழுப்பினான். கோயில் கட்டி முடிப்பதற்குப் பதினேழாண்டுகள் பிடித்தன. இவன் விசுவநாதப் பேரேரி என்றோர் ஏரியைக் கட்டி உழவுக்கு ஏற்றமளித்தான்.

அடுத்து அரியணை ஏறியவன் சடையவர்மன் குலசேகர பாண்டியன் (1463-73). இவன் சடையவர்மன் பராக்கிரம பாண்டியனுடைய தம்பியாவான்; இவன் மகன் அழகன் பெருமாள் பராக்கிரம பாண்டியனை (1473-1506) அடுத்து மணிமுடி சூட்டிக் கொண்டான். சடையவர்மன் சீவல்லப பாண்டியன் என்பவன் ஒருவன் (1534-43) அரசாண்டு வந்துள்ளான். இவன் ஆகவராமன் என்பவனின் மகன். இவன்மேல் சேர மன்னன் உதய மார்த்தாண்டன் போர் தொடுத்துப் பாண்டி நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றிக்கொண்டான். சீவல்லப பாண்டியன் விசயநகரப் பேரரசனான அச்சுத தேவராயனிடம் படைத் துணையை நாடினான். அச்சுதனின் படைகள் உதயமார்த்தண்டனைத் தாக்கிப் பாண்டி நாட்டுப் பகுதிகளை அவனிடமிருந்து கைப்பற்றி மீண்டும் சீவல்லபனிடம் அளித்தன. நன்றி மறவாத சீவல்லபன் தன் மகளை அச்சுத தேவராயனுக்கு மணஞ் செய்து கொடுத்தான்.

5. T.A.S. I.p. 126-33.     6. T.A.S. I. p. 99-100.

# 16. மதுரை நாயக்கர்கள்

விசயநரகப் பேரரசானது தலைக்கோட்டைப் போரில் (1565) வீழ்ச்சியுற்றுச் சிதறுண்டு போயிற்று. விசயநகரத்துத் திருவும் கலைச் செல்வங்களும் சீரழிந்துவிட்டன. விசயநகரப் பேரரசன் இராமராயன் போரில் வீரமரணத்தைத் தழுவினான். ஆனால், விசயநகர அரசு மட்டும் மறையாமல் தொடர்ந்து நடைபெற்று வந்தது. இராமராயனின் தம்பி முதலாம் திருமலைராயன் (கி.பி. 1570-2) நகரத்துக்குப் புத்துயிரூட்ட முயன்றான்; ஆனால் வெற்றி கிடைக்கவில்லை. விசயநகரத்தை விட்டுப் பெனுகொண்டாவைத் தன் தலைநகரமாக்கிக் கொண்டான். அவ்வூரில் தங்கிப் படைகளைச் சீரமைக்கத் தொடங்கினான். உள்நாட்டுக் கிளர்ச்சிக்காரருடனும், கொள்ளைக் கூட்டத்தாருடனும், பாளையக்காரருடனும் அவன் ஆறாண்டுகள் போராட வேண்டியவனானான். அவனுடைய அவலநிலையைப் பயன்படுத்திக்கொண்டு மதுரை, தஞ்சாவூர், செஞ்சி முதலிய இடங்களில் பாளையங்கள் அமைத்து ஆண்டுவந்த நாயக்கர்கள், விசயநகரப் பேரரசின் மேலாதிக்கத்தை உதறித் தள்ளிவிட்டுத் தாமே சுதந்தர மன்னர்களாக அரசாங்கம் நடத்தலானார்கள்.

பேரரசன் திருமலைராயன் தன் மூத்த மகன் சீரங்கனைத் தெலுங்கு நாட்டு ஆட்சியிலும், இரண்டாம் மகன் இராமனைக் கன்னட நாட்டு ஆட்சியிலும், இளைய மகன் வேங்கடாத்திரியைத் தமிழகத்து ஆட்சியிலும் அமர்த்தினான். திருமலைக்குப் பிறகு அவன் மூத்த மகன் சீரங்கன் விசயநகரத்துப் பேரரசனாக முடிசூட்டிக் கொண்டான் (1572). விசயநகரப் பேரரசின் துளுவப் பரம்பரை மன்னனான சதாசிவராயன்(1542-76) சிறையில் அடைபட்டு மாண்டுபோனான்; சீரங்கன் மக்கட்பேறின்றி 1585-ல் உயிர்நீத்தான். அவனையடுத்து அவன் தம்பி வேங்கடனே பட்டத்துக்கு வந்தான். அவன் இருபத்தெட்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். அவனுடைய ஆட்சியிலும் அரசுரிமைக் கிளர்ச்சிகள் ஓய்ந்தபாடில்லை. அவன் ஆதிக்கத்தை எதிர்த்துப் பல குறுநிலத் தலைவர்கள் கிளர்ச்சி செய்தனர். வேலூரில் லிங்கம நாயக்கன் கலகத்தில் இறங்கினான். அவனுடைய

செல்வாக்கைக் குலைப்பதற்காகவே எச்சம நாயக்கன் என்பவன் பெரும்பேடு சீமைக்குத் தலைவனாக அமர்த்தப்பட்டான். லிங்கமன் செஞ்சி, தஞ்சாவூர், மதுரை ஆகிய பாளையங்களின் படைத் துணையை நாடினான். பெரும் படை ஒன்றைத் திரட்டி அதை உத்தரமேரூரின்மேல் ஏவினான்; ஆனால், வெற்றி எச்சமனுக்கே கிடைத்தது. எனினும் லிங்கமன் மனஞ்சளைக்க வில்லை; பணிந்து போகவுமில்லை. வேங்கடன் அவனைத் துரத்திச் சென்று அவனுடைய இருப்பிடமான வேலூரிலேயே அவனை முறியடித்தான். அவன் அஃதுடன் அமையவில்லை. தொடர்ந்து தண்டெடுத்துச் சென்று, காவேரியாற்றைக் கடந்து, மதுரையின்மேல் தன் சினத்தைக் கொட்டினான். மதுரை இராச்சியம் கொலைக்கும், கொள்ளைக்கும், நெருப்புக் கும் இரையாயிற்று. அவன் அடுத்தடுத்துப் பல வெற்றிகள் பெற்றான். கலகக்காரர்கள் அனைவரும் அவனுக்கு அடிபணிந் தனர். லிங்கமன் மட்டும் தன் வேலூர்க் கோட்டையின் படை வலிமையை நம்பி நிமிர்ந்து நின்றான். ஆனால், அக் கோட்டையும் கொத்தளமும் வீழ்ந்தன; அவனுடைய சுதந்தரத் துக்கு அரணிடவில்லை. லிங்கமனின் வீரமும் அழிந்தது. வேங் கடன் கோட்டையைக் கைப்பற்றினான்; அஃதுடன் வேலூரைத் தலைநகரமாகவும் அமைத்துக்கொண்டான். வேங்கடன் 1614-ல் காலமானான். அவனையடுத்து அவன் நியமித்த வண்ணமே அவனுடைய அண்ணன் மகன் இரண்டாம் சீரங்கனே அரியணை ஏறினான்.

## பிரெஞ்சு ஆங்கிலேயர் புகுதல்

வேங்கடன் அரசாட்சி புரிந்துவந்த காலத்தில்தான் இந்தி யாவின் தலைவிதியை மாற்றிவிட்ட சம்பவங்கள் நிகழ்ந்தன. இந்தியாவின் கீழைக் கடற்கரையில் டச்சுக்காரரும் ஆங்கி லேயரும் வாணிக நிறுவனங்களைத் தொடங்கினர். முதன் முதல் நைசாம் பட்டணத்திலும், மசூலிப்பட்டினத்திலும் டச்சுக் காரர்கள் தொழிற்சாலைகள் ஏற்படுத்தினார்கள் (1605). அவர்கள் தமிழகத்தில் ஏலக்காய், இலவங்கம் போன்ற நறு மணப் பண்டங்களைக் கொள்முதல் செய்தார்கள். தெற்கில் பல தொழிற்சாலைகள் தொடங்கத் திட்டமிட்டனர். பிற் காலத்தில் 'செயின்ட் டேவிட்' என்று பெயர் ஏற்கவிருந்த 'தெக் கிண பட்டணத்தில்' செஞ்சி நாயக்கனிடம் உரிமம் பெற்றுத் தொழிற்சாலை ஒன்றை நிறுவினார்கள் (1608). புலிக்காட்டில் ஒரு தொழிற்சாலையை அமைத்துக்கொள்ள வேங்கடன் அவர் கட்கு ஏகபோக உரிமை வழங்கினான். சென்னையில் சாந் தோமில் வாணிகம் செய்துகொண்டிருந்த போர்ச்சுகீசியருக்கு

அஞ்சி டச்சுக்காரர்கள் புலிக்காட்டில் கோட்டை ஒன்றும் கட்டிக்கொண்டார்கள். ஆங்கிலேயர் டச்சுக்காரரிடம் ஒருடன் படிக்கை செய்துகொண்டு புலிக்காட்டில் தமக்கும் ஓர் இடம் பிடித்தார்கள் (1621). ஆனால், சில ஆண்டுகளுக்குப் பிறகு புலிக் காட்டைக் கைவிட்டுச் சென்னையை வந்தடைந்தனர் (1639-40). டேனிஷ்காரர்கள் தரங்கம்பாடியில் ஒரு தொழிற்சாலையை எழுப்பிக்கொண்டார்கள் (1620).

விசயநகரப் பேரரசின் அரசுகட்டில் ஏற உரிமை வழங்கப் பெற்ற சீரங்கன் ஒரு கோழை; பேதை உள்ளம் படைத்தவன்; ஆனால் கொடுங்கோலன். அவனுடைய பேராசை அவனுக்கே கேடு சூழ்ந்தது. வேங்கடனின் அரசிகளில் ஒருத்தி தன் தோழியின் ஆண் மகவு ஒன்றைத் தன் மகவு எனக் கூறிப் புரட்டு அரசு உரிமை ஒன்று வெளியாக்கினாள். அக் குழந்தையையே முடிசூட்டுவிக்க வேண்டும் என்று வற்புறுத்திய கட்சி ஒன்று தோன்றி வலுவடைந்தது. சீரங்கன் பக்கமும் பலர் சூழ்ந்தனர். இரு கட்சியினருக்கும் கொடிய போராட்டம் மூண்டது. எச்சம நாயக்கன் சீரங்கனுக்குத் துணை நின்றான். தொடர்ந்து நடை பெற்ற குழப்பங்களிலும், எச்சமனின் தாமதத்தினாலும் சீரங்கனும் அவனுடைய குடும்பத்தினரும் படுகொலை செய்யப் பட்டனர். அரசியின் குழந்தையின் சார்பில் கட்சி கட்டிக் கொண்ட ஜக்கராயன் பேரிலும், அவனுடைய உடந்தையாள் களின் பேரிலும் மக்களுக்கு அளவற்ற வெறுப்பும் சினமும் ஏற் பட்டன. எச்சமன் செய்த முன்னேற்பாட்டினால் சீரங்கனின் இரண்டாம் மகன் இராமராயன் வண்ணான் ஒருவனின் துணை கொண்டு சிறையினின்றும் உயிர் தப்பினான். அவனையே எச்சம நாயக்கன் விசயநகரப் பேரரசனாக முடிசூட்டினான். ஜக்கராயன் போரில் தோற்றுக் காட்டுக்கு ஓடி ஒளிந்தான். எனினும், அவன் விடாமுயற்சியில் தளராதவனாய் மீண்டும் மீண்டும் வெளிப்பட்டு வந்து மதுரை முத்துவீரப்ப நாயக்கன், செஞ்சிகிருஷ்ணப்ப நாயக்கன் ஆகியவர்களுடைய படைத்துணை நாடிப்பெற்றான். பேரரசன் இராமராயன் சார்பில் தஞ்சாவூர் இரகுநாத நாயக்கனின் துணையை எச்சமன் அடைந்தான். காவிரியின் பெரிய அணைக்கட்டுக்கண்மையில் தோப்பூர் என்னும் இடத்தில் எச்சமனுக்கும் ஜக்கராயனுக்குமிடையே கடும் போர் ஒன்று நிகழ்ந்தது. ஜக்கராயன் தோல்வியடைந்து உயிர் துறந்தான். வேங்கடனின் பொய்மகன் சிறைபிடிக்கப் பட்டான். கிருஷ்ணப்ப நாயக்கன் தன் நாட்டை இழந்தானா யினும் செஞ்சிக் கோட்டையை மட்டும் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டான். இழந்த நாட்டை மீட்டுக்கொள்ளும்

பொருட்டு அவன் அடுத்தடுத்து மேற்கொண்ட போர்கள் அவனுக்குத் தோல்வியிலேயே முடிந்தன. இறுதியில் கிருஷ்ணப்ப நாயக்கனும் சிறைபிடிக்கப்பட்டான். ஜக்கனுடைய தம்பி எதிராசன் இராமதேவனுக்குத் தொடர்ந்து தொல்லை கொடுத்துக்கொண்டே வந்தான். வேங்கடனின் பொய்மகன் 1619-ல் இறந்தான். எதிராசன் இராமதேவனுடன் இணக்கமும் நல்லுறவும் ஏற்படுத்திக்கொண்டான்; தன் மகளையும் அவனுக்குத் திருமணம் செய்துகொடுத்தான். போர்கள் ஓய்ந்தன. இராமதேவனின் ஆட்சியை மதுரை நாயக்கன் தவிர ஏனையோர் அனைவரும் ஏற்றுக்கொண்டனர். இராமதேவனுக்கு அவனுடைய மாமனாரான எதிராசன் துணையும், இரகுநாத நாயக்கனின் துணையும் கிடைத்தன. இராமராயனின் புதிய உறவுகளும் நட்புகளும் எச்சமனுக்கு உடன்பாடில்லை. ஆகவே, எச்சமன் பல போராட்டங்களில் ஈடுபட்டானாயினும் இராமராயனுடைய ஆதிக்கம் ஓரளவு எதிர்ப்பின்றி நிலைத்துவந்தது.

பேரரசன் இராமராயன் தன் இருபத்தெட்டாம் வயதில் இறந்தான் (1630). அவன் தன் வாணாளில் முதலாம் சீரங்கனுடைய பேரனான பெத்த வேங்கடனை அரியணைக்கு உரியவனாக நியமனம் செய்திருந்தான். எனவே, அவன் இரண்டாம் வேங்கடனாக முடிசூட்டிக்கொண்டான் (1630-42). அவனுக்கும் தொல்லைகள் தீர்ந்தபாடில்லை. அரசுரிமைப் போராட்டங்கள் மீண்டும் எழுந்தன. வேங்கடனுக்கே வெற்றிகள் கிடைத்தன. அவன் பெனுகொண்டாவைக் கைவிட்டு வந்து வேலூரில் அமர்ந்து அரசாட்சி புரியலானான். செஞ்சி நாயக்கன் வேங்கடனிடம் அன்பையும் ஆதரவையும் சொரிந்து வந்தான். அதைக் கண்டு உள்ளம் கனன்ற தஞ்சாவூர், மதுரை நாயக்கர்கள் வேங்கடனைச் சிறைபிடிக்கப் பல சூழ்ச்சிகளில் ஈடுபடலானார்கள். இரண்டாம் வேங்கடனுக்குத் தம்பி மகனான சீரங்கன், தன்னுடைய பெரியப்பனுக்குச் சிறிது காலம் துணைகொண்டிருந்துவிட்டு எக் காரணத்தாலோ அவன்மேல் பகைமை பூண்டான். அவனுடைய உடந்தையின்மேல் பீஜப்பூர் ரந்துலா கான் தெற்கில் வந்து வேலூருக்குப் பன்னிரண்டு கல் தொலைவில் தண்டு நிறுத்தினான். நாயக்கர் செய்த உதவியால் வேலூர்க் கோட்டையானது அவனுடைய தாக்குதலினின்றும் தப்பியது (1641).

கருநாடகத்தில் நடைபெற்றுவந்த போராட்டங்களையும், கிளர்ச்சிகளையும் தனக்குக் கிடைத்த நல்லதொரு வாய்ப்பாக ஏற்றுக்கொண்டான் கோல்கொண்டா சுல்தான். மெலிந்து

சிதறுண்டுபோகும் நிலையில் நின்று தத்தளித்துக் கொண்டிருந்த விசயநகரப் பேரரசினின்றும் எட்டினவரையில் கைக்கொள்ள அவன் விரைந்தான். அவனை எதிர்த்துப் போராடும் வலியின்றி, துணையின்றி இரண்டாம் வேங்கடன் சித்தூர் மாவட்டத்தில் உள்ள நாராயணவரம் காடுகளில் ஓடி ஒளிந்தான். பல தொல்லைகளில் சிக்குண்டு உடலும் உள்ளமும் உளைந்துபோன வேங்கடன் கி.பி. 1641-ல் இம் மண்ணுலகினின்றும் விடைபெற்றுக் கொண்டான்.

வேங்கடனுக்குப்பின் அவன் தம்பியின் மகன் மூன்றாம் சீரங்கனே பேரரசனாக முடிசூட்டிக்கொண்டான் (1642). மதுரை நாயக்கனும், தஞ்சை நாயக்கனும் அவனை எதிர்த்துக் கலகம் செய்தனர். கோல்கொண்டா சுல்தான் சீரங்கனுடன் சமாதான உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டான்; தன் சேனாபதி மீர்ஜும்லா சீரங்கன்மேல் மேற்கொண்டிருந்த படையெடுப்பைத் தடுத்து நிறுத்திவிட்டான். மதுரைத் திருமலை நாயக்கனும், ஏனைய நாயக்கர்களும் ஒன்றுகூடித் தமக்குப் படைத்துணை அனுப்பி வைக்குமாறு பீஜப்பூர்ச் சுல்தானுக்கு விண்ணப்பம் அனுப்பிக்கொண்டார்கள். அச் சுல்தானும் வேலூரை நோக்கிப் படையொன்றை அனுப்பிவைத்தான். நாட்டையும், சமயத்தையும், கோயிலையும், பிராமணரையும் காப்பதற்குத் துணைபுரியுமாறு சீரங்கன் விடுத்துக்கொண்ட வேண்டுகோள் யாவும் இரக்கமற்ற நாயக்கரின் வன்செவிகளில் ஏறவில்லை. அவர்களிடமே சீரங்கன் தோல்வியுற்று(1645), வேலூர்க் கோட்டைக்குள் புகுந்து கொண்டு வரப்போகும் முஸ்லிம் தாக்குதலை எதிர்பார்த்து நின்றான். சுல்தானின் படைத் தலைவன் முஸ்தாபா கான் வேலூர்க் கோட்டையை வளைத்துக்கொண்டான். சீரங்கனுக்கு மட்டுமன்றித் தம் அனைவருக்குமே ஏற்படவிருந்த பேராபத்தை உணர்ந்தனர் நாயக்கர்கள். சீரங்கனுக்கு உதவி அனுப்ப அவர்கள் விரைந்தார்கள். மதுரைத் திருமலை நாயக்கன் மட்டும் ஒதுங்கி நின்றான். நாயக்கர்கள் துணை நின்றும், சீரங்கன் விரிஞ்சிபுரத்தில் நேர்ந்த போரில் (1646) தோல்வியுற்று மீண்டும் வேலூர்க் கோட்டைக்குள் புகுந்துகொண்டான். முஸ்லிம் தாக்குதல்கள் மேலும் கடுமையாயின. அவற்றைத் தாங்கிக்கொள்ளும் வலியின்றிச் சீரங்கன் கோட்டையைவிட்டு வெளியேறித் தஞ்சாவூர் நாயக்கனிடம் அடைக்கலம் புகுந்தான். செஞ்சியும் தஞ்சையும் பீஜப்பூருக்கு அடிபணிந்தன. உடனே சீரங்கன் மைசூருக்குத் தப்பியோடிச் சிறிது காலம் கொலுவமர்ந்து வாழ்ந்து வந்திருந்தான். அவன் அடைந்த இன்னல்களுக்கும் மீண்டும் வேலூர்க் கோட்டையைப் பிடிக்கக் கண்ட கனவுகளுக்கும் ஒரு முடிவு வந்தது (1675).

அலைபாய்ந்து கொண்டிருந்த அவன் நெஞ்சின் துடிப்புகள் அடங்குவதற்கு ஓராண்டுக்கு முன்பு (1674) மராட்டிய வீரன் சிவாஜி சத்திரபதியாக முடிசூட்டிக் கொண்டான். விசயநகர மன்னர்கள் பொங்கி வந்த முஸ்லிம் ஆதிக்கத்தை மலைபோன்று எதிர்த்து நின்று ஓய்ந்தார்கள். ஆனால், அவர்கள் மேற்கொண்ட எதிர்ப்பின் ஆக்கமானது சிவாஜியின் கைகளில் வளர்ந்து நற்பயனளிக்கும் காலம் நெருங்கிக்கொண்டிருந்தது.

## மதுரைத் திருமலை நாயக்கன் (1625-59)

மதுரைத் திருமலை நாயக்கன் அரசியல் சூழ்ச்சிகளில் மிகவும் கைதேர்ந்தவன். மைசூர் மன்னன் கந்தீரவனிடம் அடைக்கலம் புகுந்திருந்த சீரங்கன் இழந்த தன் பேரரசை மீட்டுக்கொள்ளும் பொருட்டுப் பல முயற்சிகளை மேற்கொண்டான். ஆனால், திருமலை நாயக்கனின் துரோகமும், சூழ்ச்சிகளும் குறுக்கே நின்று அவனுடைய முயற்சிகளை வீணாக்கின. திருமலை நாயக்க னுக்கும் கந்தீரவனுக்குமிடையே பகைமை வளர்ந்து வந்தது. திருமலை நாயக்கன் தன் பேரரசனான சீரங்கனுக்கு எவ்விதமான உதவியும் செய்யாதவனாய் ஏமாற்றும் எண்ணத்துடன் காலந் தாழ்த்தி வந்தான் என்று திருமலை நாயக்கன்மேல் கந்தீரவன் குற்றம் சாட்டினான். திருமலை நாயக்கன்மேல் தான் கொண் டிருந்த வெறுப்பையும் பகைமையையும் மிகவும் இழிவும், கொடூர மானதுமான ஒரு முறையில் அவன் காட்டிக்கொண்டான். பகை வரின் மூக்கையும், மேலுதட்டையும் அறுத்தெடுக்கக்கூடிய கூரிய கருவி ஒன்றை வடித்துக்கொண்டான். அவனுடைய படை வீரர்கள் மதுரைச் சீமையில் புகுந்து மக்களின் மூக்கு களை அரிந்து மூட்டை மூட்டையாகக் கட்டி மைசூருக்கு அனுப்பித் தக்க பரிசும் பெற்றனர். திருமலை நாயக்கன் அவனுக்குச் சளைத்தவன் அல்லன். அவனுடைய ஏவலின் பேரில் அவனுடைய படைவீரர்களும் மைசூர்ச் சீமை எல்லைக் குள் நுழைந்து மக்களின் மூக்குகளை மூட்டை மூட்டையாக மதுரைக்கு அனுப்பி வைத்தனர். இக் கொடுமையான மூக்குப் போரைத் தொடக்கி வைத்த கந்தீரவனின் மூக்கும் பறி போயிற்று. மிகவும் இழிவான அருவருக்கத்தக்க, கேலிக் கூத்தான இந்த மூக்குப் போரானது அக்கால அரசியலை இழிவு படுத்தியதுமன்றி, அந்நியரான போர்ச்சுகீசியர், ஆங்கிலேயர் ஆகியவர்கட்கும், கிறித்தவப் பாதிரிமார்கட்கும் கைத்தூக் காகவும் பயன்பட்டது.

மைசூர்-மதுரை மூக்கறு போர் நடைபெற்றுக் கொண்டிருந்த போது ராபர்ட்-டி-நொபிலி என்ற ரோமன் கத்தோலிக்கப்

பாதிரியார் ஒருவர் மதுரையில் தங்கியிருந்து கிறித்துவ சமயப் பணிகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். நாட்டுக் குடிமக்களுடன் அவர் நெருங்கிப் பழகி வந்தார். துறவி போலவே உடையுடுத்தித் தம்மை 'ரோமாபுரி ஐயர்' என்று கூறிக்கொண்டார். மக்களுடைய பழக்கவழக்கங்களைத் தாமும் பயின்று, அவர்களிடம் தாம் கண்ட கண்மூடிப் பழக்கங்களைப் புறக்கணிக்காமல் அவர்களுடைய இதயங்களில் இடங்கொண்டார். அவர் வடமொழியையும், தமிழையும் நன்கு பயின்றார். அவருடைய எளிய துறவுக்கோலமும், தமிழ்மொழிப் பயிற்சியும் மக்களுடன் கலந்து உறவாடுவதற்குப் பக்கத் துணையாக இருந்தன. அவர் இந்துக்களைப் போலவே வாழ்ந்து வந்ததைக் கண்ட கிறித்தவர்கட்கு அவர்மேல் அழுக்காறும் ஐயமும் எழுந்ததுண்டு.

திருமலை நாயக்கன் தன் ஆட்சி வரம்பின் விரிவுக்காகவும், புகழ் தேடியும், திருவிதாங்கூரின்மேல் படையெடுத்தான் (1634-5). அப் போரில் வெற்றிவாகை சூடி இராமநாதபுரம் சேதுபதியின் மேலும் போர் தொடுத்து வெற்றி கண்டான். அவன் போர்ச்சுகீசியருடன் நட்புறவு கொண்டாடினான்; ஆனால், டச்சுக்காரரை வெறுத்தான். கிறித்தவப் பாதிரிமார்களிடம் அவனுக்கு மிக்க பரிவு உண்டு. நெஞ்சு உரத்திலும், போர்த் திறனிலும் திருமலை நாயக்கன் மேம்பாடுடையவன். பெருங் கொடைவள்ளலாக அவன் விளங்கினான்; கோயில் திருப்பணிகளிலும், அரண்மனைகள் கட்டுவதிலும் பேரூக்கம் காட்டினான். வடமொழியில் பேரறிஞராக விளங்கிய நீலகண்ட தீட்சிதரைப் புரந்து வந்தான். அவர் புகழ்பெற்ற பல வடமொழி நூல்கள் இயற்றியவர். அவர் ஆக்கிய கங்காவதாரணம், நளசரித நாடகம், நீலகண்ட விசயம் என்னும் நூல்கள் வடமொழியில் மிகச் சிறந்த இலக்கியமாகக் கருதப்பட்டு வந்தன. தஞ்சாவூரின் மராட்டிய மன்னன் இரண்டாம் ஷாஜியின் அரசவைப் பண்டிதரான இராமபத்திர தீட்சிதருக்கு நீலகண்டன் குருவாக விளங்கியவர்.

திருமலை நாயக்கனுக்குப் பிறகு அவன் மகன் ஒரு சில மாதங்களே அரசாண்டான். அவனையடுத்து அவன் மகன் முதலாம் சொக்கநாத நாயக்கன் (1659-82) தன் பதினாறாம் ஆண்டில் அரசுகட்டில் ஏறினான். நல்லதொரு சூழ்நிலையில் அவனுடைய ஆட்சி தொடங்கிற்று. சொக்கநாதன் மதுரையை விட்டுத் திருச்சிராப்பள்ளியைத் தன் தலைநகரமாக மாற்றிக் கொண்டான் (1665). அவன் தஞ்சாவூரைக் கைப்பற்றினான்

ஆயினும் அதை மராட்டியருக்கு விட்டுக்கொடுக்கும் நிலைமை ஏற்பட்டது. மைசூரும் அவனை நெருக்கத் தொடங்கிற்று. சேலமும் கோயமுத்தூரும் அவன் கையைவிட்டு நழுவின.

சொக்கநாத நாயக்கன் பல இன்னல்களுக்கு ஆளானான். முஸ்லிம்களும் மராட்டியரும் திருச்சிராப்பள்ளியின்மேல் படையெடுத்தனர். சொக்கநாதன் இராமநாதபுரம், தஞ்சாவூர், மைசூர் ஆகிய தேசங்களுடன் போரிட வேண்டி வந்தது. ருஸ்தும் கான் என்ற முஸ்லிம் நாடோடி ஒருவன் 1687-ல் திருச்சிராப்பள்ளியைக் கைப்பற்றி நாயக்கனின் அரியணையில் இரண்டாண்டுகள் அமர்ந்து இன்புற்றான். ஆனால், சொக்கநாதன் தன் ஆட்சியை மீட்டுக்கொண்டான். நாயக்கனின் அரசாண்மையும், படை பலமும், துணை நலமும், குடிவளமும் எவ்வளவு தாழ்ந்து இருந்திருக்க வேண்டுமென்று இந் நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகின்றது. சொக்கநாதனின் ஆட்சிக் கால இறுதியாண்டுகளில் மைசூர்ப் படைகள் வந்து திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டன. ஆனால், செஞ்சி, தஞ்சாவூர் மராட்டிய மன்னரின் துணையைக்கொண்டு சொக்கநாதன் மைசூர்ப்படைகளைத் திருச்சிராப்பள்ளியினின்றும் விரட்டியோட்டினான்.

செஞ்சி

இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கன் விசயநகரப் பேரரசைத் தொடர்ந்து பகைத்து வந்தான். அவனுடைய வாணாள் எவ்வாறு முடிந்ததென அறியமுடியவில்லை. அவனையடுத்து முடிசூட்டிக் கொண்டவர்களும் அப் பகையை வளர்த்து வந்தனர்; எனினும், அவர்கள் திருமலை நாயக்கனுடன் சார்பு கொண்டிருந்தனர். இக் கூட்டுறவு சீரங்கனின் முயற்சிகள் தோல்வியுறுவதற்குக் காரணமாக இருந்தது.

கோல்கொண்டாவின் சேனைகள் மீர்ஜும்லாவின் தலைமையில் செஞ்சியை முற்றுகையிட்டன. (1647). திருமலை நாயக்கன் பீஜப்பூர்ச் சுல்தானுடன் ஒப்பந்தம் ஒன்று செய்துகொண்டு, அவன் அனுப்பிய 17,000 குதிரை வீரர்களைக் கொண்ட ஒரு படையுடனும், 30,000 காலாள்கள் கொண்ட தன் படையுடனும் செஞ்சி நாயக்கனின் மீட்புக்காக விரைந்தான். தஞ்சாவூரில் விசயராகவ நாயக்கன் கோல்கொண்டா சுல்தான் படைகளைக் கண்டு வெருண்டு அடிபணிந்தான். பீஜப்பூர்க் குதிரைப் படையானது கோல்கொண்டா அணிகளுடன் இணைந்துகொண்டு திருமலை நாயக்கனுக்குத்

துரோகம் விளைத்தது. செஞ்சி முற்றுகை மேலும் வலுவடைந்தது. பெரிதும் ஏமாற்றமடைந்த மதுரை நாயக்கன் மீர்ஜூம்லாவுடன் உடன்படிக்கையொன்றைச் செய்துகொண்டு, அவன் முற்றுகையைக் கைவிடும்படியான ஏற்பாடுகளில் முனைந்தான். ஆனால், பீஜப்பூர்ச் சேனைகள் செஞ்சியைக் கைப்பற்றிக் கொண்டன. அவை அங்கிருந்தும் முன்னேறிச் சென்று தஞ்சாவூரையும் மதுரையையும் தாக்குவதற்கு முயற்சிகள் மேற்கொண்டன. திருமலை நாயக்கன் இராமநாதபுரத்துக் கள்ளரின் உதவியைக்கொண்டு அச் சேனைகளை மீண்டும் செஞ்சிக்கே பின்னடையும்படி செய்தான்.

## தஞ்சாவூர் நாயக்கர்கள்

தஞ்சாவூர் இரகுநாத நாயக்கன் தளர்ந்த தன் எண்பதாம் வயதில் இம் மண்ணுலகை நீத்தான் (1640). தன் வாணாளில் அவன் மாபெரும் வீரனாகத் திகழ்ந்தவன். வடமொழியில் பல நூல்களை அவன் இயற்றியுள்ளான். வடமொழிப் புலவர்கள் பலர் அவனுடைய அரசவையை அணிசெய்தனர். கோவிந்த தீட்சிதர், எக்ஞிய நாராயண தீட்சிதர், இராமபத்திராம்பா, மதுரவாணி, வேங்கிடேசுரமகி ஆகியவர்கள் அவர்களுள் சிலர்; இவன் தரங்கம்பாடியில் டேனிஷ் வணிகருக்குக் குடியேற்ற வசதிகளைச் செய்துகொடுத்தான் (1640).

இரகுநாத நாயக்கனின் மகன் விசயராகவ நாயக்கன் அளவு கடந்த சமயப் பற்றும், பொருளற்ற சடங்குகளில் பெரும் பித்தும் கொண்டான். கிறித்தவ ஜெசூட் பாதிரிகள் அவனுடைய கண்மூடிப் பழக்கங்களைக் கண்டு எள்ளி நகையாடி எழுதி வைத்துப் போயுள்ளனர். விசயராகவன் ஒரு கோழை; எதிரிகளைக் கண்டு நடுங்கிப் புறமுதுகிட்டு ஓடுபவன்; மருட்சியும் மனத் தடுமாற்றமும் உடையவன். கோல்கொண்டாவின் குதிரைப்படைகள் தஞ்சாவூரின் எல்லையை எட்டியபோது அவன் நடுநடுங்கினான். இரவு முழுவதும் இருட்டில் ஒளிந்திருந்து காலங்கழித்தான். குடிமக்கள் பயத்தினால் தெருக்களில் ஓடி நெருக்குண்டு மாண்டனர். விடிந்து பார்த்தபோது மன்னனின் அச்சத்துக்குக் காரணம் ஏதும் இல்லை என்று புலனாயிற்று. தஞ்சாவூரை நோக்கி வந்த ஐந்நூறு குதிரைக்காரர்கள் நகரை முற்றுகையிடாமலே பொழுது புலர்வதற்குள் நகர்ப்புறத்தைவிட்டே ஓடிவிட்டார்கள். அவனுடைய கோழைத்தனத்தைப்பற்றிக் கிறித்தவப் பாதிரிமார்கள் திரித்துவிட்ட கதைகள் பல. விசயராகவன் ஆட்சியில் தஞ்சாவூர்ச் சீமை அளவற்ற துன்பத்துக்கும், பொருள் இழப்புக்கும் உட்பட்டு

வந்தது என்பதை மறுக்கமுடியாது. அவன் மதுரைச் சொக்க நாத நாயக்கனுடன் தீராப்பகை மேற்கொண்டிருந்தான். இப் பகை பெரியதொரு போராக மூண்டுவிட்டது. சொக்கநாதன் தஞ்சாவூரை முற்றுகை யிட்டான் (1673). விசயராகவன் போரில் இறங்கிக் கையில் பிடித்த வாளுடன் வீர மரணம் அடைந்து தன் கோழைத்தனத்துக்குக் கழுவாய் கண்டான். தஞ்சையிலிருந்த நாயக்க இளவரசன் செங்கமலதாசு என்பவன் விசயராகவனை யடுத்துத் தானே அரியணை ஏறத் திட்ட மிட்டான். அதற்காகப் பீஜப்பூர்ச் சுல்தான் துணையை நாடினான். செங்கமலதாசுக்குத் துணைபுரியும் பொருட்டுப் பீஜப்பூர்ச் சுல்தான் சிவாஜியின் மாற்றாந்தாயின் மகனான வேங்காஜியின் தலைமையில் ஒரு படையை அனுப்பிவைத்தான். வேங்காஜியும் சுல்தான் பணித்தவாறே செங்கமலதாசுக்கு அரசை நல்கினான் (1675). ஆனால், அடுத்த ஆண்டிலேயே தஞ்சாவூரைக் கைப்பற்றித் தானே அரசனாக முடிசூட்டிக் கொண்டான்.

## மராட்டியர்கள்

மராட்டியர்கள் முதன்முதல் தஞ்சாவூரில் அடியெடுத்து வைத்தார்கள். நாயக்க இளவரசன் செங்கமலதாசுக்குத் துரோகம் புரிந்த வேங்காஜி தஞ்சை மராட்டிய அரசு பரம்பரை யைத் தொடக்கிவிட்டான். அது தொடங்கிச் சரபோஜி மன்னனின் ஆட்சிக்காலம் வரையில் மராட்டியரால் தமிழ கத்தைப் பொறுத்தவரையில் நன்மை ஏதும் விளைந்ததாகத் தெரியவில்லை. விசயநகரப் பேரரசர்களுடனும் நாயக்கர் களுடனும் ஒப்பிடும்போது மராட்டியர்கள் நாட்டில் குழப்பமும் குடிமக்களுக்குச் சௌத் முதலிய வரித்தொல்லைகளும் வளர்த்து விட்டனர். அவர்களுடைய காலமெல்லாம் மைசூர் ஐதருடன் போராடித் தம் போர்த்திறனைக் காட்டிக் கொள்ளுவதிலேயே கழிந்து வந்தது. மராட்டியர்கள் வடமொழிச் சார்புடைய வர்கள். ஆதலால் தமிழகத்துக்கும் தமிழுக்கும் நாயக்கர்கள் செய்தவற்றைப் போன்ற அழியாத கலைப்பணிகளைச் செய்யத் தவறிவிட்டார்கள். சரபோஜி மன்னன் ஒருவன் மட்டும் அரியணையை அணிசெய்யாமல் போயிருப்பின் தமிழகம் மராட்டியரின் படையெடுப்புகளையும், படுகொலைகளையும் கொடிய வரிகளையுமே சிந்தித்துக் கொண்டிருக்கும்.

கருநாடக தேசத்தையும் சோழமண்டலத்தையும் தம் நாட்டுடன் இணைத்துக்கொண்டு அவற்றுக்குத் தாம் பேரரசராக வேண்டும் என்ற எண்ணமும் பேரவாவும் சிவாஜியின் இதயத்தில்

நிரம்பி வழிந்தன. அவ்விடங்களின் செல்வங்களைக் கொள்ளை கொள்ளவேண்டுமென்று சிவாஜி எண்ணினார். செஞ்சியைக் கைப்பற்றி ஆங்குத் தம் ஆதிக்கத்துக்கு அடிகோலி, அங்குக் கிடைக்கக்கூடிய பொருளைக்கொண்டு முகலாயரின் அழிவுக்குப் போராடவேண்டுமென்றும் சிவாஜி கருதினார் என்று தெரிகின் றது. அதுமட்டிலுமன்றி, மூன்றாம் சீரங்கனுக்குப் பிறகு விசய நகரத்தைக் கைப்பற்றி அந்நாட்டின் பேரரசராக முடிசூட்டிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கம் ஒன்றும் அவருடைய நெஞ்சில் அரித்துக்கொண்டிருந்தது என்று ஊகிக்க இட முண்டு.

செஞ்சியில் நசீர் முகமதுவும், வலிகண்டபுரத்தில் ஷேர்கான் லோடியும் அமர்ந்து அரசாண்டு வந்தனர். அவர்கள் பீஜப்பூரின் மேலாட்சிக்கு உட்பட்டவர்கள். தஞ்சாவூரில் சிவாஜியின் மாற்றாந்தாயின் மகனான வேங்காஜியும், திருச்சிராப்பள்ளி யிலும் மதுரையிலும் சொக்கநாதனும் ஆட்சியில் அமர்ந் திருந்தனர். இவர்கள் இருவரும் சுதந்தர மன்னர்கள். இவர்கள் ஒருவரோடொருவர் பூசலிட்டுக்கொண்டு, புதுச்சேரியிலிருந்த பிரெஞ்சுக்காரரின் துணையை நாடினர். ஷேர்கான் பிரெஞ்சுக் காரரின் நண்பன்; அவர்களுக்குப் புதுச்சேரியை வழங்கினவனும் அவனேயாவான். சிவாஜி தக்கதொரு சூழ்நிலையைக் கணித்து வந்தார். அவர் திடீர்ப் படையெடுப்பு ஒன்றை மேற்கொண்டு மின்னல் வேகத்தில் கருநாடகத்துக்குப் பாய்ந்து வந்து முதல் முற்றுகையிலேயே செஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றினார்; வேலூர்க் கோட்டையை ஓராண்டு முற்றுகையிட்டு அதையும் வென்று வாகை சூடினார். ஷேர்கான் திருவதிகையில் சிவாஜியால் முறியடிக்கப்பட்டு நாட்டை விட்டோடிவிட்டான். அதன் பின்பு புவனகிரி சிவாஜியின் வசமாயிற்று. அங்கிருந்தும் முன்னேறி, சிவாஜி கொள்ளிடக் கரையில் தண்டடித்துத் தம் சகோதரன் வேங்காஜியுடன் தாயபாகப் பேச்சுகள் நடத்தினார். வேங்காஜி எள்ளளவும் விட்டுக்கொடுக்க மனமில்லாதவனாய்த் தஞ்சையினின்றும் தப்பியோடி மறைந்திருந்தான். சிவாஜிக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது. கொள்ளிடத்தின் வடகரையில் தாம் பிடித்த நாடுகளை ஒழுங்குபடுத்தித் தம் ஆட்சிக்குள் கொண்டு வந்தார். அவர் செஞ்சிக்குச் சாந்தாஜி என்பவனைத் தம் பிரதிநிதியாக அமர்த்தினார். புதுச்சேரிக் கவர்னர் மார்ட்டினிடம் தம் ஆதரவைச் சொரிந்தார். சாந்தாஜிக்கும் வேங்காஜிக்கும் போர் விளைந்ததாயினும் அவர்கள் இருவரும் தமக்குள் ஒன்றுபட்டு வாழ்வதற்கான உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டனர்.

வேங்காஜி பான்ஸ்லே (1676-85) சிவாஜியின் தந்தைக்குத் துர்க்காபாயின் வயிற்றில் பிறந்தவன். அவன் பீஜப்பூர்ச் சுல்தான் அடில் ஷாவினிடம் தொண்டுபூண்டு தன் சகோதரன் சிவாஜியையும் ஜெய்சிங்கன் என்பவனையும் எதிர்த்துப் போரிட்டான். மிக்க நேர்மையுடனும், அன்புடனும் ஆட்சிபுரிந்தான் என்று ஜெசூட் பாதிரிகளின் குறிப்புகள் கூறுகின்றன. புதுச்சேரியில் வாணிகச் செல்வாக்குப் பெற்றிருந்த பிரெஞ்சுக்காரருடன் வேங்காஜி உடன்படிக்கை யொன்றைச் செய்துகொள்ள முயன்றான். மைசூரை எதிர்த்துப் போராடுவதற்காக மதுரை நாயக்கனுக்கு அவன் துணைபுரிந்து வந்தான். ஆனால், நாளடைவில் வேங்காஜி கொடுங்கோலனாக மாறிவிட்டான். சிவாஜிக்கு மிகப் பெரிய தொகை இலஞ்சமாகக் கொடுத்துச் சமாதானத்தை விலைக்கு வாங்க வேண்டியவனாக இருந்தான். ஆகையாலும், தஞ்சாவூர்ச் சீமையில் 1677, 1680 ஆம் ஆண்டுகளில் ஆறுகள் பெருக்கெடுத்துப் பெருஞ் சேதம் விளைத்தன ஆகையாலும், அவனுக்குப் பொருள் தேவையாக இருந்தது. அதற்காக அவன் மக்கள்மேல் மிகக் கொடிய வரிச்சுமைகளை ஏற்றியும், கோயில்களைச் சூறையாடியும் பொருள் குவித்து வந்தான். அவன் ஆயுளுக்கும் ஒரு முடிவு வந்தது (1685). அவனை யடுத்து அவன் மகன் இரண்டாம் ஷாஜி தஞ்சாவூர்ச் சீமையின் மன்னனாகப் பட்டங்கட்டிக் கொண்டான். திருச்சியில் ஆட்சி புரிந்து வந்த மங்கம்மாள் தஞ்சாவூரை முற்றுகையிட்டு ஷாஜியை முறியடித்தாள். தஞ்சாவூர் 1694-ல் டில்லி முகலாயர்களுக்குத் திறை செலுத்த ஒப்புக்கொண்டது.

ஷாஜி வடமொழி இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் ஊக்கமளித்து வந்தான். பல வடமொழிப் புலவர்களைப் புரந்து வந்தான்.

**மதுரை நாயக்கர்கள்: சொக்கநாதன்**

சொக்கநாத நாயக்கன் இராமநாதபுரத்தை ஆண்டுவந்த கிழவன் சேதுபதி என்பவனுடன் நட்புறவு கொண்டிருந்தான். கிழவன் சேதுபதியின் மைத்துனன் இரகுநாதன் புதுக்கோட்டை மன்னனாக்கப்பட்டான். மதுரை நாயக்கனுக்குத் தான் புரிந்த பேருதவிக்கு ஈடாகக் கிழவன் சேதுபதி 'பரராசகேசரி' என்ற பட்டம் வழங்கப்பெற்றான். சொக்கநாதனின் இறுதி நாள்கள் துன்பந் தோய்ந்திருந்தன. அவனுக்கு நல்வாய்ப்புகள் ஒன்றேனும் கிட்டவில்லை, அவன் நோக்கம் ஒன்றேனும் நிறைவேறவில்லை. வாழ்க்கையில் ஏற்பட்ட ஏமாற்றங்களினாலும், நாட்டில் தோன்றிய பல பிளவுகளைக் கண்டு அடைந்த ஏக்கத்தி

னாலும் சொக்கநாதன் மனமுடைந்து 1682-ல் இவ்வுலகினின்றும் விடுதலை பெற்றான்.

சொக்கநாதனுக்குப் பின்பு அவனுடைய மகன் ரங்ககிருஷ்ண முத்து வீரப்பன் (நான்காம் வீரப்பன், 1682-9) பட்டமேற்றான். அவன் அரசி மங்கம்மாள் வயிற்றில் பிறந்தவன். சொக்கநாத நாயக்கனின் வலுவற்ற ஆட்சி முறையினால் அவனுடைய நாட்டின் சில பகுதிகளை மைசூர் மன்னனும், தஞ்சை மன்னன் சாம்பாஜியும் பறித்துக்கொண்டனர். எஞ்சிய பகுதியே வீரப்பன் கைக்கு எட்டிற்று. அவன் முடிசூட்டிக் கொண்டபோது மதுரை நகரமே மைசூரின் பிடியில்தான் இருந்தது. எனினும், சாம் பாஜியின் படையெடுப்புகள் பலவற்றுள் சிக்கித் திணறிக் கொண்டிருந்த மைசூர் வேந்தன், இறுதியில் மதுரையைக் கைவிட்டு ஓடும் நிலை ஏற்பட்டது. மைசூரின் தொல்லைகளி லிருந்து வீரப்பனும் விடுபட்டான். வீரப்பன் இளமையும் நுண்ணறிவும் வாய்ந்தவன். அண்டை நாடுகளினால் அலைக் கழிக்கப்பட்டிருந்த தன் நாட்டுக்கு அவன் புத்துயிரூட்டினான். மதுரை மாநகரின் உரிமையையும், பெருமையையும் கண்போலக் காத்து வந்தான். அவனுடைய நெஞ்சுரத்தைப் பற்றியும், வீறாப்பைப் பற்றியும் ஒரு வரலாறு வழங்கி வருகின்றது. அவன் காலத்தில் டில்லி பாதுஷாவானவன் தன் செருப்புகளுள் ஒன்றைச் சிவிகையில் ஏற்றிப் படைகள் புடை சூழ அலங்காரக் கோலத்தில் தனக்குத் திறை செலுத்தி வந்த நாடுகளுக்குத் திருவுலா அனுப்புவது வழக்கம். மன்னர்கள் தம் நாட்டின் எல்லையிலேயே செருப்பை வணங்கி வரவேற்று, நகருக்குள் படையினரை அழைத்துச் சென்று, செருப்பைத் தம் அரியணை யின்மேல் வைத்து மீண்டும் வணக்கம் செலுத்தி, விலையுயர்ந்த பரிசிற் பொருள்களையும், திறையையும் டில்லி பாதுஷாவுக்காக அளிப்பார்கள். ரங்ககிருஷ்ண முத்து வீரப்பன் காலத்திலும் டில்லிச் செருப்பு ஏந்திய கோலம் ஒன்று திருச்சிராப்பள்ளிக்கு வந்து சேர்ந்தது. மன்னன் அதை மதித்து வரவேற்க மறுத்து விட்டான். டில்லிப் படைத்தலைவர்கள் செருப்பைத் தாங்கிக் கொண்டு கொலுமண்டபத்துக்கு வந்தனர். வீரப்பன் மிக்க இறுமாப்புடன் தன் அரியணைமேல் நாளோலக்கத்தில் வீற் றிருந்தான். டில்லி வீரர்கள் அவன் திமிரைக் கண்டு சீறினார் கள். மன்னன் செருப்பை எடுத்துத் தன் அடிகளின்கீழ் வைக்கும்படி டில்லி வீரர்களுக்குக் கட்டளையிட்டான். கட்டளையை மீறுபவர்கள் தன் வாளுக்கு இரையாவர்கள் என்றும் மருட்டினான். அவர்கள் நடுநடுங்கிச் செருப்பை எடுத்து அவனுடைய அடிகளின்கீழ் வைத்தார்கள். வீரன்

அதைத் தன் பாதம் ஒன்றில் அணிந்துகொண்டு 'எமக்கு ஒரு சோடிச் செருப்புகள் வேண்டியிருக்க, ஒற்றைச் செருப்பை அனுப்பிவைத்திருக்கும் உம் மன்னன் அறிவிழந்தானோ?' என்று கூறிக் கொக்கரித்தான். தன் வீரர்களைக் கொண்டு முகலாயப் படையைக் கொன்று சிதறடித்தான். நடந்ததைக் கேள்வியுற்ற டில்லி பாதுஷாவும் அதுமுதல் செருப்புக் கோலம் அனுப்பு விப்பதை நிறுத்திக்கொண்டானாம்.

வீரப்பன் அனைவருடனும் கலந்து பழகினான். அவன் மாறுவேடம் பூண்டு நாடு சோதனை செய்து குடிமக்களின் கண்ணீரை நேரில் துடைப்பான். நீதியையும் நேர்மையையும் பாராட்டிப் புரந்தான்; சமயச் சேற்றில் அழுந்தாது நடு நிலைமையில் நின்றான்; கோயில்களுக்கும் சத்திரங்களுக்கும் பல நன்கொடைகள் வழங்கினான். அவன் ஒரு மனைவிக்குமேல் மறு மனைவியைத் தீண்டாத நோன்பு நோற்றவன். அந்தப் புரக் கேளிக்கைகளை வெறுத்தான். அவன் செங்கோன்மையை மக்கள் தொடர்ந்து பெற்றுப் பயனுறாதவாறு மரணதேவன் குறுக்கிட்டான். அவன் ஆயுள் 1689-ல் முடிவடைந்தது.

ரங்ககிருஷ்ண முத்துவீரப்பன் இறந்தபோது அவன் மனைவி கருவுற்றிருந்தாள்; ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றுக் கொடுத்துவிட்டுத் தீக்குளித்து உயிர்துறந்தாள். பிறந்த மூன்றாம் மாதத்திலேயே அக் குழந்தை விசயரங்க சொக்க நாதன் என்ற பெயரில் அரியணை ஏற்றுவிக்கப்பட்டது.

மங்கம்மாள் தன் பேரனுக்குப் பிரதிநிதியாக (Regent) இருந்து அரசாட்சியை மேற்கொண்டாள். அவள் நுண்ணறிவும் வரும்பொருள் உணர்வும் ஆட்சித் திறனும் கைவந்தவள். ஆட்சிப் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டவுடன் டில்லி பாதுஷாவுக்குத் தன் பணிவைத் தெரிவித்துக்கொண்டாள். தக்கணம் முழுவதையும் தன் குடையின்கீழ் ஆண்டு வந்த அவுரங்கசீபு மதுரைச் சீமையின்மேல் பாய்ந்து வருவதற்கு நெடுநாள் ஆகாது என்று அறிந்து மங்கம்மாள் முகலாய மன்ன னுக்குப் பணிந்து தன் நாட்டையும், தன்னையும் அழிவினின்றும் காப்பாற்றிக்கொண்டாள். முகலாய பாதுஷாவின் சேனாதிபதி சுல்பிகர் அலிகானுக்கு அளவற்ற விலையுயர்ந்த செல்வங்களை வழங்கி, அவனுடைய துணையைப் பெற்றுத் தஞ்சை மன்னன் கைப்பற்றியிருந்த மதுரை தேசத்தின் பகுதிகளை மீட்டுக் கொண்டாள். மராட்டியருக்கு அடிக்கடி இலஞ்சங் கொடுத்து அவர்களுடைய தொல்லைகளுக்கு ஓர் எல்லை கட்டிவைத்தாள்.

திறை செலுத்த மறுத்த கேரளத்து மன்னன் இரவிவர்மன் மேல் மங்கம்மாள் படையெடுத்து (1697) வெற்றிவாகை சூடினாள். அவளுடைய படைத்தலைவன் தளவாய் நரசிம்மன், அவனிடமிருந்து அளவிறந்த பொன்னும், பொருளும், பெரிய பீரங்கிகளும் கவர்ந்து வந்தான்.

ஜெசூட் பாதிரிகளின் கடிதங்களிலிருந்து நாயக்கர் ஆட்சி காலத்திய செய்திகள் பலவற்றை அறியும் வாய்ப்புக் கிடைக்கின்றது. அவர்கள் கூறும் செய்திகள் அவ்வளவும் அப்பட்டமான உண்மை என்று கூறமுடியாது. கிறித்தவ சமயத்தைப் பரப்ப வந்த அவர்கள் இந்து மன்னரைப்பற்றியும், இந்துக்களின் சமூக வாழ்க்கையின் பல்வேறு கூறுபாடுகளைப் பற்றியும் தாம் கண்டறிந்த அல்லது கேட்டறிந்த செய்திகளை மிகைப்படுத்தியும், திரித்தும், மறைத்தும் எழுதியிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. எனினும், அவர்கள் கூற்றில் ஓரளவு உண்மையையும் காணலாம்.

நாயக்கர் ஆட்சியில் மன்னனும், அவனுடைய அமைச்சரும் மத்திய அரசாங்கப் பொறுப்புகளையும் ஏற்றிருந்தனர். நாடு பல பாளையங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பாளையத்துக்கும் பாளையக்காரன் ஒருவன் தலைவனாக இருந்து அரசாங்கத்தை நடத்தி வந்தான். மன்னன் அரசாங்கத்தின் தலைவனாகச் செயல்பட்டுவந்தான். அவனுடைய தலைமைச் செயலாளன் அல்லது அமைச்சன் தளவாய் என்பவன் அரசாங்கத்தை நடத்திவரும் பொறுப்புடன் படைத் தலைமைப் பொறுப்பையும் ஏற்று நடத்திவந்தான். எனவே, நாட்டின் குடிநலத்தைப் பேணும் பொறுப்புத் தளவாயின் கைகளில் குவிந்திருந்தது. நாயக்கரின் முதல் தளவாயான அரியநாதன் பிரதானியாகவும் (படைத்தலைவனாகவும்) செயல்பட்டுவந்தான். அரியநாதனுக்குப் பிறகு பொறுப்பேற்ற இராமப்பையன் என்ற தளவாய் ஆற்றலிலும், புகழிலும், அரியநாதனுக்குச் சளைத்தவனல்லன். மங்கம்மாளுக்கு அமைச்சு புரிந்த தளவாய் நரசப்பையன் ஜெசூட் பாதிரிகளின் பாராட்டைப் பெற்றுள்ளான். இராயசம் (செயலாளன்) என்ற அலுவலன் தளவாய்க்கு அடுத்து நின்றவன். இவனுக்கும் மன்னனிடம் செல்வாக்கு உண்டு.

### பிற்கால மதுரை நாயக்கர்கள்

மதுரை நாயக்கர்களுக்கு மறவர்களின் தலைவனான கிழவன் சேதுபதி என்று அழைக்கப்பட்ட இரகுநாத சேதுபதி

யானவன் (1674-1710) தீராத தொல்லைகள் கொடுத்துக் கொண்டிருந்தான். அவன் நாயக்கர்களுக்குத் திறை செலுத்த மறுத்தான். அது மட்டிலுமன்றி இராணி மங்கம்மாள் தஞ்சாவூரின்மேல் போர் தொடுத்தபோது (1700) கிழவன் சேதுபதி தஞ்சை மன்னன் ஷாஜியுடன் சேர்ந்துகொண்டான். அவனுடைய ஆணவத்தைக் குலைக்கும்பொருட்டு இராணி மங்கம்மாள் மறவர் நாட்டின்மேல் படையெடுத்தாள் (1702). ஆனால், அப் போர் அவளுக்குத் தோல்வியில் முடிந்தது. அவளுடைய அமைச்சன் தளவாய் நரசப்பையன் போரில் புண் பட்டிறந்தான். கிழவன் சேதுபதியின் கைகள் மேலும் வலு வடைந்தன. அவன் இராமநாதபுரத்தில் பல கோட்டை கொத்தளங்கள் அமைத்தான்; பாதுகாப்பு அணிகள் நிறுவி னான். இராமநாதபுரத்தின்மேல் படையெடுத்து வந்த தஞ்சாவூர் மராட்டிய மன்னனைக் கிழவன் சேதுபதி முறியடித் தான் (1909). அஃதுடன் அமையாமல் அவன் அறந்தாங்கிக் கோட்டைகளையும் கைப்பற்றினான். மங்கம்மாளின் மேலாட்சி யினின்றும் நழுவிய இராமநாதபுரம் தனியொரு நாடாகவே இயங்கி வரலாயிற்று.

இராமநாதபுரத்தில் கிறித்தவர்களின் சமயப் பிரசாரமும் மதமாற்றமும் ஏறிக்கொண்டே போயின. ஆயிரக்கணக்கான மக்கள் கிறித்தவர்களாக மாறிவந்தனர். கிறித்தவர்கள் இந்துக் கோயில்களையும் தெய்வங்களையும் எள்ளி நகையாடினர்; இலிங்க உருவங்களை உடைத்தார்கள். இந்துக்களின் நெஞ்சம் புண்பட்டது. பல பல நூற்றாண்டுகளாகப் பயின்று வந்த இந்து சமயமும், கோயில் வழிபாடுகளும், இந்துப் பண்பாடும் அழிந்து மறைந்துவிடுமே என்று எண்ணிக் குடிமக்களும் கிழவன் சேதுபதியும் அஞ்சி நடுங்கினர். கிறித்தவப் பாதிரி பிரிட்டோ (Father John de Britto) சமயப் பிரசாரங்களிலும், இந்துக்களைக் கிறித்தவர்களாக மாற்றுவதிலும் வெகு முனைப்புடன் பணி யாற்றிவந்தார். பல்லாயிரம் இந்துக்கள் அவரால் கிறித்தவர் களாக மாறினர். இப் பாதிரியின் ஏற்பாடுகளில் தடியதேவன் என்பான் ஒருவனும் சேர்ந்தான்; கிழவன் சேதுபதியின் தம்பி மகளை மணந்திருந்தான். தடியதேவன் ‘ஞான ஸ்நானம்’ பெற்றுக்கொண்டதும் தன் இளம் மனைவியைத் தள்ளிவிட்டான். அவள் கிழவன் சேதுபதியிடம் தன் கணவனின் நடத்தையைப் பற்றி முறையிட்டுக்கொண்டாள். தன் குடும்பத்தையே குலைக்கு மளவுக்குப் பிரிட்டோவின் பணிகள் வளர்ந்துவிட்டதையறிந்து கிழவன் வெகுண்டான். தன் சினத்தை அவன் கிறித்தவ ஆலயங்களின்மேல் கொட்டினான். கிறித்தவ ஆலயங்கள்

இடித்து நிரவப்பட்டன. கிழவன் ஆணையின்மேல் பாதிரி பிரிட்டோவும் கொல்லப்பட்டிருந்தார். ஏனைய பாதிரிகளும் பல கொடுமைகளுக்குள்ளானார்கள். கிறித்தவர்களை ஒறுப்பதில் கிழவன் வெகு முனைப்புடன் செயல்பட்டான். கிழவன் சேதுபதியின் கொடுமைகளுக்குள்ளாகித் துன்புற்றுவந்த கிறித்தவர்கள் மக்களிடையே ஒரு புரட்டைத் திரித்துவிட்டார்கள். சமாதி செய்யப்பட்டிருந்த பிரிட்டோ பாதிரியின் சடலம் பல அற்புதங்களை இயற்றுகின்றதென்று அவர்கள் ஓயாமல் மக்களுக்கு ஓதிவந்தார்கள். மக்கள் மனமும் கரையலாயிற்று. கிழவன் சேதுபதி இறந்த பிறகு அவனுக்குப் பின் அரியணை ஏறிய வடுகநாத தேவனும் கிறித்தவர்கட்கு ஆதரவு அளித்து வரலானான்.

மதுரை தேசத்தில் இராணி மங்கம்மாள் கிறித்தவர்களிடம் அன்பாகவே நடந்துகொண்டாள். ஆகவே கிறித்தவக் குடிமக்களும், பாதிரிகளும் அவளிடம் இணக்கமாக வாழ்ந்து வந்தனர். மங்கம்மாள் அரசியல் நுண்ணறிவும், வினைத்திட்பமும், மடியின்மையும் வாய்க்கப் பெற்றவள். இஸ்லாமியக் குடிமக்களையும் போற்றி வந்தாள். அவள் மசூதிகள் கட்டுவதற்கும், தர்க்காக்கள் அமைப்பதற்கும் பல தானங்கள் வழங்கினாள். இந்து சமயத் தொண்டுகளிலும் அயரா ஊக்கங்கொண்டிருந்தாள். மங்கம்மாள் நல்ல சாலைகள் அமைத்தாள்; சத்திரங்கள் கட்டினாள்; சாலையோரக் கிணறுகள் வெட்டினாள்; தண்ணீர்ப் பந்தல்கள் ஏற்படுத்தினாள்; உழவுத்தொழிலின் வசதிக்காகப் பல பாசன வசதிகள் செய்துகொடுத்தாள்.

மங்கம்மாளின் இறுதி நாள்கள் இனிமையாகக் கழியவில்லை. அவளுடைய பேரன் பொறுப்பு வயதை எட்டியபோது அவனுக்கு அரசுரிமையை மாற்றிக்கொடுக்க மறுத்தாள். அதனால் அவன் அவளை வெறுத்தான். பதினெட்டாண்டுகள் ஆட்சி நடத்தி வந்து 1706-ல் அவள் காலமானாள். மங்கம்மாளின் பேரனும், ரங்ககிருஷ்ணனின் மகனுமான விசயரங்க சொக்கநாதன் 1706-ல் முடிசூட்டிக் கொண்டான்; அவன் ஆட்சி முழுவதிலும் நாட்டில் துன்பங்களும் தொல்லைகளும் மலிந்தன. நாடு சீர்குலைந்தது. மன்னனின் கொடுங்கோன்மையின்கீழ்க் குடிகள் வாட்டமுறலாயினர். மக்கள் ஆங்காங்குக் கிளர்ச்சிகளில் இறங்கினர். தாங்க முடியாத வரிச் சுமையை எதிர்த்துக் கோயில் பணியாள் ஒருவன் கோயில் கோபுரத்தின் மேலிருந்து கீழே குதித்து உயிர் துறந்தான் என்று கல்வெட்டுச் செய்தி ஒன்று கூறுகின்றது (1710).[1]

1. Ep. Rep. 6/25.

இராமநாதபுரச் சீமையில் கிழவன் சேதுபதி 1710-ல் காலமானான். ஆட்சித் திறனும் அரசியல் சூழ்ச்சியும் வாய்ந்த அவனுடைய வாணாள் முடிவுற்றவுடனே விசயரகுநாதன் சேதுபதியானான். அவன் தன் குடிமக்களின் அன்பைப் பெற்றான்; மிக்க சமயப் பற்றுடையவனாக இருந்தான். அவன் அடிக்கடி இராமேசுரம் யாத்திரை சென்று வருவது வழக்கம். இராமேசுரம் கோயிலுக்குப் பல நன்கொடைகள் வழங்கினான். விசயரகுநாத சேதுபதி இளகிய உள்ளமுடையவன்; சமரசம் பாராட்டியவன்; கிறித்தவர்களிடம் பரிவு காட்டினான். அதனால் மறவர் சீமையில் 1714-15 ஆண்டுகளில் கிறித்தவ சமயம் செழித்து வளர்ந்தது.

விசயரகுநாதனுக்குப் பின் அரசுரிமைக் கிளர்ச்சிகள் எழுந்தன. பவானிசங்கரன் என்பவனும், தாண்டதேவன் என்பவனும் அரியணைக்குப் போட்டியிட்டனர். இப் போட்டியினால் பல போர்கள் ஏற்பட்டன. அப் போர்களில் மதுரை மன்னனும், தஞ்சாவூர் மன்னனும் கலந்துகொண்டனர். தாண்டதேவன் போரில் உயிர் துறந்தான். பவானி சங்கரனே சேதுபதியாக அரியணை ஏறினான். பவானி சங்கரனைப் பிரபுக்களும் குடிமக்களும் வெறுத்தனர். தஞ்சை மன்னன் படையெடுத்தான். உறையூரில் நடந்த போரில் (1729) பவானி சங்கரன் தோற்றுப் பகைவரால் சிறைபிடிக்கப்பட்டான். இராமநாதபுரம் பங்கு போடப்பட்டது. ஒரு பங்கு தஞ்சாவூருக்குக் கிடைத்தது. எஞ்சிய பங்கு இரண்டாகப் பிரிக்கப்பட்டது. அவற்றுள் ஒரு பங்கு இராமநாதபுரம் சீமை; அதற்குக் கட்டையதேவன் என்பவன் குமார முத்து விசயரகுநாத சேதுபதி என்ற பெயரில் அரசனானான். மற்றொரு பங்கு சிவகங்கைச் சீமை; அதற்கு ஒரு பாளையக்காரன் மன்னனானான்.

மதுரை நாயக்கன் விசயரங்க சொக்கநாதன் அடிக்கடி கோயில் குளங்களுக்கு யாத்திரை போவதையே தொழிலாகக் கொண்டிருந்தான். அரசாங்கப் பண்டாரத்தைக் கோயில்களுக்கும் பல்வேறு அறக்கட்டளைகளுக்கும் செலவிட்டான். அவனுக்கு உள்ளத் திட்பமும் பொறுப்புணர்ச்சியும் இல்லாக் காரணத்தால், அவனுடைய அமைச்சர்களான நரசப்பையனும் வேங்கட ராகவாசாரியனும் அரசாங்க வருவாய் அனைத்தையும் கொள்ளைகொண்டனர். விசயரங்க சொக்கநாதனிடம் திருமணத் தொடர்புகொள்ளும் விருப்பத்துடன் சிங்களத்து மன்னன் தூதனுப்பினான். நாயக்கன் தான் உயர்குடியென்றும், சிங்களவன் தாழ்குடி என்றும் கூறி, அத் தொடர்பை மறுத்தான். அவன் காலத்தில் நாடு சரிவுற்றது. அவன் 1732-ல் காலமானான்.

**மீனாட்சி (1732-36)**

விசயரங்க சொக்கநாதனுக்கு ஆண்மகவு பிறக்கவில்லை. ஆகவே, அவன் அரசி மீனாட்சியே ஆட்சிப் பொறுப்புகளை மேற்கொண்டாள் (1732). பங்காரு திருமலை என்பவன் மகன் விசய குமாரனைச் சுவீகாரம் எடுத்துக்கொண்டாள். ஆனால், தன் மகன் அரசுரிமை பெற்றுப் பட்டங் கட்டிக்கொள்ளுவது தந்தைக்கு விருப்பமில்லைபோலும். பங்காரு திருமலைநாயக்கனும் தளவாய் வேங்கடாசாரியனும் மீனாட்சியை அரியணையினின்றும் இறக்குவதற்குப் பல சூழ்ச்சிகள் மேற்கொண்டனர். அதே சமயம் ஆர்க்காட்டு நவாபானவன் மதுரையையும் தஞ்சாவூரையும் தாக்கி அழிக்குமாறும், அந்தச் சீமைகளிலிருந்து திறைகவர்ந்து வருமாறும் தன் மகன் சப்தர் அலியையும் மருமகன் சந்தா சாயபுவையும் மிகப் பெரும்படைக்குத் தலைவராக ஏவினான். அவர்களும் திருச்சிராப்பள்ளிச் சீமையை நெருங்கினர். தானாக விளைந்த இவ்வரிய வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள நன்றிகெட்ட பங்காரு நாயக்கன் தயங்கவில்லை. அவன் சப்தர் அலிக்கு இலஞ்சத்தை வாரிக்கொடுத்து அவனைத் தன் கட்சிக்கு மடக்கிக் கொண்டான். மீனாட்சியின் கடுங்காவலில் இருந்துவந்த திருச்சிராப்பள்ளிக் கோட்டையைத் தாக்கித் தகர்த்தல் எளிதன்று என்பதைச் சப்தர் அலி அறிவான். ஆகவே, பங்காரு நாயக்கனுக்கும் மீனாட்சிக்கும் இடையே நடந்துகொண்டிருந்த அரசுரிமைப் பூசல்களில் தான் தலையிட்டு விசாரித்துத் தீர்ப்புக் கூறுவதாக அவன் வாக்களித்தான். ஆனால், மீனாட்சி அவனுடைய சொற்களை நம்பி ஏமாறவில்லை. எனவே, சப்தர் அலி பங்காரு திருமலையின் கட்சியில் சேர்ந்துகொண்டு சந்தா சாயபுவினிடம் இவ் வழக்கை ஒப்படைத்தான். சந்தா சாயபுவுடன் உடன்படிக்கை ஒன்று செய்துகொள்வதற்காக மீனாட்சி விரைந்தாள். அவ்விருவருக்குள் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி மீனாட்சி வழங்கிய ஒரு கோடி ரூபா இலஞ்சத்தை ஏற்றுக்கொண்டு திருச்சிராப்பள்ளியை விட்டுப் போய்விடுவதாகச் சந்தா சாயபு கொரானின்மேல் சத்தியம் செய்து வாக்குக் கொடுத்தான்; அந்நகரை விட்டுவிட்டு மதுரையை நோக்கித் தன் படைகளைச் செலுத்தினான். அதற்குள் பங்காரு நாயக்கன் மீனாட்சியுடன் உடன்பாடாக இருப்பதாக மீனாட்சியிடம் கூறி ஒப்பந்தம் ஒன்றும் செய்து கொடுத்தான். அவள் பங்காரு நாயக்கன், தன்னுடைய சுவீகார மகன் இருவரையுமே மதுரையைக் காப்பாற்றுமாறு அனுப்பி வைத்தாள். தன் எண்ணம் நிறைவேறாமற் போனதைக் கண்ட சந்தா சாயபுவும் மனம் புழுங்கி ஆர்க்காடு திரும்பினான். பெரும் படையொன்றைத் திரட்டிக்கொண்டு அவன் மீண்டும் ஒருமுறை திருச்சிராப்பள்ளியின்மேல் பாய்ந்து வந்தான் (1736); அவன்

மீனாட்சியுடன் கலந்து இச்சகம் பேசி, அவளுடைய பகையைத் தான் வென்று அவளுக்குத் தனியரசு நல்குவதாக வாக்குறுதி செய்துகொடுத்து, அவளைத் தன் வஞ்சக வலைக்குள் போட்டுக் கொண்டான். அப் பேதையும் அவனுடைய சொற்களில் மயங்கித் தன் ஆட்சி உரிமை முழுவதையும் சந்தா சாயபுவினிடமே ஒப் படைத்து விட்டாள். தான் திருச்சிராப்பள்ளிச் சீமையின் ஆட்சியை ஏற்றுக்கொண்டவுடனே சந்தா சாயபுவானவன் 80,000 குதிரைகள் அடங்கிய குதிரைப் படையொன்றையும் காலாட்படை யொன்றையும், மீனாட்சிக்கு உடன்பட்டவர் களான கோவிந்தையன், இராமனையன் ஆகிய இருவரின் தலை மையில் திண்டுக்கல்லை நோக்கி ஏவினான். திண்டுக்கல்கோட்டை பங்காரு திருமலை நாயக்கன் வசம் இருந்தது. பங்காரு திருமலை தன்னால் இயன்றவரை அப் படைகளை எதிர்த்துப் போரிட் டான். அம்மையநாயக்கனூரில் நடைபெற்ற பெரிய போரில் அவனுடைய ஆற்றல் சரிந்தது. திண்டுக்கல் கோட்டையும் வீழ்ந்தது. பங்காரு திருமலை கோட்டையைக் கைவிட்டுச் சிவ கங்கைக்கு ஓடி ஒளிந்தான். சந்தா சாயபு தன்முன் எதிர்ப்பற்று விரிந்து கிடந்த மதுரை தேசம் முழுவதையுமே தனக்கு உரிமை யாக்கிக் கொண்டான். மீனாட்சிக்குத் தான் கொடுத்த வாக் குறுதியை மீறினான். அரசி மீனாட்சியை அவளுடைய அரண் மனையிலேயே சிறையிட்டு வைத்தான். தனக்கு வந்த அவமானத் தைத் தாங்காதவளாய் மீனாட்சி நஞ்சுண்டு மாண்டாள் (1736). பங்காரு திருமலையின் அழுக்காற்றுக்கும் நாட்டுத் துரோகத் துக்கும் பலன் கைமேல் கிடைத்தது. அவன் நவாபு அன்வாருதீன் கைகளால் கொலையுண்டு மாண்டான். அவன் மகனான விசய குமாரன் மதுரையை ஆளும் வாய்ப்பை இழந்து, விதி தன்னை வெருட்டிவர, சிவகங்கைச் சீமையில் அடைக்கலம் புகுந்தான். அதனுடன் மதுரை நாயக்கர் பரம்பரையும் மறைந்துபோயிற்று.

# 17. தமிழகத்தில் 13 முதல் 18ஆம் நூற்றாண்டுவரை சமூக நிலை

தமிழகத்தில் பதின்மூன்று முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான கால அளவில் மக்கள் சமுதாயத்தில் பல துறைகளிலும் ஏற்பட்டுள்ள மாறுதல்களானவை நாட்டின் வரலாறு, மொழிவளர்ச்சி, அயலவரின் தொடர்பும் அரசாதிக்கமும், கிறித்தவர் இஸ்லாமியருடனான உறவுகள் ஆகியவற்றுடன் நெருங்கிய தொடர்புகொண்டுள்ளன. மன்னர்களும் மக்களும் தொடர்ந்து கோயில்களுக்கும், மடங்களுக்கும், பிராமணருக்கும் தானங்கள் அளித்து வந்துள்ளனர்.

வலங்கை-இடங்கையினரின் பூசல்கள் ஓய்ந்தபாடில்லை. அரசர்கள் அடிக்கடி அவற்றில் தலையிட்டு அவற்றைத் தீர்த்து வைக்கவேண்டிய நெருக்கடியும் ஏற்பட்டுள்ளன.[1]

### பிராமணர்கள்

பிராமணர்கள் மன்னரிடமும், குறுநில மன்னரிடமும் சிறந்த தொண்டர்களாகவும், வரும்பொருள் உணர்ந்தவர்களாகவும், திருவருள் பெற்றவர்களாகவும் நடந்துகொண்டனர். சோழப் பேரரசர்களைப் போலவே விசயநகரப் பேரரசரும், நாயக்கர்களும் பிராமணருக்குப் பேராதரவு தந்துவந்தனர்.[2] விசயரங்க சொக்கநாத நாயக்கன் திருவானைக்காச் சங்கர மடத்துக்கு நிவந்தங்கள் அளித்துள்ளான்.[3] அம் மடத்தில் சோறு, தோசை, அதிரசம், சுகியன் ஆகியவை நிவேதனம் செய்யப்பட்டன.

விசயநகரப் பேரரசரும், நாயக்கரும், போசளரும் தமிழகத்துடன் அரசியல் தொடர்புகொண்ட பிறகு, தெலுங்கரும் கன்னடியரும் ஆயிரக்கணக்கில் தமிழகத்தில் குடியேறினார்கள். அவர்களுள் பலர் பிராமணர்கள். பிராமணர்கள் பெற்றுவந்த

1. S. I. I. II. No, 81.
2. Ep. Rep. 96/42-43; Ep. Rep. 100/42-43.
3. Ep. Ind. XVI. No. 12.

தனிச் சிறப்புகளையும், செல்வாக்கையுங் கண்டும் மனப் புகைச்சல் இன்றியே ஏனைய குடிமக்கள் அவர்களுடன் ஒத்து வாழ்ந்தார்கள் என்று சில வரலாற்று ஆசிரியர் கருதுவர். அவர்களுடைய கருத்துப் பொருத்தமானதன்று. பிராமணர்கள் நேர்மையும், கூர்த்த அறிவும், கணிதப் புலமையும், உடற்கட்டும் வாய்ந்தவர்கள் என்றும், ஆனால் அவர்கள் இறுமாப்புடையவர்களாகி மக்களின் வெறுப்புக்கு ஆளானார்கள் என்றும் போர்ச்சுகீசிய வணிகர் ஒருவர் எழுதியுள்ளார் (கி.பி. 1537). அதை நோக்குமிடத்துக் குடிமக்கள் அவர்களிடம் முழுக்க முழுக்க நல்லெண்ணமும் நல்லுறவும் கொண்டிருந்திருக்க முடியாது என்று ஊகிக்க இடமேற்படுகின்றது.

## முஸ்லிம்கள்

தமிழகத்தில் முஸ்லிம்களின் குடியேற்றம் பதின்மூன்றாம் நூற்றாண்டிலேயே ஏற்பட்டுவிட்டதெனத் தெரிகின்றது. மாலிக் காபூர் படையெடுத்து வருவதற்கு முன்னரே முஸ்லிம்கள் ஆயிரக் கணக்கில் தமிழகத்தில் நுழைந்து பாண்டி மன்னர்களின் படைத் தொழிலிலும் ஈடுபடலானார்கள். முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் (1216-38) ஒரு கழனிக்குத் 'துலுக்கராயன் குழி' என்று பெயர் வழங்கி வந்துள்ளது.[4] மற்றும் அரபியர்கள், யூதர்கள், பார்சியர்கள், சீனர்கள், மலேயர்கள், போர்ச்சுகீசியர்கள், வேறு பல ஐரோப்பிய நாட்டினர் ஆகியவர்கள் தமிழகத்துக்கு வந்து பல தொழில்களில் ஈடுபடலானார்கள். பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பார்சியர்கள் தமிழகத்தில் காணப்பட்டனர் என்று ஜோர்டானீஸ் பாதிரியார் கூறுகின்றார்.

பொருளாதாரத்தின் அடிப்படையில் குலங்கள் நூற்றுக் கணக்கில் பெருகிவந்தன. சில குலங்கள் சிறுசிறு வகுப்புகளாகவும் பிரிந்து போனதுண்டு. கம்மாளர்கள் (கண்மாளர்கள்) பொற்கொல்லர் (தட்டார்)களாகவும், தச்சர்களாகவும், கருமார்களாகவும், கன்னார்களாகவும், சிற்பிகளாகவும் பிரிந்தார்கள். இவ் வகுப்புகளுக்கிடையே விருதுகள், நடைமுறை உரிமைகள் ஆகியவற்றின் காரணமாக அடிக்கடி சச்சரவுகள் நேர்ந்ததுண்டு. ஒருமுறை மதுரை வீரப்ப நாயக்கன் தலையிட்டு இவர்களுடைய சச்சரவு ஒன்றைத் தீர்த்துவைத்தான்; நல்லுறவு உடன்படிக்கை ஒன்றையும் ஏற்படுத்தினான்.[5] கருமார்களுக்கும், தச்சர்களுக்கும், தட்டார்களுக்கும் நிலங்கள் தானமாக அளிக்கப்

4. I. P. S. No. 304. 5. Ep. Rep. 309/16; Ep. Rep. 378/16.

பட்டன.[6] இவ்வைந்து வகுப்பினர் ஒன்றுகூடல் (உடன்கூட்டம்) கூடாது என்று ஓர் அரசாணை பிறந்ததுண்டு.[7]

எண்ணெய் ஆடிய வாணியர் (செக்கார்)களுக்குள் பூசல்கள் ஏற்பட்டதுண்டு. ஒரு முறை. அவர்கள் அதைத் தீர்த்துக் கொண்டு தமக்குள் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டுள்ளனர்.[8] வாணியர்கள் எள், இலுப்பைக்கொட்டை, தேங்காய், ஆமணக்கு ஆகியவற்றினின்றும் எண்ணெய் எடுத்தனர்: இலுப்பை நெய் கோயில் விளக்கெரிக்கவும் பயன்பட்டது. குயவர்கள், வண்ணார் கள், நாவிதர்கள் ஆகியவர்கள் தத்தம் குலத்தொழிலில் தொடர்ந்து ஈடுபட்டு வந்தார்கள்.

செட்டிகள் வாணிகம் செய்தார்கள். முஸ்லிம்களும் வாணிகத் தொழில் செய்து வந்தார்கள். உழவுத் தொழில், தொழில்கள் யாவற்றினும் தலையாயதாகப் போற்றப்பட்டு வந்தது. அரசாங்கத்துக்குக் கிடைத்த வருமானத்தில் பெரும் பகுதி உழவர்களிடமிருந்தே திரட்டப்பட்டது. ஏனைய கைத் தொழில்களும், மக்களின் குடிநலமும், வாழ்க்கைத் தரமும் உழவுத்தொழிலின் அடிப்படையிலேயே வளர்ந்து வந்தன.

கைக்கோளர்கள் தமிழரின் சமூகத்தில் கம்மாளர்களைப் போலவே மிகவும் சிறப்பான இடம் பெற்றிருந்தனர். அவர்கள் ஏற்கெனவே கோயில் பணிகளில் ஈடுபட்டிருந்தார்கள். கைக்கோளர் படை எனத் தனிப் படைகள் வகுக்கப்பட் டிருந்தன. நாளடைவில் அவர்கள் நெசவுத்தொழிலில் ஈடுபட்டுக் குடிமக்களுக்குப் பலவகையான துணிகளை நெய்து கொடுத் தார்கள். ஊர்தோறும் கைக்கோளர்களுக்கெனத் தனித் தெருக் களே அமைந்திருந்தன.[9] கைக்கோளர்கள் நெய்துவந்த தறி களுக்கு வரிகள் போடும் வழக்கம் தொடர்ந்து காணப்படு கின்றது.[10] பட்டடை மூலாயம் என்பது விசயநகர மன்னர்கள் தறிகளின்மேல் விதித்த வரியாகும்.[11]

கைக்கோளர்கள் பல்லக்கு ஏறிச் செல்லவும், தமக்கு முன்பு சங்கு ஊதப்பெறவும் காஞ்சிபுரத்திலும் விரிஞ்சிபுரத்திலும் புதிய உரிமைகளைப் பெற்றனர்.[12] இவ் வுரிமைகளை வழுதலம் பட்டுக் கைக்கோளரும் வழங்கப்பெற்றார்கள்.[13] கைக்கோளருக்கு

6. Ep. Rep. 17/17; Ep. Rep. 23/17.
7. Ep. Rep. 378/15.
8. Ep. Rep. 1907-p. 16.
9. Ep. Rep. 319/1911.
10. Ep. Rep. 111/39-40
11. Ep. Rep. 272/1912.
12. Ep. Rep. 162/18.
13. Ep. Rep. 291/23.

களும் அக் கோயிலுக்குள் நடைபெற்றதுண்டு. ஒரு முறை ஆர்க்காட்டு நவாபு ராஜாசாயபு தன் பின்னால் விட்டுவிட்டுப்போன பட்டாளம் ஒன்று அண்ணாமலையார் கோயிலினுள் தங்கியிருந்தது. தியாகதுர்க்கம் கின்னேதாரன் கிருஷ்ணாராவு என்ற மராத்தியன்—அவனும் ஓர் இந்துதான்—ஒருநாள் இரவு திடீரென்று தன் படைவீரருடன் கோயிலுக்குள் புகுந்து எழுநூற்றைம்பது சிப்பாய்களைப் படுகொலை செய்தான்; கோயிற் சுற்றாலைகளை இரத்தத்தால் மெழுகினான்.

# 18. ஐரோப்பியரின் வரவு

இந்தியாவில் போர்ச்சுகீசியருக்கு ஏற்பட்டிருந்த அரசியல் ஏற்றத்தையும், வாணிகச் செல்வாக்கையும் கண்டு ஆங்கிலேயர் மனம் புழுங்கினர். இங்கிலாந்து அரசி எலிசபெத் வழங்கிய பட்டயம் ஒன்றின்படி 'கிழக்கிந்தியக் கம்பெனி' என்னும் பெயரில் வாணிக நிறுவனம் (1600ஆம் ஆண்டு, டிசம்பர் 31ஆம் தேதி) ஒன்று தொடங்கப்பட்டது. தொடக்கத்தில் சில ஆண்டுகள் அதற்குப் பல இன்னல்களும் இடர்ப்பாடுகளும் தோன்றின. ஆனால், நாளடைவில் அது முழு வேகத்தில் செயல்படலாயிற்று; அக் கம்பெனியின் முதல் தொழிற்சாலை யானது சூரத் என்னும் ஊரில் கட்டப்பட்டது. சர் தாமஸ் ரோ என்னும் ஆங்கிலேயர் 1616-18 ஆண்டுகளில் டில்லி முகலாயர் அரசவையில் அமர்ந்திருந்து தம் நாட்டு வாணிக முன்னேற்றத்துக்குப் பல உரிமைகளையும் சலுகைகளையும் பெற்றார். ஆங்கிலேயர் வாணிகத்தின் வளர்ச்சியிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்து வரவேண்டும் என்றும், நாடு பிடிக்கும் எண்ணத்துடன் இந்திய மண்ணின்மேல் போர் முயற்சி களில் இறங்கக்கூடாதென்றும் அவர் வலியுறுத்தினார். ஆனால், அவருடைய கருத்து அரசியலாளரிடையே எடுபடவில்லை. ஏனைய ஐரோப்பிய நாடுகளுடன் ஆங்கிலேயரும் வாணிகப் போட்டியிலும் நாடு பிடிக்கும் போட்டியிலும் மும்முரமாக ஈடுபடலானர்கள். ஆங்கிலேயர்கள் புலிக்காட்டில் தொழிற் சாலை ஒன்றை நிறுவ முயன்று தோற்றுப்போயினர். பிறகு மசூலிப்பட்டினத்தில் 1611-ல் ஒரு தொழிற்சாலையை நிறு வினார்கள். கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த பிரான்ஸிஸ் டே என்ற ஆங்கிலேயன் சென்னையில் சாந்தோமுக்கு அண்மை யிலேயே செயின்ட் ஜார்ஜ் கோட்டை இப்போது அமைந் துள்ள அடிநிலத்தை 1639-ல் கம்பெனிக்குச் சொந்தமாக்கிக் கொண்டான். சென்னையானது வாணிகத்துக்குத் தக்க இடம் என்ற காரணத்தால் மட்டுமன்றி வேறு ஓர் எண்ணமும் அவன் நெஞ்சில் அலைபாய்ந்தது. அவனுடைய காதலி சாந்தோமில் வாழ்ந்து வந்தாள். அவளை அடிக்கடி சந்தித்து அவளுடன் அளவளாவும் வாய்ப்பும் அவன் முன்னர் நின்று அழைத்தது.

சென்னையைச் சுற்றியுள்ள இடத்தைக் கோல்கொண்டாவின் முதலமைச்சன் மீர்ஜும்லா என்பவன் வென்று தன் நாட்டுடன் இணைத்துக்கொண்டான் (1647). அப்போது ஆங்கிலேயர் சென்னையில் பெற்றிருந்த உரிமைகள் அனைத்தையும் உறுதி செய்துகொடுத்தான். ஐந்தாண்டுகள் கழித்துக் கம்பெனியின் கிழக்கிந்திய நாடுகளுக்குச் செயின்ட் ஜார்ஜ் கோட்டையே தலைமை ஆட்சியிடமாகவும் அமைந்தது. அந் நிலை 1655–ல் மாறுபட்டதேனும் 1661-ல் மீண்டும் அக் கோட்டையே தலைமையிடமாய் அமைந்தது. கோட்டையில் வசித்து வந்த ஆங்கிலேயப் பெண் ஒருத்தி அடிமைப் பெண்ணைக் கொன்று விட்டாள். அதைத் தொடர்ந்து நேர்ந்த சில குமுறல்களின் காரணமாகக் கோட்டையில் ஏஜன்டாகப் பணியாற்றி வந்த ஜார்ஜ் பாக்ஸ் கிராப்ட் என்பார் அதன் முதல் கவர்னராக நியமிக்கப்பட்டார். சென்னையில் மக்கள் தொகையானது பெருகி வரலாயிற்று. அது 1670-ல் 40,000-த்தை எட்டி நின்றது. அடுத்த கவர்னராக வில்லியம் லேங்கார்ன் (1672-8) நியமனம் ஆனார். சென்னைப் பகுதியில் சிவாஜி படையெடுத்து வந்தபோது அவருடன் கவர்னர் நட்புறவுத் தொடர்புகளை மேற்கொண்டார். அவரும் அவரையடுத்துக் கவர்னர் பதவியில் அமர்ந்த சர் ஸ்டிரேஷ் நாம் மாஸ்டரும் (1678-87) செயின்ட் ஜார்ஜ் கோட்டையை மேலும் வலுப்படுத்தினர். நீதி நிருவாகம் சீரமைக்கப்பட்டது. கூடலூரிலும் பறங்கிப்பேட்டையிலும் 1681-ல் ஆங்கிலேயர்கள் குடியேறினார்கள். கவர்னருக்கு 1684-ல் கம்பெனியின் 'பிரசிடென்டு' என்ற பதவிப் பெயரும் அளிக்கப்பட்டது; சென்னை மேலும் மேலும் வளர்ச்சி பெற்று மிகப் பெரியதொரு நகரமாகக் காட்சியளித்தது. அதன் நிருவாகத்துக்காக நகராட்சி ஒன்று நிறுவப்பட்டது (1688). மேயர் ஒருவரும், பன்னிரண்டு உறுப்பினரும் (ஆல்டர்மென்னும்) நகராட்சியின் நிருவாகத்தை மேற்கொண்டனர். கோல்கொண்டாவானது முகலாயரின் ஆளுகைக்கு உட்பட்டுவிட்ட பின்பு ஆங்கிலேயரின் உரிமைகள் யாவும் முகலாய அரசால் மீண்டும் உறுதி செய்யப்பட்டன (1690). அவ்வாண்டிலேயே கூடலூருக்குத் தெற்கே செயின்ட் டேவிட் கோட்டை எழுப்பப்பட்டது.

வரகுணராம குலசேகர பாண்டியன் என்பவன் கி.பி. 1613-ல் முடிசூட்டப் பெற்றுள்ளான். இவன் எம் முறையில் முன்னைய பாண்டியருக்கு உறவினன் எனத் தெரியவில்லை. இவன் வேள்விகள் இயற்றியவன் என அறிகின்றோம். அதனால் அவனுக்குக் குலசேகர சோமாசியார் என்றும் ஒரு பெயர் வழங்கிற்று. மற்றொரு பாண்டிய மன்னன் கி.பி. 1748-ல்

அரசாண்டுள்ளான். அவனும் வேள்வி இயற்றியவன் போலும். அவன் தன்னை வரகுணராம பாண்டிய குலசேகர சிவ தீட்சிதர் என்று குறிப்பிட்டுக் கொண்டுள்ளான்.

பாண்டிய மன்னர்கள் பேரரசர்களாக வாழ்ந்திருந்து பிறகு குறுநில மன்னர்களாக மாறி, இறுதியில் மதுரை நாயக்கரின் கீழும், விசயநகரத்து வேந்தரின் கீழும் வெற்று ஜமீன்தாரர்களாக இழிவுற்றுத் தம் பண்டைய பெருமையை இழந்து மறைந்து போயினர்.

**போர்ச்சுகீசியர்**

இந்தியாவுக்குள் முதன்முதல் அடியெடுத்து வைத்த ஐரோப்பியர் போர்ச்சுகீசியராவர். அவர்கள் வாணிகம் புரிந்து பொருளீட்டும் நோக்கத்துடனே நாட்டுக்குள் நுழைந்தனர். அவர்கள் பெரிதும் விரும்பி இந் நாட்டில் கொள்முதல் செய்த சரக்கு மிளகும் ஏனைய சம்பாரப் பொருள்களுமாம். ஐரோப்பியரின் ஊன் உணவுக்குச் சுவையூட்டவும், அதைப் பாத்திரங்களில் நிரப்பிப் பதனிட்டு வைக்கவும், மிளகு, இலவங்கம், ஏலக்காய் முதலிய நறுமணப் பண்டங்களும் ஐரோப்பியருக்குப் பெரிதும் தேவைப்பட்டன.

போர்ச்சுகீசிய மாலுமி வாஸ்கோ-ட-காமா என்பவன் முதன் முதல் கி.பி. 1498-ல் கள்ளிக்கோட்டை வந்து நங்கூரம் பாய்ச்சினான். அவன் வகுத்த கடல்வழியே ஏனைய ஐரோப்பியரும் வந்து இந்தியாவுடன் கடல் வாணிகம் மேற்கொள்ளுவதற்கு ஏற்றதொரு நெடுஞ்சாலையாக உதவிற்று. வாணிகக் கப்பல்களைத் தொடர்ந்து போர்க் கப்பல்கள் வந்தன. வாணிகச் செல்வாக்கில் ஓடிய நாட்டம் காலப்போக்கில் நாடு பிடிக்கும் முனைப்பாக மாறிற்று. ஆதியில் நாட்டில் காலெடுத்துவைத்த வணிகர்களிடம் கிறித்தவ சமயத்தைப் பரப்பும் எண்ணமே எழவில்லை.

போர்ச்சுகீசியரின் செல்வாக்கானது வெகு துரிதமாக வளர்ந்து வந்தது. அவர்கள் கேரளத்துக் கடற்கரையில் பல குடியிருப்புகளை அமைத்துக்கொண்டனர். அவர்களுடைய செல்வாக்கானது அங்கெல்லாம் வேரூன்றிக் கப்பும் கிளையும் விட்டுப் பரவலாயிற்று. தம் வாணிகச் செல்வாக்கை வளர்த்துக்கொள்ளவும், அரசியல் ஆதிக்கத்தைப் பெருக்கிக்கொள்ளவும், சமய வளர்ச்சியைத் தூண்டிவிடவும் போர்ச்சுகீசியர்கள் மக்களுக்கு எவ்விதமான இன்னல்களையும் கொடுமைகளையும் விளைக்கவும்

பின்தயங்கினரல்லர். ஒழுக்கம் அவர்களிடம் இழுக்குற்றது. கண்ணனூரிலும் கோவாவிலும் போர்ச்சுகீசியர் இந்துக் குடி மக்களைத் துண்டு துண்டாய் வெட்டியும், உயிருடன் அவர்களு டைய உறுப்புகளை அறுத்துப், படுகொலைகள் செய்தும் நெஞ்சைப் பிளக்கக்கூடிய கொடுமைகள் இழைத்தனர்.

மதுரையில் வீரப்பநாயக்கனின் ஆட்சிக் காலத்தின் இறுதியில் ஜெசூட் பர்னாண்டஸ் பாதிரியின் (Father Fernandez) தலைமை யில் ஜெசூட் பாதிரிகள் கிறித்தவ மிஷன் (இயேசு கிறித்தவக் குழு) ஒன்றைத் தொடங்கினார்கள் (1592). கிருஷ்ணப்ப நாயக்கனும் அவர்கட்கு அனுமதி வழங்கியிருந்தான். உயர்வகுப்புக் குடிமக் களைக் கிறித்தவர்களாக மாற்றுவதே இந்த மிஷனின் சீரிய நோக்கமாகும். அவர்கள் மாதாகோயில் ஒன்றையும் எழுப் பினர். பர்னாண்டஸ் பாதிரியார் பதினான்கு ஆண்டுகள் விடாமல் உழைத்தும் வெற்றிகண்டிலர். போர்ச்சுகீசியரைத் தமிழர்கள் பறங்கிகள் என்று இழித்துக் கூறினர். போர்ச்சுகீசியர் மாட்டு இறைச்சியைத் தின்றதையும், மதுபானம் குடித்ததையும், புலையரோடு கலந்து உறவாடியதையும் தமிழர் வெறுத்தனர். போர்ச்சுகீசியரின் நெஞ்சுரமும், படைப்பலமும், செல்வச் செருக்கும் தமிழரின் உள்ளத்தை அசைக்க முடியவில்லை. ஆகவே, மதுரை மிஷனின் தொடக்க முயற்சிகள் படுதோல்வியில் முடிந்தன. எனினும் ராபர்ட்-டி-நொபிலி பாதிரியார் மதுரைக்கு வந்து பணியேற்ற பிறகு மதுரை மிஷனின் சரித்திரமே மாறி விட்டது. ஆதியில் அப் பாதிரியின் முயற்சிகளுக்குப் பல இன்னல் களும், இடும்பைகளும் ஏற்பட்டன. மதுரை நாயக்கர்களின் படை களுடன் கிறித்தவப் பாதிரிகளும் கலந்து அணிவகுத்துச் செல்ல வேண்டியவர்களாக இருந்தனர். ஆனால், அஃதும் ஒரு நற்பயனையே விளைவித்தது. சேனைகள் திருச்சிராப்பள்ளிக்குச் செல்லும்போதெல்லாம் நொபிலி பாதிரியார் தாமும் உடன் சென்று ஆங்காங்குத் தம் சமயப் பணிகளைச் செய்து வந்தார். சத்தியமங்கலத்தில் 1643-ல் கிறித்தவப் பிரசாரத்துக்காகப் பாதிரி டி-காங்டாவுக்கு அனுமதி வழங்கப்பட்டது. செஞ்சியை யடுத்திருந்த பாளையக்காரன் ஒருவன் கிறித்தவப் பணிகளை மேற்கொள்ளும் முயற்சிகளுக்குத் தன் இசைவைத் தெரிவித் தான். இராமநாதபுரத்துக் கிறித்தவப் பாதிரிகளுக்கும் சூழ்நிலை ஏற்றபடியே அமைந்திருந்தது. நாளடைவில் மதுரை மிஷனானது மதுரை, தஞ்சாவூர், செஞ்சி ஆகிய ஊர்களின் எல்லைகளைக் கடந்து மேலும் பரவிச்சென்று வேலூர், கோல்கொண்டா தேசங் களிலும் பரவலாயிற்று. பல சமயங்களில் மராத்தியரின் தாக்கு தல்களாலும் மிஷன் தொண்டுகளுக்குத் தடை ஏற்பட்டதுண்டு.

கிறித்தவர்கள் பட்ட துன்பங்கட்கு இறுதியாக ஒரு முடிவு ஏற்பட்டது. இராணி மங்கம்மாள் 1689-ல் அரசாட்சியை ஏற்றாள். அவளுக்குக் கிறித்தவர்களிடம் பரிவு ஏற்பட்டது. பாதிரிகளும் தம் பணியில் முனைப்புற்றார்கள்.

**டச்சுக்காரர்கள்**

போர்ச்சுகீசியருக்கும் டச்சுக்காரருக்குமிடையே நேரிட்டு வந்த பூசல்களிலும் போராட்டங்களிலும் போர்ச்சுகீசியரின் கால் சறுக்கி வந்தது. அவர்கள் இலங்கையை டச்சுக்காரரிடம் இழந்தனர் (1638); பிறகு டச்சுக்காரர்கள் தூத்துக்குடியையும் (1658), நாகப்பட்டினத்தையும் (1659) போர்ச்சுகீசியரிடமிருந்து பறித்துக்கொண்டனர். கேரளக் கடற்கரையில் சில ஊர்களும் போர்ச்சுகீசியரிடமிருந்து டச்சுக்காரரின் கைக்கு மாறின. சோழ மண்டலக் கடற்கரையில் நாகப்பட்டினமே டச்சுக்காரரின் தலைநகராக அமைந்தது. அங்கு டச்சுக்காரர்கள் வலிமையான கோட்டை கொத்தளங்கள் கட்டிக்கொண்டனர். அக் கோட்டையை டச்சுக் கம்பெனியின் கவர்னர் தம் இருப்பிடமாகக் கொண்டார். டச்சுப் பாதிரியான ஆபிரகாம் ரோசர் புலிக்காட்டில் தங்கித் தம் பணிகளைச் செய்துவந்தார்.

டச்சுக்காரரின் செல்வாக்கு உயர்ந்துகொண்டே போயிற்று. அவர்களுக்கு வெற்றிமேல் வெற்றி கிடைத்துவந்தது. வாணிகத் தொழிலிலும், கப்பலோட்டுவதிலும், தொழில்கள் அமைப்பிலும், பொருளாதாரத்திலும், அறிவு நுட்பத்திலும், டச்சுக்காரர்கள் ஏனைய ஐரோப்பியரைவிடப் பலபடிகள் மிஞ்சி நின்றார்கள். வாணிகத்தைத் தொடர்ந்து நடத்திவரவும்; கைப்பற்றிய நாடுகளை ஆண்டு அனுபவிப்பதற்காகவும் ஹாலந்தில் ஐக்கியக் கம்பெனி ஒன்று நிறுவப்பட்ட பிறகு, டச்சுக்காரரின் கைகள் வலுவுற்றன. தம் நோக்கம் இன்னதெனவும், அதை அடையும் முறையும் துறையும் இன்னவெனவும் டச்சுக்காரர்கள் திட்டமாகவும், தெளிவாகவும் உணர்ந்திருந்தனர். எனவே, அவர்கள் தம் நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ளுவதில் துரிதமான பயனைக் கண்டனர்.

**டேனியரும் பிரெஞ்சுக்காரரும்**

தரங்கம்பாடியில் டேனிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி வணிகர்கள் கோட்டை ஒன்றைக் கட்டிக்கொண்டு தம் வாணிகத்தைத் தொடங்கினர். இந்தியாவில் கொள்முதல் செய்த சரக்குகளை அவர்கள் மலேயத் தீவுகட்கு ஏற்றிச்சென்று விற்பனை செய்து அவற்றுக்கு ஈடாக அங்கிருந்து சம்பாரப் பண்டங்களை வாங்கி

வருவது இக் கம்பெனியின் சிறப்பான நோக்கமாக இருந்து. ஆனால், இந்த வாணிகத்தில் அவர்கள் இலாபங் காணவில்லை. எனவே, டேனியர்கள் தரங்கம்பாடியையும், வடக்கில் இருந்த சேராம்பூரையும் ஆங்கிலேயரின் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு ரூ. 12,50,000-க்கு விற்றுவிட்டார்கள்.

பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி 1664-ல் முதன் முதல் தோற்றுவிக்கப்பட்டது. சூரத்திலும் (1668), மசூலிப்பட்டினத்திலும்(1669)இக் கம்பெனியின் தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டன. ஏனைய ஐரோப்பியருடன் பிரெஞ்சுக்காரரும் அரசியல்வட்டாட்டத்தில் இறங்கினர். நாட்டின் அவலநிலைமையை அறிந்து எரியும் வீட்டில் கொள்ளியைப் பிடுங்கினவரை இலாபம் என்னும் கொள்கையை மேற்கொண்டு பிரெஞ்சுக்காரர்கள் ஆங்காங்கு இடம் தேடிப் பிடித்து வந்தனர். சாந்தோமை 1672-ல் முற்றுகையிட்டுக் கைப்பற்றி மீண்டும் அதை 1674-ல் இழந்துவிட்டார்கள். பீஜப்பூர்ச் சுல்தான்கீழ்க் குறுநில மன்னனாக இருந்த ஷேர்கான் லோடி என்பவன் பெரம்பலூருக்கு அண்மையில் வலிகண்டபுரத்தில் அரசாண்டு வந்தான். அவனிடமிருந்து புதுச்சேரியை பிரான்சுவா மார்ட்டின் என்ற பிரெஞ்சுக்காரன் தானமாகப் பெற்றான். பிரெஞ்சுக்காரரின் வாணிக நிறுவனம் அங்கு அமைக்கப்பட்டது. தொடர்ந்து நூறாண்டுகளுக்குமேல் புதுச்சேரியானது தமிழகத்து வரலாற்றில் பல நிகழ்ச்சிகளுக்கு விளைகளனாக இருந்து வந்துள்ளது. சிவாஜியின் படையெடுப்பு ஒன்றினால் (1677) புதுச்சேரியானது பல அல்லல்களுக்குள்ளாயிற்று. எனினும் மார்ட்டினின் விடாமுயற்சியினால் பிரெஞ்சு வாணிகம் மேலும் மேலும் வளர்ந்துவந்தது. புதுச்சேரி 1693-ல் டச்சுக்காரர்களின் கைக்குள் விழுந்தது. எனினும் பிரெஞ்சுக்காரர்கள் மீண்டும் அதை டச்சுக்காரரிடமிருந்து கைப்பற்றிக்கொண்டனர். மார்ட்டின் புதுச்சேரியில் கோட்டை எழுப்பியும், கொத்தளங்கள் அமைத்தும் அதை வளமுள்ள நகரமாக மாற்றினான். அவன் காலத்தில் புதுச்சேரியின் மக்கள்தொகை நாற்பதினாயிரத்தைக் கடந்து நின்றது. புதுச்சேரி வளர்ச்சிபெற்று வருவதைக் கண்ட மார்ட்டின் சூரத்து, மசூலிப்பட்டினம் ஆகிய ஊர்களின் தொழிற்சாலைகளுக்கு முடிவு கட்டினான். பிரெஞ்சு நாட்டுக்காக முப்பத்தெட்டாண்டுகள் அயராமல் உழைத்துவந்த மார்ட்டின் 1706-ல் காலமானான்.

### கிழக்கிந்தியக் கம்பெனி

இங்கிலாந்தின் குடிமக்கள் அனைவருமே இந்தியாவுடன் வாணிகம் செய்யும் உரிமையுடையவர்களாவர் என்று

இங்கிலாந்தின் பாராளுமன்றம் தீர்மானம் ஒன்று நிறைவேற்றிற்று (கி.பி. 1694). இத் தீர்மானத்தின் அடிப்படையில் வேறு கம்பெனிகளும் நிறுவப்பட்டன. அவற்றுக்குள் போட்டியும் பொச்சரிப்பும் பெருகிவந்தமையால், நிறுவப்பெற்ற கம்பெனிகள் அனைத்தும் ஒருங்கிணைந்து ஒரே கம்பெனியாக உருவாயின (கி.பி. 1708-9). அப் புதிய கம்பெனியானது பல இடுக்கண்கள், இன்னல்களினிடையே பெரிதும் முனைந்து இந்திய மண்ணில் தன் நிலையான வாழ்வுக்கு உறுதியான அடிப்படைகள் அமைத்துக்கொள்ளலாயிற்று. அது மொகலாயப் பேரரசினிடமிருந்து பல உரிமைகளையும், வாணிகச் செல்வாக்குகளையும் கேட்டுப் பெற்றது. கல்கத்தாவிலும், ஐதராபாத்திலும், சூரத்திலும், சென்னையிலும் விரிவான நில உரிமைகள் இதற்கு வழங்கப்பெற்றன. மொகலாயப் பேரரசு முழுவதிலும் பம்பாயில் அச்சிட்ட கம்பெனி நாணயங்கள் செல்லுபடியாயின. மராத்தியருக்கும் போர்ச்சுகீசியருக்கும் இடையே ஏற்பட்ட போர்களினால் கம்பெனி வாணிகம் குன்றிவரத் தொடங்கிற்று. அதனால் தன் தற்பாதுகாப்புக்காகக் கம்பெனியானது இங்கிலாந்திலிருந்து ஏராளமான படைகளையும் போர்க்கருவிகளையும் இறக்குமதி செய்துகொண்டது. தனக்குண்டான படைப் பலத்தைப் பயன்படுத்திக்கொண்டு அவ்வப்போது கட்சி கூடி உள்நாட்டுப் போர்களில் தலையிட்டுக்கொண்டு தன் போர்த் திறனையும் பொருள் பலத்தையும் வெளிப்படுத்திப் பயன்பெறுவதும் நாடு பிடிப்பதும் கம்பெனிக்கு அரிய செயலாகத் தோன்றவில்லை.

சோழ மண்டலக் கடற்கரைப் பகுதியும், அதைச் சார்ந்துள்ள நிலப் பகுதியும் இந்திய வரலாற்றில் கருநாடகம் என்னும் பெயரால் வழங்கி வருகின்றன. இது ஐரோப்பியர் கொடுத்த பெயராகும். பதினெட்டாம் நூற்றாண்டு தொடங்கிச் சில ஆண்டுகளில் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்குமிடையே நாடு பிடிக்கும் போட்டியானது ஓங்கி வளர்ந்து பல போர்கள் விளைவதற்கு அடிப்படைக் காரணமாக விளங்கிற்று. சிறிது காலத்தில் பிரெஞ்சுக்காரர்கள் சூரத், மசூலிப்பட்டினம் போன்ற துறைமுகப்பட்டினங்களில் அமைக்கப்பட்டிருந்த தம் தொழிற்சாலைகளைக் கைவிடவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. அவர்களுடைய வாணிகம் சுருங்கவே அரசியல் செல்வாக்கும் குன்றிவரலாயிற்று. தாம் வாணிகம் செய்து பொருள் திரட்ட வேண்டுமென்றுதான் பிரெஞ்சுக்காரர்கள் ஆதியில் திட்டமிட்டிருந்தனர். அவர்கள் திரட்டிக்கொண்ட படைப்பலமும் அவர்களுடைய வாணிகத்தின் பாதுகாப்புக்காகவே பயன்

படுத்தப்பட்டது. பிரெஞ்சுக்காரர்கள் 1725-ல் கேரளக் கடற்கரையில் அமைந்துள்ள மாஹியையும், 1739-ல் காரைக்காலையும் கைப்பற்றினார்கள். புதுச்சேரிக்கு டூப்ளே என்பான், 1742-ல் கவர்னராகப் பொறுப்பேற்றான். அதன் பின்பு பிரெஞ்சுக்காரரின் நோக்கமும், கொள்கையும் மாற்றம் பெற்றன. ஆங்கிலேயருடன் அரசியல் போட்டிகளில் இறங்கி, நாடு கவரும் முயற்சிகளில் பிரெஞ்சுக்காரரும் ஈடுபடலாயினர்.

சோழ மண்டலக் கடற்கரையோரத்தில் ஆங்கிலேயரின் கைவசம் இருந்த சென்னைப்பட்டினமும், பிரெஞ்சுக்காரரிடம் இருந்த புதுச்சேரியும் இருபெரும் வாணிகத் துறைமுகப்பட்டினங்களாக விளங்கின. இரு நாட்டினரும் அவரவர் ஊரில் வலிமை பொருந்திய கோட்டை கொத்தளங்களை எழுப்பினர். புதுச்சேரிக்குத் தென்பால் சற்றுத் தொலைவில் அமைந்திருந்த செயின்ட் டேவிட் கோட்டையும் ஆங்கிலேயர் வசமே இருந்தது. கருநாடகம் முழுவதிலும் ஐரோப்பியரிடம் மட்டுந்தான் படைப் பலம் குவிந்திருந்தது. இந்திய நாட்டு மன்னரிடம் தரைப் படையோ கப்பற்படையோ கிடையா. எனவே, ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் உள்நாட்டு மன்னர்களைச் சூதுக்காய்களாக வைத்துக்கொண்டு அரசியற் பகடையாடத் தொடங்கினர்.

கருநாடகம் அரசியற்றுறையிலும், சமூகத்துறையிலும் மிகப்பெரும் கொந்தளிப்பில் ஆழ்ந்திருந்தது. மொகலாயப் பேரரசின்கீழ்த் தக்கணத்துச் சுபேதாரானவன் ஐதராபாத்தில் அமர்ந்து அரசாண்டுவந்தான். கருநாடகம் முழுவதும் அவனுடைய ஆணைக்குப் பணிந்து நின்றது. ஆர்க்காட்டு நவாபு அவன் கீழிருந்து ஆர்க்காட்டுத் தேசத்தை அரசாண்டுவந்தான். தக்கணத்துச் சுபேதார் நைஜாம் உல் முல்க் என்பவன் டில்லியின் நுகத்தினின்றும் நழுவித் தானும் ஒரு சுதந்தர மன்னனாகவே நடந்து கொண்டான். அவனைப் பின்பற்றி, அவன்கீழ்ச் செயல்பட்டு வந்தவனான ஆர்க்காட்டு நவாபும் அவனுடைய ஆணையினின்றும் விடுதலை பெற்றுத் தானும் ஒரு சுதந்தர மன்னனாக இயங்கிவரலானான். மொகலாயப் பேரரசின் அரசியற் குழப்பங்களிலும் மராத்தியர்கள் கொடுத்துவந்த தொல்லைகளிலும் சிக்குண்டு திணறிக்கொண்டிருந்த நைஜாமுக்கு ஆர்க்காட்டு நவாபைக் கண்காணித்து வரவோ, அவ்வப்போது அவனை இழுத்துப்பிடிக்கவோ நேரமோ, வசதிகளோ இல்லாமற்போயிற்று. எனினும் கருநாடகத்தின் அரசியலில் தலையிடும் வாய்ப்பு ஒன்று தானாகவே அவனை நெருங்கி வந்தது.

மராத்தியர்கள் 1740ஆம் ஆண்டில் கருநாடகத்தின்மேல் பாய்ந்து மக்களைச் சூறையாடினார்கள்; நாடெங்கும் கொள்ளையும் கொலையும் விளைவித்தார்கள். குழப்பங்களும் கலகங்களும் பேயாட்டமாடின. மக்களின் கண்ணீரிலும் செந்நீரிலும் நாடு தோய்ந்தது. மராத்தியர்கள் ஆர்க்காட்டின்மேல் படையெடுத்து வந்து ஆர்க்காட்டு நவாபு தோஸ்து அலியைக் கொன்று, அவனுடைய மருமகனான சந்தா சாயபுவைச் சத்தாராவுக்குச் சிறைபிடித்தேகினார்கள் (1741). தோஸ்து அலியின் மகனான சப்தர் அலி என்பவன் மராத்தியருக்கு ஒரு கோடி ரூபா இலஞ்சம் கொடுப்பதாக வாக்களித்து நாட்டை மராத்தியரின் கொடுமைகளிலிருந்தும் மீட்டுக்கொண்டான். ஆனால், அவன் வேலூர் இன்னேதாரனான முர்தஸா அலி என்னும் அவனுடைய உறவினனாலேயே கொலையுண்டு இறந்தான். அவனுடைய இளம் மகன் ஆர்க்காட்டு நவாபாகப் பட்டங்கட்டி வைக்கப்பட்டான் (1742). தொடர்ந்து ஏற்பட்ட இந் நிகழ்ச்சிகள் கருநாடகக் குடிமக்களுக்குப் பேரச்சத்தையும் அவலத்தையும் விளைவித்தன. அவர்களுடைய அச்சத்தை மாற்றி அவர்கட்கு ஆறுதல் கூறி நாட்டில் அமைதியைத் தோற்றுவிப்பதற்காக நைஜாம் 1743-ல் கருநாடகம் வந்தான். ஆர்க்காட்டின் அரசியல் வக்கணைகளை நிமிர்த்த முயன்றான். தன்னுடைய நம்பிக்கைக்குப் பாத்திரனாக இருந்த அன்வாருதீன் கானை ஆர்க்காட்டு நவாபாக நியமித்தான். தோஸ்துகான் இளம் மகன் கொல்லப்பட்டு இறந்தான். நாட்டில் குழப்பங்கள் குறைந்தபாடில்லை. தோஸ்து அலியின் உறவினர்கள் அன்வாருதீன்கானை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யலானார்கள்.

இவ்வளவில் ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் அமைதியாகத் தத்தம் அளவில் வாணிகத்தில் ஆழ்ந்து ஈடுபட்டிருந்தனர்; நாட்டு அரசியல் போராட்டங்களில் கலந்துகொள்வதற்கோ, அவற்றால் விளைந்த குழப்பங்களில் தமக்கு ஆக்கம்தேடிக்கொள்ளுவதற்கோ விருப்பமும் முயற்சியும் இழந்தவர்களாகத் தத்தம் கோட்டைகளில் முடங்கிக் கிடந்தனர். ஆனால், தமிழகத்தின் விதியோ மூலையில் கிடந்த அவர்களை முற்றத்தில் இழுத்துவிட்டது.

## முதல் கருநாடகப் போர்

ஐரோப்பாவில் நடைபெற்ற ஆஸ்திரிய அரசுரிமைப் போட்டி ஒன்றில் ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் எதிர்க்கட்சிகளுக்குத் துணை நின்று ஏழாண்டுக்காலம் போரில் ஈடுபட்டிருந்தனர் (1742-48). அக் காரணத்தால் இந்தியாவிலும் அவ்விரு நாட்டுக் கம்பெனிகளுக்குமிடையே பகையும் போரும் மூண்டன.

புதுச்சேரிக் கவர்னர் டூப்ளே ஆங்கிலேயருடன் போரிட விரும்ப வில்லை. கருநாடகத்தில் கட்சிச் சார்பின்றிப் பகையின்றிச் சமாதான முறையிலேயே நடந்துகொள்ள எண்ணங்கொண் டான். அவனுடைய எண்ணத்தின்படி போர் நடவடிக்கை களைக் கைவிடுவதற்கு ஆங்கிலேயர் ஒருப்பட்டிலர். ஆகவே, கருநாடகத்திலும் முற்றுகைகளும் தாக்குதல்களும் தொடர்ந் தன. பிரெஞ்சுக்காரர்கள் தக்கதொரு கடற்படையுடன் சென்னையைக் கைப்பற்றினர் (1746). டூப்ளேயின் வாழ்விலும் அதிர்ஷ்ட தேவதையின் கடைக்கண் பார்வை விழுந்தது. ஆனால், மக்கள் சமூக வரலாறு ஒரு கொள்ளிவட்டம் போன்றது. நிகழ்ச்சிகள் சுழன்றுகொண்டே இருக்கும். கருநாடக வரலாற்றிலும், டூப்ளேயின் வாழ்விலும் மிகப் பெரிய தொரு நிகழ்ச்சி இடங்கொள்ளக் காத்துக்கொண்டிருந்தது. தன் தேசத்தில் நடைபெற்றுக்கொண்டிருந்த அரசியல் சூழல்களைக் கண்டு வாளாவிருக்க அன்வாருதீன்கான் விரும்பினானல்லன். தன் காவலின்கீழ் வாழ்ந்துவந்த ஆங்கிலேயரையும் பிரெஞ்சுக் காரரையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்புத் தனக்கு உண்டு என்று அவன் உணர்ந்திருந்தான். சென்னையைப் பிரெஞ்சுக் காரர் முற்றுகையிட்டிருந்தபோது தமக்குப் பாதுகாப்பளிக்கு மாறு அன்வாருதீனிடம் ஆங்கிலேயர் முறையிட்டுக்கொண் டனர். அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி அன்வா ருதீன்கான் முற்றுகையை விலக்கிக் கொள்ளும்படி பிரெஞ்சுக் காரருக்கு ஆணை ஒன்று அனுப்பினான். பிரெஞ்சுக்காரர் அதற்குக் கீழ்ப்படிய மறுத்தனர். அவர்கள் தன்னை அசட்டை செய்ததற்காக ஆர்க்காட்டு நவாபு வெகுண்டான்; சென்னையை வளைத்துக்கொண்டு பிரெஞ்சுக்காரரைத் தாக்கும் படி ஒரு படையை ஏவினான். ஆனால், வெற்றி பிரெஞ்சுக் காரர்களுக்கே கிடைத்தது. அவர்களுடைய பெருமையும் மதிப்பும் பன்மடங்கு உயர்ந்தன. டூப்ளே சென்னையை 'அடி முதல் முடி வரையில்' சூறையாடினான் (1746). டூப்ளேயின் நெஞ்சுரம் மேலும் வலுவடைந்தது. அவன் செயின்ட் டேவிட் கோட்டையைப் பதினெட்டு மாத காலம் முற்றுகையிட்டான்; ஆனால், அவனால் வெற்றி காண வியலவில்லை. ஆங்கிலேயரின் உதவிக்குப் புதியதாகத் தரைப்படையும் கடற்படையும் வந்து சேர்ந்தன. அவர்கள் அவற்றைக்கொண்டு கடல், தரை ஆகிய இரு முனைகளிலும் புதுச்சேரியைத் தாக்கினார்கள். ஆனால், அவர்கள் ஏவிய படைகள் போதுமளவு பயிற்சி பெறாதவை; வெற்றி நெருங்குவதாகத் தெரியவில்லை. அதற்குள் ஐரோப்பாவில் ஆஸ்திரிய அரசுரிமைப் போரில் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அவ்வுடன்படிக்கையின்படி

சென்னையானது மீண்டும் ஆங்கிலேயர் வசம் ஒப்படைக்கப் பட்டது.

### இரண்டாம் கருநாடகப் போர்

முதல் கருநாடகப் போர் டூப்ளேயின் சிந்தனையைத் தூண்டி விட்டது. ஆங்கிலேயருடன் அவன் மேற்கொண்ட அரசியல் சதுரங்கத்தில் அவன் பல நுட்பங்களையும் ஊகங்களையும் படித் தறிந்தான். அன்வாருதீன்கானின் சேனைகள் சென்னை முற்று கையில் அவசரக்கோலத்தில் அள்ளித் தெளித்ததையும், ஆனால் திறமான படைப்பயிற்சியும், சிறந்த ஆயுத பலமும் தனக்கு வெற்றி தேடித் தந்ததையும் அவன் நன்கு உணர்ந்துகொண் டான். நல்ல பயிற்சியளிக்கப்பட்ட ஒருசில ஐரோப்பிய வீரருக்கு முன்பு ஆயிரக்கணக்கான, பயிற்சியளிக்கப்படாத இந்தியச் சிப்பாய்களால் முனைந்து நிற்கமுடியாது என்பதை அவன் கண்டறிந்தான். எனவே, கட்டுப்பாடும், ஒருமைப்பாடும், நெஞ்சுரமும் கொண்டிருந்த தன் படையைப் பெரிதும் நம்பி அரசியல் நடைமுறைகளைச் சீரமைத்துக் கொண்டான். போர்ப் பயிற்சியும், ஆயுத பலமும் வாய்க்கப் பெற்ற அவனுடைய படை களின் துணையை நாடி உள்நாட்டு மன்னர் யாவரும் எப்போதும் தன்னிடம் வரக்கூடும் என்று டூப்ளே எதிர்பார்த்துக் கொண் டிருந்தான். அஃதுடன் தன் படை சாயுமிடமே வெற்றியும் சாயும் என்ற உண்மையையும் அவன் உணர்ந்திருந்தான்.

மராத்தியரால் 1741-ல் சிறைபிடிக்கப்பட்ட சந்தா சாயபு ஏழாண்டுகள் கழித்து விடுதலையானான். உடனே தன் மாமனார் தோஸ்து அலியிடமிருந்து பறிக்கப்பட்ட ஆர்க்காட்டு அரசை மீட்டுக்கொள்ளும் முயற்சியில் இறங்கினான். அதே சமயம் நைஜாம் உல் முல்க் காலமானான் (1748). அவனுக்குப் பின் அவன் மகன் நாஜர் ஜங் தக்கணத்தின் சுபேதாரானான். ஆனால், அவனுடைய பேரனான முஜாபர் ஜங் என்பவன் முகலாயப் பேரரசன் தன்னைத்தான் சுபேதாராக நியமித் துள்ளான் என்று கூறிக்கொண்டு தக்கணத்து அரியணைக்கு உரிமை கொண்டாடினான்.

இத்தகைய நல்வாய்ப்பையே டூப்ளே எதிர்நோக்கி நின் றான். 'பருவத்தோடு ஒட்ட ஒழுகும் படிப்பினை'யை டூப்ளே நன்கு ஓர்ந்தவன். காலந்தாழ்த்தாமல் செயலில் இறங்கினான். ஆர்க்காட்டு அரியணையில் ஏற்றுவிப்பதாகச் சாந்தா சாயபு வினிடமும், தக்கணத்து அரியணையில் ஏற்றுவிப்பதாக முஜாபர் ஜங்குடனும் அவன் இரு உடன்படிக்கைகள் செய்துகொண்டான்.

உடன்படிக்கைகளும் உடனே நடைமுறைக்குக் கொண்டுவரப் பட்டன. டூப்ளேயும், சாந்தா சாயபுவும், முஜாபர் ஜங்கும் கூட்டுக்கூடி அன்வாருதீன்கானை ஆம்பூரில் போரில் கொன்றார் கள் (1749). அன்வாருதீன்கான் மகன் முகமதலி திருச்சிராப் பள்ளிக்கு ஓடிவிட்டான். அவனைத் துரத்திக்கொண்டு பிரெஞ்சுப் படையொன்று திருச்சிராப்பள்ளியை நோக்கி விரைந்தது. தம்மை நோக்கிப் பாய்ந்துகொண்டிருந்த பேரா பத்தை உணர்ந்தனர் ஆங்கிலேயர். தமக்கு உடனே துணை வரும்படி நாஜர் ஜங்குக்கு விண்ணப்பித்துக் கொண்டார்கள். அஃதுடன் அமையாது அவர்கள் முகமதலியின் உதவிக்குத் திருச்சிராப்பள்ளிக்கு ஒரு சிறு படையையும் அனுப்பிவைத்தார் கள். ஆங்கிலேயரின் முறையீட்டுக்கு இணங்கி நாஜர் ஜங்கும் தண்டெடுத்து வந்தான். ஆங்கிலேயருக்குக்குப் போர்த்திறன் போதவில்லை யாதலால் நாஜர் ஜங் கொலையுண்டு மாண்டான் (1750). சிறையில் அடைப்பட்டுக்கிடந்த முஜாபர் ஜங் விடுதலை பெற்றுச் சுபேதாராக ஏற்றம் பெற்றான். செய்ந்நன்றி மறவாத முஜாபர் ஜங் டூப்ளேயுக்குச் சில கைம்மாறுகளைக் கனிந்து செய்தான். புதுச்சேரியைச் சுற்றியுள்ள சில நிலப் பகுதிகளையும், ஒரிஸ்ஸாவைச் சுற்றியுள்ள சில நிலப்பகுதிகளை யும், மசூலிப்பட்டினத்தையும் டூப்ளேயுக்கு வழங்கினான். போதாக்குறைக்குக் கிருஷ்ணை நதிக்குத் தென்புறத்தில் முகலாயப் பேரரசுக்குச் சொந்தமான நிலப்பகுதிக்கு டூப்ளே யைக் கவர்னராக நியமித்தான். புதிய பதவிகளின் மோகத்தில் மூழ்கிய டூப்ளேயானவன் உதவிக்குக் கூப்பிட்டபோது விரைந்து செல்லுவதற்காகக் கர்னல் புஸ்ஸி என்ற படைத்தலைவன் தலைமையில் சேனை ஒன்றையும் ஐதராபாத்தில் நிறுத்திவைத் தான். டூப்ளே ஆர்க்காட்டையும் ஐதராபாத்தையும் நோக்கி விம்மிதம் எய்தினான். தனக்கு ஆட்பட்ட இருவர் இருதேசங் களின் அரியணைகளில் அமர்ந்து ஆட்சி புரிந்துவந்தது அவனுக்கு எல்லையில்லாப் பூரிப்பைக் கொடுத்தது. பிழைப்பைத் தேடிக் கடல்கடந்து வந்த அன்னிய வாணிகக் கூட்டம் ஒன்று இந்திய மண்ணில் அடியெடுத்து வைத்த இரண்டாண்டுக் காலத்தில் தக்க ணத்திலும் கருநாடகத்திலும் அரசாட்சி அமைத்துக்கொண்டும், மேலாதிக்கத்தை விரித்தும் ஓங்கி நிற்குமாயின், டூப்ளேயின் இதயம் விம்மி வழிந்ததில் வியப்பேதுமில்லை. அவனுடைய நண்பர்களும் அவனுக்கு எய்திய உன்னத அரசியல் ஏற்றத்தைக் கண்டு திகைப்புற்றுப் போயினர்.

திருச்சிராப்பள்ளியை நோக்கி விரைந்த பிரெஞ்சு அணிகள் வழியில் தஞ்சாவூரை முற்றுகையிட்டு அவ்விடத்திலேயே களைத்

துப் போயின. அதே சமயம் ஆங்கிலேயரின் துணையைப் பெற்ற முகமதலியின் எதிர்ப்பும் கடுமையாயிற்று. ஆங்கிலேயரின் படை வலி முழுவதும் தன்வசம் அடையும் வரையில் முகமதலி பிரெஞ்சுக்காரரிடம் சமாதானப் பேச்சுகள் பேசிக் காலந் தாழ்த்தி வந்தான். அவனுடைய உத்தியை டூப்ளே 1751ஆம் ஆண்டு மே மாதந்தான் நன்கு உணர்ந்தான். உடனே தானும் 'லா' என்பவன் தலைமையில் திருச்சிராப்பள்ளியை நோக்கி ஒரு படையை ஏவினான். லாவுக்குப் போர்த் தந்திரங்கள் போதா வாயின. திருச்சிராப்பள்ளி முற்றுகை நீடித்துக்கொண்டே போயிற்று. ஆங்கிலேயருக்கு மைசூர், தஞ்சாவூர் மன்னர்களும், மராத்தியத் தலைவன் முராரி ராவும் படைத்துணை அனுப்பி வைத்தனர். வங்கத்திலிருந்து ஆங்கிலேயப்படை ஒன்று தமிழ கத்தை நோக்கி விரைந்தது. அப் படையில் முந்நூறு சிப்பாய் களும், இருநூறு ஆங்கிலேயரும் மட்டுமே இருந்தனர். அப்படை யைச் செலுத்தி வந்தவன் ராபர்ட் கிளைவ் என்பவன். அவன் சென்னைக் கம்பெனியில் எழுத்தனாகப் பணியாற்ற வந்தவன். இராணுவத்தில் சேர்ந்து வெகு குறுகிய காலத்தில் படைத்தலை மையும் எய்தினான். பேரெதிர்ப்பு ஏதும் இன்றியே கிளைவ் ஆர்க்காட்டை முற்றுகையிட்டுக் கைப்பற்றிக் கொண்டான். அவனிடமிருந்து தன் தலைநகரை மீட்டுக்கொள்ளுவதற்காகச் சந்தா சாயபு திருச்சிராப்பள்ளியிலிருந்து ஆர்க்காட்டுக்கு ஒரு சேனையை அனுப்பினான். கிளைவ் ஐம்பத்து மூன்று நாள் அப் படையுடன் பொருது வெற்றிகண்டான். சந்தா சாயபுவின் படை கள் தோற்றுப் புறமுதுகிட்டன (1751). ஆங்கிலேயரின் ஆர்க் காட்டு வெற்றியானது அவர்களுடைய பகைவருக்கு அச்சத் தையும் அதிர்ச்சியையும் விளைத்தது. என்றும் இராத அளவு அவர்களுடைய மதிப்பும் உயர்ந்துவிட்டது. பிரெஞ்சுப் படைத் தலைவன் 'லா' என்பவன் ஆங்கிலேயருடைய மாபெரும் வெற்றி யைக் கேள்வியுற்று வெருண்டு திருவரங்கத்தில் ஓடி ஒளிந்தான். திருவரங்கத்தை வளைத்துக் கொள்ளுமாறு ஆங்கிலேயப் படைக் குக் கிளைவ் ஆணையிட்டான். சந்தா சாயபுவின் துணைக்கு டூப்ளே ஓர் அணியை அனுப்புவித்தான். ஆனால், அப் படை யானது நிலைகுலைந்து முற்றுகையைக் கைவிட்டு ஆங்கிலேய ரிடம் அடைக்கலம் புகுந்தது (ஜூன் 1752). லாவும், அவனுடைய படையினரும் ஆங்கிலேயரால் சிறைபிடிக்கப்பட்டனர். தஞ்சா வூர்ப் படைத் தலைவன் ஒருவனுடைய வாளுக்கிரையாகிச் சந்தா சாயபுவின் தலை தரையில் உருண்டது.

டூப்ளே ஏங்கி நின்றான். அவன் எழுப்பிய மனக்கோட் டைகள் யாவும் இடிந்து தரைமட்டமாயின. திறமையற்ற

அவனுடைய படைத் தலைவர்கள் அவனைச் சமயத்தில் கைவிட்டு விட்டார்கள். கையில் கிடைத்தது வாய்க்கு எட்ட வில்லை. எனினும் டூப்ளே கருத்தழிந்தான் அல்லன். அரசியல் சூழ்ச்சிகளை மேற்கொண்டு தனக்குத் துணைப்பலம் திரட்டிக் கொள்ளத் திட்டமிட்டான். முராரி ராவையும், மைசூர் வேந்




தனையும் தன் சூழ்ச்சியில் சிக்க வைத்தான். தஞ்சாவூர் அரசனை நடுநிலையில் நிற்குமாறு பணித்து அவனிடம் ஓர் ஒப்பந்தமும் செய்து கொண்டான். டூப்ளே எடுத்த முயற்சியைத் தளரவிட மனமில்லாதவனாய் மீண்டும் ஒருமுறை திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டான் (1752 டிசம்பர்). முற்றுகை ஓராண்டு நீடித்தது; ஆனால், வெற்றி என்னவோ அவனுக்குக் கிடைக்க வில்லை.

துரதிர்ஷ்டம் டூப்ளேயைத் துரத்திக்கொண்டு வந்தது. அவனுடைய தாய்நாடான பிரான்சில் வெறுப்பும் எதிர்ப்பும் மூண்டன. இந்திய நாட்டில் டூப்ளே கடைப்பிடித்த கொள்கைகளினாலும், கையாண்ட முறைகளினாலும் வீணான மனக் கசப்பும், போராட்டங்களும், பொருள் இழப்பும் விளைந்தன என்று அவன்மேல் குற்றங்கள் சாட்டப்பட்டன. இக்கட்டான அவனுடைய நிலைகளைப் பிரான்சில் யாருமே உணர்ந்து கொள்ளவில்லை. அவனுடைய அறிவு நுட்பத்தையும் திட்பத்தையும் பிரெஞ்சு அரசாங்கம் நன்கு மதிப்பீடு செய்யவில்லை. டூப்ளே பிரான்சுக்குத் திரும்பிப்போகவும், கோடேஹா (Godehew) என்பவன் புதுச்சேரியில் கவர்னர் பதவி ஏற்கவும் ஆணைகள் பறந்தன. கோடேஹா இந்தியாவுக்கு வந்து இறங்கி (1754), டூப்ளேயைப் பதவியிலிருந்து இறக்கி, அவனுடைய கொள்கையையும் தலைகீழாக மாற்றினான்; ஆங்கிலேயருடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டான். இரு நாட்டினரும் மேற்கொண்டு ஒருவரோடொருவர் போரிடுவதில்லை என்றும், அவரவர்கள் தத்தம் வசம் வைத்திருந்த தேசத்தை அவர்களே வைத்துக்கொள்ளலாம் என்றும், இரு கட்சியினரும் உள்நாட்டு அரசியலில் தலையிட்டுக்கொள்ள கூடாதென்றும் அவர்கள் ஒப்புக்கொண்டனர்.

**மைசூர்ப் போர்கள்**

மைசூரில் தளவாய் நஞ்சராசன் படையொன்றில் சிப்பாயாகப் பணியாற்றிவந்த ஐதரலி என்பான் வெகுவிரைவில் அரசியல் ஏணியில் ஏறிவிட்டான். கைவன்மையாலும், படைப் பலத்தாலும், வினைத்திட்பத்தாலும், சூழ்ச்சித் திறனாலும், நெஞ்சுத் துணிவாலும் குறுகிய காலத்தில் மைசூர் அரசாங்கத்தைத் தன் கைக்கீழ்ப் போட்டுக்கொண்டான் (1761). மின்னல் வேகப் படையெடுப்புகளால் தமிழகத்துப் பாளையக்காரர்களை முறியடித்து ஒடுக்கினான். துரித காலத்தில் இவன் அடைந்த அரசியல் ஏற்றம் ஆங்கிலேயருக்கும், மராத்தியருக்கும், நைஜாமுக்கும் அச்சத்தையும் அழுக்காற்றையும் விளைத்தது. ஐதரை எதிர்த்து இம் மூன்று கட்சியினரும் தமக்குள் ஒப்பந்தம் ஒன்றைச் செய்துகொண்டனர். ஆனால், மராத்தியரும் நைஜாமும் ஐதரலியின் இலஞ்சத்துக்கும் சூழ்ச்சிக்கும் வயப்பட்டு ஆங்கிலேயரை விட்டுவிட்டு ஐதரலியுடன் சேர்ந்து கொண்டனர். ஐதரலி கருநாடகத்தின்மேல் படையெடுத்தான். தக்க சமயத்தில் நைஜாம் மீண்டும் கட்சி மாறினான். ஆனால், செங்கண்மாவி (செங்கத்தி)லும் திருவண்ணாமலையிலும் ஐதரலி ஆங்கிலேயரிடம் தோல்வியுற்றான். ஆனாலும் அவன் சளைக்க

வில்லை; தொடர்ந்து கருநாடக தேசத்தைக் கலக்கி வந்தான். அவன் மிகப் பெரியதொரு சேனையுடன் சென்னையின் எல்லையில் தோன்றினான் (1769). அவன் போர்க்கோலத்தைக் கண்டு அஞ்சி விதிர்விதிர்த்த ஆங்கிலேயர் அவனுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு ஆபத்தினின்றும் விடுதலை பெற்றனர். ஐதரலியை யாரேனும் தாக்கினால் அவனுக்குப் படைத்துணை அளிக்கவேண்டுமென்று ஆங்கிலேயர் இவ்வுடன்படிக்கையின்கீழ் ஒப்புக்கொண்டனர். இஃது ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட ஓர் இக்கட்டான நிலைமையாகும். எனினும் 1771-ல் மராத்தியர் ஐதரலியின்மேல் போர்தொடுத்தபோது ஆங்கிலேயர் அவனுக்கு உதவியனுப்பத் தவறினர். ஆபத்தில் தன்னைக் கைவிட்ட ஆங்கிலேயருக்கு எதிராக, நைஜாமுடனும் மராத்தியருடனும் அவன் கூட்டணி யொன்றை அமைத்துக் கொண்டான் (1779). அரபிக்கடற்கரையில் பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமான மாஹியை ஆங்கிலேயர் கைப்பற்றிக் கொண்டனர். அந் நிகழ்ச்சியைக் கண்டு ஐதர் வெகுண்டெழுந்தான்; ஆங்கிலேயரை எதிர்த்துப் போர் முரசம் கொட்டினான். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் நிலவிய அரசியல் அப்போது ஆங்கிலேயருக்குக் கேடு சூழ்வதாகவே இருந்தது. பிரான்ஸ், ஸ்பெயின், ஹாலந்து நாடுகள் ஆகிய யாவும் ஆங்கிலேயரை எதிர்த்து அணிவகுத்து நின்றன. இத்தகைய வாய்ப்பானதொரு சூழ்நிலையை ஆவலுடன் எதிர்நோக்கி நின்ற பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவில் தாம் இழந்த நாடுகளை மீட்டுக் கொள்வதற்காகத் திட்டமிட்டனர்.

ஐதரலி 1780 ஆம் ஆண்டு, ஜூலை மாதம் 90,000 காலாள்களுடனும், 100 பீரங்கிகளுடனும் மைசூர்ப் பீடபூமியினின்றும் வந்து செங்கண்மாக் கணவாயின் வழியாகக் கருநாடகச் சமவெளியின்மேல் இறங்கினான். ஆங்கிலேயக் கம்பெனியின்மேல் அவன் கொண்டிருந்த மாபெருஞ் சினமானது ஊழித் தீயாக மாறிக் கருநாடகத்தைப் பற்றிக்கொண்டது. ஐதரின் சேனைகள் நாடெங்கும் தீ மூட்டின; தம் வழியில் நேரிட்ட ஊர்கள் அத்தனையையும் சூறையாடின; குழந்தைகள் பெண்கள் உள்ளிட்ட மக்கள் அனைவரையும் படுகொலை செய்தன. ஐதரலியின் வழியில் சிக்குண்ட ஊர்கள், உயிர்கள் யாவும் படுசூரணமாகிக் காற்றில் பறந்தன. அக்கம்பக்கத்து ஊர்களில் வாழ்ந்திருந்த மக்கள் பீதியினால் வீட்டையும் நாட்டையும் கைவிட்டுக் காடுகளிலும் மலைகளிலும் ஓடி மறைந்தார்கள். கர்னல் பெய்லி என்ற ஆங்கிலேயப் படைத் தலைவன் ஒரு படையுடன் ஐதரை எதிர்த்து நின்றான். கொதித்துப் புரண்டுவரும் ஐதரின் சேனைகளின்

முன்பு அவனுடைய படைப்பலம் செல்லுபடியாகவில்லை. எனினும் வீரத்தோடு மைசூர் அணிகளை எதிர்த்து நின்று போராடினான். ஐதரின் போர்த்திறனே மேலோங்கி நின்றது. கர்னல் பெய்லியும் அவனுடைய சிப்பாய்களும் துண்டு துண்டாக வெட்டுண்டு மாண்டனர். அவனுடைய படை அழிந்து சிதைந்து போயிற்று (1780). அதற்கு முந்திய ஆண்டு ஆங்கிலேயர் பம்பாயில் மராத்தியரிடம் பெற்ற படுதோல்வியும், கர்னல் பெய்லின் தோல்வியும் ஒன்றுசேர்ந்து பிரிட்டிஷ்காரரின் பெருமையை இறக்கித் தரைமட்டமாக்கிவிட்டன. ஆர்க்காடும் ஐதரின் வசமாயிற்று. எனினும், ஆங்கிலேயர் சளைக்கவில்லை. அரசியல் சூழ்ச்சிகளில் கைவந்தவர்களான அவர்கள் மீண்டும் ஓர் அரசியல் சூதாட்டத்தில் இறங்கினர். அதன் விளைவாக மராத்தியரும், நைஜாமும் ஐதரலியைக் கைவிட்டனர். கல்கத்தாவில் ஆங்கிலேயரின் கவர்னர்-ஜெனரலாக இருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் என்பவன் நெஞ்சுத் துணிவுடையவன்; சூழ்நிலைக்கேற்ற உத்திகளைக் கையாள வல்லவன்; எத்தகைய எதிர்ப்பையும் எந்தவகையான நடவடிக்கைகளை மேற்கொண்டேனும் பணியவைக்கக் கூடியவன். அவன் சென்னைக் கவர்னரைப் பதவியினின்றும் விலக்கினான். தன்னால் திரட்டப்படக்கூடிய அத்தனை சிப்பாய்களையும் அணி வகுத்துச் சர் அயர் கூட் என்னும் படைத்தலைவன் ஒருவன் தலைமையில் ஐதரின்மேல் ஏவினான். தன்னால் எவ்வளவு பொருள் கூட்ட முடியுமோ அவ்வளவையும் கூட்டிக் கையில் ஒப்படைத்தான். சிதம்பரத்தை யடுத்த பறங்கிப்பேட்டையில் பெரும் போர் விளைந்தது (1781). அப்போரில் ஐதர் படுதோல்வியுற்றான். எனினும் ஆங்கிலேயரை அச்சுறுத்தி வந்த ஆபத்துகள் முற்றிலும் தீர்ந்தபாடில்லை. வங்கக் கடற்கரையோரம் பிரெஞ்சுக் கடற்படை ஒன்று சப்ரன் (Admiral Suffren) தலைமையில் ஆங்கிலேயருடைய கப்பல் தொகுதிகளுடன் பல போர்கள் நிகழ்த்திற்று; கர்னல் பிரைத்வைட் (Braithwaite) தலைமையில் திரண்டு வந்த ஆங்கிலேயரின் சேனை ஒன்றை ஐதரின் மகன் திப்பு சுல்தான் முறியடித்தான். எனினும், ஆங்கிலேயர் 1781ஆம் ஆண்டு இறுதிக்குள் டச்சுக்காரருக்குச் சொந்தமான நாகப்பட்டினம், சதுரங்கப்பட்டினம், புலிக்காடு ஆகியவற்றைக் கைப்பற்றினர்.

ஐதர் தான் தொடர்ந்து நடத்தி வந்த போர்த் தொழிலின் காரணமாக மிகவும் களைப்புற்றான். அவனைப் பற்றி நின்ற புற்றுநோய் அவனுடைய உயிரை அணுவணுவாக அரித்து வந்தது. இறுதியாக, 1783 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தன் ஆசைகளை மறந்து இவ்வுலகினின்றே அவன் விடைபெற்றுக்

கொண்டான். ஐதரலி மிகச் சிறந்த ஒரு வீரன்; நல்ல உடற் கட்டும் நெஞ்சுரமும் வாய்ந்தவன். எழுதப் படிக்க அறியானா யினும் அவனுக்குப் பல மொழிகள் பேசும் வல்லமையுண்டு. அரசாங்க நிருவாகத்திலும், போர்த் தொழிலிலும் அவன் அளவற்ற ஆற்றல் வாய்க்கப் பெற்றிருந்தான். ஒரே சமயத்தில் பல அலுவல்களைப் புரியும் திறமை ஐதரின் சிறப்புகளில் ஒன்றாகும். அரசியல் நேர்மையும், சீரிய நோக்கமும் அவன் வாழ்க்கைக்குப் பொலிவூட்டின. ஒழுக்க நெறிகளிலும், சமயச் சடங்குகளிலும் அவனுக்கு எள்ளளவேனும் பற்றுதல் கிடையாது. ஆனால், அவன் இஸ்லாமிய மதத்தில் ஆழ்ந்த ஈடுபாடுடையவனாக இருந்தான். அவன் நெஞ்சில் ஈரமும் இரக்கமும் கிடையா. அவனுடைய பகைவருக்கும், அவன் பரிவை இழந்தவர்களுக்கும் அவன் ஆற்றிய கொடுமைகள் கேட்போர் நெஞ்சைப் பிளக்கக் கூடியன.

ஐதருக்குப் பின்னர் அவன் மகன் திப்பு மைசூர் சுல்தானாக முடிசூட்டிக் கொண்டான். அவன் ஆங்கிலேயரிடம் அளவற்ற வெறுப்புக் கொண்டிருந்தான். எனினும், பிரெஞ்சுக்காரரிடம் மாறாத நட்புக் கொண்டிருந்தான். திப்பு சுல்தான் தன் ஆட்சியின் தொடக்கத்திலிருந்தே ஆங்கிலேயருக்குத் தொல்லைகள் கொடுத்து வந்தான். பிரான்ஸ், பெர்சியா, துருக்கி ஆகிய நாடுகளிடம் படைத்துணை நாடித் தூதுகள் அனுப்பிவைத்தான் (1787). அவனுக்குப் படை அனுப்புவதாக அங்கிருந்து மறுமொழிகள் வந்தன. எனினும், அவனுடைய உடனடித் தேவைக்கு வேண்டிய படைப்பலம் கிடைக்கவில்லை. ஆனால், பிரெஞ்சுக்காரர்கள் திப்பு சுல்தானின் படைகளுக்குப் பயிற்சி கொடுத்து வந்தனர்.

திப்பு சுல்தான் திருவிதாங்கூரின்மேல் படையெடுத்தான் (1789). திருவிதாங்கூர் அரசன் ஆங்கிலேயருடைய நட்பைப் பெற்றிருந்தான். ஆங்கிலேயருடைய நட்பு தனக்கு எச் சமயத்திலும் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் வாழ்ந்து வந்தான். ஆகவே, சென்னையில் கிழக்கிந்தியக் கம்பெனியின் பிரசிடென்டாகவும், கவர்னராகவும் இருந்த ஜே. ஹாலண்டு (J. Hollond) என்பவனுக்குப் படைப்பலம் வேண்டி விண்ணப்பமும் அனுப்பினான். ஆங்கிலேயர் அவ் வேண்டுகோளுக்கு உடனே செவி சாய்க்கவில்லை; பராமுகமாக இருந்துவிட்டனர். நைஜாமும், மராத்தியரும் திப்பு சுல்தானிடம் முக்கூட்டு உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டனர் (1790).

மூன்றாம் மைசூர்ப் போர் இரண்டாண்டு நீடித்தது. கார்ன்வாலிஸ் பிரபுவே தன் தலைமையில் பெரும்படை ஒன்றைச்

செலுத்திவந்து வேலூர், ஆம்பூர் வழியாக நுழைந்து சென்று, பெங்களூரைக் கைப்பற்றிக்கொண்டு சீரங்கப்பட்டணத்துக்கு ஒன்பது கல் தொலைவில் தன் பட்டாளங்களை நிறுத்தினான். போர் நடவடிக்கைகள் 1791ஆம் ஆண்டு கோடைக்காலம் வரையில் தேங்கி நின்றன. அவ்வாண்டு நவம்பர் மாதம் திப்பு கோயமுத்தூரைத் தாக்கிக் கைப்பற்றினான். கார்ன்வாலிஸ் பிரபு சீரங்கப்பட்டணத்தையும், அதன் கோட்டை கொத்தளங் களையும் தாக்கி யழித்தான். சூழ்நிலையானது தனக்கு முரணாக இருந்ததை உணர்ந்த திப்பு சுல்தான் கார்ன்வாலிஸ் பிரபுவுடன் சமாதான உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண் டான் (மார்ச் 1792). இவ் வுடன்படிக்கையின்கீழ் மைசூர் தேசத்தில் பாதியை நைஜாமுக்கும், மராத்தியருக்கும், ஆங்கி லேயருக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டான். மலையாள தேசம், குடகு தேசத்து மன்னன்மேல் ஆட்சி, திண்டுக்கல் தேசம், பாராமகால் பகுதி ஆகியவை ஆங்கிலேயருக்குக் கிடைத் தன. போதாக் குறைக்குத் திப்பு சுல்தான் ஆங்கிலேயருக்கு முப்பது இலட்சம் பவுன்களுக்குமேல் தண்டங்கொடுத்தான்; தன் இரு பிள்ளைகளையும் அவர்களுக்குப் பிணையாக அளித் தான். ஆனால், இவ்வுடன்படிக்கையானது தனக்கு மானக் கேட்டை விளைத்தது என்று அவன் அறிந்திருந்தான். அவன் நெஞ்சில் ஒரு முள் உறுத்திக்கொண்டே இருந்தது. மானமிழந்து வாழ அவன் உள்ளம் ஒருப்படவில்லை. எனவே, ஆங்கிலே யரின்மேல் அவனுக்கு வெறுப்பும் அடங்காச் சினமும் பொங்கி எழுந்தன. வஞ்சம் வளர்ந்தது. திப்பு தன் கோட்டை கொத் தளங்களை வலுப்படுத்தினான்; குதிரைப் படையைப் புதுப்பித் தான்; உழவுத்தொழிலையும் ஊக்கினான். ஐரோப்பாவில் பல நாடுகளில் அரசியல் குழப்பங்களும் போராட்டங்களும் நிகழ்ந்து கொண்டிருந்தன. பிரான்சில் குடிமக்கள் மன்னனையும் அவனைச் சார்ந்த பிரபுக்களையும் எதிர்த்துப் பெரும் புரட்சி ஒன்றில் ஈடுபட்டனர் (1789). பிரெஞ்சு மன்னன் பதினாறாம் லூயியும், அவன் மனைவி மேரி அன்டாய்னெட்டும் மக்கள் நீதி மன்றத்தில் குடித் துரோகிகள் என்ற தீர்ப்புக்குள்ளானவர் களாய் தூக்குமரம் ஏறி, முடியணிந்த தம் தலைகளை இழந்த னர். நெப்போலியன் போனப்பார்ட் என்ற படைத் தலைவன் அரசாட்சியைக் கைப்பற்றி நாட்டை அடக்கியாளலானான். அவனே பிரெஞ்சு நாட்டின் பேரரசனாகவும் முடிசூட்டிக்கொண் டான் (1804). அவன் ஆங்கிலேயர்மேல் அளவுகடந்த வெறுப் பும் சினமும் கொண்டிருந்தான். இந்தியாவில் ஆங்கிலேயரின் செல்வாக்கை இறக்கிப் பிரெஞ்சு ஆதிக்கத்தை மீண்டும் உயர்த்துவிக்க அவன் நோக்கம் கொண்டிருந்தான். திப்பு

சுல்தான் வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டான். பிரெஞ்சுக்காரரின் படைத் துணையை நாடினான். அவனுக்கு உதவியாகும் பொருட்டுப் பிரெஞ்சுப் படைகள் மங்களூர் வந்து இறங்கின (1798). அப்போது வெல்லெஸ்லி பிரபு கவர்னர் ஜெனரலாக இருந்தான். ஆங்கிலேயரைச் சூழ்ந்து வந்துகொண்ட பேராபத்தை அவன் நன்கு உணர்ந்தான். உடனே திப்பு சுல்தானுக்கு எதிராக அவன் நைஜாமுடனும் மராத்தியருடனும் உடன்படிக்கை ஒன்று செய்துகொண்டான். வெல்லெஸ்லி பிரபு, ஜெனரல் ஹாரிஸ் என்பவனின் தலைமையில் பெரும் படை ஒன்றைத் திப்புவின்மேல் ஏவினான். ஹாரிஸின் கடுந்தாக்குதலுக்கு முன்பு திப்புவின் சேனைகள் பேரழிவுக்குட்பட்டு, வலியிழந்து சீரங்கப்பட்டணத்து அரணுக்குள் பின்னடைந்து போரிட்டன. ஆங்கிலேயரின் பெரும் பீரங்கிக் குண்டுகள் வெடித்து அரண் கொத்தளங்களைச் சிதைத்து மதிற்சுவரில் பெரும்பிளவு ஏற்படுத்தின. அவ்விடைவெளியின்மூலம் ஆங்கிலேயத் துருப்புகள் அணையுடைந்த வெள்ளம்போல் பாய்ந்து அரணுக்குள் நுழைந்தன. திப்புவின் சேனைகள் 1799 மே, நான்காம் தேதி ஆங்கிலேயரிடம் சரண் அடைந்தன. திப்பு சுல்தான் தன் இறுதி மூச்சு வரையில் போராடிக் கையில் ஏந்திய வாளுடன் வீர மரணத்தைத் தழுவினான் (1799). ஆங்கிலேயரின் மாறாத பகைவன் மாண்டான்; அஃதுடன் அவர்களுக்குத் தென்னிந்தியாவில் அணையிட்டிருந்த இறுதிப்பகையும் மறைந்தது. திப்பு சுல்புதான் பல கலைகளில் கைதேர்ந்தவன்; பாரசீக மொழியில் ஆழ்ந்த புலமை வாய்ந்தவன். அவன் அரசியல் வாழ்வில் ஓய்வென்பதையே கண்டவனல்லன். இடையறாமல் உழைத்துக்கொண்டே இருந்தான். அவன் புதிய பஞ்சாங்கம் ஒன்றையும், நாணயங்களையும், அளவைகளையும் புழக்கத்துக்குக் கொண்டுவந்தான்.

ஆங்கிலேயர் சீரங்கப்பட்டணத்தைச் சூறையாடினர். அரண்மனைகளையும் கட்டடங்களையும் இடித்து நிரவினர். மைசூர் தேசம் ஆங்கிலேயரின் உடைமையாயிற்று, திப்புவின் மக்கள் வேலூர்க் கோட்டையில் சிறைவைக்கப்பட்டனர்.

ஆர்க்காட்டு நவாபு, வாலாஜா சாயபு என்ற மாற்றுப் பெயரினனான முகமதலி, பெயரளவில்தான் கருநாடகத்தின் நவாபாக விளங்கினான். ஆனால், அவனுடைய அரசு முத்திரை ஆங்கிலேயரின் கையில் இருந்தது. நவாப் முகமதலியின் பேரால் கிழக்கிந்தியக் கம்பெனிதான் அரசாங்கத்தை நடத்தி வந்தது. கருநாடகத்தின் குடிமக்கள் ஆர்க்

காட்டு நவாபுக்கு மட்டுமன்றி ஆங்கிலேயருக்கும் ஆட்பட்டவர்களாக இருந்தனர். நவாபு வாலாஜா தன் அரசாங்கப் பொறுப்புகள் அத்தனையையும் ஆங்கிலேயரின் கைகளில் ஒப்படைத்து விட்டு இன்பக் கோலாகலங்களில் காலங்கழித்துவந்தான். சென்னைப்பட்டினத்தில் சேப்பாக்கத்தில் நவாபுக்கு அழகான அரண்மனை ஒன்று எழுப்பப்பட்டது (1768). அவ்வரண்மனை அமைக்கப்பட்டிருந்த அடிமனையின் பரப்பு 117 ஏக்கராக்கள். அதைச் சுற்றிலும் எழுப்பப்பட்டிருந்த மதிற்சுவர்கள் வடக்கில் கூவம் ஆற்றிலிருந்து தெற்கில் பாரதி சாலை வரையில் எட்டி நின்றன; மேற்கில் பெல்ஸ் சாலை வரையில் வந்தன. அந்த அரண்மனையின் முகப்பு வாயில், வாலாஜா சாலையில் நின்றது. அவ் வாயில் மூவளைவு கொண்டது. அரண்மனை இரு பகுதிகளாக அமைக்கப்பட்டிருந்தது. தென்பகுதிக்குக் கலசம்கால் என்று பெயர். அதன்மேல் சிறுசிறு கலசங்கள் பொருத்தப்பட்டுள்ளன. வடபகுதியில் உள்ள கட்டடத்திற்கு உமாயூன் மகால் என்று பெயர். அதில் திவான்கானா அல்லது தர்பார் மண்டபமும் இருந்தது. இவ்விரண்டு கட்டடங்களினிடையே நிற்கும் சதுரமான மாடக்கோபுரம் பிற்காலத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் கட்டப்பட்டது. இவ்வரண்மனையில் இப்போது பல அரசாங்க அலுவலகங்கள் நடைபெற்று வருகின்றன. வடபகுதிக்கும் கடற்கரைச் சாலைக்கும் இடையில் எழிலகம் அண்மையில் கட்டப்பட்டுள்ளது. சென்னைப் பல்கலைக்கழகக் கட்டடங்கள் நிற்கும் இடத்தில் கூவத்தின் கரையின்மேல் நவாபுவும், அவன் குடும்பத்தினரும் நீராடும் துறை அமைக்கப்பட்டிருந்தது. இப்போது மாநிலக் கல்லூரியின் முதல்வர் தங்கியுள்ள விடுதியில் அப்போது நீதிமன்றம் ஒன்று செயல்பட்டு வந்தது.

கருநாடக வருமானத்திலிருந்து தனக்குக் கிடைத்த பொருளைக் கொண்டு நவாபு வாலாஜா வாழ்க்கைப் போகங்களை விலைகொடுத்து வாங்கி அனுபவித்து வந்தான். பரந்து விம்மிய வங்கக்கடல்போல விரிந்து கிடந்த இன்பங்களையெல்லாம் துய்க்க அவனுக்குக் கிடைத்த வருமானம் போதவில்லை; கம்பெனி அலுவலரிடமும் ஏனையோரிடமும் ஆர்க்காட்டு நவாபு அளவிறந்த கடன் வாங்கினான். அவற்றுக்கு முறையற்ற வட்டிகளைக் கொட்டிக் கொடுத்தான். தான் பட்ட கடன்களுக்கு ஆர்க்காட்டுத் தேசத்தை ஈடு காட்டி வந்தான். அவனுக்குக் கடன்களை வாரிக் கொடுத்திருந்த ஆங்கிலேயரின் பேராசை கரைகடந்து போயிற்று. நவாபு கடன் வாங்கியதும் நின்றபாடில்லை. அவக்கேடான இந் நிலைக்கு ஒரு முடிவுகட்ட வேண்

டிய நெருக்கடி கம்பெனி அரசாங்கத்துக்கு ஏற்பட்டது. கம்பெனிக் கவர்னர் சர் தாமஸ் ரம்போல் (Sir Thomas Rumbold, *1778-80*) காலத்தோடொட்டி ஒழுகத் தெரியாதவன்; ஆட்சித் திறனற்றவன்; காலங்கருதும் வினைத்திட்பமும், காலத்தை நெகிழவிடாத தெளிவும் வாய்க்கப் பெறாதவன். அவன்மேல் பல குற்றச்சாட்டுகள் கொண்டுவரப்பட்டன. ஆகவே, வாரன்ஹேஸ்டிங்ஸ் என்ற கவர்னர்-ஜெனரல் அவனைக் கவர்னர் பதவியினின்றும் இறக்கிவிட்டான். அவனையடுத்து வந்தவன் வைட்ஹில் (White Hill) என்பவன். பல குற்றச்சாட்டுகளினால் அவனும் ஒதுக்கப்பட்டான். பிறகு, வந்தவன் சார்லஸ் ஸ்மித் (Charles Smith). இவர்கள் எல்லோரும் குறுகிய காலக் கவர்னர்களாக இருந்தனர். பின்னர், மக்கார்ட்னே பிரபு (Lord Macartney, *1781-85*) கவர்னராகப் பதவியேற்றான். வந்தவாசியிலும் புதுச்சேரியிலும் ஐதரலியைத் தோல்வியுறச் செய்து பிரிட்டிஷ் அரசைத் தேடிவந்த அழிவுக் காலத்தைத் தடுத்து நிறுத்திய சர் அயர் கூட் (Sir Eyre Coote) என்ற படைத் தலைவன் இந்தக் கவர்னரின் காலத்தில்தான் சென்னையில் களைப்பினாலே கண்ணை மூடினான். மக்கார்ட்னே பிரபு நவாபுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டான் (*1781*, டிசம்பர் *2*). அவ்வுடன்படிக்கையின்கீழ் நாட்டு அரசு கிழக்கிந்தியக் கம்பெனியின் கைகளுக்கு மாறிற்று. கருநாடக வருமானத்தில் ஆறில் ஒரு பங்கை நவாபு தன் சீவனாம்சமாகப் பெற்றான். அவனுக்குக் கடன் கொடுத்திருந்தவர்கள் அனைவரும் தத்தம் கடனைத் திருப்பித் தரும்படி அவனை ஒருங்கே நெருக்கலானார்கள். ஆகவே, கம்பெனியின் வருமானம் முழுவதும் நவாபு வாலாஜாவினிடமே ஒப்படைக்கப்பட்டது. நவாபுக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அவ்ன் அந்த முழு வருமானத்தையுங் கொண்டு பழைய கடன்களை அடைக்காமல் மேலும் மேலும் கடன்களில் மூழ்கினான். கம்பெனிக்கும், தன் கடன்காரருக்கும் நாட்டின் பல பகுதிகளை அடகு வைத்துக்கொண்டே போனான். அவன் எழுதிக் கொடுத்த கடன் பத்திரங்கள் பணச் சந்தையில் விற்கப்பட்டன. நவாபுக்குரிய வருமானத்தின் ஏற்ற இறக்கத்தையொட்டி இப் பத்திரங்களின் மதிப்பும் ஏறியும் இறங்கியும் வந்தது.

கருநாடக நவாபு வாலாஜாவின் வாழ்க்கைப் புயல்களுக்கும் கம்பெனியின் தொல்லைகட்கும் இறுதியாக ஓர் முடிவு ஏற்பட்டது. நவாப் வாலாஜா (உம்மீர்உல்ஹிண்ட்-ஓம்தாத் உல்மூல்க் அன்சுப் உத்தெளலா - அன்வாருதீன் கான்பகதூர் - சூபர்ஜங்-சேபா-சாலார்-கருநாடகத்தின் நவாபு முகமதலி) *1795*

அக்டோபர் 13ஆம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்தான். அவனை யடுத்து அவன் மகன் ஓம்தாத் உல் ஓமாரா ஆர்க்காட்டு நவாபானான். அவனும் 1801-ல் காலமானான். அவனுடன் கம்பெனி அரசாங்கம் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டது. அதன் படி ஆர்க்காட்டு நவாபு தன் நாட்டையும் அரசையும் ஆங்கிலே யருக்கு வழங்கினான். அவனுடைய இழப்புக்கு ஈடாகச் சென்னை அரசாங்கமே அவனுடைய கடன்களைத் தீர்த்துவைக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டது. அதற்காக ஆண்டுதோறும் பன்னிரண்டு இலட்சம் ரூபா ஒதுக்கிவைக்கப்பட்டது. பத்தொன் பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலேயரே தமிழகத் தின் ஆட்சிப் பொறுப்புகள் அனைத்தையும் மேற்கொண்டு விட்டனர்.

## பாளையக்காரரின் கிளர்ச்சிகள்

### வீரபாண்டியக் கட்டபொம்மன்

மதுரை நாயக்கர் பரம்பரை மறைந்த பிறகு அவர்களுக்கு வரி தண்டிக் கொடுத்தும் படைவீரர்களைத் திரட்டிக் கொடுத்து உதவி வந்த பாளையக்காரர்கள் தனிக்காட்டு மன்னராக மாறிவிட்டார்கள். ஆர்க்காட்டு நவாபு பெயரளவில் கருநாடகத் தின் மன்னனாக இருந்தானே ஒழிய நாட்டு அரசியல் ஆங்கிலே யரின் கைகளில் அடங்கியிருந்தது. கிழக்கிந்தியக் கம்பெனியினர் அவனுடன் செய்துகொண்ட ஓர் உடன்படிக்கையின்கீழ்த் திருநெல்வேலிச் சீமையில் வரி தண்டும் உரிமையைத் தம் வசம் மாற்றிக் கொண்டனர் (1781). நான்காண்டுகள் கழித்து நவாபு அவ்வுரிமையை அவர்களிடமிருந்து பறித்துக்கொண்டான்(1785). ஆனால், ஆங்கிலேயர் மீண்டும் அவ்வுரிமையைப் பெற்றுக் கொண்டனர் (1790). பாஞ்சாலங்குறிச்சி என்ற பாளையத் துக்குக் கட்டபொம்மன் என்பவன் பாளையக்காரன் ஆனான் (1791). வரி தண்டுவதில் கட்டபொம்மனுக்கும் கம்பெனிக்கும் கருத்து வேறுபாடுகளும் பூசல்களும் நேர்ந்தன. கட்டபொம்மன் கம்பெனிக்கு 1797ஆம் ஆண்டுக்குச் செலுத்த வேண்டிய வரிப் பணத்தைக் கொடுக்க மறுத்தான். அதுமட்டுமன்றி இராமநாத புரத்தில் கம்பெனியுடன் முரண்பாடு கொண்டிருந்தவர்கள் அனைவரையும் திரட்டித் தனக்குத் துணையாகச் சேர்த்துக் கொண்டான். படைகளுக்கு உணவுப் பண்டங்கள் வழங்கும் பாளையக்காரரின் கடமையொன்றினின்றும் அவன் வழுவினான். மேலும், கம்பெனிக்குத் திறை செலுத்தி வந்த எட்டையபுரம் பாளையத்தின்மேல் அடிக்கடி பாய்ந்து மக்களைச் சூறையாடி னான். கம்பெனியின் பேரால் அவன் தன் குடிமக்களிடமே அதிக

வரிகளை வற்புறுத்திப் பெற்றான். கம்பெனிக்குத் துணிகள் வழங்கி வந்த நெசவாளரைத் துன்புறுத்தி அவர்களிடமிருந்து பணம் பறித்தான்; அவர்களைச் சாட்டையால் அடித்தான். சில நெசவாளரின் கைகளைப் பின்புறம் சேர்த்துக் கட்டிவைத்து அவர்கள் உடம்பில் அட்டைகளைக் கடிக்கவிட்டான். கட்ட பொம்மனின் கையாள்கள் நெசவாளரின் வீடுகளைக் கொள்ளை யிட்டு அவர்கள் பெண்களின் வாயில் மண்ணைக் கொட்டினார் கள். நெசவாளர்களின் கண்களில் கள்ளிப்பால் ஊற்றப்பட்டது. பலருடைய பற்கள் நொறுக்கப்பட்டன. மேலும் பலர் சாட்டை யாலும் செருப்பாலும் புடைக்கப்பட்டனர் எனச் சிலர் கூறு கின்றனர்.

கட்டபொம்மனின் கொடுங்கோன்மை கம்பெனியின் செவி கட்கு எட்டிற்று. இராமநாதபுரத்துக் கலெக்டர் ஜாக்சன் என்பான் தன்னை வந்து சந்திக்குமாறு கட்டபொம்மனுக்கு ஆணை பிறப்பித்தான். அவ்வாணைக்குக் கட்டுப்பட்டு நானூறு கல் தொலைவு பின்தொடர்ந்து சென்றும் கட்டபொம்மனுக்கு ஜாக்சனுடைய பேட்டி கிடைக்கவில்லை. தொடர்ந்து சில கலகங்கள் நேரிட்டன. கம்பெனியின் பக்கலிலும், கட்டபொம்மன் பக்கலிலும் பலர் கொல்லப்பட்டனர். கம்பெனிச் சேனைத் தலைவன் கிளார்க் என்பவனும் கொல்லப்பட்டு மாண்டான். கட்டபொம்மனே அவனைக் கொன்றான் என்று கம்பெனி அவன்மீது குற்றம் சாட்டிற்று.

கட்டபொம்மனும், அவன் தம்பி ஊமைத்துரையும் கம்பெனி யின் பிடியினின்றும் தப்பியோடிப் பல கிராமங்களைத் தீயிட்டுக் கொளுத்தி, மக்களைக் கொன்று, அவர்கள் உடைமைகளைச் சூறையாடி மக்களுக்கு அல்லல் விளைத்தனர். கட்டபொம்மனுக் கும் கம்பெனிக்கும் இடையிட்டெழுந்த பூசல்கள் புயலாக மாறின. கம்பெனியின்மேல் கட்டபொம்மன் கொண்டிருந்த வெறுப்புப் புகைந்து கொழுந்துவிட்டு எரியலாயிற்று. அவன் திரு நெல்வேலி, இராமநாதபுரம் பாளையக்காரர் பலரைத் தனக்கு உடந்தையாக்கிக் கொண்டான்; தனக்கெனப் பெரும் படையை யும் திரட்டலானான். மேஜர் பானர்மேன் என்ற படைத் தலைவ னிடம் பிரிட்டிஷ் அரசாங்கம் கட்டபொம்மனை ஒறுக்கும் பணியை ஒப்படைத்தது. பானர்மேனுக்கும் கட்டபொம்ம னுக்கும் இடையே பல இடங்களில் போர்கள் நிகழ்ந்தன. கட்ட பொம்மனுக்கு உதவிய சுந்தரபாண்டிய நாயக்கனும், தானா பதிப் பிள்ளையும் தூக்கிலிடப்பட்டனர்.

கட்டபொம்மன் காட்டில் ஒளிந்து தப்பித்துக்கொண்டான். புதுக்கோட்டை மன்னனான விசய ரகுநாத தொண்டைமான் கட்டபொம்மனுக்கு முதலில் அடைக்கலம் கொடுத்துப் பிறகு அவனைக் கம்பெனியிடம் காட்டிக் கொடுத்துவிட்டான். பானர் மேன் கட்டபொம்மன்மேல் பல குற்றச்சாட்டுகளைப் படித் தான். கட்டபொம்மன் பற்றலரை வணங்கி வளையாத கற் றூணாக வாழ்ந்தவன். ஆகையால், அக் குற்றச்சாட்டுகளைப் பெருமிதத்துடன் ஒப்புக்கொண்டான். பானர்மேன் தீர்ப்பின்படி கட்டபொம்மன் கயத்தாறு என்னும் இடத்தில் தூக்கிலிடப்பட் டான். வீரப்பொலிவைக் கண்களில் கொண்டு, தன்னைக் காட் டிக்கொடுத்த பாளையக்காரர்களின்மேல் தனக்குள் பொங்கி எழுந்த வெறுப்பையும் ஏளனத்தையும் தன் புன்னகையில் தோற்றுவித்துக் கட்டபொம்மன் தூக்குமரம் ஏறினான்.

கட்டபொம்மன் ஆங்கிலேயரை எதிர்த்துச் சுதந்தரப் புரட்சி யைத் தோற்றுவித்தான் என்றோ, நாட்டின் சுதந்தரத்தையும் குடிமக்கள் நலனையும் தன் குறிக்கோளாகக் கொண்டிருந்தான் என்றோ கொள்ளுவதற்கில்லை; எனினும், வளர்ந்து வந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் பேரரசைத் தன்னளவில் எதிர்த்து நின்று தன்னந்தனியாகப் போரிட்டு மாண்ட கட்டபொம்ம னுடைய புகழ் நாட்டுப் பாடல்களிலும், நாடகங்களிலும், திரைப் படங்களிலும் பொங்கி வருவதில் வியப்பேதுமில்லை. அயல் நாட்டு அரசை எதிர்த்து நின்று போராடிய கட்டபொம்மனைக் காட்டிக் கொடுத்த ஏனைய பாளையக்காரரின் இழிநிலை தமிழ் நாட்டு வரலாற்றில் பதிந்துவிட்டது.

### மருது பாண்டியர்

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் சிவகங்கைச் சீமை யானது பெரிய மருதுபாண்டியர் என்பவரின் ஆட்சியுடைமை யாயிற்று. அவருடைய தம்பி சின்ன மருது என்பார், அவருக்குப் பெருந் துணையாக நின்றார். இவ்விரு சகோதரர்களிடத்தும் புதுக்கோட்டைத் தொண்டைமான் பகைமை காட்டினான். இவர்கட்கு எதிராக ஆங்கிலேயருக்குப் பல வகையில் அவன் உதவிகள் புரிந்தான். இவ்விரு சகோதரரின் ஆட்சி இருபத்தோ ராண்டுகள் (1780-1801) நீடித்தன அவர்கள் நாட்டில் பல ஆக்கப் பணிகளைச் செய்தார்கள்.

புதுக்கோட்டைத் தொண்டைமான் இவர்கள்மேல் கொண்ட பூசல் வளர்ந்துகொண்டே போயிற்று. ஆங்கிலேயர் மருது சகோதரர்களை அரியணையினின்றும் இறக்கிவிட்டு உடையத்

தேவன் என்ற ஒருவனை மன்னனாக்கினர்; மருதுபாண்டிய ரைச் சிறைபிடிக்க முயன்றனர். ஆனால், மருது பாண்டியர் காடு களில் ஓடி ஒளிந்தனர். கைக்கூலிக்கு நப்பாசை கொண்ட பலர் மருது பாண்டியரின் தலைகளுக்காகப் பல இடங்களில் அலைந் தனர். இறுதியில் மருது பாண்டியர் கம்பெனியின் சேனாதிபதி ஒருவனிடம் சிக்குண்டார்கள். அவர்களும், அவர்களுடைய சுற் றத்தாரும், நண்பரும் ஆங்கிலேயரால் தூக்கிலிடப்பட்டு மாண் டனர். அவர்களோடு பாளையக்காரர் ஆங்கிலேயருக்குக் கொடுத்துவந்த தொல்லைகளும் ஓய்ந்தன.

### தீர்த்தகிரி

தமிழக விடுதலைப் போரில் கட்டபொம்மன், ஊமைத் துரை, மருதிருவர் முதலியோரை ஆங்கிலேயர் அழித்தபின் கொங்குநாட்டில் கிளர்ச்சி நடந்தது. 'தீர்த்தகிரி' என்ற கொங்கு நாட்டு வீரன் ஆங்கிலேயரை எதிர்த்துப் போர் நடத்தினான்; 1799 முதல் 1805 வரை ஆங்கிலேயரை தீவிரமாக எதிர்த்து நின்றான். இவன் கொங்கு நாட்டில் 'ஓடாநிலை' என்னும் ஊரில் கோட்டை கட்டி ஒரு படையைத் திரட்டி எதிரிகளுடன் போரிட் டான். இவனையும் ஆங்கிலேயர் 1805-ல் அடக்கினர். தமிழகத்தில் கடைசியாக ஆங்கிலேயரை எதிர்த்து நின்றவன் தீர்த்தகிரியே. இவன் 'தீரன் சின்னமலை' என்னும் பெயரால் தமிழக வரலாற்றில் புகழ் பெற்றான்.

# 19. பத்தொன்பதாம் நூற்றாண்டின் அரசியலும் தமிழகத்தின் சமூக நிலையும்

## அரசியல்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலேயரின் ஆட்சியானது இமயம் முதல் குமரிவரையிலும், சட்லெஜ் முதல் பிரம்மபுத்திரா வரையிலும் விரிவடைந்திருந்தது. வெல்லெஸ்லி பிரபுவின் காலத்தில் டில்லி, அயோத்தி, மைசூர், ஐதராபாத்து, கருநாடகம், சூரத்து, தஞ்சாவூர் ஆகிய பகுதிகள் யாவும் பிரிட்டிஷாரின் உடைமையாய்விட்டன. தஞ்சை மராத்திய மன்னன் சரபோஜி, வெல்லெஸ்லி பிரபுவுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு (1799) தான் வாழ்ந்துவந்த கோட்டை ஒன்றைத் தவிரத் தன் தேசம் முழுவதையும் ஆங்கிலேயரிடம் ஒப்படைத்துவிட்டான்.

கிழக்கிந்தியக் கம்பெனியின் அரசாங்க நிருவாகத்தையும், அன்றன்றைய நடைமுறைகளையும் கட்டுப்படுத்தி ஓர் ஒழுங்கு முறையில் அமைக்கும்பொருட்டு பிரிட்டிஷ் பாராளுமன்றமானது 1773ஆம் ஆண்டிலும், 1781ஆம் ஆண்டிலும் இந்திய அரசாங்கச் சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றியது. அப்போது இந்தியாவில் வாரன் ஹேஸ்டிங்ஸ் கவர்னர் ஜெனரலாக இருந்தார். சென்னை அரசாங்கம் கவர்னர் ஒருவரின் தலைமையில் நிறுவப்பட்டது. பென்டிங்க் பிரபு (Lord William Bentinck) 1803-07 ஆண்டுகளில் சென்னையில் கவர்னராக இருந்தார். இவரே பல தொல்லைகட்குள்ளானார். பிரிட்டிஷ் சேனாதிபதியின் சில ஆணைகளை எதிர்த்து வேலூரில் ஒரு கிளர்ச்சி எழுந்தது (1806).

## வேலூர்க் கலகம்

திப்பு சுல்தானின் பிள்ளைகள் வேலூர்க் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின்

தொடக்கத்தில், சென்னைக் கவர்னராக இருந்த பென்டிங் பிரபுவின் உடன்பாட்டைப் பெற்றுக்கொண்டு பிரிட்டிஷ் படைகளின் தலைமைச் சேனாதிபதி சர் ஜான் கிரேடாக் (Sir John Cradock) என்பவர் இராணுவத்தில் சிப்பாய்களின் நடைமுறைக்குச் சில ஒழுக்க விதிகளைப் பிறப்பித்தார். சிப்பாய்கள் தம் தாடியைக் களைந்துவிட வேண்டுமென்றும், மீசையை ஒரு புதிய முறையில் முறுக்கிவிட்டுக்கொள்ள வேண்டும் என்றும், நெற்றியில் திருநீறு, நாமம், பொட்டு முதலியவற்றை அணியக் கூடாதென்றும், காதுகளில் கடுக்கன் போட்டுக்கொள்ளக் கூடாதென்றும் வற்புறுத்தப்பட்டார்கள். அஃதுடன் ஐரோப்பியர் அணியும் தொப்பியைப் போன்று வடிவமைக்கப்பட்ட தலைப் பாகை ஒன்று அணியவேண்டும் என்றும் அவர்கள் ஆணையிடப் பட்டனர். தம்மை வலுக்கட்டாயமாகக் கிறித்தவராக்குவதற்கு ஆங்கிலேயர் முனைந்திருந்தனர் என்று சிப்பாய்கள் அஞ்சினர். எனவே, புதிய இராணுவ ஒழுங்கு முறைகளை அவர்கள் மும்முரமாக எதிர்த்தார்கள். அவர்களுடைய எதிர்ப்பு ஒரு பெருங் கிளர்ச்சியாக வளர்ந்துவிட்டது. திப்புவின் மக்கள் கோட்டைக்குள்ளிருந்து இக் கிளர்ச்சியைத் தூண்டிவிட்டனர் என்று கிரேடாக் கருதினார். ஆனால், சர் தாமஸ் மன்றோ அவருடைய கருத்தை ஏற்கவில்லை. புதிய தலைப் பாகையே கிளர்ச்சிக்குக் காரணம் என்று அவர் நம்பினார். அவர் குடிமக்களின் எண்ணங்களை ஆராய்ந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்றிருந்தவர். சிப்பாய்கள் 1806ஆம் ஆண்டு திடீரென்று கிளர்ந்து எழுந்து நூறு ஆங்கிலேயரைக் கொன்றுவிட்டனர். உடனே ஆர்க்காட்டிலிருந்து கர்னல் கில்லஸ்பி (Col. Gillespie) என்பார் ஒரு படையுடன் வந்து கிளர்ச்சியை ஒடுக்கினார். முந்நூறு சிப்பாய்கள் கொல்லப்பட்டனர். அஃதுடன் புதிய ஒழுங்குமுறை விதிகள் ரத்துசெய்யப்பட்டன. திப்புவின் மக்கள் கல்கத்தாவுக்கு அனுப்பப்பட்டார்கள்.

வடஇந்தியாவில் 1857ஆம் ஆண்டு மூண்டெழுந்த முதல் இந்தியச் சுதந்தரப் போராட்டத்தை வேலூர்க் கிளர்ச்சியின் விளைவு அல்லது தொடர்ச்சி என்று கூறுவர். அக் கருத்துக்கு அடிப்படை ஏதும் இல்லை. சிப்பாய்க் கலகம் என்று ஆங்கிலேயரால் பெயரிடப்பட்ட முதல் சுதந்தரப் போராட்டம் மூள்வதற்கு முன்பு நாட்டில் பல வகையான அரசியல், சமய, பொருளாதாரக் கொந்தளிப்புகள் காணப்பட்டன. அஃதுடன் அப் போராட்டத்தில் பொதுமக்களும் இந்தியச் சிப்பாய்களுடன் கிளர்ச்சியில் சேர்ந்துகொண்டனர். ஆனால், வேலூர்க் கிளர்ச்சியில் மக்கள் கலந்துகொள்ளவில்லை.

கவர்னருக்கும் *1801*–ல் நிறுவப்பட்ட உயர்நீதி மன்றத்து (Supreme Court) நீதிபதி ஒருவருக்குமிடையே பூசல்கள் தோன்றின. அரசாங்கம் போலீசு படை ஒன்றை நிறுவிற்று. உயர்நீதி மன்றத்து (Supreme Court) நீதிபதி சர் ஹென்றி கிவில்லிம் (Sir Henry Gwillim) என்பார் போலீசு படை என்பது கொடுங்கோன்மையை விளைப்பதாகும் என்று அதை எதிர்த்




தார். அவருக்கும் தலைமை நீதிபதிக்கும் இதனால் மனக் கசப்பும் பூசலும் விளைந்தன. ஆகவே, கிவில்லிம் பதவி யினின்றும் விலக்கப்பட்டார்.

சென்னையில் நிறுத்தப்பட்ட வெள்ளையர் படையில் உயர் பதவிகளில் இருந்த அலுவலர்கள் கலகம் உண்டுபண்ணினார்கள்.

தமக்குப் போதிய ஊதியமும், உரிமைகளும், கௌரவமும் அளிக்கப்படவில்லை என்று அவர்கள் முறையிட்டுக் கொண்டனர்.

பென்டிங்க் பிரபுவும், தலைமைச் சேனாதிபதி சர் ஜான் கிரேடாக் (Sir John Cradock) என்பாரும் பதவியை இழந்து தம் தாய்நாடு திரும்பவேண்டிய நிலை ஏற்பட்டது. பென்டிங்க் பிரபுவுக்குப் பிறகு சர் ஜார்ஜ் பார்லோ (Sir George Barlow) என்பார் சென்னையில் கவர்னராக நியமிக்கப்பட்டார்(1807-13). வெள்ளையர் கலகம் முதிர்ந்தது. அவர்களுடைய கலகத்துக்கு இந்தியச் சிப்பாய்கள் உடன்பட்டிருக்க மறுத்துவிட்டனர். கிளர்ச்சி மசூலிப்பட்டினம், செகந்திராபாது, ஜௌல்னா, சீரங்கப்பட்டணம் ஆகிய இடங்களிலும் பரவிற்று. இரண்டு மாதங்கள் நெருக்கடி நிலையில் நெருப்புப் பறந்தது. கவர்னர்-ஜெனரலாக இருந்த மின்டோ பிரபு (Lord Minto) நேரில் வந்து இக் கிளர்ச்சியைத் தீர்த்து வைத்தார்.

சென்னை நகரம் நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது. ஆங்கிலேயர் பூம்பொழில் சூழ்ந்த மாளிகைளில் வசித்து வந்தனர். அவர்களுக்கென நகரில் ஒரு தனிப்பகுதி ஒதுக்கப்படவில்லை. ஒவ்வொரு மாளிகையும் மிகவும் விரிவான, பல ஏக்கர்கள் பரப்புள்ள பூம்பொழிலுக்கிடையே அமைக்கப்பட்டிருந்தது. அரசினர் இல்லம் (Government House) விசாலமான ஒரு வெட்ட வெளியில் நின்றிருந்தது. அங்கிருந்தே கோட்டையையும், சுருண்டெழுந்துவரும் நீலத்திரைக் கடலையும் கண்டுகளிக்கலாம். கருநாடக நவாபிற்குச் சொந்தமான சேப்பாக்கத் தோட்டங்களில் அவனுடைய அழகான அரண்மனை அமைந்திருந்தது. இம் மாளிகை முழுவதும் பல்வண்ணச் சுண்ணாம்பால் கட்டப்பட்டது. சலவைக் கல்லையும் மிஞ்சிய தோற்றமும், பொலிவும், பளபளப்பும் அச் சுண்ணாம்பின் இழைப்பில் காணலாம். குளிர்ந்த நெருங்கிய மரங்கள் வாலாஜா சாலையின் இருபுறங்களையும் அணிசெய்து நின்றன. இந்தியர்கள் 'கறுப்பு நகர்' என்ற பகுதியில் வாழ்ந்திருந்தனர். குடைக்கும் கொடிக்கும் தம்முள் ஒருவரோடொருவர் போராடி இரத்தம் சிந்திய அவர்கள் தம்மை இழிவுபடுத்திய இப் பெயரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யவில்லை. பெத்துநாய்க்கன்பேட்டையிலும், முத்தியால்பேட்டையிலும் இந்தியர் நெருங்கி வாழ்ந்து வந்தார்கள். இப்போது பிரகாசம் சாலை எனும் பெயரில் வழங்கும் சாலை அப்போது ஓர் ஓடையாக இருந்தது. பின்னர் அதை ஸ்டீபன் போப்ஹாம் (Stephen Popham) என்பவர் அழகிய, நீண்டதொரு சாலையாக மாற்றினார். இன்றும் அச்

சாலையானது அவருடைய பெயராலும் வழங்கி வருகின்றது. கறுப்பு மக்கள் என்று இழித்துக்கூறப்பட்ட தமிழ் மக்கள் வாழ்ந்த இடம் மிகமிக நெருக்கமாகவும், சுகாதார வசதிகள் ஏதும் இன்றியும் நாற்றமெடுத்துக் கொண்டிருந்தது. குப்பை வாருவதற்கும், கழிவு நீரை அகற்றுவதற்கும் கம்பெனி அரசாங்கம் எடுத்துக்கொண்ட முயற்சிகள் தொடக்கத்தில் பயனற்றுப் போயின.

கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியில் இருந்துவந்த இடங்களில் நிலவரியே சிறப்பான வருவாயாக இருந்தது. ஆங்கிலேயர் பல இடங்களைப் பல மன்னர்களிடமிருந்து பல முறைகளைக் கையாண்டு கைப்பற்றி இணைத்துக்கொண்டார்கள். ஆகையால் தமிழகத்தில் இடந்தோறும் வரிகளும், வரிவிதிப்பு முறைகளும் மாறுபட்டுக் காணப்பட்டன. சோழர், பாண்டியர், விசயநகர அரசர்கள் காலத்து வழங்கிய பல வரிகள் கைவிடப்பட்டன. பல வரிகள் பெயர் மாற்றங்கொண்டு புதிய வரிகளாக வழங்கலாயின. ஆங்கிலேய அரசாங்கம் இவ் வரிகள் அனைத்தையும் தொகுத்து ஓர் ஒழுங்குமுறைக்குக் கொண்டு வந்தது. நாட்டில் பல இடங்களில் குடிமக்கள் தாம் உழுது பயிரிட்டு வந்த நிலங்களின்மேல் சொத்துரிமை பெற்றிருந்தனர். அந் நிலங்களைத் தடையேதுமின்றிப் பயிரிடவும், குத்தகைக்கு விடவும், விற்கவும் அவர்களுக்கு உரிமையிருந்தது. இக் குடிமக்கள் அரசாங்கத்துக்குத் தாமே நேரில் வரிகட்டி வந்தனர். இந்தக் குடியுரிமைக்கு 'ரயத்துவாரி' முறை என்று பெயர். முப்பதாண்டுகட்கு ஒருமுறை நிலவரி விகிதங்கள் மாற்றப்பட வேண்டுமென்று ஏற்பாடுகள் செய்யப்பட்டன. குடிமக்களிடமிருந்து நிலத்தைப் பறித்துக்கொள்ளவோ முப்பதாண்டுகட்குள் வரிவிகிதத்தை மாற்றவோ அரசாங்கத்துக்கு அதிகாரம் இல்லை. 'மிராஸ்தாரி முறை' என்று மற்றொரு நிலவரி முறையும் தமிழகத்தில் சில இடங்களில் வழக்கில் இருந்து வந்தது. நாயக்கர் ஆட்சியிலும், அது முடிவுற்ற பிறகும் நாட்டில் நூற்றுக்கணக்கான பாளையக்காரர்கள் தனித்தனிப் பாளையப்பட்டுகளில் தனியரசு செலுத்தி வந்தனர். குடிமக்களின் தேவை நிறைவுகளையும், நீதிநிருவாகத்தையும் அவர்கள் கண்காணித்து வந்தனர். பாளையக்காரரிடம் சிறுசிறு படைகளும் இருந்து வந்தன. ஆங்கிலேய அரசாங்கம் அப் படைகளைக் கலைத்துவிட்டது; நீதிநிருவாகத்தைத் தானே மேற்கொண்டது. பாளையக்காரர்கள், தம் குடிமக்களிடமிருந்து தண்டிய வரித் தொகையில் ஒரு பகுதியைத் தம் செலவுக்காக நிறுத்திக்கொண்டு எஞ்சியதை பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய

கடமைக்குள்ளானார்கள். அவர்களுக்குப் பாளையக்காரர்கள் என்ற பெயர் மாறி, ஜமீன்தாரர்கள் என்றும், ஜாகீர்தாரர்கள் என்றும், மிட்டாதாரர்கள் என்றும், பட்டகாரர்கள் என்றும் பல பெயர்கள் ஏற்பட்டன. எண்ணற்ற வரிகளின் சுமை, வரி தண்டியவர்களின் கொடுமைகள், ஊருக்கு ஒரு வரி, குலத்துக்கு ஒரு வரி என்ற சிக்கலான, முறைகேடான சட்டங்கள் மாறித் தமிழகம் முழுவதற்கும் ஒரே அரசியல், ஒரே நீதி என்ற ஒருமைப் பாடு நிறுவப்பட்டது.

தென்னிந்தியாவில் சில பகுதிகள் ஆங்கிலேயரின் நேர்முக ஆட்சிக்குள்ளடங்கி இருந்தன. இராமநாதபுரம், புதுக்கோட்டை, மைசூர், திருவிதாங்கூர் ஆகியவை, மன்னர்களின் ஆட்சியின்கீழ் இருந்துவந்தன. நேர்முக ஆட்சிப் பகுதிகள் அனைத்தையும் இணைத்துச் சென்னை மாகாணம் என்று தனி மாகாணம் ஒன்று அமைத்தனர். சென்னை மாகாணம் இருபத்தைந்து மாவட்டங் களாகப் பிரிக்கப்பட்டது. இம் மாகாணத்தில் மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் பேசும் மக்கள் வாழ்ந்த பகுதிகளும் சேர்க்கப்பட்டிருந்தன.

சென்னை மாகாணத்தின் ஆட்சித் தலைவராகக் கவர்னர் ஒருவர் தொடர்ந்து செயல்பட்டு வந்தார். நிலவரி வசூல், நிலங் களின் தரப்பிரிப்பு முதலிய கடமைகளைப் புரிவதற்காக ரெவினியூ போர்டு (Revenue Board) அமைக்கப்பட்டது. ஒவ் வொரு மாவட்டத்துக்கும் ஒரு கலெக்டர் (Collector) நியமிக்கப் பட்டார். ஒவ்வொரு மாவட்டமும் பல தாலுக்காக்களாகவும், ஒவ்வொரு தாலுக்காவும் பல பிர்க்காக்களாகவும் பிரித்து அமைக்கப்பட்டன. தாலுக்காவின் ஆட்சி தாசில்தாரிடம் ஒப்ப டைக்கப்பட்டது. தொடக்கத்தில் ஊர்க்காவல் பொறுப்பும் குற்ற விசாரணைப் பொறுப்பும் மாவட்ட நீதிபதியிடம் ஒப்ப டைக்கப்பட்டிருந்தன. பிறகு அவை மாவட்டக் கலெக்டர்களுக்கு மாற்றப்பட்டன.

ஹியூஜ் எலியட் (Rt. Hon'ble Huge Elliot) ஆறாண்டுகள் கவர்னராகப் பணியாற்றினார். இவருடைய மகன் எட்வர்டு எலியட் என்பவர் செஷன்ஸ் நீதிபதியாக இருந்தார். கவர்னர் எலியட் காலத்தில் நீதி நிருவாகத்தில் சில நல்ல மாறுதல்கள் ஏற் பட்டன. அவருக்குப் பிறகு கவர்னராகப் பதவியில் அமரவிருந்த சர் தாமஸ் மன்றோ (Sir Thomas Munro) என்பவரின் தலைமை யில் நீதிச் சீர்திருத்தக் குழு ஒன்று அமைக்கப்பட்டது (1814). இம் மன்றோதாம் ரயத்துவாரிக் குடிமுறையை அமைத்தவர்.

மன்றோ தம் குழுவினரும் தாமும் கூடி ஆராய்ந்து வகுத்த முடிவைக் கம்பெனி ஆணையினருக்குத் (Board of Control) தெரிவித்தார். கவர்னர் எலியட் அவருடைய முடிவை முழுமனத்துடனும் ஏற்றுக்கொள்ளவில்லை. எனினும் மன்றோ செய்த தம் அறிக்கையில் கண்டிருந்த சீர்திருத்தக் குறிப்புகள் அனைத்தும் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அவற்றின்படி போலீசும் மாவட்ட மாஜிஸ்டிரேட் (District Magistrate) என்ற பதவிப் பொறுப்பும் மாவட்ட நீதிபதிகளிடமிருந்து பிரிக்கப்பட்டு மாவட்டக் கலெக்டர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. கிராமத்துக் காவல் பரம்பரை உரிமையாக்கப்பட்டு அதற்குத் தலையாரிகள் அமர்த்தப்பட்டனர். ஊர் மணியக்காரர் சிறு வழக்குகளை விசாரித்து நீதிவழங்கும் கடமையையும் ஏற்றனர். கிராமங்களில் பஞ்சாயத்து நீதிமன்றங்கள் நிறுவப்பட்டன. அவை மத்தியஸ்தம் செய்து தீர்ப்புகள் வழங்கவும் உரிமை பெற்றன. ஏற்கெனவே சிப்பாய்கள் செய்து கொண்டுவந்த ஊர்க் காவல் முதலிய கடமைகளைப் போலீஸ்காரர்கள் ஏற்றுச் செய்யலானார்கள்.

சென்னையில் 1801-ல் தலைமை நீதிமன்றம் (Supreme Court) ஒன்று அமைக்கப்பட்டது. 1831-ல் மாவட்ட செஷன்ஸ் நீதிபதிகளுக்குக் குற்ற விசாரணை அதிகாரம் வழங்கப்பட்டது. நிலம், நிலவரி ஆகியவற்றுக்குத் தொடர்புகொண்ட வழக்குகளைக் கலெக்டர்களே விசாரித்துத் தீர்ப்புக் கூறிவந்தனர். நூற்றுக்கணக்கான பழக்கவழக்கங்கள், நடைமுறைகள், சாத்திரங்கள், சூத்திரங்கள் ஆகியவற்றின்கீழ்க் குற்றங்களும் சொத்துரிமை வழக்குகளும் விசாரிக்கப்பட்டு வந்தன. அதனால் ஏற்பட்ட அநீதியையும், குழப்பங்களையும், மனப்பொருமல்களையும் தவிர்க்கும்பொருட்டு மெக்காலே பிரபு (Lord Macaulay) என்பவரின் தலைமையில் விசாரணைக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. அவரும் அக் குழுவினரும் அரும்பாடுபட்டு இந்திய நாடு முழுவதற்கும் ஒரே சட்டம் செயல்படவேண்டும் என்ற நியதியின் அடிப்படையில் அறிக்கை ஒன்றைச் சமர்ப்பித்தனர். அவ் வறிக்கையை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு இந்தியச் சிவில் நடைமுறைச் சட்டம் (Indian Civil Procedure Code of 1859); இந்தியக் குற்றச் சட்டம் (Indian Penal Code of 1860) இவற்றை இயற்றியது. விசாரணை முறையில் கையாள வேண்டிய ஒழுங்கு விதிகளுக்கும், நேர்மைக்கும், சட்ட நுட்பங்களுக்கும் ஈடிணையற்ற சட்டங்களாக இவை விளங்கி வருவதுமன்றி உலகப் பாராட்டும் பெற்றுவிட்டன. அவற்றைத் தொடர்ந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் குற்ற விசாரணை ஒழுங்குமுறைச் சட்டம்

(Indian Criminal Procedure Code) ஒன்றும், இந்தியச் சாட்சியச் சட்டம் (Indian Evidence Act) ஒன்றும் இயற்றப்பட்டன. இச் சட்டங்கள் அனைத்தும் நாட்டின் ஒருமைப்பாட்டுக்கும் தேசிய உணர்ச்சி வளர்ந்து வருவதற்கும் வழிவகுத்துக் கொடுத்தன. பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தின் ஒழுங்குமுறைச் சட்டத்தின் (1833) கீழ் இந்திய மண்ணில் எந்த இந்தியனுக்கும், அவன் இன்ன குலத்தினன், இன்ன சமயத்தினன், இன்ன இடத்தினன், இன்ன நிறத்தினன் என்ற காரணத்தாலேயே அரசாங்கத்தின்கீழ்ப் பணி புரியும் உரிமை மறுக்கப்படலாகாது என்று விதிகள் வகுக்கப்பட்டு நடைமுறைக்கு வந்தன. இங்கிலாந்தின் நாடாளுமன்றத்தில் இயற்றப்பட்ட சட்டம் (1861) ஒன்றின்படி சென்னையில் உயர் நீதிமன்றம் ஒன்று நிறுவப்பட்டது.

மராத்தியரின் சூறையாடலும், சௌத் வரிக்கொடுமையும், பாளையக்காரரின் சுரண்டலும், ஊருக்கு ஒரு நீதி, குலத்துக்கு ஒரு நீதி என்ற முறைகேடும் ஒழிந்தவுடனே மக்கள் வாழ்க்கையில் அமைதி நிலவலாயிற்று. நீதியும் நேர்மையும் அவர்களுடைய உயிருக்கும் உடைமைக்கும் வேலியிட்டன.

### நாணயங்கள்

தமிழகத்தில் பலவகையான நாணயங்கள் புழக்கத்தில் இருந்து வந்தன. நட்சத்திர வராகன்கள், சென்னை வராகன்கள், ஆர்க்காட்டு ரூபாக்கள், பொன் மொகராக்கள், வெனீஷிய நாணயங்கள், பறங்கிப்பேட்டை மொகராக்கள், மைசூர் மொகராக்கள், வெள்ளி டாலர்கள், மராத்திய ரூபாக்கள், ஐதாரி பொன் மொகராக்கள், ஐதாரி வராகன்கள், இராசகோபால் பணங்கள் ஆகிய நாணயங்கள் மக்கள் கைகளில் நடமாடிவந்தன. சென்னையில் நடைபெற்று வந்த நாணயம் அச்சிடும் சாலையில் (Mint) நட்சத்திர வராகன்கள், மதராஸ் வராகன்கள், மதராஸ் பணங்கள், மதராஸ் துட்டுகள் அச்சிடப்பட்டன. கவர்னர் மன்றோ காலத்தில் ஏற்பட்ட புதிய விதிமுறைகளின்படி இந் நாணயங்கள் அனைத்தும் ஒழிக்கப்பட்டன. ரூபா நாணயம் ஒன்று மட்டும் புழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டது. பழைய வராகன் ஒன்றுக்கு மூன்றரை ரூபா வீதம் செலாவணிவிகிதம் விதிக்கப்பட்டது.

வாணிகத் துறைக்கு நாணய ஒழுங்குமுறை பெரிதும் பயனாயிற்று. வாணிகம் நன்கு வளர்ந்து வந்ததாயினும் ஆங்கிலேயர் வகுத்த சில விதிமுறைகளின் காரணமாக வாணிக இலாபமானது இந்தியக் குடிமக்களின் கைகளில் தங்காமல் கடல் கடந்து சென்று

ஆங்கிலேயரின் பேழைகளை நிரப்பிவந்தது. இந்தியருடன் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி மட்டுந்தான் வாணிகம் புரிய லாம் என்றும்,வேறு அன்னியர்கள் இந்திய வாணிகத்தில் ஈடுபட லாகாது என்றும் பிரிட்டிஷார் தடைகள் விதித்து வந்தனராக லின், இந்தியக் குடிமக்களின் தொழில்களும், குடிமக்களின் பொருளாதாரமும் பிரிட்டிஷாரின் விருப்பங்கள், தேவைகள் ஆகியவற்றில் ஏற்படும் மாற்றங்களுக்கும் பிரிட்டிஷ் அரசின் ஆணைகட்கும் உட்பட்டிருந்தன. அவர்களுடைய ஏகபோக வாணிக உரிமைகள், தமிழ்நாட்டுக் குடிமக்களுக்குப் பல இன் னல்கள் விளைத்தன. நாட்டில் உயர்தரமான பருத்தித் துணி களும் பட்டுத்துணிகளும் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டன. அவற்றைக் கிழக்கிந்தியக் கம்பெனியானது கொள்முதல் செய்து இங்கிலாந்துக்கு அனுப்பி வைக்கும். குறைந்த விலையிலும் குறைந்த கூலியிலும் தமக்குத் துணிகள் நெய்து கொடுக்கும்படி கம்பெனி வாணிகர்கள் தமிழகத்து நெசவாளருடன் முன் ஒப்பந்தம் செய்துகொள்ளுவார்கள். பிறகு தமக்குச் சாதகமாக விலைகள் ஏறியவுடன் நெசவாளர்களைத் துணிகளை நெய்து கொடுக்கும்படி அவர்கள் வற்புறுத்துவார்கள். நெசவாளர்கள் மறுப்பராயின் கம்பெனி வாணிகர்கள் அவர்களை நிற்க வைத்துச் சாட்டையால் அடிப்பதுமுண்டு. அவ்வடிக்குப் பயந்து நெசவாளர்கள் ஒப்பந்தத்தின்படியே துணிகளை நெய்து கொடுத்துப் பெரு நட்டம் அடைவார்கள். இக்காரணத்தால் கிராமங்களில் நெசவாளர் குடும்பங்கள் பல முழுகிப் போன துண்டு. இந்திய நாடானது வெறும் உழவையே நம்பிப் பிழைத்து வந்தது என்பது வரலாற்றில் பதிந்துவிட்ட பல பொய்க் கூற்று களுள் ஒன்றாகும். உழவானது மிகவும் சிறப்பானதாகக் கருதப் பட்டு வந்ததென்பது உண்மையேயாம். எனினும், மக்கள் நல் வாழ்வுக்கு உதவிய ஏனைய தொழில்கள் நூற்றுக் கணக்கில் நாட்டில் வளமுற்று விளங்கின. கடல் முத்துகள், நறுமணப் பண் டங்கள், சாயச் சரக்குகள், சர்க்கரை, துணி, அபினி, கஞ்சா, தேக்கு, ஈட்டி, கருங்காலி, செம்மரம் முதலியன தமிழ்நாட்டில் ஏராளமாக விளைந்தன. இவற்றையும், மேலும் பலவகையான காடுதரு பொருள்களையும் ஆங்கிலேயர் இங்குக் கொள்முதல் செய்து இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்தனர். பொன், செம்பு, துத்தநாகம், வெள்ளீயம், காரீயம் ஆகிய உலோக வகைகளை யும், குதிரைகளையும், மது வகைகளையும் அவர்கள் தமிழகத் துக்கு இறக்குமதி செய்தனர். இந்தியாவிலிருந்து இங்கிலாந் துக்கு ஏற்றுமதியான சரக்குகளின் மதிப்பைவிட அங்கிருந்து இந் நாட்டுக்கு இறக்குமதியான சரக்குகளின் மதிப்புக் குறைவாக இருந்தபடியால் இங்கிலாந்தானது இந்தியாவுக்கு என்றுமே

கடன்பட்டிருக்க வேண்டியுள்ளது என்று ஆங்கிலேயர் குறை பட்டுக்கொள்ளுவது வழக்கமாக இருந்தது.

வட இந்தியாவில் 1857-ல் சிப்பாய்க் கலகம் என்று ஆங்கிலேய வரலாற்று ஆசிரியர்களால் இழித்துக் கூறப்பட்ட கிளர்ச்சி மூண்டெழுந்தது. இதை முதல் சுதந்தரப் போராட்டம் என்று சிலர் கருதுகின்றனர். ஆயிரக்கணக்கான இந்தியரும் நூற்றுக் கணக்கான ஆங்கிலேயரும் அப் போரில் கொல்லப்பட்டனர். ஆங்கிலேய அரசாங்கம் கடுமையான நடவடிக்கைகளை மேற் கொண்டு அக் கிளர்ச்சிகளை ஒடுக்கிற்று. அடுத்த ஆண்டு இங்கி லாந்தில் பால்மர்ஸ்டன் பிரபு (Lord Palmerston) முதல் அமைச்ச ராக அரசாங்கத்தை மேற்கொண்டார். அவருடைய முயற்சி யினால் இந்தியாவில் சீரியதொரு அரசாங்கம் நிறுவும் நோக்கத் துடன் சீர்திருத்தச் சட்டம் ஒன்று பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றி வைக்கப்பட்டது. அதன் பிறகு இந்திய அரசாங்கம் பல புரட்சிகரமான மாறுதல்களுக்கு உள்ளாயிற்று. கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்கு ஒரு முடிவு கட்டப்பட்டது. இந்திய அர சாங்கத்துக்கு இங்கிலாந்தின் அரசியாகவிருந்த விக்டோரியாவே பேரரசியானாள். இந்திய அரசாங்கமானது இங்கிலாந்தின் நேர் முக ஆட்சிக்குள் கொண்டுவரப்பட்டது. பிரிட்டிஷ் அரசு இந்தியா வின் பேரரசாக விரிவுற்றது. பேரரசின் மணிமுடியில் இந்திய நாடு நாயக மணியாக ஒளிவீசிக் கண்ணைப்பறித்தது. உலக வரலாற்றுள் இதுவரை காணப்படாத மாபெரும் பேரரசு ஒன்று உருவாயிற்று. பேரரசி விக்டோரியா அறிக்கை ஒன்று வெளியிட் டாள் (1858 நவம்பர் 1ஆம் தேதி). இந்தியக் குடிகளுக்குப் பல துறைகளிலும் முன்னேற்றம் காணக்கூடிய சீர்திருத்தங்களைத் தன் அரசாங்கம் செய்ய முனைந்திருப்பதாகவும், இந்தியாவில் ஆங்காங்குச் சுதந்தரமாக ஆண்டுவந்த மன்னரின் ஆட்சியிலோ, ஆட்சி வரம்பீட்டிலோ தன் அரசாங்கம் தலையிடாதென்றும், சாதி, நிறம், சமயம் ஆகிய வேறுபாடுகளை முன்னிட்டு அரசாங் கத்தில் பணிசெய்ய யாருக்கும் உரிமை மறுக்கப்படாதென்றும் அவ்வறிக்கை எடுத்துக்கூறி, உறுதிமொழி யளித்தது. இந்தியா வின் கவர்னர்-ஜெனரல் இந்தியாவில் அரசியின் பிரதிநிதியாகவும் (Viceroy) செயல்பட்டார். கவர்னர்-ஜெனரலே இந்திய நாட்டின் ஆட்சித்தலைவராக இருந்தது மட்டுமன்றிப் படைகளின் சேனாதி பதியாகவும் செயல்பட்டார். அவருக்கு மந்தணம் கூறுவதற்கு நான்கு உறுப்பினர் அடங்கிய குழு ஒன்று அமைக்கப்பட்டது. இக் குழுவில் இந்தியக் குடிமகன் யாரும் இடம்பெற முடியாமற்போன தைக் கண்டு மக்கள் மனம் புழுங்கினர். இந்தியாவிலேயே பிறந்து வாழ்ந்துவந்த பலகோடி மக்களின் வாழ்வுக்கு வழிவகுக்கும்

பொறுப்பை ஆறாயிரம் கல் தொலைவுக்கு அப்பால் அமைந் திருந்து, நாகரிகம், பண்பாடு, சமயம், மொழி ஆகியவற்றில் இந்தியருடன் முற்றிலும் முரண்பட்டிருந்த ஒரு நாடு தான் மட்டும் ஏற்றுக்கொண்டு நடத்த முற்பட்டதை அரசியலிலும், அறிவுத்துறையிலும் முன்னணியில் நின்ற பல இந்தியர்கள் வன் மையாகக் கடிந்து கொள்ளலானார்கள். பிறகு அவ்வப்போது இந்திய அரசியல் அமைப்பில் பல மாறுதல்கள் செய்யப்பட்டன. பிரிட்டிஷ் நாடாளுமன்றம் நிறைவேற்றிய சட்டம்(1861) ஒன்றின் கீழ்ச் சட்டமும் விதிகளும் இயற்றிக்கொள்ளும் அதிகாரம் சென்னை அரசாங்கத்திற்கு வழங்கப்பட்டது.

அரசாங்க நிருவாகத்தின் அமைப்பில் மேல்நிலையில் அமர்த் தப்பட்டிருந்தவர்கள் அனைவரும் ஆங்கிலேயராகவே இருந் தனர். பிறகு 'இந்திய சிவில் சர்வீஸ்' (I.C.S.) என்ற உயர்பணித் துறையில் ஓரளவு இந்தியருக்கும் இடம் ஒதுக்கப்படலாயிற்று.

ரிப்பன் பிரபு வைஸ்ராயாகப் பணியாற்றியபோது அவர் மேற்கொண்ட ஒரு தீர்மானத்தின் கீழ் (1883-84) உள்நாட்டுக் குடிமக்களும் நாட்டு அரசாங்கத்தில் பங்குகொள்ளும் ஏற்பாடு கள் செய்யப்பட்டன. ஒவ்வொரு மாவட்டத்துக்கும் ஒரு மாவட்ட போர்டும், தாலுக்காக்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு தாலுக்கா போர்டும் அமைக்கப்பட்டன. இவ் வகைகளின் உறுப் பினர்களுள் பலர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருந்தனர். நகரங்களுக்கு நகராட்சி மன்றங்கள் அமைக்கப் பட்டன. ஏற்கெனவே சென்னை நகரில், மாநகராட்சி ஒன்று நிறுவப்பட்டுப் பல சட்டங்களின் மூலம் (1841, 1856, 1865, 1867, 1878) அதன் ஆட்சி வரம்பும் பணிகளும் விரிவாகிக்கொண்டே வந்தன. அம் மாநகராட்சியானது 1867 ஆம் ஆண்டு வரையில் மூன்று ஆணையர் (Commissioners) கைகளில் ஒப்படைக்கப்பட் டிருந்தது. அவ்வாண்டில் சென்னை நகரம் எட்டுத் தொகுதி களாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு தொகுதிக்கும் நான்கு உறுப்பினரைஅரசாங்கமே நியமித்தது. அடுத்து மேற்கொள்ளப் பட்ட சில சீரமைப்புகளுக்குப் பிறகு 1899ஆம் ஆண்டில் சென்னைக்கு மாநகராட்சி ஒன்று நிறுவப்பட்டது.

பிரிட்டிஷ் அரசாங்கமானது இந்தியக் குடிமக்களுடன் நேர் முகத் தொடர்பு மேற்கொண்ட பிறகு நாடு பல துறைகளிலும் துரிதமாக முன்னேறி வந்தது. முதன் முதல் 1856 ஜூலை மாதம் சென்னை-வாலாஜாபேட்டை இரயில் பாதை திறக்கப்பட்டது. எட்டாண்டுகளுக்குப் பிறகு இது பெங்களூர் வரையில் அமைக்கப்

பட்டது. அரக்கோணம்-ராய்ச்சூர் பாதை 1871 ஆம் ஆண்டிலும் ஜோலார்ப்பேட்டை-மேட்டுப்பாளையம் இரயில்பாதை 1873ஆம் ஆண்டிலும் அமைக்கப்பட்டன. சென்னை-அரக்கோணம் இரயில் பாதை 1877ஆம் ஆண்டுக்குள் இரட்டைப் பாதையாக்கப் பட்டது.

சென்னை மாகாணத்துக்குத் தனி உயர்நீதி மன்றம் ஒன்று 1862, 1865 ஆம் ஆண்டுப் பட்டயங்களின்படி அமைக்கப்பட்டது. தலைமை நீதிமன்றமும் (Supreme Court) சிறிது காலம் உயர்நீதி மன்றத்தின் ஒரு பிரிவாகவே செயல்பட்டு வந்தது. இப்போ துள்ள உயர்நீதி மன்றக் கட்டடங்கள் அழகும் கவர்ச்சியும் வாய்ந்தவை; இவை 1889 ஆம் ஆண்டு தொடங்கிச் சில ஆண்டு களில் கட்டி முடிக்கப்பட்டன. நீதிமன்ற மண்டபங்கள் வெள்ளை கறுப்புச் சதுரக் கற்களால் பாவப்பட்டுள்ளன. பலவண்ணக் கண்ணாடிகளின் மூலம் கதிரவனின் ஒளி மண்டபங்கட்குள் புகுந்து தனி ஒரு சோபையைத் தருமாறு பலகணிகள் அமைக்கப் பட்டுள்ளன. தரையில் சிறு சிறு பூவண்ண ஓவியங்கள் தீட்டப் பட்டுள்ளன. அப் பூக்களுள் ஒன்றைப்போலச் செய்யப்பட்ட 'ஐகோர்ட்டு'த் திருகாணிகள் பல ஆண்டுகள் பெண்களின் காது களை அணிசெய்து வந்தன. சென்னையின் கலங்கரை விளக்கம் உயர்நீதி மன்றத்தின் பல கோபுரங்களில் ஒன்றாகக் காட்சியளிக் கின்றது. அது தரைமட்டத்திலிருந்து 160 அடி உயரம் உள்ளது.

**சில தீய பழக்கவழக்கங்கள்**

வட இந்தியாவில் மக்களிடையே காணப்பட்ட சிசுக் கொலையும், உடன்கட்டை யேறுதலும் தமிழகத்தில் வழங்கி வரவில்லை. அவற்றை அகற்றுவதற்காக இந்திய அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளைக் கண்டு தமிழ்மக்கள் வெகுளவு மில்லை; கிளர்ந்தெழவுமில்லை. பல்லாயிரம் ஆண்டுகளாகவே மாறுபட்ட அரசியல்களையும் பண்பாடுகளையும் ஆங்காங்குத் தாம் ஏற்றுக்கொண்டு தம் வாழ்க்கையை வளப்படுத்திக் கொள் வது தமிழ் மக்களின் இயல்பாக இருந்துவந்துள்ளது. தமிழர்கள் புதுமையைப் புறக்கணிக்காதவர்கள்; ஓராயிரம் ஆண்டுகளுக்கு மேலாகப் பன்னாட்டு மக்கள் தமிழ்நாட்டில் இடம் பெற்றுத் தமிழருடன் இணைங்கி வாழ்ந்து வருகின்றனர். பல பெரும் சமயங்கள் தமிழகத்தில் இணைந்து வளர்ந்து வந்துள்ளன. அச் சமயங்களின் கருத்துகளை எல்லாம் தம் கருத்துகளாகவே மாற் றிக் கொண்டுவிட்டனர். அரசாளவும், சமயப் பணி புரியவும், வாணிகம் செய்யவும், பல்வேறு கைத்தொழில்கள் புரிந்து பிழைக்கவும் தமிழகம் புகுந்த அயல்நாட்டு மக்கள் தாமும்

தமிழராகவே மாறித் தமிழருடன் கலந்து உறவாடி வந்துள்ளனர். இக் காரணங்களினால் வடநாட்டில் விளைந்தவற்றைப் போன்ற குருதி சிந்தும் சமயச் சண்டைகளும், அரசியல் கிளர்ச்சிகளும், போராட்டங்களும் தமிழகத்தில் ஆதரவு பெறாமற் போயின.

## குலப் பூசல்கள்

மக்களிடையே நூற்றுக்கணக்கான குலங்கள் பெருகி விட்டிருந்தன. ஒரே குலத்தினர் அவர்கள் வாழ்ந்த இடத்துக் கேற்பப் பல மொழிகளைப் பேசினர். கொள்ளேகாலத்தில் வாழ்ந்த தேவாங்கச் செட்டிகள் கன்னடத்தையும், வட ஆர்க் காட்டு மாவட்டத்தில் வாழ்ந்த தேவாங்கச் செட்டிகள் தெலுங் கையும் தமிழையும் பேசினர். திருநெல்வேலியில் வாழ்ந்துவரும் முஸ்லிம்கள் தமிழையே பேசுகின்றனர்; அவர்களுள் பெரும் பாலார்க்கு உருது பேச எழுத வாராது. திருநெல்வேலியின் தென் பகுதியிலும், நாஞ்சில் நாட்டிலும் வாழும் பிராமணர்கள் தமிழும் மலையாளமும் பேசுகின்றனர். அதைப்போலவே இன்ன குலத் தினர் இன்ன சமயத்தைத்தான் பின்பற்றி வருகின்றனர் என்று வரையிட முடியாது. பேரி செட்டிகளிடையே, ஆரிய வைசியச் (கோமுட்டிச்) செட்டிகளிடையே சைவர் உண்டு; வைணவர் உண்டு. இவ் விரு பிரிவினருக்குள்ளும் பந்தி உணவும் பெண் கொடுத்தலும் எடுத்தலும் நடைபெற்று வருகின்றன. பிராம ணருள் வைணவர்கள் தம்மை அய்யங்கார்கள் என்று கூறிக் கொள்ளுவர்; நாமம் தீட்டிக்கொள்ளுவார்கள். ஆனால், ஸ்மார்த்தப் பிராமணருக்குள் ஒரு பிரிவினர் நெற்றியில் நாமம் போட்டுக்கொண்டு வைணவத்தைப் பின்பற்றுகின்றார்கள். பொதுவாகப் பிராமணர்கள் வெளியில் திருநீறு பரக்கப் பூசி, உருத்திராக்கம் அணிந்தாலும் உள்ளே இராம மந்திரமே ஓது வார்கள்; 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்து ஓதும் சைவப் பிரா மணனைக் காணவே முடியாது. புரோகிதம் செய்யும் ஸ்மார்த்த, வடமப் பிராமணர்கள் தம் குலத்துக்கு மட்டும் புரோகிதம் செய் வார்கள்; பிராமணர் அல்லாத ஏனைய குலங்களுக்குப் புரோகிதம் செய்வதில்லை. பிராமணர் அல்லாதார்க்குப் புரோகிதம் செய் வதற்கெனவே பிராமணர்கள் தனியாக உள்ளனர். கோமுட்டி களுக்குப் புரோகிதம் செய்யும் பிராமணர் வேறு எக் குலத்தின ருக்கும் புரோகிதம் செய்யும் வழக்கம் இல்லை. கோயில் அருச்சகத் தொழிலுக்கு உரிமையுடையவர்கள் ஆதிசைவ அந்தணர்கள் அல்லது குருக்கள் ஆவார்கள். ஏனைய பிராமணப் பிரிவினர் இவர்களுடன் உணவுக் கலப்பும் இரத்தக் கலப்பும் கொள்ளுவதில்லை. ஆதி சைவரின் கோத்திரங்கள் சூத்திரங் களுக்கும், ஏனைய பிராமணரின் கோத்திர சூத்திரங்களுக்கும்

ஆழ்ந்த வேறுபாடு உண்டு. சிதம்பரம் திருச்சிற்றம்பலத்தில் வழிபாடு செய்யும் பிராமணர்கள் (தீட்சிதர்கள்) ஒரு தனிப் பட்ட வகுப்பினர் ஆவார்கள். அவர்கள் வேறு எந்தப் பிரா மணருடனும் பெண் கொடுக்கல் வாங்கல் வைத்துக்கொள்ளுவ தில்லை. 'தில்லைப் பெண் எல்லை தாண்டாது' என்பது ஒரு பழமொழி. அது இன்றளவும் உண்மையாக இருந்து வருகின் றது. தில்லைப் பிராமணர் ஒருவர் தலைமுடியை ஐரோப்பிய முறையில் வெட்டிக்கொண்டாலும், ஊரை விட்டு வெளியேறி வேறு தொழிலை மேற்கொண்டாலும், தம் கோயில் வழிபாட்டு உரிமையை இழந்துவிடுவார். இப் பிராமணர்கள் தம் குலத்து நிருவாகத்தைத் தாமே பேசி முடிவு செய்து கொள்ளுவர்; நீதி மன்றத்தை நாடிச் செல்லுவதில்லை. இவர்கள் தில்லை நடராசனை வழிபடுபவர்கள் ஆயினும் தில்லைக் கோவிந்த ராசனுக்கு வழிபாடும் அருச்சனையும் செய்வர். பல தீட்சி தர்கள் தமக்குத் திருமாலின் பெயரைக் கொண்டிருப்பதையும் காணலாம். ஸ்மார்த்தரைப்போல இவர்கள் சங்கர மடங் களுக்கு ஆட்பட்டவர்கள் அல்லர். ஒரு குடும்பத்தில் தந்தைக்குக் கோயில் வழிபாட்டில் உரிமையுண்டு. அதைப்போலவே திருமணம் ஆன ஆண்பிள்ளைக்கும் அவ் வுரிமை ஏற்பட்டுவிடும். அக்காரணத்தால் எட்டு வயது, பத்து வயது ஆண் குழந்தை களுக்கும் திருமணம் முடிப்பதை வெகு காலம் கைக்கொண் டிருந்தனர்.

பிராமணர் அல்லாத சைவக் குலத்தினனுக்குச் சிவதீட்சை கொடுக்கும் உரிமை ஆதி சைவருக்கே உண்டு. சில பிராமண ரல்லாத குலங்கள் தேசிகர்கள் என்ற குலத்தினிடமும் தீட்சை பெறுகின்றன. இத் தேசிகர்களுள் சிலர் பூணுல் அணிவ தில்லை. சிவன் கோயில்களில் இவர்கள் திருப்பதிகம் பாடும் ஓதுவார்களாகப் பணியாற்றி வருகின்றனர்.

பிராமணர் அல்லாத குலத்தினரில் சிலர் வீர சைவ மரபில் ஈடுபட்டுத் தம் உடலில் சிவலிங்கம் அணிந்து கொள்ளுகின்றனர். இக் குலத்தினர் சுப அசுப புரோகிதங்களுக்குப் பிராமணரை அழைப்பதில்லை; சிவலிங்கம் அணிந்த தேசிகரையோ, பண்டா ரங்களையோ, அன்றிக் கன்னட மொழி பேசும் ஜங்கம பரம் பரையினரையோ அழைப்பர். இலிங்கம் தரிப்பவர்கள் இறந்த வர்களின் உடல்களைப் புதைப்பர்; பிறகு சமாதி பூசை செய்வர். சில குலங்களில் விசித்திரமான பிரிவுகள் உண்டு. தமிழகத்தின் வட பகுதியில் கிராமக் கணக்குத் தொழிலைச் செய்துவரும் கருணீகர்களுக்குள் நான்கு வகையுண்டு என்பர். சீர்கருணீகர்,

சரட்டுக் கருணீகர், கைகாட்டிக் கருணீகர், மற்றவழிக் கருணீகர் என்பன அப் பிரிவுகள். இவற்றுள் சரட்டுக் கருணீகர் என்பார் வைணவ மரபைச் சார்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். இந் நான்கு பிரிவுகளும் ஒன்றோடொன்று கலப்பதில்லை. வேளாளர்களுள் பல பிரிவுகள் உண்டு. அவர்களுள் பலர் ஊன் உணவு கொள்ளுகின்றனர். பல குலத்தினர் தம் நிலையில் மேம்பாடு உற்றவுடனே தம்மை வேளாளர் என்று கூறிக்கொள் வதுமுண்டு. வேளாளர்களுள் கார்காத்த வேளாளர், தொண் டைமண்டல வேளாளர், கொங்கு நாட்டு வேளாளர் எனச் சில பிரிவுகள் இருக்கின்றன. திருநெல்வேலிக் கோட்டைப் பிள்ளை மார் என்றொரு வேளாளர் வகுப்பும் உண்டு.

பேரி செட்டிகளுள் ஆயிரத்தான் செட்டி, ஐந்நூற்றான் செட்டி எனப் பிரிவுகள் உண்டு. இக் குலத்தினருள்ளும் ஊன் உண்பவர்கள் உண்டு. சங்க காலத்தில் சைவக் கம்மியரெனவும், சோழர் காலத்திலும் பிறகும் கண்மாளர் எனவும் பெயர் பெற்றுத் தமிழகத்தின் சிற்பக் கலை, கட்டடக் கலை, பொன் அணிகலன்கள் செய்யும் கலை, உலோகக் கலங்கள் செய்யும் கலை ஆகியவற்றில் தனிச் சிறப்பும் தனியுரிமையும் கொண்டாடி வரும் விசுவப் பிராமணர்கள் தனிப்பட்டு வாழ்ந்து வருகின் றனர். அவர்கள் வேறு எந்தக் குலத்துடனும், பிராமண ருடனும் கலப்புகள் கொள்ளுவதில்லை. அவர்களுக்கும் பிரா மணர்களுக்கும் இடையே உரிமைப் பூசல்கள் ஏற்பட்டு நீதி மன்றங்களின் தீர்ப்புக்குச் சென்றன என்று கூறுவர். விசுவப் பிரா மணர் தம் குலத்திலேயே புரோகிதர்களை நியமித்துக்கொள்ளு கின்றனர்; பிராமணரைப் புரோகிதத்துக்கு அழைப்பதில்லை.

தமிழகத்தில் பல குலத்தினரிடையே பெண்கள் மறுமணம் செய்துகொள்ளல், கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ளு தல் ஆகிய பழக்கங்கள் இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கம் வரையிலும் அதன் பின்பு சில ஆண்டுகள் வரையிலும் நிலவி வந்தன. சாரதா சட்டம் நிறைவேற்றப்படும் வரையில் தேவாங்கச் செட்டிகள் சிறு குழந்தைகளுக்கும் திருமணம் செய்து வந்தனர்; இவ் வழக்கம் கோமுட்டிகளிடமும் காணப்பட்டது. பெண்கள் வயது வருவதற்குள் அவர்களுக்கு மணம் முடிப்பதில் பிராமணரும் கண்ணுங்கருத்துமாக இருந்தனர். இருபதாம் நூற்றாண்டிலே அண்மையில் எல்லாக் குலங்களிலும் 'பருவத் துக்கு முற்பட்ட மணம்' நின்று போய்விட்டது.

ஆங்கிலேயர் வரவுக்குப் பிறகு பறையர் என்று ஒதுக்கி வைக்கப்பட்ட குலத்தினருக்கு விடிவு காலம் தோன்றிற்று. அவர்

களுள் சிலர் கிறித்தவர்களாக மதம் மாறிச் சமூகத்தில் மேல் நிலை எய்தினர். சிலர் ஆங்கிலேயருக்குப் பணிகள் செய்து குடிநலம் எய்தினர். ஆங்கிலேயரிடம் அவர்களுள் ஆண்கள் 'பட்லர்'களாகவும், சமையற்காரர்களாகவும், சிற்றாள்களாக வும், கையாள்களாகவும், புல்லறுப்பவர்களாகவும், பெண்கள் தாதிப் பெண்களாகவும், குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் தாதிகளாகவும், வீடு கூட்டிகளாகவும் சேர்ந்து பொருளாதார உயர்வு பெற்றனர். ஆங்கிலேயர் இந்தியப் பெண்களுடன் சில போது நெருங்கிய உறவு கொண்டதால் அவர்கட்குக் குழந் தைகள் பிறந்தன. அவர்கள் மூலம் ஆங்கிலோ – இந்தியர் என்ற ஒரு புதிய குலமே அமைந்துவிட்டது. ஆங்கிலோ-இந்தி யர் வெள்ளையர் அல்லராயினும் ஆண்களும் பெண்களும் ஐரோப்பியரைப் போலச் சட்டையணிந்து ஆங்கிலமே பேசி வந்தனர். அதனால் அவர்களுக்குச் 'சட்டைக்காரர்' என்று ஒரு பெயரும் ஏற்பட்டது.

தமிழகத்துக்குத் தனிச் சிறப்பையும், உலகப் புகழையும் பெற்றுத் தந்தது அதன் துணிவகைகள்தாம். நெசவுத் தொழில் சங்க காலத்தில் அறுவை வாணிகரிடம் வளர்ந்து வந்தது. அவர்கள் யார் எனத் தெரியவில்லை. சோழர் பாண்டியர் காலத்திலும் அதைத் தொடர்ந்து இன்றைய நாள்வரையிலும் அத்தொழில் கைக்கோளர்கள் (செங்குந்தர்கள்) கையிலும், தேவாங்கர்கள் கையிலும் செழித்தோங்கி வருகின்றது. கிழக்கிந் தியக் கம்பெனியின் துணி ஏற்றுமதித் தொழிலுக்கு வளமூட்டிய வர்கள் இவ்விரு குலத்தினர்தாம். நெசவுத் தொழிலில் ஈடு பட்டிருக்கும் மதுரை, உறையூர், கோயமுத்தூர், சேலம், சின்னாளப்பட்டி, ஆரணி, காஞ்சிபுரம் ஆகிய ஊர்களில் இத் தொழிலை நடத்தி வருபவர்கள் கைக்கோளர்தாம். கண்கவரும் ஆரணி, காஞ்சிபுரம் சேலைகளைக் கண்டு அவற்றின் அழகில் ஈடுபட்டுச் சொக்கிப் போகாத பெண்கள் தமிழகத்தில் மட்டும் அன்று, இந்தியாவிலேயே இலர் எனலாம்.

### வலங்கை-இடங்கைப் பூசல்கள்

வலங்கை இடங்கை வகுப்பினரிடையே ஏற்பட்டிருந்த பூசல் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கொலையிலும் கொள்ளை யிலும் முடிந்ததுண்டு. அப் பூசல்கள் அனைத்தும் இரு வகுப்பின ரும் அனுபவித்துவந்த சில உரிமைகளைப் பற்றியனவாகவே எழுந்துள்ளன. சென்னையில் சர் ஆர்ச்சிபால்ட் காம்ப்பெல் (Sir Archibald Compbell) என்பவர் கவர்னராகப் பதவி ஏற்ற பிறகு வலங்கை - இடங்கைப் போராட்டங்கள் நிகழ்ந்தன.

இடங்கையினர் அனைவரும் தொழிலாளர்கள்; கிழக்கிந்தியக் கம்பெனிக்கு அவர்களுடைய வாணிகத்தில் உதவி வந்தவர்கள். வலங்கையினர் எஸ்பிளனேட் மைதானத்தைக் குறுக்கிட்டுக் கோட்டைக்குச் சென்றபோது தம் முன்பு தப்பட்டை அடித்துக் கொண்டும், கரண்டிகளைத் தூக்கிக்கொண்டும், மணியடித்துக் கொண்டும் நடந்தார்கள். அவ்வாறு செல்லுவதற்கு ஏற்கெனவே ஏற்பட்டிருந்த ஓர் ஒப்பந்தம் அவர்கட்கு இடந்தரவில்லை. எனவே, அவர்கள் நடத்தையை எதிர்த்து இடங்கையினர் கவர்னருக்கு முறையிட்டுக் கொண்டனர். எஸ்பிளனேட் மைதானம் அனைவருக்கும் பொதுவென்றும், ஒருவரையொரு வர் முந்திக்கொண்டு செல்லும் உரிமை ஏதும் கிடையாது என்றும் அரசாங்கம் ஆணை பிறப்பித்தது.

திருவொற்றியூர்க் கோயில் இடங்கைத் தேப்பெருமாள் செட்டியின் நிருவாகத்தில் நடைபெற்று வந்தது. அது எல்லாக் குலத்தினருக்கும் பொதுவாக இருந்தது. ஆனால், வலங்கை யினர் பறையரைக்கொண்டு இடங்கையினரை அடிக்கச் சொன் னார்கள் என்று தேப்பெருமாள் செட்டியார் அரசாங்கத்தி னிடம் முறையிட்டார். இத்தகைய கலகங்கள் ஆண்டுதோறும் நிகழ்ந்து வந்தன. ஒரு முறை சாந்தோம் சர்ச்சுக்கு அண்மை யில் ஒரு பூசல் நேரிட்டது. அங்குக் கோயிலில் திருவிழா நடை பெற்றது. அத் திருவிழாவின்போது இடங்கையினர் ஐவண்ணப் பட்டுக் கொடிகளைக் கயிறுகளில் கோத்துத் தெருக்களின் குறுக்கே கட்டுவதற்கு உரிமை பெற்றிருந்தனர். ஆனால், வலங்கையினர் வெண்ணிறக் கொடியை மட்டுந்தான் கட்டி வைக்கலாம். இடங்கையினர் வலங்கையினரின்மேல் அரசாங் கத்தினிடம் முறையிட்டுக் கொண்டனர். திருவிழாக்களின் போது தெருக்களின் குறுக்கே எந்தவிதமான கொடியையும் கட்டக்கூடாது என்று அரசாங்கத்தின் கட்டளை பிறந்தது (1790 ஏப்ரல் 12). வலங்கை-இடங்கைக் கலகம் ஏகாம்பரநாதர் கோயிலிலும் நடைபெற்றது.

காஞ்சிபுரத்தில் வடகலை வைணவருக்கும் தென்கலை வைணவருக்குமிடையே போராட்டங்கள் தோன்றி, அவற்றை இரு கட்சியினரும் அரசாங்கத்தின் தீர்ப்புக்கு விட்டனர்.

**கல்வி**

ஆங்கிலேயரின் ஆட்சியினால் இந்திய நாட்டுக்கு ஏற்பட்ட மாபெரும் நன்மைகள் இரண்டு: இந்தியா ஒரு நாடாக அமைந்தது ஒன்று; இந்திய மக்கள் ஆங்கிலம் பயில வாய்ப்பு ஏற்பட்டது மற்றொன்று.

வரலாற்று நிகழ்ச்சிகளின் காரணமாகத் தமிழ்மொழியில் பேச்சு வழக்கிலும், எழுத்து வழக்கிலும் அன்னிய மொழிச் சொற்கள் நூற்றுக்கணக்கில் இடம்பெற்றுவிட்டன. பேச்சு மொழிக்கும், பயிற்சி மொழிக்குமிடையே ஆழ்ந்த வேறுபாடுகள் ஏற்பட்டன. எனவே, கல்வி கற்றுத் தெளிவு பெறாதவர்கள் தமிழ் இலக்கியத்தையும் இலக்கணத்தையும் பயில இயலாதவர் களானார்கள். பொதுமக்களுக்குக் கல்வி கற்கும் வாய்ப்பு மிகவும் குறைவாகக் காணப்பட்டது. கிராமங்களில் சிறுசிறு பள்ளிக் கூடங்கள் நடைபெற்று வந்தன. தனித்தனி ஆசிரியர்கள் அவற் றைத் திண்ணைகளின்மேலும், தெருநடைகளிலும் நடத்தி வந்தனர். மாணவர்களின் பெற்றோர்கள் கொடுக்கும் சிறு ஊதியம், அரசாங்கம் அளித்த மானியம், குடிமக்கள் அளித்த மேரைகள் ஆகியவற்றைக்கொண்டு ஆசிரியர்கள் பிழைப்பை நடத்தி வந்தனர். மாணவர்கள் அமாவாசைதோறும் 'லீவு' (விடுமுறை) பெற்றனர். அதற்காக அவர்கள் அமாவாசைக்கு முந்திய நாள் 'வாவரிசி' ஆசிரியருக்குக் கொண்டுவந்து கொடுப்பர். அஃதன்றிச் சனிக்கிழமைகளில் மாணவர்கள் எரு முட்டை, நல்லெண்ணெய், காய்கறிகள் முதலியவற்றையும் ஆசிரியருக்குக் கொண்டுவந்து கொடுப்பதுண்டு. புரட்டாசி மாதங்களில் தசராவின் ஒன்பதாம் நாள், நவமியன்று ஆசிரியர்கள் தம் மாணவர்கள் கற்ற வித்தை, பாடும் பாட்டு, ஆடும் ஆட்டம் ஆகியவற்றை வீடுதோறும் குடிகளுக்குக் காட்டிச் சன்மானம் பெறுவார்கள்.

திண்ணைப் பள்ளிகளில் சேர்ந்து படிக்கும் வாய்ப்பு ஒருசில உயர்குலத்தினருக்கே கிடைத்தது. தொழிலாளர்கள் தம் மக்களை இளமையிலேயே தத்தம் குலத்தொழிலில் ஈடுபடுத்திப் பயிற்சியளித்து வந்தனர். அவ்விளைஞர்களுக்கு எழுத்து மணமே இல்லாமற் போயிற்று. திண்ணைப்பள்ளிப் பயிற்சியும் இரண் டாண்டுகளுக்குமேல் நீடிப்பதில்லை. மாணவர்கள் எழுத்தைக் கற்றவுடனே தமிழில் உள்ள பல நீதிநூல்களையும் சதகங்களை யும் மனப்பாடம் செய்வார்கள். அவர்கள் கற்ற கல்வியில் விரிவோ ஆழமோ கிடையாது. மாணவர்கள் செய்யும் பிழை களுக்கு ஆசிரியர்கள் கொடுத்த தண்டனைகள் மிகவும் கொடுமை யானதாக இருந்துவந்தன. மாணவனைக் கோதண்டத்தில் மாட்டியடிப்பதும், அவர்களுடைய விரல்களை வைத்து மணலில் தேய்ப்பதும் ஆசிரியர்கள் கொடுத்த தண்டனைகளில் சில. மாணவர்களைத் தூக்கி, அவர்களுடைய இரு கைகளையும் தூலத் தில் கட்டி அவர்களைத் தொங்கவிட்டு அடிப்பதற்குத்தான் கோதண்டம் மாட்டுதல் என்று பெயர். படிப்பு வாராத மாண

வர்களின் கால்களில் மரக்கட்டைகள் பூட்டிவிடுவார்கள். அவற்றை எடுத்துத் தோளில் வைத்துக்கொண்டே நடந்து செல்லவேண்டும்.

தமிழில் எழுதப் படிக்கத் தெரிந்த ஒரு சிலரே மேற்கொண்டு தமிழ் நூல்களைப் பயில முனைந்தனர். அவர்களும் ஒழுக்க நூல் களையும், தோத்திர நூல்களையும், நிகண்டுகளையுமே பெரும் பாலும் கற்றுவந்தனர். அவர்கள் புராணங்கள், சங்க இலக்கியம் ஆகியவற்றைப் பயிலும் வாய்ப்புப் பெறுவதில்லை. அவர்கள் இலக்கிய இலக்கண ஆராய்ச்சியிலும் புகவில்லை. விஞ்ஞானம், வரலாறு, தத்துவம், உயர்கணிதம் ஆகிய துறைகளில் மாண வர்கள் பயிற்சி பெறுவதில்லை; ஓலைகளில் எழுதியிருந்த வற்றைப் படித்து வந்தனர். ஓலைகளின்மேல் எழுத்தாணியால் எழுதி வந்தனர். முதன்முதல் சிறுவர்களைப் பள்ளிக் கூடத்தில் வைப்பதனைச் 'சுவடி தூக்குதல்' என்பர். எழுதும் பனைஓலையை அழகாக வாரி, தொளையிட்டு வரிந்து கட்டுவது அக் காலத்தில் ஒரு கலையாகக் கருதப்பட்டது.

ஆங்கிலேய அரசு நாட்டில் கல்வி வளர்ச்சிக்காக ஒரு திட்டம் வகுத்தது (1854). அதற்கு 'ஆங்கிலக் கல்வித் திட்டம்' என்று பெயர். மாவட்டங்களிலெல்லாம் தாய்மொழிப் பயிற்சிப் பள்ளிகள் திறக்கவும், கல்வி வாய்ப்பைப் பெருக்கவும், மாகாண அரசாங்கத்தில் கல்வித்துறை ஒன்று அமைக்கவும், சென்னை யிலும், கல்கத்தாவிலும், பம்பாயிலும் பல்கலைக்கழகங்கள் தொடங்கவும், சாதி, மத வேறுபாடின்றி எல்லாப் பள்ளிகளுக் கும் அரசாங்கத்தின் பொருள் உதவி வழங்கவும் அத் திட்டத்தில் வழிகள் வகுக்கப்பட்டன. பள்ளிகளில் கீழ்வகுப்புகளில் தமிழும், மேல்வகுப்புகளில் ஆங்கிலமும் பயிற்சி மொழியாக்கப்பட்டன.

சென்னை அரசாங்கத்தில் கல்வித் துறை தொடங்கப் பட்டது; அதற்கு இயக்குநர் (Director of Public Instruction) ஒருவர் நியமிக்கப்பட்டார். முதன்முதல் இயக்குநராக நியமன மானவர் சர் அர்பத்நாட் (Sir A. J. Arbuthnot) என்பவர். அவர் பிறகு சென்னைக் கவர்னராகவும், சென்னை, கல்கத்தாப் பல்கலைக்கழகங்களின் உதவித் தலைவராகவும் (Vice Chancellor) பணியாற்றினார்.

இந்திய அரசாங்கத்தின் 1857 ஆம் ஆண்டின் XXVII ஆம் சட்டத்தின்கீழ்ச் சென்னையில் பல்கலைக்கழகம் ஒன்று நிறுவப் பட்டது. செனெட் (Senate) என்ற ஆட்சிக் குழு அதன் நிருவா கத்தை நடத்தி வந்தது. தொடக்கத்தில் கலைகள், சட்டம்,

மருத்துவம், கட்டடப் பொறியியல் ஆகியவற்றில் பயிற்சியும், பி.ஏ. பட்டமும் அளிக்கப்பட்டன (1857-8). அரசாங்க உயர் நிலைப் பள்ளியானது மாநிலக் கல்லூரியாக உயர்த்தப்பட்டது. ஆங்கில இலக்கியம், விஞ்ஞானம், வரலாறு, பொருளாதாரம், உளவியல், ஒழுக்கவியல் ஆகிய துறைகளில் பேராசிரியர்கள் அமர்த்தப்பட்டனர். பொறியியற் கல்லூரி 1834ஆம் ஆண்டிலும், மருத்துவக் கல்லூரி 1835ஆம் ஆண்டிலும், ஓவியக் கலைப் பள்ளி 1850ஆம் ஆண்டிலும், சென்னைக் கிறித்தவக் கல்லூரி 1837ஆம் ஆண்டிலும், பச்சையப்பன் கல்லூரி 1841ஆம் ஆண்டிலும் தொடங்கப்பெற்றன.

தமிழகத்தில் தொடக்கக் கல்விப் பள்ளிகள் அமைப்பதில் மிகுந்த ஊக்கம் காட்டியவர்கள் கிறித்தவப் பாதிரிகள் ஆவர். அவர்களுக்குச் சென்னை அரசாங்கமும் பொருளுதவி வழங்கிற்று. பெண்களுக்கெனத் தனிக் கல்விக்கூடங்களை நிறுவியவர்களும் கிறித்தவப் பாதிரிகளேயாவர். சென்னை அரசாங்கம் முதன் முதல் 1866 ஆம் ஆண்டில் பெண்கள் பள்ளிகளைத் திறக்கத் தொடங்கிற்று.

ஆங்கிலக் கல்விப் பயிற்சியினால் இந்திய மக்களுக்கு இரு வகையில் நன்மை ஏற்பட்டது. முதலாவதாக, இந்திய எல்லைக்குள் அடைபட்டுக் கிடந்த அவர்கள் ஆங்கில மொழிப் பயிற்சியின் மூலம் வெளி உலகையும் எட்டிப் பார்க்கலானார்கள். ஐரோப்பாவில் பதினெட்டாம் நூற்றாண்டில் நடைபெற்ற பிரெஞ்சுப் புரட்சியும், அமெரிக்கரின் சுதந்தரப் போராட்டமும் சிந்தனையைக் கிளறிவிட்டன. பிரெஞ்சுப் புரட்சியாளர்கள் எழுப்பிய 'சுதந்தரம், சமத்துவம், சகோதரத்துவம்' என்ற குரல் இந்தியரின் இதயத்திலும் சுதந்தர வேட்கையைத் தூண்டிவிட்டது. மூடப் பழக்கவழக்கங்களுக்கும், சாதி நீதிகளுக்கும் கட்டுப்பட்டுக் கிடந்த இந்தியர் விழிப்புற்று எழுந்தனர். அயல் நாட்டவராகிய ஆங்கிலேயர் தம்மைத் தளையிட்டு ஒடுக்கி வந்ததையும், தம் நாட்டைச் சூறையாடி வந்ததையும் இந்திய அறிஞர் பலர் உணரலானார்கள். இந்திய நாடு முழுவதும் ஒரே நாடு என்ற பேருண்மை அவர்களுடைய நெஞ்சில் உதயமாயிற்று.

இரண்டாவதாக எதையும் அப்படியே நம்பிவிடாமல் ஆய்ந்து சீர்தூக்கிப் பார்க்கவேண்டும் என்னும் ஓர் உணர்ச்சியும் படித்த இந்தியரிடம் ஓங்கி வளரலாயிற்று.

சமயம்

கிறித்தவப் பாதிரிகள் ஆங்கிலேய அரசாங்கத்தின் ஆதரவில் தம் சமய மாற்றுப் பணியில் விறுவிறுப்படைந்தனர். அவர்கள் இந்து சமயத்தையும் இந்துக் கடவுளரையும் இழித்துப் பேசி வந்தனர். சைவ வைணவ வாத எதிர்வாதங்களும், வேதாந்த சித்தாந்தப் பூசல்களும் பெருகின. இவ் வேறுபாடுகள் ஆங்கிலம் பயின்றவர்கட்கு வெறும் பிள்ளை விளையாட்டாகக் காணப் பட்டன.

சென்னையில் முதல் அச்சுக்கூடம் 1711-ல் கிறித்தவப் பாதிரிகளால் அமைக்கப்பட்டது. அவ் வச்சுக்கூடத்தினின்றும் விவிலிய வேத நூல் புதிய ஏற்பாட்டின் தமிழ்ப் பதிப்பு ஒன்று வெளியாயிற்று. 'மதராஸ் கெஜட்' என்னும் ஒரு பத்திரிகையும், 'கூரியர்' (Courier) என்னும் ஒரு பத்திரிகையும் அரசாங்கச் செய்திகளை ஏற்றுக்கொண்டு வெளிவந்தன. சென்னையில் 1820 ஆம் ஆண்டுக்குப் பிறகு 'தி கவர்ன்மென்ட் கெஜட்', 'தி மதராஸ் கெஜட்', 'தி மெட்ராஸ் கூரியர்' என்று மூன்று ஆங்கிலப் பத்திரிகைகள் வெளியிடப்பட்டன. 'இந்து' பத்திரிகையின் முதல் பதிப்பு 1878 செப்டம்பர் 20 ஆம் நாள் வெளிவந்தது. 'மதராஸ் மெயில்' என்னும் ஆங்கிலப் பத்திரிகையின் முதல் பதிப்பு 1878 டிசம்பர் 14 ஆம் நாள் வெளிவந்தது. 'சுதேசமித்திரன்' என்னும் தமிழ் நாளேடு 1880-ல் தொடங்கப்பட்டது. இவை யன்றி வேறு சில ஏடுகளும் செய்தித்தாள்களும் வெளி வந்தன. அச்சுப் பொறி அறிவின் எல்லையை விரிவடையச் செய்தது.

வட இந்தியாவில் ராஜா ராம்மோகன்ராய், தேவேந்திர நாத் தாகூர், கேசவசந்திரசென், தயானந்த சரசுவதி, இராமகிருஷ்ண பரமஹம்சர் ஆகியோர் இந்து சமயக் கோட்பாடுகளில் பல அடிப் படையான புரட்சிகரமான திருத்தங்கள் செய்தனர். இராம கிருஷ்ணரின் தலைமை மாணாக்கரான சுவாமி விவேகானந்தர் தம் குருவின் கொள்கைகளையும் வேதாந்தக் கருத்துகளையும் உலகறிய ஓதிவந்தார். ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டம் பெற்ற இவர் துறவு பூண்டு வேதாந்த சமயத்துக்கும், மக்களின் அரசியல் விழிப்புக்கும் ஆற்றிய பணியின் மதிப்பை அளவிட முடியாது. நாளடைவில் இராமகிருஷ்ணர் பேரால் ஒரு மடம் தொடங்கப் பட்டது. அது இந்தியா முழுவதிலும், உலகில் பல இடங்களிலும் கிளை மடங்கள் தொடங்கிச் சமயப் பணியும், கல்வி வளர்ச்சி, மருத்துவ உதவி போன்ற மக்கள் தொண்டுகளையும் செய்து வருகின்றது.

வடக்கே இராமகிருஷ்ணர் வாழ்ந்திருந்த அதே காலத்தில் தமிழகத்தில் இராமலிங்க அடிகள் தோன்றிச் சமயத் துறையிலும் சமூகத் துறையிலும் பல புரட்சிகரமான மாறுதல்களைச் செய்தார். தமிழ் இலக்கியத்துக்குப் புதிய திருப்பங்கள் கொடுத்துப் பல புதிய படைப்புகளையும் உதவினார். வரலாற்று ஆசிரியர்கள் எக்காரணத்தாலோ இதுவரையில் இராமலிங்க அடிகளாரின் சீரிய தொண்டுகளைத் தீர ஆராயாமல் புறக்கணித்து வந்துள்ளனர். அடிகள் சமய வழக்கில் ஏற்பட்டிருந்த பல தீய சடங்குகளையும், மரபுகளையும் அறவே ஒழிக்க முயன்றார். புராணங்களையும் சாத்திரங்களையும் வெறுங் கற்பனைகள் என்றும், அவை அறிவு வளர்ச்சிக்கு இடப்பட்ட தளைகள் என்றும் கூறிக் 'கலையுரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும் கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப்போக' என்று அவற்றின்மேல் தம் வெறுப்பைக் கொட்டினார். சமயங்கள் அனைத்தும் ஒரே உண்மையையே வற்புறுத்துகின்றன வென்றும், அவை மெய்யுணர்வுப் பாதையில் ஏற்றுவிக்கும் பல படிகளாகும் என்றும் அவர் விளக்கினார். இக் கொள்கையின் அடிப்படையில் அவர், 'சமரச சுத்த சன்மார்க்க சங்கம்' என்னும் இயக்கம் ஒன்றைத் தோற்றுவித்தார் (1865). சமரச சன்மார்க்கம் என்னும் ஒருமைப் பாட்டுக் கொள்கை திருமந்திரத்திலேயே காணப்படுகின்றது. அதைத் தாயுமானவரும் விளக்கியிருக்கின்றார். அதை ஓர் இயக்கமாகவே அமைத்தவர் இராமலிங்க அடிகளார் ஆவார். கோயில் வழிபாட்டில் அவர் செய்துள்ள பெரும் புரட்சி ஒன்றினைப்போல் உலகில் இதுவரையில் யாருமே செய்ததில்லை. தென்னார்க்காட்டு மாவட்டத்தில் வடலூர் என்னும் இடத்தில் அவர் ஞானசபை ஒன்றை அமைத்தார் (1872). அதில் விளக்கு ஒன்றை ஏற்றி வைத்து அதன் முன்பு ஒளி விதிகளின்படி இழைக்கப்பட்ட கண்ணாடி ஒன்றை நிறுத்தினார். இக் கண்ணாடியின் அகலம் 120 செ.மீ., உயரம் 180 செ.மீ. கண்ணாடியை ஏழுவகைத் திரைகளால் மறைத்தார். கண்ணாடிக்கு அடுத்து உள்ளது கலப்பு நிறத்திரை; அதையடுத்து ஒன்றுக்குமுன் ஒன்றாக வெண்மை, பொன்மை, சிவப்பு, பச்சை, நீலம், கறுப்பு ஆகிய வண்ணங்கள் கொண்ட திரைகளைத் தொங்கவிட்டார். கறுப்புத் திரையில் தொடங்கி ஏழு திரைகளையும் ஒவ்வொன்றாக விலக்கினால் விளக்கின் 'சோதி' பளபளவென்று கண்ணுக்குத் தெரியும். உயிர்கள் எழுவகையான மறைப்புக்கு உட்பட்டுள்ளனவென்றும், திரை மறைப்பெல்லாம் தீர்ந்துவிடுமாயின் அருட்பெருஞ்சோதியான இறைவன் காட்சியளிப்பான் என்னும் தத்துவத்தையும் ஞான சபையின் அமைப்பானது விளக்கிக்காட்டிற்று. ஆண்டு தோறும் தை மாதம் பூசநாள் அன்று இந்த ஏழு திரைகளை

யும் விலக்கி, சோதி தரிசனம் காட்டப்பட்டு வருகின்றது. அடிகளார் நோய்களுள் மிகக் கொடிய நோய் பசிநோய் என்று உணர்ந்து, சாதி, குலம், சமயம் ஆகிய வேறுபாடுகளைக் கருதாமல் ஏழைகளின் பசிக்கு உணவு அளிப்பதற்காக வடலூரில் கூழ்ச்சாலை ஒன்று நிறுவினார் (1867). 'அன்று அவர் ஏற்றிய அடுப்பு இன்றும் எரிந்துகொண்டே இருக்கிறது. பல நூற்றாண்டுகளாகத் தமிழகத்தில் பிராமணருக்கு மட்டுமே அன்னதான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன என்பதும், பெருந் தொகையில் ஏழை எளியவர் அனைவரும் உண்டு பசியாறும் ஏற்பாட்டைச் செய்தவர் முதன்முதல் அடிகளார் தாம் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கன. உலகில் உயிர்களுக்கு உறும் எல்லா ஊறுகளையும் தவிர்ப்பதே ஒருவர் மேற்கொள்ள வேண்டிய கடமையாக இருக்கவேண்டுமென்றும், அந்த நோன்பைத் தவறாமல் மேற்கொண்டு ஒழுகுவார் இறப்பையும் வெல்லலாம் என்றும் அவர் எடுத்துக் கூறிவந்தார். 'கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல் செல்லாது உயிர்உண்ணுங் கூற்று' என்னுங் திருக்குறள் காட்டிய உண்மையை அவர் ஓயாமல் வற்புறுத்தி வந்தார். அவரே வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியவர். எனவே, உயிர்களிடத்துக் காட்டும் அன்பில் மிக உயர்நிலையை எட்டியிருந்தார். இராமலிங்க அடிகளார் தென்னார்க்காட்டு மாவட்டத்தில் சிதம்பரத்துக்கு அண்மையில் உள்ள மருதூரில் (1823 அக்டோபர் 5ஆம் நாள்) கருணீகர் குலத்தில் பிறந்தார். அவருடைய இளமை சென்னையில் கழிந்தது. அவர் 'மனுமுறை கண்ட வாசகம்' என்னும் அழகிய உரைநடை நூல் ஒன்றை 1854-ல் எழுதி வெளியிட்டார். அப்போது அவரைப் பல அறிஞர் சூழ்ந்தனர். அவர்களுள் தலையாயவர் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் இருந்த தொழுவூர் வேலாயுத முதலியார் ஆவார். இவர் அடிகளாரிடம் நெருங்கிய அன்பு பூண்டு அவர் எழுதி வந்த பாடல்களைத் தொகுத்துத் 'திருவருட்பா' என்னும் பெயரில் நூல் ஒன்றை வெளியிட்டார். அந் நூல் ஆறு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளது. முதல் நான்கு திருமுறைகள் 1867-ல் வெளிவந்தன. இராமலிங்க அடிகளார் பதினாறு ஆண்டுகள் (1858-1874) கருங்குழி என்னும் சிற்றூரில் தங்கியிருந்தார். அப்போதுதான் 'அருட்பெருஞ் சோதி அகவல்' என்னும் அவருடைய பாடல் இயற்றப்பட்டது. அது 1596 அடிகளால் ஆனது; ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியப் படைப்புகளில் ஈடிணையற்று மிக உயர்ந்த நிலையில் நின்று ஒளிர்பவர்

வடலூர் இராமலிங்க அடிகளார். அவருடைய பாடல்கள் நெஞ்சையுருக்குவன; இனிய முழுமுழுச் சொற்களால் யாக்கப் பட்டன. இப் பாடல்கள் ஒவ்வொன்றிலும் அன்பும், நெகிழ்ச்சியும், இன்பக் கசிவும், மெய்ம்மை ஒளியும் ததும்பி வழிவதைக் காணலாம். சொற்கோப்பு, சொல்லடுக்கு, பல்வகை மெய்ப் பாடுகள், இசை வண்ணம் ஆகியவை இப் பாடல்களின் சிறப்புகள்; பல கீர்த்தனைகளையும் பாடியுள்ளார். அகத்துறையமைந்த இங்கிதமாலை என்னும் நூல் புலவர்களின் இலக்கண இலக்கிய அறிவுக்கு ஒரு கட்டளைக் கல்லாக அமைந்துள்ளது. 'அருட்பெருஞ்சோதி அகவல்' என்னும் பாடல் அவருடைய மெய் யுணர்வு அனுபவங்களை விளக்குகின்றது. இராமலிங்க அடிகளார் காலத்திலேயே வாழ்ந்திருந்து, அவர்மேல் ஆயிரக்கணக்கான கீர்த்தனைகளைப் பாடியவர் காரணப்பட்டுக் கந்தசாமிப் பிள்ளை என்பவர். அவர் நல்ல இசைப் புலமை வாய்ந்தவர்.

வடலூருக்கு அண்மையில் மேட்டுக்குப்பம் அல்லது சித்தி வளாகம் என்னும் சிற்றூரில் 1874ஆம் ஆண்டு தை மாதம் பூச நாள் அன்று (1874 ஜனவரி 30) ஒரு குடிசைக்குள் நுழைந்து தாளிட்டுக் கொண்டார். மீண்டும் அவர் வெளியில் வந்ததை யாரும் காணவில்லை என்று அவர் காலத்தில் தென்னார்க்காட்டு மாவட்டக் கலெக்டராக இருந்த கார்ஸ்ட்டின் (J.H.Garstin, I.C.S.) என்ற ஆங்கிலேயர் கூறுகின்றார். 'கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின் ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு' என்று திருவள்ளுவரும், 'எழுகின்ற தீயில் கற்பூரத்தை யொக்கப் பொழி கின்ற இவ்வுடல் போம் அப்பரத்தே' என்று திருமூலரும், 'சித்தம் நிருவிகற்பம்; சேர்ந்தார் உடல் தீபம் வைத்த கற்பூரம்போல் வயங்கும் பராபரமே' என்று தாயுமானவரும் வகுத்த இலக் கணத்துக்கு ஏற்ப இராமலிங்க அடிகளார்தம் உடல் ஒளி உடலாக மாற இறையொளியில் கலந்துவிட்டார் என்பர்.

சாதி, சமய, குல, கோத்திர வேறுபாடுகளையும், சமயப் பூசல்களையும், கண்மூடிப் பழக்கங்களையும் களைந்தெறிய முற்பட்டதற்காகச் சில சமயவாதிகள் அவரை வெறுத்துத் தூற்றி வந்ததுண்டு. தமிழகத்தில் முதன்முதல் 'கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக' என்னும் குரலை எழுப்பியவர் அடிகளார் தாம்.

### தமிழ் இலக்கியம்

ஆங்கிலேயரின் திறமையான ஆட்சியின்கீழ் நாட்டில் அமைதி நிலவிற்று; கலகங்கள் ஓய்ந்தன. இடையூறுகள் இன்றிக் குடி

மக்கள் தத்தம் தொழிலில் ஈடுபட்டு வந்தார்கள். தமிழ்ப் புலவர்கள் பலர் தோன்றித் தமிழை வளர்த்தார்கள். எழுதுவதற்குக் காகிதமும், நூல்கள் வெளியிட அச்சுப் பொறியும் கிடைத்த பிறகு தமிழ் நூலாசிரியரின் பணியிலும் முன்னேற்றம் காணப்பட்டது. ஆங்கில மொழிப்பயிற்சி ஏற்பட்ட பின்பு தமிழ் இலக்கியப் படைப்புகளில் பல புதுமைகள் நுழைந்தன. உரைநடை புதிய வடிவில் உருவாயிற்று. ஏற்கெனவே சிலப்பதிகாரத்திலும் உரைகளிலும் உரைநடை கையாளப்பட்டு வந்ததாயினும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுந்த உரை, காலத்தைத் தழுவி எழுந்ததாகும். இராமலிங்க அடிகளார், ஆறுமுக நாவலர், தியாகராசச் செட்டியார் முதலியோர் உரைநடையைத் தொடக்கி வைத்தனர். பழங்கால உரையானது நீண்ட சொற்றொடர்களால் ஆக்கப்பட்டிருந்தது. ஐரோப்பியர் வருகைக்குப் பின்பு உரைகள் சிறுசிறு சொற்றொடர்களினால் அமையலாயின. ஒரு தொடருக்கும் அடுத்ததற்கும் இடையே இடைவெளி விடுவதும், முற்றுப்புள்ளி, காற்புள்ளி, அரைப்புள்ளி, முக்காற்புள்ளி, மேற்கோற் புள்ளிகள் ஆகியவற்றை அமைப்பதும் பழக்கத்துக்கு வந்தன. உரை பல பத்திகளாகவும் எழுதப்பட்டது. வேதநாயகம் பிள்ளை எழுதிய 'பிரதாப முதலியார் சரித்திரமும்,' இராசம் ஐயரின் 'கமலம்பாள் சரித்திரமும்' பிற்காலத்தில் எழவிருந்த நூற்றுக்கணக்கான தமிழ் நாவல்களுக்கு வழிவகுத்துக் கொடுத்தன. இவையன்றி வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி எழுதிய 'மதிவாணன்', மாதவய்யா எழுதிய'பத்மாவதி', சரவணம் பிள்ளை எழுதிய 'மோகனாங்கி' ஆகியவையும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் படைப்புகளாம். இலக்கியம் பயிலாத பொதுமக்களுக்கெனப் பல உரைநடை நூல்கள் எழுந்தன. மகாபாரதம், இராமாயணம், பாகவதம், விக்கிரமாதித்தன் கதை, பன்னிரண்டு மந்திரி கதை, அரபிக் கதைகள் ஆகியவை மக்கள் பேசும் எளிய நடையில் எழுதப்பட்டன.

செய்யுள் நடையில் தலபுராணங்கள் பல வெளியாயின. திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் மாபெரும் புலவராகப் பெரும் புலவர்கள் போற்ற வாழ்ந்தவர். அவர் பல தலபுராணங்கள் இயற்றினார். வல்லூர் தேவராசப்பிள்ளை 'குசேலோபாக்கியானம்' என்னும் நூலை நெஞ்சு நெகிழ்விக்கும் தெள்ளுதமிழில் பாடினார். கிருஷ்ணபிள்ளை என்ற கிறித்தவப் புலவர் கிறித்தவ சமயக் காவியம் ஒன்றைப் பாடினார். இக் காவியம் ஜான் பன்யன் (John Bunyan) என்ற ஆங்கில ஆசிரியர் எழுதிய 'வாழ்க்கைப் பயணியின் போக்கு' (Pilgrim's Progress)

என்னும் நூலைத் தழுவி எழுந்தது. இதன் பெயர் 'இரட்சணிய யாத்திரிகம்' என்பது. கிருஷ்ணபிள்ளை கம்பனின் இலக்கிய முறைகளைக் கையாண்டு வெற்றி பெற்றிருக்கின்றார். தேவாரப் பாடல்களின் சாயையும், ஆழ்வார்கள் பாடல்களின் அமைப்பும் இவர் பாடல்களில் காணலாம். மாயூரம் வேதநாயகம் பிள்ளையவர்கள் பல சமரசக் கீர்த்தனைகளையும், நீதிநெறிப் பாடல்களையும் பல்வேறு இசையமைப்புகளில் பாடியுள்ளார். இன்றும் அவர் பாடல்கள் இசையரங்கங்களிலும் வானொலியிலும் பாடப் பட்டு வருகின்றன.

## மொழி ஆராய்ச்சி

கால்டுவெல் (Robert Caldwell) என்ற கிறித்தவப் பாதிரியார் அயர்லாந்து நாட்டிலிருந்து இந்தியாவுக்குச் சமயப் பணி செய்ய வந்தவர். திராவிட மொழிகள் அவருடைய கருத்தைக் கவர்ந்தன. அம் மொழிகளை நன்கு ஆராய்ந்து அவற்றுக்கு ஒப்பிலக்கணம் ஒன்று எழுதினார். அவர் காட்டிய வழியைப் பின்பற்றியே பின் வந்த மொழி ஆராய்ச்சியாளர் அனைவரும் சென்றுள்ளனர். வின்ஸ்லோ என்பவர் தமிழில் மிகப் பெரியதொரு தமிழ்-ஆங்கில அகராதி இயற்றியுள்ளார். யாழ்ப்பாணத்துக் கதிரைவேற்பிள்ளையும் தமிழ்-தமிழ் அகராதி ஒன்று இயற்றி வெளியிட்டார்.

தமிழ்மொழிக்குப் போப்பையர் செய்த மாபெரும் பணியைத் தமிழர் என்றுமே மறவார்கள். அவர் திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கின்றார். தமிழின் வளமையையும், பெருமையையும் ஆங்கில உலகத்துக்கு எடுத்துக்காட்டிய சிறப்பு அவரையே சாரும். அவர் கிறித்தவர் ஆதலினாலும், சைவசித்தாந்த நுண்கருத்துகளை நன்கு ஆய்ந்து அறியாதவர் ஆதலினாலும் அவருடைய திருவாசக மொழிபெயர்ப்பில் சிற்சில இடங்களில் கருத்துப் பிறழ்ச்சிகள் காணப்படுகின்றன. தம் கல்லறையின்மேல் தாம் ஒரு 'தமிழ் மாணவன்' என்னும் செய்தியைப் பொறிக்குமாறு விழைந்தாராம்; அவருக்குத் தமிழில் அவ்வளவு ஆழ்ந்த பற்று இருந்தது. போப்பையர் தமிழில் மாணவர்க்கு இலக்கணமும் ஐ. சி. எஸ். பயிற்சி பெற்றுவந்த ஆங்கிலேய மாணவர்கட்குத் தமிழ்ப்பாடப் புத்தகங்களும் இயற்றியுள்ளார்.

இலங்கையில் யாழ்ப்பாணத்துப் பிறந்த சில புலவர்கள் அரிய நூல்கள் இயற்றியுள்ளனர். விசுவநாத சாஸ்திரியார் வண்ணக் குறவஞ்சி, நகுலமலைக் குறவஞ்சி ஆகியவற்றைத் திறம்படப் பாடியுள்ளார்; இருபொருள்படப் (சிலேடையாகப்) பாடுவதில்

இவர் ஆற்றல் வாய்ந்தவர். சி. வை. தாமோதரம் பிள்ளை என்பவர் தொல்காப்பியம், வீரசோழியம், இறையனார் அகப் பொருள், இலக்கண விளக்கவுரை ஆகிய இலக்கண நூல்களை யும், கலித்தொகை, தணிகைப் புராணம், சூளாமணி ஆகிய இலக்கிய நூல்களையும் பதிப்பித்தார். கணபதி ஐயர் என்பவர் அதிரூபாவதி நாடகம், அபிமன்னு நாடகம், அலங்காரரூபாவதி நாடகம், மலையகந்தி நாடகம் முதலிய நாடகங்களை இயற்றியுள்ளார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் சிறந்த நாடகங்கள் ஏதும் வெளிவரவில்லை. பாமர மக்களுக்கெனப் பாரதம், இராமாயணம், பாகவதம் ஆகியவற்றிலிருந்து எடுக்கப் பட்ட கதைகளும், அரிச்சந்திரன் கதையும் கிராமப்புறங்களில் தெருக்கூத்துகளாக நடித்துக் காட்டப்பட்டன. இக் கூத்துகள், கிராமத்தில் பொது இடங்களிலும், அம்மன் கோயில்களின் முன்பும் இரவு முழுவதும், பொழுது விடியவிடிய நடைபெறுவ துண்டு. நாட்டுப்புறங்களில் தெலுங்குக் கூத்துகளும் நடை பெற்றுவந்தன.

**திவ்விய ஞான சபை**

மக்கள் இதயங்களில் தேங்கித் தட்டுப்பட்டுச் சுருங்கிக் கிடந்த ஆன்மிக உணர்ச்சியும், தத்துவ ஆராய்ச்சியில் ஏற்பட்ட வேட்கையும், பழங் கருத்துகளில் புதிய உண்மைகளை நாடும் புத் துணர்ச்சியும் திவ்விய ஞான சபையினால் (Thesophical Society) வெளிப்படுத்தப்பட்டன. இச் சபையை அமைத்தவர்கள் பிளாவட்ஸ்கி அம்மையாரும், ஆல்காட் என்பவரும் ஆவர். இது முதன்முதல் அமெரிக்காவில் தோற்றுவிக்கப்பட்டது. பிறகு இது அடையாற்றின் தென்கரைக்கு மாற்றப்பட்டது. டாக்டர் அன்னிப் பெசன்ட் அம்மையார் இச் சபையின் நிருவாகத்தில் பங்கு கொண்டு ஐம்பதாண்டுகள் இதன் தலைவராகப் பணியாற்றி னார். சென்னையில் பல பேரறிஞர்கள் திவ்விய ஞான சபை யில் உறுப்பினரானார்கள். வேதம், உபநிடதங்கள், பகவத் கீதை போன்ற வடமொழிச் சமய நூல்களைப் பயில்வதும், வழக் கற்று மறைந்துவந்த அவற்றை மீண்டும் விளக்கி மக்கள் அனை வரும் அறியுமாறு செய்வதும் இச் சபையின் நோக்கமாகும். இச் சபை சமரச நோக்கம் கொண்டது. பெரும்பாலும் பிராமணரே இச் சபையில் சேர்ந்தனர். பிராமணர்கள் மட்டும் ஓதிவந்த வேதங் களையும் மந்திரங்களையும் ஏனைய சில இந்துக்களும் கிறித்தவர் களும், முஸ்லிம்களும், பார்சிகளும் ஒருங்கே இணைந்து அமர்ந்து ஓதும் வகையில் பழம் மரபுகளை மாற்றிய பெருமை அன்னிப்

பெசன்ட் அம்மையாருடையதாகும். ஆனால், இன்றுவரை தமிழ்ச் சமயநூல்கள் இச் சபையோரின் கவனத்திற்கு வரவில்லை.

## பஞ்சம்

தமிழகத்தில் 1876-78ஆம் ஆண்டுகளில் மாபெரும் பஞ்சம் ஒன்று தோன்றி இலட்சக்கணக்கான மக்களின் உயிரைக் குடித்தது. இதனைத்தாது-ஈசுவர ஆண்டுக் கருப்பு என்று குறிப்பிடுவார்கள். இக் கருப்பினால் அதிகமான உயிர்ச்சேதம் வட ஆர்க்காட்டு மாவட்டத்தில்தான் ஏற்பட்டது. அவ் வட்டத்து மக்கள் இன்றும் அதைப் பேசிக்கொள்ளுவதுண்டு. உண்ண உணவின்மையாலும், உப்புக் கிடைக்காமையினாலும் குடிகள் வெறுங் காட்டுக் கீரைவகைகளை வேகவைத்துத் தின்றார்கள் என்றும், சிலர் களிமண் உண்டைகளையும் தின்று உயிர் துறந்தார்கள் என்றும் அம் மாவட்டத்தில் செய்திகள் இன்றும் நடமாடுகின்றன. அரசினர் பஞ்ச நிவாரண வேலைகளை மும்முரமாக எடுத்துச் செய்தார்கள். பல செல்வந்தர்கள் ஏழை மக்களுக்கு நாடோறும் ஆயிரக்கணக்கில் உணவளித்து வந்தார்கள். சென்னையிலும், வடஆர்க்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களிலும் கஞ்சித் தொட்டிகள் நடத்தப்பட்டன. பஞ்ச நிவாரணப் பணிகளுள் ஒன்றாகப் பக்கிங்காம் கால்வாயின் ஒரு பகுதி வெட்டப்பட்டது. குடிமக்கள் ஆயிரக் கணக்கில் குடிபெயர்ந்து அலையலானார்கள்.

## சித்திரவதை

கிராமங்களில் வரி கொடுக்க முடியாதவர்களை வரி தண்டும் அதிகாரிகளுள் சிலர் சித்திரவதை செய்தனர். சிலரைத் தொழுக் கட்டையில் மாட்டி வாட்டுவார்கள். சிலருக்கு அண்ணாந்தாள் போடுவார்கள். ஒரு பலகையில் தலையும் கைகளும் மட்டும் நுழையுமாறு தொளைகள் செய்து அதில் வரிகொடாதவரை மாட்டி வைத்துவிடுவதற்குத் தொழுக்கட்டை மாட்டுதல் என்று பொருள். அண்ணாந்தாள் என்ற தண்டனை விதிக்கப்பட்டவர்கள் குனிந்து நிற்பார்கள். அவர்களுடைய கைகள் கால்களுடன் சேர்த்துக் கட்டப்படும்; முதுகின்மேல் பாறாங்கல் ஒன்று ஏற்றப்படும். இக் கோலத்தில் அவர்கள் வேகும் வெயிலில் நிறுத்தப்படுவர். மேலும், வரி கொடாதவர்களுக்குக் கசையடிகள் கொடுப்பதுமுண்டு. சென்னை அரசாங்கத்துக்கு இச் சித்திரவதைகளைப்பற்றி ஏராளமான முறையீடுகள் வந்தன. அரசாங்கம் சித்திரவதை விசாரணைக் குழு (1854) ஒன்று அமைத்தது. அதன் பரிந்துரைகளின் பயனாய்க் கிராம அதிகாரிகளிடமிருந்து வரிகொடாக் குற்றத்துக்குத் தண்டனையளிக்கும் அதிகாரம் பறிக்கப்பட்டது.

### துறைமுகம்

சென்னையில் இப்போதுள்ள துறைமுகமானது 1876-81ஆம் ஆண்டுகளில் கட்டப்பட்டது. அதன் ஆழம் 37 அடி, பரப்பு 200 ஏக்கர். பகலிலும், இரவிலும் எப்போதும் கப்பல்கள் உள்ளே நுழையுமாறு இச் செயற்கைத் துறைமுகம் அமைக்கப்பட்டது.

### மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

முதன்முதல் சென்னையில்தான் மக்கள்தொகை கணக்கிடப் பட்டது (1871). பிறகு இது ஏனைய இடங்களுக்கும் விரிவுறுத்தப் பட்டது.

### அயல்நாடு சென்ற இந்தியர்கள்

பஞ்சத்தினாலும் ஏழ்மையினாலும் வாடிய தமிழர் ஆயிரக் கணக்கில் தென்னாப்பிரிக்க நாடுகளுக்கும், இலங்கைக்கும், பிஜி முதலான கிழக்கிந்தியத் தீவுகளுக்கும் தொழில் செய்து பிழைக்கச் சென்றார்கள். அந்நாடுகளில் தேயிலை, காப்பி, இரப்பர்த் தோட்டங்களிலும் சுரங்கங்களிலும் இவர்கள் கூலிகளாகச் சேர்ந்தனர். அத் தோட்டங்கள், சுரங்கங்கள் ஆகியவற்றின் முதலாளி களுக்கு ஆள் பிடித்துக் கொடுத்தவர்களுக்குத் தரகு கொடுக்கப் பட்டது. கூலிகளாகச் சேர்ந்த தமிழருக்குப் பொன்னும், பொரு ளும், பூமியும் கிடைக்குமென்றும், அவர்கள் குறுகிய காலத்தில் பெரிய செல்வந்தர்களாகி விடலாம் என்றும் தரகர்கள் இச்சை காட்டி அவர்களை ஏமாற்றினார்கள். இந்தியக் கூலிகள் சென்ற விடத்திலெல்லாம் விலங்குகளினும் இழிவாகவும், அடிமைகளை விடக் கொடுமையாகவும் நடத்தப்பட்டனர். தென்னாப்பிரிக்க அரசாங்கம் அவர்களைக் ‘காட்டுமிராண்டிகளான இந்த ஆசிய நாட்டு மக்கள், இந்தியாவின் அநாகரிகக் குடிகள்’ என்று ஆவணங்களில் பதிவுசெய்தது. தம் நாட்டிலேயே ஆங்கிலே யருக்கு அடிமைகளாக இருந்த இந்தியர்கள், அயல்நாட்டில் அவதிக்குள்ளான அவர்களுடைய சகோதரர்களுக்கு ஓர் உதவி யும் செய்ய முடியாமல் தவித்தனர்.

### இந்திய தேசியக் காங்கிரஸ்

ஆங்கிலக் கல்வியினால் விழிப்புண்ட இந்தியர் தம் நாட்டை ஆங்கிலேயரின் தளையினின்றும் விடுவிப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ளலாயினர். பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டிருந்த அமெரிக்காவானது போராடிச் சுதந்தரம் பெற்றது. பிரிட்டிஷார் கனடா, ஆஸ்திரேலியா முதலிய குடியேற்ற நாடுகளுக்கும் விடுதலை வழங்கினர். இந் நிகழ்ச்சிகள் யாவும் இந்தியரின்

சுதந்தரவேட்கையைத் தூண்டிவிட்டன. கல்கத்தாவில் இந்திய தேசியக் காங்கிரஸ் நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது (1885). தொடக்கத்தில் அதில் எழுபது உறுப்பினரே சேர்ந்திருந்தனர். அதன் கூட்டம் ஒன்று சென்னையில் நடைபெற்றது. அதில் ராஜா சர் டி. மாதவராவ், விசயராகவாச்சாரியார், ஜி. சுப்பிர மணிய ஐயர், பி. ரங்கைய நாயுடு, பீ. அநந்தாசார்லு, விசய நகரத்து மகாராசா, சர் ஆநந்த கஜபதி ஆகிய தலைவர்கள் கலந்துகொண்டனர். பச்சையப்பன் கல்லூரி முதல்வர் ஜான் ஆதம் (John Adam), புகழ்பெற்ற வழக்கறிஞராக இருந்தவரான ஜான் புரூஸ் நார்ட்டன் (John Bruce Norton) என்பாரின் மகன் எர்ட்லி நார்ட்டன் (Eardley Norton) என்ற இரு ஐரோப்பியரும் அக் காங்கிரஸ் நடவடிக்கைகளில் பங்குகொண்டனர். சென்னைக் கவர்னராக இருந்தவரான கானிமாரா பிரபு (Lord Connemara, 1886-90) காங்கிரஸ் தலைவர்களுக்குத் தோட்ட விருந்து ஒன்று வைத்து உபசரித்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரையில் இந்திய அரசியலில் இந்தியருக்கு மேன்மேலும் உரிமைகள் வழங்க வேண்டுமென்றும், 'சிவில் சர்வீஸ்' பணியில் மேலும் பல இந்தியர்கள் அமர்த்தப்படவேண்டும் என்றும் ஆங்கிலேய அரசுக்கு விண்ணப்பித்துக்கொள்ளுவதே காங்கிரஸ் நிறுவனத் தின் முழுநோக்கமாக இருந்துவந்தது. இந்தியருள் சிலர் காங்கிரஸின் முயற்சிகளுக்கு அணையிட்டு வந்தனர். முஸ்லிம்கள் காங்கிரசுடன் ஒத்துழைக்காமல் 'முஸ்லிம் லீக்' என்று தமக்கென ஒரு நிறுவனத்தை அமைத்துக்கொண்டனர். ஆங்கிலேயர் வெளிப்படையாகவே முஸ்லிம்கள் சார்பில் தம் ஆதரவைக் காட்டிவந்தனர்.

# 20. இருபதாம் நூற்றாண்டில் தமிழகம்

இந்தியாவின் வைஸ்ராயாக இருந்த கர்ஸன் பிரபு (1899-1905) வங்காளத்தைப் பிரித்து மக்கள் நெஞ்சில் வஞ்சத் தீயை மூட்டினார். இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் இந்திய மந்திரி யாக இருந்த மார்லி பிரபுவும் இந்தியாவில் கர்ஸனையடுத்து வைஸ்ராயாகப் பதவியேற்ற மின்டோ பிரபுவும் (1905) இந்தியாவுக்கு மேலும் சில அரசியல் உரிமைகள் வழங்கவேண்டும் என்று ஓர் உடன்பாட்டுக்கு வந்தனர். அதற்கென அவர்கள் ஒரு திட்டம் வரைந்து பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் அதை நிறைவேற்றி வைத்தனர். அச் சீர்திருத்தத் திட்டத்துக்கு மின்டோ-மார்லி சீர்திருத்தம் (1909) என்று பெயர் வழங்கலாயிற்று. மத்திய சட்டசபைகளும், மாகாணச் சட்டசபைகளும் இத் திட்டத்தின்கீழ் விரிவுற்றன. சென்னைச் சட்டசபையில் 47 உறுப்பினர்கள் அமர்வார்கள் என்றும், அவர்களுள் 21 பேர் அரசாங்கப் பதவியினர் என்றும், எஞ்சிய 26 அரசாங்கப் பற்றற்றவர்களாக இருப்பார்கள் என்றும், அவருள் ஐவர் அரசாங்கத்தால் நியமனம் செய்யப்படுவர் என்றும் அந்தத் திட்டத்தில் விதிக்கப்பட்டன. ஆனால், இயல்பாகவே அரசாங்கத்தால் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர் அரசுக்குச் சார்பாகவே, அரசாங்கப் பதவியிலிருந்த உறுப்பினருடனே கலந்து கொள்ளுவர். அந் நிலையில் அரசாங்கப் பற்றற்றவர்கள் 21 பேர் சிறுபான்மையராவர்; அரசாங்கப் பதவியிலிருந்தவர்களும், நியமனம் செய்யப்பட்ட அரசாங்கப் பற்றற்ற ஐவரும் ஆக 26 பேர் பெரும்பான்மையாய் விடுவர். எனவே, இந்தியருக்குப் பிரிட்டிஷார் ஒரு கையால் கொடுத்த உரிமைகளை மற்றொரு கையால் பறித்துக்கொள்ளும் சூழ்நிலை ஒன்று அத் திட்டத்தில் வேண்டுமென்றே உருவாக்கப்பட்டிருந்தது. இத் திட்டமானது இந்தியக் குடிமக்களுக்குச் சுதந்தர அரசியல் பயிற்சியளிப்பதற்கென வகுக்கப்பட்டதேயொழிய அதன்கீழ்ப் புதிய உருப்படியான அரசியல் உரிமைகள் இந்தியருக்குக் கிடைக்கவில்லை.

தென்னாப்பிரிக்காவில் வெள்ளையருக்கு அடிமைப்பட்டுப் பலவகையான இன்னல்களுக்கிடையே வாழ்ந்து வந்த இந்தியருடைய நலனுக்காக உழைத்து ஓரளவு வெற்றிகண்டு உரம் பெற்றவராக மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி தாயகம் திரும்பினார் (1917); உடனே காங்கிரஸ் அரசியல் நடவடிக்கைகளில் மும்முரமாக ஈடுபட்டார். காங்கிரஸ் நிறுவனம் காந்தியடிகளின் ஆணைகளுக்குக் கட்டுப்படுவதாயிற்று. அவருடைய செல்வாக்கானது வெகு துரிதமாக வளர்ந்துவிட்டது. மான்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தத் திட்டத்தின்படி (1919) மாநில அரசுகளுக்குச் சற்று விரிவான உரிமைகள் வழங்கப்பட்டன. அச் சீர்திருத்தங்களின்கீழ் அமைக்கப்பட்ட அரசில் காங்கிரஸ் நிறுவனம் பங்குகொள்ள மறுத்துவிட்டது. திவ்விய ஞானசபைத் தலைவராக இருந்த அன்னிப் பெசன்ட் அம்மையாரும் மான்டேகு-செம்ஸ்போர்டு திட்டத்தை எதிர்த்தார்; தாமே 'ஹோம்ரூல்' (சுயாட்சி) இயக்கம் ஒன்றைத் தொடங்கினார். அரசாங்கம் அவர்மேல் நடவடிக்கைகள் எடுத்து அவரைச் சிறையில் அடைத்தது. பெசன்ட் அம்மையாரின் புகழும் பன்மடங்கு ஓங்கிற்று.

மான்டேகு-செம்ஸ்போர்டு திட்டத்தின்கீழ் வடிவமைக்கப்பட்ட அரசியலுக்கு இரட்டையாட்சி (Dyarchy) என்று பெயர். அதன்கீழ் மாகாணக் கவர்னரே அரசாங்கத்தின் தலைவராக இருந்தார். அவருக்குத் துணைபுரிய ஆலோசனைக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. இக் குழுவில் கவர்னரால் நியமிக்கப்பட்டவர்களும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும் சேர்ந்திருந்தனர். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அமைச்சர்கள் என்று அழைக்கப்பட்டனர். சென்னை மாநிலச் சட்டசபையில் 132 உறுப்பினர் இடம் பெற்றனர். அவர்களுள் 98 பேர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்; 11 பேர் உத்தியோகப் பற்றுடையவர்கள்; ஏனைய 23 பேர் கவர்னரால் நியமிக்கப்பெற்ற உறுப்பினராவர். இவர்கள் அரசாங்கத்துடன் எந்தவிதமான தொடர்பும் கொண்டிராதவர்கள் ஆவர். சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மூவரைக் கவர்னர் தம் ஆலோசனைக்குழுவில் சேர்த்துக் கொள்ளுவார். ஆலோசனைக் குழுவில் கவர்னரால் நியமிக்கப்பட்டவர்களிடம் போலீசு, நீதி நிருவாகம், பொருளாதாரம், பாசனம், வரி வசூல் போன்ற பொறுப்புமிக்க ஆட்சித் துறைகள் ஒப்படைக்கப்பட்டன. தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்களிடம் கல்வி, பொதுப்பணித் துறை, சாலைகள், தலத்தாபனங்கள், சுகாதாரம், மருத்துவம், காடுகள், தொழில்கள் முதலியன ஒப்படைக்கப்பட்டன.

ஆலோசனைக் குழுவில் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்கள் வெள்ளையராகவே இருப்பர்; அமைச்சர்கள் இந்தியராக இருப்பர். இவர்கள் சட்டசபைக்குப் பொறுப்புடையவர்கள் ஆவார்கள். ஆனால், இவர்கள் அப்படிப் பொறுப்புடைய வர்களாக இருக்கவேண்டும் என்னும் விதி ஏதும் சட்டத்தில் இடம் பெற்றிருக்கவில்லை.

முதல் உலகப் போரில் (1914-18) ஆங்கிலேயருடன் இணங்கி யிருந்து போர்த் தொண்டுகள் புரிந்து உதவிய காந்தியடிகள், 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களை அறவே புறக்கணித்தார். கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் (1920) காந்தியடிகள் ஆங்கிலேயரை எதிர்த்து 'ஒத்துழையாமை இயக்கம்' ஒன்றைத் தொடங்கிவைத்தார். அது காட்டுத் தீப் போன்று இந்தியா முழுவதிலும் பரவிற்று. தமிழகத்திலும் இவ் வியக்கத்துக்குப் பெருவெற்றி கிடைத்தது. தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர்கள் அவருக்குத் துணைபுரிந்தனர். பிரிட்டி ஷாரின் முன்பு மண்டியிட்டு விண்ணப்பங்கள் கொடுத்துக் கொண்டிருந்த காங்கிரஸ் நிறுவனமானது மகாத்மா காந்தியின் கைகளில் கனல்கக்கும் ஒரு பெரும் புரட்சி இயக்கமாக மாறிற்று. படித்தவர்கள் மட்டும் அக்கறை கொண்டிருந்த அதில் கோடிக் கணக்கான பொதுமக்களும், கல்வியறிவு இல்லாதவர்களும் ஈடுபட்டனர். காந்தியடிகளின் அறைகூவலுக்கு இணங்கும் இலட்சக்கணக்கான மக்கள் ஒத்துழையாமை இயக்கத்தில் குதித்தார்கள். வழக்கறிஞர்கள் நீதிமன்றங்களினின்றும் விலகி னார்கள். ஆயிரக்கணக்கான மாணவர்கள் தம் பள்ளிப் படிப்பைக் கைவிட்டுக் காந்தியடிகளைப் பின்பற்றிச் சென்றார் கள். ஆங்கிலேய அரசு வெகு முனைப்புடன் அடக்குமுறைகளை மேற்கொண்டது. இந்திய மக்களின் தேசிய உணர்ச்சி வேகத் தைத் தடுத்து ஒடுக்க அரசாங்கம் முற்பட்டது. வட இந்தியா வில் ஜெனரல் டையர் என்னும் ஆங்கிலேயப் படைத்தலைவன் ஒருவன் ஜாலியன் வாலா பாக் என்னும் இடத்தில் குடிமக்கள் மேல் எந்திரத் துப்பாக்கியால் 1650 முறை சுட்டான். இப் படுகொலையில் 400 பேர் உயிரிழந்தனர். 1200 பேர் படுகாய முற்றனர் (1919). சௌரிசௌரா என்னும் இடத்தில் இந்தியக் கிளர்ச்சிக்காரர்கள் காவல்படையினர் 22 பேரை உயிருடன் கொளுத்திக் கொன்றனர். அக் கொடிய செய்தியைக் கேட்டு உளம் பதறிய காந்தியடிகள் ஒத்துழையாமை இயக்கத்தை அஃதுடன் நிறுத்தி வைத்தார். ஆங்கிலேய நீதிமன்றம் அவருக்கு ஆறாண்டுகள் சிறைத் தண்டனை விதித்தது (1921). தமிழ்நாட்டில் அவருக்குத் துணையாக இருந்து தேசியப்

போராட்டத்தை நடத்தி வைத்தவர் சக்கரவர்த்தி இராச கோபாலாச்சாரியார் ஆவார். காங்கிரஸ் கட்சியில் ஒருசிலர், சட்டசபையைவிட்டு விலகியிருப்பதைவிட அதில் நுழைந்து, தமக்குப் பெரும்பான்மைப் பலம் இருந்த போதிலும், அமைச்சுப் பதவியை ஏற்றுக்கொள்ளாமல் அரசாங்கத்தை நடைபெற வொட்டாமல் தடுத்து நிறுத்தி வரவேண்டுமென்று கருதினர். அக் கருத்துக்கு உடன்பட்டவர்கள் சித்தரஞ்சன தாசர், மோதிலால் நேரு போன்ற சில தலைவர்கள் ஆவர். சித்தரஞ்சன தாசர் தலைமையில் 'சுயராச்சியக் கட்சி' ஒன்று தொடங்கப் பட்டது (1923). மோதிலால் நேரு அக் கட்சியில் பெரும் பங்கு ஏற்றார்.

சென்னையில் இரட்டை ஆட்சி முறைக்கு வெற்றி கிடைத் தது. அதற்கு ஆழ்ந்த காரணம் ஒன்று உண்டு. வேறெந்த மாகாணத்திலும் காணப்படாத ஒரு சமூகநிலை சென்னை மாகாணத்தில் காணப்பட்டது. இங்கு அரசாங்க அலுவல் களிலும், வேறு பல பொதுப்பணிகளிலும் உயர்மட்டத்தில் பிராமணரே இடம் பிடித்திருந்தனர். மொத்த மக்கள்தொகை யில் பிராமணர்கள் நூற்றுக்கு மூன்று பேர்களே இருந்தனர். ஏனையோர் 97 பேர்களாக இருந்தும் அவர்களுக்குப் போதிய அளவு அரசாங்கப் பணிகளில் இடங்கொடுக்கப்படவில்லை. அவர்களுடைய படிப்பும் குன்றியிருந்தது. இருபதாம் நூற் றாண்டின் தொடக்கத்தில் நாட்டில் இருந்த வழக்கறிஞர்கள், டாக்டர்கள், எஞ்சினீயர்கள் ஆகியவர்கள் நூற்றுக்குத் தொண் ணூறுபேர் பார்ப்பனராகவே இருந்தனர். சோழர் காலத்திலும், விசயநகரத்துப் பேரரசர் காலத்திலும், நாயக்கர் காலத்திலும், ஆட்சியிலும் சமயத் தலைமையிலும் அமர்த்தப்பட்டிருந்த பிராமண சமூகம் ஆங்கிலேயர் ஆட்சியிலும் அந்த இடங்களைப் பிறருக்கு விட்டுக்கொடுக்கவில்லை. ஆரிய வழக்கின்படி மக்கள் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்று நான்கு வருணங்களாகப் பிரிக்கப்பட்டனராயினும் பிராமணரைப் பொறுத்தவரையில் தமிழ்நாட்டில் பிராமணர் என்றும், பிராமணர் அல்லாத ஏனையோர் அனைவரும் சூத்திரர் என்றும் இருவிதப் பிரிவினையே நிலைத்துவிட்டன. பறையர்கள், என் றும் இல்லாத தாழ்ந்த நிலையில் ஒடுக்கப்பட்டு விட்டார்கள். அவர்கள் என்றும்போல் சேரியில் வாழ்ந்துவந்தனராயினும் பல வகையான இழிவுக்கும் அவமானத்துக்கும் உட்பட்டுவந்தனர். பிராமணர்களின் தெருக்கோடியிலும் அவர்கள் அடியெடுத்து வைக்கக் கூடாது. அவர்கள் தமக்கென ஒதுக்கப்பட்ட கிணற் றில்தான் தண்ணீர் எடுக்கவேண்டும்; குளங்களில்தாம் குளிக்க

வேண்டும். ஆற்றங்கரைகளிலும் அவர்களுக்குத் தனித் துறைகள் ஒதுக்கப்பட்டன. கிராமப் பள்ளிகளில் பறையரின் குழந்தைகள் சேர்க்கப்படுவதில்லை. இந்துக்கள் நிருவகித்து வந்த உயர்நிலைப் பள்ளிகளிலும் அவர்களுக்கு இடம் அளிக்கப் படவில்லை. சேரிகளில் போதிய வாழ்க்கை வசதிகள் அமைத் துக் கொடுக்கப்படவில்லை. பட்டமும் உயர்பதவியும் பெற்ற பார்ப்பனர்கள் ஆங்கிலேயருக்கு உடனாக இருந்து ஆட்சி புரிந்து வந்ததுமன்றி ஆங்கிலேயரை எதிர்த்துப் போராட்டங்கள் நடத்திய பெசன்ட் அம்மையாருடனும் சேர்ந்து, அவருக்கு உறுதுணையாக நின்று தம் ஆதிக்கத்துக்கு உறுதிதேடிக் கொண்டார்கள்.

சமயம், தத்துவம், சடங்குகள், கோயில்கள் ஆகியவற்றின் பேரால் அரசாட்சி புரிந்து வந்த பிராமணர்கள் ஆங்கிலேய ஆட்சி வந்த பின்பு, ஆங்கிலப் படிப்புக்கும், அதனால் கிடைத்து வந்த பதவிகளுக்கும் ஏறியிருந்த மதிப்பை நன்கு உணர்ந்து கொண்டனர். உயர்கல்விப் பயிற்சியில் பிராமணரல்லாதார் நுழைந்து இடம் பெறுவது குதிரைக் கொம்பாய்விட்டது. உயர்நிலைப் பள்ளிகளில் வடமொழிப் பயிற்சிக்குப் பிராமணர் மட்டும் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். விஞ்ஞான வகுப்பு களில் பெரும்பாலார் பிராமண மாணவர்களே இடம் பெற்ற னர். ஏனையோர்க்குத் தகுதியிருந்தும் இவ் வாய்ப்புத் தர மறுக்கப்பட்டனர்.

இந்நிலையில் நாட்டாட்சி இந்தியரின் கைக்கே மாற்றப் பட்டுவிட்டால் மீண்டும் பிராமணர்களே ஏற்றம் பெற்று விடு வதுமன்றி ஏனைய குலத்தினர் எப்போதும்போல் தத்தம் குலத் தொழிலைச் செய்துகொண்டு பிராமணர்களுக்கு அடிமை களாக வாழ வேண்டிய தாழ்நிலை மேலும் தாழ்ந்துவிடும் என்று பிராமணரல்லாதாருக்கு அச்சம் ஏற்பட்டது. மீண்டும் பிராமணரின் ஆட்சி ஏற்பட்டுவிடுமாயின் பழங்காலந்தொட்டு அவர்கள் வளர்த்துவந்த மரபுகள், குலக்கேடுகள், ஆரியப் புராணங்கள் நிலைப்படுத்திவிட்ட கண்மூடிப் பழக்கங்கள் ஆகியவை மேலும் மேலும் நாட்டுக்கும் தமக்கும் கேடு சூழும் என்று பிராமணரல்லாதார் கருதினர். அரசியல் உரிமை முற்றிலும் பெற்றுக்கொள்ளுமுன்பு நமக்குள் நம்மைப் பிளவு படுத்தி வரும் வேறுபாடுகளையும், ஏற்றத் தாழ்வுகளையும் களைந்தெறிந்து விடவேண்டும். படிப்படியாக அரசியல் உரிமைகள் பெறவேண்டுமே தவிர, சமதர்மம் அற்ற அரசியல் அமைப்பை உருவாக்க வேண்டியதில்லை. அன்று நாடு நின்ற

நிலையில் பல்வேறு சாதியினருக்கும், குலத்தினருக்கும், சமயத்தினருக்கும், இனத்தினருக்கும் சமநீதி கிடைக்கவும், அவர்களுக்குள் ஒருமைப்பாடு காணவும் மக்களுக்கு உதவக் கூடியவர்கள் ஆங்கிலேயர்தாம் என்று பலவகையான வாதங்கள் செய்து, பிராமணரல்லாதார் தேசிய உணர்ச்சி வளர்ச்சியைத் தடுத்து அணைபோட்டுக் கொண்டிருந்தனர். காங்கிரசு கட்சியினர், 'நம் வீட்டில் அநேகம் குறைகள் இருக்கலாம்; அண்ணன் தம்பிப் பூசல்கள் நாடோறும் நடைபெற்று வரக்கூடும். ஆனால், அக் காரணத்தால் அண்டை வீட்டுக்காரன் நம் வீட்டில் குடியேறி அதிகாரம் செய்து, நம்மை ஆட்டிப்படைக்கும் உரிமை அவனுக்கு ஏது? என்னுடைய வீட்டுக்கு நான் அதிகாரி என்பதுதான் சுயராச்சியப் பேரிகை' என்று முழங்கினர்.

சென்னையில் 1916 நவம்பர், 20ஆம் நாள் பிராமணரல்லாதார் மாநாடு ஒன்று கூட்டப்பட்டது. 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' என்று ஓர் இயக்கம் தோற்றுவிக்கப்பட்டது (1916). அதன் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சர் பி. தியாகராசச் செட்டியார் அறிக்கை ஒன்று வெளியிட்டார். அவ்வறிக்கையில் பிராமணரல்லாதாரின் தாழ்நிலையையும், பிராமணர் எல்லாத் துறைகளிலும் பெற்றிருந்த ஏற்றத்தையும் அவர் விளக்கியிருந்தார். அவருடைய விளக்கத்துக்குப் பல புள்ளி விவரங்களைச் சான்றுகளாக எடுத்துக் காட்டியிருந்தார். நாட்டில் எல்லா வகுப்பினரும் சமநிலையை எய்திய பிறகுதான் சுதந்தரம் பெறவேண்டும் எனவும், சுதந்தரத்தின் பலன் அப்போதுதான் எல்லாக் குடிமக்களுக்கும் பாய்ந்து நிரம்பும் எனவும் அவ்வறிக்கையில் அவர் திட்டவட்டமாகக் கூறியிருந்தார்.

தென்னிந்திய நல உரிமைக் கட்சியில் பெரும் பங்கு கொண்டவர்கள் டாக்டர் டி. எம். நாயர், பி. டி. ராஜன் ஆகியவர்கள். பிராமணரல்லாதார் கட்சிக்கு 'நீதிக் கட்சி' (Justice Party) என்று பெயர் சூட்டப்பட்டது. ஆங்கிலத்தில் 'ஜஸ்டிஸ்' என்னும் நாளேடும், தமிழில் 'திராவிடன்' என்னும் நாளேடும் தொடங்கப்பட்டன.

மான்டேகு-செம்ஸ்போர்டு திட்டம் அளித்த இரட்டை ஆட்சி முறையின்கீழ் முதல் தேர்தல் 1920ஆம் ஆண்டு நடைபெற்றது. அதில் நீதிக் கட்சியே பெரும்பான்மைப் பலம் பெற்று அமைச்சரவை அமைத்தது. ஏ. சுப்பராயலு ரெட்டியார் முதல் அமைச்சராகப் பதவி ஏற்றார். ராஜா ராமராயனிங்கர் (பனகல் அரசர்), கே. வி. ரெட்டி ஆகிய இருவரும் அமைச்சர்

அவையில் இடம்பெற்றனர். சுப்பராயலு ரெட்டியார் 1921-ல் தம் பதவியை இராசிநாமாச் செய்துவிட்டார். அவருக்குப்பின் பனகல்அரசர் முதன்மந்திரியாகவும், கே. வி. ரெட்டியும், ஏ. பி. பாத்ரோவும் மந்திரிகளாகவும் பதவி ஏற்றனர். சென்னைச் சட்டசபை நடைமுறையிலும், அமைச்சரவை அமைப்பிலும் பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தின் விதிகளே கையாளப்பட்டு வந்தன.

அடுத்து மூன்றாண்டுகளுக்குப்பின் 1923ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலிலும் நீதிக் கட்சியே பெரும்பான்மை பெற்று அமைச்சரவை அமைத்தது. முதல் மந்திரி ராமராயனிங்கரும், ஏ. வி. பாத்ரோவும் தொடர்ந்து அமைச்சர்களாக இருந்தனர். கே. வி. ரெட்டி இடத்தில் டி. என். சிவஞானம் பிள்ளை அமர்ந்தார். இவ்வமைச்சரவைகளினால் பல ஆக்கப்பணிகள் செய்யப்பட்டன. சென்னைப் பல்கலைக்கழகச் சட்டமும், ஆந்திரப் பல்கலைக்கழகச் சட்டமும் நிறைவேற்றப்பட்டன. இந்து அறநிலையக் கட்டுப்பாட்டுச் சட்டம் 1926-ல் நிறைவேற்றப்பட்டது. அச் சட்டம் பல பெரும் எதிர்ப்புகளையும் கடந்தேற வேண்டியிருந்தது. இச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட அறநிலையங்களின் பாதுகாப்புப் போர்டுக்குச் சர் டி. சதாசிவ ஐயர் முதல் தலைவராக நியமிக்கப்பட்டார்.

காந்தியடிகள் இரட்டையாட்சியைப் புறஞ்சுவர் கோலஞ் செய்த சமாதிக்கு ஒப்பிட்டார். ஆங்கிலேயரின் ஆட்சியின்கீழ் இந்தியர் பெற்றிருந்த அமைதியைச் 'சமாதிக்குள் காணப்படும் அமைதி' என்று விளக்கினார். சென்னைக்கு வேல்ஸ் இளவரசர் (பிற்காலத்திய எட்டாம் எட்வர்டு மன்னர்) 1921, செப்டம்பர் மாதம் விசயம் செய்தார். அப்போது தேசியவாதிகள் பல வன்முறைகளினால் தம் எதிர்ப்பைத் தெரிவித்துக்கொண்டனர்.

சிறையிலிருந்த காந்தியடிகள் நோயின் காரணமாக உடனே விடுவிக்கப்பட்டார். சென்னையில் நீதிக் கட்சி அரசு நடைபெற்றுக் கொண்டிருந்தது. சுயராச்சியக் கட்சி சட்டசபையில் முட்டுக்கட்டைகள் போட்டுக் கொண்டிருந்தது; அடிக்கடி சட்டசபையை விட்டு வெளியில் நடப்பதும், உள்ளுக்கு வருவதுமான உத்திகளைக் கையாண்டு இரட்டையாட்சியை நடைபெறாது அதை ஒரு முடிவுக்குக் கொண்டுவருவதற்காகப் பல முயற்சிகள் செய்துகொண்டிருந்தது. நாட்டில் குல வேறுபாடுகளும் தீண்டாமை என்னும் சாபக்கேடும் ஒழிந்தபாடில்லை. நீதிக் கட்சியின் ஆட்சியில் எம். ஸி. ராஜா என்ற ஆதி

திராவிடத் தலைவரின் அரிய முயற்சியின் விளைவாகப் 'பறையர்' என்னும் சொல் மறைந்து 'ஆதிதிராவிடர்' என்னும் பெயர் தோன்றிற்று. பிறகு காந்தியடிகள் இந்தியா முழுவதற்கும், தீண்டத்தகாத வகுப்பினர்களுக்கு 'ஹரிஜனங்கள்' என்று பெயர் மாற்றிக் கொடுத்தார். தமிழ்நாட்டில் 'ஆதிதிராவிடர்' என்னும் பெயரே மீண்டும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

பிராமணரல்லாதார் கோயிலுக்குள் சென்றால் முன்மண்டபத்துக்குள்ளேயே நின்று வழிபடவேண்டும். அவர்களுக்கு முன்பு பிராமணர்கள் ஆண்களும் பெண்களும் குழுமிநின்று கருவறையை மறைப்பார்கள். பின்னால் நின்ற ஏனைய குலத்தினருக்கு ஏற்பட்ட இடையூற்றை அவர்கள் கருதுவதில்லை. ஆதிதிராவிடர்கள் கோயிலின் முதற் சுற்றுக்குள்ளும் நுழையக் கூடாது. ஆதியில் நந்தனார் நின்று வழிபட்ட அதே இடம் அவர்களுக்கு என்றும் ஒதுக்கப்பட்டு நிலைத்திருந்தது. கேரளத்தில் பிராமணரின் சாதி வெறியாட்டம் அளவுக்கு மீறிப்போய் விட்டது. ஆதிதிராவிடன் தான் இந்துவாக இருந்தவரையில் தீண்டாதவனாக இருந்தான். அவனே கிறித்தவனாக மாறிக் கழுத்தில் சிலுவையை அணிந்தவுடனே தீண்டப்படக் கூடியவனாக மாறிவிட்டான். தீண்டாமைக் கொடுமை வைக்கம் என்னும் ஊரில் தலைவிரித்து ஆடிற்று. ஆதிதிராவிடர்கள் அங்குக் கோயிலுக்குள் நுழைந்து வழிபட முடியாது. இக் கொடுமையை எதிர்த்துக் காந்தியடிகள் அறப்போர் ஒன்று நடத்தினார் (1925). அதற்கு 'வைக்கம் சத்தியாக்கிரகம்' என்று பெயர். அவருக்குத் துணையாகத் தொண்டர்களை நெறிப்படுத்தி ஒருமுகமாய் ஈரோடு இராமசாமி நாயக்கரே நாயகராய் நின்று அப் போரை நடத்திவைத்தார். அதனால் அவர் சிறைத் தண்டனையும் பெற்றார்.

தமிழ்நாட்டில் குருகுலங்கள் சில நடைபெற்று வந்தன. அங்குப் பிராமண மாணவர்களுக்குத் தனிச் சிறப்புகளும், சலுகைகளும், உரிமைகளும் வழங்கப்பட்டன. பிராமணரல்லாதார் உண்பதற்கும் உறைவதற்கும் ஒதுக்கிடம் தரப்பட்டது. அத்தகைய குருகுலம் ஒன்றைச் சேரன்மாதேவியில் வ. வே. சு. ஐயர் என்பார் நடத்திவந்தார். பிராமணரல்லாதாரே அவருக்குக் குருகுலம் நடத்துவதற்குப் பெருங்கொடைகள் வழங்கியிருந்தனர். எனினும் அவர்களுடைய குழந்தைகள் குருகுலத்தில் இழிவாக நடத்தப்பட்டனர். சேலம் டாக்டர் வரதராசலு நாயுடு இவ்வவக்கேட்டை எதிர்த்துப் போராட்டம் ஒன்று நடத்தினார். காந்தியடிகள் தலையிட்டுச் சமரசம் செய்து வைத்தார். மாண

வர்கள் அனைவரும் ஒருங்கு அமர்ந்து உண்பதே பொருத்தமும் அறமுமாகும் என்று அவர் மொழிந்தார். பிறகு வ. வே. சு. ஐயர் குருகுலத்தைக் கலைத்துவிட்டார்.

வைக்கம் வீரர் இராமசாமி நாயக்கர் கூர்த்த அறிவும், நாவன்மையும் வாய்ந்தவர்; இளைஞர் உள்ளங்களைத் தொடக் கூடியவர்; அஞ்சா நெஞ்சினர், உள்ளதை உள்ளபடியே உடைத்துக்காட்டும் கள்ளமிலாப் பண்பாளர். அரசியலிலும் சமூக வாழ்விலும் பிராமணர் ஏற்றங்கொண்டிருந்ததையும், ஏனைய மக்கள் விழிப்பின்றிக் கண்மூடிப் பழக்கவழக்கங்களுக்கு அடிமைகளாகி, மூலைகளில் முடங்கிக் கிடந்ததையும் கண்டு அவர் மனம் புழுங்கினார். இத் தாழ்வான நிலைக்கு ஒரு முடிவு கட்டவேண்டுமென்று விருப்பங்கொண்டார். காங்கிரசில் தொடர்ந்து தேசியப் பணிகளில் ஈடுபட்டிருந்தால் தாம் செய்ய விரும்பிய சீர்த்திருத்தத் தொண்டுகள் தடைப்படலாம் என எண்ணிக் காங்கிரசைவிட்டு விலகிச் சீர்திருத்த இயக்கம் ஒன்றைத் தொடங்கி, அதற்குச் 'சுயமரியாதைக் கட்சி' என்னும் ஒரு பெயர் சூட்டினார். அக் கட்சியின் முதன் மாநாடு செங்கற்பட்டு நகரில் 1929ஆம் ஆண்டில் கூடிற்று. தம் கொள்கைளைப் பரப்புவதற்காகக் 'குடியரசு' என்னும் வார இதழ் ஒன்றைத் தொடங்கினார். நாயக்கருக்குத் தமிழக அறிஞர்கள் 'பெரியார்' என்று ஒரு பட்டம் சூட்டினார்கள். அதுமுதல் அவர் அப் பட்டப் பெயராலேயே குறிப்பிடப்பட்டு வருகின்றார். அவருடைய கொள்கைகளும் அறிவுரைகளும் தமிழகமெங்கணும் காட்டுத் தீப்போன்று பரவின. நகரங்களிலும் கிராமங்களிலும் சுயமரியாதைக் கழகங்கள் நிறுவப்பட்டன. பிராமணரல்லாத இளைஞர்கள் ஆயிரக்கணக்கில் இக் கழகங்களில் உறுப்பினர் ஆனார்கள். சுயமரியாதைப் படிப்பகங்கள் நாடெங்கும் திறக்கப் பட்டன. நாயக்கரின் புரட்சிக் கொள்கைகள் நாடெங்கும் வீட்டுக்கு வீடு புகுந்து குடும்பத்துக்குள் பிளவுகள் உண்டுபண்ணியது முண்டு. தமிழரின் சமுதாயத்தில் விளைந்துள்ள உயர்வு தாழ்வுகள், குருட்டுப் பழக்கவழக்கங்கள், பொருளற்ற சடங்குகள், பேச்சு வழக்கற்றிருந்த வடமொழி பெற்றிருந்த மேலாட்சி, தமிழரின் உறக்க நிலை, கோயில்களிலும் மடங்களிலும் பிராமணருக்கு மட்டும் அளிக்கப்பட்டுவந்த சீரும் சிறப்பும் பிழைப்பும், ஊக்கமோ ஆக்கமோ இன்றி ஊழ்வினையில் நம்பிப் பிராமணரின் போக்குக்கெல்லாம் தமிழர் கைகொடுத்துவந்தது ஆகிய இழிவுகளுக்கெல்லாம் மூலகாரணம் வடமொழி வேதங்கள், புராணங்கள், இதிகாசங்கள், சமயக்கோட்பாடுகள், கோயில்கள், மடங்களேயாகும் என்று பெரியார் கருதினார்.

அதனால் 'இருட் சாதி தத்துவச் சாத்திரக் குப்பை இருவாய்ப் புன்செயில் எருவாக்கிப் போட்டு, மருட்சாதி சமயங்கள் மதங்கள், ஆச்சிரம வழக்கெலாம் குழிக்கொட்டி மண்மூடிப் போட்டுப்' பகுத்தறிவாளர்களாக, மனிதர்களாக முன்னேறி வாருங்கள் எனப் பெரியார் தமிழரை அறைகூவி அழைத்தார். புராணங்களையும், இதிகாசங்களையும் பொது இடங்களில் தீயிட்டுக் கொளுத்தினார். திரு. வி. கலியாணசுந்தரனார் போன்ற தமிழறிஞர்கள் 'காவியம் போச்சு ஓவியம் போச்சு' என்று குரல் எழுப்பி மக்களைத் தட்டி எழுப்பிப் பெரியாருக்கு எதிர்ப்பு ஒன்று உருவாக்கினார்கள். எனினும் சுயமரியாதை இயக்கத்தின் தேவையையும் மேன்மையையும் அவர்கள் உணரா தவர்கள் அல்லர்.

சுயமரியாதை இயக்கத்தினால் ஏற்பட்ட நல்விளைவுகள் பல. சமயத்துறையில் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. கோயில் கள் பழுதுபார்க்கப்பட்டன. மங்கிக் கிடந்த சிற்பங்களுக்கும் ஓவியங்களுக்கும் புது மெருகூட்டப்பட்டன. அறங்காவலர்கள் கோயில் திருப்பணிகளில் மும்முரமாக இறங்கினார்கள். மடங் களில் சமயப்பணிகள் தொடங்கின. சமய நூல்கள் மலிவுப் பதிப்புகளாக வெளியிடப்பட்டன. இன்பச் சுழியிலும், தம் அடியவர்கள் பாடிய புகழ்ப் பாக்களிலும் சிக்குண்டு கிடந்த மடாதிபதிகள் விழித்தெழுந்தனர். தம் மடங்களின் வருமானத் தில் ஒரு பங்கை அவர்கள் ஆக்கப்பணிகளுக்குச் செலவிடலானார் கள். நீதிக் கட்சி நிறைவேற்றிவைத்த அறநிலையப் பாது காப்புச் சட்டம் தோன்றுவதற்கும் பெரியாரின் சுயமரியாதை இயக்கம் அடிகோலிவிட்டது.

இலக்கிய இலக்கண விதிகளில் கட்டுண்டு மரபு வழியே அமைந்திருந்த மேடைப் பேச்சு முறைக்குப் புதியதொரு வடிவைச் சமைத்துக் கொடுத்தவரும் பெரியாரே ஆவார். எழுதப் படிக்கத் தெரியாத எளிய மக்களும், அரசியல், சமூக வியல், சமயம், தத்துவம் ஆகிய துறைகளுடன் தொடர்பு கொண்ட செய்திகளை எளிதில் அறிந்துகொள்ளுமாறு அவர் களுடைய மொழியிலேயே பேசி, அவர்கள் உள்ளங்களைக் கவர்ந்துகொள்ளும் அளவுக்குச் சொற்பொழிவு செய்யும் ஆற்ற லைப் பெரியார் வாய்க்கப் பெற்றிருந்தார். இவர் அமைத்துக் கொடுத்த சொற்பொழிவு முறையைப் பிற்காலத்திய திராவிட முன்னேற்றக் கழகமும் பின்பற்றி வந்தது. பெரியாரால் உருவாக் கப்பட்ட பேச்சாளர் பலர் தமிழகத்தில் பேரும்புகழும்பெற்றனர்.

தமிழகத்து அரசியல் வெகு வேகமாகப் புரண்டோடிக் கொண்டிருந்தது. சென்னைச் சட்டசபைக்கு 1926ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் நீதிக் கட்சி தோல்வியுற்றது. எக் கட்சியிலும் சேராதவரான டாக்டர் சுப்பராயன் காங்கிரஸ் காரரின் ஆதரவு பெற்று அமைச்சவை அமைத்தார். இந்தியா வுக்குச் சீர்திருத்திய அரசு ஒன்றை வழங்கும் பொருட்டு இந்தியாவுக்கு வந்த சைமன் கமிஷன் உறுப்பினரைச் சுப்பராயன் அன்புடன் வரவேற்று உபசரித்தார். சைமன் கமிஷனைப் புறக்கணித்து வந்த காங்கிரஸ்காரர்கள் சுப்பராயன் நடத்தை யைக் கண்டு சினந்தனர்; அவரைக் கைவிட்டனர். சுப்பராயன் பனகல் அரசரின் ஆதரவை நாடினார். அவருடைய ஆலோ சனைகளை மேற்கொண்டவராய்ச் சுப்பராயன் சில புதிய அமைச்சர்ளைச் சேர்த்துக்கொண்டார். சுப்பராயன் அமைச் சவையில்தான் குலங்களின் மக்கள் தொகைக்கு ஏற்ப அரசாங்கப் பணிகளில் ஊழியர்கள் அமர்த்தப்படவேண்டும் என்னும் 'Communal G.O.' பிறப்பிக்கப்பட்டது. இவ்வாணை பல் லாண்டுகள் செயலில் இருந்து பிராமணரல்லாதாருக்கு அளவற்ற நன்மைகள் விளைவித்துவந்தது. சுப்பராயன் காலத்தில்தான் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் நிறுவப் பட்டது. சர் பி. தியாகராசச் செட்டியார் 1925ஆம் ஆண்டி லும், பனகல் அரசர் 1928ஆம் ஆண்டிலும் காலமானார்கள். அடுத்த பொதுத் தேர்தல் 1930ஆம் ஆண்டு நடைபெற்றது.

சென்னையில் 1927ஆம் ஆண்டு அனைத்திந்தியக் காங்கிரஸ் கூடிற்று. காந்தியடிகள், ஜவகர்லால் நேரு உட்படத் தேசியத் தலைவர் அனைவரும் அக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். இக் கூட்டத்தில் காங்கிரஸின் நோக்கம் 'பூரண சுதந்தரமே; குடியேற்ற நாட்டு அந்தஸ்து அன்று' என்று மிகச் சிறப்பான தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது. இச் சமயத்தில் மிஸ் மேயோ என்ற அமெரிக்க நாட்டுப் பெண் ஒருத்தி 'இந்தியத் தாய்' (Mother India) என்று ஒரு நூலை வெளியிட்டாள். அது இலட்சக் கணக்கில் உலகம் முழுவதும் விற்பனையாயிற்று. அந் நூலாசிரியர் அந் நூலில் இந்திய மக்களையும், நாகரிகத்தையும், பண்பாட்டையும், சமயத்தையும், பழக்கவழக்கங்களையும் மிகவும் இழிவாகக் கூறி, கூற்றுகளுக்குப் பொய்யும் புனைசுருட்டு களையும் சான்றுகளாகக் காட்டியிருந்தாள். காந்தியடிகள் அந் நூலைச் 'சாக்கடைக் கண்காணியின் அறிக்கை' (Drain Inspector's Report) என்று கூறி அதைப் புறக்கணித்தார். காந்தியடிகள் மீண்டும் அரசியலில் மும்முரமாக ஈடுபட லானார்.

சைமன் கமிஷன் செய்த சிபாரிசுகள் (1929) காங்கிரஸ்வாதிகளுக்கு மனநிறைவு கொடுக்கவில்லை. ஆகவே, காந்தியடிகள் உப்புச் சத்தியாக்கிரகம் ஒன்றைத் தொடங்கினார் (1930). தமிழகத்திலும் அவ்வியக்கம் காட்டுத் தீப்போல் பரவியது. 'கத்தியின்றி இரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என்று தொடங்கும் நாமக்கல் கவிஞர் திரு. இராமலிங்கம் பிள்ளை அவர்களின் பாட்டை வழிநடைப் பாட்டாகக் கொண்டு, திரு இராசகோபாலாச்சாரியாரின் தலைமையில் தொண்டர் கூட்டம் ஒன்று திருச்சிராப்பள்ளியிலிருந்து புறப்பட்டுச் சென்று வேதாரணியத்தில் உப்புக் காய்ச்சியது; தடையை மீறி உப்புக் காய்ச்சிய பலரும் அரசாங்கத்தால் கைது செய்யப்பட்டனர். மீண்டும் ஒருமுறை சுதந்தரப் போரின் பேரிகைகள் நாடெங்கும் கொட்டப்பெற்றன. உப்பு அறப்போரின் விளைவுகளை உலக நாடுகள் யாவும் வியப்புடன் நோக்கிவந்தன. வழக்கப்படியே அடக்குமுறைக் கெடுபிடி தலைவிரித்தாடிற்று. காந்தியடிகள் எரவாடாவில் சிறைபுகுந்தார். பிரிட்டிஷ் அரசாங்கம் வட்ட மேசை மாநாடு ஒன்று இலண்டனில் கூட்டி, அதில் பங்கு பெறுமாறு காந்தியடிகள் உட்படப் பல தலைவர்களை அழைத்தது. வட்டமேசை மாநாடுகள் பயனளிக்கவில்லை. இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே நல்லதோர் உடன்பாடு ஏற்படவில்லை.

சைமன் கமிஷன் வகுத்துக் கொடுத்த திட்டத்தின்கீழ் இந்திய அரசாங்கத் திருத்தச் சட்டம் ஒன்று 1935ஆம் ஆண்டு பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றி வைக்கப்பட்டது. அச் சட்டத்தின்கீழ் பர்மா இந்தியாவினின்றும் பிரிக்கப்பட்டது. மாகாண ஆட்சிக்கு மேலும் பல விரிவான உரிமைகள் வழங்கப்பட்டன. மாகாண ஆட்சியில் பிரிட்டிஷ் ஆட்சியாளருடன் கூட்டுறவு கொள்ளக் காங்கிரஸ் ஒருப்பட்டது.

திருத்தியமைக்கப்பட்ட மாகாண ஆட்சியில் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் காங்கிரஸ் அமைச்சரவை அமைத்தார் (1937). அறிவாற்றலில் மிக்கவர்களும் அரசு ஊழியத்தில் கைதேர்ந்தவர்களுமான சிவில் சர்விஸ் பணியாளர்கள் அவருக்கு உறுதுணையாக நின்று தம் ஒத்துழைப்பை நல்கினர். இராசகோபாலாச்சாரியாருக்குச் சட்டசபையில் பெரும்பான்மைப் பலம் இருந்தது. ஆச்சாரியாரின் அமைச்சவை பல நன்மைகளைச் செய்தது. மதுவிலக்கு முதன்முதல் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. அதனால் பல்லாயிரங் குடும்பங்கள் அழிவினின்றும் காப்பாற்றப்பட்டன. உழவர்களின் கடன்

சுமைகளை இறக்குவதற்காக ஆச்சாரியார் சட்டம் ஒன்று நிறைவேற்றி வைத்தார். ஆனால், அவர் அரசியலில் ஓரிரண்டு வழுக்களும் நுழைந்துவிட்டன. கம்மாளர்கள் தம்மை 'ஆச்சாரிகள்' என்று சொல்லிக்கொள்ளக் கூடாதென்றும் 'ஆசாரிகள்' என்று கூறிக்கொள்ள வேண்டுமென்றும் அவர் விதித்த அரசாணையொன்று கம்மாளர் நெஞ்சில் கனலை மூட்டிற்று. அவர்கள் கொதித்தெழுந்தனர். அதனால் ஆச்சாரியார் அவ்வாணையைப் பிறகு தவிர்த்துவிட்டார். பள்ளிக்கூடங்களில் சிறு வகுப்புகளிலேயே கட்டாயமாக இந்தி பயிற்றுவிக்க வேண்டும் என்ற அவருடைய மற்றொரு அரசாணை அவருக்கும் அவருடைய கட்சிக்குமே பல இன்னல்களைத் தோற்றுவித்தது. தமிழகத்தில் மிகப் பெரியதோர் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி தோன்றிற்று. அதில் மறைமலையடிகள் போன்ற பல தமிழ் அறிஞரும் ஈடுபட்டனர்.

ஐரோப்பாவில் அரசியல் சூறாவளி ஒன்று உருவாகிக் கொண்டிருந்தது. ஜெர்மானியச் சான்சலர் அடால்ப் ஹிட்லர் 1939ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் போர் முழக்கம் செய்தான். இரண்டாம் உலகப்போர் தொடங்கிற்று. ஐரோப்பிய நாடுகளும், இங்கிலாந்தும், அமெரிக்காவும் போரில் இறங்கின. இந்தியரைக் கலந்தாலோசிக்காமலேயே பிரிட்டன் இந்தியாவைப் போரில் ஈடுபடுத்தியது. இதை எதிர்த்துக் காங்கிரஸ் மந்திரி சபைகள் யாவும் பதவி துறந்தன. ஜெர்மனி மின்னல் வேகத்தில் ஐரோப்பிய நாடுகள் அத்தனையையும் கைப்பற்றிக் கொண்டது. இத்தாலியச் சர்வாதிகாரி பெனிட்டோ முசோலினி ஹிட்லருக்குத் துணைநின்றான். ஜெர்மனிக்குத் துணையாகப் பசிபிக் அரங்கத்தில் ஜப்பான் போர்க்கோலங் கொண்டது. வெகு துரிதமாக ஜப்பான் வெற்றிமேல் வெற்றி கண்டு சிங்கப்பூரையும் இரங்கூனையும் கைப்பற்றிக்கொண்டது. அதன் போர்க் கப்பல்கள் வங்கக்கடலிலும் உலவிவந்தன. ஜப்பானியப் போர் விமானங்கள் சென்னையின்மேலும் இரண்டு வெடி குண்டுகள் வீசின (1942). ஆனால், சேதம் ஏதும் விளையவில்லை. சென்னை மக்கள் பீதியடைந்து நகரத்தைக் காலி செய்து வெளியூர்களுக்குச் சென்று தங்கி வந்தார்கள்.

சென்னையில் இராசகோபாலாச்சாரியாரும் காமராசரும் வேறு சில காங்கிரஸ் தலைவர்களும் முஸ்லிம்களுக்குத் தனி நாடு ஒன்றைப் பிரித்து அளித்துவிடலாம் என்று தம் கருத்தைத் தெரிவித்தனர். மேலிடத்துக் காங்கிரஸ் தலைவர்கள் அவர்களுடைய கருத்துக்கு முரண்பட்டனர். இராசகோபாலாச்சாரி

யார் காங்கிரஸ் கட்சியினின்றும் விலகிக்கொண்டார். பிரிட்டிஷ் இந்தியச் சுதந்தரப் பேச்சுகள் முறிந்தன. காந்தியடிகள் 1942 ஆகஸ்டு 9ஆம் தேதியன்று 'வெள்ளையனே வெளியேறு' (Quit India) என்னும் இயக்கம் ஒன்றைத் தொடங்கினார். நாடு மீண்டும் ஒரு போராட்டத்தில் மூழ்கிற்று. ஆங்கிலேயரின் அடக்குமுறைகளும் மீண்டும் வெறிகொண்டாடத் தொடங்கின.

இரண்டாம் உலகப் போர் 1945ஆம் ஆண்டு முடிவுக்கு வந்தது. பிரிட்டனில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் தொழிற் கட்சி பெரும்பான்மையடைந்து, அதன் தலைவர் அட்லி பிரபு முதல் அமைச்சரானார். அவர் மறுபடியும் இந்தியருடன் சுதந்தரப் பேச்சு வார்த்தைகள் தொடங்கினார். மௌன்ட் பேட்டன் பிரபு 1947 மார்ச்சு மாதம் 24ஆம் நாள் இந்தியாவின் வைஸ்ராயாகப் பதவியேற்றார். அவருடைய நல்லெண்ணமும் பெருந்தன்மையும் இந்தியாவுக்கு நல்வாய்ப்புகளாகக் கிடைத் தன. அவருடைய ஈடுபாடு பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஊக்கம் கொடுத்தது. அவர் இந்தியத் தலைவர்களை நன்கு கலந்தாலோசித்த பின்னர் இந்தியாவை இரு சுயேச்சை நாடு களாகப் பிரித்தார். இந்தியா, பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகள் தோன்றின. ஒரு நூறாண்டாக இந்தியர் கண்டுவந்த கனவு பலித்தது. சுதந்தரப் போராட்டத்தில் அவர்கள் சிந்திய கண்ணீரும் செந்நீரும் பலன்கொடுத்தன. டில்லியில் 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் நாள் ஆங்கிலேயரின் யூனியன் ஜாக் கொடி இறங்கிற்று; இந்தியத் தாயின் மூவண்ணக் கொடி மேலே ஏறிப் பட்டொளி வீசிப் பறந்தது.

சென்னை அரசுக்குக் காங்கிரஸ் கட்சியினரான டி. பிரகாசம் முதலமைச்சராய் இருந்தார். அவருக்குப்பின், 1947 மார்ச்சு 24ஆம் தேதி ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் முதலமைச்சரானார். சட்டசபையில் காங்கிரசுக்குப் பெரும்பான்மைப் பலம் இருந் தது. அவர் 1949 ஏப்ரல் 6ஆம் தேதி வரையில் பதவியிலிருந்தார். அவருக்குப் பின்னர்க் குமாரசாமி ராசா முதலமைச்சரானார்.

சென்னை மாகாணமானது தமிழகம், ஆந்திரம், மலையாள மாவட்டங்கள் இரண்டு, தென் கன்னடம் ஆகியவை அடங்கிய ஒரு பெரும் நிலப்பகுதியாய் அமைந்திருந்தது. இரு நூற்றாண்டு களாகத் தொடர்ந்து வந்த வரலாற்று நிகழ்ச்சிகளின் விளைவாகச் சென்னை மாகாணம் வளர்ந்து வந்ததே தவிர இதன் எல்லை கள் திட்டமிட்டு வகுக்கப்பட்டனவல்ல. தமக்கு மாகாணத்தின் ஆட்சிப் பொறுப்புகளில் போதிய பங்கு அளிக்கப்படவில்லை

என்று ஒவ்வொரு பகுதியாரும் பொருமிக் கொண்டிருந்தனர். காங்கிரஸ் கட்சியின் அமைப்பில் ஆந்திரம் தனி மாகாணமாகவே கருதப்பட்டு வந்தது. ஆந்திரர்கள் தமக்குத் தனி மாநிலம் வேண்டும் என்று கூறிக் கிளர்ச்சிகள் செய்தனர். அக் கிளர்ச்சிகள் வெற்றி பெறுவதற்காகப் பொட்டி சீராமுலு என்பார் ஒருவர் பட்டினி கிடந்து உயிர்விட்டார். ஆந்திரம் சென்னை மாகாணத்திலிருந்து பிரிக்கப்பட்டுத் தனி மாநிலமாக அமைவுற்றது (1953). மாநிலங்களை மொழி அடிப்படையில் பிரித்து அமைப்பதற்காகத் திட்டம் ஒன்று வகுப்பதற்கென 1953-ல் அசப் அலி தலைமையில் ஆய்வுக் குழு (Commission) ஒன்று நியமிக்கப்பட்டது. இக் குழுவின் அறிக்கையானது 1955ஆம் ஆண்டில் வெளியாயிற்று. இவ்வறிக்கையின் அடிப்படையில் 1956ஆம் ஆண்டு இந்திய நாடாளுமன்றம் மாநில மறுசீரமைப்புச் சட்டம் ஒன்று நிறைவேற்றி வைத்தது. அச் சட்டத்தின் படி, கேரள மாநிலம் ஒன்று புதிதாக அமைக்கப்பட்டது. சென்னை மாநிலத்திலிருந்து வடமலையாள, தென் மலையாள மாவட்டங்கள் கேரளத்துடன் இணைக்கப்பட்டன. ஆந்திரமும் கேரளமும் தனித்தனியாகப் பிரிந்து போய் விட்டனவாயினும் எஞ்சி நின்ற தமிழ்ப் பகுதிக்குச் சென்னை மாநிலம் என்ற பழம் பெயரே தொடர்ந்து வழங்கி வந்தது. மாநிலச் சீரமைப்புகளின்போது திருவிதாங்கூர்-கொச்சியைச் சேர்ந்திருந்த அகத்தீசுரம், தோவாளை, கல்குளம், விளவங்கோடு ஆகிய நான்கு முழுத் தாலுக்காக்களும், செங்கோட்டையின் பெரும்பகுதியும் தமிழகத்துடன் இணைந்தன. தென்கன்னட மாவட்டத்தின் காசர்கோடு தாலுக்காவும் மலையாள மாவட்டங்களும் கேரளத்துடன் இணைந்தன. தென்கன்னடத்தின் எஞ்சிய பகுதியும், கோயமுத்தூர் மாவட்டத்துக் கொள்ளேகாலம் தாலுக்காவும் மைசூர் மாநிலத்தைச் சேர்ந்தன. செங்கற்பட்டு, சேலம் மாவட்டங்களிலிருந்து 845 ச.கி.மீ. நிலம் ஆந்திரத்துக்கு அளிக்கப்பட்டது. இப் பிரிவினை ஏற்பாடுகளுக்குப் பின்பு எஞ்சி நின்ற நிலப்பகுதியைத் தமிழில் தமிழ்நாடு என்றும், ஆங்கிலத்தில் தொடர்ந்து சென்னை என்றும் குறிப்பிட வேண்டுமென்று சென்னைச் சட்டசபை 1957ஆம் ஆண்டில் தீர்மானம் ஒன்று நிறைவேற்றியது. தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலுமே இம் மாநிலத்தைத் தமிழ்நாடு என்று அழைக்கவேண்டும் என்று 1967ஆம் ஆண்டு ஆகஸ்டு 18ஆம் தேதி மாநிலச் சட்டசபை தீர்மானித்தது.

சேலம் மாவட்டமானது 1966ஆம் ஆண்டில் சேலம், தர்மபுரி என இரு மாவட்டங்களாகப் பிரித்தமைக்கப்பட்டது. திருவிதாங்

கூர்-கொச்சியிலிருந்து பிரித்துத் தமிழ்நாட்டுடன் இணைத்த நிலப்பகுதி கன்னியாகுமரி மாவட்டம் என்னும் பெயர் ஏற்றது. பின்னர்ப் புதுக்கோட்டை, பெரியார் மாவட்டங்கள் ஏற்படுத்தப் பட்டன. மொழிப் பிரிவினையின்படி வரையறுக்கப்பட்ட தமிழ்நாட்டு மாநிலத்தில் இப்போது சென்னை, செங்கற்பட்டு, வடஆர்க்காடு, தென்னார்க்காடு, சேலம், தர்மபுரி, கோயமுத் தூர், பெரியார், நீலகிரி, திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, தஞ்சாவூர், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியா குமரி ஆக 16 மாவட்டங்கள் அடங்கியுள்ளன. தமிழ்நாட்டின் இப்போதைய பரப்பு 1,30,119,15 ச.கி. மீ.; மக்கள்தொகை (1981) 4,82,97,456.

சென்னையே தொடர்ந்து தமிழ்நாட்டின் தலைநகராய் இருந்து வருகின்றது. இந்தியாவிலேயே சென்னை மாநகரம் நான்காவது பெரிய நகரமாகும். தமிழே 1958 முதல் தமிழ் நாட்டு ஆட்சி மொழியாக இருந்து வருகின்றது. பல்கலைக் கழகங்களில் 1960-61ஆம் ஆண்டு முதல் பட்டப் படிப்புப் பாடங்கள் சில, தமிழிலேயே பயிற்றப்பட்டு வருகின்றன. மதுரை யில் பல்கலைக்கழகம் ஒன்று புதிதாக அமைக்கப்பட்டது.

## வளம் காணும் தமிழகம்

இந்தியா சுதந்தரம் பெற்ற பின்பு 1980 வரையில் தமிழ் நாட்டில் ஏழு பொதுத் தேர்தல்கள் நடைபெற்றுள்ளன. இந் நாடானது தன்னாட்சி உரிமை பெற்றபோது பலர் வறுமையில் வாடினர். முடியாட்சியானது நீங்கிக் குடியாட்சி மலர்ந்தது. 1952-ல் நாட்டுமக்கள், தங்களது வாக்குரிமையை அளித்துப் பெரும்பான்மை மாநிலங்களில் காங்கிரசு கட்சியை ஆட்சி இருக்கையில் அமர்த்தினர். தமிழகத்தில் திருவாளர் ச. இராசகோபாலாச்சாரியார் முதல்வரானார். இவரது திறமை யான நிருவாகத்தைத் தமிழகம் 1937ஆம் ஆண்டு முதல் 1939 வரை கண்டுள்ளது. பிற்பட்ட மக்கள் மதுவால் மானமிழந்து வாழ்வதை நினைத்த இவர் சேலம் மாவட்டத்தில் மதுவிலக் கினைக் கொணர்ந்தார். மதுவிலக்கினால் ஏற்பட்ட பொரு ளிழப்பை ஈடுகட்ட விற்பனை வரியை விதித்தார். கடன் நிவாரணச் சட்டமியற்றி உழவர்களுக்கு நிவாரணம் அளித் தார். 'பண்ணையாள் சட்டம்' இவர் காலத்தில்தான் நடை முறைக்கு வந்தது.

இவர் பொதுமக்கள் நலனில் மிகவும் அக்கறை காட்டினார். அரசின் செயல்களில் அரசியல்வாதிகளின் தலையீடுகள் ஏற்படா

வண்ணம் ஆட்சியினை நடத்தினார்; அறநெறியுடன் அரசியலை இணைத்து ஆட்சி செய்ய விரும்பினார்; அயல்நாட்டு மதுவகைகளுக்கு விற்பனை வரி விதித்தார். மக்கள் நலனை விரும்பி ஒவ்வொரு நிருவாகத் துறையையும் இவர் கவனமாகக் கண்காணித்துச் செயல்பட்டார். குலக்கல்வித் திட்டத்தாலும், இந்திமொழியை ஆதரித்ததாலும், பொற்கொல்லர்கள் தங்களை ஆச்சாரி எனக் கூறாது ஆசாரி என அழைக்க வேண்டுமென்ற போது எதிர்ப்பு இருந்ததைக் கண்டும் அக் கொள்கைகளை விட்டுவிட்டார். இருந்தபோதிலும் இவரது எளிமை, நேர்மை, வாய்மை எல்லோராலும் விரும்பிப் பாராட்டப்பட்டன.

1954-ல் திருவாளர் கு. காமராசர் முதல்வராகப் பொறுப் பேற்றார். இவர் 1963ஆம் ஆண்டுவரை முதலமைச்சராக இருந்தார். இவர் பொதுமக்கள் நலத்துக்காக மிகவும் பாடுபட்டார். இவர் காலத்தில் பல துறைகளில் தமிழகம் முன்னேறியது. இவரது உடன் அமைச்சர்கள் சிலர் பின்னர் மாநிலத்திலும், மத்திய அரசிலும் மிகவும் புகழ்பெற்ற அமைச்சர்களாய் விளங்கினார்கள். குறிப்பிடத்தக்கவர்கள் திருவாளர்கள் பக்தவத்சலம், ஆர். வேங்கடர்ாமன், சி. சுப்பிரமணியம் ஆகியோர் ஆவர். வேளாண்மை, கல்வி, தொழில், மின்சாரம் ஆகியவற்றில் தமிழகம் தலைசிறந்து விளங்கியது. இவரது காலத்துத் தமிழகம் நெல் சோள உற்பத்தித் திறனில் முதன்மைபெற்று விளங்கியது பெருந்தலைவர் காமராசர் அனைத்து இந்தியக் காங்கிரசின் தலைவராகவும் பிற்பாடு தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கட்டாயக் கல்வியானது பயிற்றுவிக்கப்பட்டது. ஏழைப் பள்ளிச் சிறார்களுக்கு மதிய உணவும், சீருடையும், பாடநூல்களும் இலவசமாய் வழங்கப்பட்டன.

1958-ல் கிராமியக் குழுச் சட்டத்தைக் கொணர்ந்து அதிகாரக் குவியலைப் பிரித்துக் கிராமங்களின் குழுக்களுக்கு அளித்தார். அவை எண்ணியது எண்ணிய வண்ணம் செயலாற்ற மேம்பாட்டுத் திட்டங்கள் வகுத்தார். கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கங்கள் ஏற்படுத்தி 85 பங்கு, கிராம மக்களை இதன்மூலம் பயன்பெறச் செய்தார். பயிர் அபிவிருத்திக்கெனக் கடன் வசதியும், நியாய விலையில் பொருள்களை வழங்கவும் விற்கவும் இச் சங்கங்கள் துணைபுரிந்தன. மின் உற்பத்தியிலும் இவரது காலத் தமிழகம் முதலிடம் பெற்றது. பொதுத் துறையில் பல தொழில்கள் தொடங்கப்பட்டன. பெரம்பூரில் இரயில்பெட்டித் தொழிற் சாலையும், ஆவடி டாங்குத் தொழிற்சாலையும், கிண்டி

இந்துஸ்தான் டெலிபிரிண்டர் தொழிற்சாலையும் மிகப் புகழ் பெற்றனவாகும். இவர் அடித்தள மக்களின் நலத்தை மனத்தில் கொண்டு பல திட்டங்களைத் தீட்டிச் செயல்பட்டார்.

திருவாளர் பக்தவத்சலனார் 1963 முதல் 1967 வரை முதலமைச்சராக இருந்தார். இவர் நிருவாக ஆற்றல் மிகக் கொண்டவர்; கொள்கைப் பிடிப்பாளர். இவரது காலத்தில் கல்வித் துறை, தொழில்துறைகளில் நாடு நன்கு முன்னேறியது. திருவாளர்கள் ஆர். வேங்கடராமன், சி. சுப்பிரமணியம் போன்றோரின் சேவையால் தமிழகம் மிகுந்த வளர்ச்சி பெற்றது. குறைந்த ஊதியம் உள்ளோருக்கும், நடுத்தர வகுப்பினருக்கும் வீடுகள் கட்டித்தரும் திட்டம் தொடங்கப்பட்டது. மாநிலத்தின் பல பகுதிகள், காங்கிரசு கட்சி ஆட்சியில் 59,647 கி.மீ. நீளமுள்ள தேசிய, மாநில, சிற்றூர்ப் பாதைகளால் இணைக்கப் பட்டன. முந்நூறு பேர்களே வாழும் சிற்றூர்களுக்கும் தொடக் கப்பள்ளிகள் தொடங்கப்பட்டன. உயர்நிலைப் பள்ளிகள் சுமார் 2500 திறக்கப்பட்டன. பள்ளியின் நிருவாகமும், கல்லூரியின் நிருவாகமும் தனித்தனியாகத் திறம்பட நடக்க இரு தனி இயக்குநர்கள் நியமிக்கப்பட்டனர்.

காங்கிரசானது தமிழகத்தை ஆண்டபோது பெரியார் ஈ. வே. ரா. அவர்களின் சுயமரியாதை இயக்கம் நாட்டு மக்களிடையே நன்கு பரவியது. அவர் பழங்காலக் குருட்டு நம்பிக்கைகளை எதிர்த்துப் போராடினார். அவரின் வழித்தோன்றலான திருவாளர் சி. என். அண்ணாதுரை என்பார் தமிழகத்தில் 1967ஆம் ஆண்டு முதல்வராய்ப் பொறுப்பேற்றார்; அவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் பெரும்புலமை பெற்றவர். திராவிடப் பண்பாட்டை உயர்த்துவதற்காகவும், தமிழர் வாழ்வு மறு மலர்ச்சி பெறவும் பாடுபட்டார். அவரின் படியரிசித் திட்டம் சென்னை, கோவை ஆகிய மாவட்டங்களில் செயல்பட்டது. கலப்புமணத் தம்பதியரைச் சிறப்பித்துத் தங்கப்பதக்கம் வழங்கினார். சீரணிப் படையைத் தொடக்கிப் பொதுத் தொண்டில் ஆர்வம் உள்ள ஊழியர்களுக்குச் சேவை செய்யும் நல்வாய்ப்பினை நல்கினார். 1968-ல் இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டைச் சிறப்புறச் சென்னையில் நடத்தினார். உலக வணிகக் கண்காட்சி இவர் காலத்தில் சென்னையில் நடைபெற்றது. மருத்துவக் கல்விக்கும், ஆய்வுக்கும் தனி இயக்கம் ஏற்படுத்திப் பொது நலத்திற்கும், மருத்துவத்திற்கும் தொண்டு செய்யத் தூண்டினார். ஆனால், அவரது குறுகிய காலத்தில் அவரால் நினைத்தது நடக்கவொட்டாமல் இயற்கை அவரை இவ்வுலகினின்றும் பிரித்தது.

திருவாளர் கருணாநிதி 1969ஆம் ஆண்டு முதல்வராய்ப் பொறுப்பேற்றுச் சமூக, பொருளாதார மாற்றங்களைப் புகுத்தினார். மாநிலத் திட்டக் குழுவை நியமித்துப் பயிர்த்தொழிலுக்கும், பாசனத்திற்கும் பல தொண்டுகள் செய்தார். தொழுநோயாளிக்குத் தீவிர சிகிச்சையளித்தல், பார்வையற்றோர்க்குக் கண்ணொளி வழங்குதல், உடல் ஊனமுற்றோர்க்கு மறுவாழ்வு அளித்தல், கைம்பெண்களுக்குத் தையற்பொறி வழங்கி அவர்கள் வாழ்க்கையை வளப்படுத்தல் போன்ற திட்டங்களையும் கொண்டுவந்தார். மனிதனை மனிதன் இழுத்துச் செல்லும் கைவண்டி (ரிக்ஷா) களை ஒழித்து இழிநிலை போக்கினார்.

திருவாளர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் 1977-லும், 1980-லும் தமிழக முதல்வராகப் பொறுப்பேற்று, சமத்துவச் சமுதாயம் காணப் பாடுபட்டு வருகிறார். வாழ்க்கையின் அடித்தளத்திலிருந்து உயர்ந்த இவர், அடித்தள மக்களது துயரங்களை மனத்தில் கொண்டு மதுவிலக்கில் தீவிரமும், புயல், தீ, வெள்ளம் போன்றவற்றால் சேதமுற்ற ஏழையர்க்கு விரைந்து உதவுதலும், ஏழையர்க்குக் கடன் நிவாரணமும், குத்தகைதாரர்களுக்கு விளைச்சலில் 75 பங்கு கொடுக்கச் சட்டமியற்றுவதிலும், ஆழ்கடலில் இறந்துவிட்ட மீனவர் குடும்பங்களுக்கு நிதியுதவி ரூ. 5,000/- வழங்குதலிலும் பிற்பட்டோர்க்கு வழங்கிய 31 விழுக்காட்டினை 50 விழுக்காடாக்கியும் பாடுபட்டு வருகிறார். தன்னிறைவுத் திட்டம் கொண்டுவந்து வேலையற்றோர்க்கு உணவும், கிராம மக்களுக்கு உதவியும் புரிந்தார். நில உச்சவரம்பில் மிச்சமான நிலத்தினை ஏழையர்க்குப் பகிர்ந்தளித்தார். பினாமி நிலங்களைக் கைப்பற்றச் சட்டமியற்றினார். வறுமையில் வாடும் தமிழறிஞர்களுக்கு உதவிப் பணம் வழங்கும் திட்டம் கொண்டுவந்தார். மேலும் ஐந்தாண்டுகளில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கவும் திட்டமிட்டுள்ளார். வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க முயன்று வருகின்றார். பெரியார் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு, அவர் நினைவாகப் பெரியார் மாவட்டம் ஏற்படுத்தியதும், பெரியார் பின்பற்றிய எழுத்துச் சீர்திருத்தத்தை நடைமுறைப்படுத்தியதும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள். ஐந்தாவது உலகத் தமிழ் மாநாடு,1981 சனவரியில் மதுரைமாநகரில் சிறப்புற நடைபெறக் காரணமாயிருந்தார். மதுரையில் உலகத் தமிழ்ச் சங்கமொன்றும், தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக்கழகம் ஒன்றும் தொடங்க ஏற்பாடுகள் செய்துள்ளார். புதிய சட்டக் கல்லூரி ஒன்று திறக்கவும் திட்டமிடப்பட்டுள்ளது. 150 ஆண்டுகட்கு முன்

ஆங்கிலேயரால் ஏற்படுத்தப்பட்ட ரெவின்யூ போர்டு இவரது ஆட்சியில் நீக்கப்பட்டது.

இதுவரை பல முதல்வர்கள் தோன்றி அவ்வக்காலத்து ஏற்படும் தேவைக்கேற்பப் பல மாறுதல்களைக் கொண்டுவந்தனர். அதனால் அவர்களின் அரசியல் அறிவு, மனத்திட்பம், மதிநுட்பம் ஆகியவை புலனாகும். இன்று தமிழகம் பல துறைகளில் தன்னிகரற்று விளங்குவதற்கு அவர்களே காரணமாவர். தமிழர்கள் மேலும் சமூக, பொருளாதார, கலாசார மாற்றங்களை எதிர்நோக்கியுள்ளார்கள். அருங்குணங்கள் கொண்ட முதல்வர்களால் மேன்மேலும் தமிழகம் முன்னேறும் என்பது உறுதி.

## பொருளாதார வளர்ச்சி

இங்கிலாந்தில் 18ஆம் நூற்றாண்டில் நீராவி எந்திரம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு அந்நாட்டுத் தொழில்முறையிலே ஒரு பெரும்புரட்சி ஏற்பட்டது. நீராவி எந்திரத்தைக்கொண்டு பெரிய பெரிய தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன. குடிசைத் தொழிலாக இருந்துவந்த நூற்பும் நெசவும் தொழிற்சாலைகளுக்கு மாறின. ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் தொழிற்சாலைகளில் சரக்கு உற்பத்தியில் ஈடுபடலானார்கள். லாங்காஷயர் என்னும் இடத்தில் நூற்றுக்கணக்கான பருத்தி ஆலைகள் அமைக்கப்பட்டன. அவற்றுள் பணிபுரிந்துவந்த தொழிலாளர் அனைவரும் தொடர்ந்து வேலைவாய்ப்பைப் பெற்றிருக்க வேண்டுமாயின், அத் தொழிற்சாலைகள் தொடர்ந்து வேலை செய்துகொண்டே இருக்கவேண்டும். அவ்வாலைகளுக்கு மூலப் பொருள்களாக உதவிய பருத்தியானது இங்கிலாந்தில் விளைவதில்லை. எனவே, நெய்த ஆடைகளுக்கு ஈடாக இந்தியாவிலிருந்து பருத்தியே ஏற்றுமதியாகத் தொடங்கிற்று. அப் பருத்தியை லாங்காஷயர் ஆலைகள் துணிவகைகளாக மாற்றின. பிரிட்டிஷ் மக்களுக்குத் தேவையான அளவைவிடப் பன்மடங்கு கூடுதலாகவே அங்குத் துணிகள் உற்பத்தியாயின. அத் துணிகளுக்கு நல்லதொரு விற்பனைக் களமாக இந்தியா அமைந்தது. இந்திய மக்களுக்கு வேண்டிய அத்தனை துணிவகைகளையும் லாங்காஷயர் நெய்து குவித்துக்கொண்டிருந்தது. இந்திய நாட்டுச் சந்தையில் இத் துணிகள் பல நுண்ணிய தரங்களிலும், குறைவந்த விலையிலும் கிடைத்துவந்தன. இந்திய அரசாங்கம் ஆங்கிலேயரின் கைகளில் இருந்ததாகையால், இந்தியாவில் நூற்பு, நெசவு ஆலைகள் தொடங்கி நடத்துவதற்குப் பலவகையான தடைகள் விதிக்கப்பட்டன. நுண்ணிய நூல்களாலான 'மல்' துணிகள்நெய்வதற்கும் சிலவகை அழகிய துணிகள் நெய்

வதற்கும் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் சட்டத்தின் மூலம் தடைகள் விதித்திருந்தது. இறக்குமதியான லாங்காஷயர்த் துணிகளைவிடக் குறைந்த விலையில் உள்நாட்டுத் துணிகள் விற்பனையாகி இறக்குமதிக்கு ஊறு விளைக்கக்கூடாதென்பதற்காக உள்நாட்டுத் துணிகளின்மேல் சுங்க (excise) வரியொன்றும் விதிக்கப்பட்டது. இவ் வரியும் துணியின் விலையின்மேல் கூட்டப்பட்டதாகையால் அந்த விலை இங்கிலாந்திநின்றும் இறக்குமதியான துணிகளின் விலையைவிட அதிகமாக ஏற்றங் கண்டது. அதனால் இந்தியர்கள் குறைந்த விலையில் கிடைத்த இங்கிலாந்துத் துணிகளையே வாங்கினார்கள். இந்திய நெசவுத் தொழில் இதனால் நைந்து வரலாயிற்று. பழகிய தொழிலாளர்கள் வேலையின்றி வாடித் தம் குடும்பங்களுடன் பல்வேறு இடங்களுக்கும் குடிபெயர்ந்து சென்று அவலமுற்றார்கள். முரட்டுத் துணிகள் நாட்டில் ஓரளவு தொடர்ந்து உற்பத்தியாகிக் கொண்டிருந்தன. அத்துணிகளுக்குத் தேவையான நூலும் லாங்காஷயரிலிருந்துதான் இறக்குமதியாகிக் கொண்டிருந்தது. நுண்ணாடைகளை நெய்து வந்த ஆயிரக்கணக்கான தறிகள் ஓய்ந்துவிட்டன. இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகிக் கொண்டிருந்த துணிச் சரக்குகளையும், சர்க்கரையையும் இங்கிலாந்திலிருந்து இந் நாடு இறக்குமதி செய்துகொள்ள வேண்டியதாயிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியான பலவகையான சரக்குகளின் மொத்த மதிப்பில் சரிபாதியளவு துணி வகைகளின் மதிப்பேயாகும். இந்தியாவின் இறக்குமதி 1884-89 ஆண்டுகளில் 7,367 இலட்சம் ரூபாவாகவும், அதே ஆண்டுகளில் ஏற்றுமதி 8,864 இலட்சம் ரூபாவாகவும் இருந்தது; 1889-1904 ஆண்டுகளில் இறக்குமதி 8,468 இலட்சமாகவும், ஏற்றுமதி 12,492 இலட்சமாகவும் உயர்ந்துவிட்டன. இவ்வேற்றுமதியனைத்தும் இந்தியாவின் மூலப்பொருள்கள் என்பதை நோக்கும்போது இந்தியத் தொழில்களின் பொருளாதாரம் எவ்வளவு தொலைவு வீழ்ச்சியுற்றது என்பது விளங்கும்.

வாணிகக் கப்பல்களும், இந்திய இரயில் பாதைகளும் பிரிட்டிஷ் முதலாளிகளின் உடைமையாகவே இருந்தன. இவை அவர்களுடைய வாணிகத்துக்குப் பெரிதும் உதவின. இந்தியாவிலிருந்து மூலப்பொருள்களை ஏற்றிச் செல்வதற்குப் பிரிட்டிஷ் கப்பல்கள் இந்தியாவுக்குக் காலியாகவே சில சமயம் வரவேண்டியிருக்கும். அப்பொழுதெல்லாம் அவற்றுக்குப் பாரமேற்றுவதற்கெனவே இங்கிலாந்தில் உற்பத்தியான உப்பை அவற்றில் ஏற்றிக் கொண்டு வந்து இந்தியாவில் விற்பனை செய்வது வழக்கமாக இருந்தது. அதனால் இந்தியாவில் உப்பு உற்பத்தியானது பல

தடைகளுக்கு உட்படுத்தப்பட்டது; அது அரசாங்கத்தின் ஏக போக உரிமையாக்கப்பட்டது. உப்பின் உற்பத்தியும் ஒய்ந்து கிடந்தது. இந்திய இரயில்வேக்கள் ஐரோப்பிய வாணிகத்தின் வளர்ச்சிக்கும், இந்திய வாணிகத்தின் தேய்வுக்கும் ஏற்றவாறு தம் தூக்குக்கூலி விகிதங்களை அமைத்துக்கொண்டன. இந்திய ரூபாவுக்கும் இங்கிலாந்தின் பவுனுக்கும் இடையிட்ட செலாவணி விகிதமானது இங்கிலாந்தின் பொருளாதார நலனுக்கு ஏற்ற வாறு மாற்றியமைக்கப்பட்டது.

## உழவுத் தொழில்

இங்கிலாந்துக்கும் ஏனைய ஐரோப்பிய நாடுகளுக்கும் தேவையானவை பருத்தி, நிலக்கடலை, புகையிலை போன்ற வாணிகப் பண்டங்கள். ஆகையால், நாட்டில் அவற்றின் உற்பத்திக்கு உழவர்கள் அதிகமான ஊக்கம் காட்டி வந்தனர். உணவுப் பயிர்களான நெல், கேழ்வரகு, கம்பு போன்ற தானிய உற்பத்தியில் ஊக்கம் குறைந்து வந்தது. பல்லாயிரம் ஆண்டு களாக உழவில் இருந்துவந்த பயிர்நிலங்களும் தம் வளனை இழந்துவந்தன. பாண்டியர் சோழர் காலத்திலும், விசயநகர மன்னர்கள் காலத்திலும் கட்டப்பட்ட ஏரிகள் தூர்ந்து வந்தன. அவற்றின் வரத்துக் கால்கள் மேடிட்டுப் போயின. பாசனக் கால்வாய்கள் வறண்டு வந்தன. அதனால் உழவுத்தொழிலும் நைந்துவந்தது. பர்மா முதலிய இடங்களிலிருந்து அரிசி இறக்கு மதியாக வேண்டிய நிலையும் ஏற்பட்டது.

பிரிட்டிஷ் கப்பல்கள் கட்டுவதற்கும், இரயில் பாதைகள் அமைப்பதற்கும் வேண்டியிருந்த தேக்க மரங்களும், நூக்க மரங் களும், கருங்காலி மரங்களும் ஆயிரக்கணக்கில் வெட்டி ஏற்றுமதி செய்யப்பட்டன. அதனால் பல்லாயிரம் சதுரக் கிலோமீட்டர் காடுகள் அழிந்துபட்டன. அவற்றுக்கு ஈடாகப் புதிய காடுகளும் வளர்க்கப்படவில்லை.

ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதது இரும்பு உற்பத்தியாகும். தமிழகத்தில் பத்தொன்பதாம் நூற் றாண்டின் தொடக்கம் வரையில் இரும்புத் தொழிற்சாலை ஒன்றேனும் தொடங்கப்படவில்லை; கிராமந்தோறும் கொல் லர்கள் உலைகளை மூட்டி உழவுக்கும் கட்டடங்களுக்கும் தேவை யான கொழுக்கள், கம்பிகள், ஆணிகள், சட்டங்கள், சால்கள், உருளைகள், வாணிகத்துக்குத் தேவையான துலைக்கோல்கள், படிகள், எடைக் கற்கள், வண்டி இருசுகள், மாட்டின் இலாடங்

கள் முதலியவற்றை வடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தனர். தென்னார்க்காட்டில் பறங்கிப்பேட்டையில் 1830-ல் எஃகாலை ஒன்று தொடங்கப்பட்டது; ஆனால், தொடங்கிய விரைவில் மூடப்பட்டுவிட்டது. இரும்புத் தளவாடங்களுக்கு அன்று இந்தியா இங்கிலாந்தில் பர்மிங்காம் வட்டத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்ததைப்போல இன்று தமிழ்நாடானது தன் தேவைகட்கு வடஇந்தியாவில் இயங்கிவரும் தனியார், அரசாங்க இரும்பாலைகளை எதிர்பார்த்துக் கொண்டிருக் கின்றது. சேலம் மாவட்டத்தில் கஞ்சமலைப் பகுதியில் எஃகாலை ஒன்று தொடங்குவதற்கான ஏற்பாடுகள் வெகு மும்முரமாக நடைபெற்றுக்கொண்டு வருகின்றன.

இருபதாம் நூற்றாண்டில் விளைந்த இரண்டு உலகப் போர் களின்போது இந்திய மண்ணில் தொழில்கள் வளருவதற்கான சூழ்நிலைகள் தோன்றின. பகைவர்கள் மேற்கொண்ட நட வடிக்கைகளினால் இங்கிலாந்தின் இந்திய வாணிகத்துக்குப் பல்வகையான இடையூறுகளும் இன்னல்களும் நேர்ந்தன. கோவை, மதுரை போன்ற ஊர்களில் பல நூற்பாலைகளும் நெசவாலைகளும் தோன்றிச் செயல்படலாயின. ஆனால், அவற்றின் முதலீட்டிலோ, நிருவாகத்திலோ தமிழர்கள் மேற் கொண்ட பங்கு மிகமிகக் குறைவுதான். நீராவி எந்திரங்களும், மின் எந்திரங்களும், டீசல் எந்திரங்களும் தமிழ்நாட்டுத் தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்தப்பட்டன. கைவன்மையைக்கொண்டு நடைபெற்றுவந்த பல தொழில்கள் எந்திரமயமாக்கப்பட்டன.

போர்க்காலங்களில் ஏற்பட்ட உணவுப் பற்றாக்குறை யினால் உழவுத்தொழில் வளர்ச்சிக்காகப் பல ஆக்கப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. மான்டேகு-செம்ஸ்போர்டு திட்டத்தின்கீழ்த் திருத்தியமைக்கப்பட்ட இரட்டையாட்சியில் வேளாண்மைத் துறையானது இந்தியரின் கைகட்கு மாற்றிக் கொடுக்கப்பட்டது. அதன் விளைவாய்ப் பல பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றுள் மிகவும் பெரியது மேட்டூர் அணைத்திட்டம். இத் திட்டத்தினால் பல்லாயிரக் கணக்கான நிலங்கள் பாசன வசதி பெற்றன; வறண்ட நிலங் களும், கரம்புகளும் நெல் வயல்களாக மாறின. இவ்வணையில் அமைக்கப்பட்ட நீர்மின் எந்திரங்களாலும், நீலகிரி மாவட்டத் தில் அமைக்கப்பட்ட பைக்காரா, குந்தா நீர்மின் திட்டங்களி னாலும் உற்பத்தி செய்யப்பட்ட நீர் மின்னாற்றல் பல நகரங் களுக்கு வாழ்க்கை வசதிப் பெருக்கத்தை அளித்ததோடு, கிராமங் களில் எல்லாம் கிணறுகளில் நீர் இறைக்கும் பம்புகள் ஓட்டவும்

பயன்பட்டது. இவற்றால் பாசன வசதி பெற்ற உழவு நிலங்கள் பன்னூறாயிரம் எனலாம்.

### சுதந்தரத்துக்குப் பின்

இந்தியா சுதந்தரம் எய்திய பின்பு நாட்டின் பொருளாதாரச் சீரமைப்பில் சுதந்தர அரசாங்கம் முனைப்புடன் இறங்கிற்று. ஆங்கிலேயரின் ஆட்சிக்காலத்தில் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் பல்வேறு துறைகளிலும் குடிவளம் ஏற்றத்தாழ்வுடன் காணப்பட்டதால், நாடு முழுவதிலும் அவ்வப்பகுதிகளின் இயல்புக்கு ஏற்ப ஒரே சமயத்தில் ஏற்றத் தாழ்வின்றி வளர்ப்பதற்காக ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. முதல் ஐந்தாண்டுத் திட்டம் 1951-56 ஆண்டுகளிலும், இரண்டாம் திட்டம் 1956-61 ஆண்டுகளிலும், மூன்றாம் திட்டம் 1961-66 ஆண்டுகளிலும், நான்காம் திட்டம் 1969-74 ஆண்டுகளிலும், ஐந்தாம் திட்டம் 1974-78 ஆண்டுகளிலும் செயல்படுத்தப் பட்டன. 1980-ல் அடுத்த ஐந்தாண்டுத் திட்டம் தொடங்கப் பட்டது. உழவுத் தொழிலின் வளர்ச்சியும் கனரகத் தொழில்களின் வளர்ச்சியும் இத் திட்டங்களின் சீரிய நோக்கங்களாகக் கொள்ளப்பட்டன. தமிழ்நாட்டில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் ரூ. 80 கோடியும், இரண்டாம் திட்டத்தின்கீழ் ரூ. 188 கோடியும், மூன்றாம் திட்டத்தின்கீழ் ரூ. 347 கோடியும், நான்காம் திட்டத்தின்கீழ் ரூ. 559 கோடியும், ஐந்தாம் திட்டத்தின்கீழ் ரூ. 850 கோடியும் செலவாயிற்று.

இத் திட்டங்களின் பயனாய்த் தமிழ்நாட்டில் உழவுத்தொழில் பலமுனைகளிலும் வளர்ச்சியுற்று வந்துள்ளது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்துக்கு முன்பு தொடங்கப்பட்ட பவானிசாகர் நீர்த் தேக்கம் முடிவடைந்த பிறகு வறண்ட நிலங்கள் பல்லாயிரக் கணக்கான ஏக்கர்கள் நன்செய் நிலங்களாக மாறின. சிறு பாசனத் திட்டங்கள் பல நடைமுறைக்குக் கொண்டுவரப் பட்டன. முதல் திட்டத்தின் தொடக்கத்தில் தண்ணீர்ப் பம்புகள் 14,000 ஓடின; 1967-ல் 2.6 இலட்சம் பம்புகள் ஓடிக் கொண்டிருந்தன; உயர்வு 18 மடங்காகும்; உணவு உற்பத்தியும் பெருமளவு பெருகியுள்ளது. ஆங்கிலேயர் ஆட்சியில் இரசாயண உர உற்பத்திக்குவேண்டிய திட்டங்கள் அமைக்கப்படவில்லை. சுதந்தரத்துக்குப் பிறகு இரசாயன உர உற்பத்தியாலைகள் பல இடங்களில் தோன்றி உழவுக்கு ஆன உரத்தை வழங்கி வருகின்றன. வேளாண் மக்கள் கோவை, தஞ்சை மாவட்டங்களில் ஏருந்து (டிராக்டர்) என்னும் எந்திர சாதனத்தைக் கொண்டு நிலங்களைப் பண்படுத்தும் முயற்சியைப் பெருவாரியாகக் கையாண்டு வருகிறார்கள்.

கோவை, மதுரை ஆகிய இடங்களில் நடைபெற்றுவரும் நூற்பாலைகளும் நெசவாலைகளும் மக்களுக்குத் தேவையான துணி வகைகளை உற்பத்திசெய்து வருகின்றன. சென்னையில் உற்பத்தியாகும் 'பின்னி' துணி வகைகள் அயல்நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. கைத்தறி நெசவாளர்கள், ஆண்களும் பெண்களும் ஆகிய இருபாலரும் விரும்பி உடுக்கக்கூடிய துணி வகைகளை உற்பத்தி செய்து வருகிறார்கள். கைத்தறித் துணிகளை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கென அரசாங்கம் பல முயற்சிகள் எடுத்து வருகின்றது. சுதந்தரத்துக்கு முன்பு சோம்பிக் கிடந்த கைத்தறிகள் இப்போது விறுவிறுப்புடன் ஓடிக் கொண்டிருக்கின்றன. இத் தொழிலில் கிடைக்கும் இலாபம் தரகர்களின் கைக்கு மாறிக் குவியாதபடி நெசவாளர்கட்குக் கூட்டுறவு நிறுவனங்கள் பல முகங்களில் உதவிவருகின்றன.

தமிழ்நாட்டில் சென்ற இருபது ஆண்டுகளில் மத்திய அரசாங்கம் பல பெரிய உற்பத்தித் திட்டங்களை நிறுவியுள்ளது. அவற்றுள் மிகவும் பெரியது நெய்வேலிப் பழுப்பு நிலக்கரித் திட்டமாகும். அதன் மூலதனம் ரூ. 182 கோடி. இங்குக் கிடைக்கும் நிலக்கரியைக் கொண்டு மின்சாரம், செயற்கை உரம், அடுப்புக் கரி ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. இங்கு வெட்டி எடுக்கப்படும் வெண்ணிறக் களிமண்ணினால் பீங்கான் பாத்திரங்களும் மின்தடை சாதனங்களும் (insulators) செய்யப்படுகின்றன. சென்னையில் இணைப்பு இரயில்பெட்டித் தொழிற்சாலை, எண்ணூர் அனல்மின்சார நிலையம், திருவெறும்பூர் உயர் அழுத்தக் கொதிகலன் தொழிற்சாலை, ஆவடி டாங்கித் தொழிற்சாலை, மணலி மண்ணெண்ணெய் சுத்தி செய்யும் தொழிற்சாலை, கல்பாக்கம் மின்அணு நிலையம் முதலிய பெரிய திட்டங்கள் உற்பத்தியில் ஈடுபட்டுவருகின்றன.

தமிழ்நாடு முழுவதிலும் ஆங்காங்கு ஏராளமான தொழிற்பேட்டைகள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றில் நூறாயிரக் கணக்கான பேர் வேலைவாய்ப்புப் பெற்றுள்ளனர்; ஆண்டு தோறும் கோடிக் கணக்கான ரூபா மதிப்புள்ள சரக்குகள் உற்பத்தியாகின்றன. பல்வேறு தொழில்களில் மக்களுக்குப் பயிற்சியளிப்பதற்காக எல்லா மாவட்டங்களிலும் தொழில் நுட்பப் பள்ளிகள் தொடங்கப்பட்டுள்ளன.

தமிழ்மக்கள் பன்முகப் பொருளாதாரத் திட்டங்களில் ஒத்துழைத்து வருகின்றனர். எனினும் அவர்கள் கூட்டுறவும் முயற்சியும் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் போதா

முந்நூறு ஆண்டுகளாக அவர்கள் அரசாங்கத்தின் ஆதரவையே எதிர்பார்த்துக்கொண்டு கிடந்தார்கள். ஆகையால், அவர்களுக்கு இயல்பாக இருந்துவந்த சுறுசுறுப்பும், தன்னம்பிக்கையும், நீண்ட நோக்கும் மங்கிக்கிடந்தன; இப்போதுதான் அவர்கள் உறக்கத்தினின்றும் விழித்து வருகின்றனர்.

இந்தியா மிகப் பழையதொரு நாடாகையால் பல்லாயிரம் ஆண்டுகளாகவே மக்கள் அனுபவித்து வந்துள்ள சொத்துரிமை இயல்பில் மிகவும் ஆழ்ந்த உயர்வு நிலைகள் ஏற்பட்டு வந்துள்ளன. தமிழ்நாடு இந் நிலைக்கு ஒரு விலக்கு அன்று. சங்க காலத்தை யடுத்து உருவான பல்வேறு அரசியல் நிலைகளில் நாட்டில் பல பெரும் குடிப்பெயர்ச்சிகளும், போர்த் தொல்லைகளும் நிகழ்ந்துள்ளன. களப்பிரர் காலத்தில் நில உரிமைகளும் தானங்களும் அரசரால் பறிக்கப்பட்டனவென்று வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்கள் காலத்தில் வடநாட்டிலிருந்து பல்லாயிரக்கணக்கில் தமிழ் நாட்டில் புகுந்து குடியேறிய பிராமணருக்குத் தனித்தனிக் கிராமங்களும், கோயில் வழிபாட்டு உரிமையும், கோயில் நிலங்களை நிருவகிக்கும் பேருரிமைகளும் வாரிவழங்கப்பட்டன. இக் கிராமங்களும், நிலங்களும் ஏற்கெனவே பிற தமிழ்க் குடிமக்களின் உடைமைகளாக இருந்து வந்தவையாம். அவற்றைப் பிராமணரின் கைக்கு மன்னர்கள் மாற்றிக்கொடுத்தனர். மற்றும், பின் வந்த காலங்களில் ஆங்காங்குப் போர்த்தொழிலில் ஈடுபட்டிருந்த படைத்தலைவர்கள் கிடைத்த வரையில் நிலங்களை வளைத்துக் கொண்டனர். தமிழ்நாட்டில் சில இடங்களில் வேடர்களும், வழிப்பறி கொள்ளைக்காரரும் ஆங்காங்குக் குடியமர்ந்து நிலங்களைக் கைப்பற்றி வேளாண்மைத் தொழிலில் ஈடுபடலானார்கள். ஆயிரக்கணக்கான வேலி நிலங்கள் கோயில்களுக்கும் மடங்களுக்கும் தானமாக அளிக்கப்பட்டன.

நாளடைவில் நில உரிமைகள் அடிக்கடி கைக்குக் கை மாறி வந்ததுண்டு. எனவே, இவ் விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்நாட்டில் சில மாவட்டங்களில் உழவுநிலங்கள் யாவும் ஒரு சிலர் கைகளிலேயே குவிந்துவிட்டன. கோவை, தஞ்சை, தென்னார்க்காடு மாவட்டங்களில் தனியார்களும், கோயில்களும், மடங்களும் ஆயிரக்கணக்கான வேலி நிலங்களை உடைமையாகப் பெற்றிருந்ததுண்டு. இக் காரணத்தால் உழவுத் தொழிலில் வாணாள் முழுவதும் கூலி வேலை செய்தே பிழைத்து வந்த தொழிலாளர்கள் தம் கைவன்மையை நம்பிப் பிழைக்க வேண்டியவர்களாக இருந்தனர்; நிலத்துக்குச் சொந்தக்காரர்கள்

தம்தம் நிலங்களில் பெற்ற வருமானத்தைக்கொண்டு பெரிய பெரிய நகரங்களில் குடியேறி இன்பவாழ்க்கை துய்த்து வரலானார்கள். அவர்கள் தம் நிலங்களுக்கு ஊட்டங்கொடுத்துத் தரமான விதைகளை விதைத்து விளைவைப் பெருக்குவதற்கு ஊக்கங் காட்டினார்கள் இல்லை. நிலவரி தண்டுவதற்காகவே நாயக்க மன்னர்களாலும் ஆங்கிலேயராலும் நியமிக்கப்பட்ட ஜமீன்தாரர்களும், ஜாகீர்தாரர்களும் தாமும் முடிசூடிய மன்னர்களைப் போலவே நாடாண்டு, அளவற்ற பகட்டிலும் ஆடம்பரத்திலும் வாழ்க்கையைப் போக்கிவந்தனர். குடிவளத்தின் வளர்ச்சியில் அவர்கள் சிறிதேனும் கருத்தைச் செலுத்தவில்லை.

இந்தியா சுதந்தரம் அடைந்த பிறகு நில உரிமைகள் ஒரு சிலர் கைகளில் குவிந்து கிடந்ததையும், பெரும்பாலரான உழவர்கள் தமக்கென உழவு நிலங்கள் இன்றியே தவித்துக்கொண்டிருப்பதையும் ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டிய பொறுப்பு அரசாங்கங்களுக்கு ஏற்பட்டது. தமிழ்நாட்டு அரசாங்கம் ஒரு சட்டத்தின் மூலம் நிலவுடைமைக்கு உச்சவரம்பு ஒன்று விதித்தது. அதன்கீழ்க் குடிமக்கள் யாவரும் பதினைந்து ஏக்கர்களுக்குமேல் உரிமை கொண்டாட முடியாது என்று திட்டம் வகுக்கப்பட்டது. நிலமின்றி வருந்திக்கொண்டிருந்த குடிமக்களுக்கு நிலங்கள் பங்கீடு செய்யப்பட்டு வருகின்றன.

தமிழ்நாட்டில் குடிநலச் சமுதாயம் ஒன்று உருவாவதற்கு வேண்டிய அரசியல் திட்டங்கள் பல வகுக்கப்பட்டு வருகின்றன. பல கோயில்களும் மடங்களும் தம் வருமானத்தைக் கல்வி வளர்ச்சியிலும், சமயத் தொண்டுகளிலும், இலக்கியப் பெருக்கத்திலும் திருப்பிவிட்டிருக்கின்றன. ஆயுள் காப்பீட்டுக் கழகங்களும்,வங்கிகளும் இந்திய அரசால் நாட்டு உடைமைகளாக்கப்பட்ட பிறகு, அவற்றினிடம் முடங்கிக் கிடந்த நிதிகள் குடிவளர்ச்சியின் ஆக்கப்பணிகளுக்குச் செலவிடும் திட்டங்களில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. சாலை அமைப்பானது விரிவாகி உள்நாட்டுக் கிராமங்களுக்கெல்லாம் பயன் அளித்து வருகின்றது, ஏறக்குறைய, தமிழ்நாட்டுக் கிராமங்கள் அனைத்தினுக்குமே இப்போது மின்னாற்றல் அளிக்கப்பட்டுவிட்டது. குடிசைகளுக்கு மின்வழங்கும் திட்டமும் செயல்பட்டு வருகின்றது. அதனால் கிராமங்களில் குடிநீர், பாசனநீர் வசதிகளும், சிறுதொழில் நிறுவனங்களும் பெருகிவருகின்றன.

உள்நாட்டு நூலக நிறுவனம் அமைக்கப்பட்ட பிறகு கிராமங்கள் எல்லாவற்றிலும் விரும்பிய நூல்களை வாங்கிப்

படித்துப் பயன்பெறும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. வானொலியும், செய்தித்தாள்களும், திரைப்படங்களும் எட்டாத கிராமங்களே தமிழகத்தில் இல்லை எனலாம். சென்னையில் தொலைக்காட்சி அமைக்கப்பட்டுள்ளது. மற்ற இடங்களிலும் விரைவில் அமைக்கப் படலாம். குடிநல வளர்ச்சி, சமுதாய வாழ்க்கைச் சீர்திருத் தங்கள் ஆகிய எல்லாத் துறைகளிலுமே இந்தியா முழுவதிலும் தமிழ்நாடு தலையாய இடத்தில் நின்றுவருவது குறிப்பிடத் தக்கது. தமிழ்நாட்டில் மக்கள் வாழ்க்கையை அரிக்கக்கூடிய அல்லது பிளக்கக்கூடிய தீய பூசல்களோ, சுயநல இயக்கங்களோ காணப்படாமை பெரிதும் பாராட்டக் கூடியதாகும். அஃதுடன் அவ்வப்போது அமைந்துவரும் அரசாங்கங்களும் பெரும்பாலான குடிமக்களின் ஆதரவைப் பெற்று உறுதியாக இயங்கி வந்துள்ளன. ஆகையால், அரசியலில் குழப்பங்களும், திடீர்த் திருப்பங்களும் ஏற்படுவதில்லை. குடிநல வளர்ச்சிக்கும், பொதுநலச் சமுதாயத் திட்டங்கள் வெற்றியுடன் செயல்படுவதற்கும் இது நல்ல, ஏற்ற தொரு சூழ்நிலையாகும்.

கல்வி வளர்ச்சியில் மிகப் பெரியதொரு முன்னேற்றம் காணப் படுகின்றது. கலைக் கல்லூரிகளும், மருத்துவக் கல்லூரிகளும், பொறியியற் கல்லூரிகளும், பள்ளிகளும், உயர்தரக் கல்வி நிலையங்களும் சென்ற ஐந்தாறு ஆண்டுகளில் பன்மடங்கு பெருகி வந்துள்ளன. தமிழ்நாட்டில் இப்போது வேளாண்மை வளர்ச்சிக் கெனத் தனியாக வேளாண்மைப் பல்கலைக்கழகம் ஒன்று கோயமுத்தூரில் தொடங்கப்பட்டுள்ளது. பேரறிஞர் அண்ணா தொழில்நுட்பப் பல்கலைக்கழகம் ஒன்றும் சென்னையில் தொடங்கப்பட்டுள்ளது. கோவையில் பாரதியார் பெயரில் பல்கலைக்கழகம் ஒன்றும், திருச்சிராப்பள்ளியில் பாரதிதாசன் பெயரில் பல்கலைக்கழகம் ஒன்றும் தொடங்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

அடிமை நிலையினின்றும் விழித்தெழுந்து, சுதந்தரம் பெற்றுப் புதிய குடி உரிமைகளை அனுபவிக்கத் தொடங்கும் மக்கள் இன்பங்களைக் காண்பதும், அவற்றை உழைப் பின்றியே துய்க்க அவாவுவதும், அதற்காக அவர்கள் முயன்று வெற்றி பெறுவதும், தம் முயற்சியில் தோற்றவர்கள் துவண்டு போவதும் இயல்பேயாம். இது மக்கள் சமுதாயத்தைப் பற்றும் நோய்களுள் ஒன்றாகும். இந் நோய் தமிழ்நாட்டுச் சமுதாயத்தை யும் பற்றிக்கொண்டிருக்கின்றது. வரலாறு ஒருமுறைதான் நிகழ்கின்றது. கிடைத்த வாய்ப்பைக் கைப்பற்றுவதும், நழுவ விடுவதும் குடிமக்கள் கைகளிற்றான் உள்ளது; இதைத் தமிழர்

நன்கு உணர்ந்துகொண்டு தம் வாழ்க்கையைச் சீரமைத்துக் கொள்ளும் பண்புடையவர்கள் என்று வரலாறு சான்று பகர்வதை நாம் அறிவோம்.

நகர வாழ்க்கை, உணவு விடுதிகள், இரயில்கள், விமானங்கள், பேருந்துகள் போன்ற போக்குவரவு வசதிகள், பல்கலைக்கழக வாழ்க்கை, போர்க்கால உணவுப் பங்கீட்டு முறைகள், குழாய்த் தண்ணீர், ஆங்கில மருத்துவம், கோயில் திருவிழாக்கள் முதலியவற்றால் மக்கள் வாழ்க்கையில் மாறுதல்கள் பல அவ்வப்போது ஏற்பட்டுள்ளன. ஆனால், இன்னும் திருமணக் கலப்புகள் பெருவாரியாக நிகழவில்லை. குலம் கோத்திரம் அறிந்து பெண் கொடுத்து வாங்கலும், இயன்றவரை பழைய உறவையே நத்தி வருவதும் ஆகிய பழம் மரபுகளும் தொடர்ந்து வழக்கில் இருந்து வருகின்றன. எனினும், கலப்பு மணங்கள் ஆங்காங்கு நடைபெற்று வருகின்றன. அரிசனப் பெண்ணை மணந்துகொள்ளும் ஏனைய குலத்து ஆடவருக்குத் தமிழ்நாட்டு அரசு பல சலுகைகள் அளிக்க முனைந்துள்ளது.

தமிழ்நாட்டில் மலையாளிகள், தெலுங்கர், கன்னடியர் ஆகியவர்கள் பெரும் எண்ணிக்கையில் தமிழருடன் கலந்து உறவாடி வாழ்ந்து வருகின்றனர். ஆகவே, தம்முடைய முன்னேற்றப் பாதையில் தமிழர்கள் சிறுபான்மையினரையும், பின்தங்கிய மக்களையும், உடனழைத்துக்கொண்டு மேற்செல்ல வேண்டிய பொறுப்புடையவர்களாக உள்ளனர். அவர்களுடைய நலன்களுக்கு ஊறு ஏதும் நேரிடாதவாறும், தமக்குற்ற நலன்கள் அத்தனையையும் அவர்களும் நுகருமாறும் நடந்துகொள்ளத் தமிழர்கள் கடமைப்பட்டுள்ளனர். தமிழரின் வரலாறு எடுத்துக் காட்டும் அறமும் பண்பும் இஃதேயாம். யவனருக்கு இடங் கொடுத்து, ஆரியரை வரவேற்று, முஸ்லிம்களுக்கும் ஐரோப்பியருக்கும் வாழ்க்கை நலன்களை வழங்கிப் பல மரபுகளுக்குரித்தான கலைகளைத் தமக்கும் உரிமையாக்கிக் கொண்டு, தமிழ்ப் பண்பாடுகளை உலகிற்கும் வழங்கி 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்னும் மேலாம் மனிதகுலப் பண்பாட்டைக் கைவிடாமல் தொடர்ந்து, காலங்கடந்து வளர்ந்து வருவது தமிழரின் நாகரிகமாகும்.

## இருபதாம் நூற்றாண்டில் தமிழின் நிலை

### தமிழ் இலக்கியம்

இருபதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் பல துறைகளிலும் புத்துணர்ச்சி பெற்று வளர்ந்து வருகின்றது. நூல்கள் உரை

நடையிலும், செய்யுள் வடிவிலும் இயற்றப்படுகின்றன. அந்நிய மொழி இலக்கியங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. விஞ்ஞான இலக்கியமும் தமிழில் வெகு வேகமாக வளர்ந்து வருகின்றது.

பூண்டி அரங்கநாத முதலியார் பழம்மரபு வழுவாமல் கச்சிக் கலம்பகம் என்னும் நூலை இயற்றி வெளியிட்டார். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை மனோன்மணீயம் என்னும் ஒரு கவிதை நாடகம் எழுதினார். சிறந்த நாடகக் கூறுகளும், இலக்கியச் சுவையும், மெய்ப்பாடுகளும் ஒருங்கே அமைந்த நாடகப் படைப்பு இது. முதன்முதல் கவிதை வடிவில் எழுந்த நாடகமும் இதுதான். இது பல அரங்கங்களில் நடிக்கப்பட்டு வருகின்றது; திரைப்படமாகவும் வெளிவந்துள்ளது. மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் பழஞ்சுவடிகள் பலவற்றை ஆராய்ந்து சங்க நூல்கள் சிலவற்றையும், வேறு நூல்களையும் பதிப்பித்தார். தமிழாராய்ச்சி மாணவருக்கும் பயனாகுமாறு அமைக்கப்பட்ட இவரது பதிப்பை மிஞ்சக்கூடிய பதிப்பு வேறுஒன்று வந்திலது.

வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் பல தமிழ்நூல்களுக்கு அரிய உரைகள் இயற்றினார். தாம் பதிப்பித்த நூல்களில் காணப்பட்ட இலக்கிய இலக்கண நுண்பொருள்களை ஆய்ந்தெடுத்துக் கொடுக்கும் அரிய ஆற்றலுடையவர் இவர். தமிழ் கற்கும் மாணவர்கட்கு இவருடைய உரையைப்போலப் பயன்பாடுடைய பிறிதோர் உரையைக் காண முடியாது.

அட்டாவதானம் வீராசாமி செட்டியார் விநோதரசமஞ்சரி என்னும் கதைத் தொகுப்பு ஒன்றை வெளியிட்டார். இவர் கையாண்டுள்ள உரைநடை பயிலுந்தோறும் இன்பம் பயப்பது. ஆ. சிங்காரவேலு முதலியார் அபிதான சிந்தாமணி என்னும் கலைக்களஞ்சியம் ஒன்றை எழுதி வெளியிட்டார்.

ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் பயன்படத்தக்க பல நற்பணிகளைச் செய்தவர் பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் ஆவார். எழுத்துக் கற்கத் தொடங்கும் குழந்தைகள் முதல் கல்லூரி மாணவர்கள் வரையில் பயிற்சிப் பாடநூலாகப் பயன்படுத்தி வந்த நூல்கள் பல இவருடைய படைப்புகளாகும். கண்கவரும் புதிய அச்செழுத்து வடிவங்களையும் இவர் தமிழ் மொழிக்குத் தந்துள்ளார். நமச்சிவாய முதலியார் பல புலவர்களுக்குப் புரவலராகவும் வாழ்ந்தவர்.

பாண்டித்துரைத்தேவர் தொடங்கிய மதுரைத் தமிழ்ச் சங்கம் பல தமிழ்நூல்களைப் புதிய பதிப்புகளில் திருத்தமாக வெளியிட்டுப் புகழ் பெற்றது. ரா. இராகவையங்கார், மு. இராக வையங்கார் என்ற இரு தமிழ்ப் புலவர்கள் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் பல அரிய தொண்டுகள் புரிந்து வந்துள்ளனர். எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை, வி. கனக சபை பிள்ளை ஆகியவர்கள் தமிழ் இலக்கிய வரலாறுகள் ஆங்கிலத்தில் இயற்றியுள்ளனர். பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், கா. சுப்பிரமணிய பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார் முதலியோர் புரிந்த அரிய தமிழ்த்தொண்டுகள் மிகவும் அண்மைக் காலத்தன வாகையால் அவற்றை ஈண்டு விரித்துக் கூறவில்லை.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே இரு பெரும் தமிழறிஞர்கள் தமிழ் வளர்ப்பதிலேயே தம் வாணாளைக் கழித்தார்கள். ஒருவர் மறைமலையடிகள்; மற்றவர் திரு. வி. கலியாணசுந்தரனார் ஆவர். வடமொழிக் கலப்பற்ற தமிழ் நடைகளை இம் முதுபெரும் புலவர்கள் இருவரும் தம் நூல் களில் வெற்றியுடன் கையாண்டு வந்தனர். அவர்கள் தமிழுலகில் தோன்றிய வரையில் தமிழரின் எழுத்து வழக்கிலும், பேச்சு வழக்கிலும் பயின்று வந்த பல தேவையற்ற வடமொழிச் சொற் களை அறவே அகற்றிவிட்டு, அவற்றுக்கு இணையாகத் தூய தமிழ்ச் சொற்களை அமைத்துக் கொடுத்தனர். அவர்கள் தாமும் பல நூல்களைத் தூய தமிழ்ச்சொற்களில் எழுதி வெளியிட்டுள் ளனர். திரு. வி. கலியாணசுந்தரனார் தொழிலாளர் நல இயக்கத்தின் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டவர். அவர் தொழிலாளருக்கு ஆற்றிவந்த சொற்பொழிவுகளில் சிறுசிறு எளிய தீந்தமிழ்ச் சொற்களும், ஆழ்ந்த கருத்துகளும், தெளிவும், ஓட்டமும், புரட்சிப் புதுமைகளும் பொதிந்து கிடக்கும். மிகவும் குறுகிய சொற்றொடரைக் கையாண்டு சொற்பொழிவாற்றி, அன்பினாலும் ஆதரவினாலும் தொழிலாளரின் உள்ளத்தைத் தொட்டது இவரிடம் வாய்க்கப் பெற்றிருந்த ஆற்றலாகும். கலியாணசுந்தரனார் வெளியிட்டு வந்த 'நவசக்தி' என்ற வார இதழ் பைந்தமிழ்ப் பூஞ்சோலையாகவே மிளிர்ந்தது. 'படித் தோர் சிந்தை உவகையெனும் பரவை குளிப்பப் பசுந்தமிழை வடித்தே எழுதும் நவசக்தி எனும் பேர் வாரப் பத்திரிகை' என்று பண்டிதை அசலாம்பிகை அம்மையார் தாமியற்றிய காந்தி புராணத்தில் புகழ்ந்து பாடுகின்றார். கலியாணசுந்தரனார் வழி யில் தொடர்ந்து செல்லும் இளைஞர் சமுதாயம் ஒன்று தமிழ் வளர்ச்சியில் ஈடுபட்டு வருகின்றது.

இவ்விருபதாம் நூற்றாண்டில் வியப்பூட்டும் இலக்கியப் பணியைச் செய்தவர் பண்டிதை அசலாம்பிகையம்மையார் ஆவார். இவர் காந்தி புராணம், திலகர் மான்மியம், வள்ளலார் சரித்திரம் ஆகிய நூல்களை ஆக்கியுள்ளார். இவற்றில் வரும் செய்திகள் அனைத்தும் இக்காலத்தவை. ஆனாலும், பழைய இலக்கிய இலக்கண மரபு வழுவாது இந் நூல்கள் ஆக்கப் பட்டுள்ளன. காந்தியடிகளாரைப் பின்பற்றி, இந்திய தேசியப் போராட்டங்களில் கலந்துகொண்டு வீரச்செயல்கள் புரிந்த தலைவர்களையும், காந்தியடிகளின் அறப்போரையும் அம்மை யார் பாடியுள்ள சிறந்த முறையானது தமிழ் இலக்கியத்தைப் பல படிகள் உயர்த்திவிட்டதெனலாம்.

கோ. வடிவேலு செட்டியார், உயர்நிலைப்பள்ளி யொன்றில் தமிழாசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தவர்; 'லோகோ பகாரி' என்றொரு வார ஏட்டை வெளியிட்டு வந்தார். இவர் வேதாந்தத் துறையில் சீரிய தொண்டுகள் புரிந்து வந்தார். பல வேதாந்த நூல்கள் எழுதியுள்ளார். இவருடைய திருக்குறள் பதிப்பு மிகச் சிறந்ததொன்றாகக் கருதப்பட்டு வருகின்றது. கல்வியறிவு இல்லாத மிக எளிய மக்களும் கேட்டுப் பயன்பெறு மாறு சொற்பொழிவாற்றும் ஒப்பற்ற திறன் இவருக்கு உண்டு. இவரிடம் தமிழ் பயின்றவர்கள் பலர் தமிழ்த் துறையில் சிறப் புடன் விளங்கினார்கள்.

அறிவுத் துறையில் எப்படியில் நின்றவர்களும், எச்சமயத் தவரும், எம்மொழியினரும் தம் சொல்லைக் கேட்பராயின் அவர்களைப் பிணித்து ஈர்க்கக்கூடிய நாநலம் வாய்ந்து விளங்கி யவர் திருக்கோவலூர் ஆதீனத்துத் தலைவர் சிவசண்முக மெய்ஞ்ஞான பரமாசாரிய ஞானியார் அடிகள் ஆவார். இவர் சொற்களை அளவறுத்துப் பேசும் ஆற்றல் வாய்ந்தவர். சமயம், தமிழ் இலக்கியம் ஆகிய துறைகளில் ஆழ்ந்த அறிவும் ஆய்வும் ஆயிரக்கணக்கான மக்களின் உள்ளங்களையும் கவரக்கூடிய 'கணீர்' என்ற குரலும் இவர் படைத்திருந்தார். இவர் ஆங்கிலப் பயிற்சியும், ஆழ்ந்த வடமொழிப் புலமையும் பெற்றிருந்தார். இவர் தொடர்ந்து பலமணி நேரம் பேசினாராயினும், மக்கள் இவர் பேச்சுக்குக் கட்டுண்டு காலங்கழிவதையும் மறந்துவிடுவ துண்டு. ஞானியாரின் வாய்ச்சொற்கள் முழுமையானவை, இனிமையானவை, எளியவை, மங்கலமானவை. தம் தமிழ்ச் சொற்பொழிவுகளில் வடமொழி, ஆங்கில நூல்களிலிருந்து மேற் கோள்கள் எடுத்துக்காட்டிப் பேசுவது இவருடைய தனிச்சிறப் பாகும்; குழந்தைகள், இளைஞர்கள் ஆகியவர்களிடம் பரிந்து

பேசி இலக்கியப் பற்றையும், சமயப் பற்றையும் அவர்களுக்குப் புகட்டும் திறன் இவருக்கு உண்டு.

காந்தியடிகளார் தொடங்கிய அறப்போரில் பல தேசிய வீரர்கள் முழுமூச்சுடன் இறங்கினார்கள். அவர்களுள் வ. உ. சிதம்பரம்பிள்ளை, கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் ஆகிய இருவரும் முன்னணியில் நின்றவர்கள். சிதம்பரம்பிள்ளை 'கப்பலோட்டிய தமிழர்' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றுள்ளார். ஆங்கிலேயரின் ஆணைகளை எதிர்த்து நின்று தாமே சொந்தமாகக் கப்பல்கள் வாங்கி ஓட்டிச் சிறை சென்றார். அரசியலில் ஈடுபட்டவராயினும் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியில் இவர் பெரிதும் ஈடுபட்டிருந்தார்.

சுப்பிரமணிய பாரதியார் தமிழ் இலக்கியத்துறையில் பெரும் புரட்சி ஒன்றையே தோற்றுவித்து என்றும் பொன்றாத புகழைப் பெற்றுவிட்டார். காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கம் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது சுதந்தர வேட்கையைத் தூண்டிவிடக்கூடிய பல பாடல்களைப் பாடித் தமிழரை அடிமை உறக்கத்தினின்றும் தட்டி எழுப்பினார். இவருடைய தேசியப் பாடல்களும், கண்ணன் பாட்டுகளும், பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு ஆகிய கவிதைகளும் தமிழரின் உள்ளத்தில் என்றும் அழியா இடம் பெற்றுவிட்டன. அமெரிக்கக் கவிஞரான வால்ட் விட்மேன் படைத்தளித்துள்ள உரைநடைச் செய்யுள்களைப் பாரதியாரும் எழுதியுள்ளார். 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே, இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே; எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே' என்று தொடங்கும் பாட்டினால் தமிழ்மொழிக்குச் சிறந்ததோர் ஏற்றஞ் செய்ய வந்தவர் பாரதியார். சித்தர்களும், இராமலிங்க அடிகளாரும் கையாண்ட புதிய செய்யுள் முறைகளைப் பாரதியாரும் கையாண்டு தம் உணர்ச்சிப் பெருக்கையும், எண்ணங்களின் செறிவையும் அவை ஏந்தி நடக்குமாறு பாடல்கள் பாடினார். சக்தி வழிபாட்டில் பாரதியாருக்கு நல்ல ஈடுபாடு உண்டு.

பாரதியாரின் வழியில் வந்த தேசியக் கவிஞர்களுள் தலை சிறந்தவர் நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை அவர்களாவார். காந்திய இயக்கத்துக்குப் புத்துணர்வு ஊட்டி மக்களைத் தேசப் பணியில் ஈடுபடச் செய்த அவரது பாடல்கள் நெஞ்சை உருக்கும் தகையனவாகும். காந்திஜியை வள்ளுவரின் வடிவாகக் கண்டு அவர் காந்தியைப்பற்றியும், காந்தியத்தைப்

பற்றியும் பாடிய பாடல்கள் எண்ணிறந்தன. அவரது பாடல் களில் எளிமையும், இனிமையும், காந்திய மணமும் ஒருங்கே கமழும். 'அவளும் அவனும்', 'மலைக்கள்ளன்' போன்ற நாவல் களையும் அவர் இயற்றியுள்ளார். திருக்குறளுக்குப் புதிய முறையில் அவர் ஓர் உரை செய்துள்ளார்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் தெள்ளத் தெளிந்த தமிழில் எளிய சிறுசிறு பாட்டுகள் பாடியவர். குழந்தைகளுக்கெனக் கொஞ்சு மொழியில் இவர் பல பாட்டுகள் இயற்றியுள்ளார். சர் எட்வின் ஆர்னால்டு என்ற ஆங்கிலேயக் கவிஞர் புத்தரைப்பற்றி ஆங்கிலத்தில் இயற்றிய 'ஆசிய ஜோதி', என்னும் நூலையும், பாரசீக மொழியில் உமார்கய்யாம் என்பார் பாடிய 'ருபாயத்' என்னும் நூலையும் தேசிகவிநாயகம் பிள்ளை தமிழில் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்துள்ளார். இவற்றை மொழிபெயர்ப்புகள் என்றே கூறமுடியாது; பிற மொழிக் கவிதைகளின் தழுவல் என்றும் கூறமுடியாது. இலக்கிய நயம், பொருளாழம், பா நலம் ஆகியவை, இவருடைய கவிதை களில் ஒருங்கே பொலிவுறுகின்றன. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையும், நாமக்கல் இராமலிங்கம் பிள்ளையும் பாரதி யாருடன் ஒரு நிலையில் ஒப்பிடப்பட்டுச் சிறந்த தேசியக் கவிஞர்களாகக் கருதப்படுபவர்களாவர்.

தமிழ் இலக்கிய உலகில் மாபெரும் புரட்சியை விளைவித் தவர் பாரதிதாசன் ஆவார். இவருடைய பாடல்களில் விழுமிய, முழுமையான, பண்ணார்ந்த தமிழ்ச் சொற்கள் கோக்கப்பட்டிருப்பது ஒரு தனிச் சிறப்பாகும். பெண்ணலன் களைப்பற்றியும், காதற் சிறப்பைப்பற்றியும் இனிக்க இனிக்கப் பாடியவர் பாரதிதாசன். தமிழ்ச் சமுதாயத்தில், நூற்றுக் கணக்கான சிறு தெய்வங்கள், எண்ணற்ற கண்மூடிப் பழக்கங் கள், பொருளற்ற மரபுகள் மலிந்து கிடப்பதைப் பாரதிதாசன் வன்மையாகக் கடிந்து பல பாடல்கள் பாடியுள்ளார். இவர் பாடிய காவியம் ஒன்று திரைப்படமாக்கப்பட்டுள்ளது. இவரு டைய பாட்டுகளுள் பல திரைப்பட இசையில் முழங்கி வருகின்றன.

பொதுமக்களும் எளிதில் படித்துப் பொருள் விளங்கிக் கொள்ளும் அளவுக்குச் சங்க நூல்களுக்கு உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையும், பொ. வே. சோமசுந்தரனாரும் உரைகள் எழுதியுள்ளனர்.

மறைமலையடிகளாருக்குப்பின் தனித்தமிழ் வளர்ப்பதில் முனைந்து நின்றவர் ஞா. தேவநேயப் பாவாணர். இவர் கட்டுரை, உரை நூல், ஆராய்ச்சிநூல், மொழியியல் நூல்கள் பல எழுதித் தமிழ்ப் பணி புரிந்துள்ளார். 'மொழிப் பேரறிஞர்' எனப் பலராலும் போற்றப்படும் இவரால் ஆக்கப்பட்டுள்ள 'செந் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி' யை வெளியிடுவதில் தமிழக அரசு முனைந்துள்ளது.

தமிழ்நாட்டின் ஆட்சிமொழியாகத் தமிழ் திகழ்வதால் அலு வலகங்களில் குறிப்புகளும் வரைவுகளும் தமிழில் எழுதப்பட ஊக்கம் அளிக்கப்பட்டு வருகின்றது. தமிழ் வளர்ச்சிக் கழகத்தால் கலைக்களஞ்சியம் பத்துத் தொகுதிகளும், குழந்தைகள் கலைக் களஞ்சியம் பத்துத் தொகுதிகளும் வெளியிடப்பட்டுள்ளன. தமிழ்த் தட்டச்சு, தமிழ்ச் சுருக்கெழுத்தின் தேவை வளர்ந்து வருவதால் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளும், தமிழ்ச் சுருக் கெழுத்து நூல்களும் வெளிவர ஊக்குவிக்கப் படுகின்றன. ஆங்கி லத்துக்கு அடுத்தபடியாக இந்திய மொழிகளுள்ளே முதன்முத லாகத் தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி ஒன்று அரசால் வெளி யிடப் பட்டுள்ளது.

நீதிமன்றங்களில் தீர்ப்புகளைத் தமிழில் வழங்கும் முறை நடைமுறைக்கு வந்து கொண்டிருக்கிறது. பிற மொழிகளில் உள்ள சிறந்த இலக்கியங்களைத் தமிழில் மொழிபெயர்த்தும், தமிழ் இலக்கியங்களைப் பிற மொழிகளில் மொழிபெயர்த்தும் வெளி யிடும் பணி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

எல்லாத் துறைகளிலும் தமிழை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கான முனைப்புத் திட்டம் ஒன்றை தமிழ் வளர்ச்சி இயக்கம் வகுத்துச் செயல்பட்டு வருகின்றது. 'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்னும் அரசின் குறிக்கோள் விரைவில் நிறை வேறலாம்.

**நாவல்கள்**

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல நாவல்கள் வெளிவந்தன. ஆரணி குப்புசாமி முதலியார் என்பவர் 'ரெயினால்ட்ஸ்' என்ற ஆங்கில ஆசிரியர் எழுதிய பல நாவல் களைத் தழுவித் தமிழ் நாவல்கள் பல எழுதி வெளியிட்டார். அவற்றுள் சில 'ஆனந்த போதினி' என்ற திங்கள் ஏட்டில் தொடர்ந்து வெளிவந்தன. இவருடைய எழுத்து நடை விறுவிறுப்பும் துரிதமும் வாய்ந்தது. கதையின் போக்கில்

இடையிடையே மேனாட்டு நாகரிகத்தை எள்ளி நகையாடித் தம் சொந்தக் கருத்துகளை நுழைத்துவிடும் வழக்கம் இவருக்கு உண்டு. பல துப்பறியும் நாவல்களையும் வேதாந்த நூல்களையும் குப்புசாமி முதலியார் எழுதியுள்ளார். ஜே. ஆர். ரங்கராஜு என்ற நாவலாசிரியர் துப்பறியும் ஐந்து நாவல்கள் வெளியிட்டார். மக்கள் அவற்றை வெகு ஆவலுடன் படித்து வந்தனர். முதன்முதலில் மொழிபெயர்ப்போ, பிறமொழி நூல்களைத் தழுவியனவோ அல்லாமல் சொந்தமாக நூல் எழுதியவர் இவர். இவருடைய நூல்கள் ஒவ்வொன்றும் சமூகத்தை அரித்துக் கொண்டிருந்த பல தீய பழக்கவழக்கங்களை அகற்றுவதற் கென்றே எழுதப்பட்டன. வரதட்சிணையின் கொடுமையை இராசேந்திரன் என்னும் நாவல் எடுத்துக் காட்டுகின்றது. சில மடாதிபதிகள் துறவு பூண்டு, காவியுடுத்துச் சிற்றின்ப வாழ்க்கையில் ஈடுபடுவதாகக் கற்பனை செய்து எழுதப்பட்டது சந்திரகாந்தா என்னும் நாவல். ரங்கராஜுவின் நாவல்கள் நாடக மேடைகளிலும், திரைப்படம் மூலமாகவும் மக்கள் பாராட்டைப் பெரிதும் பெற்றன. சந்திரகாந்தா என்னும் நாவல் அக்காலத்திய மடங்களின் நடைமுறைகளில் புரட்சிகர மான மாறுதல்களை விளைவித்தது என்பர். இவர் எழுதிய நாவல்கள் அனைத்திலும் தோன்றி, படிப்பாரின் பாராட்டைப் பெற்றவரான துப்பறியும் கோவிந்தன் என்பார் தமிழ் இலக்கியப் படைப்புகளில் தனியிடம் பெற்றுள்ளார்.

இருபதாம் நூற்றாண்டு தொடங்கி ஏறக்குறைய முப்பது ஆண்டுகள்வரை புதிய புதிய நாவல்களை எழுதி வாழ்ந்தவர்கள் வடுவூர் துரைசாமி ஐயங்காரும், கோதைநாயகி அம்மாளும் ஆவர். ஆங்கில மொழியில் பல புனைகதைகளைப் படித்து இன்புற்று அத்தகைய நூல்கள் தமிழில் எழாததற்கு வருந்தி நின்ற மக்களின் ஏக்கத்தைப் போக்கியவர்கள் இவர்கள். ஐயங்கார் நாவல்கள் சில திரைப்படமாக்கப்பட்டுள்ளன. இவருடைய நடை சொல்வளம் செறிந்தது; ஓட்டமுள்ளது. கதையின் போக்கில் திடீர்த் திருப்பங்களை அமைத்தல் இவர் பெற்றிருந்த தனிச் சிறப்பாகும்.

பண்டைய தமிழ் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கொண்டு கற்பனைக் கதைகள் புனைந்து பல்லவ, சோழ குலத்து முடி மன்னர்கள் காலவெள்ளத்தைக் கடந்து வந்து, நம் கண் முன்பு அவர்களை நிறுத்தி வைத்த இலக்கியச் சித்தர் ரா. கிருஷ்ண மூர்த்தியாவார். 'கல்கி' என்னும் புனைபெயரில் இவர் பல கதைகள் எழுதி வெளியிட்டார். 'ஆனந்தவிகடன்' என்னும்

வார ஏட்டில் பல நாவல்கள் எழுதி மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தவர் 'தேவன்' என்பவர். வழக்கமாக வந்த தமிழ்நடை மரபையே மாற்றித் தமக்கெனத் தனியொரு நடையை அமைத்துக்கொண்டு 'புதுமைப்பித்தன்' என்னும் புனைபெயரில் விருத்தாசலம் என்பார் பல சிறுகதைகள் வெளியிட்டார். தமிழ்ச் சிறுகதை இலக்கியத்துக்கு முடிபோன்று விளங்குவது இவருடைய இலக்கியம்.

தமிழில் கற்பனைக் கதைகள் பல எழுதி இளைஞர் சமுதாயத்தின் உள்ளங்களைக் கவர்ந்த நாவலாசிரியருள் தலைசிறந்து விளங்குபவர், மு. வரதராசனார் ஆவார். இவருடைய நாவல்களில் இலக்கிய வளர்ச்சியை மட்டுமன்றிச் சமூகச் சீர்திருத்த நோக்கத்தையும் காணலாம். இவர் திருக்குறள் ஆராய்ச்சி ஒன்றையும், மொழி வரலாறு ஒன்றையும் எழுதியுள்ளார். திருக்குறள் கருத்துகளையும் மக்கள் வாழ்க்கையையும் இயைபுபடுத்திச் செய்யப்பட்டுள்ள இவருடைய திருக்குறள் ஆய்வு நூல் தமிழ் ஆராய்ச்சித்துறையில் புதியதொரு முறையைத் தொடங்கிவைத்துள்ளது. நாவலாசிரியருள் அகிலன் பெரும் திறமை வாய்ந்தவர்.

தமிழில் எழுத்து நடையிலும், கற்பனைத் திறத்திலும், பல பெரும் ஆசிரியர்கள் சிறந்து விளங்கி வருகின்றனர். பலர் விஞ்ஞானம், வரலாறு, சுற்றுப் பயணம் ஆகிய துறைகளில் நூல்கள் எழுதித் தமிழ் இலக்கியத்துக்கு வளமூட்டி வருகின்றனர். மற்றும் பலர் ஐரோப்பிய மொழிகளினின்றும் வடஇந்திய மொழிகளினின்றும் சில சிறந்த நூல்களைத் தேர்ந்தெடுத்துத் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர். சிலர் தமிழ் இலக்கியப் புராணக் காட்சிகளைக் கட்டுரைகளாக வடித்தும், சொற்பொழிவுகளாக வழங்கியும் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்து வருகின்றனர்.

### நாடகம்

சங்ககாலக் கூத்துகள், சோழர் காலத்து நாடகங்கள் ஆகியவை விசயநகர மன்னர்களின் காலத்திலேயே வழக்கொழிந்துவிட்டன. விசயநகர ஆட்சியிலும், மதுரை நாயக்கர்கள் ஆட்சியிலும் தெலுங்கு மொழிக்குச் செல்வாக்கு ஏறியிருந்தது. அதனால் தெலுங்குப் பாடல்களும், தெலுங்குக் கூத்துகளும் தமிழ்நாட்டில் இடம்பிடித்தன. பெரும்பாலும் தமிழில் பரதக்கூத்துகளும், தெலுங்கில் பாகவதக் கூத்துகளும் நடைபெற்று வந்தன. ஆண்கள் பெண்வேடங் கட்டிக்கொண்டு

நடிப்பார்கள். நாடகம் இரவு முழுதும் நடைபெறும். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கன்னையா, நாராயணசாமிப் பிள்ளை, சீனிவாசப்பிள்ளை, ஆஞ்சநேயர் கோவிந்தசாமிப் பிள்ளை முதலியவர்கள் நாடக அரங்குகள் அமைத்து, ஓவியம் தீட்டப்பெற்ற திரைச் சீலைகளைத் தொங்கவிட்டுத் தம் நாடகங் களை மேடையேற்றினார்கள். நாடக அரங்குகள் அமைப் பதில் ஓவியக்கலை, மின்விளக்குகளைக் கொண்ட ஒளியமைப்பு, காட்சிப் புனைவுகள் ஆகியவற்றைக் கையாண்டு நாடகம் நடத்துவதில் இவர்கள் புதிய முறைகளைக் கையாண்டார்கள். கண்ணைக் கவரும் விலையுயர்ந்த ஆடை அலங்காரங்கள், அணி கலன்கள், வண்ண மலர்கள், நொடியில் மாறக்கூடிய காட்சிச் சோடனைகள் ஆகியவை இவர்களுடைய நாடகங்களின் சிறப் பாகும். ஆண்களே பெண் வேடங்களை ஏற்று நடித்து வந்தனர். தெருக்கூத்துகளில் இசைக்கப்பட்ட முகவீணையும், முழவமும் கைவிடப்பட்டன. இந் நாடகமேடைகளில் ஆர்மோ னியமும் மத்தளம் அல்லது தபேலாவும் பக்க மேளங்களாகப் பயன்படலாயின. நடிகர்கள் பல இசைகளில் பாடல்களைப் பாடினார்கள். உரைநடையைவிடப் பாட்டுகளையே மக்கள் பெரிதும் விரும்பினர். முழு இராமாயணம், முழுபாரதம், இதர புராணக் கதைகள், இராமானுசர் வரலாறு, பகவத்கீதை உப தேசம், நந்தனார் கதை முதலியவை நாடகங்களாக நடிக்கப்பட் டன. இசைபாட வல்லவர்களே நடிகராக வெற்றிபெறமுடியும்.

பிறகு சிறுவர்களைக் கொண்ட நாடகக் குழுக்கள் பல அமைக் கப்பட்டன. அவற்றுள் நடித்துவந்த சில சிறுவர்கள் பிற்காலத்தில் மிகச் சிறந்த மேடை நடிகர்களாகவும் திரைப்பட நடிகர்களாக வும் புகழ்பெற்று விளங்கியுள்ளார்கள். சங்கரதாச சுவாமிகள் நாடகக் கலையின் தந்தையெனப் போற்றப்படுகின்றார். பம்மல் சம்பந்த முதலியார் பல நாடகங்களைத் தமிழில் எழுதினார்; அவற்றுள் பல ஆங்கில நாடகங்களைத் தழுவி எழுதப் பெற்றவை. அவர் காலத்து நடிக்கப்பட்டுவந்த நாடகங்களில் காணப்பட்ட மிதமிஞ்சிய சோக மெய்ப்பாட்டைக் குறைத் தும், உவகை, காதல், வீரம் போன்ற மெய்ப்பாடுகளை மிகுதியாகச் சேர்த்தும், தம் நாடகங்களுக்குப் புதியதொரு வடிவத்தைச் சம்பந்த முதலியார் அமைத்துக் கொடுத்தார். மாணவர்கள், பொழுதுபோக்குக் கழகங்களின் உறுப்பினர்கள், பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்கள் அனைவருமே ஒரு மூன்று மணிநேரம் நடித்துக் காட்டுமளவுக்கு இவருடைய நாடகங்கள் அமைந்திருந்தன சம்பந்த முதலியாரின் முயற்சி

யினால் உருவாகி வளர்ந்துவந்த சென்னை சுகுணவிலாச சபையானது இவருடைய நாடகங்களையும், வேறு பல நாடகங் களையும், அரங்கேற்றிப் புகழ் பெற்றது. நாடகம் நடித்தல் இழிவு என்னும் ஓர் எண்ணத்தை மக்கள் உள்ளத்திலிருந்து முற்றி லும் அகற்றிய பெருமை இவரைச் சாரும்.

இரண்டாம் உலகப் போர் முடிவுற்ற பிறகு தமிழ்நாட்டில் திரைப்படங்கள் நூற்றுக்கணக்கில் வெளியாகி வருகின்றன. அதனால் நாடகங்கள் வழக்கிலிருந்து ஒழிந்துவிடுமோ என்று மக்கள் உள்ளத்தில் ஓர் அச்சம் பிறந்ததுண்டு. ஆனால், பல நாடக மன்றங்கள் தோன்றி நாடகக் கலையை வளர்த்து வருகின்றன. இவை நடிக்கும் நாடகங்களில் பெண்களே பெண் வேடந் தாங்கி நடிப்பதால் பாத்திரங்களின் நடிப்பு இயற்கை யாக அமைந்துவருகின்றது. பல பொழுதுபோக்கு நாடகக் குழுக்கள் தற்போதைய அரசியல், சமூக, பண்பாட்டுப் பிரச் சினைகளை அடிப்படையாகக் கொண்ட நாடகங்களை நடித்து மக்கட்கு மகிழ்ச்சியூட்டி வருகின்றன. நாடகத் துறையில் டி. கே. சண்முகம் மிகவும் புகழ் பெற்றவர்.

## நாட்டியம்

ஆயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட நீண்டதொரு கால அளவில் கோயில்களில் தேவரடியார்கள், வழிபாட்டுத் தொண்டு களில் ஈடுபாடு கொண்டு பாடியும் ஆடியும் மக்களை மகிழ்வித்து வந்தார்கள். எனினும் நாளடைவில் அவர்களுடைய வாழ்க்கை பல துன்பங்களுக்குட்படலாயிற்று. அவர்கள் கற்பில் வழுவிய வாழ்க்கை நடத்திப் பிழைக்கவேண்டி வந்ததால் அவர்களால் சமூகத்துக்கும் ஊறுபாடுகள் நேரிட்டன. பெண்மைக்கே இழுக்குத் தேடிக் கொடுத்துவந்த தேவரடியார்கள் கோயில் பணியில் 'பொட்டுக் கட்டப்படும்' முறையை அரசாங்கம் தடை செய்தது (1930). தேவரடியார்கள் வளர்த்துவந்த இசைக் கலை யும், கூத்துக் கலையும் அவர்களுடனே மறைந்துவிடுமோ என்ற அச்சமும் ஏக்கமும் கலையுலகில் மக்கள் நெஞ்சில் குடிகொண்டன. ஆனால், அக் கலைகள் உயர்ந்த முறையில், தூயவடிவில், மறு வடிவு பெற்றுத் தொடர்ந்து நாட்டில் செல்வாக்குப் பெற்று வரலாயின. அவற்றை இழுக்கென எண்ணிய மக்கள் மீண்டும் அவற்றை வளர்த்து வருவதில் முனையலானார்கள். திருவான்மி யூரில் செயல்பட்டுவரும் 'கலாக்ஷேத்திரம்' முதலான பல நிறு வனங்கள் குடும்பத்துச் சிறுவருக்கும் சிறுமியருக்கும் நாட்டியப் பயிற்சி அளித்து வருகின்றன. தமிழ்நாட்டுக்கே உரித்தான பரத

நாட்டியம் மீண்டும் உயர்ந்த நிலையில் வளர்ந்து உலகை மகிழ் விக்கும் அளவுக்குப் பேரும் புகழும் அடைந்துள்ளது. இவ் வளர்ச் சிக்குத் திரைப்படக்கலை ஓரளவு தூண்டுகோலாகச் செயல்பட்டு வந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**இசை**

விசயநகரப் பேரரசர்கள், நாயக்கர்கள் காலத்தில் தெலுங்கு மொழி ஏற்றம் பெற்று வந்ததாகையால், தமிழ்ப் பண்களும் தமிழ்ப் பாட்டுகளும் வழக்கிறந்து மறைந்துபோயின. தமிழ்க் குழந்தைகளுக்கு இசைப் பயிற்சியும் தெலுங்கிலேயே கொடுக்கப் படுகின்றது. அவர்களுக்குத் தெலுங்கில் சுவரம், ஜண்டவரிசை, அலங்காரம், வர்ணம், கீர்த்தனைகள் ஆகியவை கற்பிக்கப்பட்டு வருகின்றன. பொருள் உணராமலேயே தமிழர்கள் தெலுங்குப் பாடல்களை மேடைகளில் பாடிவந்தனர். தமிழ்ப்பற்று இல்லாத வர்களான ஒருசிலர் இசைக்கு மொழி என்னும் பேதம் கிடை யாது எனவும், இசை 'நாதபிரம்மம்' எனவும், தத்துவங்கள் பேசித் தமிழிசையை ஒதுக்கியே வந்தனர். தமிழ்நாட்டில் நடை பெறும் இசையரங்குகளில் இன்றளவும் பாட்டுகள் அனைத்தும் தெலுங்கிலும், கன்னடத்திலும், வடமொழியிலும் பாடப்படு கின்றன. பாடுபவர்கள் ஒன்றிரண்டு தமிழ்ப் பாடல்களைக் கச்சேரியின் முடிவில் ஓர் ஐந்து நிமிடங்கள் பாடுவர். அப் பாட்டு கள் பெரும்பாலும் திருப்புகழ்ப் பாடலாகவோ அன்றிப் பாரதி யாரின் பாடலாகவோ இருக்கும். இந் நூற்றாண்டின் தொடக் கத்தில் அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்துப் பாடல் களைப் பாடினார். மாம்பழக் கவிராயர் போன்றவர்கள் கீர்த் தனைகள் பாடினர். தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் கருணா மிர்த சாகரம் என்னும் நூலும், விபுலாநந்த அடிகளார் யாழ் நூல் என்னும் நூலும் எழுதி இசைத் தமிழுக்கு ஏற்றம் தந்துள்ளனர். சென்னைப் பல்கலைக்கழகத்தின் இசைத்துறைத் தலைவராக இருந்த பி. சாம்பமூர்த்தி இசைக்கலைக்குப் பெரிதும் பாடுபட்டுள்ளார். தமிழ்மொழிக்கு ஏற்பட்டிருந்த தாழ்வை நீக்கி அதற்குச் சிறப்புச் செய்வதற்காக ராஜா சர் அண்ணா மலைச் செட்டியார் தமிழிசை இயக்கம் ஒன்றைத் தொடங்கி வைத்தார் (1940). அவருடைய அரிய தொண்டு நற்பயன் அளித்து வருகின்றது. ஆண்டுதோறும் தமிழிசை மாநாடு ஒன்று கூடித் தமிழ்ப் பண்ஆராய்ச்சி நடத்தி வருகின்றது. தமிழ்ப் பாடல்கள், இசைக் கச்சேரிகளிலும் வானொலியிலும் இடம்பெற்று வருகின்றன. தமிழிசையைப் பரப்புவதில் பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்தரேசனார் ஆற்றி யுள்ளபணி போற்றத்தக்கது.

தமிழ்நாட்டுக் கோயில்களில் தமிழ் மக்கள் தம் தாய்மொழியி லேயே பாடிப் பரவுவதற்குத் தடைகள் இருந்துவருகின்றன. சோழர் பாண்டியர் காலத்தில் கோயில்களில் தேவாரம், திரு வாசகம், ஏனைய திருமுறைப் பாடல்கள் ஆகியவை முழங்கி வந்தன. அம் மரபு இன்று மறைந்துபோயிற்று. அண்மையில் தமிழ்நாட்டு அரசின் ஆணையின்கீழ்க் கோயில்களில் தமிழிலும் வழிபாடு செய்வதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

தமிழ் வளர்ச்சியில் செய்தித்தாள்கள் பலவும் ஈடுபட்டு வந் துள்ளன. நூறு ஆண்டுகளுக்குமேல் 'சுதேசமித்திரன்' என்னும் நாளேடு தமிழில் செய்திகளைப் பரப்பி வந்துள்ளது. இச் செய்தித்தாளும், மற்றொரு தமிழ் நாளேடான 'தினமணி'யும் மணிப்பிரவாளம் போன்ற கலப்புத் தமிழையே பயன்படுத்தி வந்துள்ளன. செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில், தென்மொழி முதலிய இதழ்கள் நல்ல தமிழில் கட்டுரைகளை வெளியிட்டு வருகின்றன. ஆனந்தபோதினி, ஆனந்த விகடன், கல்கி முதலிய வார ஏடுகள் சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு மேலா கத் தமிழ் வளர்ச்சிக்குப் புரிந்துவந்துள்ள பணிகளை அளந்து மதிப்பிடுதல் எளிதன்று. தமிழில் புதியதொரு காலத்தையே அவை தொடங்கியுள்ளன. தமிழருக்கு நகைச்சுவை பயிற்று வித்தது ஆனந்த விகடனாகும். அவ்வேடானது தமிழ் இலக்கியத் தில் நகைச்சுவை ஓவியத்தை மக்களுக்கு அறிமுகப்படுத்தி அதன் மூலம், இசை, ஓவியம், இலக்கியம் ஆகிய துறைகளில் புரட்சியான மாறுபாடுகள் பலவற்றைத் தோற்றுவித்தது. ஆனந்த விகடன் மூலமாகவும், கல்கியின் மூலமாகவும் வரலாற்று நாவல்கள் பல வெளிவந்தன.

## தமிழ் எழுத்துகள்

சென்ற நூற்றாண்டுக்கால அளவில் தமிழ் எழுத்தின் வரி வடிவில் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. சங்க இலக்கியங்கள் இன்ன வரிவடிவையுடைய எழுத்துகளைக்கொண்டு எழுதப் பட்டன என்று அறிந்துகொள்ளுவதற்குச் சான்றுகள் ஏதும் கிடைக்கவில்லை. தமிழ் எழுத்துகளில் பொறிக்கப்பட்ட கல் வெட்டுச் சாசனங்கள் ஏழாம் நூற்றாண்டிலிருந்துதான் நமக்குக் கிடைத்து வருகின்றன. பதினோராம் நூற்றாண்டு வரையில் இச் சாசனங்களில் கையாளப்பட்டுள்ள எழுத்துகளின் வரி வடி வமானது தொண்டை மண்டலம், சோழ மண்டலம், கொங்கு நாடு ஆகிய பகுதிகளிற்றான் காணப்படுகின்றன. ஆனால், தென்பாண்டி நாட்டில் தமிழ் வட்டெழுத்துகளால் சாசனங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பத்தாம் நூற்றாண்டின் இறுதிக்குள்

பாண்டியநாடானது சோழரின் ஆட்சிக்கு உட்பட்ட பிறகு அங்கும் சோழரின் கல்வெட்டில் காணப்படும் எழுத்துகளே வழக்கத்துக்கு வந்தன. சோழரின் செல்வாக்கு உச்ச நிலையை எட்டிய பாண்டியர் காலத்திலும், மைசூரின் சில பகுதிகளிலும், நெல்லூர் மாவட்டத்திலும், ஈழ நாட்டிலும், கிழக்கிந்தியத் தீவுகளிலும் தமிழ் எழுத்துக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. விசாகப்பட்டினம், பூரி ஆகிய இடங்களிலும் தமிழ்க் கல்வெட்டுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

தமிழ் எழுத்துகளின் வரிவடிவங்களைப் பற்றிய ஆராய்ச்சியானது நீண்டகாலமாகவே தொடர்ந்து நடைபெற்றுவருகின்றது. தமிழ் நெடுங்கணக்கு, மொகஞ்சதாரோ எழுத்துகள் ஆகியவற்றுக்கிடையிட்ட தொடர்பும், தமிழ் எழுத்துகளுக்கும் பிராமி எழுத்துகளுக்கும் இடையிட்ட தொடர்பும், தமிழ் எழுத்துகட்கும் கிரந்த எழுத்துகட்கும் இடையிட்ட தொடர்பும் விரிவாக ஆயப்பட்டு வருகின்றன. தொல்காப்பியனாரின் காலத்து எழுத்து வரிவடிவங்கள் யாவை, அவை பிராமி வடிவமா அன்றி வேறானவையா என்னும் கேள்விகள் ஆய்வாளரின் சிந்தனையைத் தூண்டி வருகின்றன. தொல்காப்பியர் காலத்து எழுத்தின் வரி வடிவங்கள் இன்னவென இன்று அறிய முடியவில்லை. சில எழுத்துகளின் வரி வடிவ அமைப்புகளைப்பற்றி மட்டும் அவர் குறிப்பிட்டுள்ளார். தமிழ்நாட்டில் கிடைத்துள்ள மிகப் பண்டைய கல்வெட்டுகள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. அவை பிராமி எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன. எனவே, பிராமி எழுத்தானது பண்டைய தமிழ் எழுத்து வரிவடிவத்தையே ஏற்றிருந்து பிறகு பிராகிருத எழுத்தாக மாறியிருக்க வேண்டும். அல்லது பிராமிக்கு முற்பட்ட தமிழ் எழுத்தின் வரிவடிவம் ஒன்று வழக்கிலிருந்து மறைந்து போயிருக்கவேண்டும். இவை வெறும் ஊகங்களேயாம். ஒரு காலத்தில் நாடு முழுவதிலும் பிராமி எழுத்துத்தான் திராவிட மொழிகள் அனைத்தினுக்கும் ஆதி எழுத்தாகப் பயன்பட்டு வந்தது; காலப்போக்கில் அது திரண்டு உருண்டு வட்டெழுத்தாக வடிவமைந்து, கிறித்தவ ஆண்டுத் தொடக்கத்தில் தமிழ்நாட்டில் வழக்கில் இருந்துவந்தது. பல்லவநாட்டைத் தம் நாட்டுடன் இணைத்துக் கொண்டபின் சோழப் பேரரசர்கள் தமிழ் எழுத்தையும் கிரந்த எழுத்தையும் இணைத்துக் கல்வெட்டுகளில் பொறித்து வந்தனர். சோழர்கள் பாண்டிநாட்டைக் கைக்கொண்ட பிறகு அங்கு வழங்கி வந்த வட்டெழுத்துகள் மறைந்து சோழ நாட்டில் வழங்கி வந்த வரிவடிவமே அங்கும் வழக்குக்கு வந்தது. சோழ மன்னரின் ஆட்சிக்குப் புறம்பாக இருந்த மலைநாட்டில் இவ் வட்டெழுத்தானது தொடர்ந்து

பழக்கத்தில் இருந்துவந்தது. காலப்போக்கில் அது கோலெழுத்தாக மாறி, பிறகு அறவே வழக்கொழிந்துவிட்டது. மலையாள மொழியில் வடமொழிக் கலப்பு ஏற்பட்டு அது ஒரு தனிமொழியாக வளர்ந்து வந்தபோது அதன் எழுத்துகள் ஆரிய எழுத்துகள் என்ற பெயரை ஏற்றன.

சோழரும் பாண்டியரும் மறைந்த பிறகு விசயநகர மன்னர்கள் பேரரசின் காலத்தில் வடமொழி நாகரி எழுத்துகள் நடைமுறைக்கு வந்தன. அவர்களைத் தொடர்ந்து மராத்தியரும் நாகரி எழுத்தையே வழக்கில் வைத்திருந்தனர். எனவே, கிரந்த எழுத்து வழக்கிறந்தது. தமிழ் எழுத்துகளில் வரிவடிவ மாறுதல்கள் ஏதும் தோன்றவில்லை. அவ்வப்போது தேவைக்கேற்ப அவற்றின் வரிவடிவங்களில் சிறுசிறு மாற்றங்கள் செய்யப்பட்டன. வீரமாமுனிவர் எகர ஒகரத்தில் குறில் நெடில் வேறுபாடு தோன்ற மாற்றஞ் செய்தார். பின்னர்ப் பெரியார் நூற்றாண்டு விழாவின்போது (1978), பெரியார் பின்பற்றியவாறு சில எழுத்துகளின் வரிவடிவத்தில் சில மாற்றங்கள் (ணா, றா, னா, ணை, லை, ளை, னை, ணொ, றொ, னொ, ணோ, றோ, னோ) செய்யப்பெற்றன. தமிழ்மொழியில் எண்களும் தனிவடிவம் பெற்று விளங்குகின்றன.

**அயல்நாடுகளில் தமிழ் வளர்ச்சி**

இலங்கை, மலேசியா, இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்ஸ், ருஷ்யா, ஹாலந்து, போர்ச்சுகல், செக்கோஸ்லோவேகியா, பின்லாந்து ஆகிய ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் தமிழ் இலக்கியம், இலக்கணம், மொழியமைப்பு, எழுத்தின் வரிவடிவம் ஆகியவற்றில் மிகச் சிறப்பான ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. ஆராய்ச்சி நூல்களும் கட்டுரைகளும் அந்நாடுகளில் வெளியாகி வருகின்றன. தமிழ்நாட்டின் முதல் அமைச்சராகத் தாம் பதவி ஏற்றவுடனே சி.என். அண்ணாதுரையவர்கள் இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டைச் சென்னையில் 1968-ல் கூட்டுவித்தார். தமிழின் வளர்ச்சியையும், தமிழரின் நாகரிகம் பண்பாடு ஆகியவற்றையும் உலக மக்கள் உணர்ந்து ஆய்வதற்கு மேலிய சீரிய வாய்ப்புகளை இம் மாநாடு நிறுவிக்கொடுத்தது.

ஒரு நாட்டின் நாகரிகமும், பண்பாடும், ஒரு காலத்தில் தோன்றி அழிந்துவிடுவனவல்ல. அவை மக்களின் வாழ்க்கையுடன் இயைந்துவிடுகின்றன. அவ்வப்போது சிறுசிறு மாற்றங்களையும் அவை ஏற்று வருவது உண்டு. எனினும், அவர்களுடைய வாழ்வில் ஊடுருவிச் செல்லும் அவற்றின் பண்டைய மரபும் இயல்பும் எக் காலத்தும் மாறாமல் விளங்கி வருவனவாம்.

# மேற்கோள் நூல்கள்
## (Bibliography)

### தமிழ் இலக்கியம்


1. கம்பராமாயணம்
2. கலிங்கத்துப்பரணி
3. காஞ்சிப் புராணம்
4. சங்க இலக்கியம்
   (அ) எட்டுத்தொகை நூல்கள்
   (ஆ) பத்துப்பாட்டு
   (இ) பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்
   (ஈ) தொல்காப்பியம்
5. சிலப்பதிகாரம்
6. சீவகசிந்தாமணி
7. சைவத் திருமுறைகள்
8. திருவிளையாடற்புராணம் (பரஞ்சோதி முனிவர்)
9. தாயுமானவர் பாடல்கள்
10. திருமந்திரம்
11. திருவருட்பா
12. நந்திக் கலம்பகம்
13. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்
14. பன்னிரு திருமுறை வரலாறு, பாகம் 1, 2 (அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு)
15. பாண்டிக் கோவை
16. பெரிய புராணம்
17. பெருங்கதை
18. மணிமேகலை
19. மூவருலா
20. வில்லிபுத்தூரார் பாரதம்
21. வீரசோழியம்

## கல்வெட்டுகள்
(Stone Inscriptions)

1. Pallavar Seppēdugal Muppatu (Tamil Varalāṟṟu Kaḻagam) பல்லவர் செப்பேடுகள் முப்பது (தமிழ் வரலாற்றுக் கழகம்).
2. Pāṇḍyar Seppēdugal Pattu (Tamil Varalaṟṟu Kaḻagam) பாண்டியர் செப்பேடுகள் பத்து (தமிழ் வரலாற்றுக் கழகம்).
3. Annual Reports on South Indian Epigraphy (from 1887).
4. Epigraphia Carnatica—12 Volumes.
5. Epigraphia Indica Vols. I to XXVIII.
6. Inscriptions of the Pudukkottai State.
7. South Indian Inscriptions—Vols. I to XIII.
8. South Indian Temple Inscriptions—Vols. I to III.
9. Travancore Archaeological Series—Vols. I to III.

## இதர நூல்கள்
(Secondary Works)

1. Iyengar, Dr. S. K., Historical Inscriptions of Southern India.
2. Iyengar, Dr. S. K., Beginnings of South Indian History.
3. Iyengar, Dr. S. K., Some Contributions of South India to Indian Culture.
4. Appadorai, Dr. A., Economic Conditions of Southern India (1000—150).
5. Basham, A. L., The Wonder that was India.
6. Caldwell, Bishop, A Comparative Grammar of the Dravidian Languages.
7. Caldwell, Bishop, Histroy of Tinnevelly.
8. Coomaraswami, Ananda, Arts and Crafts of India and Ceylon.
9. Dikshitar, V. R. R., Studies in Tamil Literature and History.
10. Dubreuil, G. Jouveau, The Pallavas.

11. Gopalan, R., History of the Pallavas.
12. Jagadisa Ayyar, P. V., South Indian Customs.
13. Kanakasabhai Pillai, V., The Tamils of Eighteen Hundred Years Ago.
14. Mahalingam, T. V., South Indian Polity.
15. Mahalingam, T. V., Kancheepuram in Early South Indian History.
16. Minakshi, C., Administration and Social Life under the Pallavas. (Revised Edition)
17. Nilakanta Sastri, K. A., The Pandyan Kingdom.
18. Nilakanta Sastri, K. A., The Cholas.
19. Nilakanta Sastri, K. A., The History and Culture of the Tamils.
20. Pillay, K. K., A Social History of the Tamils.
21. Pillay, K, K., Narriṇai in its Historical setting.
22. Pillay, K. K., South India and Ceylon.
23. Pillay, K. K. Studies in the History of India with Special Reference to Tamilnadu.
24. Rajamanickam, M., History of the Pallavas.
25. Rajamanickam, The History of the Cholas.
26. Sadasiva Pandarathar, V., Tamil Ilakkiya Varalaru.
27. Sadasiva Pandarathar, V. Pāṇḍyar Varalaru.
28. Satyanathaier, R., History of the Nayakas of Madura.
29. Seeni Venkataswami, Samanamum Tamiḻum.
30. Seeni Venkataswami, Bauddhamum Tamiḻum.
31. Seeni Venkataswami, Tamiḻar Vaḷartta Aḻagukkalaigaḷ.
32. Slater, G., The Dravidian Element in Indian Culture.
33. Srinivasa Iyengar, M., Tamil Studies.
34. Srinivasa Iyengar, P. T., Pre-Aryan Tamil Culture.
35. Srinivasa Iyengar, P.T., Tamils from the Earliest Times to 600 A. D.
36. Subramanian, N., Sangam Polity.
37. Vaiyapuri Pillai, S., Tamiḻar Paṇpāḍu.
38. Venkateswara, S. V., Indian Culture through the Ages
39. Vipulananda, Swami, Yāḻ Nul.



தற்காலத்
தமிழகம்
மாநில எல்லை
மாவட்ட எல்லை
மாவட்டத் தலைநகர்
செங்கற்பட்டு
வேலூர்
காஞ்சிபுரம்
ஆம்பூர்
செங்கற்பட்டு
வாணியம்பாடி
ஆரணி
வட ஆர்க்காடு
மதுராந்தகம்
கிருஷ்ணகிரி
போளூர்
வந்தவாசி
செஞ்சி
திருவண்ணாமலை
திண்டிவனம்
தர்மபுரி
தர்மபுரி
தென்
ஆர்க்காடு
வங்காள
விரிகுடா
மைசூர்
கருநாடக மாநிலம்
விழுப்புரம்
திருக்கோவலூர்
புதுச்சேரி
கடலூர்
மேட்டூர்
சேலம்
கள்ளக்குறிச்சி
நீலகிரி
உதகமண்டலம்
நெய்வேலி
கோபி
இராசிபுரம்
விருத்தாசலம்
பவானி
சேலம்
சிதம்பரம்
குன்னூர்
மேட்டுப்பாளையம்
சீர்காழி
மாயவரம்
கும்பகோணம்
தரங்கம்பாடி
கோயமுத்தூர்
திருப்பூர்
கரூர்
பல்லடம்
குளித்தலை
காரைக்கால்
தஞ்சாவூர்
தாராபுரம்
நாகப்பட்டினம்
மன்னார்குடி
பொள்ளாச்சி
மணப்பாறை
தஞ்சாவூர்
திருத்துறைப்பூண்டி
உடுமலைப்பேட்டை
பட்டுக்கோட்டை
புதுக்கோட்டை
பழநி
வேதாரணியம்
திண்டுக்கல்
அதிராம்பட்டினம்
கொடைக்கானல்
மதுரை
திருப்பத்தூர்
அறந்தாங்கி
பெரியகுளம்
மேலூர்
காரைக்குடி
எர்ணாகுளம்
சோழவந்தான்
உசிலம்பட்டி
மதுரை
சிவகங்கை
திருமங்கலம்
தொண்டி
விருதுநகர்
இராமநாதபுரம்
இராசபாளையம்
சிவகாசி
அருப்புக்கோட்டை
சாத்தூர்
சங்கரநயினார்கோவில்
கோவில்பட்டி
கடையநல்லூர்
தென்காசி
கொல்லம்
திருநெல்வேலி
தூத்துக்குடி



1. வரலாற்றுக்கு முற்பட்ட சின்னங்கள் (ஆதிச்சநல்லூர்)



2. புதைகுழி (சானூர்)




3. மட்பாண்டச் சின்னங்கள் (அரிக்கமேடு)



4. குளத் தளவரிசை (அரிக்கமேடு)



5. பாண்டவ ரதங்கள் (மாமல்லபுரம்)



6. மூவர் கோயில் (கொடும்பாளூர்)



7. வண்ண ஓவியங்கள் (பனைமலை)



8. திருச்சி மலைக்கோட்டை பல்லவர்
குடைவரைக் கோயில் கங்காதரமூர்த்தி



9. காஞ்சி கைலாசநாதர் கோயிலின் தென்கிழக்குத் தோற்றம்



10. தஞ்சைப் பிரகதீசுவரர் கோயில்



11. சண்டேசுவர அனுக்கிரகமூர்த்தி
(கங்கை கொண்ட சோழபுரம்)



12. சரசுவதி (கங்கை கொண்ட சோழபுரம்)



14. தியாகராசர் கோயில் – கிழக்குக் கோபுரம் (திருவாரூர்)



15. பொன்னம்பலமும் மேற்குக் கோபுரமும் (சிதம்பரம்)



16. நடராசர், சிவகாம சுந்தரி வெண்கலப் படிமங்கள்
பிரகதீசுவரர் கோயில் (தஞ்சை)



17. பிரகதீசுவரர் கோயிலில் சோழர்கால வண்ண ஓவியங்கள்
(கி.பி. பத்தாம் நூற்றாண்டு)



18. திருவரங்கம் கோயில் தூணில் காணும் வீரர் சிற்பங்கள்



19. வேலூர்க் கோட்டையின் வடகிழக்குப் பகுதி



20. செஞ்சிக் கோட்டையின் தோற்றம்



21. மதுரை மீனாட்சியம்மன் கோயில்



22. திருவண்ணாமலை அருணாசலேசுவரர் கோயில்
குளமும் கோபுரங்களும்



23. செயின்ட் ஜார்ஜ் கோட்டை, சென்னை

